# பரம(ன்) இரகசியம்!

உங்களுக்குள்
உறைந்திருக்கும்,
சக்தி வாய்ந்த
விசேஷ
மானஸ லிங்கத்தை
இந்த நாவல்
ஒருவேளை
உங்களுக்கு
அடையாளம்
காட்டக்கூடும்!



BLACKHOLE

என். கணேசன்

# அத்தியாயம் - 1

புறநகர்ப்பகுதியில் அமைந்திருந்த அந்தத் தோட்ட வீட்டுக்கு அவன் வந்து சேர்ந்த போது இரவு மணி இரண்டு. சுற்றிலும் இருந்த பெரிய மதில் சுவரையும், முன்னால் இருந்த பெரிய இரும்புக் கதவையும் அவன் ஒருவித அலட்சியத்துடன் ஆராய்ந்தான். இரும்புக் கதவை ஒட்டிய சுவரில் ஒட்டியிருந்த கரும்பலகையில் ”சர்வம் சிவமயம்” என்ற வாசகம் கரும்பலகையில் தங்க எழுத்துகளில் மின்னியது தெருவிளக்கின் வெளிச்சத்தில் தெரிந்தது. உள்ளே நாய்கள் இல்லை என்ற தகவலை அவனுக்கு அந்த வேலையைக் கொடுத்தவர்கள் முன்பே சொல்லி இருந்தார்கள். தெருவில் ஆள் நடமாட்டமே இல்லை, யாரும் தன்னைக் கவனிக்கவில்லை என்பதை ஒரு முறை உறுதிப்படுத்திக் கொண்டு அவன் அனாயாசமாக அந்த இரும்புக் கேட்டில் ஏறி உள்ளே குதித்தான்.

வீட்டினுள்ளே அந்த நேரத்திலும் மின்விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அவன் அதை எதிர்பார்த்திருக்கவில்லை என்றாலும் பயப்படவும் இல்லை. அவன் தன் சிறிய வயதில் இருந்து அறியாத ஒரு உணர்ச்சி பயம் தான். பன்னிரண்டு வயதில் திருடவும், பதினேழு வயதில் கொலை செய்யவும் ஆரம்பித்தவன் அவன். எத்தனை கொள்ளை அடித்திருக்கிறான், எத்தனை கொலை செய்திருக்கிறான் என்ற முழுக்கணக்கை அவன் வைத்திருக்கவில்லை. போலீசாரிடமும் அதன் முழுக்கணக்கு இல்லை. அத்தனை செய்த போதும் சரி, அதில் சிலவற்றிற்காக பிடிபட்ட போதும் சரி அவன் பயத்தை சிறிதும் உணர்ந்திருக்கவில்லை.

ஒரு அமானுஷ்ய அமைதியைத் துளைத்துக் கொண்டெழுந்த சுவர்க்கோழியின் சத்தம் தவிர அந்த இடத்தில் வேறெந்த ஒலியும் இல்லை. அவன் சத்தமில்லாமல் வீட்டை நோக்கி முன்னேறினான். வீட்டை முன்பே விவரித்திருந்தார்கள். ஒரு ஹால், படுக்கையறை, பூஜையறை, சமையலறை, குளியலறை, கழிப்பறை கொண்டது அந்த வீடு. வீட்டின் முன் கதவு மிகப்பழையது, மரத்தினாலானது, பழைய பலவீனமான தாழ்ப்பாள் கொண்டது, அதனால் உள்ளே நுழைவது அவனுக்கு அத்தனை கஷ்டமான காரியம் அல்ல என்று சொல்லி இருந்தார்கள்.

ஹாலில் தான் மின்விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ஹால் ஜன்னல் திறந்து தான் இருந்தது. மறைவாக நின்று கொண்டு உள்ளே பார்த்தான். முதியவர் ஒருவர் ஹாலில் ஜன்னலுக்கு நேரெதிரில் இருந்த பூஜையறையில் தியானத்தில் அமர்ந்திருந்தார். பூஜையறையில் இரண்டு அகல்விளக்குகள் ஒளிர்ந்து கொண்டிருந்தன. பூஜையறையில் ஒரு சிவலிங்கத்தைத் தவிர வேறு எந்த விக்கிரகமோ, படங்களோ இல்லாதது விளக்கொளியில் தெரிந்தது.

இந்த சிவலிங்கம் தான் அவர்கள் குறி. அந்த சிவலிங்கத்தை அவன் உற்றுப்பார்த்தான். சாதாரண கல் லிங்கம் தான். இதில் என்ன விசேஷம் இருக்கிறது என்பது அவனுக்குப் புரியவில்லை. அவனுக்கு உடல் வலிமையும், மன தைரியமும் இருந்த அளவுக்கு அறிவுகூர்மை போதாது. அதனால் அவன் அதைத் தெரிந்து கொள்ளவும் முனையவில்லை.

அந்த முதியவர் மிக ஒடிசலாக இருந்தார். அவரைக் கொல்வது ஒரு பூச்சியை நசுக்குவது போலத் தான் அவனுக்கு. இந்த வேலையை முடிக்க எவ்வளவு பணம் வேண்டும் என்று கேட்ட போது பேரம் பேசுவார்கள் என்று நினைத்து இரண்டு லட்சம்

வேண்டும் என்று கேட்டான். அவர்கள் மறுபேச்சு பேசாமல் ஒத்துக் கொண்டதை இப்போது நினைத்தாலும் அவனுக்கு ஆச்சரியமாகத்தான் இருந்தது. மூன்று லட்சமாகக் கேட்டிருக்கலாமோ?

ஆனால் பண விஷயத்தில் பேரம் பேசாதவர்கள், முன்னதாகவே ஒரு லட்ச ரூபாயையும் முன்பணமாகக் கொடுத்தவர்கள், மற்ற சில நிபந்தனைகள் விதித்தார்கள். எந்தக் காரணத்தைக் கொண்டும் அந்த முதியவரை பூஜையறையில் கொல்லக் கூடாது, எந்தக் காரணத்தைக் கொண்டும் அவன் அந்த பூஜையறைக்குள் நுழையவோ, சிவலிங்கத்தைத் தொடவோ கூடாது என்று உறுதியாகச் சொல்லி இருந்தார்கள். அவன் அறிவுகூர்மை பற்றி அவர்கள் அறிந்திருந்தார்களோ என்னவோ, சொன்னதை அவன் வாயால் திரும்பச் சொல்ல வைத்துக் கேட்டார்கள். அந்த லிங்கத்தில் ஏதாவது புதையல் இருக்குமோ? தங்கம் வைரம் போன்றவை உள்ளே வைத்து மூடப்பட்டிருக்குமோ என்ற சந்தேகம் அவனுக்கு இப்போது வந்தது. அப்படி இருந்தால் கேட்ட இரண்டு லட்சம் குறைவு தான்.

கிழவர் அந்த பூஜையறையில் அமர்ந்திருப்பது இப்போது அவனுக்கு அனுகூலமாக இல்லை. முன்னால் சிவலிங்கம் சிலையாக இருக்க, முதியவரும் இன்னொரு சிலை போல அசைவில்லாமல் உட்கார்ந்திருந்தார். மனதுக்குள்ளே கிழவரிடம் சொன்னான். “யோவ் சாமி கும்பிட்டது போதும்யா. வெளியே வாய்யா”

அவன் வாய் விட்டுச் சொல்லி அதைக் கேட்டது போல் முதியவர் கண்களைத் திறந்து அவனிருந்த ஜன்னல் பக்கம் பார்த்தார். அவனுக்கு திக்கென்றது. அவனை அறியாமல் மயிர்க்கூச்செரிந்தது. ஒருசில வினாடிகள் ஹால் ஜன்னலைப் பார்த்தார் அவர். கண்டிப்பாக இருட்டில் நின்றிருந்த அவனை அவர்

பார்த்திருக்க வாய்ப்பே இல்லை. என்றாலும் அவர் பார்வை அவனைப் பார்ப்பதாக அவன் உணர்ந்தான். ஆனாலும் அவனுக்கு பயம் வந்து விடவில்லை. அவனைப்பார்த்து மற்றவர்கள் தான் பயப்பட வேண்டுமே ஒழிய அவன் யாரையும் பார்த்து பயப்பட வேண்டிய அவசியமே இல்லை.

கிழவர் முகத்தில் லேசானதொரு புன்னகை அரும்பி மறைந்ததாக அவனுக்குத் தோன்றியது. அவர் அமைதியாக எழுந்து நின்று சாஷ்டாங்கமாக விழுந்து சிவலிங்கத்தை வணங்கினார். வணங்கி எழுந்து அவர் திரும்பிய போது அவர் முகத்தில் அசாதாரணமானதொரு சாந்தம் தெரிந்தது. அவர் பூஜையறையை விட்டு வெளியே வந்தார். வெளியே வந்தவர் பத்மாசனத்தில் அந்த சிவலிங்கத்தைப் பார்த்தபடியே ஹாலில் அமர்ந்தார்.

அவன் உள்ளுணர்வு சொன்னது, அவன் அங்கே இருப்பது அவருக்குத் தெரியும் என்று. அவனுக்கு சந்தேகம் வந்தது. வீட்டுக்குள் வேறு யாராவது ஒளிந்து கொண்டிருக்கிறார்களோ? அதனால் தான் அவர் அவ்வளவு தைரியமாக அப்படி உட்கார்கிறாரோ? மெல்ல வீட்டை சத்தமில்லாமல் ஒரு சுற்று சுற்றி வந்தான். எல்லா ஜன்னல்களும் திறந்து தான் இருந்தன. அதன் வழியாக உள்ளே நோட்டமிட்டான். இருட்டில் பார்த்துப் பழகிய அவன் கண்களுக்கு உள்ளே வேறு யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. மறுபடி அவன் பழைய இடத்திற்கே வந்து ஹால் ஜன்னல் வழியாக அவரைப் பார்த்தான். அவர் அதே இடத்தில் பத்மாசனத்திலேயே இன்னமும் அமர்ந்திருந்தார். பூஜையறையில் அகல்விளக்குகள் அணைந்து போயிருந்தன.

இனி தாமதிப்பது வீண் என்று எண்ணியவனாக அவன் வீட்டின் கதவருகே வந்தான். கதவு லேசாகத் திறந்திருந்ததை அவன் அப்போது தான் கவனித்தான். அவனுக்கு இது எல்லாம் இயல்பாகத்

தெரியவில்லை. அவனுக்குப் புரியாத ஏதோ ஒரு விஷயம் மிகவும் பிரதானமாக அங்கே இருப்பதாக அவனுக்குத் தோன்றியது. ஆனாலும் கத்தியைக் கையில் எடுத்துக் கொண்டு அவன் மெல்ல கதவைத் திறந்து ஒரு நிமிடம் தாமதித்தான். பின் திடீரென்று உள்ளே பாய்ந்தான். அவனை ஆக்கிரமிக்க அங்கே யாரும் இல்லை.

அவன் பாய்ந்து வந்த சத்தம் அவரைப் பாதித்ததாகத் தெரியவில்லை. அவர் தியானம் கலையவும் இல்லை. அவனுக்கு அவர் நடவடிக்கை திகைப்பை ஏற்படுத்துவதாக இருந்தது. இன்னும் சிறிது நேரம் அங்கிருந்தால் பைத்தியமே பிடித்து விடும் போல இருந்தது. "என்ன இழவுடா இது. இந்த ஆள் மனுசன் தானா?" என்று தனக்குள்ளே அவன் கேட்டுக் கொண்டான். உடனடியாக வேலையை முடித்து விட்டு இந்த இடத்தை விட்டுப் போய் விடுவது தான் நல்லது என்று அவனுக்குத் தோன்றியது.

அதற்குப் பின் அவன் தயங்கவில்லை. மின்னல் வேகத்தில் செயல்பட்டு தியானத்தில் அமர்ந்திருந்த அவர் கழுத்தை அசுர பலத்துடன் நெரித்தான். அவர் உடல் துடித்தாலும் அவரது பத்மாசனம் கலையவில்லை. அவர் அவனைத் தடுக்கவோ, போராடவோ இல்லை. அவர் உயிர் பிரியும் வரை அவன் தன் பிடியைத் தளர்த்தவில்லை. அவர் உயிர் பிரிந்த அந்த கணத்தில் பூஜையறையில் ஒரு ஒளி தோன்றி மறைந்தது. அவன் திகைத்துப் போனான். ஒளி தோன்றியது பூஜை அறையின் எந்த விளக்காலும் அல்ல, அந்த சிவலிங்கத்தில் தான் என்று ஏதோ ஒரு உணர்வு வந்து போனது. யாரோ சிவலிங்கத்தில் வெள்ளை ஒளியை பாய்ச்சியது போல, ஒரு மின்னல் ஒளி அந்த சிவலிங்கத்தில் வந்து போனது போல, அந்தக் கிழவரின் உயிரே ஒளியாகி அந்த சிவலிங்கத்தில் சேர்ந்து மறைந்தது போல... அதே நேரத்தில் அவனை வந்து ஏதோ ஒரு சக்தி தீண்டியதைப் போலவும் உணர்ந்தான். அது என்ன என்று

*அவனுக்கு விளக்கத் தெரியவில்லை என்றாலும் அவன் ஒரு அசௌகரியத்தை உணர்ந்தான்.*

*முதல் முறையாக இனம் புரியாத ஒரு பயம் அவனுள் எட்டிப்பார்த்தது. யோசித்துப் பார்க்கையில் அந்த முதியவர் சாகத் தயாராக இருந்தது போலவும் அதற்காகக் காத்துக் கொண்டு இருந்தது போலவும் அவனுக்குத் தோன்றியது. கடவுளை நம்பாத அவனுக்கு, அமானுஷ்யங்களையும் நம்பாத அவனுக்கு, சிவலிங்கத்தில் வந்து போன ஒளி கண்டிப்பாக வெளியே இருந்து யாரோ டார்ச் மூலம் பாய்ச்சியதாகவோ, அல்லது ஃப்ளாஷ் காமிராவில் படம் எடுத்ததாகவோ தான் இருக்க வேண்டும் என்று சந்தேகம் எழும்ப வேகமாக வெளியே ஓடி வந்து வீட்டை சுற்றிப் பார்த்தான். யாரும் இல்லை. தோட்டத்தில் யாராவது ஒளிந்து இருக்கலாமோ? அவனுக்கு இந்த வேலை தந்தவர்களில் யாராவது ஒருவரோ, அவர்கள் அனுப்பிய ஆள் யாராவதோ இருக்கலாமோ என்றெல்லாம் சந்தேகம் வந்தது. ஆனால் அதே நேரத்தில் அவனை வந்து தீண்டியதாக அவன் உணர்ந்த சக்தி என்ன? அது பிரமையோ?*

*அவனுக்கு குழப்பமாக இருந்தது. தலை லேசாக வலித்தது. அவர்கள் ஒரு மொபைல் போனைத் தந்து அதில் ஒரு எண்ணிற்கு வேலை முடிந்தவுடன் அழைக்கச் சொல்லி இருந்தார்கள். அவன் வெளியே வந்து அவர்கள் சொன்னபடியே அந்த மொபைல் போனை எடுத்து அந்த எண்ணிற்கு அழைத்துச் சொன்னான்.*

*“கிழவனைக் கொன்னாச்சு”*

*“பூஜையறைக்கு வெளிய தானே?”*

*“ஆமா”*

*“நீ பூஜையறைக்குள்ளே போகலை அல்லவா?”*

*“போகலை”*

*“அந்த சிவலிங்கத்தை தொடலை அல்லவா?”*

*அவனுக்குக் கோபம் வந்தது. “உள்ளே போகாம எப்படி அதைத் தொட முடியும்? என் கை என்ன பத்தடி நீளமா”*

*அந்தக் கோபம் தான் அவன் உண்மையைச் சொல்கிறான் என்பதை அந்த மனிதருக்கு உணர்த்தியது போல இருந்தது. அமைதியாகச் சொன்னார். “அங்கேயே இரு. கால் மணி நேரத்தில் என் ஆட்கள் அங்கே வந்து விடுவார்கள்”*

*அவன் காத்திருந்தான். காத்திருந்த நேரத்தில் ஒவ்வொரு நொடியும் மிக மிக மந்தமாக நகர்ந்தது போல இருந்தது. வீட்டின் உள்ளே எட்டிப்பார்த்தான். முதியவரின் உடல் சரிந்து கிடந்தாலும் கால் பத்மாசனத்திலேயே இருந்தது இயல்பில்லாத ஒரு விஷயமாகப் பட்டது. அப்போது தான் அந்தக் கிழவரின் முகம் பார்த்தான். மூக்கிலும் வாயிலும் இரத்தம் வழிந்திருந்தாலும் அந்த முகத்தில் வலியின் சுவடு கொஞ்சம் கூட இல்லை. மாறாக பேரமைதியுடன் அந்த முகம் தெரிந்தது. உள்ளே நுழைந்து ஹாலில் இருந்தபடியே அந்த சிவலிங்கத்தைக் கவனித்தான். சிவலிங்கம் சாதாரணமாகத் தான் தெரிந்தது.*

*அதைத் தொடக்கூடாது, பூஜையறைக்குள் நுழையக் கூடாது என்று திரும்பத் திரும்ப அவர்கள் சொல்லி இருந்ததும், இப்போதும் கூட அதைக் கேட்டு உறுதிப்படுத்திக் கொண்டதும் ஏதோ ஒரு*

ரகசியம் இந்த சிவலிங்கத்தைச் சூழ்ந்து இருப்பதை அவனுக்கு உணர்த்தியது. சிறு வயதிலிருந்தே செய்யாதே என்பதை செய்து பழகியவன் அவன்.... அவன் கடிகாரத்தைப் பார்த்தான். அவர் சொன்ன கணக்குப்படி அவர்கள் வர இன்னும் பன்னிரண்டு நிமிடங்கள் இருக்கின்றன. அதற்குள் அந்த சிவலிங்கத்தில் அப்படி என்ன தான் ரகசியம் புதைந்து இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆவல் வலிமையாக அவனுக்குள்ளே எழ அவன் அந்தப் பூஜையறைக்குள் நுழைந்தான்.

# அத்தியாயம் - 2

அந்தக் கொலைகாரனிடம் போனில் தெரிவித்தபடி ஆட்கள் மூன்று பேர் இரண்டு கார்களில் சொன்ன நேரத்திற்குள் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் வந்த போது அவன் தோட்டத்தின் முன் இரும்புக் கதவு பாதி திறந்து கிடந்தது. மறுபாதிக் கதவின் கீழ்க்கம்பிகளில் ஒன்றைப் பிடித்தபடி அவன் கீழே உட்கார்ந்திருந்தான். தெருவில் ஆள் நடமாட்டமே இல்லாமல் இருந்தால் கூட இப்படியா தெருவிளக்கின் ஒளியில் அலட்சியமாக உட்கார்ந்திருப்பது என்று நினைத்தவனாய் முதல் காரில் இருந்து இறங்கியவன் அவனை நெருங்கினான்.

கார்கள் வந்து நின்ற சத்தம் கூட அந்தக் கொலைகாரன் கவனத்தைத் திருப்பவில்லை. அதனால் ஏதோ பிரச்சினை என்பதை உணர்ந்த முதல் கார் ஆசாமி குனிந்து அந்தக் கொலைகாரனை உற்றுப்பார்த்தான். பின் மூக்கருகே கையை வைத்துப் பார்த்தான். மூச்சில்லை. அப்போது தான் அந்தக் கொலைகாரன் இறந்து போயிருந்தது உறைத்தது. திகைப்புடன் அவனை முதல் கார் ஆசாமி கூர்ந்து பார்த்தான். உடலில் எந்தக் காயமும் இல்லை. முகத்தில்

மட்டும் எதையோ பார்த்து பயந்த பீதி பிரதானமாகத் தெரிந்தது. ஏதோ அதிர்ச்சியில் இறந்து போயிருக்க வேண்டும்....

இரண்டாவது காரில் இருந்து ஒருவன் தான் இறங்கி வந்தான். “என்னாச்சு”

“செத்துட்டான்”

“எப்படி?”

“தெரியல. முகத்தப் பார்த்தா ஏதோ பயந்து போன மாதிரி தெரியுது”

“பயமா, இவனுக்கா....” என்று சொன்ன இரண்டாவது கார் ஆசாமி அருகில் வந்து இறந்தவனை உற்றுப்பார்த்தான். அவன் சொன்னது உண்மை என்று தெரிந்தது. தேர்ந்தெடுக்கும் போதே பயமோ, இரக்கமோ, தயக்கமோ இல்லாத ஆளாகப்பார்த்துத் தான் அவர்கள் அவனைத் தேர்ந்தெடுத்து இருந்தார்கள். அப்படிப்பட்ட அவனையே இந்தக் கோலத்தில் பார்த்த போது ஏற்பட்ட அதிர்ச்சியில் ஒருகணம் இரண்டாவது கார் ஆசாமி பேச்சிழந்து போனான்.

“என்ன செய்யலாம்?” முதல் கார் ஆசாமி கேட்டான்.

ஆயிரம் கேள்விகள் மனதில் எழுந்தாலும், இந்த சூழ்நிலையை சிறிதும் எதிர்பாராமலிருந்தாலும் கூட இரண்டாவது கார் ஆசாமி தன்னை உடனடியாக சுதாரித்துக் கொண்டான். ஒரு முறை ஆழமாக மூச்சை உள்ளிழுத்து வெளி விட்டவன் அமைதியாகச் சொன்னான். “முதலில் இவனுக்கு நாம் கொடுத்த செல்லை எடு”

*முதல் கார் ஆசாமி இறந்தவன் சட்டைப்பையில் வைத்திருந்த இரண்டு செல் போன்களை வெளியே எடுத்தான். ஒன்று கொலைகாரனுடையது. இன்னொன்று அவர்கள் அவனுக்குக் கொடுத்தது.*

*“நம் செல்போனில் வேறு யாரிடமாவது எங்காவது பேசியிருக்கிறானான்னு பார்”*

*முதல் கார் ஆசாமி தாங்கள் கொடுத்திருந்த செல்போனில் ஆராய்ந்து விட்டுச் சொன்னான். “நம்மிடம் மட்டும் தான் பேசியிருக்கான். வேற எந்தக் காலும் இதுக்கும் வரல. இவனை என்ன பண்ணறது?”*

*”இவனை சுவரின் மறைவுக்கு இழுத்து விடு. வெளியே இருந்து பார்த்தால் தெரியாதபடி இருந்தால் போதும்”*

*கவனமாக பிணத்தை சுவர்ப்பக்கம் அவன் இழுத்துப் போட்ட பிறகு இரண்டாம் கார் ஆசாமி சொன்னான். “போய் உள்ளே என்ன நிலவரம்னு பார்க்கலாம் வா”*

*அவர்கள் இருவரும் வேகமாக வீட்டை நோக்கி நடந்தார்கள். நடக்கும் போது முதல் கார் ஆசாமி கேட்டான். “அவன் பயத்துலயே செத்திருப்பானோ? என்ன ஆகியிருந்திருக்கும்?”*

*”தெரியல. எனக்கு சந்தேகம், நாம சொன்னதையும் மீறி அந்த பூஜையறைக்குள்ளே நுழைஞ்சிருக்கலாம். ஏதாவது செய்திருக்கலாம்.....”*

*"அது அவ்வளவு அபாயமானதா?"*

*இரண்டாம் கார் ஆசாமி பதில் சொல்லவில்லை. அதற்குள் அவர்கள் வீட்டை எட்டி விட்டிருந்தார்கள். சர்வ ஜாக்கிரதையுடன் வாசலிலேயே நின்று கொண்டு உள்ளே எட்டிப்பார்த்தார்கள். பத்மாசனத்தோடே கவிழ்ந்திருந்த முதியவர் பிணம் அவர்களை வெறித்துப் பார்த்தது. முகத்தில் இரத்த வரிகள் இருந்தாலும் அவர் முகத்தில் இருந்த அமைதியையும் அவரைக் கொன்றவன் முகத்தில் இருந்த பீதியையும் ஒப்பிடாமல் அவர்களால் இருக்க முடியவில்லை....*

*"இதென்ன இந்த ஆள் பத்மாசனத்துலயே இருக்கார். இது இயல்பா தெரியலயே..." முதல் கார் ஆசாமிக்குத் தன் திகைப்பை வெளிக்காட்டாமல் இருக்க முடியவில்லை.*

*"உன்னால கொஞ்ச நேரம் பேசாமல் இருக்க முடியுமா?" என்று குரலை உயர்த்தாமல் பல்லைக் கடித்துக் கொண்டு சொன்ன இரண்டாம் கார் ஆசாமி ஹாலை ஆராய்ந்தான். கிழவரின் பிணத்தைத் தவிர வேறு எதுவும் வித்தியாசமாக இருப்பதாகத் தோன்றவில்லை.*

*உள்ளே அவன் நுழைந்தான். படபடக்கும் இதயத்துடன் பூஜையறையைப் பார்த்தான். சிவலிங்கம் இன்னும் அங்கேயே இருந்தது. ஒரு நிம்மதிப் பெருமூச்சு விட்டான் அவன். அவனைத் தொடர்ந்து முதல் கார் ஆசாமியும் உள்ளே நுழைந்தான்.*

*இரண்டாம் கார் ஆசாமி எச்சரித்தான். "எதையும் தொட்டுடாதே. கவனமா இரு"*

முதல் கார் ஆசாமி தலையசைத்தான். இருவரும் மெல்ல பூஜையறைக்கு இரண்டடி தள்ளியே நின்று பூஜையறையை நோட்டமிட்டார்கள். பூஜையறையில் திருநீறு டப்பா கவிழ்ந்து திருநீறு தரையில் கொட்டிக் கிடந்தது. ஹாலின் விளக்கொளியில் அதற்கு மேல் பூஜையறையில் வேறு அசாதாரணமானதாக எதுவும் தெரியவில்லை.

இரண்டாம் கார் ஆசாமி தன் கைக்குட்டையை எடுத்து அதைப்பிடித்தபடி ஹாலில் இருந்த பூஜையறை ஸ்விட்ச்சைப் போட்டான். ஓரடி தூரத்தில் இருந்தே பூஜையறையை மேலும் ஆராய்ந்தான். அப்போது தான் பூஜையறையின் ஒரு ஓரத்தில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த தேவார, திருவாசகப் புத்தகங்கள் சரிந்து கிடந்தது தெரிந்தது.

"முட்டாள்... முட்டாள்.... அவன் உள்ளே போயிருக்கிறான்" இரண்டாம் கார் ஆசாமி ஆத்திரத்துடன் பல்லைக் கடித்தான். சில வினாடிகளில் சுதாரித்துக் கொண்ட அவன் அடுத்தவனிடம் சொன்னான். "அவனை வரச் சொல்..."

முதல் கார் ஆசாமி அவசரமாகப் போனான். வெளியே இருந்த முதல் காரின் பின் கதவைத் திறந்து அங்கு அமர்ந்திருந்தவனை "வாங்க" என்றான்.

இடுப்பில் ஈரத்துண்டை கச்சை கட்டிக் கொண்டிருந்த ஒரு ஆஜானுபாகுவான இளைஞன் காரில் இருந்து இறங்கினான். அவன் செருப்பு இல்லாமல் வெறும் காலுடன் இருந்தான். அவன் நெற்றியிலும், கைகளிலும், புஜங்களிலும், நெஞ்சிலும் திருநீறு பூசி இருந்தான். அவன் வாய் ஏதோ மந்திரங்களை முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

இருவரும் உள்ளே போனார்கள். அந்த இளைஞன் அக்கம் பக்கம் பார்க்காமல் நேர் பார்வையுடன் சீரான வேகத்தில் சென்றான். வீட்டினுள்ளே நுழையும் போது முதியவரின் பிணத்தைப் பார்க்க நேர்ந்த போது மட்டும் அவன் ஒரு கணம் அப்படியே நின்றான். அவனையும் அந்த விலகாத பத்மாசனம் திகைப்பை அளித்திருக்க வேண்டும்.

தாமதமாவதை சகிக்க முடியாத இரண்டாம் கார் ஆசாமி அவனுக்கு பூஜையறையைக் கை நீட்டி காண்பித்தான். அந்த இளைஞன் திகைப்பில் இருந்து மீண்டு பூஜையறைக்குள் நுழைந்தான். உள்ளே நுழைந்தவுடன் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்தான். மந்திரங்களை உச்சரித்தபடியே அந்த சிலையை அவன் பயபக்தியுடன் தொட்டு வணங்கினான். ஏதோ ஒரு லேசான மின் அதிர்ச்சியை உணர்ந்தது போல அவனுக்கு உடல் சிலிர்த்தது.

அதைக் கவனித்த முதல் கார் ஆசாமி "என்ன?" என்று சற்றே பயத்துடன் கேட்டான்.

அந்த இளைஞன் பதில் சொல்லவில்லை. அவன் பக்கம் திரும்பிப் பார்க்கவும் இல்லை. இரண்டாம் கார் ஆசாமி தன் சகாவிடம் அவசரமாய் தாழ்ந்த குரலில் எச்சரித்தான். "அவன் கவனம் இப்போது எதிலும் திரும்பக்கூடாது. நீ எதுவும் கேட்காதே....பேசாமலிரு"

முதல் கார் ஆசாமி அதற்குப் பிறகு வாயைத் திறக்கவில்லை.

அந்த இளைஞன் கை கூப்பி ஒரு முறை வணங்கி விட்டு அந்த சிவலிங்கத்தைத் தூக்கினான். அந்த சிவலிங்கம் மிக அதிக கனம் இல்லை. சுமார் பத்து அல்லது பன்னிரண்டு கிலோ தான் இருக்கும்.

அதைத் தூக்கிக் கொண்டு அந்த இளைஞன் வெளியே வந்தான். அவன் உதடுகள் ஏதோ மந்திரத்தை உச்சரித்தபடி இருந்தன.

அவன் வேகமாக சிவலிங்கத்துடன் வெளியே செல்ல மற்ற இருவரும் அவனைப் பின் தொடர்ந்தார்கள். அந்த இளைஞன் தன் கையில் இருக்கும் சிவலிங்கம் கனத்துக் கொண்டே போவது போல் உணர்ந்தான். அவன் ஆரம்பத்திலேயே எச்சரிக்கப்பட்டிருந்தான். ” அந்த சிவலிங்கம் இங்கு வந்து சேர்வதற்குள் நீ எதிர்பாராத எத்தனையோ நடக்கலாம். சிவலிங்கம் உன் கையில் இருக்கும் போது பிரளயமே ஆனாலும் சரி, இந்த மந்திரத்தை சொல்வதை மட்டும் நீ நிறுத்தி விடக்கூடாது. இது தான் உன் பாதுகாப்பு கவசம். அதே போல சிவலிங்கத்தைக் கீழே போட்டு விடவும் கூடாது....”

அந்த நள்ளிரவுக் குளிரிலும் அந்த இளைஞனுக்கு வியர்க்க ஆரம்பித்தது. சிவலிங்கம் அநியாயத்திற்கு எடை கூடிக்கொண்டு போனது. ஏதோ ஒரு அசௌகரியத்தை உடலெல்லாம் அவன் உணர்ந்தான். முன்பே அறிவுறுத்தப்பட்டபடி அவன் அந்த மந்திரத்தை மட்டும் விடாமல் சொல்லிக் கொண்டிருக்க, காரை வந்தடைந்தான்.

முதல் காரின் பின் சீட்டில் முன்பே புதிய பட்டுத்துணி ஒன்று விரிக்கப்பட்டு இருந்தது. அதில் மிகக் கவனமாய் அந்த சிவலிங்கத்தை வைத்து விட்டு அதன் அருகில் அந்த இளைஞன் தானும் அமர்ந்தான். இறக்கி வைத்த பின் தான் அவனுக்கு நிம்மதியாக இருந்தது. கார் வேகமாகக் கிளம்பியது.

முதல் காரைத் தொடர்ந்தே இரண்டாவது காரும் வேகமாகத் தொடர்ந்தது. இரண்டாவது கார் ஆசாமி நிம்மதிப் பெருமூச்சு விட்டான். வந்த வேலை நன்றாகவே முடிந்து விட்டது. அந்தக் கொலைகாரன் தான் தேவை இல்லாமல் உயிரை விட்டு விட்டான்....

அவன் எப்படி இறந்தான்? பயமே அறிந்திராத அவன் எதைப்பார்த்து பயந்தான்? கிழவரைக் கொன்று விட்டு தெரிவித்த போது கூட அவன் சாதாரணமாகத் தானே இருந்தான்! பிறகு ஏதோ ஒரு உந்துதலில் அவன் பூஜையறைக்குள் நுழைந்திருக்க வேண்டும். பின் என்ன ஆகியிருந்திருக்கும்?... மனதின் நீண்ட கேள்விகள் செல் போன் சத்தத்தில் அறுபட்டன. செல் போனை எடுத்துப் பேசினான். “ஹலோ”

முதல் கார் ஆசாமி தான் பேசினான். “ஏ.சி போட்டுக்கூட இவனுக்கு அதிகமா வியர்க்குது. ஏதோ ஜுரத்தில் இருக்கிற மாதிரி தோணுது. இவ்வளவு நேரமா மந்திரத்தை மெல்ல உச்சரிச்சிட்டு இருந்தவன் சத்தமாய் சொல்ல ஆரம்பிச்சிருக்கான். ஏதோ பைத்தியம் பிடிச்சிட்ட மாதிரி தோணுது. என்ன செய்யறது?” அவன் குரலில் பயம் தொனித்தது.

இரண்டாம் கார் ஆசாமி காதில் அந்த இளைஞன் சத்தமாகச் சொல்லும் மந்திரம் நன்றாகவே கேட்டது. இரண்டாம் கார் ஆசாமி அமைதியாகச் சொன்னான். “இதுல நாம் செய்யறதுக்கு எதுவுமில்லை. சீக்கிரமா அந்த சிலையை அங்கே சேர்த்திட்டா போதும். மீதியை அவர் பார்த்துக்குவார். நீ கண்டுக்காதே”

ஆனால் முதல் கார் ஆசாமிக்கு அப்படி இருக்க முடியவில்லை. நடக்கிற எதுவுமே இயல்பானதாக இல்லை.... ஆழம் தெரியாமல் காலை விட்டு விட்டோமோ என்று தோன்ற ஆரம்பித்தது.

# அத்தியாயம் - 3

மிக நேசித்த மனிதர்களின் மரணத்தைக் காண்பது பரமேஸ்வரனுக்கு அறுபத்தி எட்டாண்டு கால வாழ்க்கையில்

புதியதொன்றும் அல்ல. பதினேழு வயதில் தந்தை, முப்பத்தெட்டு வயதில் மனைவி, அறுபத்தி ஏழு வயதில் மகன் என மூவர் மரணத்தை சந்தித்திருக்கிறார். மூன்றுமே அகால மரணங்கள் தான். அதற்கெல்லாம் யாரையும் அவரால் குற்றப்படுத்த முடியவில்லை. விதி என்று தாங்கிக் கொள்ள முடிந்தது. ஆனால் அண்ணன் பசுபதியின் மரணம் கொலையாக இருந்ததால் அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. தகவல் கிடைத்ததும் தளர்ந்து போய் அப்படியே இரண்டு நிமிடங்கள் உட்கார்ந்திருந்தார். மருமகனையும் பேரனையும் அழைத்து அங்கு நடக்க வேண்டியதைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி அனுப்பிய அவருக்கு அண்ணனின் மரணத்தைத் தாயிடம் எப்படி சொல்வது என்ற கவலை மலை போல் மனதை அழுத்தியது.

ஆனந்தவல்லிக்கு எண்பத்தி எட்டு வயது ஆகியிருந்த போதும் உடல் ஆரோக்கியமோ, மன உறுதியோ குறைந்திருக்கவில்லை. என்றாலும் மூத்த மகன் மரணத்தை அவளால் தாங்கிக் கொள்ள முடியுமா என்று அவர் பயப்பட்டார். கடிகாரத்தைப் பார்த்தார். மணி காலை ஏழு. அம்மா ஐந்தரை மணிக்கே எழும் வழக்கம் உடையவள். இன்னேரம் குளித்து விட்டு சாய்வு நாற்காலியில் அமர்ந்து தினசரிப் பத்திரிக்கையைப் படிக்க ஆரம்பித்திருப்பாள்... கனத்த இதயத்துடன் தாயின் அறைக்குள் நுழைந்தார்.

அவர் கணித்த படியே சாய்வு நாற்காலியில் அமர்ந்து செய்தித்தாளைப் படித்துக் கொண்டிருந்த ஆனந்தவல்லி மகனைப் பார்த்ததும் புன்னகை பூத்தாள்.

அவருக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து அவளைப் பட்டுப்புடவை அல்லாமல் வேறெந்த புடவை அணிந்தும் அவர் பார்த்ததில்லை. அவள் உடலில் சுமார் முப்பது பவுன்களுக்கு குறைந்து நகைகள் இல்லாமல் இருந்ததில்லை. ஒரு நாள் பார்த்த

*நகையை பதினைந்து நாட்களாவது கழியாமல் மறு முறை அவள் உடலில் பார்க்க முடியாது. அதே போல் ஒரு நாள் அணிந்த பட்டுப்புடவை சில மாதங்கள் கழியாமல் அவள் அணிவதில்லை....*

*"என்னடா வாக்கிங் போகலையா?" அவள் கேட்டாள்.*

*"இல்லம்மா"*

*"ஏண்டா உடம்பு சரியில்லையா. என்னவோ மாதிரி இருக்கே?"*

*பரமேஸ்வரன் சொல்ல வாய் வராமல் தவித்தார். எந்தவொரு சூழ்நிலையிலும் தயக்கமில்லாமல் செய்ய வேண்டியதைச் செய்ய முடிந்த அவளுடைய இளைய மகனின் தயக்கம் ஏதோ ஒரு விபரீதம் நடந்திருக்க வேண்டும் என்பதை அவளுக்கு உணர்த்த அவள் செய்தித்தாளை கீழே வைத்தாள்.*

*"யாருக்கு என்ன ஆச்சு"*

*எந்தத் தாயும் கேட்க விரும்பாத செய்தியை அவர் அவளுக்கு எப்படிச் சொல்வார்? மெல்ல வந்து அவள் அருகே அமர்ந்து அவள் கைகளைத் தன் கைகளால் பிடித்துக் கொண்டு கண்கள் கலங்க பரமேஸ்வரன் சொன்னார். "அண்ணா காலமாயிட்டான்மா"*

*ஆனந்தவல்லி இடி விழுந்தது போல் உணர்ந்தாள். நம்ப முடியாதவளாய் சில வினாடிகள் இருந்து விட்டு கேட்டாள். "என்ன ஆச்சு?" அவள் குரல் உடைந்திருந்தது.*

அவர் சுருக்கமாக அண்ணன் கொலை செய்யப்பட்டார் என்பதைச் சொன்னார். அவரையே வெறித்துப் பார்த்தபடி சிறிது நேரம் அமர்ந்திருந்த அவள் கண்களில் நீர் நிறைந்தது.

அவளுக்கு இன்னமும் கேட்டதை நம்ப முடியவில்லை. “யாருக்குமே எந்த தீங்கையும் மனசால கூட அவன் நினைச்சதில்லையேடா. நமக்கெல்லாமாவது ஆகாத ஆள் இருப்பாங்க. அவனுக்கு அப்படி யாரும் இருக்க முடியாதேடா... பின்ன எப்படிடா?” அவள் நம்ப முடியாமல் கேட்டாள்.

அவள் சொன்னது போல பசுபதி புழு பூச்சிக்குக் கூட தீங்கு எண்ணத் தெரியாதவர். கோடிக்கணக்கான சொத்துக்களை தன் தம்பிக்கே எழுதிக் கொடுத்து விட்டு “எனக்கு இது போதும்” என்று ஒரு சிவலிங்கத்தோடு தோட்ட வீட்டில் ஒதுங்கியவர். ஒரு துறவியைப் போல வாழ்ந்தவர். எதையும் யாரிடமும் எதிர்பாராதவர். அன்பைத் தவிர வேறு ஒரு தன்மை அறியாதவர். அவரைக் கொலை செய்ய யாருக்கு எப்படி மனம் வந்தது? அந்தக் கேள்விக்குப் பதில் அந்த காணாமல் போன சிவலிங்கத்தில் இருப்பதாகத் தான் அவருக்குத் தோன்றியது. அதைத் தாயிடம் அவர் வாய் விட்டுச் சொன்னார். அவள் அதிர்ச்சியும் துக்கமும் மனதை மலையாய் அழுத்த சிலையாய் சமைந்தாள்....

அந்த சிவலிங்கம் சுமார் அறுபது வருடங்களுக்கு முன் அவர்கள் குடும்பத்திடம் வந்து சேர்ந்தது. பரமேஸ்வரனின் மூதாதையர்கள் சிவனின் பரம பக்தர்கள். பெரும் பணக்காரரான பரமேஸ்வரனின் தந்தையும் சிவபக்தர்கள், சிவன் கோயில்களுக்கு ஆதரவாக இருந்ததால் அவரிடம் பல சைவ அடியார்கள் வந்து செல்வது வழக்கம். இரண்டரை ஏக்கர் தோட்ட வீட்டை பரமேஸ்வரனின் தந்தை அவர்கள் வந்து தங்கிச் செல்வதற்காகவே ஒதுக்கி வைத்திருந்தார். அப்படித்தான் ஒரு நடுத்தர வயது சித்தர்

அறுபது வருடங்களுக்கு முன் அந்தத் தோட்ட வீட்டிற்கு வந்தார். அந்த சித்தர் தன்னுடன் ஒரு சிவலிங்கத்தைக் கொண்டு வந்திருந்தார். அப்போது பசுபதிக்கு வயது பத்து. பரமேஸ்வரனுக்கு வயது எட்டு. பிள்ளைகள் இருவரையும் அழைத்துக் கொண்டு அவர்கள் தந்தை அந்த சித்தரை தரிசிக்கச் சென்றார்.

அந்த சித்தர் தோற்றத்தில் கருத்து மெலிந்து இருந்தாலும் அவர் கண்களில் இருந்த ஜொலிப்பு இப்போதும் பரமேஸ்வரனுக்கு நினைவிருக்கிறது. நேராக அவர் கண்களை சில வினாடிகள் பார்த்துக் கொண்டிருப்பது முடியாத காரியம் தான். ஆனால் சிறுவன் பசுபதி அந்த சித்தரைப் பார்த்தபடியே வசீகரப்பட்டபடி நிறைய நேரம் நின்றிருந்தான். அவர்கள் தந்தை கிளம்பிய போது பசுபதி திரும்ப வீட்டுக்கு வர மறுத்தான். அன்று அங்கேயே தங்க விருப்பம் தெரிவித்தான். அந்த சித்தரும் அவர்கள் தந்தையிடம் அவன் இருக்கட்டுமே என்று சொல்ல, அவருக்கு மகன் நடவடிக்கை ஆச்சரியத்தை ஏற்படுத்தினாலும் சம்மதித்து இளைய மகனை மட்டும் அழைத்துக் கொண்டு வீடு திரும்பினார்.

அன்று அவருக்கு மனைவி ஆனந்தவல்லியிடம் இருந்து கிடைத்த அர்ச்சனைகள் கொஞ்சநஞ்சமல்ல. ஆன்மிக விஷயங்களில் அவரளவு ஈடுபாடு இல்லாத ஆனந்தவல்லி மூத்த மகன் நடவடிக்கையில் ஏதோ ஒரு ஆபத்தை உணர்ந்தாள். அவள் உணர்ந்ததை உறுதிப்படுத்துகிற மாதிரி மறு நாள் வீடு திரும்பிய பசுபதி நிறைய மாறியிருந்தான். விளையாட்டிலும், சாப்பிடுவதிலும், மற்றவர்களுடன் பழகுவதிலும் ஆர்வம் அவனுக்குப் படிப்படியாகக் குறைய ஆரம்பித்தது. அந்த சித்தர் இரண்டு நாளில் தோட்ட வீட்டை விட்டுப் போயிருந்தாலும் சிவலிங்கத்தை மட்டும் அங்கேயே விட்டுச் சென்றிருந்தார்.

பசுபதி அடிக்கடி தோட்ட வீட்டுக்குச் சென்று அந்த சிவலிங்கத்துடன் அதிகப் பொழுதைக் கழிக்க ஆரம்பித்தான். ஆனந்தவல்லி தன் மகனை மாற்ற தன்னால் ஆன அத்தனையும் செய்து பார்த்தாள். ஆனால் பசுபதி மாறியவன் மாறியவன் தான். ஒரு நாள் அங்கு போனவன் வீடு திரும்பவே இல்லை. இனி தனக்கு அது தான் வீடு என்றான். கோடிக்கணக்கான சொத்துகள் இருக்கையில் அதற்குப் பாத்தியப்பட்டவன் இப்படி மாறுவதில் சிறிதும் விருப்பமில்லாத ஆனந்தவல்லி ஒரு நாள் தோட்ட வீட்டில் மகன் முன்னிலையில் உண்ணா விரதம் கூட இருந்து பார்த்தாள். தற்கொலை செய்து கொள்வதாக பயமுறுத்தியும் பார்த்தாள். தானிறந்தால் கொள்ளி போடக் கூட அவன் வரக்கூடாது என்று சொன்னாள். தாயை இரக்கத்துடன் பசுபதி பார்த்தானே ஒழிய அசைந்து கொடுக்கவில்லை.

ஆனந்தவல்லி தோற்றுப் போய் வீடு திரும்பினாள். பசுபதி அடுத்ததாக அவர்கள் வீட்டுக்குத் திரும்பியது தந்தையின் மரணத்தின் போது தான். தந்தையின் அந்திமக் கிரியைகள் முடிந்த பின் மறுபடி தோட்ட வீட்டுக்குச் சென்ற பசுபதி பின் கடைசி வரை அங்கிருந்து வேறங்கும் சென்றதில்லை. அவர் வாழ்க்கை ஒரு துறவியினுடையதாக இருந்தது. எல்லா சொத்துக்களையும் தம்பியின் பெயருக்கு மாற்றிக் கொடுத்தார். அதற்குப் பின் வீட்டின் எந்த சுப, அசுப நிகழ்ச்சிகளிலும் அவர் பங்கெடுத்தது இல்லை.

ஆனால் அண்ணன் மீது அதீத பாசம் கொண்டிருந்த பரமேஸ்வரன் மட்டும் மாதமொரு முறையாவது அண்ணனைப் போய் சந்திப்பார். சில முறை தன் மனைவியையும், குழந்தைகளையும் உடன் அழைத்துப் போயிருக்கிறார் என்றாலும் அதிகம் அவர் போனது தனியாகத் தான். அப்போதெல்லாம் பசுபதி பேசிய வார்த்தைகளை விரல் விட்டு எண்ணி விடலாம். ஆனால் சகோதரனைச் சென்று சந்தித்து விட்டுத் திரும்பும் போதெல்லாம்

மன அமைதியை பரமேஸ்வரன் உணர்ந்தார். ஏதாவது பிரச்சினைகள் வரும் போதெல்லாம் அண்ணனிடம் மனம் விட்டு பரமேஸ்வரன் சொல்வார். பசுபதி அமைதியாகக் கேட்டுக் கொண்டிருப்பார். சில சமயங்களில் ஓரிரு சொற்கள் பதிலாக வரும். பல சமயங்களில் மௌனமே பதிலாக அமையும். ஆனாலும் வீடு திரும்பும் போது பரமேஸ்வரன் தெளிவடைந்து இருப்பார்.

ஆரம்பத்தில் இளைய மகன் போய் விட்டு வரும் போதெல்லாம் தன்னைப் பற்றி மூத்த மகன் விசாரித்தானா என்றறிய ஆனந்தவல்லி ஆர்வம் காட்டினாள். இல்லை என்பதை அறிந்த போது அவள் முகத்தில் பரவிய சோகம் பரமேஸ்வரனுக்கு இப்போதும் நினைவில் இருக்கிறது. இயல்பிலேயே சுயமரியாதை, கௌரவம், தன்மானம் ஆகியவை அதிகம் உள்ள அவள் மூத்த மகனின் பாராமுகத்தில் மனமுடைந்து போனாலும் வெளியே காட்டிக் கொண்டதில்லை. பின் மூத்த மகனைப் பற்றி விசாரித்ததும் இல்லை, பேசியதும் இல்லை. எத்தனையோ முறை அண்ணனைப் பார்க்கச் செல்லும் போது தாயையும் உடன் வர பரமேஸ்வரன் அழைத்திருக்கிறார். ஆனால் அவள் போனதில்லை. மகனே ஆனாலும் சுய கௌரவத்தை விட்டுப் போய் பார்ப்பதில் அவளுக்கு உடன்பாடில்லை.

இரண்டு மாதங்களுக்கு முன் பரமேஸ்வரன் சென்றிருந்த போது முதல் முறையாக பசுபதி கேட்டார். “அம்மா எப்படி இருக்கா?”

பரமேஸ்வரனிற்கு ஆச்சரியமாக இருந்தது. “நல்லா இருக்கா”

“ஒரு தடவை கூட்டிட்டு வா. பார்க்கணும் போல இருக்கு”

வீட்டுக்கு வந்த பின் பரமேஸ்வரன் தாயிடம் சொன்ன போது அவள் அப்படியே உறைந்து போனது போல் இருந்தது. கனவா நனவா என்பது போல கண்களை கசக்கி விழித்துப் பார்த்தாள். நிஜம் தான் என்றானவுடன் அவள் கண்களில் அவளையும் மீறி நீர் கோர்த்தது. அவன் கூப்பிட்டவுடனே போய்த்தான் ஆக வேண்டுமா என்று அவள் யோசித்தது போல இருந்தது. ஆனாலும் மறு நாளே பரமேஸ்வரனுடன் தோட்ட வீட்டுக்குச் சென்றாள்.

மூத்த மகனைப் பார்த்தவுடன் அத்தனை ஆண்டுகள் சுமந்து கொண்டு இருந்த உள்ளக் குமுறலை எல்லாம் ஆனந்தவல்லி கொட்டித் தீர்த்தாள். அம்மா என்று ஒருத்தி இருப்பது உனக்கு இப்போது தானா ஞாபகம் வந்தது என்று ஆரம்பித்தவள் அரை மணி நேரம் அழுகையுடனும் ஆத்திரத்துடனும் மகனை வாயிற்கு வந்தபடி திட்டித் தீர்த்தாள். ஒரு குழந்தையின் புலம்பலைக் கேட்டுக் கொள்வது போல புன்னகையுடன் தாயைப் பார்த்துக் கொண்டிருந்த பசுபதி அவள் ஓய்ந்த பிறகு ஒரு அன்பான மகனாய் இயல்பாய் பேசினார். தாயின் உடல்நலம் விசாரித்தார். அவள் தன் உடல் உபாதைகளைச் சொன்ன போது சாப்பிட வேண்டிய காய்கறிகள், உணவுகளையும், தவிர்க்க வேண்டிய காய்கறிகள் உணவுகளையும் சொன்னார். ஆனந்தவல்லி சொன்ன குடும்ப விஷயங்களைப் பொறுமையோடு கேட்டார். இரண்டு மணி நேரம் அங்கு இருந்து விட்டுக் கிளம்பிய போது ஆனந்தவல்லி மூத்த மகனிடம் கறாராகச் சொன்னாள். “இனிமே நான் வர மாட்டேன். அம்மா வேணும்னா நீ தான் என்னைப் பார்க்க வரணும்”

பதிலாக பசுபதி புன்னகைக்க மட்டுமே செய்தார். ஆனால் அதுவே தாயிற்கும் மகனிற்கும் இடையேயான கடைசி சந்திப்பாக அமைந்து விட்டது.....

பரமேஸ்வரன் எழுந்தார். ”அம்மா அண்ணா பிணத்தை இங்கே கொண்டு வரணுமா?”

“வேண்டாம்.” யோசிக்காமல் வந்தது பதில்.

”அண்ணாவை கடைசியா ஒரு தடவை அங்கே வந்து பார்க்கறியா?” அவர் தயக்கத்துடன் கேட்டார்.

”அவனை அந்தக் கோலத்துல பார்க்கற சக்திய கடவுள் தரலைடா. நீ போ.... போய் ஆக வேண்டியதைப் பார்...” என்று கரகரத்த குரலில் சொன்ன ஆனந்தவல்லி இளைய மகன் அறையிலிருந்து வெளியேறிய பிறகு வாய் விட்டு அழ ஆரம்பித்தாள்...

அண்ணனின் கடைசி காரியங்களைக் கவனிக்க விரைந்த பரமேஸ்வரன் மனதில் அந்த சிவலிங்கத்தைக் குறித்து சிறு வயதிலிருந்து கேள்விப்பட்ட சில விஷயங்கள் நினைவுக்கு வர ஆரம்பித்தன. எல்லாம் நிஜமாக இருக்குமோ என்ற சந்தேகம் வந்தது.

“சேச்சே... இந்த இருபத்தி ஓராம் நூற்றாண்டில் இதெல்லாம் என்ன முட்டாள் தனம்” என்று அறிவு சொன்னது.

அப்படியென்றால் ஏன் இந்தக் கொலை? ஏன் அந்த சிவலிங்கம் களவாடப்பட்டது? என்று மனம் கேட்டது.

அதற்கு அவரிடம் பதில் இருக்கவில்லை.

## அத்தியாயம் - 4

மயானத்தில் இருந்து திரும்பி வந்து நிறைய நேரம் ஆன பின்னும் கூட சகோதரன் மரணத்தை ஜீரணிக்க முடியாதவராய் பரமேஸ்வரன் தவித்தார். நள்ளிரவாகி விட்ட போதும் அவருக்கு உறக்கம் வரவில்லை.

பசுபதியின் மரணம் நிறைய கேள்விக்குறிகளை எழுப்பி இருந்தது. பல வழக்குகளில் சம்பந்தப்பட்டு, கைதாகி, சமீபத்தில் சிறையிலிருந்து தப்பி வந்த ஒரு கொலையாளியின் பிணம் அந்தத் தோட்ட வீட்டின் உள்ளே மதில்சுவர் அருகே விழுந்து கிடந்தது பல குழப்பங்களை ஏற்படுத்தி இருந்தது. இன்னும் பிரேத பரிசோதனை மற்றும் கைரேகைத் தடய அறிக்கைகள் எல்லாம் வர வேண்டி இருக்கிறது என்றாலும் அவன் தான் பசுபதியைக் கொன்றிருக்க வேண்டும் என்ற அபிப்பிராயத்தில் தான் போலீசார் இருந்தார்கள். ஆனால் அவனை யாரும் கொன்ற அறிகுறிகள் இல்லை. அவன் எப்படி இறந்தான் என்பதை இனி வரும் பரிசோதனை முடிவுகள் தான் சொல்ல வேண்டும். அவன் முகத்தில் தெரிந்த பயம் தான் போலீசாரை ஆச்சரியப்படுத்தியது போல் இருந்தது. அவனை அறிந்த போலீசார் பயம் என்பது அவன் அறியாத உணர்ச்சி என்றார்கள்.

அதே போல் போலீசாரை ஆச்சரியப்படுத்திய இன்னொரு விஷயம் பசுபதியின் மரணத்திலும் கலையாத பத்மாசனம். பசுபதியைப் பற்றி அவர்கள் நிறைய கேள்விகள் கேட்டார்கள். எல்லா விதமான யோகாசனங்களும் முறையாக அவர் அறிந்திருந்தார் என்றும் கடைசி வரை அவற்றை செய்து கொண்டிருந்தார் என்று மட்டும் பரமேஸ்வரன் சொன்னார்.

அடுத்தபடியாக போலீசாரின் கேள்விகள் அதிகம் சிவலிங்கத்தைச் சுற்றியே இருந்தன. அந்த சிவலிங்கம் மரகத லிங்கம், ஸ்படிக லிங்கம் போன்ற விலையுயர்ந்த லிங்கமா, இல்லை

லிங்கத்திற்குள்ளே ஏதாவது விலை உயர்ந்தவற்றை மறைத்து வைத்திருந்தீர்களா, இல்லை விலை மதிப்பற்ற வரலாற்று சிறப்பு மிக்க புராதன லிங்கமா என்றெல்லாம் கேட்டார்கள். அப்படியெல்லாம் இல்லை என்று அவர் சொன்ன போது போலீசாருக்கு நம்பக் கஷ்டமாக இருந்தது அவர்கள் முகபாவத்திலேயே தெரிந்தது. இறந்தவருக்கு எதிரிகளும் கிடையாது, களவு போன பொருள் விலையுயர்ந்ததும் கிடையாது என்றால் கொலை நிகழக் காரணமே இல்லை என்று அவர்கள் நினைத்ததில் பரமேஸ்வரனுக்குத் தவறு சொல்லத் தோன்றவில்லை....

”இன்னும் தூங்கலையா”- தாயின் குரல் கேட்டு பரமேஸ்வரன் திரும்பினார். ஆனந்தவல்லி அவர் அறைக் கதவைப் பிடித்தபடி நின்றிருந்தாள். இந்த ஒரே நாளில் மேலும் பல வருடங்கள் கூடியது போலத் தளர்ந்து தெரிந்தாள்.

“தூக்கம் வரலம்மா. வா, உட்கார்”

ஆனந்தவல்லி அவருடைய படுக்கையில் மெல்ல வந்து உட்கார்ந்தாள். கண்ணீரோடு சொன்னாள். “அவனுக்கு சாகப்போகிறது முதல்லயே தெரிஞ்சுடுச்சு. அதான் என்னை ஒரு தடவை பார்க்கணும்னு சொல்லி இருக்கான். அவனை அன்னைக்கு மட்டும் நான் போய் பார்க்காம இருந்திருந்தா இன்னைக்கு என்னையே என்னால மன்னிச்சிருக்க முடியாது. என் குழந்தை எனக்கு அந்தக் குறை இருந்துடக்கூடாதுன்னு தான் கூப்பிட்டு பேசியிருக்கான்”

பரமேஸ்வரனுக்கும் அப்படியே தோன்றியது. இப்போதும் அம்மாவின் திட்டுகளை எல்லாம் மலர்ச்சி சிறிதும் குறையாத முகத்தோடு அண்ணன் கேட்டுக் கொண்டு அமர்ந்திருந்தது அவர்

*மனதில் பசுமையாக நினைவில் நின்றது. தாயைப் பார்த்தார். அவளும் மூத்த மகனுடன் கழித்த அந்தக் கடைசி கணங்களை மனதில் ஒருமுறை வாழ்ந்து பார்த்தது போல் இருந்தது. கண்கள் ஈரமாக அவள் பிறகு மெல்லக் கேட்டாள். ”போலீஸ் என்ன சொல்றாங்க?”*

*”அந்த சிவலிங்கத்திற்காகத் தான் இது நடந்திருக்கணும்னு நினைக்கிறாங்க”*

*சிவலிங்கத்தைப் பற்றி சொன்னவுடனேயே ஆனந்தவல்லி மௌனமானாள். அம்மா ஏதாவது சொல்வாள் என்று எதிர்பார்த்த பரமேஸ்வரன் சிறிது நேரம் பொறுத்திருந்து விட்டுக் கேட்டார்.*

*“அந்த சிவலிங்கத்தைப் பத்தி நாம நிறையவே கேள்விப்பட்டிருக்கிறோம். அதெல்லாம் உண்மையாய் இருக்குமாம்மா?”*

*அந்தக் கேள்வியே அவளை சங்கடப்படுத்தியது போல் இருந்தது. சிறிது நேரம் பழைய நினைவுகளில் ஆழ்ந்து விட்டு “தெரியலையேடா....” என்ற ஆனந்தவல்லி ஆதங்கத்துடன் சொன்னாள். “அந்த சிவலிங்கத்தை ஏதாவது கோயிலுக்குக் கொடுக்காமல் அந்த சித்தர் இங்கே கொண்டு வந்தது என்ன கர்மத்துக்குன்னு தெரியல. அதுவே அவனுக்கு எமனாயிடுச்சு பார்த்தியா”*

*பரமேஸ்வரன் மெல்ல சொன்னார். “அம்மா அந்த சித்தரை இன்னைக்கு நம்ம தோட்ட வீட்டுல நான் பார்த்த மாதிரி இருந்துச்சு”*

*ஆனந்தவல்லிக்கு மயிர் கூச்செறிந்தது. “என்னடா சொல்றே”*

“அண்ணா பிணத்தைப் பார்க்க வந்த கூட்டத்தோட கூட்டமா அவரும் நின்னிருந்த மாதிரி இருந்துச்சு”

ஆனந்தவல்லி திகைப்புடன் மகனைப் பார்த்தாள். பின் சந்தேகத்தோடு சொன்னாள். “நீ பார்த்தது வேற யாரையாவது இருக்கும். நீ அந்த ஆளை சின்னதுல பார்த்தது. இப்ப எப்படி உனக்கு சரியா ஞாபகம் இருக்கும். ”

பரமேஸ்வரன் யோசித்தபடியே சொன்னார். “பார்த்தது சின்ன வயசுலன்னாலும் அவரோட கண்களை மறக்க முடியாதும்மா. பிரகாசமா ஜொலிக்கற அந்தக் கண்களை மறுபடி இன்னைக்கு பார்த்த மாதிரி இருந்துச்சு. அந்த நேரமா பார்த்து மேயர் துக்கம் விசாரிக்க வந்தார். மேயர் கிட்ட பேசிட்டு திரும்பிப் பார்த்தா அவர் இருக்கல…”

ஆனந்தவல்லி திகைப்பு மாறாமல் சொன்னாள். “அந்த ஆள் இப்பவும் உயிரோட இருக்க முடியுமாடா? அப்பவே அந்த ஆளுக்கு வயசு கம்மியா இருக்கல. இப்ப இருந்தா அவருக்கு வயசு நூறுக்கு மேல இருக்குமேடா?”

“சித்தர்களுக்கு எல்லாம் ஆயுசு அதிகமா இருக்கும்னு சொல்றாங்க”

பரமேஸ்வரனின் கண்கள் மிகக்கூர்மையானவை. அவர் பார்த்தது போல் இருந்தது என்றால் பார்த்தே தான் இருக்க வேண்டும். ஆழ்ந்த யோசனையுடன் மகனைக் கேட்டாள். “அந்த ஆள் எதுக்குடா இப்ப வரணும்?”

“தெரியலைம்மா”

ஆரம்பத்திலிருந்தே தன் கணவர் ஆதரவு கொடுத்து வந்த சாமியார் கூட்டத்தை ஆனந்தவல்லியால் சகிக்க முடிந்ததில்லை. அதுவும் மூத்த மகன் துறவி போலவே வாழ ஆரம்பித்த பிறகு அது போன்ற ஆட்கள் தன் வீட்டுக்குள் எந்தக் காரணத்தைக் கொண்டும் நுழையக் கூடாது என்று கண்டிப்பாகச் சொன்னவள் அவள். மீறி நடந்தால் நடப்பதே வேறு என்று எச்சரிக்கையும் செய்திருந்ததால் அவள் கணவர் அவள் சொன்னதை சோதித்துப் பார்க்க விரும்பவில்லை. அதன் பின் எந்த சிவனடியாரும் அந்த வீட்டுக்குள் நுழைந்ததில்லை.

ஆனால் ஆனந்தவல்லியால் அதை நினைத்து சந்தோஷப்பட முடிந்ததில்லை. மூத்த மகனை இழந்தது இழந்தது தானே. முதலெல்லாம் மகன் எப்படியானாலும் அவன் வழியில் சந்தோஷமாக இருக்கிறான், நன்றாக இருக்கிறான் என்கிற திருப்தியாவது அவளுக்கு இருந்தது. ஆனால் இப்போதோ முழுவதுமாகப் பறி கொடுத்ததை எண்ணுகையில் அவள் பெற்ற வயிறு பற்றி எரிந்தது.

ஆனந்தவல்லி அந்த சித்தர் அன்று வந்ததையும் இன்று வந்ததையும் எண்ணிப்பார்த்து விட்டு கண்கலங்க விரக்தியுடன் சொன்னாள். “அறுபது வருஷங்களுக்கு முன்னால் அந்த ஆள் வந்தப்ப என் மகன் வீட்டை விட்டுப் போனான். இப்ப வந்தப்ப அவன் உலகத்தை விட்டே போயிட்டான்...”

பரமேஸ்வரனும் ஆரம்பத்தில் அப்படித்தான் நினைத்திருந்தார். அறுபது வருடத்திற்கு முன்பு வந்த சித்தர் இத்தனை காலம் கழித்து மறுபடி பசுபதியின் மரணத்திற்குப் பின் வந்திருக்கிறார் என்று தான் நினைக்கத் தோன்றி இருந்தது. ஆனால் யோசித்துப் பார்த்த போது

அப்படியே இருந்திருக்க வேண்டுமென்ற கட்டாயம் இல்லை என்று தோன்ற ஆரம்பித்திருந்தது. அதைத் தாயிடம் வெளிப்படையாகச் சொன்னார்.

"அறுபது வருஷங்களுக்கு முன்னாலயும், இப்பவும் அவரைப் பார்த்திருக்கோம். அதனால தெரிஞ்சுது. ஆனா அந்த சித்தர் இடையில பல தடவை அண்ணன் கிட்ட வந்து போயிருக்கலாம். தோட்ட வீட்டுல நடக்கற முழுசும் நமக்கு தெரியறதில்லையேம்மா"

ஆனந்தவல்லி திகைப்புடன் மகனைக் கேட்டாள். "என்னடா சொல்றே?"

**************

ஒரு கோயிலுக்குள்ள சூழலில் தான் அந்த வீடு இருந்தது. "ஓம் நமச்சிவாய" என்ற பஞ்சாட்சர மந்திரம் ஒலித்தகடின் மூலம் தொடர்ந்து ஒலித்துக் கொண்டே இருந்தது. பசுபதி பூஜித்து வந்த சிவலிங்கம் பல விளக்குகள் ஒளிர்ந்து கொண்டிருந்த அறையில் வைக்கப்பட்டிருந்தது. வில்வ இலைகளும், மலர்களும் அதை அலங்கரித்துக் கொண்டிருந்தன. ஊதுபத்தியின் நறுமணம் வீடெல்லாம் நிரம்பி இருந்தது. பேரமைதி அங்கே நிலவியது.

ஆனால் அதைத் தூக்கிக் கொண்டு வந்து அங்கே வைத்த இளைஞன் தான் அமைதியிழந்து தத்தளித்துக் கொண்டிருந்தான். இன்னமும் அந்த மந்திரத்தை அவன் உச்சரித்துக் கொண்டு தான் இருந்தான். அது தான் அவனை இன்னமும் காப்பாற்றிக் கொண்டிருக்கிறது என்பதை அவன் இப்போது உறுதியாக நம்பினான். அவன் உடல் இப்போதும் அனலாய் கொதிக்கிறது. பாரஸ்டமால் மாத்திரைகள் பல விழுங்கியும் அவன் ஜுரம் குறைகிற மாதிரி தெரியவில்லை.

அந்த சிவலிங்கம் சாதாரண சிவலிங்கம் அல்ல என்பதை அவன் அனுபவம் சொன்னது. அந்த லிங்கத்தை ஆரம்பத்தில் அந்த தோட்ட வீட்டில் இருந்து தூக்கிய போது அவன் உணர்ந்த கனமே வேறு. அவன் காரில் அதை வைத்த போது உணர்ந்த கனமே வேறு. வினாடிக்கு வினாடி எடை கூடியது போல் இருந்தது. அதே போல காரில் இருந்து அதை மறுபடியும் எடுத்து இங்கே அந்த பூஜையறையில் வைப்பதற்குள் அவன் நிறையவே திணறி விட்டான். நல்ல தேக பலத்துடன் இருந்த அவனுக்கு இந்த சிவலிங்கத்தின் ஆரம்ப கனத்தைப் போல மூன்று மடங்கு சுலபமாகத் தூக்க முடியும். அப்படி இருக்கையில் கடைசியாக எடுக்க பெரும்பாடு பட்டது திகைப்பாகவே இருந்தது.

இரண்டு பிணங்களை இயற்கையில்லாத விதத்தில் பார்த்தது தான் அவனை பயமுறுத்தி விட்டதாக இரண்டு கார்களில் வந்தவர்களும் பேசிக் கொண்டது அவன் காதில் விழாமல் இல்லை. அதில் உண்மையும் இருந்தது. ஆனால் அதையும் மீறி அவனைப் பயமுறுத்தியது அந்த சிவலிங்கம். அந்த சிவலிங்கத்தின் கனம் அவன் கற்பனையல்ல, பிரமையும் அல்ல என்று அவன் உறுதியாக நம்பினான். ஏனென்றால் இப்போதும் அவன் கைகள் பயங்கரமாக வலித்தன. அந்த சிவலிங்கத்திற்கு ஏதாவது சேதம் ஆனால் கொன்று விடுவோம் என்று அவர்கள் பயமுறுத்தி இருந்தார்கள். எங்கே கீழே போட்டு உடைத்து விடுவோமோ என்று அதை வைக்க வேண்டிய இடத்தில் வைக்கும் வரை பயந்தபடியே தான் அவனிருந்தான்.

அதற்கு அபிஷேக பூஜை செய்ய ஆரம்பித்த போது உடலில் லேசாக எரிச்சலும் ஆரம்பித்தது அவன் திகிலை அதிகரித்திருந்தது. அதையெல்லாம் இப்போது நினைத்து பார்த்து பிரயோஜனமில்லை என்று எண்ணிக் கொண்டான். ஏழ்மையின் அடித்தளத்தில் இருந்த அவனுக்கு அந்த சிவலிங்கத்தை எடுத்துக் கொண்டு வந்து அங்கே வைக்க இருபதாயிரம் ரூபாயும், தினசரி பூஜை செய்ய தினமும்

ஆயிரம் ரூபாயும் தருவதாகச் சொன்ன போது சுலபமாக பணம் வருகிறதே என்று தான் அவன் ஏமாந்து ஒத்துக் கொண்டு விட்டான். மாதம் இரண்டாயிரம் சம்பாதிப்பதே பெரிய கஷ்டமான விஷயமாக இருந்த போது இத்தனை பணம் சம்பாதிக்க எத்தனை காலம் கஷ்டப்பட வேண்டி இருக்கும் என்று அவன் கணக்குப் போட்டதன் விளைவு தான் இத்தனைக்கும் காரணம்.

இப்போது ஆழம் தெரியாமல் இதில் இறங்கி விட்டோமோ என்ற சந்தேகம் அவனுள் பலப்பட ஆரம்பித்தது. காரில் அவனை அழைத்து வந்தவர்கள் இது போன்ற பிரச்சினைகளை அறிந்து வைத்திருந்து தானோ என்னவோ சிவலிங்கத்திலிருந்து சில அடிகள் தூரத்திலேயே தான் ஆரம்பத்தில் இருந்து கடைசி வரை இருந்தார்கள். அவர்கள் இருவரும் இந்த சிவலிங்கத்தைத் தூக்க சக்தி இல்லாதவர்கள் அல்ல. அப்படி இருந்தும் அவர்கள் அவனுக்கு அந்த அளவு பணம் கொடுத்து இதை எல்லாம் செய்யச் சொல்லி இருப்பது அதில் உள்ள ஆபத்தை எண்ணித் தான் போல இருக்கிறது. அது ஆபத்தா பேராபத்தா...? நல்ல திடகாத்திரமான அந்தக் கொலையாளி முகத்தில் தெரிந்த பீதியும், அவன் செத்துக் கிடந்த விதத்தையும் மறுபடி நினைக்க நினைக்க அவன் இதயத் துடிப்புகள் சம்மட்டி அடிகளாக மாற ஆரம்பித்தன. மாரடைப்பு வந்து தானும் செத்து விடுவோமோ என்று அவன் பயப்பட ஆரம்பித்தான்.

# அத்தியாயம் - 5

பரமேஸ்வரன் தாயிற்கு விளக்க ஆரம்பித்தார்.

தோட்ட வீட்டிற்கு அவர்கள் ஒரு வேலையாள் வைத்திருந்தார்கள். அவன் காலை வந்து இருந்த வேலைகள் செய்து விட்டு மதியம் சென்று விடுவான். எப்போதாவது கூடுதல் வேலை இருந்தால் மட்டுமே அவன் மாலை வரை இருப்பான். அந்த

*வேலைக்காரன் சம்பளம் வாங்க மட்டும் ஒவ்வொரு மாதமும் முதல் தேதி பரமேஸ்வரனிடம் வருவான். அவனிடம் பரமேஸ்வரன் அதிகம் பேசியதோ, விசாரித்ததோ இல்லை. அதற்கான அவசியம் இருந்ததாக அவர் நினைத்ததில்லை. இன்று காலையில் முதலில் பிணத்தைப் பார்த்து விட்டு அழைத்தவன் அவன் தான். குடும்பத்தினரை விட அதிக நேரம் பசுபதியுடன் இருந்தவன் என்பதால் இன்று போலீசார் அவனிடம் இரண்டு மணி நேரமாவது விசாரணை நடத்தி இருப்பார்கள். அவன் அவர்களிடம் என்ன சொன்னான் என்பது தெரியாது. ஆனால் அவன் வேலையை முடித்து விட்டுப் போன பிறகு யாராவது வந்து போனால் யாருக்கும் தெரிய வாய்ப்பில்லை.*

*யாரெல்லாம் வந்து போவார்கள் என்று போலீசார் கேட்டதற்கு யாரும் வந்து போக வாய்ப்பில்லை என்று அவர் பதில் சொல்லி இருந்தாலும் இப்போது அதில் அவருக்கும் சந்தேகம் வர ஆரம்பித்தது. அண்ணனாக எதையும் சொல்லவில்லை. அவராக எதையும் கேட்டதும் இல்லை......*

*"உன் கிட்ட எப்பவாவது பசுபதி அந்த சித்தரைப் பத்தி பேசி இருக்கானா?" ஆனந்தவல்லி கேட்டாள்.*

*"இல்லை. அவரைப்பத்தின்னு இல்லம்மா எதைப்பத்தியும் அதிகம் அவன் பேசினதில்ல. எப்ப போறப்பவும் பேசறது நான் தான். அமைதியா அண்ணா நான் சொல்றதை எல்லாம் கேட்டுகிட்டு மட்டும் இருப்பான். அதிசயமா அவன் அதிகம் பேசினது கடைசி ரெண்டு தடவை தான். உன்னைக் கூட்டிகிட்டு போனப்பவும், அதற்கு அடுத்ததா நான் கடைசியா அவனை சந்திச்சப்பவும்...."*

*ஆனந்தவல்லி ஆர்வத்துடன் கேட்டாள். "கடைசியா நீ சந்திச்சப்ப அவன் என்ன சொன்னான்....."*

*பரமேஸ்வரன் உடனடியாக பதில் சொல்லவில்லை. அவர் பின் பேசிய போது அவர் குரல் கரகரத்தது. "அண்ணா சாவு வரும்னு அப்பவே எதிர்பார்த்திருந்த மாதிரி இருந்துச்சும்மா. அவன் தன்னோட சாவைப் பத்தியும், அந்த சிவலிங்கத்தைப் பத்தியும் பேசினான்...."*

*ஆனந்தவல்லி திகைப்புடன் இளைய மகனைப் பார்த்தாள். "அப்புறம் ஏண்டா என் கிட்ட அன்னைக்கே சொல்லல..."*

*"அப்ப நான் அதை சீரியஸா நினைக்கலம்மா" என்றார் பரமேஸ்வரன்.*

*எழுபது வயதானாலும் சர்க்கரை, இரத்த அழுத்தம், வேறு உடல் பிரச்சினைகள் எதுவும் இல்லாத பசுபதி அந்த கடைசி சந்திப்பில் அபூர்வமாக தன் மரணத்தைப் பற்றி தம்பியிடம் பேசினார். இனி அதிக காலம் வாழ்வது சந்தேகம் என்று சொன்னார்.*

*"எல்லா வியாதியும் இருக்கிற நானே இன்னும் சாவைப் பத்தி யோசிக்கல. நீ ஏன் அதைப் பத்தி பேசறே அண்ணா"*

*"மரணம் வியாதி மூலமாய் தான் வரணும்கிற கட்டாயம் இல்லடா"*

*அன்று அந்த வாக்கியத்திற்குப் பெரிய அர்த்தத்தைப் பார்க்க வேண்டும் என்று பரமேஸ்வரன் நினைக்கவில்லை.*

*பசுபதி பரமேஸ்வரனிடம் கேட்டார். "உன் பேரன் என்ன செய்யறான்?"*

*மகளின் மகனைத் தான் கேட்கிறார் என்று நினைத்த பரமேஸ்வரன் “மகேஷ் எம்பிஏ செய்யறாண்ணா” என்றார். அண்ணன் இது வரை அவருடைய குடும்ப நபர்களை விசாரித்ததில்லை. எனவே அவர் கேட்டது ஆச்சரியமாய் இருந்தது.*

*”நான் அவனைக் கேட்கல. உன் மகனோட மகனைக் கேட்டேன்....”*

*பரமேஸ்வரனுக்குத் திகைப்பு கூடியது. அவரே அந்த பேரனைப் பற்றி நினைத்ததில்லை. நினைக்க விரும்பியதுமில்லை. என்றைக்கு அவர் மகன் தன் சக விஞ்ஞானியான ஒரு தெலுங்குப் பெண்ணை அவருடைய விருப்பத்திற்கு மாறாகத் திருமணம் செய்து கொண்டானோ அன்றே அவரைப் பொருத்தவரை இறந்து விட்டான் என்றே நினைத்தார். மகன் அமெரிக்காவிற்கு சென்று அங்கேயே நிரந்தரமாகத் தங்கி விட்டதும், அவனுக்கு அங்கே ஒரு ஆண் குழந்தை பிறந்ததும் அவர் காதில் விழுந்தது. ஆனால் சம்பந்தமில்லாத நபர்களைப் பற்றிய தகவல்கள் போல அவர் அதை எடுத்துக் கொண்டார். அதனால் மகனுக்கு மகன் பிறந்த விஷயத்தைக் கூட அவர் அண்ணனுக்குத் தெரிவிக்கவில்லை. சென்ற வருடம் அவர் மகன் இறந்து விட்டதாக அவர் மருமகள் போனில் தெரிவித்தாள். அப்போது அவர் சொன்னார். “என் மகன் செத்து இருபத்தி ஆறு வருஷம் ஆச்சு. நீங்க யாரைச் சொல்றீங்கன்னு எனக்குத் தெரியல”*

*அந்த அளவு மனதால் அறுத்து விட்ட உறவை அண்ணன் ஏன் கேட்கிறார் என்று நினைத்தவராய் “தெரியல அண்ணா. இப்ப அவங்களோட எனக்கு எந்த தொடர்புமே இல்லை” என்றார். கூடவே அப்படி ஒரு பேரன் அமெரிக்காவில் இருக்கிறான் என்பதை இவருக்கு யார் சொல்லியிருப்பார்கள் என்ற சந்தேகம் அவருக்கு*

வந்தது. ஆனால் அவர் அதை வாய் விட்டு அண்ணனிடம் கேட்கவில்லை.

”ஒரு வேளை எனக்கு ஏதாவது ஆச்சுன்னா இந்த சிவலிங்கத்தை அவன் கிட்ட சேர்த்துடு. இது இனி அவனுக்கு பாத்தியப்பட்டது... ஒரு வேளை இந்த சிவலிங்கத்துக்கு ஏதாவது ஆனாலும் கூட அவனுக்குத் தெரிவிச்சுடு”

பரமேஸ்வரனுக்கு அண்ணன் அன்று பேசுவதெல்லாம் விசித்திரமாக இருந்தது. ”அண்ணனுக்கு என்ன ஆயிற்று. என்னென்னவோ பேசுகிறானே?” என்று நினைத்தவராய் சொன்னார். “அமெரிக்காவிலேயே பிறந்து வளர்ந்து செட்டிலானதால ஒரு அமெரிக்கனாவே அவன் வாழ்ந்துட்டு இருப்பான் அண்ணா. அவன் இந்த சிவலிங்கத்தை வச்சு என்ன பண்ணப் போறான்”

“இருக்கிற மண் எதுவானாலும் விதை நம் வம்சத்தோடதுடா. எப்படியாவது இதை அவன் கையில சேர்த்துடு...”

மகன் இறந்ததைச் சொன்ன மருமகளிடம் “என் மகன் செத்து இருபத்தி ஆறு வருஷம் ஆச்சு. நீங்க யாரைச் சொல்றீங்கன்னு எனக்குத் தெரியல” என்று சொன்னதையும், மகனின் மகன் பெயர் என்ன என்று கூடத் தெரியாது என்பதையும் பரமேஸ்வரன் அன்று அண்ணனிடம் சொல்லப் போகவில்லை.

”உனக்குப் பிறகு பேசாமல் இதை ஏதாவது கோயிலுக்குக் கொடுத்துடறது நல்லது அண்ணா..” என்றார் பரமேஸ்வரன். சிலைக்கு ஏதாவது ஆனாலும் என்பதற்கு அவர் அன்று பெரிய

*முக்கியத்துவம் தரவில்லை. அந்தக் கல் சிலைக்கு என்ன ஆகப் போகிறது?*

*”இது அவன் கைக்குப் போகணும்கிறது விதி. அவன் கிட்ட போனதுக்கப்புறம் அவன் அதை என்ன வேணும்னாலும் செஞ்சுக்கட்டும்....” பசுபதி சொன்னார்.*

*மறுபடி மறுக்க பரமேஸ்வரன் முற்படவில்லை. முதலில் அண்ணாவிற்கு ஏதாவது ஆனால் தானே இத்தனையும் என்று நினைத்தவராய் அந்தப் பேச்சை அத்துடன் விட்டார்.*

*கிளம்பிய போது பசுபதி எப்போதுமில்லாத வாத்சல்யத்துடன் தம்பியின் முதுகைத் தடவிக்கொடுத்தார். அதுவே அண்ணனுடன் இருந்த கடைசி தருணம்... இப்போதும் அண்ணன் கை தன் முதுகில் இருப்பது போல பரமேஸ்வரன் உணர்ந்தார். அண்ணனுடனான கடைசி சந்திப்பைத் தாயிடம் தெரிவிக்கையில் பரமேஸ்வரன் கண்கள் லேசாகக் கலங்கின.*

*எல்லாம் கேட்ட ஆனந்தவல்லிக்கு நிறைய நேரம் பேச முடியவில்லை. கேட்டதெல்லாம் அவளுக்கு மலைப்பையும் துக்கத்தையும் ஏற்படுத்தி இருந்தன.*

*பரமேஸ்வரன் தாயிடம் கேட்டார். “நான் என்ன செய்யணும்னு நினைக்கறம்மா நீ”*

*“என் குழந்தை சாக யாரெல்லாம் காரணமா இருந்தாங்களோ அவங்கள நீ சும்மா விட்டுடக்கூடாது. அவங்களுக்கு தண்டனை கிடைச்சா தான் இந்த பெத்த வயிறுல பத்தி எரியற நெருப்பு அணையும்டா”*

“நான் போலீஸ் கமிஷனர் கிட்ட பேசிட்டேன்மா. ஒரு திறமையான ஆள் கிட்ட இந்தக் கேஸை ஒப்படைக்கறதா சொல்லியிருக்கார். கண்டிப்பா சீக்கிரமே குற்றவாளிகளைப் பிடிச்சுடலாம்னு சொல்லியிருக்கார். நான் உன் கிட்ட கேட்டது அந்த சிவலிங்கத்தைப் பத்தி...”

ஆனந்தவல்லி சிறிதும் யோசிக்காமல் சொன்னாள். “அந்த சிவலிங்கம் இத்தனை நாள் நம்ம குடும்பத்துக்கு செஞ்சதெல்லாம் போதும். தொலைஞ்சு போனது நல்லதே ஆச்சு. அது இன்னும் திரும்பக் கிடைச்சாலும் அதை வச்சு கொண்டாட வேண்டாம்டா...”

அம்மா சொல்வது பரமேஸ்வரனுக்கு சரி என்றே பட்டது. அந்த முடிவுக்கு வந்தால் அமெரிக்காவில் வசிக்கிற அந்தப் பையனிடம் அது பற்றி பேச வேண்டியதில்லை. புதியதாய் ஒரு தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளத் தேவை இல்லை.... ஆனால்....

பரமேஸ்வரன் ஆழமாய் யோசிப்பதைப் பார்த்த ஆனந்தவல்லி மெல்ல கேட்டாள். “நீ என்ன யோசிக்கிறே?”

“அண்ணன் இத்தனை காலம் என் கிட்ட எதையுமே கேட்டதில்லை அம்மா. கடைசியா கேட்ட இதைக் கூட நான் செய்யலேன்னா நான் என்னையே மன்னிக்க முடியும்னு தோணலைம்மா”

ஆனந்தவல்லிக்குப் புரிந்தது. அந்த சிவலிங்கம் அவ்வளவு சுலபமாய் அவள் குடும்பத்தை விட்டு நிரந்தரமாகப் போகப் போவதில்லை. அவள் கணவர் வாழ்ந்த வரை அடிக்கடி ஒன்று

சொல்வார். “எல்லாம் சிவன் சித்தம்”. இப்போது நடப்பதும் அவன் சித்தமோ?

ஒன்றும் சொல்லாமல் தளர்ச்சியுடன் எழுந்தவள் சுவரைப் பிடித்தபடி தனதறைக்குச் சென்றாள்.

**************

மறு நாள் காலை பரமேஸ்வரன் தன் மகனின் நெருங்கிய நண்பர் தென்னரசுக்குப் போன் செய்து தன் அமெரிக்கப் பேரனுடைய போன் நம்பரை வாங்கினார். தென்னரசு கல்லூரிப் பேராசிரியராக இருக்கிறார். அவர் பரமேஸ்வரன் திடீரென்று கேட்டதற்கு மிகவும் ஆச்சரியப்பட்டது போல இருந்தது. ஒரு கணம் பேச்சிழந்த அவர் அதைக் காட்டிக் கொள்ளாமல் அவன் போன் நம்பரைத் தந்தார்.

பரமேஸ்வரன் தயக்கத்துடன் கேட்டார். “அவனுக்கு....தமிழ் தெரியுமா. நான் தமிழில் பேசினா அவனுக்குப் புரியுமா...”

“அவனுக்கு தமிழ் நல்லாவே தெரியும் சார். அவன் தமிழ்ல பேசறதைக் கேட்டா அமெரிக்காவிலேயே பிறந்து வளர்ந்த பையன்னு யாரும் சொல்ல மாட்டாங்க”

பரமேஸ்வரன் மீண்டும் தயக்கத்துடன் கேட்டார். “அவன்...அவன்.. பெயர் என்ன?”

“ஈஸ்வர் சார்”

ஈஸ்வர்.... அவருடைய மகன் தன் மகனிற்கு அவருடைய பெயரைத் தான் வைத்திருக்கிறான்....மகனின் நினைவுகளும்,

*பழைய கோபமும் மனதில் ஒன்றை ஒன்று மேலோங்க சிறிது நேரம் கனத்த மனத்துடன் உட்கார்ந்திருந்து விட்டு பேரனுக்குப் போன் செய்தார்.*

*"ஹலோ"- பேரனின் குரல் கம்பீரமாய் கேட்டது.*

*"ஹலோ... நான் உன் தாத்தா....பரமேஸ்வரன் இந்தியாவில் இருந்து பேசறேன்..."*

*ஒரு சில வினாடிகள் மௌனம் சாதித்த ஈஸ்வர் சொன்னான். "ஹலோ நீங்க தப்பான ஆளுக்கு போன் பண்ணியிருக்கீங்கன்னு நினைக்கிறேன். எனக்குத் தெரிஞ்சு உங்க மகன் 27 வருஷங்களுக்கு முன்னாடியே இறந்துட்டார்னு நினைக்கிறேன். அவர் இறந்து ஒரு வருஷம் கழிஞ்சு பிறந்தவன் நான். அதனால நான் உங்க பேரனாய் இருக்க வாய்ப்பில்லை"*

*ஈஸ்வர் போனை வைத்து விட்டான். பரமேஸ்வரன் ஓங்கி அறையப்பட்டது போல உணர்ந்தார்.*

# <u>*அத்தியாயம் - 6*</u>

*"யார் போன்ல" கனகதுர்கா மகனிடம் கேட்டாள்.*

*"ராங் நம்பர்ம்மா" என்று அலட்டிக் கொள்ளாமல் ஈஸ்வர் சொன்னான்.*

*மகன் பேசியதை எல்லாம் முழுவதும் கேட்டுக் கொண்டிருந்த கனகதுர்காவிற்கு அவன் யாரிடம் பேசி இருப்பான் என்பதை*

*ஊகிக்க முடிந்தது. கம்ப்யூட்டரில் ஏதோ வேலையாக இருந்த மகனையே சிறிது நேரம் பார்த்தாள்.*

*பின் ராங் நம்பர் என்ற அவன் பதிலைப் பொருட்படுத்தாதவளாக மீண்டும் கேட்டாள். "என்ன விஷயமாம்?"*

*கம்ப்யூட்டரில் இருந்து கண்களை எடுக்காமல் அவன் சொன்னான். "தெரியலை"*

*"என்ன சொல்ல வந்தாங்கன்னாவது நீ கேட்டிருக்கலாம்"*

*"நமக்கு சம்பந்தமில்லாதவங்க பேச்சை நாம எதுக்கும்மா கேட்கணும்?"*

*கனகதுர்கா மகனுக்கு பதில் சொல்ல முடியாமல் சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். அவள் தன் மாமனாரை இது வரையில் சந்தித்ததில்லை. என்றாலும் அவரைப் பற்றி அவள் கணவர் மூலம் நிறையவே அறிந்து வைத்திருந்தாள். கணவரின் மரணத்தை அவரிடம் தெரிவித்த போது அவர் பேசிய பேச்சில் அவரைப் பற்றி முழுமையாகவே புரிந்து விட்டிருந்தது. அவர் எந்த விதத்திலும் அவர்களோடு உறவு கொண்டாட விரும்பவில்லை என்பதை சந்தேகத்திற்கிடமில்லாமல் தெரிவித்திருந்தார். அப்படிப்பட்டவர் இப்போது அவராகவே ஏன் போன் செய்ய வேண்டும்?*

*"ஈஸ்வர்..." மறுபடி தயக்கத்துடன் ஆரம்பித்தாள்.*

*"என்ன?"*

*“உனக்கு ஈஸ்வர்னு உங்கப்பா ஏன் பேர் வச்சார்னு தெரியுமா?”*

*“தெரியும்”*

*“அந்த அளவுக்கு அவர் அவங்கப்பாவை நேசிச்சார்டா....”*

*“அந்த அளவு நேசிச்ச மகனோட சாவுல கூட அந்த ஆள் கோபம் போகலைன்னா அந்த ஆள் என்ன மனுஷன்மா. நீ அந்த ஆள் பேசின பேச்சுல ரெண்டு நாள் அழுதது மறந்துடுச்சா?”*

*”மறக்கலைடா. அவர் அப்ப பேசினது தப்பு தான். ஆனா தப்பு செஞ்ச ஆள்கள் திருந்தவே மாட்டாங்களாடா? அதுக்கு நாம சந்தர்ப்பம் கொடுக்காட்டி அதுவே தப்பாயிடாதாடா?”*

*முதல் முறையாக கம்ப்யூட்டரிலிருந்து பார்வையைத் தாயின் பக்கம் திருப்பிய ஈஸ்வர் புன்னகைத்தான். ”அந்த ஆள் அன்னைக்கு பேசினதுக்கு மன்னிப்பு கேட்கத்தான் போன் செய்யறாருன்னு நினைக்கிறியா. நல்ல கற்பனைம்மா உனக்கு. அதுக்கெல்லாம் அந்த ஆளோட ஈகோ விடாது. வேறெதுக்கோ போன் பண்ணியிருக்கார்”*

*ஈஸ்வர் ஆணித்தரமாகச் சொன்னான். அவளுக்கு அவன் சொன்னதை சந்தேகிக்கத் தோன்றவில்லை. மனித மனத்தை அவன் ஆழமாக அறிந்தவன். இது வரை அவன் கணித்த மனிதர்களின் குணாதிசயங்கள் பொய்த்ததில்லை. அவன் விர்ஜினியா பல்கலைக்கழகத்தில் உளவியல் துறையில் உதவிப் பேராசிரியராக இருக்கிறான். உளவியலில் Parapsychology என்று சொல்லப்படும் அதீத உளவியல் மற்றும் அதீத புலனாற்றல் குறித்து அவன் எழுதிய சில ஆராய்ச்சிக் கட்டுரைகள் உலக உளவியல் அறிஞர்களிடம் பெரும் பாராட்டைப் பெற்றிருந்தன....*

மறுபடி போன் மணி அடித்தது. காலர் ஐடியில் தெரிந்த எண்ணைப் பார்த்து விட்டு ஈஸ்வர் சொன்னான். "அந்த ஆள் தான் மறுபடி கூப்பிடறார்...."

கனகதுர்காவிற்கு அவர் முதல் தடவை போன் செய்து பேசியதே ஆச்சரியமாகத் தான் இருந்தது. அவன் பேசிய பேச்சுக்கு இரண்டாவது முறை அவர் கூப்பிடுவார் என்று அவள் சிறிதும் எதிர்பார்த்திருக்கவில்லை. மிக முக்கியமாய் ஏதோ இருக்க வேண்டும்.... அவள் மகனைப் பார்த்தாள். அவன் போனை எடுப்பதாகத் தெரியவில்லை. மாறாக, தன் கம்ப்யூட்டரில் செய்து கொண்டிருந்த வேலையைத் தொடர ஆரம்பித்தான்.

கனகதுர்கா கைகள் லேசாக நடுங்க போன் ரிசீவரை எடுத்து மகன் காதில் வைத்தாள். அவன் முறைத்த போது "ப்ளீஸ்" என்று உதடுகளை அசைத்தாள். வேறு வழியில்லாமல் ஈஸ்வர் சொன்னான். "ஹலோ"

"நான் பரமேஸ்வரன் பேசறேன். நான் மறுபடி தொந்திரவு செய்யறதுக்கு மன்னிக்கணும். எந்த உறவு முறையும் வச்சு நான் பேச வரலை. இறந்து போன ஒரு நல்ல மனுஷன் கடைசியா உனக்கு சொல்லச் சொன்ன ஒரு விஷயத்தைத் தெரிவிக்கிற ஒரு சாதாரண ஆளா என்னை நீ நினைச்சுகிட்டா போதும்..."

இறந்த தந்தை மூலமாகக் கேட்ட தகவல்களை வைத்தே தாத்தாவை மிகத் துல்லியமாக அறிய முடிந்த ஈஸ்வருக்கு அவர் இவ்வளவு தூரம் இறங்கி வந்து பேசுவது சாதாரண விஷயம் அல்ல என்பது புரிந்தது. தன் ஈகோவையும், சுய கௌரவத்தையும் ஒதுக்கி

*விட்டுத் தாழ்ந்து வருவது அவருக்கு முதல் முறையாகக் கூட இருக்கலாம். அமைதியாக அவன் சொன்னான். "சொல்லுங்க"*

*பசுபதி கடைசியாகச் சந்தித்த போது சொன்னதை அப்படியே ஈஸ்வரிடம் பரமேஸ்வரன் ஒப்பித்து விட்டு சொன்னார். "எங்கண்ணா நேத்து இறந்துட்டார்.. அதனால தான் உன்னை நான் தொந்திரவு செய்ய வேண்டியதாய் போச்சு..."*

*பசுபதி சொன்னதாக பரமேஸ்வரன் சொன்ன விஷயங்கள் ஈஸ்வருக்குத் திகைப்பைத் தான் ஏற்படுத்தின. ஆனால் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் இயல்பாகக் கேட்டான். "உங்கண்ணா எப்படி இறந்தார்?"*

*"அவரைக் கொன்னுட்டாங்க..." சொல்லும் போது பரமேஸ்வரன் குரல் கரகரத்தது.*

*"என்ன?..." ஈஸ்வருக்கு அதிர்ச்சியாக இருந்தது.*

*"ஆமா. அவரைக் கொன்னுட்டு அந்த சிவலிங்கத்தை எடுத்துட்டு போயிட்டாங்க"*

*ஈஸ்வருக்கு அதிர்ச்சி அதிகரித்தது. பெரிய தாத்தாவைப் பற்றியும், அந்த சிவலிங்கத்தையும் பற்றியும் அவன் தந்தை நிறையவே அவனிடம் சொல்லி இருக்கிறார். அந்த சிவலிங்கத்தைப் பற்றி சின்ன வயதில் கேள்விப்பட்ட சில தகவல்களை அப்போது அவனால் நம்பக்கூட முடிந்ததில்லை. ஆனால் விர்ஜினியா பல்கலைக்கழகத்தில் அவன் நடத்தின சில ஆராய்ச்சிகளிற்குப் பிறகு கேள்விப்பட்டதில் சிலதெல்லாம் உண்மையாக இருக்கவும் வாய்ப்பு உண்டு என்று உறுதியானது. ஒரு முறையாவது அந்த*

*சிவலிங்கத்தைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆவல் அவன் மனதில் பலமுறை எழுந்ததுண்டு. கேள்விப்பட்டதும், ஆராய்ச்சிகள் சொன்னதும் உண்மை தானா என்று நேரில் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நினைத்ததுண்டு.....*

*திகைப்புடன் ஈஸ்வர் பரமேஸ்வரனிடம் சொன்னான். "எனக்குத் தெரிஞ்ச வரைக்கும் அந்த சிவலிங்கத்தை அப்படி சாதாரணப்பட்ட யாரும் தூக்கிட்டு போக முடியாதே. அதுவும் அவரைக் கொலை செய்தவன் அதைக் கண்டிப்பாக தூக்கிட்டு போக முடியாதே."*

*பரமேஸ்வரனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவர் மனதில் கற்பனை செய்திருந்த அந்த அமெரிக்கப் பேரன் அந்த சிவலிங்கத்தைப் பற்றி நன்றாகத் தெரிந்தவன் போல் கேட்பான் என்று அவர் சிறிதும் எதிர்பார்த்திருக்கவில்லை. திகைப்பு நீங்காதவராகச் சொன்னார். "அவரைக் கொலை செய்ததாக போலீசார் நினைக்கிற ஆள் வெளியே செத்துக் கிடந்தான். அவன் எப்படி செத்தான்னு போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் வந்தால் தான் தெரியும்...."*

*ஈஸ்வர் தனக்குள் பேசிக் கொள்பவன் போல சொன்னான். "அப்படின்னா இந்தக் காரியத்தை செஞ்சவங்க அந்த சிவலிங்கத்தைப் பத்தி முழுசா தெரிஞ்சவங்களா தான் இருக்கணும். அதனால தான் அவரைக் கொலை செய்ய ஒரு ஆளையும், அந்த சிவலிங்கத்தை எடுத்துகிட்டு போக வேறு ஒரு ஆளையும் ஏற்பாடு செய்திருக்காங்க...."*

*பரமேஸ்வரனுக்கு பைத்தியமே பிடித்து விடும் போல இருந்தது. அவரை விட அதிகமாக அவன் அந்த சிவலிங்கத்தைப் பற்றித் தெரிந்து வைத்திருந்ததாகத் தோன்றியது. அவர் சொன்னார்.*

“எனக்கு ஒண்ணுமே புரியலை. போலீஸ்காரங்க அந்த சிவலிங்கத்துக்குள்ளே ஏதாவது விலைமதிக்க முடியாத பொருளை நான் ஒளிச்சு வச்சிருக்கேனான்னு கூட சந்தேகப்படற மாதிரி இருக்கு. அதைத் தெரிஞ்சுக்க பலவிதமா என்னைக் கேள்வி கேட்டாங்க”

“அதுல ஒளிஞ்சிருக்கறது விலைமதிக்க முடியாத பொருளில்லை, விலை மதிக்க முடியாத சக்தின்னு சிலர் நம்பறாங்க...”

பரமேஸ்வரனுக்கு லேசாக எரிச்சல் வந்தது. “நான் அந்த சிவலிங்கம் எங்க கிட்ட வந்த நாள்ல இருந்து பார்த்துட்டு வந்திருக்கேன். அதுல நான் ஒரு சக்தியையும் இதுவரைக்கும் பார்த்ததில்லை. நீ சொல்றத பார்த்தா அந்த வதந்திகளை நம்பிட்டு தான் யாரோ அந்த சிவலிங்கத்தைக் கடத்திட்டு போயிருக்காங்கன்னு தோணுது....”

ஈஸ்வர் அவருக்கு விளக்கப் போகவில்லை. அவர் சொல்வதும் பொய்யில்லை. அவர் எந்த சக்தியையும் உணர்ந்ததில்லை தான். ஒரு மரக்கட்டை எத்தனை காலமானாலும் மின்சாரத்தைப் புரிந்து கொள்ள முடியாது. மின்சாரம் எதிலெல்லாம் ஊடுருவ முடியுமோ அதனால் மட்டுமே அதன் சக்தியைப் புரிந்து கொள்ள முடியும்....

அவன் ஏதாவது சொல்வான் என்று அவர் எதிர்பார்த்தார். ஆனால் அவன் பேச்சை முடிக்கும் விதமாக “வேறொண்ணும் இல்லையே?” என்று கேட்டான்.

அவருக்கு வேறென்ன சொல்வதென்று தெரியவில்லை. ”இல்லை...” என்றார்.

அவன் போனை வைத்து விட்டான்.

***************

அந்த முதியவர் கண்களை மூடிக் கொண்டு வஜ்ராசனத்தில் அமர்ந்திருந்தார். அவருக்கு எண்பதிற்கும் மேற்பட்ட வயதிருக்கும். அவர் வயது நரைத்த தலைமுடியிலும், தாடியிலும் தெரிந்ததே ஒழிய ஒடிசலான உறுதியான உடலில் தெரியவில்லை. அவர் கண்களைத் திறக்கும் வரை அந்த மனிதன் மிகப் பொறுமையாகக் காத்திருந்தான். இந்த அரை மணி நேரத்தில் அவன் எட்டு தடவை உட்கார்ந்திருந்த நிலையை மாற்றிக் கொண்டு விட்டான். அவன் அங்கு வந்து அரை மணி நேரம் ஆகி விட்டிருந்தது. ஆனால் இந்த அரை மணி நேரத்தில் அவர் உட்கார்ந்த நிலையிலிருந்து கொஞ்சம் கூட அசையவில்லை என்பதைக் கவனித்த அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவரை ஒவ்வொரு முறை அவன் பார்க்கும் போதும் ஏதாவது ஒரு விஷயத்திற்காகவாவது அவனால் ஆச்சரியப்படாமல் இருக்க முடிந்ததில்லை....

அவர் கண்களை மெல்லத் திறந்தார். அவனைப் பார்த்தவுடன் கேட்டார். “என்ன?”

அந்த மனிதன் தயங்கித் தயங்கி சொன்னான். “அந்தப் பையன் ஓடிட்டான்... சிவலிங்கத்தை நாம சொன்ன இடத்துல வச்ச பிறகும் அவன் ஜுரமும் குறையலை, மந்திரம் ஜபிக்கறதை அவன் விடவும் இல்லை... ரெஸ்ட் எடுத்தா சரியாயிடும்னு நினைச்சு அவனைத் தனியா ரூம்ல விட்டோம். இன்னைக்கு காலைல பார்க்கறப்ப அவன் இல்லை....அவன் போகக் கூடிய இடம் எல்லாம் தேடிப் பார்த்துட்டோம். ஆனா அவனைக் கண்டுபிடிக்க முடியல”

கண்களை மூடி சிறிது நேரம் இருந்த அவர் அமைதியாகச் சொன்னார். "அவனைப் பத்தி கவலைப்பட வேண்டியதில்லை. விட்டுடு"

அவன் தலையசைத்து விட்டு அவனுக்கு இப்போதுள்ள பெரிய பிரச்சினையைச் சொன்னான். "…. அந்தக் கொலைகாரன் மர்மமா செத்ததாலயும், இவன் இப்படி ஆகி ஓடிட்டதாலயும் மத்தவங்க யாரும் அந்த சிவலிங்கம் பக்கம் போகவே பயப்படறாங்க. நித்ய பூஜை செய்யக்கூட முன்வர மாட்டேங்குறாங்க…"

அந்த முதியவர் யோசிக்க ஆரம்பித்தார். அந்த சிவலிங்கத்தைப் பற்றி கேள்விப்பட்ட சில விஷயங்கள் கற்பனை இல்லை என்பதை நடக்கின்றது எல்லாம் உறுதிப்படுத்துவது போலத் தோன்றியது…. அவர் முகத்தில் ஒரு மர்மப் புன்னகை வந்து போனது.

# அத்தியாயம் - 7

அந்த மனிதனுக்கு அந்த முதியவரின் மர்மப் புன்னகைக்குப் பொருள் விளங்கவில்லை. ஏதோ ஒரு தனிப்பட்ட நகைச்சுவையான விஷயத்தை அவர் நினைத்துக் கொண்டது போலத் தோன்றியது. மிகவும் இக்கட்டான நிலைமையைச் சொல்லும் போது இந்த விதமான எதிர்கொள்ளல் இயல்பான ஒன்றாய் அவனுக்குத் தோன்றவில்லை. யோசித்துப் பார்த்தால் அவரிடம் எதுவுமே இயல்பாக இல்லை என்பதையும் அவனால் நினைக்காமல் இருக்க முடியவில்லை. பல விஷயங்களில் அவர் முரண்பாடுகளின் மொத்த உருவமாக இருந்தார்.

வஜ்ராசனமும், ஆழ்நிலை தியானமும் சாத்தியப்பட்ட அந்த மனிதருக்கு தெய்வ நம்பிக்கை இருந்தது போலத் தோன்றவில்லை.

அவர் அறையில் ஆன்மிகச் சின்னங்களோ, அடையாளங்களோ இல்லை. எண்பதிற்கு மேற்பட்ட வயது இருந்தாலும் அவர் நடை, உடை, பாவனை, இருப்பு எதிலுமே முதுமையின் தாக்கம் இல்லை. அதிகார வர்க்கம், கோடீஸ்வரர்கள், மேதைகள் எல்லாம் அவரைத் தேடி வருவதும் ஆலோசனைகள் கேட்பதும் தினசரி நடப்பவை. அதே போல அடித்தள மக்கள், பரம ஏழைகள், மந்த புத்திக்காரர்கள் போன்ற எதிர்மாறானவர்களும் அவரைத் தேடி வருவதுண்டு. இந்த இரண்டு கூட்டங்களுக்கும் ஒரே வகையான வரவேற்பு அவரிடம் இருக்கும். ஒருசில நேரங்களில் மேல்மட்ட ஆட்களைக் காக்க வைத்து விட்டு அடித்தள மக்களை உடனடியாக அழைத்துப் பேசுவதும் உண்டு. தொடர்ந்து சில நாட்கள் ஆட்களை சந்தித்துப் பேசுபவர் திடீர் என்று சில நாட்கள் முழுவதும் தனிமையில் கழிப்பதுண்டு. எல்லோராலும் பொதுவாக “குருஜி” என்றழைக்கப்பட்ட அந்த முதியவர் எந்தக் கணிப்பிற்கும் அடங்காத புதிராகவே இருந்தார்....

திடீரென்று குருஜி சொன்னார். “நான் நாளைக்கே நித்ய பூஜை செய்ய ஒரு ஆளை அனுப்பி வைக்கிறேன். கவலைப்படாதே”

அந்த மனிதன் சிறிது நிம்மதி அடைந்தவனாகத் தலையசைத்தான். ”அப்புறம்... இன்னொரு விஷயம்..”

”என்ன”

“இந்தக் கேஸை திறமைசாலியான ஒரு போலீஸ் அதிகாரி கிட்ட ஒப்படைச்சிருக்காங்க. பணம், பதவி, அதிகாரம், பயம்ங்கிற இந்த நாலுக்கும் வளைஞ்சு கொடுக்காத ஆளுன்னு பெயரெடுத்தவராம்....” சொல்லும் போது அவன் குரலில் கவலை தெரிந்தது.

*”அப்படிப்பட்ட ஆளுங்க சிலர் எப்பவுமே எங்கயும் இருக்கத்தான் செய்வாங்க. அது இயற்கை தான்....” அவர் சர்வ சாதாரணமாகச் சொன்னார்.*

*”பார்க்க கதாகாலட்சேபம் பண்றவர் மாதிரி தெரிஞ்சாலும் அழுத்தமான ஆளு, ரொம்பவும் புத்திசாலின்னு சொல்றாங்க. அவர் எடுத்துகிட்ட கேஸ் எதையும் கண்டுபிடிக்காமல் விட்டதில்லைன்னு போலீஸ் டிபார்ட்மெண்டுல பேசிக்கிறாங்க....”*

*“அந்த போலீஸ் அதிகாரி பெயர் என்ன?”*

*“பார்த்தசாரதியாம்....”*

*குருஜி புன்னகையுடன் சொன்னார். “அந்த ஆள் அடிக்கடி என்கிட்ட வர்றவர் தான்”*

****************

*முனுசாமிக்கு போலீஸின் கேள்விகளுக்கு பதில் சொல்லியே சலித்து விட்டது. பசுபதியின் தோட்ட வீட்டில் ஒரு அதிகாரி கேள்விகள் கேட்டார். அவன் பதில் சொன்னான். அடுத்ததாகப் போலீஸ் ஸ்டேஷனிற்கு அழைத்து இன்னொரு அதிகாரி அவனிடம் கேள்விகள் கேட்டார். அதற்கும் அவன் பதில் சொன்னான். இப்போது இன்னொரு முறை அவனிடம் கேள்வி கேட்க அந்த தோட்ட வீட்டிற்கு புதிய அதிகாரி வரப் போகிறார் என்று தெரிவிக்கப்பட்ட போது அவனுக்கு வாழ்க்கையே வெறுத்து விட்டது. ஒரே விதமான கேள்விகளுக்கு எத்தனை தடவை தான் பதில் சொல்வது?. அதிலும் அவர்கள் “நீயே ஏன் கொன்றிருக்கக் கூடாது?” என்ற வகையில் கேட்டது அவனை மனதை மிகவும் நோகடித்து விட்டது. இனி இந்த ஆளும் அதையே தான் கேட்பாரோ?*

அவனை காலை பத்து மணிக்குத் தோட்ட வீட்டுக்கு வரச் சொல்லி இருந்தார்கள். அவன் ஒன்பதே முக்காலுக்குப் போன போதே தோட்டத்தில் ஒரு நாற்காலியில் அவன் இது வரை பார்த்திராத அந்த புதிய போலீஸ் அதிகாரி அமர்ந்து தோட்டத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். முதலில் விசாரித்த இரண்டு போலீஸ் அதிகாரிகளிடம் தெரிந்த ஒருவித முரட்டுத்தனம் இவரிடம் அவனுக்குத் தெரியவில்லை. நீண்ட காலம் பழகியவர் போல அவனைப் பார்த்துப் புன்னகைத்த அவர் அவனை எதிரில் உள்ள நாற்காலியில் உட்காரச் சொன்னார். "வா முனுசாமி, உட்கார்..."

"பரவாயில்லைங்க ஐயா. நான் நிக்கறேன்...."

"உனக்கு மூலம் எதுவும் இல்லையே?"

"ஐயோ அதெல்லாம் இல்லைங்க..."

"அப்ப உட்கார்"

பார்க்க கனிவாய் தெரிந்தாலும் இந்த ஆள் வில்லங்கமான ஆளாய் இருப்பார் போலத் தெரிகிறதே என்று நினைத்தவனாக அவசரமாக நாற்காலியின் நுனியில் முனுசாமி உட்கார்ந்தான்.

பார்த்தசாரதி முனுசாமியை ஆழமாகப் பார்த்தார். இந்தக் கொலை வழக்கு ஒரு சவாலாகவே அவருக்கு அமைந்திருந்தது. கொன்றவனும் செத்து விட்டது, தடயங்கள் எதுவும் இல்லாதது, கொலை செய்யப்பட்ட பசுபதிக்கு வெளி உலகத் தொடர்புகள் இல்லாதது, சிவலிங்கம் பற்றி அதிகத் தகவல்கள் கிடைக்காதது எல்லாமாகச் சேர்ந்து ஆரம்பத்திலேயே விசாரணைக்கு அனுகூலமாக இல்லை. எடுத்தவுடன் பசுபதியின் தம்பி பரமேஸ்வரன் மேல் தான்

சந்தேகம் போலீசாருக்கு எழுந்தது. மொத்த சொத்தையும் கிட்டத்தட்ட நாற்பதாண்டுகளுக்கு முன்பே தம்பிக்கு பசுபதி எழுதிக் கொடுத்து விட்டார் என்ற தகவல் சந்தேகத்தை ஆதாரம் இல்லாததாக்கி விட்டது.

அடுத்ததாக பசுபதியிடம் அதிகமாய் வந்து போய்க் கொண்டிருந்த வேலைக்காரன் முனுசாமி மேல் போலீசுக்கு சந்தேகம் வந்தது. ஆனால் விசாரணையில் அவன் மேல் சந்தேகப்படவும் எந்த முகாந்திரமும் இருப்பதாகப் போலீசாருக்குக் கண்டுபிடிக்க முடியவில்லை. அவன் அந்தக் கிழவரை மிகவும் நேசித்ததாகத் தெரிகிறது என்று முந்தைய இரண்டு போலீஸ் அதிகாரிகள் பதிவு செய்து வைத்திருந்தனர். அவனிடமிருந்தும் அவர்களுக்கு கொலையாளியைக் கண்டுபிடிக்க எந்தத் துப்பும் கிடைக்கவில்லை....

பார்த்தசாரதியின் பார்வையால் முனுசாமி தர்மசங்கடத்துடன் நெளிந்தான்.

பார்த்தசாரதி பார்வையின் தீட்சண்யத்தைக் குறைக்காமல் கேட்டார். “முனுசாமி நீ இங்கே எத்தனை வருஷமாய் வேலை பார்க்கிறாய்?”

“வர்ற ஆவணிக்கு இருபத்தியாறு வருஷம் முடியுதுங்கய்யா”

”பசுபதி இங்கே வந்து கிட்டத்தட்ட அறுபது வருஷங்கள் ஆகுதுன்னு கேள்விப்பட்டேன். உனக்கு முன்னால் இங்கே யார் வேலைக்கு இருந்தாங்க”

*”என் தாய் மாமன் இருந்தாருங்கய்யா. அவருக்கு வயசாயிட்டதால அப்புறம் என்னை இங்கே வேலைக்கு சேர்த்து விட்டார்...”*

*“அவர் இப்ப இருக்காரா?”*

*“இல்லை ஐயா அவர் செத்து இருபத்திஅஞ்சு வருஷம் ஆயிடுச்சுங்க”*

*”பசுபதி ஆள் எப்படி?”*

*“அவரு மனுசரே இல்லைங்க மகானுங்க. இத்தனை வருஷத்துல அவர் ஒரு தடவை கூட கடுமையா பேசினது இல்லைங்க... ஏன் கோபமா என்னைப் பார்த்தது கூட இல்லைங்க... அன்பைத் தவிர அவருக்கு வேறெதுவும் தெரியாதுங்க..”*

*ஆத்மார்த்தமாக வந்தது பதில்.*

*“முனுசாமி அந்த சிவலிங்கத்தைப் பத்தி சொல்லேன்”*

*“அது சாதாரண சிவலிங்கம் தான் ஐயா. நாம கோயில்கள்ல எல்லாம் பார்ப்போமே அந்த மாதிரி தான் இருக்கும்....”*

*பார்த்தசாரதி ஒரு நண்பனிடம் சந்தேகம் கேட்கிற தொனியில் தன் சந்தேகத்தைக் கேட்டார். “ஏன் முனுசாமி, ஒரு சாதாரண கல் லிங்கத்திற்காக யாராவது ஒரு ஆளைக் கொல்வாங்களா?”*

*முனுசாமி குழப்பத்துடன் சொன்னான். “அது தான் எனக்கும் புரிய மாட்டேங்குது ஐயா”*

*”அந்த சிவலிங்கத்துக்குள்ளே ஏதாவது தங்கம், வைரம் மாதிரி ஏதாவது வச்சிருந்திருக்கலாமோ?”*

*முனுசாமி உறுதியாகச் சொன்னான். “அப்படி வச்சிருந்தா பசுபதி ஐயா அதுக்கு பூஜை செய்துகிட்டிருக்க மாட்டாருங்க ஐயா. காசு, பணம் எல்லாம் அவருக்கு தூசிங்க ஐயா.”*

*“நீ அந்த சிவலிங்கத்தைத் தொட்டுப் பார்த்திருக்கிறாயா?”*

*“இல்லைங்கய்யா”*

*“அந்த பூஜை அறைக்குள்ளே போய் அதைப் பக்கத்தில் பார்த்திருக்கிறாயா?”*

*“இல்லைங்கய்யா”*

*“ஏன், பசுபதி ஜாதி எல்லாம் பார்ப்பாரோ”*

*“சேச்சே அப்படிப் பார்க்கற ஆள் அவரில்லைங்க. எத்தனையோ தடவை என் கூட சரிசமமா இருந்து தோட்ட வேலை செஞ்சிருக்காரு. என் வீட்டுல இருந்து கொண்டு வந்து எப்பவாவது பலகாரம் கொடுத்தா மறுக்காமல் வாங்கி சாப்பிடுவாரு. என்னை வீட்டு ஆளா தான் நடத்தி இருக்காருங்க ஐயா. மாத்தி சொன்னா என் நாக்கு அழுகிடும்”*

*”பின்னே எதனால நீ சிவலிங்கத்துக்குப் பக்கத்துல போனதோ, தொட்டுப்பார்த்ததோ இல்லை...”*

*“ஏன் ஐயா, கோயிலுக்குப் போறோம். அங்க சாமிய தொட்டா பார்க்கறோம். கொஞ்ச தூரத்துல இருந்தே தானே கும்பிடறோம். அப்படித்தான்னு வச்சுக்கோங்களேன்...” ஒரு வேகத்தில் சொல்லி விட்டாலும் அந்த போலீஸ் ஐயா கோபித்துக் கொண்டு விடுவாரோ என்று அவனுக்கு சிறிது பயமும் வந்தது.*

*ஆனால் அவர் கோபித்துக் கொள்வதற்குப் பதிலாக லேசாக புன்னகை செய்தார்.*

*“அவரைப் பார்க்க யாரெல்லாம் வருவாங்க?”*

*“அவங்க வீட்டுல இருந்து அவரோட தம்பி அடிக்கடி வருவாரு. மத்தவங்க எல்லாம் எப்பவாவது அபூர்வமா வருவாங்க”*

*“அவர் வெளியே போகிறதுண்டா”*

*“போனதில்லைங்கய்யா”*

*“ஏன்?”*

*“அவரு ஒரு சாமியார் மாதிரி தான் வாழ்ந்தாருங்கய்யா. வெளியே போறதுலயும், மத்தவங்க கூட பழகறதுலயும் அவருக்குக் கொஞ்சமும் விருப்பம் இருக்கலை. அவருக்கு ஏதாவது வேணும்னா நான் தான் கொண்டு வந்து தருவேன்...அவராய் எங்கேயும் போக மாட்டார்”*

*”வேற யாராவது நீ போன பிறகு அவரைப் பார்க்க வந்தால் உனக்குத் தெரியுமா முனுசாமி”*

*முனுசாமிக்கு அந்தக் கேள்வி ஏதோ ஒருவித அசௌகரியத்தை ஏற்படுத்தியதாகத் தோன்றியது. சற்று யோசனை செய்தவனாகச் சொன்னான். “அப்படி அவரைப் பார்க்க வரக்கூடிய ஆள் வேற யாரும் இல்லைங்களே. அவரும் வெளியாள்கள் கிட்ட பேசக் கூடியவரில்லைங்கய்யா. நான் வெளியே இரும்புக் கதவைப் பூட்டிகிட்டு போனா மறு நாள் காலைல நான் வர்ற வரைக்கும் பூட்டித் தான் இருக்கும்...”*

*”அந்த வெளி இரும்புக்கதவோட பூட்டுக்கு ஒரு சாவி தான் இருக்கா?”*

*“இல்லைங்கய்யா. மூணு சாவி இருக்கு. ஒண்ணு பரமேஸ்வரன் ஐயா கிட்டயும், ஒண்ணு என் கிட்டயும், ஒண்ணு பசுபதி ஐயா கிட்டயும் இருக்கு. பசுபதி ஐயா அதை சுவரில் ஒரு ஆணியில தொங்க வச்சிருப்பார். ஆனா அவரு அதை இது வரைக்கும் உபயோகப்படுத்துன மாதிரி தெரியலை... ஒவ்வொரு நாளும் நான் வந்து தான் திறந்திருக்கேன். ஒரு நாள் கூட நான் வர்றப்ப கதவு திறந்திருந்து பார்த்ததில்லை....”*

*“அவர் செத்த நாள் தவிர...” என்று பார்த்தசாரதி நினைவுபடுத்தினார்.*

*”ஆமா...” என்று அவன் குரல் வருத்தத்துடன் பலவீனமாய் வந்தது.*

*“நீ அந்த நாள் சரியா கதவைப் பூட்டினதா நினைவிருக்கா?”*

*“இருக்குங்கய்யா”*

*அவனையே ஒரு நிமிடம் உற்று பார்த்துக் கொண்டிருந்து விட்டு திடீரென்று பார்த்தசாரதி கேட்டார். ”இந்த தோட்ட வீட்டுக்குள்ள ராத்திரியில ஆவிகள் நடமாட்டமும், அமானுஷ்யமா சிலதெல்லாம் நடக்கறதும் உண்டுன்னு ஒருசில பேர் சொல்றாங்களே அது உண்மையா முனுசாமி”*

*ஒரு கணம் முனுசாமிக்கு மூச்சு நின்றது போலிருந்தது. அவன் முகம் வெளுத்துப் போனது.*

# ***<u>அத்தியாயம் - 8</u>***

*பார்த்தசாரதி அவரது கேள்வி அவனிடம் ஏற்படுத்திய மாற்றத்தைக் கூர்மையாகக் கவனித்தார். அப்படியானால் அவர் கேள்விப்பட்டும் நம்பாத அந்த ஆவி சமாச்சாரம் வெறும் வதந்தி அல்ல. ஏதோ ஒரு புரியாத விஷயம் அந்த வதந்தியில் இருக்கிறது….*

*அந்தத் தோட்ட வீட்டின் இரு புறங்களிலும் உள்ள காலி நிலங்கள் ஒரே நபருக்குச் சொந்தமானவை. நான்கு ஏக்கரும், ஆறரை ஏக்கருமான அந்த இரு நிலங்களும் வழக்கில் சிக்கிக் கொண்டுள்ளதால் பல ஆண்டுகளாக வேலி மட்டும் போடப்பட்டுக் கிடக்கின்றன. அந்தத் தெரு வலப்பக்கத்தில் உள்ள ஆறரை ஏக்கர் நிலத்தோடு முடிந்து விடுகிறது. இடப்பக்கத்திலும் ஒரு பர்லாங் தூரத்திற்குப் பின் தான் கடைகள், வீடுகள்*

ஆரம்பமாகின்றன. அதனால் அந்தத் தோட்ட வீட்டைப் பற்றி அந்தப் பகுதி மக்களுக்கு அதிகமாக தெரிந்திருக்கவில்லை.

தோட்ட வீட்டின் எதிரில் உள்ள பெரிய தென்னந்தோப்பிலும் வேலையாட்களும், நகரத்தின் மையத்தில் வசிக்கும் தென்னந்தோப்பின் உரிமையாளரும் பகலில் தான் வந்து போகிறார்கள். அவர்களுக்கு அந்த வீட்டிற்கு வந்து போகும் முனுசாமியைத் தெரிந்திருந்தது. ஆனால் யாருக்கும் வீட்டில் குடியிருக்கும் பசுபதியைத் தெரிந்திருக்கவில்லை. பார்த்தசாரதி அந்தத் தென்னந்தோப்புக்கு வேலைக்கு வரும் ஆட்கள் பலரை விசாரித்தும் ஒரு உபயோகமான தகவலும் அவருக்குக் கிடைக்கவில்லை.

கேள்விகள் கேட்டு கிட்டத்தட்ட சலித்துப் போன சமயத்தில் தான் பல வருடங்களாக அங்கே வேலை செய்யும் ஒருவன் அந்தத் தோட்ட வீட்டில் முன்பொரு சமயம் ஆவிகள் நடமாட்டம் இருப்பதாக சிலர் பேசிக் கொள்வதாகச் சொன்னான். யார் அப்படிப் பேசிக் கொண்டார்கள் என்று கேட்ட போது ஐந்தாறு வருடங்களுக்கு முன் பின்புறம் இருக்கும் சேரிமக்களில் சிலர் பேசிக் கொண்டது காதில் விழுந்ததாகவும், குறிப்பாக அப்படிப் பேசியவர்கள் யார் என்று நினைவில்லை என்றும், அதற்குப் பின் அந்தப் பேச்சு அப்படியே அமுங்கி விட்டதாகவும் அவன் சொன்னான்.

ஆள் நடமாட்டம் இல்லாத இடங்களில் பேய் நடமாட்டம் இருப்பதாகப் பலரும் நம்புவது இயற்கை என்றே அதை பார்த்தசாரதி எடுத்துக் கொண்டார். முனுசாமியிடம் இந்தக் கேள்வியைக் கேட்கும் வரை அவர் அந்த வதந்தியில் சாரம் இருப்பதாக நினைக்கவில்லை. ஆனால் இப்போதோ....

அவர் தன் பதிலுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார் என்று நினைவுக்கு வர முனுசாமிக்கு சிறிது நேரமாகியது. ஏதோ ஒரு பழைய நினைவில் ஒரு வித திகிலுடன் தங்கி விட்டவன் பின் சுதாரித்துக் கொண்டவனாகச் சொன்னான். “அதெல்லாம் சும்மா வதந்திங்கய்யா”

”நெருப்பில்லாம புகையுமா முனுசாமி?”

“இந்த இடம் ஒரு கோயில் மாதிரிங்கய்யா. இந்த இடத்துல ஆவியும் பேயும் இருக்க முடியாதுங்கய்யா.” சிறிதும் சந்தேகமில்லாமல் உறுதியாக முனுசாமி சொன்னான். சற்று முன் தெரிந்த பயத்திற்கு எதிர்மாறாக அவனுடைய இந்தப் பேச்சு இருந்தது.

“அப்புறம் ஏன் இந்த மாதிரி பேசிக்கிறாங்க முனுசாமி?”

“அதெல்லாம் ஆறு வருஷத்துக்கு முன்னாடி பேசிகிட்டது ஐயா. இப்ப அந்த மாதிரி யாரும் பேசிக்கிறது இல்லை”

”ஆனா இதைப் பத்திக் கேட்டப்ப நீயே கொஞ்சம் பயந்த மாதிரி தெரிஞ்சுதே முனுசாமி”

முனுசாமி தர்மசங்கடத்துடன் நெளிந்தான். அவர் அவனையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார். அவன் பின் மெல்ல சொல்ல ஆரம்பித்தான். “சாமி கும்பிடறதத் தவிர வேற எதுவும் தெரியாத பசுபதி ஐயா இந்த இடத்தக் கோயில் மாதிரி வச்சிருந்தாருங்கய்யா. மனசுல எத்தனை பிரச்சனை இருந்தாலும் இந்த இடத்துல கால் வைக்கறப்ப அதெல்லாம் குறைஞ்சுடறத நானே பார்த்திருக்கேன் ஐயா. அந்த அளவு இங்கே ஒரு சக்தி இருக்குங்கய்யா. அதனால சுத்த

*பத்தமா இல்லாம இங்கே நான் வர்றதில்லை.... ஏழு வருஷத்துக்கு முன்னால ஒரு நாள் இங்கே சாயங்காலம் வரைக்கும் வேலை இருந்துச்சு. முடிச்சுட்டு போறப்ப என்னோட செல் போனை விட்டுட்டு போயிட்டேன். இங்க இருந்து போறப்ப உடம்பெல்லாம் வலிங்கய்யா. அதனால ஒரு குவார்ட்டர் அடிச்சுட்டு அப்படியே வீட்டுக்குப் போயிட்டேன். வீட்டுக்குப் போன பிறகு தான் செல் போனை இங்கயே வச்சுட்டு போனது ஞாபகம் வந்துச்சு. அதை எடுத்துட்டு போக இங்கே வந்தப்ப மணி எட்டிருக்குங்கய்யா. நான் தண்ணியடிச்சுட்டு சுத்தமில்லாம வந்ததால என்னையும் பயமுறுத்தற மாதிரி ஒரு காட்சி தெரிஞ்சுச்சு. பயந்து போய் செல்லை எடுத்துட்டு ஓடினவன் வீட்டுக்குப் போயி தான் நின்னேன். ரெண்டு நாளா நல்லா காய்ச்சல்ல படுத்துகிட்டேன். முதல்ல நானும் பார்த்தது பேயின்னு தான் நினைச்சேன். ஆனா நல்லா யோசிச்சப்ப புரிஞ்சுது. சுத்த பத்தமா போறப்ப அங்க நிம்மதி கிடைக்கற மாதிரி அப்படி இல்லாம போறப்ப தண்டனையா பீதியும் கிளம்பும்னு பாடம் கத்துக்கிட்டேன்யா. அப்பறம் என் சம்சாரம் போய் பசுபதி ஐயாவ பார்த்து நான் எதையோ பார்த்து பயந்திருக்கேன்னும், காய்ச்சலா படுத்திருக்கேன்னும் சொன்னா. அவர் கொஞ்சம் விபூதி குடுத்தனுப்பிச்சார். அதை பூசிகிட்டவுடனே காய்ச்சல் குறைய ஆரம்பிச்சுதுங்கய்யா.....”*

*பார்த்தசாரதி கேட்டார். “அங்கே பயமுறுத்தற மாதிரி என்ன பார்த்தாய் முனுசாமி?”*

*”பார்த்ததும், பார்க்க வெச்சதும் போதைங்கய்யா. அதைப் போய் நீங்க ஒரு விஷயமா கேட்கறீங்களே”*

*“பரவாயில்ல சொல்லு”*

முனுசாமி எச்சிலை முழுங்கினான். அவர் விடுவதாக இல்லை என்பது அவர் பார்வையிலேயே தெரிந்தது. வேறு வழியில்லாமல் சொன்னான். “நான் செல் எடுக்க வந்தப்ப வீட்டுக்குள்ளே ஒரு வித்தியாசமான லைட்டு தெரிஞ்சுதுங்கய்யா. அது விளக்கு வெளிச்சமுமில்ல, டியூப் லைட் வெளிச்சமும் இல்ல. மப்போட பசுபதி ஐயாவப் பார்க்கற எண்ணமே எனக்கு இருக்கலைங்கய்யா. செல் போனை எடுத்துட்டு அப்படியே போயிடணும்னு தான் நான் நினைச்சுட்டு வந்தேன். ஆனா அந்த வித்தியாசமான வெளிச்சத்த வீட்டுல பார்த்தவுடனே அது என்னன்னு ஜன்னல் வழியா பார்க்கப் போனேனுங்கய்யா.....”

அவன் நிறுத்தி விட்டு மறுபடி எச்சிலை விழுங்கினான். பின் தொடர்ந்தான். “உள்ளே பசுபதி ஐயா சிவலிங்கம் முன்னாடி உட்கார்ந்திருந்தாருங்கய்யா. அவர் பக்கத்துல இன்னொரு ஆள் உட்கார்ந்திருந்த மாதிரி என்னோட போதையில எனக்கு தெரிஞ்சுது. பசுபதி ஐயா என்னை பார்க்கல. ஆனா அந்த ஆள் ஜன்னல் பக்கமா பார்த்தாரு. அவர் கண்ணு ரெண்டு நெருப்பா ஜொலிச்சுட்டு இருந்துச்சுங்கய்யா. உடம்பெல்லாம் சூடாகற மாதிரி எனக்கு தோண ஆரம்பிச்சுது.....” சொல்லும் போதே அவன் உடல் லேசாக நடுங்கியது. மறுபடி ஒரு முறை அந்தக் காட்சியை மனக்கண்ணில் பார்த்தது போல இருந்தது. “உடனே அங்க இருந்து ஓடி வந்துட்டேங்கய்யா.”

இருபத்தி ஓராம் நூற்றாண்டில் இது போன்ற சம்பவத்தை அவன் போதையின் பிரமையாகத் தான் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று தோன்றினாலும் அதை ஒரேயடியாக அவரால் ஒதுக்கித் தள்ள முடியவில்லை. பயமே அறியாத ஒரு கொலைக் குற்றவாளி பயத்திலேயே செத்துப் போயிருக்க வேண்டும் என்று போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் சொல்லி இருக்கும் இந்த நேரத்தில் பேய் பிசாசு அல்லாத ஏதோ ஒரு புதிர் இந்த

*சம்பவங்களில் இருக்க வேண்டும் என்பதில் அவருக்கு சந்தேகம் இல்லை. என்ன அது?*

*”முனுசாமி. இது உன் அனுபவம். பக்கத்துல இருக்கிற சேரிக்காரங்களும் அப்படியே சொல்ல என்ன காரணம்? நீ அவங்க கிட்ட போய் ஏதாவது சொல்லி இருந்தாயோ?”*

*”நான் ஏன் ஐயா அதைச் சொல்லி கோமாளியாகப் போறேன். நான் அதை யாரு கிட்டயும் சொல்லலைங்கய்யா. ஆறு வருஷத்துக்கு முன்னாடி அந்தச் சேரியில இருந்து ஒரு சில்லறைத் திருடனும் ராத்திரி சுவரேறி குதிச்சு திருட வந்திருக்கான். அவனும் ஏதோ பார்த்து பயந்து போயிருக்கான்..அவனுக்கும் பயத்துல என்னை மாதிரியே காய்ச்சல் வந்திருக்கு. என்ன மருந்து சாப்பிட்டாலும் காய்ச்சல் குறையல. அவனோட சம்சாரம் என்னோட சம்சாரத்துக்குத் தெரிஞ்சவ. வந்து இதைச் சொல்லி அழுதிருக்கா. என்னோட அனுபவத்த பார்த்திருந்த என் சம்சாரம் பசுபதி ஐயா கிட்ட விபூதி வாங்கிகிட்டு போய் குடுத்து, “இதைப் பூசு சரியாயிடும். ஆனா இனியொரு தடவை அந்த வீட்டுக்கு மறந்தும் போயிட வேண்டாம்னு சொல்லு”ன்னு புத்தி சொல்லி இருக்கா. அந்த திருட்டுப் பயலுக்கும் அதை பூசி சரியாயிடுச்சு. ஆனா அந்த பொம்பள ஒரு ஓட்டை வாயிங்கய்யா. அந்த சேரி முழுசும் இந்த வீட்டுல ராத்திரில பேய் நடமாட்டம் அதிகம்னு சொல்லி இருந்திருக்கா. எல்லாரும் என் கிட்ட வந்து கேட்க ஆரம்பிச்சுட்டாங்க. கேட்டவங்க கிட்ட எல்லாம் எனக்கு பேயும் இல்லை பிசாசும் இல்லைன்னு சொல்லியே சலிச்சுடுச்சுங்கய்யா. அப்புறம் தானா இந்த வதந்தி அடங்கிடுச்சு....”*

*”அந்தத் திருடன் பேர் என்ன முனுசாமி. இப்பவும் சேரில தான் இருக்கானா?”*

*“அவன் பேரு கந்தனுங்க. அவன் நாலு வருஷத்துக்கு முன்னாடியே சேரில இருந்து போயிட்டானுங்கய்யா?”*

*”இப்ப அவன் எங்கே இருக்கான்?”*

*“தெரியலைங்கய்யா”*

*“அவன் இங்கே பார்த்ததும் நீ பார்த்தது தானா இல்லை வேறெதாவதா?”*

*“தெரியலை. நான் கேட்கப்போகலைங்கய்யா”*

*“அவன் சம்சாரம் உன் சம்சாரத்து கிட்ட சொல்லையோ?”*

*“பயந்தான்னு மாத்திரம் சொல்லிச்சு. மத்த விவரம் ஒண்ணும் சொல்லலைங்கய்யா... நானாவது எப்பவாவது தண்ணியடிப்பேன். அவன் எப்பவுமே தண்ணில தான் இருப்பான். என்னை மாதிரி அவனும் போதையில என்ன பார்த்தானோ!”*

*”முனுசாமி நிஜமாவே பசுபதி ஐயா கூட இன்னொரு ஆள் அந்த ராத்திரியில இந்த வீட்டுல இருந்திருக்கலாம் இல்லையா?”*

*முனுசாமி அவரையே திகைப்புடன் பார்த்தான். அப்படி ஒரு சாத்தியமே அவன் அறிவுக்கு இது வரை எட்டி இருக்கவில்லை என்பது புரிந்தது. ”எப்பவுமே அவரைப் பார்க்க வர்ற அவரோட தம்பி கூட இங்கே ராத்திரி வரைக்கும் இருந்ததில்லைங்கய்யா. குடும்பத்து ஆள்கள் தவிர வேற யாரும் வர்றதும் இல்லைங்க. அப்படி இருக்கறப்ப யாரும் இங்கே அந்த*

நேரத்துல அவர் கூட இருந்திருக்க வாய்ப்பே இல்லைங்களே. அவரோட தம்பி உள்பட யாருமே அந்த பூஜை ரூம்ல நுழைஞ்சதை நான் இது வரைக்கும் பார்த்ததில்லைங்கய்யா. வெளியே இருந்தே தான் கும்பிட்டுட்டு போவாங்க. ஆனா நான் பார்த்த ஆள் இருந்தது பூஜை ரூமுக்குள்ளேயே தானுங்கய்யா. அப்படி நான் பார்த்தது உண்மைன்னா என் சம்சாரம் சொல்ற மாதிரி கூட இருக்கலாம்....”

”உன் சம்சாரம் என்ன சொன்னா?”

“அந்த சிவனே, பசுபதி ஐயா கூட இருந்திருந்திருப்பாருன்னு அவ சொல்றாளுங்கய்யா”

இந்தப் பாமர மக்கள் எவ்வளவு சீக்கிரமாக இது போன்ற நம்பிக்கைகளை ஏற்படுத்திக் கொள்கிறார்கள் என்று நினைக்கையில் பார்த்தசாரதிக்கு ஆச்சரியமாக இருந்தது. பகுத்தறிவு என்ற வார்த்தையே இவர்கள் அகராதியில் இல்லையோ?

”நீ அந்த சம்பவத்துக்கு அப்புறம் மறுபடி வேலைக்கு வந்த பிறகு அவர் உன் கிட்ட இது பத்தி எதுவும் பேசலையா முனுசாமி”

”எதுவும் பேசலைங்கய்யா. நானும் எதுவும் சொல்லப் போகலை....”

”அந்தத் திருடனைப் பத்தியாவது ஏதாவது அப்புறமா பேசினாரா”

”இல்லைங்கய்யா.”

*பார்த்தசாரதி ஒரு நிமிடம் கண்களை மூடிக்கொண்டு யோசித்தார். அந்தத் திருடன் என்ன பார்த்தான் என்று தெரிந்தால், முனுசாமி பார்த்ததையும் சேர்த்து ஒப்பிட்டு ஒரு தெளிவான முடிவுக்கு வரலாம். ஆனால் அவன் எங்கிருக்கிறானோ? பசுபதி-சிவலிங்க-அந்த வீடு என்ற இந்த முக்கோணத்தில் நிறைய ரகசியங்கள் புதைந்து கிடப்பதாகத் தோன்றியது. அந்த முக்கோணத்தில் பசுபதி இறந்து, சிவலிங்கம் காணாமல் போய் வீடு மட்டும் தான் இப்போது இருக்கிறது.*

*அவருக்கு தெய்வ நம்பிக்கை உண்டே ஒழிய மூட நம்பிக்கைகள் கிடையாது. ஆவி பேய் அல்லாத ஏதோ ஒரு அறியாத விஷயம் இதில் பலமாக இருக்கிறது என்று மட்டும் அவர் திடமாக நம்பினார். அது என்ன? என்று மூளையைக் கசக்கிக் கேட்டுக் கொண்டாலும் விடை கிடைக்கவில்லை. அப்போது தான் குருஜி நினைவு அவருக்கு வந்தது. ஒருவேளை குருஜியால் இதை விளக்க முடியுமோ!*

# அத்தியாயம் - 9

*ஈஸ்வர் விர்ஜினியா பல்கலைக்கழக அதீதமன (Parapsychology)ஆராய்ச்சிக் கூடத்தில் இருந்தான். அமெரிக்காவில் அதீத மன ஆராய்ச்சிகள் பல பல்கலைக் கழகங்களில் நடைபெற்றாலும் இரண்டே இரண்டு பல்கலைக்கழகங்களில் தான் இதற்கென்று தனியாக பெரிய ஆராய்ச்சிக்கூடங்கள் இருக்கின்றன. ஒன்று விர்ஜினியா பல்கலைக்கழகம், இன்னொன்று அரிசோனா பல்கலைக்கழகம். சிறிய வயதில் இருந்தே ஆழ்மனசக்திகளில் ஆர்வம் இருந்த அவன் இரண்டு பல்கலைக்கழகங்களில் ஒன்றில் எப்படியாவது சேர்ந்து விட வேண்டும் என்று உறுதியுடன் இருந்தான். அவனுக்கு விர்ஜினியா பல்கலைக்கழகத்தில் சரியான*

வாய்ப்பு கிடைத்தது. அங்கு அதீத மனம் மற்றும் புலனாற்றல் ஆராய்ச்சிகள் விஞ்ஞான முறைப்படி நடக்க வசதிகளும், வரவேற்பும் நிறையவே அவனுக்கு இருந்தது. அதை அவன் நன்றாகவே பயன்படுத்திக் கொண்டான்.

அவன் தற்போது ஈடுபட்டிருக்கும் ஆராய்ச்சி சுமார் ஆறு மாதங்களுக்கு முன் ஆரம்பிக்கப்பட்டது. டெலிபதி பற்றிய ஆராய்ச்சி அது. அது பற்றி ஏராளமான ஆராய்ச்சிகள் முன்பே நடந்திருந்தாலும் டெலிபதியின் மூலம் அதிகபட்சமாக அனுப்ப முடிந்த தகவல்களைப் பற்றியும், அதற்கு உதவும் மனநிலைகள் பற்றியும் விரிவான ஆராய்ச்சி செய்ய அவன் முனைந்திருந்தான். ஒரு மனதில் இருந்து இன்னொரு மனதிற்கு வார்த்தைகளோ, காட்சிகளோ இல்லாமல் தகவல்கள் அனுப்பும் இந்த ஆராய்ச்சிக்குத் தகுதி இருக்கக்கூடிய ஆட்கள் என்று இருவரைத் தேர்ந்தெடுத்திருந்தான். ஒருவர் சீனர். அவருக்கு அறுபத்தைந்து வயதிருக்கும். மகன் அமெரிக்காவில் ஒரு பெரிய வேலை கிடைத்து செட்டில் ஆகி விட்டதால் அவரும் சீனாவில் இருந்து மூன்று வருடங்களுக்கு முன்பு இங்கே வந்திருந்தார். ஆங்கிலம் அவருக்கு அரை குறையாய் தான் வரும் என்ற போதிலும் ஆழ்மன சக்தி ஆராய்ச்சிக்குப் பொருத்தமான சில விசேஷத் தன்மைகள் அவருக்கு இருந்தன. இன்னொரு நபர் தென்னாப்பிரிக்காவைச் சேர்ந்த முப்பது வயது கருப்புப் பெண். விர்ஜினியா பல்கலைக்கழகத்திற்கு நாற்பது மைல் தொலைவில் உள்ள ஒரு டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸில் பணி புரியும் அந்தப் பெண் அமெரிக்காவில் இருபது வருடங்களாக வாழ்கிறாள். அவளுக்கும் ஆழ்மன சக்தி ஆராய்ச்சிக்குப் பொருத்தமான சில விசேஷத் தன்மைகள் இருந்தன. அத்துடன் அவள் நன்றாக வரையும் திறமையும் பெற்றிருந்தாள்.

ஆராய்ச்சியின் போது சீனர் ஒரு அறையிலும், ஆப்பிரிக்கப் பெண் இன்னொரு அறையிலும் அமர்த்தப்படுவார்கள். அவர்கள்

அறைகளுக்குள் நுழைந்த பிறகு சீனருக்கு அனுப்ப வேண்டிய செய்தி சொல்லப்படும். அது வரையில் அவருக்கு என்ன செய்தி அனுப்பப்போகிறோம் என்று தெரியாது. அந்த செய்தியை ஆப்பிரிக்கப் பெண் வரைந்தோ, எழுதியோ காட்ட வேண்டும்.

ஒவ்வொரு ஆராய்ச்சியின் போதும் இருவரையும் அந்த அறைகளில் இருந்த வீடியோ காமிரா மூலம் வீடியோ எடுத்து அந்தப் பதிவுகள் பத்திரப்படுத்தி வைக்கப்பட்டன. வெளியே இருந்து கொண்டு அவர்களை ஈஸ்வர் கண்காணித்துக் கொண்டே இருப்பான். ஆராய்ச்சி முடிந்து அவர்கள் வெளியே வந்த பின் தனித்தனியாக ஆராய்ச்சி சமயத்தில் அவர்கள் உணர்வுநிலைகள் எப்படி இருந்தன என்றும் எதையாவது வித்தியாசமாக உணர்ந்தார்களா என்றும் கேட்டு ஈஸ்வர் அதையும் பதிவு செய்து விடுவான். சீனரிடம் அந்த ஆப்பிரிக்கப் பெண்ணின் அன்றைய மனநிலையை உணர முடிந்ததா என்றும், ஆப்பிரிக்கப் பெண்மணியிடம் அந்த சீனரின் அன்றைய மனநிலையை உணர முடிந்ததா என்றும் கேட்டு அதையும் பதிவு செய்வான். ஒவ்வொரு ஆராய்ச்சியின் முடிவும் அந்த இரண்டு நபர்களுக்கும் தெரிவிக்கப்பட்டதில்லை. சரியாக இருந்ததா, இல்லையா என்பதற்கு அவர்களுக்கு எந்த குறிப்பும் தரப்படவில்லை. அப்படி அவர்கள் அறிந்து கொள்வது அடுத்த ஆராய்ச்சிகளைப் பாதிக்கும் என்பதால் அதை அவன் தவிர்த்தான். அந்த இருவரும் ஒருவரை ஒருவர் ஆராய்ச்சிசாலையில் மட்டும் பார்த்து அறிவார்களே ஒழிய அவர்களுக்கு இடையில் வேறு எந்த விதமான தொடர்பும் இருக்கவில்லை. ஆராய்ச்சியின் முடிவிலும் சீனர் சென்று ஒரு மணி நேரம் கழித்து தான் ஆப்பிரிக்கப் பெண் செல்வாள். அவர்கள் ஒருவரை ஒருவர் சந்தித்துப் பேசியே ஆக வேண்டும் என்று விரும்பினால் ஒழிய வெளியே சந்திக்க சாத்தியங்கள் குறைவு. அப்படி விரும்பி சந்திக்க அவர்களுக்குள் எந்தக் காரணமும் இருக்கவில்லை.

இது வரை ஏழு பரிசோதனைகள் நடத்தப்பட்டிருந்தன. முதல் பரிசோதனையில் பிரமிடுகளின் படத்தைக் கொடுத்து அதை அனுப்ப ஈஸ்வர் சொன்னான். ஆப்பிரிக்கப் பெண் மலைகளை வரைந்திருந்தாள். கிட்டத்தட்ட தோற்றத்தில் ஒன்றாகவே இருந்ததால் அவன் அதை ஆரம்பநிலைக்கு வெற்றியாகவே நினைத்தான். இரண்டாவது நான்காவது பரிசோதனைகளில் அவன் அனுப்பச் சொன்ன தகவல்களை அவள் சரியாக வரையவில்லை. இரண்டாவது பரிசோதனையின் போது ஆப்பிரிக்கப் பெண் கணவனிடம் சண்டையிட்டு வந்திருந்தாள். நான்காவது பரிசோதனையின் போது அவள் மகன் சின்ன விபத்தில் காயப்பட்டிருந்தான். ஆனால் அந்த பரிசோதனைகளில் சீனர் அவளது மனநிலையை கோபம், கவலை என்று சரியாகக் கணித்திருந்ததால் அவைகளையும் ஈஸ்வர் வெற்றிகரமான பரிசோதனைகளாகவே நினைத்தான். நான்காவது பரிசோதனையில் வானில் பறந்து கொண்டிருக்கும் ஆகாய விமானத்தின் படத்தைக் கொடுத்து அதைத் தெரிவிக்க ஈஸ்வர் சொன்னான். ஆப்பிரிக்கப் பெண் பறவை பறப்பதாக வரைந்திருந்தாள். ஐந்தாவது ஆறாவது ஆராய்ச்சிகளில் இரண்டிரண்டு பொருள்கள் தகவல்கள் அனுப்பப்பட்டன. அவை இரண்டும் சில சின்னச் சின்ன வித்தியாசங்களுடன் ஓரளவு தெளிவாக வரையப்பட்டன. இந்த ஆராய்ச்சிகளில் ஐம்பது சதவீதத்திற்கும் மேல் இருப்பதே பெரிய விஷயம் என்பதால் ஈஸ்வருக்கு இந்த ஜோடியின் வெற்றி சதவீதம் மிகத் திருப்தியாக இருந்தது. ஆறு சோதனைகளில் நான்கு ஆராய்ச்சிக் கூடங்களில் நடந்தன. நான்காவதும் ஆறாவதும் ஆராய்ச்சிகள் கிட்டத்தட்ட நூறு மைல் இடைவெளியில் இருவரையும் வைத்து நடத்தப்பட்டன. இந்த ஆராய்ச்சிகளில் இடைவெளிகள் ஒரு பொருட்டே அல்ல என்பதும் தெளிவாக நிரூபணம் ஆகியது. அடுத்த அறையும் ஒன்று தான் அடுத்த நகரமும் ஒன்று தான்.

அந்த சீனர் ஆறு ஆராய்ச்சிகளில் ஐந்தில் அவளுடைய மனநிலையை சரியாகக் குறிப்பிட்டிருந்தார். அந்த ஆப்பிரிக்கப் பெண் ஆறில் ஒரே ஒரு முறை அவர் மனநிலையை வருத்தம் என்று குறிப்பிட்டாள். மற்ற நாட்கள் எல்லாம் அவளுக்கு குறிப்பிட்டுச் சொல்ல எதுவும் இருக்கவில்லை. வருத்தம் என்று குறிப்பிட்ட பரிசோதனைக்குப் பிறகு சீனரிடம் பேசிய போது அவருக்கு தன் நாட்டையும் நட்பு, உறவுகளையும் விட்டு அமெரிக்கா வந்ததில் வருத்தம் இருப்பதாகவும், அன்று அதை அதிகம் உணர்ந்ததாகவும் சொன்னார்.

“என் மகன் ஓரளவு நன்றாக சம்பாதித்த பிறகு நாம் சீனாவுக்கே போய் விடலாம், அது வரை பொறுங்கள் என்கிறான். ஆனால் ‘ஓரளவு நன்றாக சம்பாதிப்பது’ என்றால் என்ன தொகை என்று எனக்கு விளங்கவில்லை. நான் சாவதற்குள் அந்த அளவு சம்பாதித்து முடிப்பானா என்றும் தெரியவில்லை”.

இந்த ஏழாவது ஆராய்ச்சியில் கடற்கரை மணலில் இரண்டு சிறுவர்கள் கோபுரம் கட்டிக் கொண்டிருக்கும் ஒரு புகைப்படத்தை ஈஸ்வர் சீனரிடம் கொடுத்து அனுப்பச் சொல்லி இருந்தான்.

வெளியே இருந்து அவர்கள் இருவரையும் முன்னால் இருந்த கம்ப்யூட்டர் ஸ்கிரினில் பார்த்துக் கொண்டிருந்த ஈஸ்வருக்கு அந்த சீனர் ஒருவித அசௌகரியத்தை உணர்ந்தது போலத் தெரிந்தது. முந்தைய ஆறு ஆராய்ச்சிகளிலும் அவர் அலட்டிக் கொள்ளாமல் மிக அமைதியாக இருந்தவர். ஈஸ்வர் அந்த ஆப்பிரிக்கப் பெண்ணைக் கவனித்தான். அவள் இரண்டாம், நான்காம் ஆராய்ச்சிகளில் தொந்திரவான மனநிலையில் இருந்தவள் என்றாலும் மற்ற ஆராய்ச்சிகளில் அப்படி இருக்கவில்லை. இந்த முறை மிக உற்சாகமாகத் தெரிந்தாள். அவள் முழு கவனத்துடன் வரைந்து

*கொண்டிருந்தாள். எப்போதும் அடிக்கடி ரப்பரைப் பயன்படுத்தி அழித்து சில மாற்றங்கள் செய்பவள் இன்று ரப்பரையே உபயோகிக்காதது அதிசயமாக இருந்தது. ஈஸ்வர் சீனரின் அசௌகரியத்திற்கும் ஆப்பிரிக்கப் பெண்ணின் உற்சாகத்துடன் கூடிய முழு கவனத்திற்கும் இடையே பெரியதொரு முரண்பாட்டை உணர்ந்தான். ஏதோ ஒன்று சரியில்லை....*

*சீனர் வெளியே வந்த பின் ஈஸ்வர் அவரிடம் கேட்டான். "நீங்கள் ஏதோ அசௌகரியம் உணர்ந்தது போல எனக்குத் தோன்றியது. என்ன விஷயம்?"*

*சீனர் ஒரு நிமிடம் யோசித்து விட்டுச் சொன்னார். "என் தகவல் சரியாகப் போகாதது போல தோன்றியது... வேறு யாரோ வாங்குகிற மாதிரி அல்லது இடைமறிக்கிற மாதிரி தோன்றியது....எனக்கு விளக்கத் தெரியவில்லை.."*

*ஈஸ்வர் அவரிடம் கேட்டான். "இன்றைக்கு பர்சனலாய் ஏதாவது பாதிப்பில் உங்கள் மனம் இருந்ததா?"*

*"இல்லை. சொல்லப் போனால் இன்றைக்கு இங்கே வரும் முன் செய்த தியானத்தில் வழக்கத்தை விட அதிகமாய் நான் அமைதியை உணர்ந்தேன்"*

*"உங்கள் தகவலை வாங்கியது போலத் தோன்றியவர் பற்றியோ அவர் மனநிலை பற்றியோ ஊகிக்க முடிந்ததா?"*

*"சக்தி....பெரிய சக்தி... மனிதரா இல்லை வேறெதாவதா எனக்குத் தெரியவில்லை..புதிய அனுபவமாக இருக்கிறது..."*

அவன் அதற்கு மேல் அவரை எதுவும் கேட்கவில்லை. அனுப்பி விட்டான். இது போன்ற அனுபவம் அந்த சீனருக்கு மட்டுமல்ல அவனுக்கும் புதிது தான். அவனுடைய உதவியாளர் அந்த ஆப்பிரிக்கப் பெண் வரைந்த படத்தை ஒரு வெள்ளை உறையில் போட்டுக் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போனார். ஈஸ்வர் உறையில் இருந்த படத்தை வெளியே எடுத்தான். அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஒரு கணம் இதயத்துடிப்பு நின்று போனது. குப்பென்று வியர்த்தது. இத்தனையையும் ஏற்படுத்தியது அந்தப் படத்தில் அவன் பார்த்த சிவலிங்கம் தான். சிவலிங்கம் மிக தத்ரூபமாக வரையப்பட்டிருந்தது. அந்த சிவலிங்கம் அந்தரத்தில் இருப்பது போல வரையப்பட்டிருந்தது. ஈஸ்வருக்குத் தன்னை சுதாரித்துக் கொள்ள சிறிது நேரம் தேவைப்பட்டது.

சில நிமிடங்கள் கழித்து உதவியாளரிடம் அந்தப் பெண்ணைத் தன்னிடம் அனுப்பச் சொன்னான். ஆப்பிரிக்கப் பெண் வந்தாள்.

மிக இயல்பாக முகத்தை வைத்துக் கொண்டு ஈஸ்வர் அவளிடம் கேட்டான். “இது என்ன என்று உங்களுக்குத் தெரியுமா?”

”ஏதோ சிற்பக்கலைப் பொருள் மாதிரி இருக்கிறது”.

அவளுக்கு சிவலிங்கம் பற்றி எதுவும் தெரியாதது அவனுக்கு ஆச்சரியம் தரவில்லை. ஆப்பிரிக்கா-அமெரிக்கா வார்ப்பான அவள் பொது அறிவில் பூஜ்ஜியம் தான்.

“இந்த முறை உங்கள் அனுபவம் எப்படி இருந்தது. ஏதாவது வித்தியாசமாக உணர்ந்தீர்களா?”

அவள் சொன்னாள். “எப்போதும் கொஞ்சம் கொஞ்சமாகத் தான் எனக்கு உணர முடியும். ஆனால் இந்தத் தடவை அப்படி இல்லை.... என் கண் முன்னாலேயே இந்தக் கலைப்பொருள் தெளிவாகத் தெரிந்தது. நான் என் மனதைக் குவித்து கவனிக்க வேண்டி இருக்கவில்லை...”

ஈஸ்வர் அவளிடம் கேட்டான். “இந்தக் கலைப் பொருள் தரையில் இல்லாமல் அந்தரத்தில் இருப்பது போலத் தான் தெரிந்ததா?”

”ஆமாம்.... அது மட்டுமல்ல அது லேசாக நகர்கிற மாதிரியும் தெரிந்தது....”

ஈஸ்வர் தன் திகைப்பைக் காண்பிக்காமல் இருக்க மறுபடி சிறிது முயற்சி செய்ய வேண்டி இருந்தது. அவன் சொன்னான். ”இந்த தடவை முழு கவனத்துடன் நீங்கள் இருந்த மாதிரித் தெரிந்தது. எப்போதுமே அதிகமாக ரப்பரைப் பயன்படுத்தும் நீங்கள் இந்த முறை ஒரு தடவை கூட ரப்பரே பயன்படுத்தவேயில்லை.....”

அவள் சற்று வியப்பு கலந்த குரலில் சொன்னாள். “எப்போதும் நான் உணர்கிற தகவலில் தெளிவு அதிகமாக அதிகமாக முதலில் வரைந்ததில் சிலதை விட்டு விட்டது புரியும். அதனால் தான் அதை சரி செய்ய ரப்பர் தேவைப்படும். ஆனால் இன்றைக்கு கண் முன்னால் இருப்பது போலத் தெளிவாக இருந்ததால் தேவையே படவில்லை..”

“அனுப்பிய அவர் மனநிலை பற்றி ஏதாவது உங்களால் உணர முடிந்ததா?”

அவள் சிறிது யோசித்து விட்டுச் சொன்னாள். “இல்லை... ஆனால் எனக்கு தான் வித்தியாசமாய் இருந்தது. ஒரு பிரம்மாண்டமான சக்திக்கு முன்னால் நான் இருக்கிற மாதிரி.... நான் இதற்கு முன்னால் ஒரே ஒரு தடவை தான் அப்படி உணர்ந்திருக்கிறேன். நயாகரா நீர்வீழ்ச்சியைப் பார்த்துக் கொண்டு நின்ற போது....”

அவள் போன பிறகு நிறைய நேரம் ஈஸ்வர் தனிமையில் அமர்ந்திருந்தான். இந்த ஆராய்ச்சியில் அவன் அனுப்பச் சொன்ன செய்தி அந்த சீனர் மூலம் ஆப்பிரிக்கப் பெண்ணிற்குப் போய் சேரவில்லை. அதற்குப் பதிலாக ’யாரோ அல்லது ஏதோ’ அந்த ஆப்பிரிக்கப் பெண் மூலம் அனுப்பிய செய்தி அவனுக்கு வந்து சேர்ந்திருக்கிறது.

கண்களை மூடிக் கொண்டு நிறைய நேரம் யோசித்தவன் கடைசியில் இந்தியா செல்வது என்று முடிவெடுத்தான்.

# அத்தியாயம் - 10

பரமேஸ்வரன் மனதில் அன்று ஏனோ ஈஸ்வர் நினைவுகளே திரும்பத் திரும்ப வந்து அலைக்கழித்தன.

”நீங்க தப்பான ஆளுக்கு போன் பண்ணியிருக்கீங்கன்னு நினைக்கிறேன்....” என்று வார்த்தைகளால் அறைந்தவனிடம் அவர் திரும்பவும் பேச ஒரே ஒரு காரணம் அவர் அண்ணன் மேல் வைத்திருந்த அன்பும், அளவுகடந்த மரியாதையும் தான். அப்படி அவர் மறுபடி பேசிய போது நல்ல வேளையாக அவனும் பேசினாலும் கூட, கடைசியில் “வேறொண்ணும் இல்லையே?” என்று கேட்டு விட்டு முடிவாக அவருக்கு பதில் ஏதும் சொல்லாமல்

பேச்சை நிறுத்தியது அவருக்குப் பிடிக்கவில்லை. பசுபதி சொல்லச் சொன்னதற்கு அவன் என்ன நினைக்கிறான், அதற்கு அவன் பதில் என்ன என்பது பற்றி அவன் ஒன்றுமே சொல்லாதது கோபத்தைக் கிளப்பியது....

அவரிடம் முகத்தில் அடித்தது போலப் பேச யாருக்கும் இது வரை தைரியம் வந்ததில்லை. அவர் மகன் சங்கர் ஒரு தடவை கூட அவர் பேச்சுக்கு எதிர்பேச்சு பேசியதில்லை. ஆனால் அவனுடைய மகன் நாக்கில் சவுக்கு வைத்திருக்கிறான்... ஈஸ்வரின் பேச்சு அவர் மகனின் நினைவுகளை மறுபடி முழுவதுமாக எழுப்பியது. ஒரு ஆறாத வடுவை அவர் பேரன் மறுபடி ஆழமாகக் கீறி ரணமாக்கி இருந்தான்.....

பரமேஸ்வரனின் மனைவி இறந்த போது அவர் மகன் சங்கருக்கு வயது ஐந்து, மகள் மீனாட்சிக்கு வயது மூன்று. அவர் தன் குழந்தைகளை உயிருக்கு உயிராக நேசித்தார். மறுமணம் செய்து கொண்டால் அவருடைய இரண்டாம் மனைவி அந்தக் குழந்தைகளை நன்றாகப் பார்த்துக் கொள்வாள் என்ற உத்திரவாதம் இல்லாததால் அவர் மறுமணம் கூட செய்து கொள்ளவில்லை.

அவர் தாய் ஆனந்தவல்லியின் உலகம் நான்கு பேர்கள் மட்டுமே கொண்டது. அவள் தந்தை, அவள் கணவன், அவளுடைய இரண்டு மகன்கள். அந்த உலகில் அவளுடைய பேரக் குழந்தைகளுக்குக் கூட இடம் இருக்கவில்லை. அவள் நினைத்திருந்தால் அந்த தாயில்லாத குழந்தைகளை பாசத்துடன் வளர்க்க முன்வந்திருக்கலாம். ஆனால் அவள் அந்தக் குழந்தைகளைத் தன்னிடம் அண்ட விட்டது கூட இல்லை.

பரமேஸ்வரன் தன் தாயிடம் ஜாடை மாடையாகச் சொல்லிப் பார்த்தார். ஆனந்தவல்லி தாட்சணியம் இல்லாமல் அவரிடம்

சொன்னாள். "நீ இன்னொரு கல்யாணம் பண்ணிக்கோ. இல்லாட்டி நல்ல ஆளா பார்த்து அவங்களைப் பாத்துக்க வேலைக்கு வை. எனக்கு இனிமே இந்தக் குழந்தைகளைப் பார்க்கற வேலையெல்லாம் முடியாது"

பரமேஸ்வரன் தாயிடம் மிகுந்த பாசமுடையவர் என்றாலும் அவளுடைய அந்த வார்த்தைகளை அவரால் இன்று வரை மன்னிக்க முடியவில்லை. பேரக் குழந்தைகளைப் பார்த்துக் கொள்வது வேலையா? எத்தனையோ குடும்பங்களில் தங்கள் பிள்ளைகளிடம் பாசம் இல்லாதவர்கள் கூட பேரக்குழந்தைகளிடம் மிகப்பாசமாக இருப்பதை அவர் பார்த்திருக்கிறார். ஆனால் ஆனந்தவல்லியை என்றுமே யாரும் சாதாரண பட்டியலில் சேர்க்க முடியாது.

அவர் அன்றிலிருந்து என் குழந்தைகளைத் தாயில்லாத குறை தெரியாத மாதிரி வளர்த்துவேன், அவர்களை சந்தோஷமாக வைத்துக் கொள்வேன் என்று மனதிற்குள் வைராக்கியமாய் நினைத்துக் கொண்டார். அப்படியே வளர்த்தும் காட்டினார். சமையலுக்கும், மற்ற வேலைகளுக்கும் ஆள் இருந்தால் கூட அவர் குழந்தைகள் பொருத்த வேலைகள் எதையும் வேறு யாரிடமும் விடவில்லை. காலையில் சீக்கிரம் எழுந்து குழந்தைகளை எழுப்பி குளிப்பாட்டி, டிரஸ் செய்து, சாப்பிட வைத்து, ஸ்கூல் பஸ்ஸில் ஏற்றுகிற வரை அவர் தான் செய்வார். மகள் மீனாட்சிக்குத் தலைவாருவதும் அவர் தான். அவர்களாகத் தங்களைக் கவனித்துக் கொள்ளும் வயது வரை சாயங்காலம் ஸ்கூல் பஸ் வரும் போது அவரும் வீட்டில் இருப்பார். எத்தனை பெரிய வியாபார விஷயமானாலும் அவருக்கு அவர் குழந்தைகளுக்கு அடுத்தபடி தான்.

கோடிக்கணக்கான வியாபார ஒப்பந்தங்களைக் கையெழுத்துப் போடும் போது கிடைக்காத சந்தோஷம் அவருக்கு அவரைப்

பார்த்தவுடன் ‘அப்பா’ என்று கூப்பிட்டபடி ஓடிவரும் அவருடைய குழந்தைகளைப் பார்க்கும் போது கிடைத்தது. அந்தக் குழந்தைகளும் அவர் மேல் உயிரையே வைத்திருந்தனர். அவர்கள் இருவரும் இயல்பாகவே மென்மையானவர்களாகவும், நல்லவர்களாகவும் இருந்தனர். அவர் மகன் படிப்பிலும் மிகவும் சூட்டிகையாக இருந்தான். என்றுமே வகுப்பில் முதலிடத்தை அவன் நழுவ விட்டதில்லை. மீனாட்சி படிப்பில் சுமாராக இருந்தாள். அந்தக் குழந்தைகள் எதையாவது பார்த்து விரும்புகிறார்கள் என்று தெரிந்தால் போதும் அது தேவையா இல்லையா என்று நினைக்கும் சிரமத்தைக் கூட பரமேஸ்வரன் மேற்கொண்டதில்லை. அந்தப் பொருள் உடனடியாக வீட்டுக்கு வந்து விடும். அவர்களில் யாருக்காவது உடல்நிலை சரியில்லா விட்டால் அவர் வீட்டில் இருந்து பார்த்துக் கொண்டார். அவர்கள் விருப்பப்பட்ட இடங்களுக்கு எல்லாம் கூட்டிக் கொண்டு போவார். அவர்களும் அப்பாவுக்கு மனம் வருத்தமாகும் என்று தெரிந்த எதையும் செய்யாமல் தவிர்த்தார்கள். ஒருவரை ஒருவர் நன்றாகப் புரிந்து கொண்ட அப்பாவும், இரண்டு பிள்ளைகளும் சேர்ந்து ஒரு சொர்க்கத்தில் இருந்தார்கள். நண்பர்களைப் போல இருந்தார்கள். மற்றவர்கள் பொறாமைப்படும் அளவு அன்னியோன்னியமாய் இருந்தார்கள்.

சங்கர் எஸ்.எஸ்.எல்.சியில் மாநிலத்தில் முதலிடம் வந்தான். பத்திரிக்கைக் காரர்கள் வீடு தேடி வந்த போது அவர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. இத்தனை நாள் அவருக்குக் கிடைத்த கௌரவம் பணத்தின் மூலம் கிடைத்தது. ஆனால் முதல் முறையாக மகன் மூலமாக ஒரு புதிய கௌரவம் கிடைத்தது என்று உச்சி குளிர்ந்தார். அதன் பிறகு நிறைய பரிசுகள் வாங்கினான். நண்பர்கள் அவரிடம் சொன்னார்கள். “அதிர்ஷ்டம் செய்த மனிதனய்யா நீ” என்றார்கள். அவர் எல்லாவற்றையும் விட அதிகமாக மகனே பெரிய சொத்து என்று நினைத்தார். படிப்பில் மட்டுமல்ல குணத்தில் கூட

ஒருவரும் அவனைக் குறை சொல்ல முடியாத அளவு ஒரு உதாரணமாக அவன் இருந்தான். அவனுக்கு என்ன வேண்டுமோ அதை அவரே பார்த்து பார்த்து செய்தார். எட்டு வயதில் சைக்கிளாகட்டும், பதினாறு வயதில் பைக்காகட்டும், இருபத்தியொரு வயதில் காராகட்டும் எல்லாமே இருப்பதிலேயே மிகச் சிறந்தது, விலையுயர்ந்தது என்கிறபடியாகத் தேர்ந்தெடுத்து வாங்கிக் கொடுத்தார்.

ஆனால் அவர் மகன் மனைவியை மட்டும் தானாகவே தேர்ந்தெடுத்துக் கொண்டான். அவன் தன்னுடன் படித்த ஒரு பெண்ணைக் காதலிப்பதாகச் சொன்ன போது அந்தப் பெண் ஒரு நடுத்தரக் குடும்பத்தவள், அதுவும் தெலுங்குக்காரி என்று தெரிந்த போது அவரால் அனுமதிக்க முடியவில்லை. அவருடைய அருமை மகனுக்கு ஒரு ராஜகுமாரி போன்ற பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்துப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்ட அவர் மகனின் காதலுக்கு எதிர்ப்பு தெரிவித்தார். என்றுமே அப்பாவிற்குப் பிடிக்காது என்று லேசான குறிப்பு கிடைத்தால் உடனே அதை விட்டு விடக் கூடிய அவர் மகன் இதில் மட்டும் பிடிவாதமாக இருந்தான்.

கடைசியில் பரமேஸ்வரன் சொன்னார். “சங்கர். இதுல நான் கண்டிப்பா மனசு மாற மாட்டேன். நானா அவளான்னு நீ தீர்மானிச்சுக்கோ.” சொல்லி விட்டு ஆபிசிற்குப் போய் விட்டார். இதைக் கேட்டதற்குப் பின் மகன் கண்டிப்பாக அந்தப் பெண்ணை விட்டு விலகி விடுவான் என்று நூறு சதவீதம் அவர் நம்பினார். அவர் அருமை மகன், அவரை அந்த அளவு நேசிக்கும் மகன் இந்த உலகில் யாரிற்காகவும் அவரை விட்டுக் கொடுக்க மாட்டான் என்பதில் அவருக்கு சந்தேகமே இருக்கவில்லை.

ஆனால் சாயங்காலம் அவர் வீட்டுக்கு வந்த போது அவனுடைய திருமணம் ரிஜிஸ்டர் ஆபிசில் முடிந்து விட்டது என்ற

*செய்தி காத்திருந்தது. தன் காலின் கீழ் இருந்த நிலமே ஆட்டம் கண்டு விட்டது போலவும், பேரிடி தலையில் விழுந்தது போலவும் அவர் உணர்ந்தார். அவருக்கு கேட்டதை உடனடியாக நம்பவே முடியவில்லை. சொன்னது மகள் மீனாட்சியாக இல்லாமல் இருந்திருந்தால் சிறிதும் நம்பியிருக்க மாட்டார். உண்மை சிறிது சிறிதாக உறைத்த போது உள்ளே உருவான ஒரு பிரளயம் அவரை உயிரோடு சிதைத்துப் போட்டது.*

*பரமேஸ்வரன் மகளிடம் சொன்னார். "மீனாட்சி. இனி எந்தக் காரணத்தைக் கொண்டும் என் மூஞ்சில முழிக்க வேண்டாம்னு உங்க அண்ணன் கிட்ட சொல்லிடு"*

*மீனாட்சி அண்ணனுக்கு சாதகமாக அவரிடம் பேச முற்பட்ட போது இறுகிய குரலில் கேட்டார். "மீனாட்சி உனக்கு அப்பா வேணுமா வேண்டாமா"*

*"என்னப்பா இப்படி கேட்கறீங்க.? நீங்க எனக்கு வேணும்ப்பா"*

*"அப்படின்னா அவனைப் பத்தி இன்னொரு தடவை நீ என் கிட்ட பேசக் கூடாது"*

*அவள் அவரை மிகுந்த துக்கத்துடன் பார்த்தாள். ஆனால் அவர் முகத்தில் தெரிந்த நூறு சதவீத உறுதியை அவளால் உணர முடிந்தது. அதற்குப் பிறகு அவள் என்றுமே அவனைப் பற்றி அவரிடம் பேசியதில்லை. அவர் மகனை அவர் பார்த்ததும் இல்லை.*

*மனத்தின் ரணம் குறைய காலம் நிறைய தேவைப்பட்டது. ஆனால் மகள் மீனாட்சியின் அன்பில் அவரால் தாக்குப் பிடிக்க முடிந்தது. மகனை இழந்த அவர் மகளையாவது*

*தக்க வைத்துக் கொள்ளப் பார்த்தார். வீட்டோடு இருக்கும் படியான நல்ல மாப்பிள்ளையாகப் பார்த்து அவளுக்குத் திருமணம் செய்து கொடுத்தார். மாப்பிள்ளை விஸ்வநாதன் சங்கருடன் கல்லூரியில் படித்தவன் தான். நல்ல குடும்பம். நல்ல புத்திசாலி. பண வசதியில் மட்டுமே அவர்களுக்குக் குறைந்தவன். பார்க்க லட்சணமாய் இருந்தான். மீனாட்சிக்கும் பிடித்திருக்கவே அவர் அவளுக்கு அவனைத் திருமணம் செய்து வைத்து வீட்டோடு வைத்துக் கொண்டார். அவருடைய கம்பெனியில் ஒரு பெரிய நிர்வாகப் பொறுப்பை அவனுக்குத் தந்தார்.*

*விஸ்வநாதன் ஏதோ பேச்சு வாக்கில் அவரிடம் சங்கர் பற்றி ஒரு முறை சொன்ன போது அவனிடமும் சொன்னார். ”எனக்கு சில விஷயங்களைத் திரும்பத் திரும்ப சொல்றது பிடிக்காது. அதனால ஒரே தடவை சொல்றதை புரிஞ்சுக்கோங்க மாப்பிள்ளை. அவனைப் பத்தி எப்பவுமே என் கிட்ட பேசிடாதீங்க”*

*அதற்கப்புறம் அவர் மாப்பிள்ளையும் அவரிடம் சங்கர் பற்றி பேசினதில்லை. மகள் மீனாட்சி ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். மகேஷ் என்ற அந்தப் பேரப்பிள்ளை அவருடைய செல்லமாக ஆரம்பித்தான். சிறிது சிறிதாக அவர் மனக்காயம் ஆற ஆரம்பித்தது. காலம் ஓடிய ஓட்டத்தில் சிறிது சிறிதாக பழைய அமைதி திரும்ப ஆரம்பித்தது. எல்லாம் ஈஸ்வர் என்ற அந்தப் பையனிடம் அவர் பேசிய வரை....*

*”என்னப்பா, தனியா உட்கார்ந்து என்ன யோசிச்சுகிட்டிருக்கீங்க?”*

*மீனாட்சி அவர் அறைக்குள் நுழைந்தாள். மகளைப் பார்த்த போது எப்போதும் போல மனம் மென்மையாகியது. அதனாலேயே மகன் நினைவு மேலும் வலித்தது. நெருக்கமான யாரிடமாவது*

சொல்லி மனதில் உள்ளதை இறக்கி வைக்க வேண்டும் என்றும் இல்லா விட்டால் தாங்காது என்றும் தோன்றவே முதல் முறையாக அவராகவே அவளிடம் ஈஸ்வர் பற்றிய பேச்சை எடுத்தார்.

“உன் அண்ணன் பையன் கிட்ட நான் ரெண்டு நாளுக்கு முன்னாடி பேசினேன்.”

மீனாட்சி கண்கள் விரியத் தந்தையைப் பார்த்தாள். அவள் ஒரேயடியாக சந்தோஷப்பட்டு விட வேண்டியதில்லை என்று எண்ணிய பரமேஸ்வரன் மெல்ல பசுபதி கடைசியாகச் சொன்னதையும், அதனால் அவருக்கு சங்கரின் மகனிடம் பேச வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதையும், அவன் முகத்தில் அடித்தது போல பேசியதையும் மகளிடம் சொன்னார்.

ஈஸ்வரின் ஆரம்பப் பேச்சைக் கேட்டு லேசாக மீனாட்சிக்குப் புன்னகை அரும்பினாலும் தந்தையின் முகத்தில் தெரிந்த அவமானத்தைக் கவனித்த போது அந்தப் புன்னகை அரும்பிலேயே கருகியது. அவள் முகமும் வாடியதைக் கவனித்த பரமேஸ்வரன் நினைத்தார். “இவள் மட்டும் இல்லாமல் இருந்திருந்தால் நான் என்றைக்கோ செத்திருப்பேன்....”

”அவன் சொன்னதைப் பெரிசா நினைக்காதீங்கப்பா. அவன் நல்ல பையன் தான். ஆனா கோவத்தில மட்டும் உங்க மாதிரியும், பாட்டி மாதிரியும்னு அண்ணா சொல்வான்....”

அவரையும் அவர் அம்மாவையும் மாதிரி என்றதை அவரால் ரசிக்க முடியவில்லை. “நீ அந்தப் பையன் கிட்ட பேசியிருக்கியா?”

*”அண்ணா கிட்ட தான் அதிகம் பேசுவேன்.... அவன் கிட்ட, எப்படி இருக்கே? நல்லா இருக்கியான்னு மட்டும் தான் பேசி இருக்கேன். போன்ல அதுக்கு மேல பேச விஷயமும் இல்லை... அவனைப் பார்த்ததும் இல்லை. அண்ணா இறந்த பிறகு ரெண்டே தடவை தான் பேசி இருக்கேன்..”*

*பரமேஸ்வரன் கேட்டார். “நீ மட்டும் தான் பேசுவாயா, இல்லை மாப்பிள்ளை, மகேஷ் எல்லாருமே பேசுவாங்களா?”*

*“இல்லை அவங்க பேச மாட்டாங்க......” என்று வருத்தம் தொனிக்க மீனாட்சி சொன்னாள். பரமேஸ்வரனுக்கு அந்தத் தகவல் சிறிது திருப்தியை அளித்தது.*

*அந்த நேரமாய் பார்த்து அவள் செல் போன் அடிக்க அவள் அதை அழுத்திப் பேசினாள். “ஹலோ..”*

*“ஹலோ அத்தை நான் ஈஸ்வர் பேசறேன்”*

*மீனாட்சி அவளையும் அறியாமல் சந்தோஷமாய் சொன்னாள். “ஈஸ்வர். நிஜமாவே உனக்கு நூறு ஆயுசு. இப்ப தான் உன்னைப் பத்தி பேசிகிட்டிருந்தேன்...”*

*”யார் கிட்ட?”*

*பரமேஸ்வரன் முறைப்புடன் தலையசைக்கவே மீனாட்சி பொய் சொன்னாள். “மகேஷ் கிட்ட தான். அண்ணி எப்படியிருக்காங்க?”*

*“அம்மா நல்லாயிருக்காங்க. மாமாவும் மகேஷும் எப்படியிருக்காங்க?”*

*”சௌக்கியம் தான். சொல்லுப்பா என்ன விஷயம்?”*

*“உங்க ஊர்ல தங்கற மாதிரி நல்ல ஓட்டல் எது?”*

*“எதுக்கு கேட்கறே?”*

*“நான் இந்தியா வர்றேன். அதனால தான்”*

*மீனாட்சியின் மனதில் சந்தோஷ கங்கை கரை புரண்டு ஓடியது. இன்று தந்தை அவராகவே பேரதிசயமாக ஈஸ்வர் பற்றிய பேச்சை எடுத்ததும், சரியாக அதே நேரத்தில் அதிசயமாக அவன் வருவதாகப் போன் செய்ததும் நல்ல சகுனமாகத் தோன்றியது. தாத்தா-பேரனாவது சேர ஒரு பொன்னான சந்தர்ப்பம் வர வேண்டும் என்று விரும்பிய அவள் மூளை மின்னல் வேகத்தில் வேலை செய்தது. அவரை நேரில் பார்த்துக் கொண்டு தைரியமாக சிலதை எல்லாம் சொல்ல முடியாது என்று எண்ணி பரமேஸ்வரனிற்கு முதுகைக் காண்பித்து திரும்பியபடி மருமகனிடம் சொன்னாள்.*

*“இங்க வீடு இருக்கறப்ப நீ எதுக்கு ஓட்டல்ல தங்கறே?”*

*“என்னவோ உங்க வீட்டுக்குக் கூப்பிடற மாதிரி கூப்பிடறீங்க?”*

*“நான் என் வீட்டுக்குக் கூப்பிடலை. உன்னோட வீட்டுக்குக் கூப்பிடறேன். இது உன் தாத்தா கட்டின வீடு கூட இல்லை.... உன் கொள்ளுத்தாத்தா கட்டின வீடு. நீ உரிமையோட வரலாம்”*

*"ஓ அப்பபடியா. அப்ப சரி. அடுத்த புதன் கிழமை வர்றேன். சார் கிட்ட சொல்லி வையுங்க?"*

*"எந்த சார் கிட்ட சொல்லி வைக்கிறது?"*

*"உங்க அப்பா கிட்ட தான்.. சரி அத்தை வேறொரு கால் வருது. நான் அப்புறமா பேசறேன்."*

*அவன் போனை வைத்து விட்டான்.*

*மீனாட்சி எச்சிலை விழுங்கியவளாக பரமேஸ்வரனை சமாளிக்கும் உபாயங்கள் அத்தனையையும் யோசித்தபடி மெல்ல அவர் பக்கம் திரும்பினாள்.*

*பரமேஸ்வரன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க மகளைப் பார்த்து கொண்டிருந்தார்.*

# *அத்தியாயம் - 11*

*பரமேஸ்வரன் மகளிடம் கேட்டார். "அவன் சார்னு சொன்னது என்னைத்தானே?"*

*"....இல்லை.... உங்க மருமகனைத் தான்... அப்படி சொன்னான்"*

மீனாட்சிக்கு பொய் இயல்பாக வராது. மகளைக் கண்ணாடி போல படிக்க முடிந்த பரமேஸ்வரனுக்கு ஈஸ்வர் அவரைத் தான் சார் என்று சொல்லி இருக்கிறான் என்பதில் சந்தேகமே இல்லை. நேற்று பிறந்த சுண்டக்காய் என்ன திமிராய் பேசுகிறான் என்று நினைத்தவராக அடுத்ததாக கோபத்திற்கான காரணத்தை மகளிடம் கண்டுபிடித்தார்.

“இந்த வீடு அவனோட கொள்ளுத் தாத்தா கட்டினது, அவனுக்கு அதில உரிமை இருக்குன்னு சொல்ல வேண்டிய அவசியம் உனக்கு என்ன இருக்கு?”

மீனாட்சி தானும் பொய்யாய் கோபப்பட்டாள். “ஆமா சொன்னேன். அது உண்மை தானே. உங்க கிட்ட அவனும் என்னமோ கோபமா இருக்கான். அதனால இங்கே வந்து தங்க யோசிக்கிறான். நீங்க தானே அவனுக்கு போன் செஞ்சு பேசி பெரியப்பா சொன்னதைச் சொன்னீங்க. அதக் கேட்டுகிட்டு அவன் உங்களுக்காக இங்கே வந்து ஓட்டல்ல தங்கணுமா? நல்லா இருக்கே நியாயம்.”

“தாத்தாவை தாத்தான்னு கூப்பிடாம அவன் சார்னு கூப்பிடறான். நானே அவனுக்குத் தாத்தா இல்லைன்னா எங்கப்பா எப்படி அவனுக்குக் கொள்ளுத்தாத்தா ஆவார்?”

“அவனோட அப்பா உங்களுக்கு மகன் இல்லைன்னு நீங்க சொன்னதை வசதியா மறந்துடுங்க”

பரமேஸ்வரன் மகளை முறைத்தார். இந்த நேரமாகப் பார்த்து ஆனந்தவல்லி அறைக்குள் நுழைந்தாள்.

“எப்பப் பாரு அப்பனும், மகளும் கொஞ்சிக்குவீங்க, இன்னைக்கென்ன அதிசயமா ரெண்டு பேருக்குள்ளே சண்டை?”. அவளுக்கு எப்போதுமே பரமேஸ்வரன் தன் குழந்தைகளைத் தலைக்கு மேல் வைத்துக் கொண்டாடுவது பிடித்ததில்லை. எதிலும் ஒரு அளவு வேண்டும் என்று நினைப்பவள் அவள்.

”இவளோட அண்ணன் மகன் இந்தியா வர்றானாம். அவனை இங்கேயே வந்து தங்கு, இது உன் கொள்ளுத் தாத்தா கட்டினது, உனக்கு உரிமை இருக்குன்னு சொல்லித் தர்றா இவ”

மீனாட்சி சொன்னாள். “அவன் இவர் சொல்லி வர்றான். அவன் இங்கே வந்து தங்கறதுல என்ன தப்பு”

“அவனாவே இங்கே வந்திருந்தா தப்பே இல்லை. அவன் லார்டு கவர்னராட்டம் ஓட்டல்ல தங்கறேன்னு சொல்லி, நீ வேண்டாம் உன் கொள்ளுத்தாத்தா வீடு இது, உங்க தாத்தாவுக்கும் இந்த வீட்டுக்கும் எந்த சம்பந்தமுமே இல்லைங்கற மாதிரி சொல்லி அவனை இங்க வர சம்மதிக்க வச்ச பாரு அது தான் தப்பு”

ஆனந்தவல்லி சொன்னாள். “அந்தப் பையன் திமிர் பிடிச்ச பையன்கிற மாதிரி தான் பேச்சுல தெரியுது.... அன்னைக்கும் அவன் உன் அப்பன் கிட்ட அப்படி தான் பேசினான்”

மீனாட்சி அடுத்த அஸ்திரத்தை விட்டாள். “அவன் இங்கே தங்காமல் ஓட்டல்ல தங்கினா நமக்குத் தான் அவமானம். அவன் பார்க்க வேற எங்க தாத்தா மாதிரியே இருக்கான்... இருங்க என்னோட லாப்டாப்புல அவனோட ஃபோட்டோ இருக்கு. கொண்டு வந்து காண்பிக்கிறேன்.”

பார்க்க தன் கணவன் மாதிரி இருப்பதாகக் கேட்டவுடன் ஆனந்தவல்லிக்கு ஒரு புதிய ஆர்வம் பிறந்தது. அவள் பேத்தியிடம் சொன்னாள். “பார்க்க மட்டும் தான் அப்படி போல இருக்கு. உங்க தாத்தாவுக்கு எப்பவுமே திமிரு இருந்ததில்லை....”

“அது ஒவ்வொண்ணு ஒவ்வொருத்தர் கிட்ட இருந்து வரும்...” என்று சொல்லி விட்டு மீனாட்சி லாப்டாப் எடுத்து வர நகர்ந்தாள்.

அவள் போன பிறகு ஆனந்தவல்லி மகனிடம் கேட்டாள். “அப்படின்னா திமிரு யார் கிட்ட இருந்து அவனுக்கு வந்திருக்குன்னு உன் மகள் சொல்றா. என்னைச் சொல்றாளா, உன்னைச் சொல்றாளா?”

பரமேஸ்வரன் லேசாய் புன்னகைத்தார். அவருக்கு ஈஸ்வர் மேல் கோபம் இருந்த போதும் அதையும் மீறி அவன் இந்தியா வருவதில் ஒருவித திருப்தி இருந்தது. அவர் பேசினதுக்கு ஏதோ ஒரு மரியாதை இருக்கிறது. ஆனால் அவர் மீது இருக்கும் கோபத்தை ஒவ்வொரு முறையும் அவன் சுட்டிக்காண்பிக்காமல் இல்லை. இந்த வீடு கூட அவருடையதாய் இருந்திருந்தால் அவன் வந்து தங்கியிருக்க மாட்டான் என்பது உறுத்தலாக இருந்தது. அதை நினைக்கையில் அவர் புன்னகை வந்த வேகத்தில் மறைந்தது.

மீனாட்சி லாப்டாப்புடன் வந்தாள். ஈஸ்வரின் படம் ஒன்றை அதில் அவர்களுக்குக் காண்பித்தாள். பரமேஸ்வரன் பேச்சிழந்து போனார். அவருடைய தந்தையின் மறு அச்சாக அவர் பேரன் இருந்தான். பசுபதி சொன்னது நினைவுக்கு வந்தது. “இருக்கிற மண் எதுவானாலும் விதை நம் வம்சத்தோடதுடா.” தோற்றம் முதற்கொண்டு அவர் சொன்னதை நிரூபித்தது.

***கண்களை சுருக்கிக் கொண்டு பார்த்த ஆனந்தவல்லியும் ஆச்சரியப்பட்டு தான் போனாள். "என் ரூம்ல டேபிள் மேல என்னோட கண்ணாடி இருக்கும் கொஞ்சம் கொண்டு வாடி"***

***மீனாட்சி பாட்டிக்கு மூக்குக் கண்ணாடி கொண்டு வந்து தந்தாள். ஆனந்தவல்லி கண்ணாடியைப் போட்டுக் கொண்டு தன் கொள்ளுப்பேரனை ஆராய்ந்தாள். எப்போதுமே கடுகடுவென்றோ, இறுக்கமாகவோ இருக்கும் அவள் முகத்தில் அபூர்வமாக ஒரு மென்மை படர்ந்ததை மீனாட்சி கவனித்தாள்.***

***"ஏண்டி இது ஒண்ணு தான் இருக்கா, வேறயும் இருக்கா?"***

***"நிறைய இருக்கு பாட்டி. சிலதுல அண்ணாவும் அண்ணியும் கூட இருக்காங்க.. சிலது தனியா இருக்கு"***

***மீனாட்சி வேண்டுமென்றே அவளுடைய அண்ணன், அண்ணியுடன் ஈஸ்வர் இருந்த படங்களை ஆரம்பத்தில் அவர்களுக்குக் காண்பித்தாள். பரமேஸ்வரன் தன் மகனின் புகைப்படங்களைக் கூட அவன் இங்கிருந்து போன பிறகு பார்த்ததில்லை. அவர் மகன் அந்தப் படங்களில் அவரையே பார்த்தான். அவருடைய ஒரே மகன், அவருடைய உயிருக்கு உயிராய் இருந்தவன், புன்னகையைத் தவிர முகத்தில் எந்த கடுமையான உணர்ச்சிகளையும் காட்டாதவன் இப்போதும் அதே புன்னகையுடன் அவரைப் பார்த்தான்.... அவருக்கு இரண்டு புகைப்படங்களுக்கு மேல் மகனுடைய புகைப்படங்களைப் பார்க்க முடியவில்லை.***

***"எனக்கு முக்கியமாய் ஒரு போன் கால் செய்ய வேண்டி இருக்கு. மறந்தே போய்ட்டேன்..." என்று அவர் எழுந்து சொன்ன போது அவர் குரல் கரகரத்தது. அவர் ஜன்னலோரத்திற்கு நகர்ந்து***

பெரிய அவசரமில்லாத ஒரு விஷயத்துக்கு யாரையோ கூப்பிட்டு பேச ஆரம்பித்தார்.

ஆனந்தவல்லிக்குத் தன் பேரனைப் பார்த்து அப்படி எந்த உணர்ச்சியும் பெரிதாக ஏற்பட்டு விடவில்லை. ஆனால் ஒவ்வொரு புகைப்படத்திலும் அவளுடைய கணவனின் மறு அச்சு போல் இருந்த கொள்ளுப்பேரன் ஈஸ்வரை மட்டும் உன்னிப்பாகப் பார்த்தாள். அவள் பார்த்து முடித்து மீனாட்சி லாப்டாப்பை மூடிய போது பரமேஸ்வரனும் தன் பேச்சை முடித்திருந்தார்.

”அந்தப் பையன் பேர் என்ன?” ஆனந்தவல்லி கேட்டாள். அவள் குரலிலும் என்றுமில்லாத மென்மையும் ஆர்வமும் தெரிந்தது.

“ஈஸ்வர்” மீனாட்சி சொன்னாள்.

மகனைப் பார்த்து ஆனந்தவல்லி சொன்னாள். ”ஓ.. உன் பேர் தான் அவனுக்கு உன் மகன் வச்சிருக்கானோ”.

பரமேஸ்வரன் ஒன்றுமே சொல்லவில்லை.

“எப்ப வர்றானாம்?” ஆனந்தவல்லி பேத்தியைக் கேட்டாள்.

“வர்ற புதன்கிழமை” மீனாட்சி சொன்னாள்.

“ஏன், அதுக்கு முன்னாடி எந்த ஃபிளைட்லயும் டிக்கெட் கிடைக்கலையோ?”

**************

குருஜியின் வீட்டு ஹாலில் அவருடைய தரிசனத்திற்காகக் காத்திருந்தவர்கள் பதினெட்டு பேர். அவர்களில் இரண்டு தொழிலதிபர்கள், ஒரு சினிமா டைரக்டர், ஒரு விஞ்ஞானி, ஒரு பிரபல கதாகாலட்சேபக்காரரர், ஒரு எம்.எல்.ஏயும் அடக்கம். அவர்களுடன் சேர்ந்து காத்துக் கொண்டு இருந்த கணபதிக்கு வயது 21 என்றாலும் உயரம் ஐந்தடி கூட இல்லை. குடுமி வைத்துக் கொண்டிருந்தான். பழைய வேட்டியைக் கச்சை கட்டிக் கொண்டிருந்த அவன் மேல் உடம்பில் ஒரு அழுக்குத் துண்டு மட்டும் இருந்தது. அவனை அவர் வரச் சொன்னதாக குருஜியின் வேலையாட்களில் ஒருவன் காலையில் தான் வந்து சொல்லி விட்டுப் போனான். பக்கத்து கிராமத்தில் ஒரு சிறிய வினாயகர் கோயிலில் பூஜை செய்யும் அர்ச்சகராக இருந்த அவனுக்கு குருஜி மேல் மிகுந்த பக்தியும், மரியாதையும் உண்டு. அத்தனை பெரிய மனிதர் அவனை ஒரு பொருட்டாக நினைத்தது மட்டுமல்லாமல் அன்பாகவும், மரியாதையாகவும் கூடப் பழகுவார்.

சென்ற வருடம் ஒரு பொது நிகழ்ச்சியில் தான் அவரை அவன் முதல் முதலாக சந்தித்தான். கூட்டத்தோடு கூட்டமாக நின்றிருந்த அவனை மேடையில் உட்கார்ந்திருந்த அவர் சிறிது நேரம் கூர்மையாகப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு நிகழ்ச்சி முடிந்தவுடன் தன்னை வந்து பார்க்கும்படி ஒருவரிடம் சொல்லி அனுப்பினார். கணபதிக்கு ஒரு கணம் ஒன்றுமே புரியவில்லை. நடிகர்கள், அரசியல்வாதிகள், பெரும் பணக்காரர்கள் போன்றவர்கள் எல்லாம் அவர் தரிசனத்திற்காகக் காத்துக் கிடக்கிறார்கள் என்று பத்திரிக்கைகளில் பல முறை படித்திருக்கிறான். அப்படிப்பட்டவர் அவனைப் போன்றவனை அழைத்துப் பேச முன்வந்தது ஆச்சரியமாக இருந்தது. நிகழ்ச்சி முடிந்ததும் அந்த ஹாலில் ஒரு அறையில் அவரைச் சந்தித்தான். அவனைப் பற்றி அவர் விசாரித்தார். ஏன் அவனை மட்டும் தேர்ந்தெடுத்து விசாரித்தார் என்பது கணபதிக்கு இன்று வரை

விளங்கவில்லை. ஆள் மாறி அழைத்து விட்டார் என்று தான் ஆரம்பத்தில் நினைத்தான்.

ஒரு ஏழை பிராமண அர்ச்சகர் குடும்பத்தவனான அவனுக்குத் தன்னைப் பற்றி சொல்ல பெரிதாக ஒன்றும் இருக்கவில்லை. திருமணமாகாத இரண்டு அக்காள்கள், ஒரு விதவைத் தாய், ஒரு கிராமத்து சிறிய பிள்ளையார் கோயிலில் மிக சொற்ப வருமானம் தரும் அர்ச்சகர் வேலை இது மட்டுமே தான் அவனுக்கு சொல்ல இருந்த தகவல்கள். இத்தனையும் சொல்லி விட்ட பிறகு நான் வேறொரு ஆள் என்று நினைத்து உன்னை அழைத்து விட்டேன் என்று சொல்லி அவர் அனுப்பி விடுவார் என்று தான் அவன் நினைத்தான். ஆனால் அவர் அப்படி அனுப்பி விடவில்லை. அவனைப் பற்றி ஒரு புத்தகமே எழுதப் போகிறவர் போல அவனைப் பற்றி சர்வமும் விசாரித்தார். அவன் படித்த வேதபாடங்கள் பற்றி, அவன் சொல்லும் மந்திரங்கள் பற்றி, அவன் பூஜிக்கும் வினாயகர் பற்றி, பல விஷயங்களைச் சொல்லி அதைப் பற்றி என்னவெல்லாம் அவன் நினைக்கிறான் என்பது பற்றி எல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டார். அறிவிலும் அவன் அவருக்கு சமமானவன் அல்ல, அந்தஸ்திலும் அவன் அவருக்கு சமமானவன் அல்ல, பெயர் புகழிலும் அவனிற்கு எத்தனை ஏணி வைத்தாலும் எட்டாத உயரத்தில் இருப்பவர் அவர். அப்படிப்பட்டவர் மிக அன்போடு அவனை அழைத்துப் பேசியதும், அவனைப் பற்றிக் கேட்டதும் அவனுக்குக் கண்களில் நீரை வரவழைத்து விட்டது.

கடைசியில் அவன் கேட்டான். “ஐயா, என்னை மாதிரி ஒரு சாதாரணமானவனை எதுக்கு இவ்வளவு அன்பா விசாரிக்கறீங்கன்னு தெரியலையே?”

*அவன் கேள்விக்கு அவர் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. பிறகு புன்னகையுடன் சொன்னார். "எனக்கு நீ சாதாரணமானவன்னு தோணலை. அது தான்...."*

*கணபதிக்கு ஒன்றும் புரியவில்லை. அதற்குப் பிறகு அவர் தரிசனத்திற்கு ஆறு மாதங்களுக்கு முன் ஒரு முறை வந்தான். ஆனால் அன்று அவரை சந்தித்துப் பேச முடியவில்லை. நிறைய கூட்டம் இருந்தது. நான்கு பேரை மட்டும் கூப்பிட்டு பேசிய அவர் அத்துடன் நிறுத்திக் கொள்ள மற்றவர்கள் எல்லாம் ஏமாற்றத்தோடு திரும்பிப் போக வேண்டி வந்தது.*

*இன்று அவராகவே கூப்பிட்டு அனுப்பியது அவனுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. முதலில் எம்.எல்.ஏவை அழைத்து ஐந்தே நிமிடங்களில் பேசி அனுப்பி விட்ட குருஜி இரண்டாவதாக அவனைத் தான் அழைத்தார். அத்தனை பிரபலங்கள் காத்திருக்கையில் குருஜி தன்னைக் கூப்பிட்டனுப்பியது அவனுக்குப் பெருமையாக இருந்தது.*

*சென்று அவரைப் பயபக்தியுடன் தரையில் விழுந்து வணங்கினான். மிக நெருங்கிய நண்பனை விசாரிப்பது போல அவர் அவனைத் தட்டிக் கொடுத்து விசாரித்தார். "எப்படி இருக்கே கணபதி?"*

*"ஏதோ இருக்கேன் குருஜி."*

*"உன்னோட பிள்ளையார் எப்படி இருக்கார்?." குருஜி புன்னகையுடன் கேட்டார்.*

*”அவரும் போரடிச்சுப் போய் உட்கார்ந்திருக்கார்” என்று சொல்லி விட்டு களங்கமில்லாமல் கலகலவென்று சிரித்தான் கணபதி. “என்னை மாதிரியே அவரையும் அதிகமா யாரும் கண்டுக்கறதில்லை குருஜி. எங்கெங்கேயோ தூரமா எல்லாம் போய் பெரிய கோயில்கள்ல சாமி கும்பிடற மனுஷங்க பக்கத்துல இருக்கிற சின்னக் கோயிலுக்கு வர யோசிக்கிறாங்க. வழக்கமா வர்ற நாலஞ்சு பேர் தான் தினம் வர்றாங்க. அவரைப் பார்க்க கூட்டம் வரணும்னா பிள்ளையார் சதுர்த்தி வரணும்.”*

*குருஜி புன்னகையுடன் சொன்னார். “சாமியே கூட பெரிய கோயில்ல இருந்தால் தான் மரியாதை. இல்லையா?”*

*“அப்படித்தான் உலகம் இருக்குது குருஜி”*

*சிறிது நேரம் அவன் குடும்பத்தைப் பற்றி விசாரித்த அவர் பிறகு விஷயத்துக்கு வந்தார். “கணபதி. சில நாள் உன் பிள்ளையாருக்குப் பூஜை செய்ய வேற ஆளை ஏற்பாடு செய்து விட்டு வேற ஒரு இடத்துக்குப் பூஜை செய்யப் போக முடியுமா?”*

*கணபதி யோசனையுடன் சொன்னான். “என் ஒண்ணு விட்ட தம்பி சுப்புணி வேலை இல்லாமல் சும்மா தான் இருக்கான். ஆனா அவனை பிள்ளையாருக்கு பூஜை செய்ய கூப்பிட்டா தினமும் எழுபது ரூபாய் கேட்கிறான்... போன வாரம் என் தாய் மாமன் மகன் கல்யாணத்துக்கு நான் போக வேண்டி இருந்தது. வேற வழியில்லாம தந்தேன்....”*

*“அது ஒரு பிரச்சினை இல்லை. அவனுக்கு தினமும் எழுபது தரவும், உனக்கு தினமும் பூஜை செய்ய ஐநூறு ரூபாய் தரவும் ஒரு கோயில் நிர்வாகம் தயாரா இருக்கு. போகிறாயா?”*

*அவனுக்கு தினமும் ஐநூறு, அதுவும் சுப்புணிக்கும் எழுபது அவர்களே தந்து விடுகிறார்கள் என்பது கேட்டு கணபதி ஒரு கணம் கண்களை ஆச்சரியத்துடன் விரித்தான். "எந்த சாமிக்கு பூஜை? எத்தனை நாளைக்கு?"*

*"உன் பிள்ளையாரோட அப்பாவுக்கு – சிவலிங்கத்துக்கு. பதினஞ்சு இருபது நாளுக்கு மட்டும் தான்".*

*"எந்தக் கோயில்ல குருஜி?"*

*குருஜி ஒரு கதையைக் கச்சிதமாகச் சொல்லத் தயாரானார்.*

# *அத்தியாயம் - 12*

*குருஜி ஒரு பரம ரகசியத்தை கணபதியிடம் மட்டும் பகிர்ந்து கொள்ள முன் வந்தவர் போன்ற ஒரு அபிப்பியாயத்தை அவனிடம் ஏற்படுத்தியவராக அவனுக்கு மட்டுமே கேட்கக் கூடிய தாழ்ந்த குரலில் சொன்னார்.*

*"அமெரிக்காவில் ஒரு சிவன் கோயிலைக் கட்ட அங்கே இருக்கிற சில பணக்கார இந்தியர்கள் ஏற்பாடு செய்திருக்காங்க கணபதி. அதற்காக இங்கே இருந்து ஒரு சக்தி வாய்ந்த சிவலிங்கத்தை அனுப்ப என் கிட்டே சொல்லி இருந்தாங்க. கிட்டத்தட்ட நூறு சிவலிங்கத்தைப் பார்த்து அதில் ஒன்னை தேர்ந்தெடுத்தேன், கணபதி. அதை இங்கிருந்து அனுப்பறதுக்கும், அங்கே பிரதிஷ்டை செய்யறதுக்கும் நல்ல நாள் குறிக்க பல வேத பண்டிதர்கள் கிட்ட கருத்து கேட்டிருக்கோம். அவங்க அதை முடிவு*

*செய்யற வரைக்கும் அந்த சிவலிங்கத்திற்கு விசேஷ நித்ய பூஜைகள் செய்ய ஒரு ஆளையும் ஏற்பாடும் செய்து அவனும் தினம் நல்லபடியாய் பூஜை செய்துட்டு வந்தான். திடீர்னு இன்னைக்கு காலைல அவனோட அப்பா காலமாயிட்டார். அதனால அவனுக்கு பூஜை செய்ய முடியாமல் போயிடுச்சு. நித்ய பூஜை தடைப்படக் கூடாதில்லையா, அதனால வேற ஒரு ஆளை பூஜை செய்ய ஏற்பாடு செய்யச் சொன்னாங்க. அப்ப தான் எனக்கு உன் ஞாபகம் வந்துச்சு...”*

*கணபதி அப்பாவியாக அவர் சொன்னதைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். சக்தி வாய்ந்த சிவலிங்கம், விசேஷ நித்ய பூஜைகள் என்ற வார்த்தைகள் அவனைத் தயக்கம் கொள்ள வைத்தன. தினமும் ஐநூறு ரூபாய் என்பது அவனுடைய தற்போதைய நிலையில் பெரும் தொகையே என்றாலும் அவன் நேர்மையாகச் சொன்னான். “குருஜி. எனக்கு ஓரளவு மந்திரங்கள் தெரியுமே ஒழிய பெரிய அளவில் தெரியாதுங்களே. சக்தி வாய்ந்த சிவலிங்கம்னு வேற சொல்றீங்க, நான் பூஜை செய்தால் சரியாகுங்களா?”*

*குருஜி அமைதியாகச் சொன்னார். ”நான் படிக்காத புராணங்கள் இல்லை கணபதி. எல்லாத்துலயுமே மந்திரத்தை விட பக்திக்கு தான் அதிகமா முக்கியத்துவம் கொடுத்திருக்காங்க. பெரிய பெரிய ஹோமங்கள்ல எழுந்தருளாத கடவுள்கள் பக்தியை மெச்சி எழுந்தருளினதா சொல்ற கதைகள் தான் அதிகம். இப்ப அந்த சிவலிங்கம் இருக்கிறதே ஒரு பெரிய வேதபாடசாலை இருக்கிற இடத்தில் தான். வெறும் மந்திரங்கள் மட்டுமே அந்த சிவலிங்கத்துக்குப் போதுமானதா இருந்திருந்தா நான் அங்கே இருந்தே ஒருத்தரைத் தேர்ந்தெடுத்திருப்பேன். சொல்ற மந்திரங்களோட பக்தியும் சேரலைன்னா அதெல்லாம் வெறும் சத்தங்கள் தானே கணபதி? தெரிஞ்சது கொஞ்சமா இருந்தாலும்*

பக்தியோட சொல்லி சிரத்தையா செய்யக்கூடிய ஆள் வேணும்கிறதால தான் நான் உன்னைத் தேர்ந்தெடுத்தேன்....”

கணபதி இரண்டு கைகளையும் பயபக்தியுடன் கூப்பி தலையைத் தாழ்த்திக் கொண்டு சொன்னான். “தெரிஞ்சதைப் பக்தியோடு செய்வேன்கிறது மட்டும் உறுதி குருஜி. அது போதும்னு நீங்க நினைச்சா நான் செய்யறேன்”

குருஜி திருப்தியுடன் சொன்னார். “அது போதும் கணபதி. இன்னொரு விஷயம்...”

“என்ன குருஜி?”

மறுபடியும் தாழ்ந்த குரலில் ரகசியமாகவே குருஜி சொன்னார். ”அந்த சிலையைத் தேர்ந்தெடுத்ததும், அமெரிக்காவுக்கு அனுப்பப் போறதும் இன்னும் ரகசியமாகவே தான் வச்சிருக்கோம். அந்த சிவலிங்கம் இருக்கிற வேதபாட சாலையில் கூட நிறைய பேருக்கு அது தெரியாத மாதிரி ஒரு தனி ஒதுக்குப்புற இடத்தில் வச்சிருக்கோம். ஜனங்களுக்குத் தெரிஞ்சா அதைக் கும்பிட தனிக்கூட்டம் சேரும். இப்ப சிலைகளைக் கடத்தற ஆள்களும் அதிகமாயிட்டாங்கங்கறதால் அதை அமெரிக்காவில் கொண்டு போய் சேர்க்கிற வரைக்குமே ரகசியமாய் வச்சிருக்கச் சொல்லி உளவுத் துறை அதிகாரிகளும் எங்க கிட்டே சொல்லி இருக்காங்க. சமீபத்துல ஒரு பெரியவரைக் கொன்னுட்டு அவர் பூஜை செய்துகிட்டிருந்த சிவலிங்கத்தைக் கடத்திட்டாங்கன்னு பத்திரிக்கைல வந்ததே படிச்சியா கணபதி?”

”படிச்சேன் குருஜி”

“ஒரு சாதாரணமான சிவலிங்கத்தையே கடத்தறாங்கன்னு சொன்னா இதை எவ்வளவு பத்திரமாய் பாதுகாக்கணும் நீயே சொல்லு”

“உண்மை தான் குருஜி”

”அதனால உன் மூலமாவும் இது வெளியே யாருக்கும் தெரியக் கூடாது கணபதி. உன் வீட்டில கூட ஏதோ ஒரு கோயில்ல பூஜை செய்யப் போறதா சொல்லிடு. நீ பூஜை செய்யற இடத்துலயே தங்க வேண்டி இருக்கும். அதனால தினம் வீட்டுக்கு வந்து போக முடியாது. வீட்டுல வெளியூர் போறதாகவே சொல்லிடறது நல்லது. அந்த வேதபாட சாலையிலயே கூட அதிகமா அந்த சிவலிங்கத்தைப் பத்தி யார் கிட்டயும் பேசக்கூடாது. சரியா?”

”சரி குருஜி”

”நாளைக்கு அதிகாலை நாலு மணிக்கு வீட்டுல ரெடியாய் இரு. உன்னைக் கூட்டிகிட்டுப் போக காரை அனுப்பச் சொல்றேன்”

”சரி குருஜி”

”இதெல்லாம் நல்லபடியாய் முடிஞ்சுதுன்னா கூடுதலா உனக்கு ஒரு பெரிய தொகையும் தரச் சொல்றேன் கணபதி.”

கணபதியின் கண்களில் நீர் கோர்த்தது. ”இதுக்கெல்லாம் இந்த ஏழை உங்களுக்கு என்ன கைமாறு செய்ய முடியும்னு தெரியலை குருஜி” என்று தழுதழுத்த குரலில் சொன்னான்.

*குருஜி புன்னகையுடன் சொன்னார். "சந்தர்ப்பம் கிடைக்கிறப்ப நல்ல மனுஷங்களுக்கு ஏதாவது நல்லது செய்யணும்னு ஆசைப்படறவன் நான் கணபதி. அதை நிறைவேற்றிக் கொடுக்கிறது தெய்வ சித்தம் அவ்வளவு தான்"*

*கண்களைத் துடைத்துக் கொண்ட கணபதி அவர் கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிட்டான்.*

*அவன் போன பின்பு அவருடைய உதவியாளன் வந்து கேட்டான். "அடுத்தது யாரை உங்க கிட்ட அனுப்பறது?"*

*"அரை மணி நேரத்துக்கு யாரையும் அனுப்பாதே" என்ற குருஜி போனில் யாரிடமோ பேசினார். "நித்ய பூஜைக்கு ஆள் ஏற்பாடு செய்துட்டேன். அட்ரஸ் குறிச்சுக்கோ"*

*அவர் சொன்னதை எழுதிக் கொண்ட அந்த ஆள் தயக்கத்துடன் கேட்டான். "இந்த ஆள் சமாளிப்பானா?"*

*"நல்லாவே சமாளிப்பான். கவலைப்படாதே. நாளைக்கு காலைல நாலு மணிக்கு ஆள் ரெடியாய் இருப்பான். கூட்டிகிட்டு போக ஆள் அனுப்பு. அவன் கிட்ட யாரும் அதிகம் பேசாமல் இருக்கிறது நல்லது."*

*"சரி குருஜி. அந்த போலீஸ் ஆபிசர் பார்த்தசாரதி உங்களைப் பார்க்க வந்தாரா?"*

*"போன் செய்து பார்க்க வரட்டுமான்னு என் அஸிஸ்டெண்ட் கிட்ட கேட்டிருக்கார். நான் ரெண்டு நாள் கழிச்சு வந்து பார்க்க*

*சொல்லி இருக்கேன். உடனடியா பார்க்கறது தேவையில்லைன்னு நினைக்கிறேன்...”*

*“இன்னொரு விஷயம்....”*

*“என்ன?”*

*“பரமேஸ்வரனோட பேரன் ஒருத்தன் அமெரிக்கால பாராசைக்காலஜில ஆராய்ச்சி செய்துகிட்டிருக்கான். அவன் இந்தியாவுக்கு வர்றானாம்”*

*”அதனால என்ன?”*

*”இறந்து போன பசுபதி அந்த சிவலிங்கத்தை அவன் கிட்ட ஒப்படைக்க பரமேஸ்வரன் கிட்ட முதல்லயே சொல்லி இருக்கார். அதுக்கு ஏதாவது ஆனாலும் அவன் கிட்ட சொல்லச் சொல்லி இருக்கார். பரமேஸ்வரன் தன்னோட மகன் அவரோட விருப்பத்திற்கு எதிரா கல்யாணம் செய்துகிட்டதால் இத்தனை நாள் தொடர்பே அவன் குடும்பத்தோட வச்சிருக்கலை. அண்ணா சொன்னதால இப்ப அவன் கிட்ட சொல்லி இருக்கார் போல இருக்கு. அவனும் வர்றான்”*

*மரணத்திற்கு முன்பே பசுபதி அவர் மரணம் பற்றியும், சிவலிங்கத்திற்கு ஏதாவது ஆனால் என்பது பற்றியும் சொல்லி இருந்தது குருஜியை யோசிக்க வைத்தது. மரணத்திலும் விலகாத பத்மாசனத்துடனும், இந்தத் தகவலும் சேர்ந்து யோசிக்கும் போது ஏதோ ஒரு நெருடல் ஆரம்பித்தது. ஆனாலும் அதை அவர் தெரிவிக்கவில்லை. அமைதியாகச் சொன்னார். “அவன் வர்றதால என்ன பிரச்சினை?”*

*"உங்களுக்கு அவனைப் பத்தி தெரியுமா?"*

*"அதான் சொன்னாயே பாராசைக்காலஜி ஆராய்ச்சியாளன்னு..."*

*"அவன் ஒரு சாதாரண ஆராய்ச்சியாளனில்லை. உலக அளவில் அவனுக்கு நல்ல பெயர் இருக்கு. அவன் சப்ஜெக்டுல அவன் அறிவு அசாதாரணமானதுன்னு எல்லாரும் சொல்றாங்க. அப்படி இருக்கறப்ப அந்தப் பெரியவரும் சாகறதுக்கு முன்னால் அவன் கிட்ட சொல்லச் சொல்லி இருக்கறது எனக்கென்னவோ சரியா தோணலை. எதுக்கும் அவனைப் பத்தி இண்டர்நெட்டுல கொஞ்சம் பாருங்க குருஜி. உங்களுக்குப் புரியும்..."*

*"அவன் பேர் என்ன?"*

*"ஈஸ்வர். விர்ஜினியா யூனிவர்சிட்டியில் இருக்கிறான்"*

*"சரி, நான் பார்க்கிறேன்....."*

*அதன் பிறகு மூன்று பேரை மட்டும் வரச்சொல்லி அரை மணி நேரத்தில் அனுப்பி விட்டு தியானத்தில் ஆழ்ந்து விட்டதாக மற்றவர்களிடம் தெரிவிக்க உதவியாளனிடம் சொல்லி விட்டு இணையத்தில் ஈஸ்வர் பற்றி ஆராய ஆரம்பித்தார். அவன் மிகப் பிரபலம் என்பது ஆரம்பத்திலேயே தெரிந்தது. தொடர்ந்து சேகரித்த விபரங்களையும் அவன் எழுதிய சில கட்டுரைகளையும் படித்த போது, போனில் பேசியவன் சொன்னது போல ஈஸ்வர் அசாதாரண அறிவுடையவன் போலத் தான் தெரிந்தது. அவன் புகைப்படங்களை ஆராய்ந்தார். அவன் அழகாகவும், கம்பீரமாகவும் தெரிந்தான்.*

*எதையும் சந்திப்பேன், எப்படியும் சாதிப்பேன் என்பது போல அவன் பார்வை இருந்தது.....*

*இரவு நீண்ட நேரமாகியும் அவன் பற்றிய ஆராய்ச்சிகளையே அவர். தொடர்ந்தார். பதினொரு மணிக்கு இரவின் அமைதியைக் குலைத்துக் கொண்டு செல்போன் அலறியது. இந்த அசாதாரண நேரத்தில் யார் என்று பார்த்தவர் உடனே பேசினார். "என்ன ஆச்சு?"*

*பேசியவன் ஓடி வந்து பேசியது போல மூச்சு வாங்கியது போல் தெரிந்தது. "சிவலிங்கம்.... சிவலிங்கம்....."*

*"சிவலிங்கத்துக்கு என்ன ஆச்சு?"*

*"பூஜை.. பூஜை...."*

*"அதுக்குத் தானே ஆளை ஏற்பாடு செய்திருக்கேன். நாளைக்கு காலைல இருந்து பூஜையை ஆரம்பிச்சுடலாம். இடையில இந்த இரண்டு நாள் தடைப்பட்டது பெரிசா கவலைப்பட வேண்டிய விஷயம் இல்லை..."*

*".... இல்லை.... பூஜை யாரோ செய்திருக்காங்க..."*

*"என்ன உளறுகிறாய்? யார் பூஜை செய்தாங்க?"*

*".... தெரியலை.... குருஜி"*

*குருஜி திகைத்தார். ஆனால் ஒரே நிமிஷத்தில் சுதாரித்துக் கொண்டவர் அமைதியாகச் சொன்னார். "முதல்ல அமைதியாய்*

இரு....மூணு தடவை நல்லா மூச்சை இழுத்து விடு...செய்தாச்சா.... உம்... இப்ப அமைதியா நடந்ததைச் சொல்லு....”

அவன் சிறிது அமைதியடைந்தது போலத் தெரிந்தாலும் ஒரு இனம் புரியாத பயம் அவன் குரலில் தெரிந்தது. “...சிவலிங்கம் இருந்த கட்டிடம் பக்கம் போனப்ப அதோட பூட்டு திறந்திருந்துச்சு.. என்னடா நாம தானே பூட்டினோம் எப்படி திறந்திருக்குன்னு நினைச்ச நான் உள்ளே போய் பார்த்தேன்.... போனா சிவலிங்கத்துக்கு மேல் ஃப்ரஷ்ஷான வில்வ இலைகளும், நிறைய பூக்களும் இருக்கு.. யாரோ பூஜை செய்துட்டு போனது மாதிரி இருக்கு....”

”அப்படின்னா நம்ம பசங்கள்ல யாராவது செய்திருக்காங்களோ என்னவோ?”

”நம்ம பசங்க தொடை நடுங்கிகளா நடந்துகிட்டதால தானே வேற ஆளை வெளியே தேடினோம். அவங்க எப்படி போய் செய்வாங்க.... ஆனாலும் விசாரிச்சு பார்த்துட்டேன்.... அவங்க யாரும் செய்யலையாம்....”

”அப்படின்னா வேதபாடசாலைல இருக்கிற யாராவது செய்திருக்கலாம்...”

”நம்ம பசங்களைத் தவிர மத்தவங்க கிட்ட இதைப் பத்தி நான் மூச்சு கூட விடலை. அப்படி ஒரு சிவலிங்கம் அங்கே இருக்கிறது வேற யாருக்குமே தெரியாது.... நான் அந்தக் கட்டிடத்தை பூட்டி வேற வச்சிருந்தேன்.... அதைத் திறந்தது யார், பூஜை செஞ்சது யாருன்னு தெரியலை....”

*"நீ பூட்டினது நிஜம் தானா? நல்லா யோசிச்சு சொல்லு"*

*"நிஜம். அதை மூணு தடவை இழுத்து வேற பார்த்தேன்...."*

*"சாவியை எங்கே வச்சிருந்தாய்?"*

*"என் கிட்ட தான் வச்சிருந்தேன்...."*

*"பூட்டை யாராவது உடைச்ச மாதிரி இருக்கா?"*

*"இல்லை. தாளை எடுத்து விட்டுப் பூட்டியது மாதிரி தொங்கிகிட்டு இருக்கு குருஜி"*

*"அப்படின்னா நீ தாள் போடாமலேயே பூட்டியிருப்பாய்" குருஜி உறுதியாய் சொன்னார்.*

*பூட்டியதாய் முன்பு உறுதியாகச் சொன்னவன் இப்போது யோசிக்க ஆரம்பித்தான். இருக்கலாமோ. தாளைப் போடாமலேயே பூட்டி விட்டு இழுத்துப் பார்த்திருப்போமோ?*

*குருஜி சொன்னார். "...வேதபாடசாலைல படிக்கிற பையன் யாராவது அங்கே உள்ளே போயிருப்பான். வாடின பூக்கள் எல்லாம் இருக்கிறதை பார்த்துட்டு எடுத்துட்டு புதுசாய் பூக்கள், வில்வ இலை எல்லாம் வச்சுட்டு போயிருப்பான்.."*

*"அந்த அளவு நெருங்கி பூஜை செய்துட்டு ஒண்ணும் ஆகாம ஒருத்தன் இருந்திருக்க வாய்ப்பு இருக்குன்னா நினைக்கிறீங்க"*

குருஜி சொன்னார். “செய்யற ஆள் கள்ளங்கபடமில்லாமல் இருந்தா அவனுக்கு எந்தப் பாதிப்பும் வராது. அதனால தான் நான் கணபதியைத் தேர்ந்து எடுத்தேன்...”

”என்னவோ எனக்கு தலை சுத்துது.... ஒரு நிமிஷம் இருங்க. நீங்க சொன்ன மாதிரியே இருந்திருக்கும்னே வச்சுக்குவோம். அந்த சிவலிங்கம் மேல இருந்த பூக்கள்ல சில பூக்களை நான் இது வரைக்கும் என் வாழ்க்கைலயே பார்த்தது இல்லை. அதெல்லாம் கண்டிப்பா இந்த ஏரியால கிடைக்கிற பூக்களே இல்லைங்கறது மட்டும் உறுதியா சொல்வேன்.. இங்கே யாராவது செய்திருந்தா அந்தப் பூக்களை எங்கே இருந்து கொண்டாந்திருப்பாங்கன்னு சொல்றீங்க?”

குருஜி யோசிக்க ஆரம்பித்தார். அந்தக் கேள்விக்கு அவரிடத்திலும் விடையில்லை.....

# அத்தியாயம் - 13

குருஜிக்கு பதில் சொல்ல முடியாத கேள்விகளை ரசிக்க முடிந்ததில்லை. யோசித்ததில் இடையே புகுந்து யாரோ விளையாடுகிறார்கள் என்பது மட்டும் அவருக்குப் புரிந்தது. இதெல்லாம் கடவுளின் லீலை என்றெல்லாம் நம்பும் நிலையை அவர் என்றோ கடந்து விட்டிருந்தார். அவர் கடுமையான குரலில் அவனிடம் சொன்னார். “முதல்ல பயந்து சாகறத நிறுத்து. இது சாமியோட வேலை இல்லை. ஆசாமியோட வேலை. அது எந்த ஆசாமின்னு தான் தெரிஞ்சுக்கணும்.....”

அவர் வார்த்தைகளால் அவன் சிறிது தைரியமடைந்த அவன் கேட்டான். “அதை எப்படித் தெரிஞ்சுக்கிறது?”

*சிறிது யோசித்து விட்டு குருஜி சொன்னார். ”அந்த சிவலிங்கம் இருக்கிற ரூம்ல என்ன நடக்கறதுன்னு கண்காணிக்க ரகசிய கேமிரா வைக்கறது நல்லது. காலைல கணபதி வர்றதுக்குள்ளே உன்னால செய்ய முடியுமா?”*

காமிரா வைக்கும் ஏற்பாட்டைக் கேட்டவுடன் “இது நல்ல ஐடியாவா தோணுது.. நாம இல்லாத நேரத்துல அங்கே என்ன நடக்குதுன்னு தெரிஞ்சுக்க வசதியாயிருக்கும்...” என்று பரபரப்போடு ஆரம்பித்தவன் பிறகு தயக்கத்தோடு சொன்னான். ”ஆனா ராத்திரி பதினோரு மணிக்கு மேல ஆயிடுச்சே?”

*“அப்படின்னா நாளைக்கு காலைல கணபதி பூஜைய முடிச்சவுடனே அந்த வேதபாடசாலைய சுத்திப் பார்க்க அழைச்சுகிட்டு போக ஏற்பாடு செய். அப்படி அவன் போனவுடனே ரகசிய வீடியோ காமிராவை வைக்க ஏற்பாடு செய். அந்த வேலை முடிஞ்சதுக்கப்புறம் அந்தக் கணபதி திரும்ப அங்கே வந்தா போதும்... ”*

அந்த ஆள் கணபதி போயிட்டு வந்த பிறகு வீடியோ காமிரா புதுசா வச்சிருக்கறதைக் கண்டுபிடிச்சுட மாட்டானா?”

*”அந்த அளவுக்கு எல்லாம் கவனிக்கற ரகம் அல்ல அவன். அதுவும் நாம அந்தக் காமிராவை மறைவாய் தானே வைக்கப் போகிறோம். அதனால அவன் கவனத்துக்கு அது வரவே வராது”*

“சரி....”

*”நாளைக்கு காலைல கணபதியைக் கூட்டிகிட்டு வர ஆளனுப்பு. காலைல கணபதியை பூஜை செய்ய வை. எதுக்கும் சிவலிங்கம் மேல இருக்கிற, நீ இது வரைக்கும் இந்த ஏரியாவுல பார்த்தே இருக்காத அந்தப் பூக்களை, எடுத்து தனியாக வச்சு எனக்கு அனுப்பு. நான் என்னன்னு பார்க்கறேன்”.*

*”சரி குருஜி... அந்த ஆள் கணபதி கிட்ட நீங்க இந்த சிவலிங்கத்தைப் பத்தி என்னன்னு சொல்லி இருக்கீங்க.”*

*“அமெரிக்காவில் ஒரு கோயிலுக்குப் போக இருக்கிற சிவலிங்கம். வெளியே தெரிஞ்சா கூட்டம் கூடும், சிலை கடத்தவும் படலாம்கிறதால ரகசியமா வச்சிருக்கோம். இது வரைக்கும் பூஜை செய்துகிட்டிருந்தவனோட அப்பா காலமாயிட்டதால இவன் கிட்ட சொல்லியிருக்கேன். நம்ம ஆள்கள் எல்லார் கிட்டயும் அப்படியே சொல்லச் சொல்லு. புரிஞ்சுதா?”*

*“ம்....”*

*”எந்த காரணத்தை வச்சும் அந்த சிவலிங்கம் பயப்பட வேண்டிய ஒன்றுங்கற மாதிரி ஒரு அபிப்பிராயத்தை நீங்க யாரும் கணபதி கிட்ட ஏற்படுத்திடாதீங்க”*

*“நாங்களா ஏற்படுத்த மாட்டோம்.....” என்று அவன் ஒரு மாதிரி இழுத்த போது குருஜி எரிச்சலோடு சொன்னார். “அவனாவும் பயப்பட மாட்டான். கவலைப்படாதே.....”*

*”சரி குருஜி.”*

*“கூடுமான வரை நீங்க ரெண்டு பேரும் கணபதி கண்ணுல படாமல் இருக்கிறது நல்லதுன்னு நினைக்கிறேன். அதனால அவனைக் கூட்டிகிட்டு வரவும், வந்த பிறகும் அவன் கிட்ட பேசவும், கண்காணிக்கவும் வேற ஆள்களையே ஏற்பாடு செய். முடிஞ்ச வரைக்கும் யாரும் அவன் கிட்ட அதிகம் பேசாமல் இருங்கள். அது நல்லது”*

**************

*மறுநாள் காலை நான்கு மணிக்கு கணபதி வீட்டு முன் கார் நின்ற போது அவன் தயாராய் காத்திருந்தான். தாயிடமும் சகோதரிகளிடமும் விடை பெற்று விட்டு காரில் கணபதி ஏறிய போது காரில் இரண்டு இளைஞர்கள் அமர்ந்திருந்தார்கள். அவர்கள் இருவரும் மேலதிகாரியின் கண்காணிப்பில் உள்ள இராணுவ வீரர்கள் போல நேராக பார்த்துக் கொண்டிருந்தார்களே ஒழிய அவனை ஏறெடுத்துப் பார்க்கவும் இல்லை. பின் சீட்டில் அவன் ஏறி அமர்ந்தவுடன் கார் புறப்பட்டது.*

*அவர்களாக ஏதாவது பேசுவார்கள் என்று எதிர்பார்த்த கணபதி ஏமாந்து போனான். கார் சிறிது நேரம் சென்றவுடன் அவன் காரை நிறுத்தச் சொன்னான். “ஒரே நிமிஷம் நான் போய் அவர் கிட்ட சொல்லிட்டு வந்துடறேன்”*

*காரை ஓட்டி வந்தவன் காரை நிறுத்தி வேறு வழியில்லாமல் அவனைப் பார்த்தான். ”யார் கிட்ட?”.*

*எதிரில் இருந்த சிறிய பிள்ளையார் கோயிலைக் காண்பித்து கணபதி புன்னகையுடன் சொன்னான். “இவர் கிட்ட தான்”*

சுத்த கிறுக்கனாக இவன் இருக்க வேண்டும் என்று நினைத்தவனாக அவன் "சீக்கிரம் வாங்க" என்றான். கணபதி தலையசைத்து விட்டு இறங்கினான்.

கணபதி நேற்றே பிள்ளையாரிடம் எல்லாம் சொல்லி விடை பெற்றிருந்தான் என்றாலும் இன்றும் அதே வழியில் போகும் போது இறங்கி மறுபடி சொல்லாமல் போவதற்கு அவன் மனம் கேட்கவில்லை. அவனுக்கு பிள்ளையாரிடம் திரும்பத் திரும்ப சொல்ல நிறைய இருந்தது. மனதிற்குள் சொன்னான்.

"மறுபடியும் சொல்லறேன், என்னைத் தப்பா நினைச்சுக்காதே. எவனோ ஐநூறு ரூபாய் தினம் தர்றான்னு சொன்னவுடனேயே உன்னை விட்டுட்டு அங்கே போறேன்னு நினைக்காதே. என் நிலைமை உனக்குத் தெரியும்....தலைக்கு மேல கடன் இருக்கு... ஆக வேண்டிய வேலையோ எத்தனையோ இருக்கு. ஏதோ நீ காட்டின வழின்னு தான் போறேன். சுப்புணி கிட்ட உனக்கு ஒழுங்கா பூஜை செய்யச் சொல்லி இருக்கேன். எழுபது ரூபாயையும் வாங்கிட்டு ஏனோ தானோன்னு பூஜை செய்தா ஏழேழு ஜென்மத்துக்கும் நரகம் தான் வாய்க்கும்னு சொல்லி பயமுறுத்தி இருக்கேன். ஆனா அவன் பயப்பட்ட மாதிரி தெரியலை... கேலியா சிரிக்கிறான்... என்ன தான் சிரிச்சாலும் ஓரளவு ஒழுங்கா செய்வான். வேற வழியில்லை... கொஞ்சம் அட்ஜஸ்ட் செய்துக்கோ... அங்கே போனாலும் உன்னோட நினைப்பு இருக்கும்... வரட்டுமா?"

அவன் மௌனமாக அந்தக் கோயில் முன் கைகளைத் தலைக்கு மேல் கூப்பிக் கொண்டு நின்றதைக் கண்ட காரில் இருந்தவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து நமட்டு சிரிப்பு சிரித்துக் கொண்டார்கள். காரை ஓட்டி வந்தவன் பக்கத்தில் இருந்தவனிடம் கேட்டான். "இவன் தேறுவான்கிறே...?"

*”பார்த்தா அப்படித் தெரியலை... ஆனா குருஜி இவன் நல்லாவே சமாளிப்பான்னு உறுதியா சொல்றாராம்....ரெண்டு நாள்ல தெரிஞ்சுடும்”*

*கணபதி திரும்பவும் காரில் ஏறிய போது அவர்கள் இரண்டு பேரும் பழையது போலவே இறுக்கமான முகத்துடன் நேராகத் தெருவையே பார்த்தபடி இருந்தார்கள். கணபதி மூன்று மணிக்கே எழுந்திருந்ததாலும், அவர்கள் அமைதி காத்ததாலும் சீக்கிரமே கண்ணயர்ந்தான். அவன் தர்மசங்கடமான கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருக்காமல் காரிலேயே தூங்கிப் போனது அவர்களுக்கு நிம்மதியாக இருந்தது. கார் விரைந்தது....*

**************

*பார்த்தசாரதி தன் கையிலிருந்த நைந்து போன விசிட்டிங் கார்டை ஆராய்ந்து கொண்டிருந்தார். அந்த வீட்டைச் சுற்றி இருந்த தோட்டத்தில் ஏதாவது தடயம் கிடைக்குமா என்று சல்லடையிட்டுத் தேடிய போது கிடைத்த விசிட்டிங் கார்டு அது. துரதிர்ஷ்டவசமாக விசிட்டிங் கார்டின் முன் பக்கம் ஈரமண்ணில் இருந்ததன் விளைவு எழுத்துக்கள் எல்லாம் அழிந்து போய் அது யாருடைய கார்டு என்பது தெரியவில்லை. அதன் பின் புறம் கையால் எழுதப்பட்டிருந்த எழுத்துக்களும் கூட ஈரத்தால் பெருமளவு மங்கி அழிந்திருந்தாலும் தொழில் நுட்பக் கருவிகளால் போலீஸ் இலாகா அதில் எழுதப்பட்டிருந்த எழுத்துக்களைக் கச்சிதமாகக் கண்டுபிடித்திருந்தனர்.*

*“ஐயா, தங்களிடம் முக்கியமான விஷயம் ஒன்றைப் பேச விரும்புகிறேன். தயவு செய்து சந்திக்க அனுமதி தரவும்”*

யார் எழுதியது, எப்போது எழுதியது, எதற்காக எழுதியது, அந்த சந்திப்பு எப்போது என்று எதுவும் தெரியவில்லை. மறுபடியும் முனுசாமியை விசாரணைக்கு அழைத்து விட்டு அவன் வருவதற்காகக் காத்திருந்த பார்த்தசாரதிக்கு இந்தப் புதிய தடயம் பற்றி முனுசாமி என்ன சொல்கிறான் என்றறிய ஆர்வம் இருந்தது. அவர் இன்னும் பரமேஸ்வரனையும், ஆனந்தவல்லியையும் விசாரிக்கவில்லை. அவர்களிடம் கேட்க நிறைய இருந்தது. நாளை செல்லலாம் என்றிருக்கிறார்...

முனுசாமி பெரும் சலிப்புடன் அவர் முன் வந்து நின்றான். அவனைத் தன் கூர்மையான பார்வையால் சிறிது நேரம் பயமுறுத்திய பார்த்தசாரதி அவன் சங்கடத்துடன் நெளியவே எதிரில் உட்காரச் சொன்னார். உட்காரவில்லை என்றால் மூலமா என்று கேட்பார் என்று அவன் அறிந்திருந்ததால் அவன் உடனடியாக உட்கார்ந்தான்.

"முனுசாமி. ஒரு விஷயத்தை உன் கிட்டே நான் வெளிப்படையாய் சொல்றேன். எங்க போலீஸ் இலாகாவே இந்தக் கொலையில உனக்கும் பங்கிருக்கும் என்று சந்தேகப்பட்டப்ப, இருக்காது என்று உன் பக்கம் நின்றவன் நான். என்னையே நீ ஏமாத்தினது புத்திசாலித்தனம் அல்ல"

முனுசாமிக்குத் தூக்கி வாரிப்போட்டது. ஒரு அநியாயமான சந்தேகத்தையும், அதற்கும் மேலான அவதூறையும் அவர் சொன்னதை அவனால் ஜீரணிக்க முடியவில்லை. கொலையில் எனக்கு பங்கா? நான் இவரை ஏமாற்றினேனா?

"ஐயா இந்த ஏழைக்கு எப்பவாவது குடிக்கிற பழக்கம் இருக்குங்கறதைத் தவிர வேறெந்த கெட்ட பழக்கமும் கிடையாது. கொஞ்சமானாலும் தவறாமல், நிரந்தரமாய் கிடைச்சுகிட்டிருக்கிற வருமானத்துல என் வாழ்க்கையை ஓட்டிகிட்டிருக்கிறேன். நீங்க

*சொல்றது என் தலையில இடி விழற மாதிரி இருக்கு. பசுபதி ஐயாவை நான் கொல்லவும் இல்லை... உங்களை ஏமாத்தவும் இல்லை... தயவு செய்து இந்த மாதிரி எல்லாம் சொல்லாதீங்க....”*

*படபடவென்று சொன்ன போது அவனுக்கு அழுகையே வந்து விடும் போல இருந்தது.*

*“வெளியாள் யாராவது பசுபதியைப் பார்க்க வந்ததுண்டா, உனக்குத் தெரியுமான்னு நாங்க உன்னைப் பல தடவை கேட்டோம். இல்லவே இல்லைன்னு நீ சத்தியம் செய்யாத குறையாக சொன்னாய். உண்டா இல்லையா?”*

*“ஆமா சார்”*

*”அப்படின்னா இது என்ன?” என்று அந்த நைந்து போன விசிட்டிங் கார்டை அவனிடம் அவர் நீட்டினார்.*

*அவன் வாங்கிப் பார்த்தான். முன்பக்கம் எதுவுமே தெரியவில்லை. பின்பக்கம் ஏதோ எழுதி அரைகுறையாய் அழித்த மாதிரி இருந்தது. கூர்மையாகப் பார்த்தான். எதுவும் அவனுக்குப் புரியவில்லை.*

*அவர் கேட்ட கேள்விக்கு அவன் பதில் சொன்னான். “ஏதோ விசிட்டிங் கார்டு மாதிரி தெரியுது. ஆனா மண்ணுல அமுங்கி இருந்ததால எழுத்துகள் எல்லாம் முக்கால் வாசி அழிஞ்சு போயிருக்குங்களே”*

*”முன்பக்கம் முழுசா செல்லரிச்சுப் போயிருந்தாலும் பின்பக்கத்துல எழுதுனது என்னன்னு எங்க டிபார்ட்மெண்ட்*

*கண்டுபிடிச்சிருக்கு. இதுல என்ன எழுதியிருக்கு தெரியுமா? "ஐயா, தங்களிடம் முக்கியமான விஷயம் ஒன்றைப் பேச விரும்புகிறேன். தயவு செய்து சந்திக்க அனுமதி தரவும்". விசிட்டிங் கார்டுல எழுதி அனுப்பணும்னா உன் கிட்ட தான் அந்த ஆள் எழுதி அனுப்பி இருக்கணும்... வேற யார் மூலமாவும் பசுபதி கிட்ட இதை அனுப்பி இருக்க முடியாது. ஆனா நீயோ அவர் வெளியாள் யாரையும் சந்திச்சதில்லைன்னு சொல்லி இருக்கிறாய்...."*

*அவர் சொல்லி விட்டு அவனையே கூர்ந்து பார்த்தார்.*

*முனுசாமிக்கு ஏதோ பொறி தட்டியது போல பார்த்தசாரதிக்குத் தோன்றியது. அவன் சற்று நிம்மதி அடைந்தவனாகச் சொன்னான். "ஏழெட்டு மாசத்துக்கு முன்னால ஒரு தடவை இந்த விசிட்டிங் கார்டைக் குடுத்து பசுபதி ஐயாவைப் பார்க்கணும்னு சொல்லி ரெண்டு பேர் வந்தது உண்மை... ஆனால் அவங்க பசுபதி ஐயாவை சந்திக்கலைங்களே ஐயா"*

*"ஏன்?"*

*"தெரியலை.. பசுபதி ஐயா கிட்ட நான் இந்த விசிட்டிங் கார்டைக் கொடுத்து உங்களைப் பார்க்கணும்னு யாரோ வந்திருக்காங்கன்னு சொன்னேன். அவர் இந்தக் கார்டை வாங்கிக் கூட பார்க்கலை. கண்ணை மூடி கொஞ்சம் யோசிச்சவர் நான் பார்க்க விரும்பலைன்னு சொல்லிடுன்னார். அப்படியே போய் சொன்னேன். அவங்க போயிட்டாங்க"*

*"அவங்க ரெண்டு பேரும் பார்க்க எப்படி இருந்தாங்க?"*

*"நான் பார்க்கலைங்களே ஐயா"*

*பார்த்தசாரதி அவனை முறைத்தார்.*

*முனுசாமி அவரிடம் விவரமாகச் சொன்னான். "ஐயா அவங்க வந்தது ஒரு கால் டாக்சில. அவங்க கார்ல இருந்து இறங்கவே இல்லை. டிரைவர் தான் அந்த விசிட்டிங் கார்டைக் கொடுத்து பசுபதி ஐயாவைப் பார்க்க ரெண்டு பேர் வந்திருக்காங்கன்னு சொன்னான். நான் அதைக் கொண்டு போயிட்டு திரும்பி வந்து அவர் சொன்னதை அவன் கிட்ட தான் சொன்னேன். அவன் போய் அவங்க கிட்ட சொன்னான். பிறகு அவங்க போயிட்டாங்க. நான் அந்த ரெண்டு பேரையும் பார்க்கல....ஏ.சி கார்ல ஜன்னல் கண்ணாடிய முழுசுமா ஏத்தி மறைச்சிருந்ததால பார்க்க முடியல. ஆனா அவன் டாக்சிய ரிவர்ஸ்ல எடுக்கறப்ப முன்னாடி கண்ணாடி வழியா பின்னாடி இருந்தவங்கள ஏதோ கொஞ்சம் பார்க்க முடிஞ்சதுல ரெண்டு பேர்ல ஒருத்தன் வெள்ளைக்காரன்னு தெரிஞ்சுது. மத்தபடி ரெண்டு பேர் பத்தியும் வேற எதுவும் எனக்குத் தெரியாதுங்கய்யா.. நான் அதுக்கு முன்னாடி அவங்களை பார்த்தது கூட இல்லை..."*

*"அவங்க பார்க்க வந்ததை ஏன் எங்க கிட்ட நீ முதல்லயே சொல்லலை?"*

*"அவங்க அவரைப் பார்த்து பேசலையே ஐயா. அவர் கிட்ட யாராவது வந்து பேசினாங்களான்னு கேட்டீங்க. பேசலைங்கறதால தான் அதைச் சொல்லணும்னு தோணல"*

*அவனை சந்தேகம் நீங்காதவராய் பார்த்த பார்த்தசாரதி கேட்டார். "அந்த விசிட்டிங் கார்டுல இருந்த பெயர், விலாசம் ஏதாவது நினைவிருக்கா?"*

*”அது இங்கிலீஷ்ல இருந்ததால எனக்கு எதுவும் புரியலைங்கய்யா”*

*“அவங்க திரும்பி எப்பவாவது அவரைப் பார்க்க வந்தாங்களா”*

*“இல்லைங்களே ஐயா”*

*”பசுபதி ஏன் அவங்களைப் பார்க்கலைன்னு சொன்னாரா?”*

*“இல்லை. நானும் கேட்கல”*

*“அவங்க ஏன் அவரைப் பார்க்க வந்தாங்கன்னு நினைக்கிறாய்?”*

*“தெரியல ஐயா” அவன் பரிதாபமாகச் சொன்னான்.*

*அவன் உண்மை சொல்கிறான் என்று அவர் நம்பினாலும் சந்தேகப் பார்வையையே முகத்தில் காட்டிய அவர் அவனிடம் கேட்டார். ”அந்த வெள்ளைக்காரன் எப்படி இருந்தான். என்ன வயசிருக்கும்னு ஏதாவது சொல்ல முடியுமா?”*

*“உயரமா இருந்தான்ய்யா. சின்ன வயசில்ல ..கொஞ்சம் வயசானவனா தான் தெரிஞ்சுது. அதுக்கு அதிகமா பார்க்க முடியல”*

*”கூட இருந்தவன்?”*

*“அந்த ஆளை சுத்தமாவே பார்க்க முடியல ஐயா. அந்த ஆள் தலைய குனிஞ்சுகிட்டு இருந்தான்....”*

இந்தக் கொலை மற்றும் கடத்தலுக்கு சம்பந்தப்பட்டவர்களாக அவர்கள் இருவரும் இருக்கக்கூடுமோ என்ற சந்தேகம் பார்த்தசாரதிக்கு வந்தது. அவர்கள் யார், எதற்காக பசுபதியை சந்திக்க வந்தார்கள், விசிட்டிங் கார்டை வாங்கிக் கூடப் பார்க்காமல் பசுபதி அவர்களை ஏன் சந்திக்க மறுத்தார் என்ற கேள்விகள் எழ அதற்கான பதில்கள் என்னவாக இருக்கக் கூடும் என்று பார்த்தசாரதி யோசிக்க ஆரம்பித்தார். வெள்ளைக்காரன் இதில் சம்பந்தப்பட்டிருந்தால் அது சிலையை வெளிநாட்டுக்குக் கடத்துவதற்காக இருக்கலாம். அப்படி வெளிநாட்டுக்குக் கடத்திச் செல்ல அது சிறப்ப வேலைப்பாடுகள் அமைந்த சிலை ஒன்றுமல்ல என்பதால் வேறு எதாவது காரணம் அதற்கு இருக்க வேண்டும்... அந்த சிவலிங்கத்தைப் பற்றி சரியாகத் தெரிந்து கொண்டால் ஒழிய இந்த விசாரணையில் மற்றவைகளையும் கண்டு பிடிப்பது கஷ்டம் தான் என்று அவருக்குத் தோன்றியது.........

# அத்தியாயம் - 14

அந்த வேத பாடசாலை பதினெட்டு ஏக்கரில் அமைந்திருந்த்து. அதனுள்ளே ஒதுக்குப்புறமாக இருந்த ஒரு தனிக்கட்டிடத்தின் முன்பாகக் கார் கடைசியாக நின்ற போது தான் கணபதி கண்விழித்தான். கண்களைக் கசக்கிக் கொண்டு காரில் இருந்து கீழே இறங்கிய அவன் சுற்றும் முற்றும் பார்த்தான். வெகு தொலைவில் வகுப்பறைகளும், தங்கும் அறைகளும் இருந்தன. மற்ற இடங்களில் எல்லாம் பச்சைப் பசேலென்ற மரம், செடி கொடிகள், புல்வெளிகள் என்று அழகான இயற்கைக் காட்சிகள் தெரிய கணபதி ஒரு கணம் மெய் மறந்து நின்று அந்த அழகை ரசித்தான்.

”உள்ளே வாங்க” என்று பொறுமையிழந்த குரல் கேட்டது. கணபதி திரும்பினான். காரை ஓட்டி வந்தவன் கட்டிட முன்

வாசற்கதவைத் திறந்து வைத்துக் கொண்டு அவனுக்காகக் காத்திருந்தான். இன்னொருவன் முன்பே உள்ளே போயிருந்தான். கணபதி தன் துணிப்பையை எடுத்துக் கொண்டு அவசரமாக உள்ளே நுழைந்தான்.

உள்ளே ஒரு பெரிய ஹாலும் அதனைத் தாண்டி ஒரு பூஜை அறையும் இருந்தது. பக்கவாட்டில் ஒரு படுக்கை அறையும், குளியலறையும் இருந்தன. பூஜை அறையில் வைக்கப்பட்டிருந்த சிவலிங்கத்தைத் தொலைவில் இருந்தே இருவரும் கை காட்டினார்கள். அபூர்வமான பூக்களால் அலங்கரிக்கப் பட்டிருந்த சிவலிங்கத்தை ஆர்வத்துடன் கணபதி பார்த்தான். அந்த சிவலிங்கம் குருஜி சொன்னது போல சக்தி வாய்ந்தது போலத்தான் அவனுக்கும் தோன்றியது. ஏதோ ஒரு சிலிர்ப்பை அவன் உணர்ந்தான்.

அந்த சிலிர்ப்பை அவர்கள் இருவரும் சற்று பீதியோடு பார்த்தார்கள். ஆனால் அவன் முகத்தில் எந்த வித பய உணர்ச்சி தென்படாதது அவர்களுக்கு ஆசுவாசத்தை அளித்தது.

சுற்றும் முற்றும் பார்த்த கணபதி அருகில் இருந்தகுளியலறையைக் கவனித்து சென்று கை கால் கழுவிக் கொண்டு வந்தான்.

காரோட்டி அங்கு ஒரு மூலையில் வைக்கப்பட்டிருந்த ஒரு கூடைப் பூக்களை எடுத்து கணபதியிடம் தந்து விட்டு சொன்னான். "பூஜைக்கு வேண்டிய மத்த சாமான் எல்லாம் உள்ளேயே இருக்கு. நீங்க போய் பூஜையை முடிச்சீங்கன்னா இந்த வேத பாடசாலையை உங்களுக்கு சுற்றிக் காட்ட குருஜி சொல்லி இருக்கார்...."

குருஜிக்குத் தன் மீது இருந்த அன்பை நினைத்து ஒரு கணம் கணபதி நெகிழ்ந்தான். பூக்கூடையை வாங்கிக் கொண்டு பூஜை அறையை நோக்கி நடந்த கணபதியை அந்த சிவலிங்கம் காந்தமாக இழுப்பது போலத் தோன்றியது. மிகுந்த பக்தியுடன் அவன் அந்த சிவலிங்கத்தைப் பார்த்த அவன் பூக்கூடையை கீழே வைத்து விட்டு பூஜை அறைக்கு வெளியிலேயே சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான்.

"அப்பனே சிவனே. உன் சக்திக்கேத்த மாதிரியோ, எனக்குத் தினமும் கிடைக்கப் போகிற ஐநூறு ரூபாய்க்கேத்த மாதிரியோ எனக்கு பெரிசா எல்லாம் பூஜை செய்யத் தெரியாது. தெரிஞ்சதை பக்தி சிரத்தையா செய்யறேன். குற்றம் குறை இருந்தா தயவு செஞ்சு பொறுத்துக்கோ..." மானசீகமாக வேண்டிக் கொண்டு எழுந்தவன் பூக்கூடையை எடுத்துக் கொண்டு உள்ளே போனான்.

உள்ளே சிவலிங்கத்தை அலங்கரித்துக் கொண்டிருந்த அபூர்வப் பூக்களை எடுத்தபடியே கேட்டான். "இந்த மாதிரி பூக்கள நான் இது வரைக்கும் பார்த்ததே இல்லையே. இப்ப குடுத்த பூக்கூடைல கூட இந்த மாதிரி பூ இல்லையே. இந்தப் பூ எல்லாம் எங்கே வாங்கினது....?"

"நேத்து வேத பாடசாலைக்கு வந்த வடநாட்டுக்காரர் ஒருத்தர் குடுத்துட்டுப் போனார். அவருக்கு எங்கிருந்தோ கிடைச்சுதாம்...." கூசாமல் ஒரு பொய்யைச் சொன்னான் காரோட்டி.

அந்தப் பதிலிலேயே திருப்தி அடைந்த கணபதி பூஜையை ஆரம்பிக்க, அவர்கள் இருவரும் அவனையே ஒருவித பரபரப்புடன் பார்த்தனர். அவன் என்னேரமும் ஓடிவந்து விடலாம் என்று அவர்கள் எதிர்பார்த்தனர்.

அவர்கள் அவனையே பார்ப்பது கணபதிக்கு கூச்சமாய் இருந்தது. அவனுக்கு சரியாகப் பூஜை செய்ய வருகிறதா என்று அவர்கள் கண்காணிப்பது போல அவனுக்குத் தோன்றியது. அவன் லேசாக நெளிய அவர்கள் ஒருமித்த குரலில் கேட்டார்கள். "என்ன ஆச்சு?". இதற்கு முன் ஓடிப்போனவனின் அனுபவம் அறிந்திருந்த அவர்களுக்கு அவனது ஒவ்வொரு வித்தியாசமான அசைவும் சந்தேகத்தைக் கிளப்பியது...

"ஒண்ணுமில்லை... நான் உங்க மாதிரி அதிகமா எல்லாம் வேதம், பூஜை எல்லாம் படிக்கலை... அதனால் தெரிஞ்ச மாதிரி செய்யறேன்.." என்று கணபதி வெளிப்படையாகச் சொல்ல அவர்கள் தலையாட்டினார்கள்.

"பிரச்சினை ஒண்ணும் இல்லையே?" காரோட்டி சந்தேகம் தீராமல் கேட்டான்.

"எனக்கு ஒண்ணும் இல்லை... இவருக்கு எப்படின்னு தெரியலை" என்று சிவலிங்கத்தைக் காட்டி விட்டு கணபதி கலகலவென்று சிரித்தான். அவர்கள் அவனை ஒரு மாதிரி பார்த்தார்கள்.

அப்போது தான் தன் தவறை உணர்ந்த கணபதி மானசீகமாய் சிவனிடம் மன்னிப்பு கேட்டான். "மன்னிச்சுக்கோ. உன் பிள்ளை கிட்ட இப்படித் தான் கொஞ்சம் கிண்டலாய் பேசிகிட்டிருப்பேன். பழக்க தோஷத்துல அப்படியே சொல்லிட்டேன்..."

பின் பூஜையை முழு மனதோடு செய்ய ஆரம்பித்த கணபதி பூஜை முடிகிற வரை அவர்கள் இருவர் பக்கம் பார்வையைத் திருப்பவில்லை. குருஜி சொன்னது போல அவன் எந்தப் பாதிப்பும்

இல்லாமல் இருந்தது அவர்கள் இருவருக்கும் ஆச்சரியத்தை ஏற்படுத்தியது.

கணபதி பூஜையை முடித்த பிறகு காரோட்டி அவனை வேத பாடசாலையைச் சுற்றிக் காட்ட அழைத்துச் செல்ல, அவர்கள் சென்ற அடுத்த நிமிடம் ரகசியக் காமிராவைப் பொருத்த அவசர அவசரமாக இருவர் உள்ளே நுழைந்தனர்.

**************

பார்த்தசாரதி பரமேஸ்வரனின் வீட்டுக்கு வந்து தனித்தனியாக இது வரை மூன்று பேர்களை விசாரித்து நான்காவதாக பரமேஸ்வரனிடம் விசாரித்துக் கொண்டிருந்தார். விசாரித்து முடித்த மூவரான விஸ்வநாதன் – மீனாட்சி தம்பதியரும், அவர்கள் மகன் மகேஷும் பசுபதியிடம் பிரத்தியேகத் தொடர்பு வைத்திருந்தது போலத் தெரியவில்லை. மிக அபூர்வமாக அவர்கள் பரமேஸ்வரனுடன் சேர்ந்து போய் சம்பிரதாயமாக ஒருசில முறை பசுபதியைப் பார்த்து வந்திருக்கிறார்களே அல்லாமல் மற்றபடி எந்தத் தொடர்பும் வைத்திருக்கவில்லை.

நான்காவதாக விசாரித்த பரமேஸ்வரன் தான் மாதம் ஒரு முறையாவது போய் அண்ணனைச் சந்தித்தவர். அதனால் அவரிடம் விசாரிக்க அவர் அதிக நேரம் எடுத்துக் கொண்டார். அவரும் முன்பு விசாரித்த போலீஸ்காரர்களிடம் சொன்னதை மட்டுமே ஆரம்பத்தில் பார்த்தசாரதியிடம் சொன்னார். பின் கூடுதலாகத் துருவித் துருவிக் கேட்ட பிறகு தான் அவர் கடைசி சந்திப்பின் போது பசுபதி சொன்னதைச் சொன்னார். என்னேரமும் மரணம் வந்து விடலாம் என்றும், சிவலிங்கத்திற்கு ஏதாவது ஆகிவிடலாம் என்றும் முன் கூட்டியே தம்பியிடம் பசுபதி சொல்லி இருந்தது பார்த்தசாரதியை ஆச்சரியப்பட வைத்தது. அப்போது அண்ணன் சொன்னதைப்

பெரிதாக பரமேஸ்வரன் எடுத்துக் கொள்ளவில்லை என்பது அவருக்கு இயல்பாகவே தோன்றியது.

"உங்க பேரன் கிட்ட சொல்லச் சொன்னது எதற்காகன்னு நினைக்கிறீங்க? உங்க பரம்பரையிலயே சிவலிங்கம் இருக்கணும்கிறதற்காகவா, இல்லை வேறெதாவது காரணமும் இருக்கலாம்னு நினைக்கிறீங்களா?"

"தெரியலை"

"இதற்கு முன்னால் உங்க பேரன் அந்த சிவலிங்கத்தைப் பார்த்திருக்காரா?"

பரமேஸ்வரன் லேசான தயக்கத்திற்குப் பின் சொன்னார். "என் மகன் காதல் கல்யாணம் பண்ணினதுக்கு அப்புறம் என் குடும்பத்துக்கும் அவனுக்கும் எந்த்த் தொடர்பும் இருக்கலை. ஈஸ்வர் இந்தியாவுக்கு இது வரைக்கும் வந்தது கூட இல்லை..."

"உங்க பேரன் கிட்ட விஷயம் சொன்னதுக்கு அவர் என்ன சொன்னார்?"

"நாளைக்கு வர்றான்?"

"நீங்க சொன்னதை அவர் எப்படி எடுத்துகிட்டார்?"

பதில் சொல்ல சில வினாடிகள் கூடுதலாக பரமேஸ்வரன் எடுத்துக் கொண்டார். "அவனுக்கும் அதிர்ச்சி தான்"

*நாளை வரப் போகிற ஈஸ்வரிடம் விசாரிக்க வேண்டும் என்று மனதில் குறித்துக் கொண்ட பார்த்தசாரதி கேட்டார். "அப்புறம் வேறெதாவது இந்த வழக்குக்கு சம்பந்தமாய் நீங்கள் சொல்ல மறந்தது ஏதாவது இருக்கா? பெரிய விஷயம் இல்லைன்னு உங்களுக்குத் தோணறது கூட உண்மைல முக்கிய தகவலாய் கூட இருக்கலாம்....."*

*பரமேஸ்வரன் யோசித்தார். பிறகு அண்ணன் பிணத்தைப் பார்க்க வந்த மனிதர்கள் மத்தியில் பார்த்த சித்தரைப் பற்றிச் சொன்னார்.*

*பார்த்தசாரதி சந்தேகத்துடன் கேட்டார். "இத்தனை வருஷத்துக்குப் பிறகு அந்த ஆள் உயிரோட இருந்திருப்பாரா? நீங்கள் பார்த்த்து அந்த ஆளாய் தான் இருக்குமா?"*

*"அந்த சித்தர் கண்களை என்னால் மறக்க முடியாது சார். நெருப்பாய் ஜொலிக்கிற கண்கள்... பார்த்தவுடனே மனசுல பதியறது அந்தக் கண்கள் தான். அதனால நான் பார்த்த்து கண்டிப்பாய் அவராய் தான் இருக்கணும்"*

*பார்த்தசாரதிக்கு முனுசாமி ஒரு இரவில் பார்த்ததாய் சொன்ன சம்பவம் நினைவுக்கு வந்தது. அப்படியானால் அவன் பார்த்தது போதையின் விளைவு அல்ல, நிஜமாகவே இருக்க வேண்டும்.*

*"அந்த சித்தர் அடிக்கடி உங்கண்ணாவைப் பார்க்க வருவாரோ?"*

*"தெரியலை. இப்ப யோசிச்சுப் பார்க்கறப்ப அவர் வந்திருக்கலாம்னு தோணுது"*

*பார்த்தசாரதி ஏழெட்டு மாதங்களுக்கு முன் பசுபதியைப் பார்க்க விரும்பிய இரண்டு மர்ம நபர்களைப் பற்றி பரமேஸ்வரனிடம் சொன்னார்.*

*பரமேஸ்வரனுக்கு அந்தத் தகவல் அதிர்ச்சியாகவே இருந்தது. "அண்ணா அந்த சம்பவத்தைப் பற்றி என் கிட்ட சொல்லக் கூட இல்லை. அவசியம் இல்லைன்னு நினைச்சிருக்கலாம்....."*

*"ஒரு வெளிநாட்டு ஆசாமி உங்கண்ணாவைப் பார்க்க வர என்ன காரணம் இருக்கும்னு நினைக்கிறீங்க?"*

*"தெரியலை"*

*"அந்த சிவலிங்கம் தான் காரணமாய் இருக்கணும்னு நான் நினைக்கிறேன். நீங்க என்ன நினைக்கிறீங்க?"*

*"இருக்கலாம்"*

*"அந்த சிவலிங்கம் பத்தின முழு உண்மைகளும் வெளி வரலை. அது வந்தால் தான் இந்த வழக்குல நாம் முன்னேற முடியும்...." சொல்லி விட்டு பார்த்தசாரதி பரமேஸ்வரனை ஆழமாகப் பார்த்தார்.*

*பரமேஸ்வரன் வெளிப்படையாகச் சொன்னார். "அந்த சிவலிங்கம் பத்தி முழுசா தெரிஞ்சவங்க எங்கப்பாவும், எங்கண்ணாவும் மட்டும் தான். ஓரளவு சிவலிங்கம் வந்தப்ப நான் சின்னவன். எனக்கு எட்டு வயசு தான் இருக்கும். அந்த சிவலிங்கம் பத்தி தெரிஞ்சுக்கற ஆர்வம் எனக்கு சுத்தமா இருக்கல...."*

*“உங்கம்மாவுக்குத் தெரிஞ்சிருக்குமா?”*

*”அம்மாவுக்கும் இந்த மாதிரி விஷயங்களைத் தெரிஞ்சுக்கறதுல ஆர்வம் இருக்கலை... எத்தனையோ தடவை அப்பா அது பத்தி அம்மா கிட்ட பேச ஆரம்பிச்சப்ப எல்லாம் அது அவங்களுக்குள்ளே சண்டைல தான் முடிஞ்சு இருக்கு. அண்ணா சாமியார் மாதிரி ஆனதுக்கு அந்த சிவலிங்கம் தான் காரணம்னு அம்மா நினைச்சதால அதைப் பத்தி கேட்கக் கூட அம்மாவுக்குப் புடிக்கலை....”*

*“உங்கப்பா என்ன சொல்ல வந்தார்னு நினைவு இருக்கா?”*

*“இல்லை... அவர் சொல்ல வந்தப்ப அம்மா போட்ட சண்டை தான் ஞாபகம் இருக்கு.. அப்படி சொன்னதைப் புரிஞ்சுக்கற வயசோ, ஆர்வமோ எனக்கு அப்ப இருக்கலை”*

*“ஆனா உங்கப்பா என்ன சொல்ல வந்தாருங்கறதை உங்கம்மா நினைவு வச்சிருப்பாங்க இல்லையா?”*

*“எங்கம்மாவுக்கு மறதிங்கறதே கிடையாது...”*

*பரமேஸ்வரனை அனுப்பிய பார்த்தசாரதி அடுத்ததாக ஆனந்தவல்லியை விசாரிக்கத் தயாரானார்.*

*ஆனந்தவல்லி வந்தாள். அவள் அணிந்திருந்த பட்டுப்புடவையும், ஏராளமான நகைகளும் ஏதோ கல்யாண வீட்டுக்கு அவள் போகத் தயாராக இருந்தது போன்ற*

அபிப்பிராயத்தை அவரிடம் ஏற்படுத்தியது. நடையில் தளர்ச்சி தெரிந்தாலும் முகத்தில் அது தெரியவில்லை. கண்களை லேசாகக் குறுக்கிக் கொண்டு அவரையே உற்றுப் பார்த்தபடி ஆனந்தவல்லி அவர் எதிரில் இருந்த சோபாவில் அமர்ந்தாள்.

பார்த்தசாரதிக்கு அவரது ஆரம்பப் பள்ளி தலைமை ஆசிரியையை ஆனந்தவல்லி நினைவுபடுத்தினாள். அவளும் இப்படித்தான் முகத்தில் சிறிதும் மலர்ச்சி இல்லாமல் மாணவர்களை உற்றுப் பார்ப்பாள். அமர்ந்தவுடன் அவரது அபிப்பிராயத்தை அவள் வலுவாக்கினாள். "ஏம்ப்பா... குற்றவாளியைக் கண்டுபிடிச்சுட்டீங்களா?"

அவள் அவரை ஒருமையில் அழைத்து அப்படிக் கேள்வி கேட்டதை அவரால் ரசிக்க முடியவில்லை. "இன்னும் இல்லை...."

'என்ன வேலை பார்க்கிறீர்கள்' என்பது போன்ற அதிருப்தியை ஆனந்தவல்லி படர விட்டாள். அது, கொடுத்த வேலையை சரிவரப் பார்க்கவில்லை என்று முதலாளி தொழிலாளி மீது காட்டும் அதிருப்தி போல பார்த்தசாரதிக்குத் தெரிந்தது. அவர் ஒரு உயர் போலீஸ் அதிகாரி என்ற மரியாதை சிறிதும் அவளிடம் இல்லாமல் இருந்தது அவருக்கு எரிச்சலைத் தந்தது. பரமேஸ்வரன் கூட அவரிடம் அப்படி இருக்கவில்லை. பணிவு காட்டா விட்டாலும் அவரை கௌரவமாகத் தான் நடத்தினார். ஒரு ஜமீந்தாரின் மகள், ஒரு தொழிலதிபரின் மனைவி, ஒரு மிகப்பெரிய தொழிலதிபரின் தாய் என்று ஆரம்பத்தில் இருந்தே மேலான அந்தஸ்தில் இருந்த திமிரோ இந்தம்மாளுக்கு?

"ஆனந்தவல்லி அம்மா, உங்களுக்கும் இறந்து போன உங்கள் மகனுக்கும் இடையே மனஸ்தாபம் இருந்ததுன்னு கேள்விப்பட்டேனே? அது உண்மையா?" பார்த்தசாரதி கேட்டார்.

ஆனந்தவல்லி கோபத்துடன் திரும்பக் கேட்டாள். “எவன் சொன்னது?”

பார்த்தசாரதி திகைத்துப் போனாலும் சமாளித்தார். “விசாரணையில் கிடைக்கிற தகவல்கள் எங்கிருந்து கிடைச்சுதுன்னு நாங்க சொல்லக் கூடாது. அது உண்மையா இல்லையான்னு சொல்லுங்க.”

ஆனந்தவல்லி இதற்கெல்லாம் நான் பதில் சொல்ல வேண்டுமா என்பது போல் பார்த்தாள்.

பார்த்தசாரதி சொன்னார். “உங்க மகனை நீங்க பல வருஷமாய் பார்க்கல, அவரு பிணத்தைப் பார்க்கக் கூட நீங்க போகல...”

ஆனந்தவல்லி கண்களில் அக்னி தெரியக் கேட்டாள். “நீ கேட்கற கேள்விக்கும் இந்த வழக்குக்கும் என்ன சம்பந்தம்? என் மகனை நானே கொன்னிருக்கலாம்னு நினைக்கிறியா?”

ஆனந்தவல்லிக்கு வயது எண்பத்தி எட்டானாலும் கோபப்பட்ட போது சுமார் பதினெட்டு வயது குறைந்து தெரிந்தாள். அதிகாரியிடம் பேசும் போது முதலில் மரியாதை கொடுத்து பேசப் பழகுங்கள் என்று சொல்லத் தோன்றினாலும் இத்தனை வயதானவளிடம் அப்படி மரியாதையைக் கேட்டு வாங்குவதே அசிங்கமாக பார்த்தசாரதிக்குப் பட்டது. யோசித்த போது தான் கேள்வி கேட்ட விதமும் சரியில்லை என்று அவருக்குத் தோன்றியது. எல்லாம் தோரணையாலேயே அவள் அவரை சண்டைக்கு இழுத்ததன் விளைவு....

பொறுமையை வரவழைத்துக் கொண்டு பார்த்தசாரதி சொன்னார். “ஆனந்தவல்லி அம்மா. நான் சொன்னதை நீங்க தப்பா புரிஞ்சுகிட்டீங்கன்னு நினைக்கிறேன். அசாதாரணமா தோணற எல்லா விஷயங்களுக்கும் காரணம் கேட்டுத் தெரிஞ்சுக்கறது எங்களுக்கு முக்கியம். ஏன்னா அதுல ஏதாவது துப்பு கிடைக்கலாம். அதனால தான் கேட்கறேன். ஒரு தாய் கிட்டத்தட்ட ஐம்பது வருஷங்களுக்கு மேல மகனைப் பார்க்காமல் இருக்கறதோ, மகன் செத்த பிறகு பிணத்தைப் பார்க்காமல் இருக்கறதோ இயல்பானதா இல்லைங்கறதால கேட்கறேன்....”

ஆனந்தவல்லி ஓரளவு சமாதானமானவளாகச் சொன்னாள். “ஒரு தாய் தன்னை முதல் முதல்லா அம்மான்னு கூப்பிட்ட குழந்தையை எந்தக் காலத்துலயும் வெறுக்க முடியாதுப்பா. அதுலயும் பசுபதி மாதிரி பத்தரை மாத்துத் தங்கத்தை அவன் தாயாலயே வெறுக்க முடியுமா? அவன் சாமியார் மாதிரி மாறினது பிடிக்கலை. அந்த நிலைமைல பார்த்து அடிக்கடி மனசை ரணமாக்கிக்க பிடிக்காததால அவனைப் பார்க்காம இருந்தேன். கடைசியா அவனாவே என்னை வரச் சொல்லிக் கூப்பிட்டான். போனேன். அப்பவும் அவனை நல்லா திட்டினேன். அவன் அப்பவும் கோவிச்சுக்கல....”

ஆனந்தவல்லி குரல் உடைந்து போனது. ஆனால் உடனடியாகத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்ட அவள் மென்மையான குரலில் சொன்னாள். ”பொறுமையா இருந்தான்... உடம்பை எப்படி எல்லாம் பார்த்துக்கணும்னு சொன்னான்.. அன்னிக்கு என் பிள்ளையா மட்டும் இருந்தான்.. அந்த நினைவோடவே மீதி வாழ்க்கைய முடிச்சுக்கணும்னு முடிவு செஞ்சுகிட்டேன். கடைசியா அந்த நினைவுக்கு மேல அவன் பிணத்தைப் பார்த்த நினைவை வச்சுக்க விரும்பலை... அதுவும் கொலை செய்யப்பட்ட கோலத்தைப் பார்க்கற சக்தி எனக்கு இருக்கலை... இல்லை..”

*முதல் முறையாக ஒரு தாயாக, மென்மையானவளாக அவளைப் பார்த்த அவருக்கு மனம் இளகியது. இவளிடம் எந்த முக்கியத் தகவலையும் கோபமூட்டி வாங்க முடியாது என்ற பாடம் கற்றவராய் பார்த்தசாரதி சிவலிங்கம் பற்றிய கேள்விகளை மென்மையாகக் கேட்க ஆயத்தமானார். மறதி என்பதே கிடையாது என்று பெயரெடுத்த ஆனந்தவல்லிக்கு அது பற்றி நிறைய தெரிந்திருக்க வேண்டும் என்று அவரது உள்ளுணர்வு சொல்லியது.*

# ***<u>அத்தியாயம் - 15</u>***

*பார்த்தசாரதி ஆனந்தவல்லியிடம் கேட்டார். "ஆனந்தவல்லி அம்மா, உங்கள் மகனைக் கொன்னுட்டு அந்த சிவலிங்கத்தை எடுத்துட்டுப் போகிற அளவுக்கு அந்த சிவலிங்கத்துல ஏதோ இருக்கணும் இல்லையா அது என்னன்னு உங்களால சொல்ல முடியுமா?"*

*ஆனந்தவல்லி சொன்னாள். "அதுல ஒரு மண்ணாங்கட்டியும் இல்லை".*

*"அப்படின்னா அதைக் கடத்திகிட்டு போக காரணமே இல்லையேம்மா"*

*ஆனந்தவல்லி எதுவும் சொல்லாமல் அவரையே பார்த்தாள்.*

*பார்த்தசாரதி சொன்னார். "ஸ்படிக லிங்கம், மரகத லிங்கம் மாதிரி இருந்திருந்தா நல்ல விலை போகும்னு அதை எடுத்துகிட்டு போயிருக்கலாம்னு சொல்லலாம். அதுக்குள்ளே வேற விலை உயர்ந்த பொருள் எதாவது ஒளிச்சு வச்சிருந்தா அதுக்காக*

கடத்தப்பட்டிருக்கிறதா சொல்லலாம்.... இந்த வழக்கில் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கணும்னா அவங்களோட நோக்கம் என்னன்னு முதல்ல தெரிஞ்சுகிட்டா தான் முடியும்.. சிவலிங்கம் வந்த காலத்தில் இருந்து இருக்கிறவங்க நீங்க... உங்களுக்குத் தெரிஞ்சதைச் சொன்னா தான் உங்க மகனைக் கொலை செய்துட்டு சிவலிங்கத்தைக் கடத்தினவங்களைக் கண்டு பிடிக்க முடியும்.... ”

ஆனந்தவல்லி கசப்பான மருந்தை சாப்பிடக் கொடுத்தது போல சங்கடப்பட்டாள். ஆரம்பத்தில் இருந்தே அவளுக்கு அந்த சிவலிங்கத்தைப் பிடித்ததில்லை. அவளிடமிருந்து அவள் மகனைத் திருடிய எதிரியாகவே அதை அவள் நினைத்து வந்தாள். அவள் மகனைக் கொல்லாமல் அந்த சிவலிங்கத்தை அவர்கள் எடுத்துக் கொண்டு போயிருந்தால் அவள் அதைப் பெரிய உதவியாகவே கூட நினைத்திருப்பாள்... அந்த சிவலிங்கத்தைப் பற்றி பேசக் கூட அவளுக்கு கசந்தது... ஆனால் அந்தப் போலீஸ் அதிகாரி சொல்வதிலும் உண்மை இருந்தது....

பார்த்தசாரதி விடவில்லை. “அந்த சிவலிங்கம் சக்தி வாயந்ததுன்னு சிலர் நினைக்கிறாங்களே அது உண்மையா?”

ஆனந்தவல்லி காட்டமாகச் சொன்னாள். “அறுபது வருஷத்துக்கு மேல அதைப் பூஜை செய்துட்டு வந்தவனையே காப்பாத்தாத அந்த சிவலிங்கத்துக்கு வேற என்ன சக்தி இருக்க முடியும்?”

அவள் பேச்சில் இருந்த யதார்த்த உண்மை பார்த்தசாரதியை யோசிக்க வைத்தது. ஆனால் அடுத்த கணம் அவர் தன்னையுமறியாமல் சொன்னார். ”மேற்கொண்டு உயிர் வாழ விரும்பாத மனிதனை எந்த சக்தி தான் காப்பாற்ற முடியும்?” சொல்லி விட்டு அவரே ஒரு கணம் திகைத்தார். யாரோ அந்த

*வார்த்தைகளை அவர் வாயில் போட்டு வரவழைத்தது போலத் தோன்றியது.*

*ஆனந்தவல்லி அவரையே ஆழமாகப் பார்த்தாள்.*

*பார்த்தசாரதி சமாளித்துக் கொண்டு சொன்னார். "பத்மாசனத்துல இருந்தபடியே சாகறது சாதாரண விஷயமில்லை. அதுவும் கொலை செய்யப்பட்ட போது கூட அப்படியே இருக்க முடியறது அசாதாரணமான விஷயம். உங்க மகனுக்கு எழுபது வயசு ஆகியிருந்தாலும் நாற்பது வயசு மனிதனோட ஆரோக்கியம் இருந்ததாய் டாக்டர்ங்க சொல்றாங்க. அவர் ஹத யோகின்னும் கேள்விப்பட்டேன். அதனால அவர் நினைச்சிருந்தா அந்தக் கொலைகாரனை சுலபமா தடுத்து இருக்கலாம்...."*

*ஆனந்தவல்லியின் முகத்தில் சோகம் படர்ந்தது. அவள் தலையை மட்டும் அசைத்தாள்.*

*பார்த்தசாரதி தொடர்ந்தார். "அந்த சிவலிங்கத்துக்கு சக்தி இருக்கோ இல்லையோ அது சக்தி வாய்ந்ததுன்னு சில பேரு நினைச்சிருக்கற மாதிரி தான் தெரியுது. அதைக் கொண்டு வந்து உங்க குடும்பத்துல சேர்த்தது ஒரு சித்தர்னு கேள்விப்பட்டேன். அந்த சித்தரைப் பத்தி ஏதாவது சொல்ல முடியுமா?"*

*"நான் அந்த ஆளைப் பார்த்ததே இல்லை"*

*"அந்த சிவலிங்கத்தை அவர் எங்கே இருந்து கொண்டு வந்தார்னு தெரியுமா? அது பத்தி உங்க கணவர் ஏதாவது சொல்லி இருக்காரா?"*

ஆனந்தவல்லி ஒரு பெருமூச்சு விட்டாள். "அவர் அதைப் பத்தி என்னென்னவோ சொல்ல ஆரம்பிச்சப்ப எல்லாம் நான் கேட்கற மனநிலையில் இருக்கல. நல்லா திட்டி அவர் வாயை அடைச்சிருக்கேன்.."

இந்தம்மாளிடம் அந்த மனிதர் படாத பாடு பட்டிருக்க வேண்டும் என்று நினைத்த பார்த்தசாரதி அந்த மனிதருக்காகப் பச்சாதாபப்பட்டார். சிறிது நேரம் இவளைச் சமாளிப்பதே பெரும்பாடாக இருக்கும் போது அவர் நிலைமை எப்படி இருந்திருக்கும் என்று நினைத்தவராகக் கேட்டார். "அவர் என்ன சொல்ல வந்தார்?"

ஆனந்தவல்லி தனக்குப் பிடிக்கா விட்டாலும் தெரிந்த்தைச் சொல்லி முடித்து விடுவது என்று முடிவுக்கு வந்தவளாக, பேசப் போகிற விஷயம் பிடிக்காதவளாக, லேசாக முகம் சுளித்தபடிச் சொன்னாள். "அந்த சிவலிங்கம் பல நூறு வருஷத்துக்கு முந்தினதாம். சித்தர்கள் பூஜை செய்துட்டு வந்ததாம். ஏதோ சோழ ராஜா கோயில் கட்டக் கேட்டுக் கூட சித்தர்கள் குடுக்கலையாம்.. அந்த சிவலிங்கம் யார் கிட்ட போய் சேரணும்னு முடிவு பண்ண ஒரு ரகசிய குழு இருக்காம்.... அது பசுபதி கிட்ட வந்ததும் அப்படித் தானாம்.... பசுபதி ரொம்ப புண்ணியம் செஞ்சவன், அதனால தான் அவனுக்கு அது கிடைச்சிருக்கு, அதனால நான் சந்தோஷப்படணுமே ஒழிய வருத்தப்படக் கூடாது அப்படி இப்படின்னு சொன்னார்...."

பார்த்தசாரதிக்கு இந்தத் தகவலை எப்படி எடுத்துக் கொள்வது என்று தெரியவில்லை. "அவர் சொன்னது உண்மையாய் இருக்குமோ?"

*ஆனந்தவல்லி போலீஸ் அதிகாரி என்றும் பார்க்காமல் அவரைக் கடிந்து கொண்டாள். "அவர் தான் எவனோ மூளைச்சலவை செய்து சொன்னதை நம்பினார்னா உனக்கும் மூளை இல்லையா என்ன? இப்ப அந்த சிவலிங்கம் யார் கைல போய் சேரணும்னு முடிவு செஞ்சது யாரு அந்த ரகசியக் குழுவா? அந்தக் கொலைகாரக் கூட்டம் தானே முடிவு பண்ணி எடுத்துகிட்டு போனாங்க... அப்பவே நான் அவரை சத்தம் போட்டேன்.. அம்புலி மாமா கதைல வர்ற மாதிரி எவனாவது ஏதாவது சொன்னா நம்பிடறதா, அறிவு இல்லையான்னு...."*

*'ரொம்பக் கஷ்டம் தான்' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட பார்த்தசாரதி பொறுமையுடன் சொன்னார். "நீங்க சொல்றது சரி தான்... அந்த ரகசியக் குழு எத்தனை பேரு, யார் யார்னு ஏதாவது சொன்னாரா?"*

*"அது அவருக்கும் தெரியலை... ஆனா அவர் கடைசி வரைக்கும் அப்படி இருக்கும்னு நம்பினார்.. "*

*"நமக்கு நம்பக் கஷ்டமா இருக்கு... ஆனா உங்க கிட்ட அந்த சிவலிங்கத்தைக் கொண்டு வந்த சித்தர் இப்பவும் இருக்கார்னும், உங்க மகன் பசுபதி செத்த பிறகு அந்த சித்தர் தோட்ட வீட்டுக்கு வந்ததைப் பார்த்த மாதிரி இருந்ததுன்னு பரமேஸ்வரன் சொன்னாரே.... ஒருவேளை அது பிரமையாய் இருக்குமோ"*

*"பிரமையும் இல்லை, பொம்மையும் இல்லை... பரமேஸ்வரன் அப்படி எல்லாம் ஏமாந்துட மாட்டான். அவன் பார்த்தேன்னு சொன்னா பார்த்திருக்கணும்... எனக்கு மட்டும் அந்த ஆள் பார்க்கக் கிடைச்சிருந்தால் கேட்டிருப்பேன், 'இப்ப திருப்தியா உனக்கு'ன்னு..."*

*‘அந்த சித்தர் தப்பிச்சுட்டார்’ என்று மனதில் சொல்லிக் கொண்ட பார்த்தசாரதி “உங்க கணவர் வேறெதாவது சொன்னாரா...?” என்று கேட்டார்.*

*”திரும்பத் திரும்ப அவர் சொன்னதெல்லாம் இது தான். அந்த சிவலிங்கம் சாதாரண லிங்கம் இல்லை... சக்தி வாய்ந்தது.... அதோட முழு சக்தியை புரிஞ்சுக்க நமக்கு ஞானம் போதாது அப்படி இப்படின்னு அந்த சித்தர் சொன்னதை எல்லாம் நம்பி எனக்கும் போதனை செய்ய முயற்சி செஞ்சார்...”*

*”அந்த சக்தி என்னன்னு சொன்னாரா?”*

*”நான் கேட்கலை.... கேட்டிருந்தா சொல்லி இருக்கலாம்....”*

*””உங்க கொள்ளுப் பேரன் ஈஸ்வர் கிட்ட சிவலிங்கம் போய் சேரணும்கிறது தான் விதி.. சேர்த்துடு”ன்னு பசுபதி பரமேஸ்வரன் கிட்ட சொன்னது பத்தி நீங்க என்ன நினைக்கிறீங்க? என்ன காரணம் இருக்கும்”*

*இந்தக் கேள்வியைப் பல முறை அவளும் தனக்குள் கேட்டுக் கொண்டிருக்கிறாள். விடை பிடிபடவில்லை... சொன்னாள். ”தெரியலை...”*

*“ஒரு வேளை உங்க பேரனும் பசுபதி மாதிரி ஆன்மிகத்துல அதிக நாட்டம் இருக்கிறவரோ?”*

*ஆனந்தவல்லி இந்த இரண்டு மூன்று நாட்களில் தன் கொள்ளுப்பேரன் பற்றி ஒரு புத்தகமே எழுத முடிந்த அளவு தகவல்கள் சேர்த்திருந்தாள். மீனாட்சியை விடாமல் நச்சரித்து அவள்*

*உதவியுடன் அவனது ஃபேஸ்புக் உட்பட இண்டர்நெட்டில் சகலமும் அறிந்திருந்தாள். அதனால் ஆணித்தரமாகச் சொன்னாள். "அவன் அந்த மாதிரி ரகம் இல்லை... ரோஷக்காரன்... நல்லா படிச்சவன்.. பெரிய ஆராய்ச்சியாளன்... இந்த சின்ன வயசுலயே பெரிய பெரிய விருது எல்லாம் வாங்கி இருக்கான்.... பார்க்க என் வீட்டுக்காரர் மாதிரியே அச்சாய் அழகாய் இருக்கான்..."*

*பெருமிதம் கொப்புளிக்க மலர்ச்சியுடன் சொன்ன ஆனந்தவல்லியை பார்த்தசாரதி ஆச்சரியத்துடன் பார்த்தார். சற்று நேரத்திற்கு முன் கணவரை நன்றாகத் திட்டிய ஆனந்தவல்லி, அவரைப் போலவே தன் கொள்ளுப்பேரன் அழகாய் இருப்பதைப் பெருமையாகச் சொல்வதைப் பார்த்தால் அவள் கணவன் மீது காதலாகவும் இருந்திருக்க வேண்டும் என்று புரிந்தது... முக மலர்ச்சியோடு இருக்கும் போது இந்தக் கிழவியும் அழகாய் தான் தெரிகிறாள்.. ஆனால் முகம் மலர்வது மட்டும் அத்தி பூத்தது போலத் தான்... அவர் நினைத்து முடிப்பதற்குள் பழைய முகபாவத்துக்குள் வந்து விட்டிருந்தாள் ஆனந்தவல்லி.*

*"உங்க கணவரைத் தவிர வேற யாராவது அந்த சிவலிங்கத்தோட சக்தி பத்தி உங்க கிட்ட பேசியிருக்காங்களா?"*

*"இல்லை..."*

*"உங்க மகன் பசுபதி?..."*

*"அவன் பேசறதே கம்மி தான்... நாம ஏதாவது பேசினால் கூட ஒருசில வார்த்தைல பதிலை முடிச்சுடுவான்... அவனாய் தொடர்ந்து அரை மணி நேரமாவது பேசினது நான் அவனைக் கடைசியா பார்த்தப்ப தான்.. அது தான் முதல் தடவை... அதுவே கடைசி*

*தடவையும் கூட..” சொல்லும் போது அவள் குரல் கரகரத்த்து. சொன்னதில் வலி தென்பட்டது.*

*”கிட்டத்தட்ட அறுபது வருஷமா அந்தத் தோட்ட வீட்டுல இருந்த சிவலிங்கம் மேல இத்தனை வருஷம் கழிச்சு திடீர்னு யாரோ சிலருக்கு அக்கறை வரக் காரணம் என்னவாக இருக்கும்னு நீங்க நினைக்கிறீங்க?”*

*சற்று எரிச்சலோடு ஆனந்தவல்லி சொன்னாள். “எல்லாத்தையும் என் கிட்டயே கேட்டா எப்படி? நீங்க தான் அதை எல்லாம் கண்டுபிடிக்கணும்”*

*பெருமூச்சு விட்ட பார்த்தசாரதி விசாரணையை அத்துடன் முடித்துக் கொண்டார். அவர் கிளம்பும் முன் ஆனந்தவல்லி கேட்டாள். “எத்தனை நாள்ல கண்டுபிடிப்பீங்க?”*

*“சீக்கிரமா கண்டுபிடிச்சுடுவோம்....”*

*சற்று நின்றால் அந்த உத்திரவாதத்தை கிழவி எழுதிக் கொடுக்கும்படி கேட்டாலும் கேட்பாள் என்று பயந்தவராக அவர் உடனடியாக இடத்தைக் காலி செய்தார். சில கேள்விகளுக்கு பதிலை ஈஸ்வரிடத்திலும், சில சந்தேகங்களுக்குத் தெளிவை குருஜியிடத்திலும் அவர் எதிர்பார்த்தார். ஈஸ்வர் நாளை தான் வருகிறான் என்பதால் இரண்டு நாட்கள் கழித்து அவனை சந்திக்க எண்ணினார். குருஜி இன்று மாலை அவரை சந்திக்க ஒப்புக் கொண்டிருக்கிறார்....*

**************

*குருஜி பார்த்தசாரதியைப் பார்த்ததும் தன் நீண்ட கால நண்பனைப் பார்ப்பது போல சந்தோஷம் காட்டினார். ”என்ன பார்த்தசாரதி எப்படி இருக்கீங்க?”*

*”வணக்கம் குருஜி. நல்லா இருக்கேன்”*

*குருஜி சில நிமிடங்கள் குடும்பத்தினரையும், வேலையையும் பற்றி விசாரித்து விட்டு பின் சொன்னார். “நீங்கள் ஏதோ முக்கியமான விஷயம் பத்தி பேசணும்னு சொன்னீங்களாம். ரெண்டு நாளா ஓய்வே இல்லை. அதனால உங்களை சந்திக்க முடியலை... என்ன விஷயம் சொல்லுங்க”*

*பார்த்தசாரதி சொன்னார். “சில நாளுக்கு முன்னால் ஒரு பெரியவரைக் கொன்னுட்டு அவர் பூஜை செய்துட்டு இருந்த சிவலிங்கத்தை தூக்கிகிட்டு போயிட்டாங்க குருஜி....”*

*“....ம்ம்ம்... பேப்பர்ல படிச்சேன். பரமேஸ்வரனோட அண்ணாவோ தம்பியோ தானே அந்தப் பெரியவர்”*

*“அண்ணா குருஜி”*

*“சொல்லுங்க. இப்ப அந்தக் கேஸ் உங்க கிட்ட வந்திருக்கோ?”*

*“ஆமா குருஜி... ஆன்மிகம், சக்தி இந்த ரெண்டு விஷயத்துலயும் உங்களுக்குத் தெரியாதது இருக்க முடியாதுங்கறதால சில சந்தேகங்களைத் தீர்த்துக்க உங்க கிட்ட வர முடிவு செஞ்சேன்... அந்த சிவலிங்கத்துல ஏதோ விசேஷ சக்தி இருக்கறதா பேசிக்கறாங்க... என்னடா ஒரு நாத்திகன் கேட்கற மாதிரி*

*கேட்கறானேன்னு நினைச்சுடாதீங்க. உண்மையாவே அப்படி ஒரு சிலைல விசேஷ சக்தி இருக்குமா?”*

*குருஜி அமைதியாகச் சொன்னார். “எல்லா சிலைலயும் சக்தி இருக்கும்னு சொல்ல முடியாது. சில சிலைகள்ல சக்தி இருக்கலாம்.”*

*“இதுலயும் இருக்குன்னு தான் தோணுது. ஆனா இறந்து போனவரோட அம்மா ஒரு ஆணித்தரமான கேள்வி கேட்டாங்க. “அறுபது வருஷத்துக்கு மேல அதைப் பூஜை செய்துட்டு வந்தவனையே காப்பாத்தாத அந்த சிவலிங்கத்துக்கு வேற என்ன சக்தி இருக்க முடியும்?”னு கேட்டாங்க”*

*“நியாயமான கேள்வி தான்” குருஜி சொன்னார்.*

*“அவங்க அப்படிக் கேட்டவுடனே என்னையறியாமல் நான் சொன்னேன்.*

*”மேற்கொண்டு உயிர் வாழ விரும்பாத மனிதனை எந்த சக்தி தான் காப்பாற்ற முடியும்?” அது சொல்லி முடிக்கிற வரைக்கும் நான் கொஞ்சம் கூட நினைக்காதது...”*

*குருஜி கண்களை மூடிக் கொண்டு அந்த வார்த்தைகளை உள்வாங்கினார். பின் கண்களைத் திறந்தவர் பதிலுக்கு எதுவும் சொல்லாமல் அவரை ஆழ்ந்த யோசனையுடன் பார்த்தார்.*

*பார்த்தசாரதியே தொடர்ந்தார். “ஆனால் நான் சொன்னதும் சரி தான். அந்தப் பெரியவர் நினைச்சிருந்தா அந்த கொலைகாரனை சுலபமா ஆக்கிரமிச்சிருக்கலாம். அவர் ஹத யோகி. கொலைகாரன் வந்தப்ப அவர் தூங்கிட்டும் இருக்கலை. சாகறப்ப கூட*

*பத்மாசனத்தை விட்டு விலகாத அளவு சக்தி இருக்கிற அவர் அந்தக் கொலைகாரனுக்கு ஒத்துழைப்பு தந்த மாதிரி தான் தோணுது. என்னோட இத்தனை வருஷ சர்வீஸ்ல நான் இந்த மாதிரியான ஒரு தன்மைய பார்த்ததில்லை. அடுத்ததா இன்னொரு ஆச்சரியம் அந்தக் கொலைகாரன் செத்த விதம்.... அவன் பயம்னா என்னன்னே தெரியாதவன். அப்படிப் பட்டவன் பயந்தே செத்துப் போனதா போஸ்ட் மார்ட்டம் சொல்லுது. இந்த ரெண்டுமே யதார்த்தமா எனக்குத் தோணலை. என்ன தான் நடந்ததுன்னு தெரியலை... யோகா, அபூர்வ சக்திகள், பத்தியெல்லாம் நீங்க நிறையவே தெரிஞ்சு வச்சிருக்கிறவர். அதனால உங்க கிட்ட கேட்கறேன். நீங்க என்ன நினைக்கிறீங்க..."*

*இது வரை பார்த்தசாரதிக்கு என்னவெல்லாம் தகவல்கள் கிடைத்திருக்கின்றன என்பதை அறிய இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்த குருஜி "இதெல்லாம் எளிமையாய் சொல்லக் கூடிய விஷயம் இல்லை... முதல்ல அது சம்பந்தமான தகவல்கள் எல்லாம் தெரியணும்... தெரிஞ்சால் சொல்ல முயற்சி செய்யலாம்..."*

*பார்த்தசாரதி குருஜி மீது மிகுந்த மதிப்பு வைத்திருந்தவர் என்றாலும் இது வரை சேகரித்த அனைத்து தகவல்களையும் அவரிடம் சொல்லப் போகவில்லை. அமானுஷ்யமான விஷயங்கள் என்று நினைத்ததை மட்டும் குருஜியிடம் சொல்லி கருத்துகள் கேட்க முனைந்தார்.*

*"அந்த சிவலிங்கம் 60 வருஷத்துக்கு முன்னால் ஒரு சித்தரால் கொண்டு வந்து தரப்பட்டது. அந்த சித்தர் இன்னும் இருக்கிறாராம்... அவரை பரமேஸ்வரன், செத்த வீட்டில் பார்த்திருக்கிறார். இது உண்மை மாதிரி தான் தெரியுது. அந்த சிவலிங்கம் பற்றிக் கேள்விப்பட்ட இன்னொரு விஷயம் கற்பனையோட உச்சக்கட்டமா*

இருக்கு... அந்த சிவலிங்கம் பல நூறு வருஷத்துக்கு முந்தினதாம். சித்தர்கள் பூஜை செய்துட்டு வந்ததாம். ஏதோ சோழ ராஜா கோயில் கட்டக் கேட்டுக் கூட சித்தர்கள் குடுக்கலையாம்.. அந்த சிவலிங்கம் யார் கிட்ட போய் சேரணும்னு முடிவு பண்ண ஒரு ரகசிய குழு இருக்காம்....”

சிவலிங்கம் தந்த சித்தர் இன்னும் இருக்கிறார் என்ற தகவலும் சிவலிங்கம் யாரிடம் போய் சேர வேண்டும் என்று முடிவு செய்ய ஒரு ரகசியக் குழு இருக்கிறது என்ற தகவலும் குருஜியைத் தூக்கிவாரிப் போட்டன. சிந்தனை செய்பவர் போல முகத்தை வைத்துக் கொண்டு பார்த்தசாரதியின் பார்வையில் இருந்து தப்பி மறுபக்கம் திரும்பியவர் மனதில் இது வரை குழப்பிக் கொண்டிருந்த சில கேள்விகளுக்குப் பதில் கிடைப்பது போல் இருந்தது. ஆனால் அவர் அந்தப் பதிலை ரசிக்கவில்லை.....

# அத்தியாயம் - 16

குருஜி மறுபடி பார்த்தசாரதி பக்கம் திரும்பிய போது அவர் மனதில் ஓடிய எண்ணங்களின் சாயல் கூடத் தெரியவில்லை. அமைதியாகக் கேட்டார். “அப்படிப் பார்த்தால் அந்த சிவலிங்கம் இப்ப யார் கிட்ட போய் சேரணும்கிறதும் முடிவாகி இருக்கணுமே?”

”பசுபதி சாகறதுக்கு முன்னாடி அந்த சிவலிங்கம் பரமேஸ்வரனோட பேரன் கிட்ட போகணும்கிற மாதிரி சொல்லி இருக்கார். ஆனா அந்தப் பேரன் அமெரிக்கால ஏதோ ஆராய்ச்சியாளனா இருக்கான். அவன் பசுபதியையோ, அந்த சிவலிங்கத்தையோ பார்த்தது கூட இல்லையாம். அமெரிக்காலயே செட்டில் ஆனவன். பசுபதி மாதிரி ஆன்மிகவாதியாவும் அவன் தெரியலை..”

முதல் முதலில் அந்தத் தகவலைக் கேட்பவர் போல கேட்ட குருஜி புன்னகையுடன் சொன்னார். "சிவபக்தரான பசுபதி அந்த சிவலிங்கத்தை ஆராய்ச்சியாளனான பேரன் கிட்ட அதை சேர்க்க நினைச்சதுக்குக் காரணம் அதைப் பற்றி அவன் ஆராய்ச்சி செய்யட்டும்னு இருக்குமோ?"

பார்த்தசாரதியும் புன்னகை செய்தார். "இந்தக் கேஸ்ல எல்லாமே புதிரா தான் இருக்கு"

குருஜி சொன்னார்."ஒருவேளை அந்த சிவலிங்கம் யார் கிட்ட போய் சேரணும்கிறதை ஒரு குழு தீர்மானம் செய்வதாகவே வச்சுக்குவோம். அந்தக் குழு ஆட்கள் யார்னு தீர்மானம் செய்யறது யார்? பல நூறு வருஷங்களுக்கு முந்தின சிவலிங்கம்கிறப்ப அப்ப இருந்து இப்ப வரைக்கும் அந்தக் கால ஆள்களே இருக்க வாய்ப்பில்லையே? அந்த சித்தர் கூட அந்த ஆரம்பக்கால ஆளாக இருக்கவும் வாய்ப்பில்லை...."

பார்த்தசாரதிக்கு குருஜி சொன்னதும் அறிவு பூர்வமானதாகவே தோன்றியது. அவர் சிரித்துக் கொண்டே குருஜியிடம் சொன்னார். "இதெல்லாம் நம்ப எனக்கும் முடியலை தான். ஆனால் ஆரம்பத்தில் இருந்து எல்லாமே புதிரா இருந்ததால எதை நம்பறது எதை விடறதுன்னு எனக்குத் தெரியலை. பசுபதியோட அம்மா கிட்ட தெரியாம கேட்டுட்டேன். "இதெல்லாம் உண்மையா இருக்குமோ"ன்னு. கிழவி என் கிட்ட "மூளை இல்லை?"யான்னு வெளிப்படையாவே கேட்டுட்டாங்க. இப்ப அந்த சிவலிங்கம் யார் கிட்ட போகணும்னு தீர்மானம் பண்ணி இருக்கறது அந்தக் குழு இல்லையே, அந்தக் கொலைகாரக் கூட்டம் தானேன்னு கேட்டு என் வாயையும் அடைச்சுட்டாங்க..."

குருஜி அடுத்த கேள்வியை மிகவும் கவனமாகப் புன்னகையுடன் கேட்டார். "உங்க போலீஸ் உள்ளுணர்வு என்ன சொல்லுது"

"இதுல அறிவுக்கு எட்டாத நிறைய விஷயம் இருக்குன்னு சொல்லுது..."

"நீங்க பரமேஸ்வரனோட அமெரிக்கா பேரன் கிட்ட பேசினீங்களா?"

"அவன் நாளைக்கு தான் இந்தியா வர்றான் குருஜி. ரெண்டு நாள் கழிச்சு தான் அவனைப் போய் பார்க்கணும். அதுக்கு முன்னாடி அவனைப் பத்தின தகவல்களும் சேகரிக்கணும்"

அவனைப் பற்றி எல்லாத் தகவல்களையும் சேகரித்து அறிந்திருந்த குருஜி மனதில் சொல்லிக் கொண்டார். "அவனும் புதிரானவன் தான்"

**************

மகேஷ் தந்தையிடம் சொன்னான். "அம்மா செய்யற அமர்க்களத்தைப் பார்த்தா அமெரிக்க ஜனாதிபதியே இந்த வீட்டுக்கு வர்ற மாதிரி தோணுது..."

விஸ்வநாதன் புன்னகை செய்தார். "அவளுக்கு அவங்கண்ணான்னா உயிர்டா. அவனோட மகன் முதல் தடவையா இங்க வரான்கிறதால அவளுக்குத் தலை கால் புரிய மாட்டேங்குது. இது வரைக்கும் அவள் அவனைப் பார்த்தது கூட இல்லை. அதான்...."

மகேஷ் எதுவும் சொல்லாமல் அமைதியாக இருந்தாலும் ஈஸ்வரின் வருகை அவனுக்கு சுத்தமாகப் பிடிக்கவில்லை. அம்மா மீனாட்சி மருமகன் வரவுக்கு செய்யும் ஆயத்தங்களும் அவனுக்குப் பிடிக்கவில்லை.

இது வரையில் பரமேஸ்வரனின் செல்லப் பேரனாக வலம் வந்த அவனுக்கு ஈஸ்வர் வரவு எல்லா விதங்களிலும் ஒரு போட்டி வரவாகத் தான் பட்டது. தாத்தாவிடம் கோடிக்கணக்கில் இருந்த சொத்துகளுக்கு தான் தான் ஒரே ஒரு வாரிசு என்று அசைக்க முடியாத நம்பிக்கையுடன் வளர்ந்தவன் அவன். மகனைப் பற்றி பேசுவதைக் கேட்கக் கூட விரும்பாதவராய் பரமேஸ்வரன் இருந்ததை மிக வரவேற்றவன் அவன். மீனாட்சி தன் அண்ணன் சங்கரிடம் அடிக்கடி பேசி வந்ததை ஆதரிக்காதவன் அவன். தன் அண்ணனைப் போன்ற ஜீனியஸ், தங்கமான மனிதன் உலகத்தில் யாரும் இருக்க முடியாது என்று அவள் அடிக்கடி சொல்வதை அவனால் ரசிக்க முடிந்ததில்லை. இன்று வரை மாதம் ஒரு முறை அண்ணன் அறைக்குச் சென்று அவர் வாங்கி இருந்த நூற்றுக் கணக்கான பதக்கங்களையும், கோப்பைகளையும் அவள் துடைத்து பொருட்காட்சிக்கு வைப்பது போல வரிசையாக வைத்து ஒரு முறை ரசித்து விட்டு வருவது அவனுக்குக் குழந்தைத்தனமாகப் பட்டது. அவன் தாயிடம் அதை ஜாடையாக சொல்லியும் பார்த்திருக்கிறான். ஆனால் இயல்பிலேயே வெகுளியான மீனாட்சி அவன் தாய் மாமனை அறியாததால் அப்படிப் பேசுகிறான் என்றும் அவனை சந்தித்திருந்தால் அந்த மாதிரி எல்லாம் பேச மாட்டான் என்றும் நினைத்திருக்கிறாள்.

எத்தனையோ முறை மீனாட்சி சங்கரிடம் போனில் பேசும் போது அவனையும் பேசச் சொல்லி இருக்கிறாள். வேண்டா வெறுப்பாக எப்போதாவது ஒரு முறை ஹலோ சொல்பவன் அவள் போன் பேசும் சந்தர்ப்பத்தில் முடிந்த வரை அந்த இடத்தில்

இல்லாமல் இருக்கக் கற்றுக் கொண்டிருந்தான். மாமா இறந்ததைக் கேள்விப் பட்ட போது, விட்டது சனியன் என்று அவன் நினைத்திருக்கிறான். என்றாவது மாமா திரும்பி வந்து தாத்தாவும் மாமாவும் சமாதானமாகி விட்டால் என்ன செய்வது என்ற பயம் அவன் மனதின் அடியில் இருந்தது தான் அதற்குக் காரணம். மாமா இறந்த பிறகு மாமாவின் மகன் ஈஸ்வரை ஒரு பொருட்டாக அவன் நினைத்ததே இல்லை. ஆனால் எதிர்பாராத விதமாக ஈஸ்வர் வருவது அவனுக்குள் பயத்தையும் ஏமாற்றத்தையும் ஏற்படுத்தியது. பரமேஸ்வரன் ஈஸ்வர் மீதும் பாசம் வைக்க ஆரம்பித்து விட்டால் என்ன செய்வது என்ற யோசனை பெரிதாக உருவாக ஆரம்பித்து விட்டது.

தாத்தா ஈஸ்வர் வரவைப் பற்றி என்ன நினைக்கிறார் என்று அறிந்து கொள்ள அவன் நிறைய முயற்சி செய்தான். ஆனால் அதை அவனால் கண்டு பிடிக்க முடியவில்லை. ஈஸ்வர் வருகையைப் பற்றி அவரிடம் பேச்சு வாக்கில் சொல்லிப் பார்த்திருக்கிறான். ஆனால் அவர் அது காதில் விழாதது போலவே இருந்தாரே ஒழிய ஆதரவாகவோ, எதிராகவோ எதுவும் சொல்லவில்லை.

“அம்மா எங்கே?” மகேஷ் தந்தையிடம் கேட்டான்.

“கிழவி கிட்ட லாப் டாப்பை எடுத்துகிட்டு போயிருக்கிறாள்...” விஸ்வநாதன் சொன்னார்.

“கிழவிக்கு என்ன கம்ப்யூட்டரில் திடீர்னு ஈடுபாடு”

”ஈஸ்வர் பத்தி தினமும் ஏதாவது இண்டர்நெட்டில் கிழவி தேடித் தேடி படிக்குது. ஃபேஸ் புக்குல எல்லாம் போய் அவனைப்பத்தி படிக்குது...”

மகேஷ் திகைப்புடன் தந்தையைப் பார்த்தான். ஆனந்தவல்லிக்கு தன் மகன் பரமேஸ்வரனைத் தவிர யாருமே மனிதர்களாகத் தென்பட்டதாக அவன் அறியவில்லை. மகனைப் பார்த்து மட்டும் அவள் புன்னகைப்பாள். பேத்தியிடம் ஓரளவாவது முகத்தை இயல்பாக வைத்திருப்பாள். ஆனால் விஸ்வநாதனையும், மகேஷையும் பார்க்கும் போதெல்லாம் அவள் முகத்தில் மெலிதான அலட்சியம் கலந்த இகழ்ச்சி என்றுமே நிலவும். அவள் தகுதிக்கு அவர்கள் குறைந்தவர்கள் என்பது போன்ற பாவனையுடன் தான் அவள் என்றுமே பார்ப்பாள். அவர்களை ஒரு பொருட்டாக அவள் என்றும் நினைத்ததே இல்லை. அது அவர்கள் இருவருக்கும் பெருத்த கோபத்தை ஏற்படுத்தியது. தன் மனதில் தோன்றியதை எல்லாம் அபூர்வமாக மட்டுமே வெளியிடும் விஸ்வநாதன் தன் கோபத்தை வெளிப்படுத்தியதில்லை. ஆனால் மகேஷ் அதைத் தாங்க முடியாமல் தாத்தாவிடமே புகார் செய்திருக்கிறான்.

பரமேஸ்வரன் பேரனை சமாதானப்படுத்தி இருக்கிறார். “எங்கம்மா எப்பவுமே அப்படித்தான். மாத்த முடியாத கேஸ் அது. கண்டுக்காதே...”

அப்படிப்பட்ட ஆனந்தவல்லி ஈஸ்வரைப் பற்றி அறிந்து கொள்ள ஆர்வம் காட்டியதை மகேஷால் சகித்துக் கொள்ள முடியவில்லை. ஆனந்தவல்லிக்கு தனிப்பட்ட சொத்துக்கள் நிறைய இருந்தன.... ”கிழவிக்கு என்ன ஈஸ்வர் மேல திடீர் அக்கறை. இத்தனை காலம் அவன் இருக்கானா செத்தானான்னு கூட கிழவி தெரிஞ்சுக்க விரும்பினதில்லை....”

”கிழவியோட புருஷன் பார்க்க அப்படியே அவன் மாதிரி அழகாய் இருப்பாராம். உங்கம்மா அவன் ஃபோட்டோவைக் காண்பிச்ச பிறகு கிழவியும் உங்க தாத்தாவும் திகைச்சுப்

போயிட்டாங்களாம்... அவனைப் பத்தி உங்க தாத்தா அப்புறம் எதுவும் பேசலையாம்.. ஆனா கிழவி அவனைப் பத்தி பேசறதை அப்புறம் நிறுத்தலையாம்..."

'அம்மாவுக்கு ஏன் இந்த வேண்டாத வேலை' என்று மகேஷ் மனதில் நினைத்துக் கொண்டான். சிறிது யோசித்து விட்டு தந்தையிடம் கேட்டான். "வர்றவன் எத்தனை நாள் இருப்பானாம்?"

'தெரியலை" என்ற விஸ்வநாதன் குரலைத் தாழ்த்திக் கொண்டு மகனிடம் சொன்னார். "அவனைப் பிடிக்குதோ இல்லையோ அதை வெளிப்படையாக அவன் கிட்ட காண்பிச்சுக்காதே. அவன் அமெரிக்கால நல்ல வேலையில் இருக்கிறவன். அதனால இங்கே ஒண்ணும் நிரந்தரமா தங்கிடப் போறதில்லை.... ஏதோ கொஞ்ச நாள் தான் இங்கே இருக்கப் போறான். அது வரைக்கும் நல்லா நட்பாவே இரு"

மகேஷ் தலையாட்டினான். பல விஷயங்களில் அவனும் அவரும் ஒத்துப் போனார்கள். அதனால் அவரிடம் அவனால் மனம் விட்டு பல விஷயங்களைப் பேச முடிந்தது. அவர் சொல்லுக்கு அவன் மதிப்பும் வைத்து இருந்தான். அவர் சொன்னது போல ஈஸ்வரை சில நாட்கள் சகித்துக் கொள்வது என்று தீர்மானித்தான். ஆனால் ஈஸ்வரை சகித்துக் கொள்வது எத்தனை கஷ்டம் என்பதை அவன் உணர்ந்திருக்கவில்லை...

**************

"நாளைக்கு ஃப்ளைட் எத்தனை மணிக்கு வருதுடி?" ஆனந்தவல்லி பேத்தியைக் கேட்டாள்.

"காலைல ஆறு மணிக்கு பாட்டி"

*”கூட்டிகிட்டு வர யாரு போறீங்க?”*

*மீனாட்சி உடனடியாகப் பதில் சொல்லாமல் எதிரே அமர்ந்திருந்த தந்தையைப் பார்த்தாள். பரமேஸ்வரன் பேசப்படும் விஷயத்துக்கு சம்பந்தமே இல்லாதவர் போல அமர்ந்திருந்தார்.*

*மீனாட்சி சொன்னாள். “நான் மட்டும் தான் போகணும் போல இருக்கு... மகேஷைக் கூப்பிட்டேன். ஆறு மணிக்கு ஏர்போர்ட்டுல இருக்கணும்னா இங்கிருந்து அஞ்சே காலுக்காவது கிளம்பணும். அத்தனை சீக்கிரம் காலைல எழுந்திருக்க முடியாதுன்னுட்டான். அவங்கப்பா கிட்ட கேட்டேன்... அவரும் அதே தான் சொல்றார்... ஈஸ்வர் முதல் தடவையா வர்றான். வெறும் டிரைவரை மட்டும் அனுப்ப முடியுமா?...”*

*“அவனுக்கு எந்த அறையை ஒதுக்கி இருக்கே?”*

*“அண்ணா அறையை தான்”*

*“அதுல பாதி அவன் வாங்கின மெடலு, கப்புன்னு அடுக்கி வச்சிருந்தியே. அதை எல்லாம் அப்புறப்படுத்திட்டியா?”*

*”சேச்சே... அப்படியே தான் வச்சிருக்கேன்.. அவங்கப்பா ஆரம்பத்துல இருந்து வாங்கின அத்தனை பரிசுகளையும் அவன் பார்க்க வேண்டாமா... அதான்..”*

*”ஏண்டி மனுசன் சௌகரியமா தங்க வேண்டாமா?..”*

*"சௌகரியத்தை விட முக்கியமான விஷயங்கள் நிறைய இருக்கு பாட்டி.. உங்களுக்குப் புரியாது..."*

*பேத்தியை முறைத்து விட்டு ஆனந்தவல்லி மகனிடம் சொன்னாள். "மருமகன் வர்றான்னவுடனேயே இவளுக்கு வாய் ஜாஸ்தியாயிடுச்சு..."*

*பரமேஸ்வரன் அவரையும் மீறி புன்முறுவல் பூத்தார்.*

*அன்றிரவு அந்த வீட்டில் யாருமே சரியாக உறங்கவில்லை. எல்லோர் நினைவிலும் ஏதோ ஒரு விதத்தில் ஈஸ்வர் இருந்தான்....*

# அத்தியாயம் - 17

*பார்த்தசாரதியை அனுப்பியவுடன் முதல் வேலையாக குருஜி போனில் ஒரு நபருடன் பேசினார். பார்த்தசாரதியுடன் நிகழ்ந்த சந்திப்பை விவரமாகச் சொன்னார். குருஜியைப் போலவே அந்த நபரும் பார்த்தசாரதி சொன்ன தகவலைக் கேட்டுத் திகைத்தது போலத் தான் தெரிந்தது. அந்த நபர் மௌனம் சாதித்தார்.*

*"நீ என்ன நினைக்கிறாய்?"*

*"என்ன நினைக்கிறதுன்னு தெரியலை குருஜி... இந்த விஷயத்தை நானும் முதல் தடவையா தான் கேள்விப்படறேன். வேற யாரும் இதை என் கிட்ட சொன்னதில்லை..."*

“கிழவியைத் தவிர அந்தக் காலத்து ஆள்கள் அங்கே யாருமே இல்லையே.. ஆனா கிழவி கூட முழுசா கேட்டு தெரிஞ்சுக்கலை... நம்பாதது காரணமாய் இருக்கலாம்...”

”ஆனா நீங்க பார்த்தசாரதி கிட்ட சொன்னபடி இத்தனை காலம் – நம்ம கணக்குப்படி ஆயிரம் வருஷம் – அந்த சிவலிங்கம் யார் யார் கைக்குப் போகணும்கிறதை ஆரம்ப ஆட்களே தீர்மானிச்சுகிட்டு இருக்க முடியாது. அப்படி தீர்மானிக்கிற ஆட்கள் அந்தந்த காலத்துக் காரங்கன்னா அந்த ஆள்களைத் தீர்மானிக்கிறது யாருன்னு கேள்வி வருது....”

”அதே நேரத்துல பசுபதி கைல வர்ற வரைக்கும் அப்படி யாரோ தேர்ந்தெடுத்து வந்த மாதிரி தான் பசுபதியோட அப்பா நினைச்ச மாதிரி இருக்கு... பசுபதி கூட தன் சாவை முதல்லயே எதிர்பார்த்தது, தனக்குப் பின்னால தம்பி பேரன் ஈஸ்வர் பேரைச் சொல்லிட்டு போனது, அவனும் அதை மதிச்சு இந்தியா வர்றது எல்லாம் அலட்சியம் செய்ய முடியாத விஷயங்கள்... இதுல அந்த சிவலிங்கத்து மேல இருந்த வித்தியாசமான பூக்கள் வேற குழப்புது... உன் ஆள் அதை எனக்கு அனுப்பி இருந்தான்... எனக்கும் அந்த வகை பூக்களை இது வரைக்கும் பார்த்ததாய் ஞாபகம் இல்லை.... அந்தப் பூக்களை ஒரு ஆராய்ச்சியாளர் நண்பருக்கு அனுப்பி இருக்கிறேன்....”

”அந்தக் காமிரா மாட்டினதுக்கப்புறம் வித்தியாசமாய் எதையும் பார்க்கலைன்னு என் ஆள் சொன்னான்.. நீங்க அது சாமி வேலை அல்ல ஆசாமி வேலைன்னு சொன்னதையும் சொன்னான்... குருஜி நீங்க சொல்ற மாதிரி ஆசாமி வேலைன்னா அது நமக்கு ஆபத்தான செய்தி தான்....”

கேட்ட குரலில் லேசான பயத்தைப் படிக்க முடிந்த குருஜி புன்னகை செய்தார். பின் தைரியப்படுத்தும் விதமாகச் சொன்னார். “பயப்பட ஒண்ணும் இல்லை... சிவலிங்கம் உள்பட எதுவுமே நம் கை மீறிப் போகலை... அதனால பயப்படாதே.. நான் அலட்சியம் செய்ய முடியாத விஷயங்கள்னு சொன்னதும், ஆசாமி வேலைன்னு சொன்னதும் பயப்படுத்த அல்ல... நாம் தெரிஞ்சுக்க வேண்டிய விஷயங்கள் இன்னும் இருக்குன்னு சொல்ல வந்தேன்... போலீசும், ஈஸ்வரும் அதை தெரிஞ்சுக்கறதுக்கு முன்னாடி நாம தெரிஞ்சுக்கறது முக்கியம்னு சொல்ல வந்தேன்.. நமக்கு தெரிஞ்சுக்க எங்கே போகணும், என்ன செய்யணும்னு தெரியும்.... அவங்களுக்குத் தெரியாது... அதனால நாம சீக்கிரமா செயல்படணும்...”

“புரிஞ்சுது குருஜி. நான் நாளைக்கே கிளம்பறேன்”

**************

விமான நிலையத்தில் மீனாட்சி மருமகனுக்காகக் காத்திருந்தாள். ஈஸ்வர் வரும் விமானம் இன்னும் இருபது நிமிடங்களில் வந்து விடும் என்று சொன்னார்கள். காத்திருக்கையில் மனம் தானாக அண்ணனின் நினைவுகளில் ஆழ்ந்தது....

சங்கரைப் போன்ற ஒரு அறிவாளியை அவள் இது வரையில் பார்த்ததில்லை. அவளுக்கு அவனைப் போல் படிப்பு சிறப்பாக வந்ததில்லை. எல்லா சந்தேகங்களையும் அண்ணனிடம் தான் கேட்பாள். சில சமயங்களில் அவள் ஒரு சந்தேகத்தையே பல முறையும் கேட்பாள். முதல் தடவை சொல்லித் தரும் போதிருக்கும் அதே பொறுமை தான் பத்தாவது தடவை சொல்லும் போதும் அவனுக்கு இருக்கும். சிறு சலிப்பு கூட அவன் குரலிலோ, முகத்திலோ யாரும் கண்டு பிடிக்க முடியாது. இப்போது யோசித்தாலும் அண்ணன் பொறுமை மகத்தானது என்று அவளுக்குத் தோன்றுகிறது. இரண்டாவது தடவை ஏதாவது சொல்ல

நேர்ந்தால் கூட அவள் மகன் மகேஷே சலித்துக் கொள்கிறான். “என்னம்மா, ஒரு தடவை சொன்னால் புரியாதா?”.

என்றுமே அவள் அண்ணன் தன்னை உயர்ந்தவனாகவும், அவளைக் குறைந்தவளாகவும் நினைத்ததில்லை. யாரிடமும் தங்கையை அவன் விட்டுக் கொடுத்ததில்லை. தங்கை மேல் அவன் உயிரையே வைத்திருந்தான். பரமேஸ்வரன் அந்த நாட்களில் அண்ணனையும் தங்கையையும் பாசமலர் சிவாஜி கணேசன், சாவித்திரி என்று கிண்டல் செய்வார். அந்தக் கிண்டலிலும் ஒரு பெருமிதம் இருக்கும்.

அப்படிப்பட்ட அண்ணனை அவன் திருமண நாளிற்குப் பிறகு அவள் நேரில் சந்தித்ததில்லை. அண்ணனும் தங்கையும் கடைசி வரை போனில் மட்டுமே பேசிக் கொண்டிருந்திருந்தார்கள். அவளுடைய திருமணத்திற்கு முன் அவள் போனில் அழுதிருக்கிறாள். “நீ இல்லாமல் எனக்கு கல்யாணம் நடக்க வேண்டாம்... நீ வீட்டுக்கு வராட்டி பரவாயில்லை. மண்டபத்துக்காவது வாண்ணா... நான் வேணும்னா அப்பா கிட்ட நீ வந்தா தான் நான் கல்யாணம் செய்துக்குவேன்னு சொல்லிடட்டுமா”

அண்ணனின் வார்த்தைகள் இப்போதும் அவளுக்கு நினைவிருக்கிறது. “மீனாட்சி... இப்ப அவருக்கு நீ ஒருத்தி தான் கொஞ்சமாவது ஆறுதலா இருக்கே. நீ அப்படி சொல்லிட்டா அவரால தாங்க முடியாதும்மா.. இனியும் அவர் மனசு நோக வேண்டாம்மா... உன் அண்ணன் மனசளவுல அங்கே தான் இருப்பேன்ம்மா. கல்யாணத்துக்கு நான் வந்தா அப்பா காயத்தை நான் திரும்பக் கீறி விட்ட மாதிரி இருக்கும்..”

விமானம் வந்ததை அறிவித்தார்கள். அவளுடைய பரபரப்பு அதிகமாகியது. பார்க்க ஈஸ்வர் எப்படி இருப்பான் என்று

அவளுக்குத் தெரியும். ஒருசில முறை பேசியதில் அவளுடைய அண்ணன் அளவுக்கு அவன் சாது அல்ல என்றும் தெரியும். அண்ணன் சொல்லியும், பாட்டிக்காக இணையத்தில் அவனைப் பற்றி நிறைய படித்தும் அவன் புத்திசாலித்தனமும் தெரியும். ஆனால் தனிப்பட்ட முறையில் இன்னும் அவன் எப்படி என்பது பிடிபடவில்லை....

வெளியே வரும் பயணிகள் ஒவ்வொருவராகப் பார்த்தபடி நின்றவள் அவனைப் பார்த்தவுடன் மகிழ்ச்சியுடன் கையசைத்தாள். அவன் புகைப்படங்களில் பார்த்ததை நேரில் கூடுதலாக அழகாகவும், கம்பீரமாகவும் இருப்பதாகத் தோன்றியது.

மீனாட்சியைப் பார்த்த அவன் புன்னகை செய்தபடி அவளை நெருங்கினான். அண்ணன் நினைவு ஒரேயடியாக அவளை ஆக்கிரமிக்க அது ஒரு பொது இடம் என்பதைக் கூட மறந்தவளாக அவனைக் கட்டிக் கொண்டு கதறி அழுதாள்...

ஈஸ்வர் அவளுடைய அழுகையை சிறிதும் எதிர்பார்த்திருக்கவில்லை. ஆனால் அவள் மனநிலையை அவனால் படிக்க முடிந்தது. அவளுடைய அண்ணன் இறந்த பின் முதல் முதலாக அண்ணனின் மகனைப் பார்க்கும் போது அவளால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. இந்த அழுகை அவளுடைய அண்ணனுக்காக!...

ஒருவாறு தன்னை சுதாரித்துக் கொண்ட மீனாட்சிக்கு அவன் தன்னைப் பற்றி என்ன நினைப்பான் என்று வெட்கமாக இருந்தது. அவன் டீ ஷர்ட் அவளது கண்ணீரில் நன்றாக ஈரமாகி இருந்தது. “மன்னிச்சுக்கோ... ஈஸ்வர்... நான் என்னவோ சின்னக் குழந்தை மாதிரி....”

ஈஸ்வர் நெகிழ்ச்சியுடன் சொன்னான். “பரவாயில்லை அத்தை...”. அவளுடைய ஆயிரம் வார்த்தைகள் சொல்லி இருக்க முடியாத பாசத்தை அவளுடைய ஐந்து நிமிட அழுகை அவனுக்கு உணர்த்தியது.

மீனாட்சி மகேஷை அழைத்து வராதது நல்லதாகப் போயிற்று என்று நினைத்துக் கொண்டாள். அவன் இங்கே இருந்திருந்தால் பல்லைக் கடித்துக் கொண்டு “என்னம்மா நீ சுத்த பட்டிக்காடாட்டம்...” என்று சீறி இருப்பான்.

மீனாட்சி ஈஸ்வரிடம் கேட்டாள். “அண்ணி எப்படி இருக்காங்க?”

“அம்மா சௌக்கியமா இருக்காங்க அத்தை”

இருவரும் விமான நிலையத்தில் இருந்து வெளியே வந்தார்கள். வெளியே சூரியன் சிவப்பாய் உதயமாகிக் கொண்டிருந்தான். ஈஸ்வர் சூரியனை ரசித்தபடி நடந்தான். காரில் ஏறும் போது கேட்டான். “வீடு எவ்வளவு தூரம்?”

“35 கிலோ மீட்டர் இருக்கும்... ஏன் கேட்கிறாய்?”

“இல்லை இந்த அதிகாலைல இங்க வர்றதுக்கு நீங்க எத்தனை மணிக்கு எழுந்து கிளம்பி இருப்பீங்கன்னு நினைச்சேன்....”

மீனாட்சிக்கு அண்ணன் நினைவு வந்தது. சங்கரின் பிறந்த நாளிற்கு அவள் அதிகாலை சீக்கிரமே எழுந்து நிறைய பட்சணங்கள் செய்வாள். சாப்பிடும் போது சங்கர் கரிசனத்துடன் தங்கையைக்

***கேட்பான். "நீ எத்தனை மணிக்கு எழுந்திருந்தாய் இத்தனை செய்வதற்கு?"***

***மீனாட்சி கண்கள் ஈரமாக மருமகனைப் பார்த்தாள். அப்பாவைப் போலவே பிள்ளையும் இருக்கிறான். சின்னச் சின்ன விஷயங்களைக் கூட ஆழமாய் கவனிக்கிறான்... "நாலு மணிக்கு எழுந்திருச்சுட்டேன். அஞ்சே காலுக்கு கிளம்பினேன்...."***

***"நான் ஒரு டாக்சியிலயே வந்திருப்பேனே அத்தை... உங்களுக்கேன் சிரமம்"***

***"இதுல என்ன சிரமம் இருக்கு.... நீ முதல் முதலா வந்திருக்கே..."***

***ஈஸ்வருக்கு அத்தையின் கண்கள் மறுபடி ஈரமானதற்கு காரணம் விளங்கவில்லை. அத்தை அன்பு நிறைந்தவளாகவும், வெள்ளை மனதுடையவளாகவும் இருந்தது பிடித்திருந்தது. அப்பா அவளைக் காரணம் இல்லாமல் அவ்வளவு நேசிக்கவில்லை என்று தோன்றியது. அவர் வாழ்ந்த வரை ஒவ்வொரு ஞாயிறும் தங்கைக்காக அரை மணி நேரம் ஒதுக்கி பேசுவார். அந்த அரை மணி நேரத்தில் இருபது நிமிடம் பேச்சு அவர்களுடைய தந்தையைப் பற்றியதாக இருக்கும். அதை ஈஸ்வர் அவரிடம் எப்போதும் கிண்டலடிப்பான். "ஒரு ஸ்பெஷலான அப்பா. எப்ப பார்த்தாலும் அவரைப் பத்தியே பேச்சு..."***

***ஆனால் எப்போதுமே சங்கர் தன் தந்தையை விட்டுக் கொடுத்ததில்லை. "ஆமாடா எங்கப்பா ஸ்பெஷலானவர் தான்" என்பார்.***

*”ஆமா. மகன் தன் இஷ்டப்படி கல்யாணம் செய்துட்டான்கிறதுக்காக இருபது வருஷத்துக்கு மேல ஆன பிறகும் ஒரு தடவை கூட பேசணும்னு தோணாத அப்பா ஸ்பெஷல் தான்”*

*சங்கர் பதில் சொல்ல மாட்டார். ஒரு முறை விடாப்பிடியாக ஈஸ்வர் பரமேஸ்வரனை படுமோசமாக விமரிசித்து விட சோகம் முகத்தில் இழையோட சங்கர் சொன்னார். “உனக்கு சொன்னா புரியாது ஈஸ்வர். எங்கப்பா என்னை நேசிச்ச மாதிரி உலகத்துல எந்த அப்பாவும் தன் பிள்ளையை நேசிச்சிருக்க முடியாது”*

*அதனாலேயே அவருடைய மரணத்திற்குப் பின் பரமேஸ்வரன் மேலுள்ள கோபம் பெருங்கோபமாக அவன் மனதில் குமுற ஆரம்பித்தது. அவனால் அவரை மன்னிக்க முடியவில்லை.*

*அவன் முகத்தில் இறுக்கம் தெரிந்ததைக் கவனித்த மீனாட்சி “என்ன ஆச்சு ஈஸ்வர்?”*

*“உங்கப்பாவை நினைச்சேன்”*

*மீனாட்சிக்கு முகம் வாடியது. ’நினைக்கும் போதே இப்படி முகம் மாறுகிறானே? தாத்தாவுக்கும் பேரனுக்கும் இடையே சுமுக உறவு வரவழைக்க முடியுமா?’*

*‘எங்கப்பா உனக்கு ஒண்ணுமில்லையா? அன்னைக்கு போனில் பேசறப்ப கூட சார்னு கூப்பிடறே!”*

*“சார்னாவது கூப்பிட்டேனேன்னு சந்தோஷப்படுங்க அத்தை”*

சற்று முன் அப்பாவைப் போலவே பிள்ளை என்று நினைத்து சந்தோஷப்பட்ட மீனாட்சி இது போன்ற கோபம் சங்கருக்கு என்றுமே யார் மீதும் வந்ததில்லை என்பதை நினைவுகூர்ந்தாள்.

ஈஸ்வர் பேச்சை மாற்றினான். மகேஷ் பற்றியும் விஸ்வநாதன் பற்றியும் விசாரிக்க ஆரம்பித்தான்.

மகனைப் பற்றி சொல்லும் போது மீனாட்சி சொன்னாள். "...அவன் காலைல எழுந்திருக்கிறதுல கொஞ்சம் சோம்பேறி. லேட்டா தான் எழுந்திருப்பான். இல்லாட்டி இன்னைக்கு என் கூட அவனும் ஏர்போர்ட் வந்திருப்பான்..."

தன் மகனைப் பற்றி அவன் குறைவாய் நினைத்து விடக் கூடாது என்று அவள் சொன்ன சின்னப் பொய்யை ஈஸ்வரால் புரிந்து கொள்ள முடிந்தது. அத்தையைப் பார்த்து சின்னதாய் அவன் புன்னகைத்தான்.

கடுகடுவென்று இருந்த அவன் முகம் புன்னகைக்கு மாறியது மீனாட்சி ஆசுவாசத்தைத் தந்தது. மகனின் பெருமைகளை அவள் சந்தோஷமாக மருமகனிடம் சொல்ல ஆரம்பித்தாள். ஈஸ்வர் புன்னகையோடு கேட்டுக் கொண்டே வந்தான்.

வீடு வந்து சேர்ந்தார்கள்.

# அத்தியாயம் - 18

கார் வந்து நின்ற சத்தம் கேட்டு மூன்று பேர் தங்கள் தங்கள் அறை ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தார்கள். அவர்கள் பரமேஸ்வரன், விஸ்வநாதன் மற்றும் மகேஷ். மூவருக்கும்

நேரடியாக ஈஸ்வரை முதலில் சென்று சந்திக்கத் தயக்கம் இருந்தது. ஆனால் அதே சமயத்தில் அவன் நேரில் பார்க்க எப்படி இருக்கிறான் என்பதை தெரிந்து கொள்ளும் பரபரப்பும் அவர்களிடம் இருந்தது.

காரிலிருந்து இறங்கிய ஈஸ்வரைப் பார்த்த பரமேஸ்வரன் திகைத்தே தான் போனார். என்ன தான் முன்பு போட்டோக்களில் பார்த்து அவருடைய தந்தையைப் போலவே இருக்கிறான் என்று தெரிந்திருந்தாலும் நேரில் பார்க்கையில் உருவம் மேலும் நுணுக்கமாக அதை அறிவித்ததை அவர் உணர்ந்தார். காரிலிருந்து இறங்கிய மீனாட்சி சொன்னாள். “இது தான் நம்ம வீடு...”

ஈஸ்வர் அந்த வீட்டைப் பார்த்தான். அரண்மனை போன்ற வீடு என்று அவனுடைய தந்தை வர்ணித்தது அதிகப்படி இல்லை என்று அவனுக்குத் தோன்றியது. அவனுடைய தந்தை பிறந்து வளர்ந்த வீடு என்று எண்ணிய போது மனம் லேசானது. மீனாட்சியைப் பார்த்து அவன் புன்னகைக்க அவளும் புன்னகைத்தாள். பார்த்துக் கொண்டிருந்த பரமேஸ்வரனுக்கு மகன் நினைவுக்கு வந்தது. அண்ணனும் தங்கையும் அடிக்கடி ஒருவரை ஒருவர் பார்த்துப் புன்னகைத்துக் கொள்வார்கள்...

விஸ்வநாதன் ஈஸ்வரை மிக உன்னிப்பாகப் பார்த்தார். இவன் கண்டிப்பாக அவருடைய மகனுக்கு இந்த வீட்டில் பெரிய போட்டியை ஏற்படுத்துவான் என்பது முதல் பார்வையிலேயே அவருக்குப் புரிந்தது. அதிருப்தி அவரை ஆட்கொண்டது.

மகேஷ் ஈஸ்வரைப் பொறாமையுடன் பார்த்தான். பிரயாணக் களைப்பில் கூட அவன் அழகாய் தெரிந்ததும், வீட்டின் மதிப்பு என்னவாக இருக்கும் என்பது போல பார்வையால் வீட்டை அளந்ததும் அவனுக்கு சுத்தமாகப் பிடிக்கவில்லை. மீனாட்சியுடன் ஈஸ்வர் மிக நெருங்கி விட்டது போலத் தெரிந்ததும் அவனுக்குப்

பிடிக்கவில்லை. மீனாட்சியைப் போலவே பரமேஸ்வரனும் ஈஸ்வருடன் மிக நெருக்கமாகி விட்டால் என்று நினைத்த போது அவனுக்கு வயிற்றைக் கலக்கியது.

ஆனந்தவல்லி அரை மணி நேரத்திற்கு முன்னதாகவே ஹாலில் வந்து அமர்ந்திருந்தாள். அதிகாலையில் எழுந்து குளித்து கொள்ளுப் பேரனை முதலில் பார்த்துப் பேசுவது தானாகத் தான் இருக்க வேண்டும் என்று எண்ணியவளாக ஹாலில் அமர்ந்திருந்தவள் கார் வந்து நின்ற சத்தம் கேட்டவுடன் ஆவலுடன் வாசலைப் பார்த்தாள். வெளியே இருந்து பேரன் உள்ளே நுழைய ஆன தாமதம் அவளை இருப்பு கொள்ளாமல் தவிக்கச் செய்தது.

மருமகனுடன் உள்ளே நுழைந்த மீனாட்சி ஹாலில் பாட்டியைப் பார்த்தவுடன் ஆச்சரியப்பட்டாள். ஆனந்தவல்லி ஹாலிற்கு வருவது மிக அபூர்வம். அதிகமாக அவள் அறையிலேயே இருப்பவள் சில சமயங்களில் பரமேஸ்வரன் அறைக்குச் செல்வதுண்டு. மற்றபடி தன் அறை வாசலில் நின்று கொண்டு மற்றவர்களை நோட்டமிடுவாளே தவிர ஹால் வரை அதிகம் வருவதில்லை.

பேத்தியின் முகத்தில் தெரிந்த ஆச்சரியத்தைக் கவனிக்கும் மனநிலையில் ஆனந்தவல்லி இருக்கவில்லை. அவளுடைய கணவரின் அச்சில் அழகாக வந்து நின்ற ஈஸ்வரைப் பார்த்த போது அவள் ஒரு கணம் தன் இளமைக் காலத்திற்கே சென்று விட்டாள். அந்த அழகில் மயங்கி ”கட்டினால் இவனைத் தான் கட்டுவேன், இல்லா விட்டால் எனக்குக் கல்யாணமே வேண்டாம்” என்று பிடிவாதம் பிடித்து திருமணம் செய்து கொண்டவள் அவள். ஜமீன்தாரான அவள் தந்தை அந்தஸ்தில் தங்களை விட சற்று குறைந்தவரான சாந்தலிங்கத்திற்கு அரைமனதோடு தான் மகளைக் கட்டிக் கொடுத்தார்....

“இது தான் உன்னோட கொள்ளுப்பாட்டி” என்று மீனாட்சி ஈஸ்வரிடம் ஆனந்தவல்லியை அறிமுகப்படுத்தினாள்.

மனதில் என்ன தான் அவன் மீது தனிப்பாசம் பிறந்திருந்தாலும் தன் முகத்தில் அதை ஆனந்தவல்லி காட்டவில்லை. அவனைத் தன் வழக்கமான அலட்சியப் பார்வையே பார்த்தாள். ஆனந்தவல்லி பற்றி தந்தையிடம் நிறையவே கேட்டுத் தெரிந்து வைத்திருந்த ஈஸ்வருக்கு அவள் மேல் நல்ல அபிப்பிராயம் எதுவும் பெரிதாக இருக்கவில்லை. சங்கரும் மீனாட்சியும் தாயில்லாப் பிள்ளைகளாக இருந்த போதும் அவர்களை தாயின் ஸ்தானத்தில் இருந்து பார்த்துக் கொள்ள அவள் முன்வரவில்லை என்பது மட்டுமல்ல குழந்தைகள் என்றால் இருக்கும் இடம் தெரியாமல் இருக்க வேண்டும். வீட்டில் சத்தமிட்டு ஓடியாடி விளையாடுவதோ, பெரியவர்களைத் தொந்திரவு செய்வதோ கூடாது என்ற கொள்கையில் அவள் என்றும் இருப்பவள் என்று சங்கர் மகனிடம் சொல்லி இருந்தார். அதனால் அவனும் அவளை அலட்சியப் பார்வையே பார்த்தான்.

இதை எதிர்பார்த்திராத மீனாட்சி இருவரையும் மாறி மாறி பார்த்து விட்டு ஈஸ்வரிடம் சொன்னாள். “உட்கார் ஈஸ்வர்”

ஈஸ்வர் ஆனந்தவல்லிக்கு எதிரில் இருந்த சோபாவில் அமர்ந்து சோம்பல் முறித்தான். அவனாக வணக்கம் தெரிவிப்பான், பேசுவான் என்று எதிர்பார்த்து ஏமாந்த ஆனந்தவல்லி சிறிது பொறுத்துப் பார்த்தாள். அவன் பார்வையோ ஹாலில் மாட்டியிருந்த பெரிய பெரிய புகைப்படங்களில் தங்கியது. ஆனந்தவல்லி-சாந்தலிங்கம், பரமேஸ்வரன்-அவர் மனைவி விசாலாட்சி, மீனாட்சி-விஸ்வநாதன் ஜோடிப் புகைப்படங்களும், தனித்தனியாக பசுபதி, மகேஷ் புகைப்படங்களும் அலங்கரித்துக் கொண்டிருந்தன. அவன் தந்தையின் படம் அங்கிருக்கவில்லை. அதைக் கவனித்த பின் அவன் முகம் இறுகியது. அவன் பார்வை போன இடமும், அவன் சிந்தனை

போன விதமும் புரிந்த போது மீனாட்சியின் மனம் சங்கடப்பட்டது. அவனை ஆனந்தவல்லியும் கவனிக்கவே செய்தாள். இவனை சமாளிப்பது கஷ்டம் தான் என்பது புரிய சிறிது யோசித்து விட்டு அனந்தவல்லி திடீரென்று கேட்டாள். ”ஏண்டா கல்யாணம் ஆயிடுச்சா?”

பார்வையை அவள் மீது திருப்பியவன் அலட்சியமாகச் சொன்னான். “இல்லை”

“ஏதாவது பொண்ணு பார்த்து வச்சிருக்கியாடா?”

இந்தப் பாட்டிக்கு என்ன ஆயிற்று, இந்தக் கேள்விகளை பார்த்த முதல் நிமிடத்திலேயே கேட்கிறாள் என்று மீனாட்சி திகைத்தாலும் அவன் கவனத்தைத் திருப்புவதற்கு இது உதவும் என்று திருப்தி அடைந்தாள். பார்த்தவுடனே முதலில் கேட்கப்படும் இந்தக் கேள்விகள் ஈஸ்வரையும் ஆச்சரியப்படுத்தியது. அவள் குடும்ப கௌரவம், அந்தஸ்து போன்றவற்றில் எல்லாம் ஆழ்ந்த கருத்துக்கள் உடையவள் என்று கேள்விப்பட்டிருந்த ஈஸ்வர் அவளுக்கு அலட்டிக் கொள்ளாமல் பதில் தந்தான்.

”இல்லை. இந்தியாவில் தான் ஒரு பெண்ணைப் பார்க்கணும்னு இருக்கேன். ஒரு சேரிப் பெண்ணாய் பார்த்து கல்யாணம் செய்துகிட்டு இங்கேயே செட்டில் ஆயிடலாம்கிற எண்ணம் இருக்கு. கல்யாணம் செய்துட்டு நாலஞ்சு பெத்துகிட்டு இந்த வீடெல்லாம் இஷ்டத்துக்கு சுத்தி ஜாலியா விளையாட விடணும்னு நினைச்சுகிட்டிருக்கேன்....”

*மீனாட்சி சிரிப்பைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டாள். பாட்டியிடம் இந்த மாதிரி யாரும் பேசியது இல்லை. அவ்வளவு தைரியம் யாருக்கும் வந்ததும் இல்லை....*

*ஆனந்தவல்லி ஈஸ்வரை முறைத்துப் பார்த்தாள். அவன் அவளையே சலனமே இல்லாமல் பார்த்தான். அவள் பார்வையை நீண்ட நேரம் சந்திக்க முடிந்தவர்கள் யாரும் இருந்தது இல்லை. ஆனால் விதிவிலக்காய் அவன் வந்திருக்கிறான்.*

*“நீ திமிர் பிடிச்சவன் தான்....” ஆனந்தவல்லி சொன்னாள்.*

*“அங்கே எப்படி?” அவன் அலட்டிக் கொள்ளாமல் கேட்டான்.*

*ஆனந்தவல்லி தன்னையுமறியாமல் புன்னகைத்தாள். ஆரம்பத்திலேயே இடக்கு முடக்காக அவன் பேசினாலும் அவனை அவளுக்குப் பிடித்திருந்தது. கல்யாணம் ஆன புதிதில் அன்னியோன்னியமான ஒரு நேரத்தில் கணவனிடம் அவள் சொல்லி இருக்கிறாள். “நீங்க இந்த அளவு பொறுமையா சாதுவா இருக்கிறது எனக்கு அவ்வளவா புடிக்கலை... இதுக்கு பதிலா கொஞ்சம் திமிர், கோபம் இருந்தால் கூட தேவலை...”*

*அவர் சிரித்துக் கொண்டே சொல்லி இருக்கிறார். ”என்னால அப்படி எல்லாம் இருக்க முடியாது. அதுக்கு நான் இன்னொரு ஜென்மம் எடுத்து தான் வரணும்”*

*இந்தக் கணத்தில் அவளுக்கு அன்று அவர் சொன்னது நினைவுக்கு வந்தது. ‘அவர் தான் இவனாய் ஜென்மம் எடுத்து வந்திருக்கிறாரோ?’ என்று தோன்றவே அவள் முகத்தில் இது வரை இல்லாத கனிவு பிறந்தது.*

*அவளது முகத்தில் கோபம் போய் லேசான புன்னகை அரும்பியதும், அதுவும் போய் கனிவு தோன்றியதும் மனோதத்துவ நிபுணனாகிய ஈஸ்வரையே குழப்பியது. 'கிழவிக்கு காது சரியாகக் கேட்கவில்லையோ?'*

*மீனாட்சியும் திகைப்புடன் பாட்டியைப் பார்த்தாள். பாட்டியின் இந்த அவதாரம் அவளுக்குப் புதிது. இதே போல் ஒரு அதிசயத்தை அவன் பரமேஸ்வரனிடமும் நிகழ்த்தி விட்டால் எல்லாமே சரியாகி விடும்....*

*மீனாட்சி ஈஸ்வரிடம் சொன்னாள். "சரி நிதானமாய் பாட்டி கிட்ட பேசு. உங்க தாத்தாவைப் பார்த்துட்டு வரலாம். வா"*

*அவன் மறுபடி ஏடாகூடமாய் ஏதாவது சொன்னாலும் சொல்லலாம் என்று பாட்டிக்கும் பேத்திக்கும் தோன்றினாலும் அவர்களை ஆச்சரியப்படுத்தும் விதமாக அவன் தலையசைத்து விட்டு எழுந்து நின்றான். மீனாட்சிக்கு சந்தோஷமாக இருந்தது. எல்லாமே சுமுகமாகப் போலத் தான் தெரிகிறது... ஆனால் மனிதர்களை எடை போடுவதில் அவளை விடக் கெட்டிக்காரியான ஆனந்தவல்லி ஏமாந்து விடவில்லை. நேரடியாக எந்தவித மனவருத்தங்களும் இல்லாத அவளிடமே இப்படி நடந்து கொள்பவன் பரமேஸ்வரனிடம் அவ்வளவு சுலபமாக நல்ல விதமாக நடந்து கொள்வான் என்பதை அவள் நம்பி விடவில்லை.... அவளும் அவனுடன் பரமேஸ்வரன் அறைக்குக் கிளம்ப யத்தனித்தாள். யத்தனிக்கையில் அவளுக்குக் குழந்தைத் தனமான ஒரு ஆசை எழுந்தது. கொள்ளுப் பேரனைத் தொட்டுப் பார்க்க வேண்டும் என்று தோன்றியது.*

*வேண்டுமென்றே எழ கஷ்டப்படுபவள் போல நடித்தாள். ஈஸ்வர் அவளையே பார்த்துக் கொண்டிருந்தாலும் கைத்தாங்கலாய்ப் பிடிக்க முன் வரவில்லை.*

*"ஏண்டா பார்த்துட்டே மரம் மாதிரி நிக்கறே? கொஞ்சம் பிடியேன்" என்று ஆனந்தவல்லி அவனிடம் உரிமையோடு அதட்டிக் கேட்டுக் கொண்டாள். வேறு வழியில்லாமல் ஈஸ்வர் அவள் எழ உதவி செய்ய ஆனந்தவல்லி எழுந்தவள் அவன் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்... "..ம்... நட" என்றாள்.*

*நிஜமாகவே கிழவிக்கு முடியவில்லை என்று நினைத்த ஈஸ்வருக்கு அவள் மீது சிறிது இரக்கம் பிறந்தது. மீனாட்சி பாட்டியைத் திகைப்புடன் பார்த்தபடி தந்தையின் அறை நோக்கி நடந்தாள். மகேஷ் குழந்தையாக இருந்த போது ஓரிரு முறை ஆனந்தவல்லி தொட்டுத் தூக்கி இருக்கலாம்... பின் எந்தக் காலத்திலும் அவனை அருகில் கூட அவள் நெருங்க விட்டதில்லை.... அவளுக்குத் தெரிந்து ஆனந்தவல்லி தன் மகன் பரமேஸ்வரன் ஒருவரிடம் மட்டும் தான் சிறிதாவது நெருக்கமாக இருப்பாள். மற்றவர்கள் எல்லாரும் அவளிடமிருந்து சில அடிகள் தள்ளியே தான் இருக்க வேண்டும். அவளுக்கு உதவுவதற்காகக் கூட அவளை ஆண்கள் யாரும் நெருங்குவதை அவள் தள்ளாத இந்த வயதிலும் சகித்ததில்லை. இப்போதோ எல்லாம் தலை கீழாக நடக்கிறது....*

*பரமேஸ்வரன் தனதறையில் நாளிதழ் ஒன்றைப் படிப்பதாய் பாவனை செய்து கொண்டிருந்தார். முதலில் நுழைந்த மீனாட்சி மகிழ்ச்சி, பதட்டம் இரண்டும் கலந்த குரலில் அறிவித்தாள். "அப்பா ஈஸ்வர் வந்தாச்சு"*

*ஆனந்தவல்லியுடன் வந்து நின்ற ஈஸ்வரைப் பார்த்த பரமேஸ்வரன் பேச்சிழந்து போனார். அவருடைய பெற்றோர் ஒரு*

*சேர வந்தது போல் இருந்தது. இளமைக் கால தந்தை-இன்றைய தோற்றத்தில் தாய் சேர்ந்து வந்து நின்றது போல அவருக்குத் தோன்றியது. ஆனால் அவருடைய தந்தையின் தோற்றத்தில் இருந்த பேரன் பார்வையோ பாசப் பார்வையாக இல்லாமல் பனிப்பார்வையாக இருந்தது. அப்பாவின் 'ஸ்பெஷல்' அப்பாவை அவன் அன்னியனாக நின்று ஆராய்ச்சிப் பார்வை பார்த்தான்.*

*ஆயிரக்கணக்கான மைல்கள் கடந்து வந்திருந்த போதும் பேரன் வெறுப்பைக் கடந்து வந்து விடவில்லை என்பதை அந்தப் பார்வையிலேயே படிக்க முடிந்த பரமேஸ்வரன் ஒரு பெரிய அழுத்தத்தை தன் இதயத்தில் உணர்ந்தார்.*

*ஆனந்தவல்லியிடம் கூடத் தானாகப் பேச்சை ஆரம்பிக்காத ஈஸ்வர் இங்கு பேச்சை ஆரம்பித்து விடப் போவதில்லை என்பதைப் புரிந்து கொண்ட மீனாட்சி இருவருக்கும் இடையே பாலமாக இருக்க முயற்சித்து ஈஸ்வரிடம் சொன்னாள். "அப்பாவுக்கு உன்னைப் பார்த்தவுடனே அவங்கப்பா ஞாபகம் வந்திருச்சு போல இருக்கு"*

*"நான் எங்கப்பா ஞாபகம் வரும்னு நினைச்சேன்...." அவரையே பார்த்துக் கொண்டு நின்றிருந்த ஈஸ்வர் கண்ணிமைக்காமல் சொன்னான்.*

*'என்ன நாக்கு இந்தப் பையனுக்கு' என்று ஆனந்தவல்லி மனதினுள் வியக்க மீனாட்சி தந்தையைத் தர்மசங்கடத்துடன் பார்த்தாள். பரமேஸ்வரன் மிகுந்த சிரமத்துடன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டார். அவன் எதுவும் பேசவே இல்லை, தான் அதைக் கேட்கவே இல்லை என்பது போல் பேரனிடம் கேட்டார். "பிரயாணம் எப்படி இருந்துச்சு?"*

*’உங்கம்மா எப்படி இருக்கா?’ன்னு அவர் கேட்டிருந்தால் ஈஸ்வரின் இறுக்கம் குறைந்திருக்கும். சம்பிரதாயமாக அவர் பேச வேண்டுமே என்று கேட்ட கேள்விக்கு ஈஸ்வரும் சம்பிரதாயமாகவே பதில் சொன்னான். “சௌகரியமா இருந்துச்சு”*

*அதற்குப் பிறகு பேச்சைத் தொடரும் மனநிலையில் இருவருமே இல்லை என்பதைப் புரிந்து கொண்ட மீனாட்சி அவசரமாகச் சொன்னாள். “சரி சரி தாத்தாவும் பேரனும் அப்புறமா பேசிக்குங்க. நீ வா ஈஸ்வர் உன் ரூமைக் காமிக்கறேன்...”*

*ஆனந்தவல்லி கொள்ளுப் பேரனைப் பிடித்திருந்த பிடியை விட்டாள். ஈஸ்வர் இருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் அத்தையைத் தொடர்ந்தான்.*

*மீனாட்சி பரபரப்போடு அறையைக் காண்பித்தாள். “இது தான் உங்கப்பா ரூம்”. அறையில் நூற்றுக் கணக்கில் பதக்கங்கள், கோப்பைகள், பல விதங்களில் அலமாரிகளில் வைக்கப் பட்டிருந்தன. ”இதெல்லாம் உங்கப்பா வாங்கினது...” மீனாட்சி பெருமிதத்துடன் சொன்னாள். அப்பா அத்தனை பதக்கங்களும், கோப்பைகளும் வாங்கியது அவனுக்கு ஆச்சரியமில்லை. ஆனால் இத்தனை வருடங்கள் கழிந்த பின்னும் அதைப் பாதுகாத்து அவள் வைத்திருப்பது தான் அவனுக்கு நெகிழ்ச்சியாக இருந்தது. அறையில் அவன் அப்பாவின் இளமைக் காலப் பெரிய போட்டோ ஒன்று சந்தனமாலையுடன் இருந்தது. அப்பாவுக்கு இந்த வீட்டில் இன்னும் இடம் இருக்கிறது. நினைவு வைத்துக் கொண்டாடும் ஒரு தங்கை இன்னும் இருக்கிறாள்... அவன் கண்கள் ஈரமாயின.*

*“ஒரே நிமிஷம் இரு.. நான் மகேஷை எழுப்பிட்டு கூட்டிகிட்டு வர்றேன்...” என்று மீனாட்சி அவசரமாகச் சென்றாள். மருமகன் வந்த பிறகு கூட வரவேற்க மகனும், கணவரும் வராதது அவளுக்கு*

அநாகரிகமாகப் பட்டது. அவள் போன பிறகு அறையை சுற்றிப் பார்த்தான். இது அப்பா வாழ்ந்த அறை என்ற நினைவு அவன் மனதை லேசாக்கியது… அப்போது தான் அந்த அறையில் இருந்த இன்னொரு பெரிய போட்டோவைப் பார்த்தான். சங்கரின் கல்லூரி நாட்களில் எடுக்கப்பட்ட போட்டோ போலத் தோன்றியது. பரமேஸ்வரன் சங்கரையும், மீனாட்சியையும் இறுக்கி அணைத்தபடி நின்றிருந்தார். அவர் கண்களில் எல்லையில்லாத பெருமிதம்… மற்றவர் இருவர் கண்களிலும் எல்லையில்லாத சந்தோஷம்…. சாசுவத அடையாளமாகிப் போன ஒரு சந்தோஷத் தருணம்… நிறைய நேரம் அந்தப் புகைப்படத்தைப் பார்த்திருந்து விட்டு அவன் மாலையுடன் இருந்த அப்பாவின் படத்தின் அருகே வந்தான். மிக நெருக்கமாக வந்து தந்தையிடம் சொன்னான். "நான் உங்க வீட்டுக்கு வந்திருக்கேன்ப்பா… உங்க "ஸ்பெஷல் அப்பா", திமிரான பாட்டி, பாசமான தங்கை எல்லாரையும் பார்த்தேன்…."

அவன் அப்பா சந்தோஷப்பட்டது போல இருந்தது. அவர் புன்னகையையே பார்த்துக் கொண்டு நின்றான் ஈஸ்வர். திடீரென்று அந்தப் போட்டோவில் அவன் அப்பா மறைந்து போனார். அந்தரத்தில் நின்றிருந்த ஒரு சிவலிங்கம் தத்ரூபமாகத் தெரிந்தது. திடுக்கிட்டுப் போன ஈஸ்வர் இரண்டடி பின் வாங்கினான். ஓரிரு வினாடிகள் கழித்து பழையபடி போட்டோவில் அப்பாவே தெரிய ஈஸ்வருக்கு வியர்த்தது….

# அத்தியாயம் - 19

தன்னை சுதாரித்துக் கொள்ள ஈஸ்வருக்கு சில நிமிடங்கள் தேவைப்பட்டன. இப்படி சிவலிங்கம் தெரிவது இது இரண்டாவது முறை. இரண்டு முறையும் அவன் சிறிதும் எதிர்பாராத நேரத்தில் தான் சிவலிங்கம் காட்சி தருகிறது… முதல் முறை அவன்

ஆராய்ச்சியில் ஆழ்ந்திருக்கும் போது ஓவியமாகத் தெரிந்த சிவலிங்கம் இந்த முறை அவன் குடும்ப விஷயங்களில் ஆழ்ந்து இருக்கும் போது புகைப்படத்தில் தெரிந்து மறைகிறது... அறிவு பூர்வமாக அவனுக்குத் தகுந்த காரணம் எதுவும் புலப்படவில்லை....

அவன் இந்தியா வர முக்கியக் காரணம் சிவலிங்கம் முதல் முறை தெரிந்த விதம் தான் என்றாலும் கிளம்பிய பிறகு அவன் மனதில் அதிகம் ஆதிக்கம் செலுத்தியது தாத்தா பரமேஸ்வரனே! அவன் அப்பா கடைசி வரை வெறுக்காத பரமேஸ்வரன்... அவன் அப்பாவைக் கடைசி வரை மன்னிக்காத பரமேஸ்வரன்... வந்து சேர்ந்த பிறகும் அத்தை, கொள்ளுப்பாட்டி, தாத்தா, அப்பா வாழ்ந்த வீடு என்று மனம் போனதே தவிர சிவலிங்கத்தைக் கிட்டத்தட்ட மறந்தே போனான் என்றே சொல்ல வேண்டும். சிவலிங்கம் நினைவுபடுத்துகிறதோ?....

மீனாட்சி மகனையும், கணவரையும் அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தாள். ”ஈஸ்வர், இது தான் மகேஷ்... இது தான் மாமா”

”ஹாய் ஈஸ்வர்” என்று சொல்லி கஷ்டப்பட்டு புன்னகைத்து மகேஷ் கைகுலுக்கினான். விஸ்வநாதனும் ”எப்படிப்பா இருக்கே” என்று பொய்யான மலர்ச்சியை முகத்தில் காட்டி கைகுலுக்கினார். உதட்டு வரையே வந்த புன்னகையை ஈஸ்வர் கவனிக்கத் தவறவில்லை. மனிதர்களை ஆழமாகப் பார்க்க முடிந்த அவனுக்கு எடை போட சிரமம் தரும் அளவுக்கு அவர்களிடம் நடிப்புத் திறமை தெரியவில்லை. அவர்களையும் அவனையும் மாறி மாறிப் பெருமிதமாகப் பார்த்துக் கொண்டிருந்த மீனாட்சியைப் பார்த்த போது அவனுக்குப் பாவமாக இருந்தது. அவர்களைப் புரிந்து கொண்டதை வெளியே காட்டிக் கொள்ளாமல் அவனும் அவர்களிடம் சுமுகமாகவே பேசினான். பேச்சு அமெரிக்காவைப் பற்றியும், இந்தியாவைப் பற்றியும், அவனுடைய பயணத்தைப்

பற்றியுமாக இருந்தது. ஆனந்தவல்லியுடன் ஏடாகூடமாகப் பேசி, பரமேஸ்வரனைப் பனிப்பார்வை பார்த்த ஈஸ்வர், மகேஷுடனும், விஸ்வநாதனுடனும் சுமுகமாகப் பழகியது மீனாட்சிக்கு பெரும் திருப்தியைத் தந்தது.

அவள் முகத்தில் தெரிந்த சந்தோஷத்தைப் பார்க்கையில் ஈஸ்வர் நினைத்தான். “இந்த சந்தோஷத்திற்காக எதையும் செய்யலாம்”

உண்மையில் அவனுக்கு பரமேஸ்வரன் மீதிருந்த கோபம் அவர்கள் மீது இருக்கவில்லை. விஸ்வநாதன் சங்கருடன் கல்லூரியில் படித்தவர் என்றாலும், மீனாட்சியைத் திருமணம் செய்து கொண்ட பிறகும் அவர் சங்கருடன் பேசியதை விரல் விட்டு எண்ணி விடலாம்... ஒருசில முறை ஒருசில வார்த்தைகள் மட்டுமே பேசியிருக்கிறார். மகேஷோ அதையும் விடக் குறைவு. நல்ல முறையில் அன்புடன் பேசி இந்தப் பந்தத்தை வலுப்படுத்தி விட அவர்கள் விரும்பவில்லை என்பது இங்கு வருவதற்கு முன்பே ஈஸ்வருக்குப் புரிந்திருந்தது. காரணம் சொத்து என்பதும் அவனுக்குத் தெரிந்திருந்தது. பரமேஸ்வரனின் சொத்தின் மீது துளியளவும் ஆசை இல்லாத ஈஸ்வருக்கு அதில் எந்த வருத்தமும் இருக்கவில்லை....

உடை மாற்றக் கூட விடாமல் ஆரம்பத்திலேயே அவனைப் பிடித்துக் கொண்டதற்கு மன்னிப்பு கேட்டுக் கொண்டு மகேஷும் விஸ்வநாதனும் நகர காபி கொண்டு வருவதாகச் சொல்லி விட்டு மீனாட்சியும் நகர்ந்தாள்.

ஈஸ்வரின் செல் போன் இசைத்தது. யார் என்று பார்த்தான். அம்மா!

“ஹலோ சொல்லும்மா”

“சௌக்கியமா போய் சேர்ந்தியாடா?”

“சேர்ந்துட்டேன். அத்தை ஏர்போர்ட் வந்திருந்தாங்க... உங்களை விசாரிச்சாங்க”

“நேத்து போன் செஞ்சு பேசினாங்க. உனக்கு என்னெல்லாம் சாப்பிடப் பிடிக்கும்னு கேட்டுகிட்டாங்க... அப்புறம் மத்தவங்களை எல்லாம் பார்த்தியா. பேசினியா”

”பார்த்தேன். வந்து ஒரு மணி நேரம் தான் ஆயிருக்கு. நல்லா இன்னும் பேச நேரம் கிடைக்கலை....”

”ஈஸ்வர்...”

அம்மா குரலை வைத்தே ஈஸ்வர் இனி அறிவுரை ஆரம்பமாகிறது என்பதைப் புரிந்து கொண்டான். “சொல்லும்மா...”

”யார் மனசும் புண்படற மாதிரி நடந்துக்காதடா. அப்பாவ மனசுல வச்சு அவங்க மேல உனக்கு கோபம் இருக்கலாம். உங்கப்பாவே அவங்க மேல கோபமா இருக்கலைன்னு மட்டும் மறந்துடாதே.....”

”நீ எனக்கு அட்வைஸ் பண்ணின மாதிரி இங்க இருக்கற கிழவி தன் மகனுக்கு அட்வைஸ் செஞ்சிருந்தா அந்த ஆள் திருந்தி இருக்கலாம்னு தோணுதும்மா....”

கனகதுர்கா பெருமூச்சு விட்டாள்.

ஆனால் கொள்ளுப் பேரனின் அவச்சொல்லுக்கு ஆளான ஆனந்தவல்லி அதிசயமாக தன் மகனுக்கு அப்போது புத்தி சொல்லிக் கொண்டு தானிருந்தாள். காரணம் பேரன் சென்ற பிறகு பரமேஸ்வரன் கனத்த மௌனத்துடன் இருந்தது தான். ஏதேதோ பேசிப் பார்த்த ஆனந்தவல்லி மகனிடம் இருந்து ஒற்றைச் சொல் பதில்கள், தலையசைப்புகளில் சலித்து விட்டாள்.

தன் மகனைப் பற்றி அவனுடைய காதல் திருமணத்திற்குப் பின் என்றுமே யாரிடமுமே பரமேஸ்வரன் பேசியதில்லை. மற்றவர்கள் பேசினாலும் அவர் அதற்குப் பதில் சொன்னதோ பேச்சை வளர்த்ததோ இல்லை. அது என்றுமே அவருடைய தனிப்பட்ட விஷயமாகவே இருந்து வந்தது. அதில் தாயைக் கூட அவர் சேர்த்தது இல்லை. இன்று பேரனின் வார்த்தைகளிலும் தோரணையிலும் நிறையவே பாதிக்கப்பட்டாலும் பரமேஸ்வரன் அதைப் பற்றியும் தாயிடம் பேச விரும்பவில்லை. ஆனால் தன் பிரியமான மகன் முகத்தில் தெரிந்த வலி ஆனந்தவல்லிக்கு சங்கடமாக இருந்தது. இது நாள் வரை மகன் தனிப்பட்டதாய் நினைத்த விஷயங்களில் தலையிடாதவள், அதே போல் தன்னுடைய தனிப்பட்ட விஷயங்களிலும் அவரைத் தலையிட அனுமதிக்காதவள் மெல்ல மென்மையான குரலில் சொன்னாள்.

”எனக்கு நீ இப்படி உட்கார்றது எனக்கு கஷ்டமாய் இருக்கு பரமேஸ்வரா.”

ஆனந்தவல்லி மென்மையான குரலில் பேசுவது மிக அபூர்வம். பரமேஸ்வரன் தாயை ஆச்சரியத்தோடு பார்த்தார். ஈஸ்வர் அவர் மனதைக் கனக்க வைத்திருக்கிறான் என்றால் அவர் தாயின் மனதை

லேசாக்கி இருக்கிறான் போல் தெரிந்தது. அவன் அவளுடைய கணவரின் தோற்றத்தில் இருக்கிறான் என்பதாலா?

ஆனந்தவல்லி அதே குரலில் தொடர்ந்தாள். “அவரை விதைச்சு துவரை முளைக்காது பரமேஸ்வரா. நம்ம குணம் தானே நம்ம குழந்தைகளுக்கும், பரம்பரைக்கும் வரும். உங்கண்ணன் பரம சாதுவா தெரிஞ்சா கூட அந்த சிவலிங்கத்தோட அவன் போகிறதை என்னால் தடுக்க முடியலை. என்னோட பிடிவாதத்தில் நாலு மடங்கா அவனோட பிடிவாதம் இருந்துச்சு. உன் பையனும் அப்படித்தான். ரொம்ப நல்லவன். பாசமானவன். ஆனா அந்தப் பொண்ணை அவன் கல்யாணம் செஞ்சுக்கறதை உன்னால தடுக்க முடியல. அந்த ஒரு விஷயத்துல அவனும் உறுதியாவே இருந்துட்டான். நாம நிறைய விஷயங்கள்ல பிடிவாதமா இருக்கோம். அவங்க ஒண்ணு ரெண்டுல அப்படி இருந்துடறாங்க. அவங்க மேல நாம கோவிச்சுக்கறதுல அர்த்தம் இல்லைன்னு நான் இப்ப உணர்றேன். முதல்லயே உணர்ந்திருந்தா உங்கண்ணனை அப்பப்ப போய் பார்த்திருப்பேன்... கடைசி தடவை அவனை அத்தனை திட்டி இருக்க மாட்டேன்.... அவன் கடைசி தடவை கூப்பிட்டு அனுப்பி இருக்காட்டி இப்ப எனக்கு நினைச்சுப் பார்க்க அந்த நல்ல நினைவு கூட இருந்திருக்காதுன்னு நினைக்கறப்ப வயிறு என்னவோ பண்ணுது....” சொல்லும் போது அவள் குரல் தழுதழுத்தது.

அண்ணனின் நினைவும், தாயின் நெகிழ்ச்சியும் அவர் மனதையும் லேசாக்கியது. ஆனால் அவர் ஒன்றும் சொல்லாமல் தாயையே பார்த்தார்.

ஆனந்தவல்லி தொடர்ந்தாள். “உன் பேரன் உன் மகள் சொன்ன மாதிரி கிட்டத்தட்ட நம்மள மாதிரியே கோபக்காரனா இருக்கான். என்ன பண்றது? இந்தக் கோபம் எல்லாம் எங்கே இருந்து

வந்ததுன்னு கேட்டா நாம நம்மளையே தான் காரணம் சொல்லிக்க வேண்டியதாகுது…”

அம்மாவின் இந்த ஞானோதயத்திற்கு மிக முக்கிய காரணம் அவன் தோற்றம் தான் என்பதில் பரமேஸ்வரனுக்கு சந்தேகமில்லை. அவன் அவளிடம் கூட ஏடாகூடமாய் பேசியதை அவர் தனதறைக் கதவருகே நின்று கேட்டிருந்தார். அவன் பேசியதை வேறு யாராவது பேசியிருந்தால் ஆனந்தவல்லி அங்கிருந்து கண நேரத்தில் காத தூரத்திற்குத் துரத்தி இருப்பாள். அவள் கோபத்திற்கு முன் அவள் கணவரோ, அவரோ, பசுபதியோ கூட நின்று தாக்குப் பிடிக்க முடிந்ததில்லை. தேவைப்படும் போது அவள் நாக்கும் பார்வையும் படுகூர்மையாகி விடும். அந்த விஷயத்தில் ஈஸ்வர் அவளுடைய சரிநிகர் கொள்ளுப் பேரன் தான்…

மகன் ஏதாவது சொல்வான் என்று எதிர்பார்த்த ஆனந்தவல்லி ஏமாந்து போனாள். இத்தனை அழுத்தம் ஆகாது என்று மகன் மீது மனதிற்குள் கோபித்துக் கொண்டாள். இவனுக்கே இத்தனை அழுத்தம் இருக்கையில் இவன் பேரனுக்கு அத்தனை அழுத்தம் வந்திருப்பதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது?….

**************

குருஜிக்கு அந்த போன் கால் வந்த போது அவர் மறுநாள் சொற்பொழிவுக்கு விவேகானந்தரின் சிகாகோ பேச்சிலிருந்து குறிப்புகள் எடுத்துக் கொண்டிருந்தார். “ஹலோ”

“குருஜி நான் ஹரிராம் பேசறேன். நீங்க சில பூக்களை ஆராய்ச்சிக்கு என் கிட்ட அனுப்பி இருந்தீங்களே…”

”சொல்லுங்க ஹரிராம்”

*“அந்தப் பூக்கள் எல்லாம் இமயமலைப் பகுதியில் இருக்கிற காட்டுப்பூக்கள் குருஜி. அதுலயும் திபெத் பகுதியில் தான் அதிகம் பார்க்க முடியற பூக்கள்..”*

*அதைக் கேட்டு அவர் அதிர்ச்சி அடையாதது அவருக்கே ஆச்சரியமாகத் தான் இருந்தது. அடுத்த கேள்விக்குப் பதில் தெரிந்திருந்தும் உறுதிப்படுத்திக் கொள்வதற்காகக் கேட்டார்.*

*”ஹரிராம்... அந்தப் பூக்கள் இந்தப்பக்கத்துல எங்கேயாவது கிடைக்குமா?”*

*ஹரிராம் நல்ல ஜோக் கேட்டது போல வாய் விட்டுச் சிரித்தார். ”அந்தக் காட்டுப் பூக்களை இங்கே யார் கொண்டு வருவாங்க குருஜி? கொண்டு வந்தாலும் யார் வாங்குவாங்க? இங்கத்து க்ளைமேட்ல நட்டாலும் அந்தப் பூக்கள் எல்லாம் இங்கே வளராது குருஜி. திபெத் பக்கத்துல இருந்து யாராவது இங்கே வந்தாங்களா குருஜி?”*

*குருஜி வார்த்தைகளை அளந்து கவனமாகச் சொன்னார். “யாரோ எங்கேயோ வச்சுட்டு போன பூக்கள் என் கவனத்துக்கு வந்தது. நான் பார்த்த மாதிரி இல்லாத பூக்களானதால ஒரு ஆர்வத்துல உங்க கிட்ட அனுப்பி தகவல் கேட்டேன். அவ்வளவு தான். நன்றி ஹரிராம்....”*

*போனை வைத்த குருஜி நிறைய யோசித்தார்.*

# ***அத்தியாயம் - 20***

*அந்த மனிதன் மூன்று முறை அழைப்பு மணியை அழுத்திய பிறகே அந்த நடுத்தர வயது பழந்தமிழ்மொழி ஆராய்ச்சி வல்லுனர் வந்து பதட்டத்துடன் கதவைத் திறந்தார். அவர் கதவைத் திறந்து அந்த மனிதன் பின்னால் யாராவது இருக்கிறார்களா என்று சந்தேகத்துடன் பார்த்ததும் அல்லாமல் அந்த மனிதனைத் தன் வீட்டினுள்ளே விட்டு வெளியே எட்டி இருபக்கமும் பார்த்தார். யாரும் அந்த மனிதனைப் பின் தொடர்ந்து வந்திருக்கிற அறிகுறி இல்லை. தமிழ் ஆராய்ச்சியாளர் ஓரளவு பதட்டம் குறைந்தவராகக் கதவைத் தாளிட்டு விட்டு அந்த மனிதனைத் தன் தனியறைக்கு அழைத்துச் சென்றார். அந்த மனிதனை அமரச் சொல்லி விட்டு அவனையே அவர் எதிர்பார்ப்போடு பார்க்க அந்த மனிதன் ஒரு உறையில் வைத்திருந்த ரூ.25000/-ஐ அவரிடம் தந்தான். அந்த மனிதர் அதை வாங்கிக் கொண்டு 'இதோ வந்துடறேன்' என்று சொல்லி விட்டுப் போனார்.*

*அந்த மனிதன் அமைதியாகக் காத்திருந்தான். தான் தேடி வந்த விடைகள் இந்த மனிதரிடம் எந்த அளவு கிடைக்கும் என்று யோசித்தான். தேவையான தகவல்கள் எல்லாம் கிடைத்தால் தான் அடுத்த அடியை தைரியமாக எடுத்து வைக்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது. குருஜி அளவுக்கு அவனால் தைரியமாக இருக்க முடியாததற்குக் காரணம் அவனுடைய சகாவின் ஒருவித கிலி அவனையும் தொற்றிக் கொண்டது தான் என்றே சொல்லலாம். சிவலிங்கத்தை எடுத்து வந்த அன்று அந்தக் கொலைகாரன் இறந்த விதம், சிவலிங்கத்தை எடுத்தவன் பயந்தது, பின் ரகசியமாய் ஓடிப்போனது, அவர்களுக்குத் தெரியாமல் சிவலிங்கத்தின் மீதிருந்த அபூர்வ மலர்களின் அலங்காரம் என ஒவ்வொன்றும் அவனுடைய சகாவின் பயத்தை அதிகப்படுத்தி இருந்தது. இமயமலைச் சாரலின் பூக்களைக் கொண்டு சிவலிங்கத்தை அலங்கரித்துப் பூஜை செய்தது யார் என்ற கேள்வியும் எழுந்த போது அவன் கிலி உச்சத்தை எட்டியது என்றே சொல்லலாம்.*

*சகா வாய் விட்டே அவனிடம் சொன்னான். "இதுல நமக்குத் தெரியாத விஷயங்கள் நிறைய இன்னும் இருக்குன்னு தான் எனக்குத் தோணுது... எல்லாம் தெரிஞ்சுகிட்ட பிறகே இதுல இறங்கி இருக்கலாம்...."*

*"குருஜி இருக்கறப்ப நீ ஏன் கவலைப்படறே?"*

*"இதுல குருஜிக்கும் முழுசா தெரியலை"*

*"ஆனா அவருக்கு ஒவ்வொரு இக்கட்டான கட்டத்திலும் என்ன செய்யணும்கிறது சரியாவே தெரியுது. அந்த சிவலிங்கத்துக்குப் பூஜை செய்ய கணபதியை எப்படி கண்டுபிடிச்சு ஏற்பாடு செய்தார் பார்த்தியா?"*

*"ஆனா அவர் இது வரைக்கும் அந்த சிவலிங்கத்தைப் பார்க்கக் கூட வரலைங்கறதை மறந்துட வேண்டாம்"*

*அது அவனுக்கும் நெருடலாகவே இருந்தது என்றாலும் அதை வெளியே காண்பித்து சகாவை மேலும் அதிகமாய் பயமுறுத்தி விட வேண்டாம் என நினைத்தவனாய் அமைதியாய் சொன்னான். "அதுக்கு வேற எதாவது காரணம் இருக்கும். இன்னும் சிவலிங்கம் நம்ம கைல தான் இருக்கு. நீ பயப்படற மாதிரி சிவலிங்கமோ, அதுக்கு வேண்டியவங்களோ நிஜமாவே சக்தி வாய்ஞ்சவங்களா இருந்தா நம்ம கிட்ட சிவலிங்கம் இப்ப இருந்திருக்காது என்பதை மறந்துடாதே"*

*சகா ஓரளவு தைரியமடைந்தான். "ஆனாலும் சிவலிங்கம் பத்தி முழுசா தெரிஞ்சுக்க வேண்டியதை தெரிஞ்சுக்கறது நல்லதுன்னு*

நினைக்கிறேன். அந்த சிவலிங்கத்துக்கும் சோழர்கள் காலத்துக்கும் இருக்கிற தொடர்பு பத்தி இப்ப போலீஸ் காதுக்கும் விழுந்திருக்கு... கண்டிப்பா விசாரிக்க ஆரம்பிப்பாங்க...”

”அதை வச்சு அவங்களுக்கு பெரிசா எதுவும் கிடைச்சுட வாய்ப்பில்லை... திருப்பதில மொட்டையன் இருக்கான்னு தகவல் கிடைச்ச மாதிரி தான் அது... இப்ப அந்த ஓலைச்சுவடியும் நம்ம கைல இருக்கு. அதுல என்ன இருக்குன்னு முழுசா தெரிஞ்சுக்க நான் நாளை காலைலயே தஞ்சாவூர் போறேன். சிவலிங்கம் பத்தி மேலும் அதிகமா தெரிஞ்சுகிட்டு வர்றேன். கவலைப்படாதே”

என்ன தான் தைரியம் சொன்னாலும் கூட அறுபது வருடங்கள் வாயை மூடிக் கொண்டிருந்த பசுபதியின் தாய் சோழர்கள் கால சம்பந்தத்தை இப்போது திடீர் என்று சொல்லித் தொலைத்தது அவனுக்கும் அதிருப்தியையே தந்தது. இன்னும் அந்தக் கிழவிக்கு என்ன எல்லாம் தெரியுமோ என்ற கேள்வியும் எழ ஆரம்பித்தது. தெரிந்ததை எல்லாம் கிழவி சொல்லி விடும் ரகம் அல்ல என்பது அவனுடைய கணிப்பாக இருந்தது. கிழவி நம்பா விட்டாலும் அந்தக் காலத்திலேயே கேள்விப்பட்டிருந்த சிவலிங்கத்திற்கும் சோழர் காலத்திற்கும் இடையே உள்ள சம்பந்தம் அவர்கள் கவனத்திற்கு வந்தது ஏழெட்டு மாதங்களுக்கு முன்பு தான்.

தஞ்சை பெரிய கோயிலின் ஆயிரமாவது ஆண்டு விழாக் கொண்டாட்டங்களின் போது தஞ்சை தமிழ் பல்கலைக்கழகம் பொது மக்களிடம் இருந்து தஞ்சை கோயில், ராஜராஜ சோழன் சம்பந்தப்பட்ட பழங்கால ஓலைச்சுவடிகள் சேகரிக்க ஆரம்பித்தது. தென் மாவட்டங்களில் ஒருசிலரிடம் இருந்து நிறைய ஓலைச்சுவடிகள் கிடைத்தன. அரசாங்கத்தின் உதவியுடன் நடந்த இந்த சேகரிப்பில் கிடைத்த ஓலைச் சுவடிகள் தஞ்சை தமிழ் பல்கலைக்கழகத்தின் பண்டைய தமிழர் பண்பாடு, வரலாறு குறித்த

ஆய்வுக்குப் பயன்படுத்தப்பட்டன. அப்போது கிடைத்த ஒரு ஓலைச்சுவடி அவன் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டது. சித்தர்கள் வழிபட்ட சக்தி வாய்ந்த ஒரு சிவலிங்கம் பற்றி அந்த ஓலைச்சுவடி சொல்லி இருந்தது. பசுபதி குடும்பத்தின் சிவலிங்கம் கதையை முன்பே கேள்விப்பட்டிருந்த அவனுக்கு அதற்கும் இதற்கும் முடிச்சுப் போட அதிக நேரம் ஆகவில்லை. அந்த ஓலைச்சுவடியில் கிடைத்த சில தகவல்கள் அவன் அறிந்ததை உறுதிப்படுத்தியது. ஆனால் அந்த ஓலைச்சுவடியில் உள்ள சில பகுதிகள் அவன் நண்பர் தஞ்சை ஆராய்ச்சியாளருக்கும் பிடிபடவில்லை. அடுத்ததாக அந்த ஓலைச்சுவடியை முழுவதும் புரிந்து கொள்ள டெல்லியில் உள்ள ஓலைச்சுவடிகள் ஆராய்ச்சி மையத்திற்குத் தான் அனுப்ப வேண்டி வரும் என்றும் அங்கு அனுப்பினால் அந்த விசேஷ ஓலைச்சுவடியை முக்கியமான வரலாற்று ஆவணமாக டெல்லி ஓலைச்சுவடி ஆராய்ச்சி மையம் வைத்துக் கொள்ளும் வாய்ப்பு அதிகம் என்றும் அவன் நண்பர் சொன்னார்.

அந்த ஓலைச்சுவடி ஒரு வரலாற்று ஆவணமாக மாறுவதும், அதில் உள்ள தகவல்கள் வெளியே கசிவதும் விரும்பாத அவன் குருஜியிடம் ஆலோசனை கேட்ட போது அவர் அவருடைய செல்வாக்கைப் பயன்படுத்தி டெல்லியில் உள்ள ஓலைச்சுவடி ஆராய்ச்சி மைய முக்கிய அதிகாரியும், தமிழ்மொழி ஆராய்ச்சி வல்லுனருமான ஒருவரைத் தொடர்பு கொண்டு அவரைத் தஞ்சாவூருக்கு வரவழைத்து அவர் கையில் அந்த ஓலைச்சுவடி கிடைக்க ஏற்பாடு செய்தார். வாடகைக்கு ஒரு வீடும் ஏற்படுத்திக் கொடுத்து ஆராய்ச்சிக்குத் தேவையான கருவிகளையும் தருவித்துக் கொடுத்து ஓலைச்சுவடியைப் படித்துப் பொருள் சொல்ல ஏற்பாடு செய்தார். அந்த ஆராய்ச்சி வல்லுனரிடம் இருந்து அந்தத் தகவல்கள் பெறத் தான் அவன் வந்திருக்கிறான்.....

அந்த ஆராய்ச்சி வல்லுனர் ஓலைச்சுவடியையும் அத்துடன் பல பக்கங்களில் எழுதிய விளக்கங்களையும் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தார். கொடுத்து விட்டு முதலில் தன் சந்தேகத்தை அவனிடம் கேட்டார். "இந்த ஓலைச்சுவடி தஞ்சை தமிழ் பல்கலைக்கழக ஆராய்ச்சி மையத்தின் ஆவணமாகத் தான் இன்னும் இருக்கிறது..."

"இல்லை இதற்குப் பதிலாக இன்னொரு ஓலைச்சுவடியை வைத்து விட்டோம்... அதற்குத் தகுந்த மாதிரி அதன் குறிப்பையும் மாற்றி விட்டோம்."

தமிழாராய்ச்சி வல்லுனர் சற்று நிம்மதி அடைந்தது போலத் தெரிந்தது. "இது மாதிரி ஓலைச்சுவடிகள் கிடைப்பது அபூர்வம். வைத்தியம், ஜோதிடம், இலக்கியம் சம்பந்தப்பட்ட ஓலைச்சுவடிகள் நிறைய இருக்கின்றன. ஆனால் இது போன்ற ஓலைச்சுவடி நான் பார்த்ததில்லை. கிட்டத்தட்ட 950 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட இந்த ஓலையை யார் எழுதி வைத்தார்கள், ஏன் எழுதி வைத்தார்கள் என்பது சரியாகத் தெரியவில்லை.... ஆனாலும் எழுதி வைக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்து எழுதியது போலத் தான் இருக்கிறது....."

அந்த மனிதன் ஓலைச்சுவடியுடன் தந்த காகிதங்களில் என்ன எழுதி இருக்கிறது என்பதை மேலோட்டமாகப் பார்த்து விட்டு அவரிடம் கேட்டான். "இதில் என்ன இருந்ததுன்னு சுருக்கமாக நீங்கள் சொல்லுங்களேன்..." அவர் வாயால் ஒரு முறை கேட்க அவன் ஆசைப்பட்டான். எழுதி உள்ளதை எத்தனை முறை வேண்டுமானாலும் பின் படித்துக் கொள்ளலாம். ஆராய்ந்து கண்டு பிடித்தவர் வாயால் உணர்வு பூர்வமாகக் கேட்கும் சந்தர்ப்பம் இன்னொரு முறை வாய்க்குமா?

அவர் சொன்னார். "ராஜராஜ சோழனின் பேரன், ராஜேந்திர சோழனின் மகன் முதலாம் ராஜாதி ராஜன். அவனுக்கு விஜய ராஜேந்திர சோழன் என்ற பெயரும் உண்டு. அவன் மிகச்சிறந்த வீரன். பாராக்கிரம சாலி. அவன் சோழ நாட்டை ஆண்ட காலத்தில் அவனும் அவன் தம்பி இரண்டாம் ராஜேந்திர சோழனும் ஒரு சமயம் காட்டு வழியில் பயணம் செய்த போது சில சித்தர்கள் கூடி ஒரு சிவலிங்கத்தை வணங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தார்கள். சிறந்த சிவபக்தர்களான ராஜாதி ராஜ சோழனும் அவன் தம்பியும் பயணத்தை நிறுத்தி சிவலிங்கத்தைத் தாங்களும் வணங்கினார்கள். வணங்கி நிமிர்ந்த போது ஒரு கணம் சிவலிங்கம் ஜோதிமயமாக ஒளிர்ந்தது. பரவசப்பட்டுப் போன முதலாம் ராஜாதிராஜ சோழன் அந்த சிவலிங்கத்தால் மிகவும் ஈர்க்கப்பட்டான். தன் தாத்தா ராஜராஜ சோழன் கட்டிய தஞ்சை பெரிய கோயிலிற்கு இணையாக ஒரு பிரம்மாண்டமான கோயிலைத் தன் காலத்தில் கட்ட நீண்ட காலமாக ஆசைப்படுவதாகவும் அதற்கான சிவலிங்கமாகவே அந்த சிவலிங்கத்தைத் தான் காண்பதாகவும் அந்த சித்தர்களிடம் தெரிவித்தான்..."

"சித்தர்கள் அந்த சிவலிங்கம் சாதாரணமானதல்ல என்றும் அதை பூஜிப்பதும் வணங்குவதும் எல்லோருக்கும் முடியக்கூடியதல்ல என்றும் சொல்ல மன்னன் அதை விளக்குமாறு கேட்டான். சித்தர்கள் விளக்கினார்கள். ஆனால் அந்த விளக்கங்கள் சூட்சும வார்த்தைகளால் இருக்கவே முதலாம் ராஜாதி ராஜ சோழனுக்கு அது தெளிவாக விளங்கவில்லை.. அவன் மீண்டும் தன் ஆசையை வெளிப்படுத்தி அந்த சிவலிங்கத்திற்கு தகுந்த இடத்தில் கோயில் கட்ட ஆசைப்படுவதாகவும், சித்தர்கள் எப்படிக் கூறுகிறார்களோ அப்படியே பூஜை முறைகளைப் பின்பற்ற சம்மதிப்பதாகவும் கூறினான். சாளுக்கியர்களிடம் போர் புரிய சில நாட்களில் செல்லப் போவதாகவும் வந்து கோயில் வேலைகளை ஆரம்பிக்கப் போவதாகவும் கூறினான். முக்காலமும் அறிந்த அந்த

சித்தர்களில் ஒருவர் மன்னரிடம் புன்னகையுடன் சொன்னார். "போர் முடிந்து நீ வந்தால் அது குறித்து யோசிக்கலாம்"

"மகிழ்ச்சியுடன் சித்தர்களை வணங்கி போரில் வெல்ல ஆசி வழங்குமாறு முதலாம் ராஜாதி ராஜ சோழன் கேட்க அவர்கள் "சோழர் வெல்வர்" என்று ஆசி வழங்கினர். மன்னன் மகிழ்ச்சியுடன் சென்றான். அவன் சாளுக்கியருடன் கொப்பம் என்ற இடத்தில் போரிட்டான். போரில் யானை மீது அமர்ந்து போரிட்ட அவன் எதிரிகளின் அம்பு பட்டு படுகாயமுற்று இறந்து போனான். ஆனால் அவன் தம்பி இரண்டாம் ராஜேந்திர சோழன் தொடர்ந்து போரை நடத்தி போரைச் சோழர்கள் வென்றார்கள்."

"அடுத்ததாக அரியணை ஏறிய இரண்டாம் ராஜேந்திர சோழன் சித்தர்கள் அண்ணனிடம் "போர் முடிந்து நீ வந்தால் அது குறித்து யோசிக்கலாம்" என்று சொன்னதையும், "நீ வெல்வாய்" என்று ஆசி வழங்காமல் "சோழர் வெல்வர்" என்று ஆசி வழங்கியதையும் யோசித்து நடப்பதை அவர்கள் முன்கூட்டியே அறிந்திருந்தார்கள் என்று முடிவுக்கு வந்தான். சித்தர்கள் என்ன சொல்லியும் கேட்காமல் அந்த 'ஒளிரும்' சிவலிங்கத்தை அவன் அடைய விரும்பியது தான் அவனுக்கு எமனாய் வந்து விட்டது என்று நினைத்தான். மீண்டும் அந்த சித்தர்களையும் சிவலிங்கத்தையும் சந்திக்க இரண்டாம் ராஜேந்திரச் சோழன் விரும்பா விட்டாலும் அந்தக் காட்டு வழியில் இன்னும் சித்தர்கள் சிவலிங்கத்தைப் பூஜித்தபடி இருக்கிறார்களா என்றறிய ஒற்றர்களை அனுப்பினான். ஆனால் அந்த இடத்தில் சிவலிங்கம் இருந்ததற்கோ, சித்தர்கள் அங்கு பூஜை செய்ததற்கோ எந்த சுவடும் கூட இருக்கவில்லை"

அவர் முடித்து விட்டு அவனையே கூர்ந்து பார்த்தார். முன்பு அரைகுறையாய் ஓலைச்சுவடியைப் படித்துச் சொன்ன நபர்

இவ்வளவு தெளிவாய் அந்த சம்பவத்தைச் சொல்லவில்லை என்பதை அந்த மனிதன் நினைவு கூர்ந்தான். சிவலிங்கத்தின் தன்மை குறித்து சித்தர்கள் விளக்கினார்கள் என்பதைச் சொன்ன அவர் அதை விளக்காமல் விட்டதையும் அவன் கவனித்தான். முன்பு படித்த மனிதர் அந்தப் பகுதி சுத்தமாய் விளங்கவில்லை என்பதை ஒத்துக் கொண்டு இருந்தார்.

”அந்த சிவலிங்கம் தன்மையை அந்த சித்தர்கள் எப்படி விளக்கினாங்கன்னு நீங்க சொல்லலியே”

”அதை அப்படியே மொழி பெயர்த்திருக்கிறேன். நீங்களே அதைப் படிச்சுக்கலாம். எனக்கும் வார்த்தைகள் தெளிவாய் கிடைச்சாலும் பொருள் தெளிவாய் விளங்கலை”

’யாருக்கு விளங்கா விட்டாலும் குருஜிக்குப் பொருள் தெளிவாய் விளங்கும்’ என்று நினைத்த அந்த மனிதன் ஓலைச்சுவடியையும், அந்தக் காகிதங்களையும் தன் சூட்கேஸில் பத்திரப்படுத்தி விட்டுக் கேட்டான். “அந்தப் போர், ராஜாதி ராஜ சோழன் இறந்தது எல்லாம் நிஜம் தானா”

”அதெல்லாம் உண்மை தான். அந்தப் போர் 1054 ஆம் ஆண்டு நடந்தது. யானை மேல் இறந்ததும் உண்மை தான். “யானை மேல் துஞ்சிய தேவர்” என்ற பெயரை முதலாம் ராஜாதி ராஜ சோழனுக்கு வாங்கிக் கொடுத்தது. அவனுக்குப் பின் அவன் மகன்கள் யாரும் ஆட்சிக்கு வரவில்லை. தம்பி இரண்டாம் ராஜேந்திர சோழன் தான் ஆட்சிக்கு வந்தான். அதுவும் உண்மை தான்...” தமிழாராய்ச்சி வல்லுனர் சொன்னார்.

*சிறிது நேரம் மௌனமாய் இருந்து விட்டு அந்த மனிதன் கேட்டான். ”இந்த ஓலைச்சுவடி நிஜமாகவே 950 வருஷங்களுக்கு முந்தினதாக தான் இருக்குமா? பிற்காலத்துல எழுதப்பட்டதாக இருக்காதா?”*

*அவர் சொன்னார். “நான் அந்த ஓலையின் காலத்தையும் ஆராய்ச்சி செய்து விட்டேன். இது அந்தக் காலத்தோடது தான்.”*

*“இது மாதிரி ஓலைச்சுவடியைப் பார்த்ததில்லைன்னு சொன்னீங்களே ஏன்?”*

*“இது மாதிரியான ஒரு தனி சம்பவத்தை இத்தனை விரிவாக அந்தக் காலத்தில் ஒரு ஓலைச்சுவடியில் யாரும் எழுதி வைத்து நான் பார்த்ததில்லை. இந்த சம்பவம் குறித்து அரைகுறையாகக் கூட வேறெங்கும் நான் கேள்விப்பட்டதில்லை....”*

*சொல்லி விட்டு எதையோ அந்த தமிழ் வல்லுனர் சொல்லலாமா வேண்டாமா என்று யோசிப்பது போல அவனுக்குப் பட்டது. அந்த நேரத்தில் அவர் முகத்தில் லேசாக ஒரு இனம் புரியாத பயத்தையும் அவன் கவனித்தான்.*

# அத்தியாயம் - 21

*அந்த மனிதன் தமிழாராய்ச்சி வல்லுனரிடம் சொன்னான். “என்னவோ சொல்ல வர்ற மாதிரி இருக்கு. தயங்காமல் சொல்லுங்க”*

*எச்சிலை விழுங்கியவராக தமிழ் வல்லுனர் சொன்னார். "நான் சொல்றது பகுத்தறிவுக்குப் பொருந்தாத விஷயமா உங்களுக்குத் தோணலாம்.. ஆனால் நடந்ததென்னவோ உண்மை தான்...."*

*"பரவாயில்லை சொல்லுங்க"*

*"இந்த ஆராய்ச்சி நடத்திகிட்டிருக்கறப்ப மூணு தடவை ஆராய்ச்சி செய்துகிட்டிருந்த ரூமோட டியூப்லைட் ஃப்யூஸ் ஆச்சு... ஒரு வாரத்துல மூணு தடவை இப்படி ஆனது எனக்கு இயல்பாய் படல. ராத்திரில இந்த பிரச்சினைன்னா பகல்ல யாரோ அடிக்கடி கதவைத் தட்டறாங்க. போய்ப் பார்த்தா ஆளே இல்லை..."*

*அந்த மனிதன் சொன்னான். "இந்தக் காலத்துல டியூப் லைட் க்வாலிடி அந்த அளவுக்குத் தான் இருக்கு. எல்லாம் சைனா ப்ராடக்ட். அப்படி தான் இருக்கும்.. பகல்ல அடிக்கடி கதவைத் தட்டறது பக்கத்து முனிசிபல் ஸ்கூல் பசங்களா இருக்கும். அவங்களுக்கு அது விளையாட்டு. வேற ஒண்ணும் இல்லை..."*

*அவர் மெல்ல தலையசைத்தார்.*

*அவன் கேட்டான். "எங்களுக்கு முக்கியமாய் தெரிய வேண்டியது ஒண்ணு இருக்கு. இந்த சிவலிங்கம் யார் பூஜை செய்யணும்னோ, அதை தீர்மானிக்கிறது யாருன்னோ இந்த ஓலைச்சுவடில இருக்கா?"*

*"அப்படி எதுவும் இல்லை."*

அவன் எழுந்தான். அவர் சொன்னார். “நான் இன்னைக்கே டெல்லி திரும்பலாம்னு இருக்கேன்.... குருஜி கிட்டயும் சொல்லிடுங்க..” அவன் தலையசைத்து விட்டு வெளியேறினான்.

வெளியே வந்தவுடன் தஞ்சைப் பல்கலைக்கழக ஆராய்ச்சியாளர் நண்பருக்குப் போன் செய்தான். “எனக்கு அந்த ஓலைச்சுவடி எங்கே இருந்து கிடைச்சுதுன்னு அட்ரஸ் வேணுமே”

”அது ’தேனி’ல இருந்து கிடைச்ச ஓலைச்சுவடி. கொடுத்த ஆள் வயசானவர். ஜோதிடர். அட்ரஸைக் குறிச்சுக்கறீங்களா, இல்லை போனில் பேசறீங்களா? போன் நம்பர் வேணும்னாலும் தர்றேன்”

”நேர்லயே போய் அந்த ஆளைப் பார்க்கறேன். அட்ரஸ் சொல்லுங்க”

அந்த நண்பர் விலாசத்தைச் சொல்ல உடனடியாக அங்கிருந்து அந்த மனிதன் தேனி கிளம்பினான். அந்த விலாசத்தைக் கண்டு பிடிப்பது சிரமமாய் இருக்கவில்லை. நகர மையத்திலேயே ஒரு குறுகலான வீதியில் ஓட்டு வீடாக அது இருந்தது. வீட்டின் முன் “இ.சுப்பிரமணியன், ஜோதிடர்” என்று சாயம் போன பெயர்ப்பலகை தெரிவித்தது. அழைப்பு மணி இருக்கவில்லை. அந்த மனிதன் கதவைத் தட்டினான்.

முடியெல்லாம் நரைத்த, கதர் சட்டை வேட்டி அணிந்திருந்த முதியவர் கதவைத் திறந்து அவனைக் கேள்விக்குறியுடன் பார்த்தார்.

”வணக்கம். நான் தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைகழகத்துல இருந்து வர்றேன்”

*”வணக்கம். உள்ளே வாங்க.” என்று வரவேற்றவர் உள்ளே சிறிய வரவேற்பறையில் இருந்த பிரம்பு நாற்காலியைக் காட்டி “உட்காருங்க” என்றார். உள்ளே இருந்து அந்த ஜோதிடர் சாயலிலேயே இருந்த நடுத்தர வயதுக்காரரர் ஒருவர் எட்டிப் பார்த்து ”யாருண்ணா?”*

*”தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைகழகத்துல இருந்து வந்திருக்கார்” என்று ஜோதிடர் பதிலளிக்க தலையாட்டி விட்டு அவர் மறுபடியும் உள்ளே மறைந்தார்.*

*ஜோதிடர் அந்த மனிதனுக்கு எதிரில் இருந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்தபடி “என்ன விஷயமா வந்திருக்கீங்க?” என்று கேட்டார்.*

*”எங்க பல்கலைக்கழகத்துல நீங்க கொடுத்த ஓலைச்சுவடிகளை எல்லாம் தான் இப்ப ஆராய்ச்சி செய்துகிட்டிருக்கோம். ரொம்ப உபயோகமா இருக்கு.”*

*முதியவர் சொன்னார். “மகிழ்ச்சி”*

*”இந்த ஓலைச்சுவடிகள் உங்க கிட்ட எப்படி வந்ததுன்னு தெரிஞ்சுக்கலாமா? எங்களோட குறிப்புக்காகத் தான் கேட்கறேன்”*

*”முக்கால் வாசி ஓலைச்சுவடிகள் பரம்பரை பரம்பரையாய் எங்க கிட்ட இருந்தது. கால்வாசி என் குருநாதர் சிதம்பரநாத யோகி தந்தது...”*

*”குருநாதர்னா?”*

“ஜோதிடத்துல அவர் தான் எனக்கு குருநாதர். அவர் பெரிய யோகி. விடாமல் நாலஞ்சு நாள் சொல்லிக் கொடுப்பார். அப்புறமா ரெண்டு மூணு வருஷம் ஆள் கண்லயே சிக்க மாட்டார். எங்கேயாவது யாத்திரை போயிடுவார். திரும்ப வருவார். சில நாள் ராத்திரி பகலாய் சொல்லிக் கொடுப்பார். மறுபடி காணாமல் போயிடுவார்...” முதியவருக்குத் தன் குருநாதரைப் பற்றி சொல்கையில் முகத்தில் பேரன்பு தெரிந்தது.

“அவர் இப்போ...?”

“ஆறு வருஷங்களுக்கு முன்னால் சமாதியாயிட்டார்.”

சிவலிங்கம் குறித்த ஓலைச்சுவடியைத் தந்தது அவரது குருநாதராகத் தான் இருக்க வேண்டும் என்று அந்த மனிதன் யூகித்தான். ஆனாலும் உறுதிப்படுத்திக் கொள்ள நினைத்தான். “நீங்க கொடுத்த ஓலைகள்ல ஒரு ஓலைச்சுவடி வித்தியாசமாய் இருந்துச்சு....”

“எந்த ஓலைச்சுவடி?”

“சித்தர்கள் பூஜை செய்து வந்த சிவலிங்கம் பத்தி எழுதியிருந்த ஓலைச்சுவடி.. சோழர்கள் காலத்தோடது...”

ஜோதிடர் ஒரு கணம் மூச்சு விட மறந்து அவனையே கூர்ந்து பார்த்தார். திடீரென்று அவர் முகத்தில் தெரிந்த பெரிய மாற்றம் அவனையும் அவரைக் கூர்ந்து பார்க்க வைத்தது. ஒரு நிமிடம் கழித்து அவனாகவே தொடர்ந்தான். ”மற்ற எல்லா சுவடிகளை விட அது வித்தியாசமாய் இருந்துச்சு....”

ஜோதிடர் மெல்ல சொன்னார். "அது என் குருநாதர் வச்சிருந்தது...."

"அந்த சிவலிங்கம் பத்தின வேறெதாவது ஓலைச்சுவடிகள் அவர் கிட்ட இருந்ததா?"

"இல்லை. என் கிட்ட இருந்ததை எல்லாம் தந்துட்டேன். எனக்குப் பின்னாடி அந்த ஓலைச்சுவடிகளை நல்லபடியா பாதுகாக்கிற மாதிரி வீட்டுல யாரும் இல்லை. எல்லாம் இங்க்லீஷ் படிப்பு படிச்சு வேலைல இருக்கிறவங்க. இந்த ஓலைச்சுவடிகள்ல அவங்களுக்கு ஆர்வம் இல்லை.... அதனால தான் எல்லாத்தையும் தந்துட்டேன். அரசாங்கமாவது பத்திரமா வச்சிருக்குமே..."

"நல்ல காரியம் செஞ்சீங்க... அந்த சிவலிங்கம் பத்தின ஓலைச்சுவடி வேறெதாவது இருந்து உங்க குருநாதர் வேற யார் கிட்டயாவது கொடுத்துட்டு போயிருக்க வாய்ப்பிருக்கா?"

"இல்லை" அவர் யோசிக்காமல் சொன்னார்.

அவன் சொன்னான். "அப்படி இருந்தா அதுக்கு நாங்க நல்ல விலை தரத் தயாராய் இருக்கோம்...."

"இருந்தால் எனக்கு சொல்றதுல என்ன நஷ்டம்?"

அவனுக்கு ஏனோ அவர் எதையோ மறைக்கிறார் என்று தோன்றியது. அவரிடம் பேச்சுக் கொடுத்தால் மறைக்கிற விஷயம் என்ன என்றாவது தெரியலாம். ஒன்றும் தெரியாதவன் போல, அந்த ஓலைச்சுவடி மூலம் தான் அப்படி ஒரு சிவலிங்கத்தைப் பற்றி

கேள்விப்பட்டவன் போல, அவன் கேட்டான். “அப்படி ஒரு சிவலிங்கம் இருக்குங்களா?”

”இருக்குன்னு என் குருநாதர் சொன்னார். அவர் பொய் சொல்ல மாட்டார்”

“அது இப்ப எங்கே இருக்குன்னு தெரியுமா?”

“தெரியலை”

”நீங்க அந்த ஓலைச்சுவடியைப் படிச்சிருப்பீங்க இல்லையா?”

சிறிது தயக்கத்துக்குப் பின் அவர் தலையாட்டினார்.

அவன் அவரையே கூர்ந்து பார்த்தபடி சொன்னான். “நாங்களும் படிச்சுப் பார்த்தோம். பல இடங்கள்ல எங்களுக்கு அர்த்தம் புரியல”

அவர் சொன்னார். “எனக்கும் தான்... முக்கியமா அந்த சிவலிங்கத்தோட தன்மைகளைப் பத்தி சித்தர்கள் விளக்கின தமிழ் வேணும்னே முடிச்சுகள் போட்டு எழுதின மாதிரி இருக்கும். அது அந்த சோழ ராஜாவுக்கு மட்டுமல்ல அவ்வளவு சீக்கிரமா யாருக்குமே புரியாது....”

அவர் அந்த ஓலைச்சுவடியைப் படித்திருப்பதாக ஒப்புக் கொண்டு அதைப் பற்றி அவரே பேசியதால் அவனுக்கு சுற்றி வளைக்காமல் விஷயத்துக்கு வர முடிந்தது. “ஆனால் உங்கள் குருநாதருக்குப் புரிந்திருக்குமே. அவர் விளக்கி இருப்பாரே?”

”விளக்கலை. எல்லாத்தையும் எல்லார்னாலயும் விளங்கிக்க முடியாதுன்னு சொல்லிட்டார். அதுக்கு அவசியமும் இல்லைன்னார். ஒரு சொல் சொல்லிட்டார்னா அப்புறம் அவர் அதிலிருந்து மாற மாட்டார். அதனால அப்புறமா நானும் கேட்கலை”

”அந்த ஓலைச்சுவடி அவர் கிட்ட எப்படி வந்தது?”

“அவரோட குருநாதர் அவருக்குக் கொடுத்ததாம். அவரோட குரு ஒரு சித்தர்... அவரை நான் கூட பார்த்ததில்லை. அவர் வசம் அஷ்ட சித்தியும் இருந்ததுன்னு என் குருநாதர் சொல்வார்....”

அந்த மனிதன் சொன்னான். “எனக்கு அந்த சிவலிங்கம் பத்தி நிறைய தெரிஞ்சுக்கணும்னு ஆவலாய் இருக்கு. யார் கிட்ட போய் கேட்டால் தெரியும்”

”அது தெரிஞ்சிருந்தா நானே அவங்க கிட்ட போய் கேட்டு தெரிஞ்சுகிட்டிருந்திருப்பேன்.”

அந்த மனிதனுக்கு இனி எந்த உபயோகமான பதிலும் அவரிடம் இருந்து வராது என்று புரிந்து விட்டது. அவருக்கு நன்றி சொல்லி விட்டுக் கிளம்பினான்.

அந்த ஜோதிடர் அவனை வழியனுப்பி விட்டு நடந்ததை இன்னும் நம்ப முடியாமல் ஆழ்ந்த சிந்தனையில் ஆழ்ந்தார். அவருடைய குரு சமாதியடைவதற்கு முன் கடைசியாக அவரிடம் அந்த சிவலிங்கத்தைக் குறித்து விசாரித்துக் கொண்டு யாராவது ஒருவன் ஒரு நாள் வருவான் என்றும் அதன் பின் செய்ய வேண்டியது என்ன என்றும் சொல்லி இருந்தார். ஓலைச்சுவடியில் மட்டுமே இருந்த அந்தத் தகவல்களை வைத்து

*யாரோ ஒருவர் என்றாவது வந்து தன்னை சந்திப்பார்கள் என்பதை நம்ப அவருக்கு அப்போது கஷ்டமாகத் தான் இருந்தது. அவர் குருநாதர் அப்போது சொல்லி இருந்தார். "அப்படி ஒருத்தன் வந்தால் சிவலிங்கம் இடம் மாறும் காலம் வந்து விட்டது என்று அர்த்தம்".....*

*"ஒரு வேளை நான் உயிரோடு இருக்கும் போது அப்படி யாரும் வரா விட்டால்? நான் செத்ததுக்கப்பறம் வந்தால்?" ஜோதிடர் கேட்டார்.*

*"ஒருத்தருக்கு விதிச்சிருக்கிற வேலை முடியாமல் யாரும் சாகறதில்லை. அதனால நீ இருக்கறப்பவே அது நடக்கும்னு நம்பறேன். அப்படி நடக்கலைன்னா கடவுள் சித்தம் வேற மாதிரி மாறிடுச்சுன்னு அர்த்தம். அவர் அந்த வேலையை இன்னொருத்தர் மூலமா வேறு விதமா நடத்திக்குவார். நமக்கு அதுல யோசிக்க எதுவுமில்லை..."*

*உள்ளே இருந்து அவர் தம்பி அவசரமாக வந்தார். "அண்ணா நான் கோயிலுக்குப் போயிட்டு இப்ப வந்துடறேன்....."*

*ஜோதிடர் தலையசைத்தார். அவர் தம்பி விரைந்தார்.*

*தம்பி போனவுடன் கதவைத் தாளிட்டு விட்டு ஜோதிடரும் விரைந்து தனதறைக்குச் சென்று பழைய டிரங்குப் பெட்டி ஒன்றைத் திறந்தார். அதனுள் அவர் குருநாதர் தந்திருந்த அரக்கு வைத்து மூடப்பட்டிருந்த உறை ஒன்றை எடுத்தார். அதைப் பிரித்துப் பார்த்த போது அதற்குள்ளே ஒரு விலாசம் எழுதப்பட்டிருந்த காகிதமும் இன்னொரு அரக்கு வைத்து மூடப்பட்டிருந்த உறையும் இருந்தது. அந்த விலாசத்தைப் படித்தார். ஏழெட்டு மணி நேரப் பயணம் செய்ய*

*வேண்டிய தூரம்.... அந்த இன்னொரு அரக்கு வைத்து மூடப்பட்டிருந்த உறையை அந்த விலாசத்தில் சேர்க்க வேண்டும்... ஜோதிடர் நாளையே கிளம்ப முடிவு செய்தார்.*

*அதே நேரத்தில் அந்த மனிதன் அந்த தெருக்கோடிக்குப் போயிருந்தான். அவனை யாரோ கைதட்டி "சார்.. சார்..." என்று அழைப்பது கேட்டது. திரும்பிப் பார்த்தான். ஜோதிடர் வீட்டில் உள்ளே இருந்து எட்டிப்பார்த்த நபர் தான் மூச்சிறைக்க ஓடி வந்து கொண்டிருந்தான்.*

*அருகே வந்தவன் மூச்சு வாங்கியபடி சொன்னான். "நீங்க அண்ணா கிட்ட சொல்லிகிட்டு இருந்ததை நானும் கேட்டேன்.... அந்த சிவலிங்கம் பத்தின தகவல்கள் எனக்கு தெரியும்.....".*

# அத்தியாயம் - 22

*அந்த மனிதன் ஜோதிடரின் தம்பியை ஆலோசனையுடன் பார்த்தான். பின் "என்ன எல்லாம் தெரியும்?" என்று சந்தேகத்துடன் கேட்டான்.*

*ஜோதிடரின் தம்பி சிறிது தயங்கி விட்டுச் சொன்னான். "நீங்க அண்ணா கிட்ட பேசறப்ப ஏதாவது தகவல் சொன்னா நல்ல விலை தர்றதா சொன்னீங்க"*

*"அந்த சிவலிங்கம் சம்பந்தமான வேறெதாவது ஓலைச்சுவடி இருந்தா அதுக்கு நல்ல விலை தர்றதா சொன்னேன்... உங்க கிட்ட அப்படி எதுவும் ஓலைச்சுவடி இருக்கா?"*

*ஜோதிடர் தம்பி முகத்தில் இருந்த உற்சாகம் உடனடியாக வழிந்தது. ”என் கிட்ட ஓலைச்சுவடி எதுவும் இல்லை. ஆனா அந்த ஒளிரும் சிவலிங்கம் பத்தி என் அண்ணாவும், அவரோட குருநாதரும் பேசிகிட்ட நிறைய விஷயங்கள் தெரியும்.... நீங்க பணம் தர்றதா இருந்தா சொல்றேன்”*

*”உங்க பேர் என்ன?”*

*“என் பேர் சரவணன்.”*

*“சரவணன் நீங்க சொல்ற விஷயம் எங்களுக்கு புதுசாகவும், பயன்படற மாதிரியாகவும் இருந்தால் பணம் தர்றேன். முதல்ல எந்த மாதிரி தகவல் உங்க கிட்ட இருக்குன்னு சொல்லுங்க. பணம் தரக்கூடியதா இல்லையான்னு நான் சொல்றேன்....”*

*சரவணன் எதைச் சொன்னால் பணம் கிடைக்கும் என்று யோசித்தான். தன்னிடம் உள்ள தகவல்கள் பணம் சம்பாதிக்கக் கூடியவையா இல்லையா என்பதை அவனால் ஊகிக்க முடியவில்லை. சிறிது யோசித்தான்.*

*அவன் யோசிப்பதைப் பார்த்த அந்த மனிதன் கேட்டான். “அந்த சிவலிங்கம் இப்ப எங்கே இருக்குன்னு அவங்க பேசிகிட்டதுண்டா? அந்த சிவலிங்கத்தோட தன்மைகளைப் பத்தி அவங்க பேசிகிட்டதுண்டா? எந்த விதத்துல உங்க அண்ணாவோட குருநாதரும் அந்த சிவலிங்கமும் சம்பந்தப்படறாங்கன்னாவது சொல்ல முடியுமா?”*

“உங்க மூணாவது கேள்விக்கு என்னால பதில் சொல்ல முடியும்”

அடுத்த ஐந்தாம் நிமிடம் ஆள் நடமாட்டம் அதிகமில்லாத பூங்கா ஒன்றின் சிமெண்ட் பெஞ்சில் இருவரும் அமர்ந்திருந்தார்கள். அந்த மனிதன் சரவணனிடம் சொன்னான். “சரி சொல்லுங்க”

சொல்வதை எல்லாம் கேட்டு விட்டு இவன் காசு தராமல் போய் விட்டால் என்ன செய்வது என்று சரவணன் யோசித்தான். அதைப் புரிந்து கொண்ட அந்த மனிதன் ஒரு ஆயிர ரூபாய் நோட்டை எடுத்து சரவணனின் சட்டைப் பையில் திணித்தான். “நீங்க உங்களுக்கு தெரிஞ்சதை எல்லாம் ஆரம்பத்தில் இருந்து சொல்லுங்க.... அந்த தகவல்கள் எனக்கு உபயோகப்பட்டுதுன்னா இன்னும் தர்றேன்......”

சரவணன் ஆரம்பத்தில் இருந்து ஆரம்பித்தான். ”எங்கண்ணாவோட குருநாதர் சாகறதுக்கு சில மாசம் முன்னாடி தன் கிட்ட இருக்கற சில ஓலைகளை எல்லாம் அண்ணா கிட்ட கொண்டு வந்து தந்தார். அதுல ஒண்ணு தான் உங்க கிட்ட கிடைச்ச ஓலை. மத்த எல்லா ஓலைச்சுவடிகளும் ஜோதிட சம்பந்தமானவை. அந்த ஓலையைப் படிச்சு அண்ணா ஆச்சரியத்தோட ’அதெல்லாம் உண்மையான்னு’ கேட்டார். ஆமான்னு குருநாதர் சொன்னார். அண்ணா ’அந்த சிவலிங்கத்தை நீங்க பார்த்திருக்கீங்களான்னு கேட்டதுக்கு அவர் பார்த்திருக்கேன்னு சொன்னார். ஆனா அந்த சிவலிங்கம் எங்கே இருக்குன்னு அண்ணா கேட்டப்ப அவர் பதில் சொல்லலை. அவர் சொல்ல வேண்டான்னு தீர்மானிச்சுட்டா அவர் வாயில இருந்து அப்புறம் எதுவும் வராது. அதனால் அண்ணா அந்த சிவலிங்கம் பத்தின ஓலை உங்க கைக்கு எப்படி வந்ததுன்னு கேட்டார். அதற்கு அவரோட குருநாதர் தந்ததுன்னு சொன்ன குருநாதர் அப்போதைக்கு எதையும் சொல்லலைன்னாலும்

*இன்னொரு நாள் சிவலிங்கம் பத்தி பேசறப்ப ஒரு முக்கியமான தகவல் சொன்னார். அதையும் ரொம்ப ரகசியமா சொன்னார்.....”*

*சரவணன் ஒரு கணம் நிறுத்தி அந்த மனிதனைப் பார்த்து பெருமையாகப் புன்னகைத்தபடி சொன்னான். “பகவான் கிருபைல எனக்கு காது நல்ல கூர்மை. அதனால தான் அவர் சொன்னதை என்னால கேட்க முடிஞ்சுது”*

*அவன் காது கூர்மை அந்த மனிதனை வியக்க வைக்கவில்லை. “அவர் என்ன சொன்னார்?” என்ற கேள்வியை வறண்ட குரலில் அவன் கேட்டான்.*

*சரவணன் அந்த குருநாதரைப் போலவே குரலைக் குறைத்துக் கொண்டு சொன்னான். “அந்த சிவலிங்கத்தை பாதுகாத்து பராமரிக்க மூணு மார்க்கத்துல மூணு பேர் இருக்காங்களாம். அதுல ஒருத்தர் தான் சிவலிங்கத்துக்கு பூஜை செய்யறதுன்னாலும் சில விசேஷ நாள்கள்ல மூணு பேரும் சேர்ந்து சிவலிங்கத்தை வணங்குவாங்களாம். அந்த மூணு பேர்ல அண்ணாவோட குருநாதரும் ஒருத்தராம்...அந்த சிவலிங்கம் சம்பந்தமான ஓலை சிவலிங்கம் முதலாம் ராஜாதிராஜன் காலத்துல எழுதப்பட்டதாம்... சிவலிங்கத்தோட தன்மைகளையும் அந்த ஓலை விரிவாய் சொன்னதால அந்த மூணு பேர்ல ஒருத்தர் கைல ஒரு புனித ரெகார்டாய் அந்த காலம் முதல் இருந்து வந்துச்சாம்... அவருக்கும் முதல்ல அவரோட குருநாதரும் அதை வச்சிருந்தாராம்....”*

*பசுபதியின் தாய் கேள்விப்பட்டது இந்த மூவர் குழுவையாக இருக்குமோ என்று அந்த மனிதனுக்கு சந்தேகம் வந்தது. சரவணனை அவன் இடைமறித்துக் கேட்டான். “மூணு மார்க்கத்துல மூணு பேருன்னா என்ன அர்த்தம்?”*

சரவணன் விழித்தான். பின் தயக்கத்துடன் உண்மையைச் சொன்னான். "எனக்கு காது கூர்மையா இருக்கற அளவுக்கு அறிவு கூர்மை பத்தாது. அவர் சொன்னதை அப்படியே சொன்னேனே ஒழிய எனக்கும் அது புரியலை..."

"பரவாயில்லை.... அவர் உங்கண்ணாவுக்கு அந்த ஓலைச்சுவடியை தந்ததால இப்ப இருக்கற மூவர்ல உங்க அண்ணனும் ஒண்ணுன்னு எடுத்துக்கலாமா?"

"அப்படியில்லை போல இருக்கு. எங்கண்ணா கேட்டார். "சிவலிங்கத்தைப் பராமரிக்கற மூணு பேர்ல ஒரு ஆளுக்குப் போக வேண்டிய அந்த ஓலையை என் கிட்ட கொடுத்திருக்கீங்களே, ஏன்". அதுக்கு குருநாதர் சொன்னார். "இந்த தடவை எதுவும் நேர் வழியில் நடக்க வாய்ப்பில்லை... அடுத்த ஆளை நான் நேரில் சந்திக்க வாய்ப்பில்லை. அதனால் உன் கிட்டயே இருக்கட்டும்". அண்ணா தனக்கும் வயசாயிட்டதால இந்த ஓலைச்சுவடியை இனி என்ன செய்யறதுன்னு கேட்டதுக்கு மற்ற ஓலைச்சுவடிகளை என்ன செய்யறியோ அதோட சேர்த்து இதையும் அப்படியே செய்னு சொல்லிட்டார். தஞ்சாவூர் பலகலைக்கழகத்துல தமிழாராய்ச்சிக்கு பழைய ஓலைகள் இருந்தால் தந்து உதவணும்னு அறிவிப்பு வந்தவுடனே எங்கண்ணா எல்லாத்தையும் கொடுக்கறப்ப இதையும் தந்துட்டார்..."

அந்த மனிதன் சரவணனைக் கூர்மையாகப் பார்த்துக் கேட்டான். "இந்த சிவலிங்கம் பத்தி அவங்க சொன்னதைக் கவனமா கேட்டு ஞாபகம் வைச்சுக்க உங்களுக்கு எப்படித் தோணுச்சு... உங்கண்ணாவோட குருநாதர் இறந்தே ஆறு வருஷம் ஆச்சுன்னு உங்கண்ணா சொன்னாரே"

*”அந்த சிவலிங்கத்தோட சக்தி எல்லை இல்லாதது. அதை வச்சு வணங்கறவன் அடையற சக்தியும் எல்லை இல்லாததுன்னு குருநாதர் ஒரு தடவை அண்ணன் கிட்ட சொன்னார். அதனாலேயே அதுல எனக்கு ஆவல் அதிகமா இருந்துச்சு. அதனாலேயே அதைப் பத்தி அவங்க பேசினா காது தானா கூர்மையாயிச்சு.”*

*தன் சட்டைப் பையில் இருந்து சில ஆயிரம் ரூபாய் தாள்களை எடுத்து கையில் வைத்துக் கொண்டு அதில் இரண்டு தாள்களை சரவணனுக்கு நீட்டினான் அந்த மனிதன். சரவணன் முகத்தில் சந்தோஷம் தாண்டவம் ஆடியது. அதை எடுத்து தன் சட்டைப் பையில் வைத்துக் கொண்ட அவன் அந்த மனிதன் கையில் வைத்திருந்த ரூபாய்களை ஏக்கத்துடன் பார்த்தான்.*

*அந்த மனிதன் சரவணனைக் கேட்டான். “வேறெதாவது தகவல் நினைவு இருக்கா?”*

*சரவணன் அந்த ரூபாய்களைப் பார்த்தபடியே மூளையை கசக்கிக் கொண்டான். பின் மெல்ல சொன்னான். “அவங்க அந்த சிவலிங்கத்தைப் பத்தி பேசினப்பவே இந்த வருஷம் 2012ஐ பத்தியும் பேசினாங்க. குருநாதர் மாயன் கேலண்டர் ஐயாயிரத்து சொச்ச வருஷங்கள் முடியற வருஷம் இது.. ரொம்ப முக்கியமான கட்டம்னு எல்லாம் சொன்னார்...”*

*அந்த மனிதன் சரவணனைக் கேட்டான். “உலகம் அழியறதைப் பத்தி பேசினாங்களோ?”*

*”உலகம் அழியாது, ஆனா மாற்றங்கள் நிறைய வரும்... பழையதெல்லாம் அழிஞ்சு போய் புதிதாய் நிறைய மாற்றம் வரும்.. அதை உலகம் சந்திக்கும்னு சொன்னார்....”*

*”நல்லா யோசிச்சு சொல்லுங்க... சிவலிங்கத்தைப் பத்தி பேசினப்ப ஏன் இந்த மாற்றங்களைப் பத்தி அவங்க பேசினாங்க”*

*சரவணன் யோசித்து விட்டு சொன்னான். “ஏன்னு சரியா சொல்ல முடியலை. ஆனா ஜோதிடத்தைப் பத்தியும் பேசினாங்க... கிரகங்களைப் பத்தி பேசினாங்க... 2012, 2013 வருஷங்கள் முக்கியமானதா இருக்கும்னு குருநாதர் சொன்னார்.... சிவலிங்கமும் மாற்றத்தை சந்திக்கும்கிற மாதிரி அவர் பேசினார்”*

*அந்த மனிதன் சிறிது நேரம் சிலை போல அமர்ந்திருந்தான். சிவலிங்கம் மாற்றத்தை சந்திக்கும் என்று தோராயமாக அந்த குருநாதர் சொல்லி விட்டுப் போயிருந்தது அவனுக்கு பிரமிப்பை ஏற்படுத்தியது. பின் இன்னொரு ஆயிரத்தை சரவணனிடம் நீட்ட சரவணன் வாயெல்லாம் பல்லாக அதை வாங்கிக் கொண்டான்.*

*அந்த மனிதன் கேட்டான். “இந்த சிவலிங்கம் பத்தின ஓலைச்சுவடி வேற எதுவும் இல்லைங்கறது உறுதியா தெரியுமா?”*

*”அப்படி எதுவும் இருக்கற மாதிரி தெரியலை.”*

*“அந்த குருநாதருக்கு வேற யாராவது சிஷ்யர்கள் இருக்காங்களா?”*

*”அந்த ஆள் ஒரு நாடோடி. சதா சஞ்சாரத்துலயே இருப்பார். எப்பவாவது தான் வருவார். போகிற இடங்கள்ல யாராவது சிஷ்யர்கள் இருக்காங்களான்னு தெரியலை...”*

*”உங்களுக்குத் தெரியாமல் உங்கள் அண்ணனுக்கு மட்டும் அந்த குருநாதர் ரகசியமா இந்த சிவலிங்கம் பத்தி சொல்லி இருக்க வாய்ப்பு இருக்கா?”*

*“அவங்க எதையும் ரகசியமா பேசிக்கற வழக்கம் இருந்ததில்லை... ஆனா குருநாதர் சாகறதுக்கு ஒரு வாரம் முன்னால் என்னை ஒசில என் நண்பன் ஒருத்தன் கொடைக்கானல் கூட்டிகிட்டுப் போனான். நான் ஒரு வாரம் இருக்கலை. அப்படிப் போனப்ப அவர் எதாவது அண்ணன் கிட்ட சொல்லி இருக்கலாம்..”*

*“அப்படி சொல்லி இருந்தா உங்கண்ணா அதை யார் கிட்டயாவது சொல்லி இருப்பாரா?”*

*”அவர் சொல்லக்கூடிய ஆளில்லை. அவர் ஒரே தம்பி நான் தான். எனக்கு குடும்பம் குட்டி இல்லை... அவர் கூடவே தான் ஒண்டி இருக்கேன். என் கிட்டயே அளந்து தான் பேசுவார்.”*

*“உங்கண்ணாவுக்கு குழந்தைகள்?”*

*“மகள் கும்பகோணத்துல இருக்கா. மகன் கனடாவுல இருக்கான். அவங்க கிட்ட கூட அவர் குடும்ப விஷயங்கள் மட்டும் தான் பேசுவார். இந்த சிவலிங்கம் பத்தி அவர் யார் கிட்டயும் பேசி நான் பார்த்ததில்லை. அவர் கிட்டயும் உங்களைத் தவிர யாரும் சிவலிங்கம் பத்தி பேசினதில்லை...”*

*“உங்களுக்கு அந்த சிவலிங்கம் மேல ஆர்வம் இருந்ததுன்னு சொன்னீங்களே, அதைப் பார்க்கவோ, அதிகமா தெரிஞ்சுக்கவோ தனிப்பட்ட முறையில் முயற்சி செய்திருக்கீங்களா?”*

”ஒரே ஒரு தடவை குருநாதர் கிட்ட நேரடியா கேட்டிருக்கேன். அந்த சிவலிங்கத்தை ஒரு தடவை தரிசிக்கணும்னு ஆசைன்னு சொல்லி இருக்கேன். எடுத்த எடுப்புல அந்த ஆள் ’பார்க்காமல் இருக்கறது தான் உனக்கு நல்லது’ன்னு முகத்துல அடிச்ச மாதிரி சொல்லிட்டார். அதுக்கு என்ன அர்த்தமோ எனக்கு விளங்கலை. ஆனா அந்த ஆள் என்னைப் பார்த்த பார்வைல அது நல்ல அர்த்தமா இருக்க வாய்ப்பில்லை...”

எழுந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு அந்த மனிதன் எழுந்தான். இனியொரு ஆயிரம் ரூபாயையும், ஒரு துண்டு சீட்டில் தன் மொபைல் எண்ணையும் அவனிடம் தந்து விட்டு சொன்னான். “எப்பவாவது கூடுதல் தகவல் எதாவது கிடைச்சா எனக்கு போன் செய்யுங்க. உங்களை நான் ஸ்பெஷலா கவனிச்சுக்கறேன்”

“கண்டிப்பா செய்யறேன் சார்” என்று சரவணன் நன்றியுடன் சொன்னான். மொத்தத்தில் ஐந்தாயிரம் ரூபாயை அரை மணி நேரத்தில் சம்பாதித்த திருப்தி அவனுக்கு இருந்தது. அவனைப் பொருத்த வரை அது பெரிய தொகை...!

அந்த மனிதன் விடை பெற்றான். பயணத்தைத் தொடர்ந்த போது மனதில் மட்டும் சரவணன் சொன்ன விஷயங்களே திரும்பத் திரும்ப வந்தன. ’அந்த சிவலிங்கத்தின் பராமரிப்பு மூவர், அவர்கள் மூன்று மார்க்கத்தை சேர்ந்தவர்கள், அந்த சிவலிங்கத்தை வைத்து வணங்குபவன் பெறும் சக்தி எல்லையில்லாதது, மாயன் கேலண்டர், சிவலிங்கமும் இந்தக் காலக்கட்டத்தில் மாற்றம் பெறும்..... இந்த தடவை எதுவும் நேர் வழியில் நடக்க வாய்ப்பில்லை...’

யோசித்துப் பார்க்கையில் அவனுக்குத் தலை சுற்றுவது போல இருந்தது.

# அத்தியாயம் - 23

ஈஸ்வர் வீட்டில் இருந்து ஒவ்வொரு காராக வெளியே செல்வதை ஜன்னல் வழியே பார்த்தான். பரமேஸ்வரன், விஸ்வநாதன், மகேஷ் எல்லோரும் அவரவர் வேலைக்குச் சென்று விட்டார்கள். மகேஷ் மட்டும் போகும் முன் 'சாயங்காலம் பார்க்கலாம்' என்று சொல்லி விட்டுப் போனான். அவன் வந்து போன வேகம் அவன் மீனாட்சி அனுப்பி தான் வந்து சொல்லி விட்டுப் போகிறான் என்பதை ஈஸ்வருக்கு தெளிவாகவே விளக்கியது. மீனாட்சி சமையலறையில் வேலையாக இருந்தாள். ஈஸ்வர் வந்ததால் அதிகாலையில் படிக்காமல் விட்ட தினப்பத்திரிக்கையை ஆனந்தவல்லி தனதறையில் படித்துக் கொண்டிருந்தாள்.

எனவே ஈஸ்வருக்கு தேவையான தனிமை கிடைத்தது. சிவலிங்கம் விஷயமாக இனி என்ன செய்ய வேண்டும் என்று அவனுக்கு விளங்கவில்லை. அது அவனை இந்தியா வரத்தூண்டியது. வந்தான். இங்கு வந்த பின்னும் அது அந்தரத்தில் நிற்பது போல ஒரு காட்சி தெரிந்தது, குடும்ப உணர்ச்சிப் போராட்டங்களில் என்னை மறந்து விடாதே என்று சொல்வது போல இருந்தது. அதனால் அடுத்ததாக என்ன செய்வது என்று அவன் யோசிக்க ஆரம்பித்தான். அவனுக்கு அந்த சிவலிங்கம் பற்றி தெரிந்ததெல்லாம் அவன் அப்பா சொன்னது தான். அவர் சொன்ன விஷயங்களும் அவன் பிறப்பதற்கு முந்தையவை. பசுபதி பற்றியும், சிவலிங்கம் பற்றியும் முழுவதும் தெரிந்து கொள்ள மீனாட்சி, பரமேஸ்வரன், ஆனந்தவல்லியுடன் அது பற்றிப் பேச வேண்டும் என்று நினைத்து அதை ஒரு தாளில் குறித்துக் கொண்டான். அமெரிக்கா திரும்பும் முன் அவன் தந்தையின் மிக நெருங்கிய நண்பர் தென்னரசையும் சந்திக்க வேண்டும் என்று வரும் முன்பே நினைத்திருந்தான். அதையும் குறித்துக் கொண்டான்.

*இந்தப் பழக்கம் அப்பாவிடம் இருந்து அவனுக்கு வந்தது. ஒவ்வொரு நாளும் என்ன செய்ய வேண்டும் என்று ஒரு தாளில் சுருக்கமாக எழுதி வைத்துக் கொள்ளும் பழக்கம் அவருக்கு இருந்தது. அந்தத் துண்டுக் காகிதம் இரவு தூங்குவதற்கு முன் தான் குப்பைக் கூடைக்குப் போகும்... அப்பா நினைவு வந்ததும் மறுபடியும் அவன் பார்வை அவர் பரமேஸ்வரனுடனும், மீனாட்சியுடனும் இருந்த புகைப்படத்திற்குச் சென்றது... அந்தப் படத்தின் வழியாக அந்தக் காலத்திற்கே சென்று அவர்கள் மனநிலையை அறிய ஆசைப்பட்டான்....*

*மீனாட்சி தன் சமையலறை வேலைகளை அவசர அவசரமாக முடித்து விட்டு அவன் அறைக்குள் நுழைந்த போதும் அவன் அந்தப் புகைப்படத்தையே தான் பார்த்துக் கொண்டிருந்தான்.*

*“அந்த ஃபோட்டோ ரொம்ப நல்லா வந்திருக்கு இல்லை” மீனாட்சி மருமகனைக் கேட்டாள்.*

*“ஆமா. எப்ப எடுத்தது?”*

*“நானும் அண்ணாவும் காலேஜ் படிக்கறப்ப எடுத்தது. அன்னைக்கு எங்கப்பா பிறந்த நாள்....”*

*ஈஸ்வர் ஒன்றும் சொல்லவில்லை. ‘எங்கப்பா’ என்ற வார்த்தையை அத்தையும் அவனுடைய அப்பாவைப் போலத் தான் உச்சரிப்பதாக அவனுக்குத் தோன்றியது. சொல்லும் போதே ஒரு அன்பான அழுத்தம் அதில் இருந்தது. வயதான பின்னும் இந்த அளவு நேசிக்கிற குழந்தைகளைப் பெற மனிதர் கொடுத்து வைத்திருக்கிறார் என்று நினைத்துக் கொண்டான்....*

*“என்னவோ எழுதிகிட்டிருக்கிற மாதிரி இருக்கு?” மீனாட்சி கேட்டாள்.*

*“எனக்கு உங்க பெரியப்பா பத்தியும் அந்த சிவலிங்கம் பத்தியும் நிறைய தெரிஞ்சுக்க வேண்டி இருக்கு. அதுக்கு யார் கிட்ட எல்லாம் பேசணும்னு குறிச்சு வச்சுகிட்டிருந்தேன்....அதுல உங்க பேரும் இருக்கு. நீங்க அவரைப் பார்க்க அடிக்கடி போவீங்களா?....”*

*“நான் ரெண்டு மூணு வருஷத்துக்கு ஒரு தடவை தான் போவேன்....”*

*“ஏன்?”*

*”பெரியப்பா பெரும்பாலும் தியானத்திலையோ, பூஜையிலையோ இருப்பார். அவர் கிட்ட பேச அதிகம் இருக்காது. சில சமயம் அவர் வாயையே திறக்க மாட்டார். லேசா புன்சிரிப்பு மட்டும் தான் அவர் கிட்ட இருந்து வரும். அதனால எப்பவாவது தான் போவேன்....”*

*”அவர் உங்க கல்யாணத்துக்கு எல்லாம் வந்திருக்காரா?”*

*“இல்லை. அவங்கப்பா இறந்ததுக்கு வந்துட்டு போனவர் வேற எதுக்கும் வந்ததில்லை.. எங்கம்மா இறந்ததுக்கு கூட அவர் வரலையாம்”*

*“ஏன்?”*

“அவர் மனசளவுல துறவி மாதிரி தான். காவி உடுத்திக்கலை. அவ்வளவு தான்... அவரை மாசா மாசம் போய் பார்த்துகிட்டிருந்தது அப்பா ஒருத்தர் தான்....”

“உங்கப்பா கிட்ட அவர் நல்லா பேசுவாரா?”

”பெரும்பாலும் இவர் தான் பேசுவார். அவர் கேட்டுகிட்டிருப்பார். ஆனா எங்கப்பாவுக்கு அண்ணான்னா ரொம்ப பாசம்... மரியாதை...”

மனைவி இறந்த போது கூட வராத, அதிகம் பேசாத, அண்ணனை கடைசி வரை மாதா மாதம் சென்று பார்த்த பரமேஸ்வரனின் பாசம் மிகவும் ஆழமானது தான் என்று ஈஸ்வருக்குத் தோன்றியது. அது மட்டுமல்ல அண்ணன் சொன்னார் என்பதற்காக பேரன் முகத்தில் அடித்தது போல் பேசிய பிறகும் அவர் மீண்டும் போன் செய்து பேசியதையும் அவன் நினைத்துப் பார்த்தான்....

”எங்க அப்பா இங்கே இருந்த வரைக்கும் உங்க பாட்டி அங்கே போவதில்லைன்னு சொல்லிகிட்டிருந்தார்... அப்புறமா அவங்க போக ஆரம்பிச்சாங்களா?”

”இல்லை... சாகறதுக்கு ஒரு மாசம் முன்னால் அதிசயமா பெரியப்பாவே அவங்களைப் பார்க்கணும்னு அப்பா கிட்ட சொல்லி அனுப்பிச்சார். அதனால பாட்டி ஒரு தடவை போய் மகனைப் பார்த்துட்டு வந்தாங்க....”

பெற்ற மகன் மீது கோபித்துக் கொண்டு கிட்டத்தட்ட 58 வருஷங்கள் போய் பார்க்காமலேயே இருந்த ஆனந்தவல்லி அவனை

*ஆச்சரியப்படுத்தினாள். இந்தக் கோபம், வீம்பு, வறட்டு கௌரவம் தான் பரமேஸ்வரனுக்கும் வந்திருக்கிறது. என்ன மனுசங்க!...*

*"மாமா மகேஷ் எல்லாம் போவாங்களா?"*

*"இவர் மொத்தமா போனதே மூணு தடவை தான் இருக்கும். மகேஷ் சின்ன வயசுல அதிகம் போனதில்லை. பெரியவனான பிறகு எங்கப்பா கட்டாயத்துக்கு வருஷத்துக்கு ரெண்டு தடவையாவது போவான். ஏதாவது குடுத்துட்டு வரச்சொன்னா குடுத்துட்டு வருவான்... தோட்டத்துல இருந்து எதாவது கொண்டு வரச் சொன்னா கொண்டு வருவான். சந்தோஷமா போக மாட்டான். சலிச்சுகிட்டே போவான். அவனுக்கு அவர் பார்த்தாலும் பேசறது இல்லைன்னு குறை... அவர் பேசறதே கம்மிடா ஆனா அவசியமா இருந்தா கண்டிப்பா பேசுவார்னு சொன்னா புரிஞ்சுக்க மாட்டேன்கிறான்..."*

*"அவசியம் இருந்தான்னு சொன்னா?"*

*"மகேஷ் என் வயித்துல இருக்கறப்ப டாக்டர் பிரசவத்துல பிரச்சினை இருந்தாலும் இருக்கலாம்னு சொல்லி இருந்தார். அந்த சமயத்துல ஒரு நாள் அவரைப் பார்க்கப் போயிருந்தேன். நான் ஒண்ணும் சொல்லாமலேயே அவர் சொன்னார். கவலைப்படாதே, சுகப்பிரசவம் ஆகும்னார். அவர் சொன்ன மாதிரியே சுகப்பிரசவம் தான் ஆச்சு. டாக்டரே ஆச்சரியப்பட்டார். பெரியப்பாவுக்கு சில அபூர்வ சக்திகள் எல்லாம் இருந்துச்சு. மனசுல இருக்கறதை சொல்லாமலேயே புரிஞ்சுகிட்டு அதுக்கு பதிலும் அவராவே சொல்வார். ஆனால் முக்கியமான விஷயமா அவர் மனசுக்கு தோணணும்..."*

*”அந்த சிவலிங்கம் பத்தி நீங்க என்ன நினைக்கிறீங்க அத்தை? அப்பா ஒரு தடவை சின்னதா இருக்கறப்ப அவர் ஃப்ரண்ட் தென்னரசோட அந்த தோட்ட வீட்டுக்கு விளையாடப் போனதாகவும் விளையாடிட்டு தண்ணீர் குடிக்க வீட்டுக்குள்ளே போனப்ப அந்த சிவலிங்கம் ஜொலிச்சுகிட்டு இருந்துச்சுன்னும் என் கிட்ட சொல்லி இருக்கார்... உங்களுக்கு அந்த மாதிரி அனுபவம் இருக்கா?”*

*மீனாட்சி சொன்னாள். “எனக்கு அந்த மாதிரி எந்த அனுபவமும் இல்லை ஈஸ்வர்.... அண்ணா வந்து சொன்னப்ப எங்கப்பாவும், பாட்டியும் வேறெதோ பார்த்துட்டு வந்து பசங்க பேசறாங்கன்னு நினைச்சாங்க. எனக்கும் அப்படி பார்க்க ஆசையாய் இருந்து நான் போறப்ப எல்லாம் அதிக நேரம் அதைக் கவனிச்சிருக்கேன்... அதுல எந்த மாற்றமும் என் கண்ணுக்குத் தெரியல...”*

*அப்பாவும் அதற்குப் பின்னால் பல முறை தொடர்ந்து போய் சிவலிங்கத்தைப் பார்த்தும் அந்த ஜொலிப்பு பின் தென்படவேயில்லை என்று ஒரு சிறிய ஏமாற்றத்துடன் சொன்னதை ஈஸ்வர் நினைவு கூர்ந்தான். அந்த சிவலிங்கம் ஜொலித்த போதே அவர் தன் பெரியப்பாவிடம் போய் பரபரப்புடன் சொன்னாராம்... ”பெரியப்பா சிவலிங்கம் ஜொலிச்சதை நானும் தென்னரசுவும் பார்த்தோம்”. பசுபதி ஒன்றுமே சொல்லாமல் புன்னகைத்தாராம்.. பின் எப்போதும் அது ஜொலிப்பதைப் பார்க்க முடியாத ஏமாற்றத்தை அவரிடம் தெரிவித்த போதும் பசுபதி வெறுமனே புன்னகைத்தாராம்.. இரண்டு சமயங்களிலும் ‘அது ஒரு பெரிய விஷயமில்லை’ என்பது போல் அவர் புன்னகை இருந்த்தாக சங்கர் மகனிடம் சொல்லி இருந்தார்....*

ஆனால் பசுபதி நினைத்தது போல மற்றவர்கள் நினைக்கவில்லை போல் இருக்கிறது. அதனால் தான் அவரைக் கொன்று அந்த சிவலிங்கத்தைத் திருடிக் கொண்டு போயிருக்கிறார்கள் என்று ஈஸ்வருக்குத் தோன்றியது...

**************

தஞ்சாவூர், தேனி பயணம் முடித்து விட்டு வந்த அந்த மனிதன் தமிழ் ஆராய்ச்சியாளர் எழுதித் தந்ததையும் ஓலைச்சுவடியையும் குருஜி கையில் ஒப்படைத்தான். குருஜி அவன் எதிர்பார்த்தது போல அந்த ஓலைச்சுவடியில் உள்ளதை விளக்கும் உரையைப் படிக்க அவசரப்படவில்லை. மாறாக இரண்டு இடங்களிலும் நடந்ததை ஒன்று விடாமல் சொல்லச் சொல்லி கேட்டார். தமிழாராய்ச்சி வல்லுனர் ட்யூப் லைட் விவகாரத்தையும், கதவு தட்டல் விவகாரத்தையும் சொன்னதைச் சொன்ன போது அவர் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. ஆனால் அது பற்றி அவர் கருத்து எதுவும் சொல்லப் போகவில்லை.

ஆனால் ஜோதிடர் தம்பி சொன்னதைக் கேட்கும் போது மட்டும் குருஜி ஆழ்ந்த சிந்தனையில் இருந்தார். சில இடங்களில் சொன்னதை மறுபடி சொல்லச் சொல்லி கேட்டார். எல்லாம் கேட்டு முடித்த பின் அவர் சிந்தனை மேலும் பலப்பட்டது.

"என்ன குருஜி யோசிக்கிறீங்க?"

"இந்த ஓலைச்சுவடியை மற்ற ஓலைச்சுவடிகளோடு அந்த ஜோதிடர் கொடுத்தது எனக்கு இயல்பாய் படலை. அதுவும் அந்த சிவலிங்கம் பத்தின அத்தனை விவரங்கள் தெரிஞ்சு, தெரிஞ்ச விஷயங்களைப் பத்தி உன் கிட்ட மூச்சு கூட விடாத அந்த ஜோதிடர் மத்த ஓலைச்சுவடிகளோடு இந்த ஓலைச்சுவடியையும் அப்படியே எடுத்துக் கொடுத்துட்டார்ங்கறதை நம்ப கஷ்டமாய் இருக்கு..."

*"அதான் அந்த குருநாதர் கிட்ட அந்த ஜோதிடர் இந்த ஓலைச்சுவடிய என்ன பண்றதுன்னு கேட்டப்ப அவர் மத்த ஓலைச்சுவடிகளை என்ன செய்யறியோ அதே மாதிரி இதையும் செஞ்சுடுன்னு சொன்னதா அவர் தம்பி சொன்னானே.. இந்த ஓலைச்சுவடியைப் படிச்சா சாதாரணமானவனுக்கு என்ன புரியப் போகுதுன்னு கூட அவங்க நினைச்சிருக்கலாம்...."*

*இருக்கலாம் என்பது போல குருஜி லேசாய் தலையசைத்தாலும் அவர் மனதில் இருந்த நெருடல் குறையவில்லை. மூவர் குழு, மாயன் கேலண்டர், பழையதெல்லாம் அழிஞ்சு போய் புதிதாய் நிறைய மாற்றம் வரும்.. அதை உலகம் சந்திக்கும், சிவலிங்கமும் மாற்றத்தை சந்திக்கும் போன்ற தகவல்கள் அவர் மூளைக்கு நிறைய வேலைகளைத் தந்தன. ஆனால் அவற்றை எல்லாம் ஒதுக்கி வைத்து விட்டு அவசரமாகக் கவனிக்க வேண்டிய முக்கிய விஷயத்தைப் பற்றிப் பேசினார்.*

*"நீ உடனடியா அந்த சரவணனுக்குப் போன் செய். நீ கிளம்பி வந்த பிறகு அந்த ஜோதிடர் யார் கிட்டயாவது போன்ல பேசினாரா, யாராவது அவரை வந்து பார்த்தாங்களா, இல்லை அவர் யாரையாவது போய் பார்த்தாரான்னு கேளு..."*

*அந்த மனிதன் யோசித்தபடியே உடனடியாகப் போன் செய்தான்.*

*"ஹலோ சரவணன். நான் தான் பேசறேன். உங்கண்ணா நான் வந்ததுக்கப்புறம் யார் கிட்டயாவது போன்ல பேசினாரா?"*

*“நான் உங்க கிட்ட பேசிகிட்டிருந்தப்ப அவர் பேசியிருந்தால் எனக்கு தெரிய வாய்ப்பில்லை. ஆனா நான் வந்ததுக்கப்பறம் அவர் பேசலை சார்... ஆனா என்னவோ நாள் முழுக்க ரொம்ப யோசனையா இருந்தாரு”*

*”அவரை வேற யாராவது வந்து பார்த்தாங்களா, இல்லை அவர் யாரையாவது போய் பார்த்தாரா?”*

*”அவரை யாரும் வந்து பார்க்கலை. ஆனா அவர் தான் திடீர்னு இன்னைக்கு காலைல எழுந்திருச்சு வெளியூர் போயிருக்காருங்க சார்...”*

*”எங்கே போயிருக்கார்?”*

*”மகளைப் பார்க்க கும்பகோணம் போறதா சொல்லிட்டு போனார் சார்”*

*”முதல்லயே போகிறதா சொல்லிகிட்டிருந்தாரா?”*

*“இல்லைங்க சார். திடீர்னு தான் போயிருக்கார்”*

*“சரவணன் எதுக்கும் அவர் அங்கே தான் போயிருக்காரான்னு கேட்டு சொல்ல முடியுமா?...”.*

*“ரெண்டே நிமிஷத்துல கேட்டு சொல்றேன் சார்” என்று சொன்ன சரவணன் இரண்டாவது நிமிடத்தில் போன் செய்தார். “சார்...நான் அவர் பொண்ணுக்கு போன் செஞ்சு கேட்டேன்... அவர் அங்கே போகலையாம்”*

*"வேற எங்கே போயிருப்பார் சரவணன்?"*

*"தெரியலையே சார். அவர் வேறெங்கயும் போகக் கூடிய ஆளில்லை சார். எனக்கு ஒண்ணும் புரியலை...."*

*"சரவணன், முடிஞ்சா அவர் எங்கே போனார்னு கண்டுபிடிச்சு சொல்றீங்களா? சொன்னீங்கன்னா நேத்து கொடுத்ததை விட ரெண்டு மடங்கு பணத்தை உங்க அக்கவுண்டுக்கு அனுப்பி வைக்கிறேன். ஆனா அவருக்கு சந்தேகம் வராத மாதிரி அதைச் செய்யுங்க"*

*போனை வைத்து விட்டு அந்த மனிதன் குருஜியைப் பார்த்தான்.*

*குருஜி சொன்னார். "அந்த ஜோதிடர் யாரைப் போய் பார்க்கிறார்னு தெரிஞ்சா அது மூலமா நாம நிறைய விஷயம் புரிஞ்சுக்கலாம்னு நினைக்கிறேன்".*

# ***<u>அத்தியாயம் - 24</u>***

*அன்று கம்பெனியில் முக்கியமான மீட்டிங் ஒன்று இருந்ததால் பரமேஸ்வரனும், விஸ்வநாதனும் இரவு எட்டு மணிக்கு மேல் தான் வந்தார்கள். மகேஷும் தாமதமாகவே வந்தான். அவர்கள் வருவதற்கு முன்பே பயணக் களைப்பில் ஈஸ்வர் உறங்கி விட்டான். தந்தையின் அறையில் அவனுக்கு மிக ஆழ்ந்த தூக்கம் வந்து விட்டிருந்தது. மறு நாள் காலை அவர்கள் போகும் வரை அவன் எழுந்திருக்கவில்லை. அவன் கண் விழித்த போது ஆனந்தவல்லி அவனையே பார்த்தபடி அருகே அமர்ந்திருந்தாள். தூங்குகின்ற*

*போது கொள்ளுப்பேரன் அவள் கண்களுக்கு மிக அழகாகத் தெரிந்தான். அவள் முகத்தில் ஒரு தனிக்கனிவு தெரிந்தது.*

*கண்விழித்த ஈஸ்வருக்கு ஒரு கணம் ஒன்றும் புரியவில்லை. எழுந்து உட்கார்ந்து சோம்பல் முறித்தான். அவன் தந்தைக்கும் அவன் தூங்குவதைப் பார்க்கப் பிடிக்கும். அவன் ஒரு குழந்தை போல் தூங்குவதாக அவர் சொல்வார்.... ஆனால் இந்தக் கிழவியும் ஏன் இப்படிப் பார்க்கிறாள் என்று நினைத்தவனாக அவன் கேட்டான். "என்ன?"*

*ஆனந்தவல்லி சொன்னாள். "என்ன இன்னமும் எழுந்திருக்கலையான்னு பார்க்க வந்தேன். தூங்கிட்டு இருந்தாய். அப்படியே நானும் இங்கே உக்காந்துட்டேன்."*

*அவன் எழுந்து போய் தன் காலைக்கடன்களை முடித்து விட்டு வரும் வரை ஆனந்தவல்லி அங்கேயே அமர்ந்திருந்தாள். அவன் அவளை ஆச்சரியத்துடன் பார்த்தான்.*

*அவள் சொன்னாள்."உனக்கு தொந்தரவாய் இருந்தாய் போயிடறேன்..."*

*"தொந்தரவெல்லாம் இல்லை. நானே உங்க கிட்ட பேச வரணும்னு இருந்தேன்."*

*"எதைப் பத்தி?"*

*"அந்த சிவலிங்கத்தைப் பத்தி..."*

ஆனந்தவல்லி முகம் இறுகியது. சிறிது நேரம் அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்து விட்டுக் கேட்டாள். “அப்படின்னா நீ இங்கே வந்தது அந்த சிவலிங்கம் பத்தி தெரிஞ்சுக்கத் தானா?”

”ஆமா பின்ன இங்கே எனக்கு வேறென்ன இருக்கு?”

“ஏண்டா இங்கே நாங்க எல்லாம் இல்லையா?”

”நீங்க எல்லாம் இருக்கீங்க. ஆனா நீங்க இருக்கற மாதிரி இது வரைக்கும் நீங்க காமிச்சுக்கவே இல்லையே”

வார்த்தைகளின் கூர்மைக்குத் தகுந்தது போல் அவன் முகத்திலும் கடுமை தெரிந்தது. ஆனந்தவல்லி கேட்டாள். “ஏண்டா நீ தகராறு பண்றதுக்குன்னே வந்திருக்கயா?”

அந்த நேரத்தில் மருமகன் எழுந்து விட்டானா என்று பார்க்க வந்த மீனாட்சி உள்ளே நுழையாமல் அப்படியே நின்று அவர்கள் பேசுவதைக் கேட்டாள். அவர்கள் இருவரும் சண்டை போட்டுக் கொள்வது அவளுக்குச் சுவாரசியமாக இருந்தது.

ஈஸ்வர் சொன்னான். “உண்மையை சொன்னா தகராறா? இந்த வீட்டு ஹால்ல ஜோடி ஜோடியா பெருசா படங்களை மாட்டி இருக்கீங்களே. எங்கப்பா அம்மா படம் இருக்கா? என் படம் இருக்கா?”

ஆனந்தவல்லி அசந்து விடவில்லை. அந்த அறையில் இருந்த படங்களையும், பதக்கங்களையும் கோப்பைகளையும் காட்டிக் கேட்டாள். ”ஏண்டா இதெல்லாம் யார் படம்? இதெல்லாம் யார் வாங்கின மெடல்...?”

“இதெல்லாம் எங்க அத்தை பத்திரமா வச்சிருக்கறது. நான் ஹால்ல சொல்றேன். நாலு பேர் பார்க்கிற இடத்தில் இருக்கா?”

”ஹால்ல இருக்கற படங்கள் எதையும் நான் வைக்கலை. நீ வேணும்னா உங்கப்பா அம்மா போட்டோவைக் கொண்டு போய் மாட்டிக்கோ. உன் தாத்தா கிட்ட இருக்கற கோபத்தை நீ ஏண்டா என் கிட்ட காமிக்கிறாய்?”

”அந்த ஆள் இப்படி இருக்கிறதுக்கு நீங்க தான் காரணம்...”

“ஏண்டா நீ இப்படி இருக்கறதுக்கு உங்கப்பன் காரணமா? அவன் ஒரு வார்த்தை பெரியவங்களை எதிர்த்துப் பேசினதில்லையேடா? உங்கப்பன் சாதுவா இருந்ததுக்கு அவங்கப்பன் காரணமா? பிள்ளைங்க எப்படி இருக்காங்கங்கறதுக்கு பெத்தவங்க தான் காரணம்னு சொன்னா, நீயும், உங்கப்பனுமே பெத்தவங்க மாதிரி இல்லையேடா. நீ ஏதோ பெரிய படிப்பெல்லாம் படிச்சிருக்கேன்னு சொன்னாங்க. படிக்காதவன் மாதிரி அல்ல பேசறே”

ஈஸ்வர் தன்னையும் மீறி புன்னகைத்தான். கிழவியின் பேச்சு சாமர்த்தியம் அவனுக்குப் பிடித்திருந்தது. சிறிய வயதிலிருந்தே அவனிடம் சரிசமமாக வாக்குவாதம் செய்து சண்டை போடுபவர்கள் யாரும் இருக்கவில்லை. பெற்றோர் இருவரும் அமைதியானவர்கள் என்பதாலும், அவனுக்கு உடன் பிறந்தவர்கள் யாரும் இல்லை என்பதாலும் சின்னச் சின்ன சண்டைகள் போடுவதில் உள்ள சந்தோஷம் குடும்பத்தில் அவனுக்குக் கிடைத்ததில்லை. அப்படி ஒரு சந்தர்ப்பத்தை ஆனந்தவல்லி அவனுக்குத் தரவே அதைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்தான். அவன் தொடர்ந்தான். “நான்

கோவப் படறப்ப எல்லாம் எங்கப்பா புத்தி சொல்லுவாரு. அந்த மாதிரி நீங்க உங்க மகனுக்கு புத்தி சொல்லி இருக்கீங்களா?"

ஆனந்தவல்லியும் மனதிற்குள் பேரன் பேச்சுத் திறமையை ரசித்தாலும் வெளியே காண்பித்துக் கொள்ளாமல் சொன்னாள். "உங்கப்பனைப் பத்தி அவன் இது வரைக்கும் யார் கிட்டயும் பேசினதே இல்லையேடா. யாராவது பேசினாலும் அந்த இடத்தை விட்டுப் போயிடுவான். உங்கத்தை கிட்ட கூட அவன் பேசினதில்லை. வேணும்னா அவ கிட்ட கேட்டுப்பாரு. அவன் எதிர்பாராம விழுந்த அடிடா அது. அவனால அதை இன்னைக்கு வரைக்கு தாங்க முடிஞ்சதில்லை..."

"ஒருத்தன் காதல் கல்யாணம் பண்ணிக்கறது தப்பா?"

"உன்னை மாதிரி உங்கப்பன் இருந்திருந்தா பரமேஸ்வரன் பிள்ளை கிட்ட எதையும் எதிர்பார்த்திருக்க மாட்டாண்டா. அப்பா கிழிச்ச கோடு தாண்டாத பிள்ளையாவே காலம் பூரா வளர்ந்தவண்டா உங்கப்பன். போடற டிரஸ் தேர்ந்தெடுக்கறது அப்பா, பைக் தேர்ந்தெடுக்கறது அப்பா, கார் தேர்ந்தெடுக்கறது அப்பா. அவங்கப்பனும் தேர்ந்தெடுக்கறதுன்னா சும்மா இல்லை... இருக்கறதுலயே எது உசத்தியோ அது தான் பையனுக்கு கிடைக்கணும்னு அப்படி பார்த்து பார்த்து தேர்ந்தெடுப்பான்... அப்பவே சொல்வேன் "இப்படி குழந்தைகளை ஓவரா தலையில தூக்கி வச்சு ஆடறது நல்லதில்லைடா"ன்னு. கேட்டால் தானே. உங்கப்பன் கல்யாணம் பண்ணிட்டு போனவுடனே இவன் பாதி செத்தே போயிட்டான்னு தான் சொல்லணும். அதுக்கப்பறம் மகனைப் பத்தி யார் கிட்டயும் பேசறதை நிறுத்திட்டான்..."

கிழவி தன் மகனுக்காக பரிந்து பேசினதில் இருந்த உண்மையை அவனால் புரிந்து கொள்ள முடிந்தது. ஆனாலும் "உன்னை மாதிரி

*உங்கப்பன் இருந்திருந்தான்னு சொன்னீங்களே எந்த அர்த்தத்துல?" என்று பொய்யான கோபத்தைக் காட்டி அவன் கேட்டான்.*

*ஆனந்தவல்லியிடமும் எதிர்த்து சரிசமமாய் சண்டை போடுபவர்கள் இது வரை யாரும் இருந்ததில்லை. தந்தை, கணவன், பசுபதி மூவரும் பெரிதாய் கோபம் கூட காட்ட மாட்டார்கள். கோபப்படும் பரமேஸ்வரன் கூட அதைத் தாயிடம் வார்த்தைகளில் காண்பிக்க மாட்டார். அதனால் அவனிடம் இப்படிப் பேசுவதில் அவளுக்கும் உள்ளூர ஒரு திருப்தி இருந்தது. "உன்னை மாதிரி எடக்கு முடக்கா எப்பவாவது பேசி இருந்தான்னு தான்?"*

*"நான் எப்ப எடக்கு முடக்கா பேசினேன்?"*

*"ஒரு சேரிப் பொண்ணை கட்டிகிட்டு நாலஞ்சு பெத்துகிட்டு இந்த வீடெல்லாம் சுத்தி விளையாட விடுவேன்னு சொன்னியே அதென்ன?"*

*"ஏன் சேரிப் பொண்ணை கட்டிக்கிறதுல என்ன தப்பு?"*

*"தப்பே இல்லை. ஏன் நீ பிச்சைக்காரியைக் கூட கட்டிக்கலாம்." ஆனந்தவல்லி எகத்தாளமாய் சொன்னாள்.*

*ஈஸ்வர் சிரிக்காமல் இருக்க கடும் முயற்சிகள் செய்து ஜெயித்தான். "அதுசரி இது வரைக்கும் நாம தான் எல்லாத்தையும் மகனுக்காக தேர்ந்தெடுத்தோம்... முதல் தடவையா அவனா ஆசைப்பட்டு தேர்ந்தெடுத்திருக்கிறான், அதை மதிக்கணும்னு உங்க மகனுக்குத் தோணலை. வாழ்க்கை பூரா சேர்ந்திருக்கிற மனைவியைத் தேர்ந்தெடுக்கற உரிமையைக் கூட தன் மகனுக்கு உங்கள் மகன் தரலை. அந்தக் கோபத்துல சாகற வரைக்கும் அவன்*

கிட்ட பேசக்கூட இல்லை... அது உங்களுக்கு தப்பாய் படலை பார்த்தீங்களா? நீங்களே உங்க மூத்த பிள்ளை மேல கோவிச்சுகிட்டு ஐம்பது வருஷத்துக்கு மேல பேசாம தானே இருந்தீங்க? எல்லாம் ஒரே ரகம் தான் போல இருக்கு?"

ஆனந்தவல்லிக்கு சுருக்கென்றது. ஈஸ்வரை முறைத்தாள். "ஏண்டா, அவன் வீட்டுக்கு வரலைன்னா பெத்தவ நான் சாகற வரைக்கும் உண்ணாவிரதம் இருப்பேன்னு இருக்கேன் கொஞ்சம் கூட அசைஞ்சு குடுக்காம கண்டுக்காமல் அவன் இருக்கான். இந்த காலத்துல அரசியல்வாதிகளே நிஜமான உண்ணாவிரதம்னா பேச்சு வார்த்தைக்காவது வந்து போறாங்க. அவன் அது கூட செய்யலை. கோவம் வராதா?"

"நீங்க சாகலையில்ல. அப்புறம் என்ன?" ஈஸ்வரன் கிண்டலடித்தான்.

ஆனந்தவல்லி முறைத்தாள்.

ஈஸ்வர் சொன்னான். "அவருக்குத் தெரிஞ்சிருக்கும் நீங்க சாக மாட்டீங்கன்னு. அதனால தான் கண்டுக்கலை போல இருக்கு."

ஆனந்தவல்லி முகத்தில் வேதனை தெரிந்தது. "அவன் செத்ததுக்கப்புறமும் நான் இருப்பேன்னு அவனுக்கு தெரிஞ்சிருக்கும்... சாப்பாடு பெருசுல்ல, ஆடம்பரம் பெருசுல்ல, பணம் பெருசுல்லன்னு சன்னியாசி மாதிரி என் குழந்தை இருக்கிறப்ப எப்படி எனக்கு இருந்துச்சு தெரியுமா? இனி இந்த உலகத்துல யாரையுமே அளவுக்கு அதிகமா நேசிக்கக் கூடாதுன்னு நான் அப்பவே தீர்மானிச்சுட்டேன்.... இந்தப் பாசமும் வேண்டாம்.

*அதுல இருந்து வர்ற துக்கமும் வேண்டாம்னு விலகியே இருக்கப் பழகிட்டேன்"*

*தன் பேரக் குழந்தைகளிடம் கூட அவள் சற்று தொலைவிலேயே இருந்ததற்குக் காரணம் இப்போது இதைக் கேட்டுக் கொண்டு நின்ற மீனாட்சிக்கு விளங்கியது. ஈஸ்வரும் மனம் இளகினாலும் காட்டிக் கொள்ளாமல் சொன்னான். "நேசிக்காத மனுஷங்களுக்கு உண்மையான சந்தோஷத்தையும் உணர முடியாது" சுவரில் இருந்த பரமேஸ்வரன், சங்கர், மீனாட்சி புகைப்படத்தைக் காட்டி சொன்னான்."பாருங்க இந்த மாதிரி சந்தோஷத்தை உணர்ந்திருக்கீங்களா?"*

*ஆனந்தவல்லி அந்தப் புகைப்படத்தைப் பார்த்தபடியே சொன்னாள். "இப்படி சந்தோஷமா இருந்த என் மகன் பின்னாடி எப்படி துக்கப்பட்டான்னு நான் பார்த்திருக்கேன்"*

*ஈஸ்வர் சொன்னான். "இந்த சந்தோஷத்தோட நினைவுகளை கடைசி வரை தக்க வச்சுகிட்ட என் அப்பாவை நான் பார்த்திருக்கேன். அந்த பழைய நாட்களைப் பத்தி பேசறப்ப எல்லாம் மறுபடி மறுபடி அந்த நாட்கள்ல வாழ்ந்துட்டு இருந்தார் அவர்...."*

*அதைக் கேட்டு மீனாட்சி ஈரமான கண்களைத் துடைத்துக் கொண்டாள். அண்ணன் மறுபடி மறுபடி அந்த நினைவுகளில் வாழ்ந்தான் என்பதை அவன் மகன் வாயால் கேட்ட போது நெகிழ்ச்சியாக இருந்தது. ஆனால் ஆனந்தவல்லி அப்படி நெகிழ்ச்சியடையவில்லை. "ஆனால் அந்த நினைவுகள் அப்பாவுக்காக காதலை தியாகம் செய்யற அளவுக்கு பலமா இல்லை" என்றாள்.*

ஈஸ்வருக்கு நிஜமாகவே கோபம் வந்தது. "ஆமா நீங்க எல்லாம் என்ன நினைக்கிறீங்க? நீங்க நேசிக்கிறீங்கங்கற காரணத்திற்காகவே அடுத்தவங்க உங்க அடிமையாகணுமா? அந்த ஆள் என்னடான்னா நான் வேணுமா அந்தப் பொண்ணு வேணுமான்னு கேட்கிறார். நீங்க என்னன்னா உங்க பையன் கிட்ட அந்த சிவலிங்கத்தை விடறியா நான் உண்ணா விரதம் இருந்து சாகவான்னு கேட்கிறீங்க. அன்பை ஏன் வியாபாரமாக்கிறீங்க?"

சுர் என்று அவனுக்கு எழும்பிய கோபத்தைப் பார்த்த ஆனந்தவல்லி அவனுக்கு அவன் அப்பாவை யாராவது எதாவது தப்பாய் சொன்னால் ரத்தம் கொதிக்கிறது என்று புரிந்து கொண்டாள். "ஏண்டா எங்க ரெண்டு பேரையும் விமரிசனம் செய்யத் தான் நீ அமெரிக்காவுல இருந்து வந்தியா?"

"இல்லை அந்த சிவலிங்கத்துக்காக தான் வந்தேன்....நல்ல வேளையா ஞாபகப்படுத்தினீங்க. சரி கொஞ்சம் சீரியஸா பேசலாமா? எனக்கு அந்த சிவலிங்கம் பத்தி முழுசும் தெரியணும். உங்களுக்குத் தெரிஞ்சதை எல்லாம் சொல்றீங்களா?" என்றவன் ஒரு வெள்ளைத் தாளையும் பேனாவையும் எடுத்துக் கொண்டான். அவன் முகத்தில் இருந்த கோபம் சுத்தமாய் காணாமல் போனது. படுக்கையில் இருந்து எழுந்து வந்து ஒரு நாற்காலியை அவள் அருகே நகர்த்திப் போட்டு உட்கார்ந்தான்.

ஒரு நொடியில் நேர்மாறாக மாறிய அமைதியான ஈஸ்வர் முகத்தையே லேசான சோகத்துடன் ஆனந்தவல்லி பார்த்தாள். பின் மிகுந்த பாசத்துடன் அவன் தோளில் கை வைத்து சொன்னாள். "ஈஸ்வர் வேண்டாண்டா. பசுபதி ஏன் உன் கிட்ட தெரிவிக்கச் சொன்னான்னு எனக்கு தெரியாது. ஆனாலும் நீயும் அது பின்னாடியே போயிடுவியோன்னு எனக்கு பயமா இருக்குடா. இந்த குடும்பத்துல ஒருத்தன் அதுக்கு பூஜை பண்ணி உசிரை விட்டது

போதும். இனி இந்த குடும்பத்துல யாரும் பலியாகிறதை பார்க்கற சக்தி எனக்கு இல்லைடா.”

மனிதர்களை எடை போடுவதில் என்றுமே ஈஸ்வர் தவறியதில்லை. நடிக்கத் தெரியாத, நடிக்கும் அவசியத்தையும் லட்சியம் செய்யாதவள் ஆனந்தவல்லி என்பதை அவன் முன்பே கணித்திருந்தான். அப்படிப்பட்ட ஆனந்தவல்லியின் முகத்தில் தெரிந்த வேதனையும், பேசிய பேச்சும் ஆத்மார்த்தமாய் வந்தவை என்பது புரிந்த போது அவன் மிகவும் நெகிழ்ந்து போனான். தோளில் அவள் வைத்த கைகளை எடுத்துத் தன் இரண்டு கைகளிலும் பிடித்துக் கொண்டு பரிவுடன் சொன்னான். “நீங்க அனாவசியமா பயப்படறீங்க. அப்படி எல்லாம் ஆகாது. இன்னொரு விஷயத்தை நீங்க மறந்துட்டீங்க. உங்க மூத்த பிள்ளையை பலி வாங்கினது அந்த சிவலிங்கம் இல்லை. மரணத் துடிப்புல கூட அவரோட பத்மாசனம் விலகலைன்னு கேள்விப்பட்டேன். தன் உடம்புல அத்தனை கட்டுப்பாடு வச்சிருந்த அவர் நினைச்சிருந்தா அந்த கொலைகாரனை சுலபமா தடுத்திருக்க முடிஞ்சிருக்கும். அவர் எந்தக் காரணத்தாலயோ அதை செய்யலை. ஒரு வேளை மரண காலம் இதுன்னு அவர் உணர்ந்திருக்கலாம். அதனால அதுக்கு இசைஞ்சு கொடுத்திருக்கலாம். அவர் உங்களைக் கூப்பிட்டு பேசினது, உங்க ரெண்டாவது பிள்ளை கிட்ட பேசினது எல்லாம் வச்சி பார்த்தா முதல்லயே அவர் தன் காலம் முடியப்போறதுன்னு உணர்ந்த மாதிரி தான் தெரியுது....”

ஆனந்தவல்லி அவன் பரிவான பேச்சில் உருகிப் போனாள். அவள் மூத்த பிள்ளை குறித்து கவலைப்பட்ட சமயங்களில் எல்லாம் எத்தனையோ முறை அவள் கணவர் அவளை இதே பரிவுடன் அவள் துக்கத்தைக் குறைக்க முயன்றிருக்கிறார். அப்போதெல்லாம் அவள் அவரை ’எல்லாம் உங்களால் தான்’ என்கிற விதத்தில் மிகக் கடுமையாகத் திட்டியும் இருக்கிறாள். ஒருமுறை கூட அவர்

அவளைக் கோபித்துக் கொண்டதில்லை. அவர் மரணத்திற்குப் பிறகு அதைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் அவள் மிகவும் பச்சாதாபப்பட்டிருக்கிறாள். இன்று அவர் தோற்றத்தில் இருக்கும் கொள்ளுப் பேரன் அவனுடைய வழக்கமான எடக்கு முடக்குத் தனத்தை விட்டு விட்டு அதே பரிவுடன் பேசிய போது மறுபடி அவனிடம் அவரையே கண்டாள். லேசாகக் கண் கலங்கினாள்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த மீனாட்சியும் நெகிழ்ந்து போனாள். சற்று முன் வரை மிகவும் காரசாரமாகப் பேசிக் கொண்டிருந்த இருவரும் மிகவும் பாசமாக மாறியது அவளுக்கு பெரிய நம்பிக்கையைக் கொடுத்தது. ”தானாடா விட்டாலும் சதையாடும்னு சொல்வாங்க. அது உண்மை தான். அப்பா கிட்டயும் இவன் இப்படியே மாறிட்டா போதும் கடவுளே” என்று அவள் வேண்டிக் கொண்டாள்.

ஈஸ்வர் தொடர்ந்து சொன்னான். “நான் உங்க மூத்த பிள்ளை சொன்னார்ங்கறதுக்காக அந்த சிவலிங்கத்தைப் பத்தி கேட்கலை. எனக்கு வேற சில ஆராய்ச்சிகளுக்காக அதைப் பத்தி தெரிஞ்சுக்கணும்னு ரொம்ப காலமா ஆர்வம் இருக்கு. எங்கப்பா கிட்ட நான் நிறையவே அது பத்தி விசாரிச்சிருக்கேன். இது பத்தி உங்க கிட்டயும் உங்க ரெண்டாவது பிள்ளை கிட்டயும் நிறைய தகவல் கிடைக்கும்னு நம்பறேன். அதனால தான் கேட்கறேன். சொல்லுங்க ப்ளீஸ்”

ஆனந்தவல்லி திடீரென்று கோபித்துக் கொண்டாள். “என்னடா ஆரம்பத்துல இருந்தே பார்த்துகிட்டிருக்கேன், நீங்க, உங்க மூத்த பிள்ளை, ரெண்டாவது பிள்ளைன்னே சொல்லிகிட்டிருக்கே? நீ பாட்டின்னு கூப்பிட்டு கேட்கலைன்னா நான் வாயே திறக்க மாட்டேன். என்ன ஆனாலும் சரி”

மிக உறுதியாகச் சொல்லி விட்டு நாற்காலியில் அவள் சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள். பரமேஸ்வரன் மேல் இருந்த கோபம் ஈஸ்வருக்கு ஆனந்தவல்லியிடம் இருக்கவில்லை. சொல்லப்போனால் இங்கு வரும் வரை அவளைப் பற்றி அதிகம் அவன் நினைத்தது கூட இல்லை. இங்கே அவளிடம் பேசப் பேச அவளை அவனுக்குப் பிடித்தும் விட்டிருந்தது. ஆனாலும் அவ்வளவு சீக்கிரம் அவளை பாட்டி என்று கூப்பிட வேண்டுமா என்று அவன் எண்ணினான்.

அந்த நேரமாகப் பார்த்து அவனுக்குள்ளே ஏதோ ஒரு உணர்வு அவளிடம் உள்ள தகவல்களில் ஒன்று மிக முக்கியமாக இருக்கும் என்று அவனுக்கு ஆணித்தரமாகச் சொன்னது. அந்த உணர்வு எப்போதும் அவனுக்கு ஏற்படும் உள்ளுணர்வு போல இருக்கவில்லை. அதில் ஏதோ ஒரு பெரிய வித்தியாசத்தை அவன் உணர்ந்தான். ஏதோ வெளிசக்தி, டெலிபதியாக அவனுக்கு சொல்வது போல் இருந்தது. ஆழ்மனம் மற்றும் அதீத சக்திகள் குறித்து ஆராய்ச்சி செய்யும் அவனுக்கு அது தெளிவாகப் புரிந்த போது ஒரேயடியாக வியர்த்தது.....

# அத்தியாயம் - 25

பேரனையே பார்த்துக் கொண்டிருந்த ஆனந்தவல்லி அவனிடம் ஏற்பட்ட திடீர் மாற்றத்தைக் கண்டவுடன் கரிசனத்துடன் கேட்டாள். “என்னடா ஆச்சு?”

ஈஸ்வர் தன்னை உடனடியாக சுதாரித்துக் கொண்டான். “ஒண்ணுமில்லை”. தனக்கேற்பட்ட உணர்வு நிதானமாக ஆராய்ச்சி செய்யப்பட வேண்டிய ஒன்று என்று நினைத்த அவன் அதை ஆனந்தவல்லிக்கு விளக்க முற்படவில்லை. ஒன்றுமே நடக்காதது போல் சகஜ நிலைக்கு மாறிய அவன் “சரி பாட்டி, சிவலிங்கத்தைப்

பத்தி உங்களுக்கு என்ன எல்லாம் தெரியுமோ, அதையெல்லாம் சொல்லுங்க” என்றான்.

ஆனந்தவல்லிக்கு அவன் பாட்டி என்றழைத்ததில் பரம திருப்தி. ஆனால் அதைக் காண்பித்துக் கொள்ளாமல் சொன்னாள். “உண்மையை சொன்னா அந்த சிவலிங்கத்தைப் பத்தி பேசக் கூட எனக்குப் பிடிக்கலை. அந்த போலீஸ் அதிகாரி வந்து கேட்டப்ப கூட நான் வேண்டா வெறுப்பா தான் சொன்னேன். இப்ப நீயும் அதையே கேட்கிறே”

”அந்தப் போலீஸ் அதிகாரி கிட்ட என்ன எல்லாம் சொன்னீங்களோ அதையே என் கிட்டயும் சொல்லுங்க”

ஆனந்தவல்லி ஒருவித சலிப்புடன் எல்லாவற்றையும் சொன்னாள்.

எல்லா தகவல்களையும் ஒருவித பிரமிப்புடன் கேட்டுக் கொண்ட ஈஸ்வர் கேட்டான். “அந்த ரகசியக்குழு பத்தி வேறெதுவும் உங்க வீட்டுக்காரர் உங்க கிட்ட சொல்லலையா?”

”நான் தான் அவரை இது சம்பந்தமா பேசவே விடலையே? விட்டிருந்தா சொல்லி இருப்பாரோ என்னவோ?”

ஈஸ்வர் ஆழமாக யோசித்தான். ஆனந்தவல்லி கேட்டாள். “என்னடா யோசிக்கிறே?”

“அப்படி ஒரு ரகசிய குழு உண்மையிலேயே இருந்திருந்தா அது இப்ப என்ன பண்ணிகிட்டிருக்குன்னு யோசிக்கிறேன். இந்தக்

கொலை நடக்கவும், சிவலிங்கம் திருட்டுப் போகவும் ஏன் அனுமதிச்சுதுன்னு யோசிக்கிறேன்”

ஆனந்தவல்லி யோசிக்காமல் சொன்னாள். “அந்த ரகசிய குழுவே ஒரு கற்பனைன்னு நான் சொல்றேன். உன் பெரிய தாத்தா வெளுத்ததெல்லாம் பாலுன்னு நினைக்கிறவர். கொடுக்கிறப்ப அந்த சித்தர் சொல்லி இருப்பார். இவர் நம்பி இருப்பார்.”

”அந்த சித்தரை நீங்க பார்த்திருக்கீங்களா? அவரை உங்க ரெண்டாவது பிள்ளை சமீபத்தில் பார்த்தேன்னு சொல்றதை நீங்க நம்பறீங்களா?”

ஆனந்தவல்லிக்கு அவன் பரமேஸ்வரனை இரண்டாவது பிள்ளை என்று சொன்னது பிடிக்கவில்லை. மறுபடியும் அவனை முறைத்தாள். அவள் எதற்கு முறைக்கிறாள் என்பதை உடனடியாகப் புரிந்து கொண்ட ஈஸ்வர் இறுகிய முகத்துடன் கேட்டான். “நான் இங்கே இருக்கவா? இல்லை ஏதாவது ஓட்டல்ல போய் தங்கிக்கவா?”

அவளை பாட்டி என்று அழைத்தது போல பரமேஸ்வரனைத் தாத்தா என்று அழைக்க ஈஸ்வர் தயாரில்லை என்பது சந்தேகத்திற்கிடமில்லாமல் புரிய ஆனந்தவல்லி பெருமூச்சு விட்டாள். வெளியே நின்றிருந்த மீனாட்சிக்கும் வருத்தமாய் இருந்தது. ‘அப்பா கொஞ்சமாவது இறங்கி வந்தால் ஒழிய இவன் மாற மாட்டான். அவரோ உயிரே போனாலும் இறங்கி வர மாட்டார். அண்ணா! உன் மகனையும் நம்ம அப்பாவையும் எப்படி தான் சேர்த்து வைக்கிறது நீயே சொல்லு” என்று அண்ணனிடம் மானசீகமாய் கேட்டாள்.

ஆனந்தவல்லி சொன்னாள். "பரமேஸ்வரன் பார்த்தேன்னு சொன்னா பார்த்து தான் இருப்பான். அந்த சித்தர் இன்னும் உயிரோட தான் இருக்கணும். நான் அந்த ஆளை ஒரு தடவை கூட பார்த்தது கிடையாது. பார்க்கக் கிடைச்சா நாக்கை பிடுங்கற மாதிரி கேட்டிருப்பேன். ". அவனை சாக விட்டுட்டு நீ இன்னும் உயிரோட இருக்கியே ஏன்யா இப்ப உனக்கு திருப்தியா"ன்னு."

மீனாட்சி உள்ளே நுழைந்தபடி சொன்னாள். "அப்படி எல்லாம் சித்தர்களை சொல்லக்கூடாது பாட்டி"

ஆனந்தவல்லி பேத்தியிடம் எரிந்து விழுந்தாள். "சித்தராவது புத்தராவது. என் வயித்தெரிச்சலை யார் கொட்டிகிட்டாலும் அப்படி தான் கேட்பேன். நானே இன்னும் இருக்கறப்ப உங்க பெரியப்பாவுக்கு சாகிற வயசாடி"

ஈஸ்வர் புன்னகையுடன் சொன்னான். "நீங்க இருக்கறதுக்கு அந்த சித்தர் என்ன பண்ணுவார் பாட்டி? பாவம்!"

"கடன்காரா, உனக்கும் நான் இருக்கிறது உறுத்துதா" என்று ஆனந்தவல்லி அவன் காதைப் பிடித்துத் திருகினாள். ஏதாவது ஒரு சாக்கிலாவது அவனைத் தொட்டுப் பார்க்க ஆவலாக அவளுக்கு இருந்தது.

நாற்காலியை பின்னுக்கு தள்ளி அவள் கைக்கெட்டாத தூரத்தில் உட்கார்ந்து கொண்ட ஈஸ்வர் சிரித்துக் கொண்டே அருகே நின்றிருந்த மீனாட்சியிடம் ரகசியமாக சொன்னான். "கிழவி நல்லா ஸ்ட்ராங்கா தான் இருக்கு".

*மீனாட்சி பாட்டியைப் பார்த்து புன்னகைக்க ஆனந்தவல்லி கேட்டாள். "என்னடி சொல்றான் அவன்?"*

*"நீங்க ரொம்ப தங்கமானவங்கன்னு சொன்னேன். அதை விடுங்க. நீங்க கடைசியா போய் உங்க மகனைப் பார்த்தீங்களே அவர் என்ன சொன்னார்?"*

*"அப்பவும் முதல்ல அவனை எங்கே நான் பேச விட்டேன். 'பெத்த தாயை பார்க்கணும்னு இப்ப தான் தோணிச்சாடா'ன்னு ஆரம்பிச்சவ. நல்லா திட்டிட்டேன்." சொல்லும் போது அவள் குரல் கரகரத்தது.*

*"நீங்க திட்டினதுக்கு அவர் எதுவும் சொல்லலையா?"*

*ஆனந்தவல்லி பெருமையுடன் சொன்னாள். "என் வீட்டுக்காரரும் சரி, என் குழந்தைகளும் சரி என்னை எதிர்த்துப் பேச மாட்டாங்க...." சொல்லி விட்டு அவனைப் பார்த்து பொய்யான கடுமையுடன் சொன்னாள். "எதுக்கெடுத்தாலும் எதிர்த்துப் பேசற உன்னை மாதிரி கிடையாது...."*

*"பிரச்சினையே அது தான். ஒராளாவது கண்டிச்சிருந்தா கொஞ்சமாவது உங்களை அடக்கி வச்சிருந்திருக்கலாம்" என்று ஈஸ்வர் புன்னகையுடன் சொல்ல ஆனந்தவல்லி செல்லமான கோபத்துடன் கொள்ளுப் பேரனைப் பார்த்தாள்.*

*மீனாட்சி ஆச்சரியத்துடன் அவர்கள் இருவரையும் பார்த்தாள். இது நாள் வரை ஆனந்தவல்லியிடம் யாரும் இப்படி பேசியதும் இல்லை. பேச அவள் அனுமதித்ததும் இல்லை. ஏன் பரமேஸ்வரன்*

*கூட அவளிடம் அப்படி உரிமை எடுத்துக் கொண்டு பேசியதாக அவளுக்கு நினைவில்லை....*

*ஈஸ்வர் சொன்னான். "சரி பாட்டி நம்ம கதையை அப்பறம் வச்சுக்குவோம். உங்க மகன் பேசறப்ப என்ன சொன்னார்?"*

*ஆனந்தவல்லியின் முகம் மிகவும் மென்மையாகியது. "உடம்பை நல்லா பார்த்துக்க சொன்னான். என்னென்ன சாப்பிடணும்... எப்ப எப்ப சாப்பிடணும்னு பொறுமையா சொன்னான்..."*

*"சிவலிங்கத்தைப் பத்தி எதாவது சொன்னாரா?"*

*"சொல்லி இருந்தா, இப்ப உன் காதைப் பிடிச்ச மாதிரி அவன் காதையும் பிடிச்சிருப்பேன்"*

*ஈஸ்வர் தன் காதைத் தடவிக் கொண்டே கேட்டான். "நீங்க எப்பவாவது அந்த சிவலிங்கம் ஜொலிக்கறதைப் பார்த்திருக்கீங்களா?"*

*ஆனந்தவல்லி சொன்னாள். "ஜொலிக்கறதுக்கு அந்த சிவலிங்கம் தங்கமா, வைரமா? உங்கப்பன் தான் சின்னதுல எதையோ பார்த்துட்டு வந்து அது ஜொலிக்கிறதா சொன்னான். வேற யாரும் சொன்னதில்லை. கிறுக்குப் பய"*

*கிறுக்குப் பயல் என்று தந்தையைச் சொன்னதற்கு ஈஸ்வர் ஆனந்தவல்லியை முறைத்தான்.*

*“என்னடா முறைக்கிறே. உனக்கு அப்பனாகிறதுக்கு முன்னாடியே அவன் எனக்குப் பேரன். ரொம்பத் தான் முறைக்கிறான்”*

*பெருமூச்சு விட்ட ஈஸ்வர் கேட்டான். “சரி அந்த சிவலிங்கத்துல ஏதாவது வித்தியாசமா பார்த்திருக்கீங்களா?”*

*“ஒரு வித்தியாசத்தையும் பார்த்ததில்லை...”*

*“நீங்க சரியா பார்க்கலை போல இருக்கு”*

*”ஏழெட்டு தடவை தான் அதைப் பார்த்திருக்கேன்னாலும் சரியா தான் பார்த்திருக்கேன். என் வீட்டுக்காரர் வேற அதை போட்டோ எடுத்து ப்ரேம் போட்டு வச்சிருந்தார்....”*

*“அந்த போட்டோ என்ன ஆச்சு?”*

*“பரண்ல இருக்கு. அவர் வெச்சிருந்த ஒரு டிரங்குப் பெட்டில இருக்கு.”*

*“அவர் சிவலிங்கம் சம்பந்தமா வேற எதாவது வச்சிருந்தாரா?”*

*“இல்லையே”*

*“நீங்க எதையும் வீசிடலையே?”*

“அவர் பத்திரமா வச்சிருந்த அதை வீச எனக்கு மனசு வரலை. அதனால அவரோட மத்த சில பொருள்களோட அப்படியே வச்சிருக்கேன்....”

ஈஸ்வருக்கு அந்தப் புகைப்படத்திலோ அவர் வைத்திருந்த மற்ற பொருள்களிலோ ஏதாவது முக்கிய தகவல் இருக்கலாம் என்று தோன்றியது. அவன் திடீர் என்று எழுந்து நின்றான். “பாட்டி எனக்கு அவர் வச்சிருந்ததை எல்லாம் பார்க்கணும்...”

“இப்பவேவா?”

“ஆமா”

“பரண்ல தூசி நிறைய இருக்கும்டா. நாளைக்கு வேலைக்காரங்களை விட்டு சுத்தம் செய்யச் சொல்றேன். அப்புறம் பாருடா”

“பரவாயில்லை. இப்பவே பார்க்கறேன்”

“சரி வா” என்று ஆனந்தவல்லி எழுந்தாள். அவனைத் தன் அறைக்கு அழைத்துக் கொண்டு போவதில் அவளுக்கு சந்தோஷம் இருந்தது. அவள் முன்னே செல்ல ஈஸ்வர் பின் தொடர்ந்தான். அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டிருந்த மீனாட்சி அவர்களைப் பின் தொடராமல் தனதறைக்குப் போனாள். அப்போது தான் வீட்டுக்குள் வந்திருந்த மகேஷ் வழியில் அவளை இடைமறித்துக் கேட்டான்.

”என்னம்மா உங்க பாட்டி அதிசயமா அவனை ரூமுக்குக் கூட்டிகிட்டு போறாங்க?”

*"எங்க தாத்தா வச்சிருந்த பொருள்களை எல்லாம் அவனுக்குப் பார்க்கணுமாம்"*

*"எதுக்காக?"*

*"அதுல அந்த சிவலிங்கம் சம்பந்தமான தகவல் எதாவது இருக்கான்னு அவனுக்குப் பார்க்கணுமாம்..."*

*"அப்படி என்ன இருந்தது அவர் கிட்டே?"*

*"அந்த சிவலிங்கத்தோட போட்டோ ஒண்ணு அவர் கிட்ட இருந்ததுன்னு பாட்டி சொன்னாங்க. அவன் வேறெதாவதும் இருக்கான்னு பார்க்கப் போறான். ஏன் கேட்கறே"*

*"சும்மா தான்" மகேஷ் சுரத்தில்லாமல் சொன்னான்.*

*ஆனந்தவல்லியின் அறை மிகப் பெரிதாக இருந்தது. அவள் அறையில் அவள் கணவர் படம் மிகப் பெரியதாக மாட்டப் பட்டிருந்தது. அவள் பிள்ளைகள் சிறுவர்களாக இருந்த போது எடுக்கப்பட்ட படமும், திருமணமான புதிதில் அவளும் அவள் கணவரும் எடுத்துக் கொண்ட புகைப்படமும் இருந்தன. அந்தப் படத்தில் அவர் அச்சாக அவனைப் போலவே இருந்தது ஈஸ்வருக்கு வியப்பாக இருந்தது.*

*"உட்கார்டா" என்றாள் ஆனந்தவல்லி.*

“இல்லை சாவகாசமாய் பிறகு உட்கார்றேன். முதல்ல பரண்ல பார்த்துடறேன்”

“சரி போ. மேலே நீலக்கலர்ல இருக்கிற பெரிய டிரங்குப் பெட்டி தான் அவருது” என்று சொல்லி அவள் அறையின் ஓரத்தில் இருந்த தேக்கு மரப்படிகளைக் காண்பித்தாள். அவன் படியேறிச் செல்கையில் தன் கணவரின் புகைப்படத்தையும் அவனையும் மாறி மாறி அவள் பெருமையுடன் பார்த்தாள். மேலே சென்றவுடனேயே அவன் தும்மல் சத்தம் கேட்டது. “தூசி இருக்குன்னு சொன்னா கேட்டால் தானே. என்னை மாதிரியே பிடிவாதம் அவனுக்கு” என்று செல்லமாக அவனை மனதிற்குள் கடிந்து கொண்டாள்.

பரணில் தூசி படிந்த பழங்காலப் பொருள்கள் நிறைய இருந்தன. ஆனந்தவல்லி சொன்ன நீல நிற பெரிய டிரங்குப் பெட்டி ஒரு மூலையில் இருந்தது. ஈஸ்வர் இரண்டு முறை தும்மி விட்டு அந்த டிரங்குப் பெட்டியைத் திறக்க முயற்சித்தான். ஆரம்பத்தில் திறக்க வரவில்லை. கஷ்டப்பட்டு தான் திறக்க முடிந்தது.

உள்ளே ஒரு பட்டு அங்கவஸ்திரம், பட்டு வேட்டி, பட்டு சட்டை, ஃப்ரேம் போடாமல் அட்டையில் ஒட்டிய ஒரு மிகப்பழைய கறுப்பு வெள்ளைப் புகைப்படம், ஒரு வலம்புரி சங்கு, ஒரு குடை, ஒரு வெள்ளி வெற்றிலை பாக்கு டப்பா இவற்றோடு ஆனந்தவல்லி சொன்ன ஃப்ரேம் போட்ட சிவலிங்கம் புகைப்படம் இருந்தது. இரண்டு புகைப்படங்களைத் தவிர மற்றவை எல்லாம் கணவர் சாந்தலிங்கம் தினசரி உபயோகித்த பொருள்களை ஆனந்தவல்லி எடுத்து தேர்ந்தெடுத்து பத்திரப்படுத்தி வைத்தது போல இருந்தது. ஃப்ரேம் போடாத கறுப்பு வெள்ளைப் புகைப்படத்தை எடுத்து ஈஸ்வர் ஆராய்ந்தான். புகைப்படம் பழுதாகி இருந்தாலும் யாரோ ஒரு வயதானவர் கறுப்புக் கோட்டு போட்டுக்

கொண்டிருந்தது போலத் தெரிந்தது. ஆனந்தவல்லி அல்லது சாந்தலிங்கத்தின் தகப்பனாராக இருக்கலாம் என்று தோன்றியது.

சிவலிங்கத்தின் புகைப்படத்தை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு அவன் ஆவலோடு பார்த்தான். எத்தனையோ ரகசியங்களைத் தன்னில் உள்ளடக்கி வைத்திருக்கிற அந்த சிவலிங்கத்தை நிறைய நேரம் பார்த்தான். எதிர்பார்க்காத நேரங்களில் எல்லாம் அந்தரத்தில் தெரிந்து அவனைத் திகைக்க வைத்த சிவலிங்கம் இப்போது எதிர்பார்ப்போடு பார்த்த போது அமைதியாக இருந்தது. அந்தப் புகைப்படத்தில் சிவலிங்கத்தின் தனித்தன்மை எதுவும் அவன் கண்களுக்குத் தெரியவில்லை...

சாந்தலிங்கம் இதைப் புகைப்படமாக எடுத்து வைக்க ஏதாவது பிரத்தியேகக் காரணம் இருக்குமா என்று ஈஸ்வர் யோசித்தான். அவர் அதை சக்தி வாய்ந்த சிவலிங்கம் என்று நம்பியதால் அதைப் படம் எடுத்து வீட்டில் வைத்து இருக்கலாம்... அப்படியும் இல்லை என்றால்...?

சிவலிங்க புகைப்படக் கண்ணாடியில் தூசி இருந்தது. ஈஸ்வர் அந்த தூசியைத் துடைத்தான். கண்ணாடி அசைந்தது. கண்ணாடி சரியாகப் பதிக்கப்படவில்லை போல இருக்கிறது என்று எண்ணியவனாய் மேலும் அதை அசைக்க ஒரு புறத்தில் கண்ணாடி ஃப்ரேமை விட்டு வெளியே வந்தது. கண்ணாடியைப் பத்திரமாக ஈஸ்வர் கழற்றி வைத்தான். கண்ணாடி வந்த கையோடு சிவலிங்கம் புகைப்படமும் வெளியே வந்தது. சிவலிங்கத்தின் புகைப்படத்தின் பின்புறம் இருந்து ஒரு காகித உறையும் அவன் மேல் விழ அவன் திகைப்புடன் அந்த காகித உறையை எடுத்துப் பார்த்தான். உறையின் மீது எதுவும் எழுதப்பட்டிருக்கவில்லை. அந்த உறையினுள்ளே ஏதோ ஒரு தாள் இருந்தது தெரிந்தது. உறை ஒட்டப்பட்டிருக்கவில்லை.

இதயம் வேகமாக துடிக்க ஆரம்பிக்க அந்த உறையைப் பிரித்து உள்ளே இருந்த தாளை ஈஸ்வர் வெளியே எடுத்தான்....

# அத்தியாயம் - 26

அந்த மனிதன் இரவு ஒன்பது ஆகும் வரை காத்திருக்க சிரமப்பட்டான். அவரைப் பார்த்துச் சொல்ல முக்கிய விஷயங்கள் அவனுக்கு இருந்தன.... குருஜியைப் பார்த்துப் பேச வரும் கூட்டம் ஒன்பது மணி வரைக்கும் கண்டிப்பாக இருக்கும். ஒரு நாளில் ஓரிரு ஆட்கள் முதல் ஐந்தாறு ஆட்கள் வரை மட்டும் தான் அவர் சந்திப்பார் என்றாலும் பதினைந்திலிருந்து நாற்பது ஆட்கள் வரை அவரை சந்திக்க எல்லா நாட்களும் காத்திருப்பது உண்டு. பல முறை வந்து சந்திக்க முடியாமல் போனது உண்டு என்றாலும் பலரும் நம்பிக்கை இழக்காமல் திரும்பத் திரும்ப வந்து காத்திருப்பது சகஜம்.

ஆனால் சந்திக்கின்ற மனிதர்களை குருஜி என்றுமே அலட்சியப் படுத்தியவர் அல்ல. ஒவ்வொருவரிடமும் எந்த வித்தியாசமும் பார்க்காமல் ஆத்ம நண்பர்கள் போல் அவர் பழகுவார். பொறுமையாக அவர்கள் சொல்வதைக் கேட்பார். அவர்களுக்குத் தகுந்த பதில் சொல்வார். அதனால்அவரை சந்தித்துப் பேசி விட்டு வெளியே வருபவர்கள் முகத்தில் பரம திருப்தியை அவன் கண்டிருக்கிறான். ஏதோ ஜென்ம சாபல்யம் அடைந்தது போல அவர்கள் சந்தோஷமாக வெளியே வருவார்கள். மறுபடி அவர்களை அவர் சந்திக்காமலே கூட இருந்து விடக் கூடும். ஆனால் அந்த ஒரு சந்திப்பே அவர்கள் மனதில் நீங்காத இடம் பெற்று விடும். அவர் எப்படி இதை சாதிக்கிறார் என்று அவனுக்கு எப்போதும் பிரமிப்பு உண்டு....

*அவன் ஒன்பது மணிக்கு மேல் போன போது குருஜி கேட்டார். "என்ன விஷயம்"*

*"ஜான்சன் போன் செஞ்சார். அடுத்த வாரம் அமெரிக்கால இருந்து இந்தியா வர்றாராம். அதுக்கு முன்னாடி உங்க கிட்ட முக்கியமான விஷயங்கள் பத்தி பேசணுமாம்...."*

*தலையசைத்த குருஜி கேட்டார். "அந்த ஜோதிடர் தம்பி போன் வந்ததா?"*

*"இல்லை குருஜி"*

*"நீயே போன் செய். அந்த ஜோதிடர் எங்கே போனார்னு தெரிஞ்சுதான்னு கேள்"*

*"தெரிஞ்சிருந்தா அந்த ஆள் கண்டிப்பா போன் செய்திருப்பான்." என்று சொன்னாலும் அவர் சொன்னதற்காக அவன் சரவணனுக்குப் போன் செய்து விட்டு ஸ்பீக்கரை ஆன் செய்தான்.*

*சரவணன் ஏமாற்றத்தோடு சொன்னான். "சார் அண்ணன் இன்னைக்கு சாயங்காலம் தான் வந்தார். ஆனா எத்தனை கேட்டும் எங்கே போனார்னு சரியா சொல்லலை. திடீர்னு கோயில் கோயிலா போகணும்னு தோணிச்சு அப்படியே போயிட்டேன்னு சொல்றார். நான் எந்த எந்தக் கோயிலுக்குன்னு கேட்டேன்... சிவன் கோயில் பெருமாள் கோயில்னு சொல்றாரே ஒழிய ஊரைச் சொல்ல மாட்டேன்கிறார். பொதுவா அவர் அப்படி எல்லாம் மறைக்கக் கூடிய ஆளில்லை. இந்த தடவை தான் இப்படி புதிரா நடந்துக்கறார்...."*

“வந்தவர் கிட்ட புதிதாய் ஏதாவது மாற்றம் தெரிஞ்சுச்சா...”

“ரொம்பவே யோசிக்கிற மாதிரி இருந்துச்சு”

“ஏதாவது கொண்டு வந்தாரா?”

“நிறைய விபூதி குங்குமம் கொண்டு வந்தார் சார்”

“ஏதாவது வித்தியாசமா பேசினாரா, சொன்னாரா?”

“விபூதி கொடுக்கிறப்ப ‘கடவுள் கிட்ட நல்ல புத்தி கொடுக்கணும்னு வேண்டிக்க’ன்னு மட்டும் சொன்னார் சார்”

“சரி ஏதாவது தகவல் கிடைச்சா உடனடியா தெரிவியுங்க சரவணன்” என்று பேச்சை முடித்துக் கொண்ட அந்த மனிதன் சிரித்தபடி குருஜியிடம் கேட்டான். “நீங்க என்ன நினைக்கிறீங்க குருஜி”

குருஜியும் புன்னகைத்தார். பின் சொன்னார். “அந்த ஜோதிடர் போனது இந்த சிவலிங்கம் தொடர்பாய் தான்கிறதுல எனக்கு சந்தேகமில்லை. இல்லாட்டி மறைக்க வேண்டிய அவசியமேயில்லை”

”அவர் கிட்ட இருந்து தகவலைக் கறக்க வேறெதாவது வழி பார்த்தால் என்ன?”

*“பல பேர் கவனத்தைத் திருப்பாமல் அதை செய்ய முடியாது. அதனால கொஞ்சம் பொறுத்துப் பார்க்கலாம். சரி... ஜான்சனுக்குப் போன் செய்”*

*அந்த மனிதன் ஜான்சனுக்குப் போன் செய்தான். ஜான்சனிடம் குருஜி மிக அழகான ஆங்கிலத்தில் பேசினார். “ஏதோ முக்கியமாய் பேசணும்னு சொன்னாயாம். சொல்லு ஜான்சன்”*

*“குருஜி நீங்க போய் சிவலிங்கத்தைப் பார்த்தீங்களா?”*

*குருஜி புன்னகைத்தார். ஜான்சனிடம் சுற்றி வளைத்துப் பேசும் பழக்கம் என்றுமே இருந்ததில்லை. அதை ஜான்சன் கால விரயமாய் கருதுவார். உலகப் புகழ் பெற்ற மனோதத்துவ ஆராய்ச்சியாளரான அவர் நிறைய புத்தகங்கள் எழுதிக் குவித்திருக்கிறார். அத்தனை சாதிக்க அவருக்கு நேரம் இருந்ததற்குக் காரணம் அனாவசியமான விஷயங்களில் அவர் நேரம் செலவழித்ததில்லை என்பது தான் என்று குருஜி பல முறை நினைத்திருக்கிறார்.*

*குருஜி சொன்னார். “இன்னும் இல்லை ஜான்சன்”*

*”ஏன் குருஜி?”*

*“இன்னும் சில தகவல்கள் தெரிய வேண்டி இருக்கிறது. அதைத் தெரிந்து கொண்டே போகலாம் என்றிருக்கிறேன் ஜான்சன்”*

*“உங்களுக்கு பயம் எதுவும் இல்லையே குருஜி”*

*குருஜி வாய் விட்டுச் சிரித்தார். “என் வாழ்க்கையில் இது வரைக்கும் ஜாக்கிரதையாய் இருந்திருக்கிறேனே ஒழிய நான் எதற்கும் பயப்பட்டதில்லை ஜான்சன்”*

*“குருஜி நான் எல்லாருடைய அபிப்பிராயங்களையும் விட உங்கள் அபிப்பிராயத்தை உயர்வாய் நினைக்கிறேன். நீங்கள் போய் உங்கள் கருத்தைச் சொன்னால் நான் அங்கே வந்த பிறகு என்ன செய்வதுன்னு தீர்மானிக்கிறது சுலபமாயிருக்கும்...”*

*“புரியுது ஜான்சன். ரெண்டே நாள்ல போகிறேன்...”*

*“நன்றி குருஜி... நான் கேள்விப்பட்ட இன்னொரு தகவல் எனக்கு அதிர்ச்சியாய் இருந்தது குருஜி”*

*”என்ன தகவல்?”*

*“ஈஸ்வர் அந்த பசுபதியோட தம்பி பேரன்ங்கிறதும், அவன் இப்ப இந்தியா வந்திருக்கிறான்கிறதும் தான்”*

*”அதனால என்ன?”*

*“குருஜி உங்களுக்கு ஈஸ்வரைப் பற்றி தெரியுமா?”*

*”இல்லை” என்றார் குருஜி. ஈஸ்வரைப் பற்றி அவர் இண்டர்நெட்டில் அனைத்து தகவல்களும் தேடிப் படித்திருக்கிறார் என்பதை ஜான்சனிடம் தெரிவிக்க அவர் முற்படவில்லை. கூடுதலாக ஒருவனைப் பற்றித் தெரிந்து கொள்வதில் தப்பில்லை. “உனக்கு அவனைத் தெரியுமா ஜான்சன்?”*

*”தெரியும் குருஜி. அதனால தான் கவலைப்படறேன்”*

*”அவனைப்பத்தி சொல்லு ஜான்சன்”*

*”அவன் துறையில அவன் எமகாதகன் குருஜி. தனிப்பட்ட வாழ்க்கையில் நாணயமானவன்...ஒரு விஷயத்துல இறங்கிட்டா அதோட ஆழம் வரை போய் எல்லாத்தையும் தெரிஞ்சுக்காமல் விட மாட்டான்... நல்ல புத்திசாலி... பார்க்க அழகாய் இருப்பான்.... எல்லாத்துக்கும் மேல மகா அழுத்தமான ஆசாமி.. யாருமே அவனை சுலபமா மயக்கிடவோ, பாதை மாற்றி விடவோ முடியாது...”*

*கடைசியாக சொன்ன அபிப்பிராயம் ஏதாவது நிகழ்ச்சியை வைத்து தான் ஜான்சனால் அறியப்பட்டது என்று தோன்றவே குருஜி கேட்டார். “அப்படி சொல்லக் காரணம்?”*

*”போன வருஷம் வியன்னால ஃப்ராய்டு நினைவு கருத்தரங்கம் ஒன்று மூன்று நாள் நடந்தது. அங்கே நானும் என் செகரட்டரி லிசாவும் போய் இருந்தோம். ஈஸ்வரும் வந்திருந்தான். லிசாவுக்கு தன் அழகு மேல நிறையவே கர்வம். தன் அழகுக்கு மயங்காதவங்க உலகத்துல யாருமே கிடையாதுங்கற நினைப்பு.....”*

*ஜான்சன் சென்ற முறை இந்தியா வந்த போது அவளை அழைத்து வந்திருந்ததால் குருஜி அவளை நன்றாக அறிவார். அவள் பேரழகி என்பதில் சந்தேகமில்லை. அவள் அழகை வெளிப்படுத்துவதில் அவளுக்கு கூச்சமும் இருந்ததில்லை...*

*”அவள் வியன்னால தான் ஈஸ்வரை முதல் முதலாய் பார்க்கிறாள். அவளுக்கு அவன் மேல ஒரு ஈர்ப்பு வந்துடுச்சு.*

முடிஞ்ச வரைக்கும் அவனை மயக்க முயற்சி செய்தாள். அவன் அசைஞ்சே கொடுக்கலை.... அவள் எரிச்சலாய் போய் அவன் கிட்ட கேட்டே விட்டாள். “நீ என்ன ஹோமோசெக்சுவலா”ன்னு. அவன் பதில் சொல்லாம சிரிச்சுகிட்டே போயிட்டான். மூணு நாளும் பகல்ல கருத்தரங்கத்துல பேசின அத்தனை பேர் பேச்சையும் கவனமா கேட்டு குறிப்பு எடுத்துகிட்டவன் ராத்திரி எல்லாம் அங்கே இருக்கிற நூலகத்துல இருந்த அபூர்வமான ஃப்ராய்டு, ஆட்லர் ரெண்டு பேரோட கையெழுத்துல இருந்த சில கட்டுரைகளை படிச்சுகிட்டு இருந்தான்னு கடைசில தான் கேள்விப்பட்டேன். அந்த கருத்தரங்கை ஒட்டி மூன்று நாளும் தினமும் 24 மணி நேரமும் அந்த நூலகத்தைத் திறந்து வச்சிருந்தாங்க. அதை முழுசா உபயோகப்படுத்திகிட்டது அவன் ஒருத்தன் தான்...”

குருஜி கேட்டார். “சரி, நீ கவலைப்பட காரணம் என்ன அதைச் சொல்லு ஜான்சன்”

”இப்ப நான் ஆராய்ச்சி செய்துகிட்டிருக்கிற விஷயத்துல தான் அவனும் நிறைய ஆராய்ச்சி செய்யறான். அந்த சிவலிங்கத்துல அவனுக்கும் ஆர்வம் இருந்துச்சுன்னா அவன் சும்மா இருக்க மாட்டான். அவனை எதுவும் தடுக்க முடியாது..”

“ஆனா சிவலிங்கம் நம்ம கிட்ட தானே இருக்கு ஜான்சன்... அவன் என்ன செய்ய முடியும்?”

ஜான்சன் ஒருவித தயக்கத்துடன் சொன்னார். “எனக்கு என்னவோ அந்த பசுபதி ஈஸ்வர் கிட்ட சிவலிங்கம் பற்றி சொல்லச் சொன்னதும் அவனும் அதை வச்சு அங்கே வந்திருக்கறதும் ஒரு மாதிரியாவே இருக்கு குருஜி. இதெல்லாம் தற்செயலா நடக்கற விஷயங்களா எனக்கு படலை”

*இதைக் கேள்விப்பட்ட போது முதலில் இதே மனநிலையில் தான் குருஜி இருந்தார் என்ற போதும் அதில் இருந்து தற்போது மீண்டிருந்த அவர் ஜான்சனுக்கு தைரியம் சொன்னார். "கவலைப்பட எதுவுமே இல்லை ஜான்சன்... சிவலிங்கம் இப்பவும் நம்ம கைல தான் இருக்குங்கறதை மறக்க வேண்டாம். நமக்குத் தெரிஞ்ச அளவு அவனுக்கு சிவலிங்கம் பத்தி தெரியவும் தெரியாது. அவன் விரும்பினால் கூட நம்மகிட்ட சிவலிங்கம் இருக்கிறதை கண்டுபிடிக்கவோ நெருங்கவோ முடியாது."*

*ஜான்சன் குருஜி மீது ஆழமான நம்பிக்கை வைத்திருந்ததால் அவர் சொன்னதில் தைரியம் அடைந்தார். "அந்தப் பையன் கணபதி கிட்ட எதுவும் பிரச்சினை இல்லையே..."*

*குருஜி சிரித்துக் கொண்டே சொன்னார். "கணபதி சிவலிங்கத்து கிட்ட தொடர்ச்சியாய் பேசிகிட்டே இருக்கிறதாக கேள்விப்பட்டேன். அந்த சிவலிங்கத்தோட சக்தி கூட கணபதி வாயை அடைக்க முடியலை"*

*"ஒருத்தன் செத்துப் போயிட்டான். இன்னொருத்தன் ஓடிப் போயிட்டான். ஆனால் கணபதி சிவலிங்கத்தால எந்தப் பாதிப்பும் இல்லாமல் இருக்கிறான்ங்கறதே பெரிய விஷயம் இல்லையா குருஜி"*

*"ம்ம்ம்"*

*"குருஜி அந்தக் கணபதியை பூஜை செய்யறதுக்கு மட்டுமில்லாமல் நம்ம ஆராய்ச்சிக்கும் உபயோகப்படுத்திகிட்டா என்ன?"*

*”அவனுக்குத் தெரியாமல் அவனை நாம் எப்படி வேணும்னாலும் உபயோகப்படுத்திக்கலாம். ஆனால் அவனுக்குத் தெரிஞ்ச பிறகு உபயோகப் படுத்திக்க முடியாது ஜான்சன். அது ஆபத்து...”*

*“சரி அப்படின்னா நம்ம ஆராய்ச்சி சமயங்கள்ல அவனை என்ன செய்யறது குருஜி..”*

*“அது ஒரு பெரிய விஷயம் இல்லை ஜான்சன். அதை நான் பார்த்துக்கறேன்..”*

*”சரி குருஜி. நீங்க எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் போய் சிவலிங்கத்தைப் பாருங்க. போயிட்டு வந்து உங்க கருத்தைச் சொல்லுங்க. நான் காத்துகிட்டு இருப்பேன்....”*

*குருஜி போனை வைத்து விட்டு அந்த மனிதனிடம் சொன்னார். “அந்த ஈஸ்வர் ஜான்சனுக்கு ஒரு பிரச்சினையா தான் தெரியறான். அவன் இங்கே எத்தனை நாள் லீவுல வந்திருக்கான்னு தெரியுமா?”*

*“ஒரு மாச லீவுன்னு கேள்விப்பட்டேன்”*

*“நீ அவனைப் பத்தி என்ன நினைக்கிறே?”*

*”எதுவும் தன்னால முடியும்னு நினைக்கிறவன் அவன். அது மத்தவங்க விஷயத்துல எப்படியோ இவன் விஷயத்துல நிஜம்னு தான் தோணறது... இப்ப அவனை விட அதிகமா கவலைப்பட வேண்டிய விஷயம் வேற ஒண்ணு இருக்கு குருஜி. நீங்க ஜான்சன் கிட்ட பேசி முடியற வரைக்கும் சொல்ல வேண்டாம்னு இருந்தேன்”*

***குருஜி கேள்விக்குறியோடு அவனைப் பார்த்தார். “என்ன அது”***

***அந்த மனிதன் ஒன்றுமே சொல்லாமல் ஒரு சிடியை எடுத்து குருஜி அறையில் இருந்த கம்ப்யூட்டரில் போட்டான். அது சிவலிங்கத்தைக் கண்காணிக்க அவர்கள் வைத்திருந்த ரகசிய கேமராவில் இருந்து எடுக்கப்பட்ட பதிவின் சிடி. அவன் ஆரம்பத்துக் காட்சிகளை விரைவுபடுத்தி விட்டு கடைசி காட்சி வந்ததும் நிறுத்தி அந்தக் காட்சியை தொடர விட்டான்.***

***“மன்னிச்சுக்கோ கொஞ்சம் நேரமாயிடுச்சு” என்று கணபதி சிவலிங்கத்திடம் சொல்லிக் கொண்டு இருந்தான். அவன் வெளியே போய் விட்டு வந்தது போல் தோன்றியது. அவன் கையில் ஒரு பூக்கூடை இருந்தது.***

***கணபதி பூக்கூடையை சிவலிங்கத்தின் முன் வைத்து விட்டு ”இதோ வந்துடறேன். கோவிச்சுக்காதே” என்று சொல்லி விட்டுப் போனான்.***

***அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த குருஜியிடம் அந்த மனிதன் சொன்னான். ”அந்தப் பூக்கூடையைப் பாருங்க”***

***பார்த்த குருஜி கண்கள் திகைப்பில் விரிந்தன. இமயமலைச்சாரல்களில் மட்டுமே அதிலும் திபெத் பகுதியில் தான் காணப்படுவதாகச் சொன்ன அபூர்வக் காட்டுப்பூக்கள் கணபதி வைத்து விட்டுப் போன பூக்கூடையில் நிறைந்து இருந்தன.***

# <u>அத்தியாயம் - 27</u>

***குருஜி மீண்டும் பேச முடிந்த போது அவர் குரல் மிகவும் தாழ்ந்திருந்தது. "அந்த சிடியை ஆரம்பத்தில் இருந்து போடு" என்றார். கணபதி-சிவலிங்கம் சம்பந்தப்பட்ட எந்தத் தகவலையும் தவற விடக்கூடாது என்பதில் அவர் மிகவும் கவனமாக இருந்தார்.***

***அந்த மனிதன் அவர் சொன்னபடியே செய்தான். குருஜி திரையில் ஓடிய காட்சிகளைக் கூர்ந்து பார்க்க ஆரம்பித்தார்....***

***கணபதி இந்த சில நாட்களில் அந்த சிவலிங்கத்திற்கு ஒரு நண்பனாகி விட்டிருந்தான். அதைப் பார்த்த முதல் கணத்தில் ஒரு இனம் புரியாத சிலிர்ப்பையும், பின் ஒரு ஈர்ப்பையும் சிவலிங்கத்திடம் உணர்ந்திருந்த அவன் பின் அதை நேசிக்க ஆரம்பித்திருந்தான். மிகவும் சக்தி வாய்ந்த சிவலிங்கம் என்று குருஜி சொல்லி இருந்ததால் ஏற்பட்டிருந்த ஒரு பயம் கலந்த பக்தி இங்கு வந்த பின் பயம் போய் அன்பு கலந்த பக்தியாக மாறி விட்டிருந்தது. அதனை நெருங்கும் போதெல்லாம், அதன் அருகில் இருக்கும் போதெல்லாம் ஒரு பேரமைதியையும், பேரன்பையும் அவன் உணர ஆரம்பித்தான்.***

***அந்த வேதபாடசாலையில் அவனிடம் அதிகம் யாரும் பேசவில்லை. சிவலிங்கம் வைக்கப்பட்டிருந்த கட்டிடம் ஒரு 18 ஏக்கரில் ஒரு ஒதுக்குப் புறத்தில் இருந்தது மட்டுமல்ல வேதபாடசாலையில் படிக்கும் மாணவர்களும் சொல்லித் தரும் ஆசிரியர்களும் அந்தப்பகுதிக்கு வரத் தடை செய்யப் பட்டிருந்தது. அந்தப் பகுதிக்கு ஏழெட்டு பேர் மட்டுமே வர அனுமதி இருந்தது. அவர்களும் கணபதியிடம் அதிகம் பேசவில்லை. வேளா வேளைக்கு அவனுக்கு நல்ல சுவையான உணவு கொண்டு வந்து தந்தனர். அவனுக்கு பூஜை சாமான்கள் ஏதாவது வேண்டி இருந்தால் வாங்கிக் கொண்டு வந்து தந்தனர். வேறெது தேவைப்பட்டாலும் கேட்கச் சொன்னார்கள். அவனுக்கு எதுவும் தேவைப்படவில்லை.***

அந்த வேதபாடசாலையில் சுற்றிலும் நிறைய பூச்செடிகளும், துளசிச் செடிகளும், வில்வமரங்களும் இருந்தன. தினமும் அதிகாலையிலும் மாலையிலும் சென்று பூஜைக்காகத் தானே சென்று பூக்கள், துளசி, வில்வ இலைகள் எல்லாம் கணபதி பறித்துக் கொண்டு வருவான். அப்போது பல மாணவர்களும், ஆசிரியர்களும் எதிர்ப்படுவார்கள். அடிக்கடி பார்த்துப் பரிச்சயமானதால் அவர்கள் அவனைப் பார்த்து புன்னகைப்பதுண்டு. அதோடு சரி. அவர்களாக அவனிடம் பேச முற்படவில்லை. அவர்கள் எல்லாம் மெத்தப் படித்தவர்கள், அறிவாளிகள் என்றும் தனக்கு அதிகம் எதுவும் தெரியாது என்றும் அவனுக்கு அபிப்பிராயம் இருந்ததாலும் யாரிடமும் அதிகம் பேச வேண்டாம் என்று குருஜி முன்பே சொல்லி இருந்ததாலும் அவனுக்கும் அவர்களிடம் பேசத் தயக்கமாக இருந்தது. எனவே அவன் தனியனாகவே அங்கும் இருந்தான்.

சில சமயங்களில் பகலில் மரங்களின் நிழலில் அமர்ந்து கொண்டு வகுப்பறைகளில் படிக்கும் மாணவர்களின் வேத கோஷத்தைக் கேட்கும் போது அவனுக்குப் புல்லரிக்கும். அர்த்தங்கள் புரியா விட்டாலும் அந்த இசையோடு கூடிய ஸ்பஷ்டமான உச்சரிப்புகள் அவனை ஏதோ ஒரு உலகத்திற்கு அழைத்துச் செல்வது போல் இருக்கும். மனம் மிக லேசாக அமைதியாக அமர்ந்திருந்து விட்டு வருவான். சிவலிங்கத்தை வணங்கி விட்டு அதன் முன் அதே அமைதியுடன் சிறிது நேரம் உட்கார்வான்.

அமைதி நெடு நேரம் நீடிக்காது. அவனுக்குப் பேச வேண்டும் என்று தோன்றி விடும். அவன் பூஜை செய்து கொண்டிருந்த பிள்ளையாரிடமும் கூட அவன் பூஜை செய்ததை விடப் பேசிய நேரம் அதிகம். இங்கும் அவனால் பேசாமல் இருக்க முடியவில்லை. வெளியாட்கள் யாருமே அவனுக்குப் பேசக் கிடைக்காததால் அவன்

போய்ச் சேர்ந்த இரண்டாவது நாளே பேச ஆரம்பித்து விட்டான். மனம் விட்டு அவன் பேசிய போது பிள்ளையாரைப் போலவே இந்த சிவலிங்கமும் கவனமாகக் கேட்பது போல உணர்ந்தான். ஒவ்வொரு நேரத்தில் ஒவ்வொன்றைப் பேசினான்....

*“பிள்ளையாரோட அப்பனே நான் வாங்கற ஐநூறு ரூபாய்க்கு பொருத்தமா பூஜை செய்யறேனான்னு தெரியலை.. ஏதாவது குறையிருந்தால் மன்னிச்சிக்கோ. இங்கே படிக்கற பசங்க எல்லாம் எவ்வளவு அழகாய் வேதம் படிக்கிறாங்க. கேட்கறதுக்கே இனிமையாய் இருக்கு... அவங்கள்ள ஒருத்தர் வந்து உனக்குப் பூஜை செஞ்சா கூட என்னை விட நல்லாவே செய்வாங்கங்கறதுல எனக்கு சந்தேகமே இல்லை... ஏதோ குருஜி என் மேல இரக்கப்பட்டு இந்த வேலையை எனக்குத் தந்திருக்கார்னு நினைக்கறேன். உன் பிள்ளையோட நண்பன் நான்... நானும் உன் பிள்ளை மாதிரி தான் பொறுத்துக்கோ....”*

*”அந்த சுப்புணி உன் பிள்ளைக்கு எப்படி பூஜை செய்யறானோ தெரியலை. அவன் என்னை விட மோசம். ஏனோ தானோன்னு செய்வான். வாங்கற எழுபது ரூபாய்ல இருக்கற அக்கறை பூஜைல இல்லை.. இங்கே வர்றதுக்கு முந்தின நாள் அவன் கிட்ட அரை மணி நேரமாவது பிள்ளையாருக்கு ஒழுங்கா பூஜை செய்டா, நான் வர்ற வரைக்கும் நல்லா பார்த்துக்கோடான்னு சொல்லி இருப்பேன். எகத்தாளமா என்னைப் பார்த்துட்டு சிரிக்கிறான் அவன். என்ன சொல்றது? பிறகு சொல்றான். “உலகத்துலயே கடவுளைப் பத்தியே கவலைப்படற ஒரே ஆளு நீ தான்”. எப்படி இருக்கு?.....”*

*“கடன் நிறைய இருக்கு கடவுளே. அதைத் தீர்க்க வேண்டி இருக்கு. கல்யாணமாகாத அக்கா ரெண்டு பேர் இருக்காங்க.... அம்மாவுக்கு சாகறதுக்குள்ளே அவங்க ரெண்டு பேருக்கும் கல்யாணம் செய்து தந்துடணும்னு ஆசை... ”கவலைப்படாதே*

அம்மா நான் இருக்கேன்"னு தைரியம் சொல்லிப் பார்த்துட்டேன். அம்மா "நீயே குழந்தை மாதிரி.. உன்னைப் பார்த்துக்கறதுக்கே வேறொரு ஆள் வேணும்"னு சொல்றா. என்னைப் பார்த்துக்க பிள்ளையார் இருக்கார்னு சொன்னேன். கேட்டுட்டு ஏனோ கண்கலங்கறா. எனக்காகவும் அம்மா நிறைய கவலைப்படறா. இங்கே வரக் கிளம்பினப்ப கூட அவளுக்குப் பயம் தான். "ஏண்டா பூஜை செய்ய ஐநூறு ரூபாய் தர்றதுங்கறது நிஜம் தானா... எதுவும் ஏமாத்திட மாட்டாங்களே..."ன்னு கேட்கறா. நான் "ஏமாத்த எங்கிட்டே என்னம்மா இருக்கு"ன்னு கேட்டேன். "எங்கயாவது ஆஸ்பத்திரில அட்மிட் செஞ்சுட்டு கிட்னி ஏதாவது எடுத்துடப் போறாங்க"ன்னு சொல்லி பயப்படறா..."

சொல்லி விட்டு கலகலவென சிரித்தான் கணபதி. கண்களில் நீர் தளும்பும் வரை சிரித்து விட்டு சொன்னான். "ஏழைகளுக்கு தான் பயப்படவும், கவலைப்படவும் எத்தனை விஷயங்க இருக்கு கடவுளே...! "அம்மா குருஜி சாதாரண ஆள் இல்லை.... அவர் நினைச்சா ஒருநாள்ல பல கோடி ரூபாய் அவர் காலடில கொட்ட எத்தனையோ பேர் இருக்காங்க.... இந்தக் கணபதி கிட்ட கிட்னி திருடற நிலைமை அவருக்கு இல்லை.... கடவுள் கண்ணைத் திறந்துட்டான்னு சந்தோஷப்படறதை விட்டுட்டு ஏம்மா பயப்படறே"ன்னு சொன்னேன். அப்படியும் அவளுக்கு பயம் முழுசா போகலை. "உன்னை வெள்ளந்தியாவே வளர்த்துட்டேண்டா. உனக்கு உலகம் இன்னும் சரியா தெரியலை"ன்னு சொல்லி வருத்தப்பட்டா. நான் சொன்னேன். "எனக்கு உலகம் சரியா தெரியாம இருக்கலாம். ஆனா கடவுளை நல்லா தெரியும்மா. அவர் கை விட மாட்டாரும்மா" ன்னு சொல்லி சமாதானப்படுத்தினேன். சரி தானே கடவுளே..."

தினமும் கடவுளிடம் பேச அவனுக்கு ஏதாவது விஷயம் இருந்தது. பூஜை செய்யும் நேரங்களில் சிரத்தையுடனும்

பக்தியுடனும் பூஜை செய்தான். மற்ற நேரங்களில் ஸ்தோத்திரம் படித்தான். பேசினான். வெளியே அமர்ந்து வேத கோஷங்கள் கேட்டான். அங்கு வந்து போன ஆட்கள் எல்லாம் மிகவும் எட்ட நின்றே அந்த சிவலிங்கத்தைப் பயத்துடன் பார்ப்பதைக் கவனிக்க நேர்ந்த போது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

ஒருவனிடம் அவன் வாய் விட்டு சொல்லியே விட்டான். "பயப்படாதீங்க. சாமி கிட்ட போய் யாராவது பயப்படுவாங்களா? உங்க அம்மா அப்பா மாதிரி தான் சாமியும்"

அந்த ஆள் கணபதியை ஒரு மாதிரி பார்த்தான். அதற்கப்புறம் அவன் வரவே இல்லை. அதன் பின் மற்றவர்களிடம் அவன் எதுவும் சொல்லப் போகவில்லை.

ஒரு நாள் மாலையில் பூக்கள் பறித்து விட்டு ஒதுக்குப் புறமாக இருந்த ஒரு சிமெண்ட் பெஞ்சில் கணபதி உட்கார்ந்தான். வெகு தூரத்தில் பாடசாலை மாணவர்கள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். வேடிக்கை பார்த்துக் கொண்டு இருந்தான். சிறிது நேரத்தில் நான்கு அடிகள் தள்ளி இருந்த இன்னொரு சிமெண்ட் பெஞ்சில் யாரோ வந்து அமர்வது போலிருக்கத் திரும்பிப் பார்த்தான்.

வந்து உட்கார்ந்தவர் முதியவராகத் தெரிந்தால் இன்ன வயது தான் என்று ஊகிக்க முடியாத தோற்றத்தில் இருந்தார். காவி வேட்டி கட்டி இருந்தார். தோளில் ஒரு காவித் துண்டு இருந்தது. நீண்ட தாடி வைத்திருந்தார். அவன் இது வரை அவரை அங்கு பார்த்ததில்லை.

அவரும் அவனைத் திரும்பிப் பார்த்தார். அவரது கண்களின் தீட்சண்யம் அவனை ஒரு கணம் கண்களை மூடிக் கொள்ள

வைத்தது. கண்கள் தீப்பிழம்பாய் ஜொலிப்பது போல் இருந்தது. அவன் மறுபடியும் கண்களைத் திறந்து பார்த்த போது அவர் சாதாரணமாகவே தெரிந்தார். அவர் கண்களில் ஒருவித கூர்மை இன்னமும் தெரிந்தாலும் அக்னி காணாமல் போயிருந்தது. கணபதி ஏதோ ஒரு பிரமை தான் அப்படிக் காண வைத்ததோ என்று சந்தேகப்பட்டான்.

அவன் அவரைப் பார்த்து சினேகத்துடன் புன்னகைத்தான். அவர் லேசாகத் தலை அசைத்தார். அப்போது தான் அவர் கையில் இருந்த ப்ளாஸ்டிக் பையில் நிறைந்திருந்த அந்த அபூர்வப் பூக்களைப் பார்த்தான். அவன் முதல் முதலில் அந்த சிவலிங்கத்தின் மீது பார்த்த பூக்கள் அவை. அவற்றை வட நாட்டுக்காரர் ஒருவர் கொண்டு வந்து தந்ததாக அவனை அழைத்து வந்தவன் சொன்னது நினைவுக்கு வந்தது.

கணபதி உற்சாகத்துடன் எழுந்து வந்து அவர் அருகில் அமர்ந்தான். "ஓ... நீங்க தானா அந்த வட நாட்டுக்காரர்" என்று கேட்க அவர் ஒன்றும் சொல்லாமல் அவனையே பார்த்தார்.

அவன் புன்னகையுடன் சொன்னான். "இந்தப் பூக்களை வைத்து சொன்னேன். இந்த மாதிரி பூக்கள் இங்கே கிடைக்கிறதில்லை. நீங்க வடநாட்டில இருந்து வர்றீங்களோ? நீங்க உங்க சாமிக்கு கொண்டு வந்திருக்கீங்க போல இருக்கு. எங்க சிவனுக்கும் கொஞ்சம் தர்றீங்களா? பதிலுக்கு இந்தப் பூக்கள்ல கொஞ்சம் எடுத்துக்குங்க"

அவர் முகத்தில் சிறிதாய் ஒரு புன்னகைக் கீற்று வந்து போனது. அவர் தலை அசைத்தார். அவன் ஒரு கை நிறைய அவர் பையிலிருந்து அந்தப் பூக்களை எடுத்து விட்டு இன்னொரு கை நிறைய தன்னிடமிருந்த பூக்கூடையில் இருந்த பூக்களை எடுத்து

மாற்றிப் போட்டுக் கொண்டான். அவர் பையில் பூக்கள் சிறிது குறைந்திருப்பது போலத் தோன்றவே தன் பூக்கூடையில் இருந்து மறுபடி இரண்டு பூக்களை எடுத்து அவர் ப்ளாஸ்டிக் பையில் போட்டான். பின் திருப்தியுடன் நிமிர்ந்த போது அவர் அவனையே ஒரு சுவாரசியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்.

அவர் அவனைக் கேட்டார். "அந்த சிவலிங்கத்துக்குப் புதுசா பூஜை செய்ய வந்திருக்கிறது நீ தானா?"

அவருக்கு அந்த சிவலிங்கத்தைப் பற்றியும் அதற்குப் பூஜை செய்ய அவன் வந்திருப்பது பற்றியும் தெரிந்திருந்ததால் அவர் குருஜியின் ஆளாக இருக்க வேண்டும் என்று கணபதி நினைத்துக் கொண்டான். ”ஆமாம்” என்றான்.

”பூஜை எல்லாம் சரியாய் செய்கிறாயா?”

”தெரியலை. எனக்குத் தெரிஞ்ச அளவுக்கு செய்யறேன்”

”பூஜை செய்யறதை விட அதிகமாய் பேச்சு சத்தம் தான் கேட்குது”

கணபதிக்கு திகைப்பாய் இருந்தது. அவன் பேசிக் கொண்டிருக்கும் நேரமாய் பார்த்து அவர் அந்தப் பக்கம் வந்திருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டான். அந்த அளவுக்கா சத்தமாய் பேசுகிறோம் என்று நினைத்த போது வெட்கம் பிடுங்கித் தின்றது.

வெட்கம் மாறாமல் சொன்னான். "எனக்கு நான் பூஜை செய்யற பிள்ளையார் கிட்டப் பேசிப் பேசிப் பழக்கமாயிடுச்சு. அதான் அப்படி...."

அவர் ஒன்றும் சொல்லவில்லை. அவனாகத் தொடர்ந்து சொன்னான். "எனக்கும் இங்கே படிக்கிற பசங்க மாதிரி ஸ்பஷ்டமாய் ஸ்தோத்திரங்கள் சொல்லணும்னு ரொம்ப ஆசை. ஆனா நான் அதிகம் படிச்சதில்லை... சம்ஸ்கிருத சுலோகங்களைத் தமிழ்ல எழுதிப் படிக்கலாம்னா உச்சரிப்பு கொஞ்சம் மாறினாலும் அர்த்தம் முழுசா மாறிடும்னு சொல்றாங்க. அதனால பயமாய் இருக்கு..."

"உச்சரிப்பை விட பாவனை முக்கியம். சொல்ற மனநிலை முக்கியம். அது சரியா இல்லாட்டி உச்சரிப்பு சரியாய் இருந்தாலும் பிரயோஜனம் இல்லை..."

"அப்படித் தான் குருஜியும் சொன்னார்... நீங்க குருஜிக்கு ரொம்ப வேண்டப்பட்டவரா?"

அந்தக் கேள்விக்கு அந்த முதியவர் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. தூரத்து வானத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்து விட்டுச் சொன்னார். "ம்ம்ம்.... உங்க குருஜியைத் தெரியும்... பல வருஷங்களுக்கு முன்னால் பழக்கம். அவ்வளவு தான்"

"அப்புறமா அவரைப் பார்க்கலையா?"

இல்லை என்பது போல் அவர் தலையசைத்தார். கணபதிக்குப் புரிந்தது. குருஜியைப் பார்க்கப் பல முறை போய் காத்திருந்து

அவரும் பலரைப் போல குருஜியைப் பார்க்க முடியாமல் போயிருக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் ஒரு கொடுப்பினை வேண்டும்...

”உனக்கு குருஜின்னா ரொம்பப் பிடிக்குமா?” அவர் கேட்டார்.

”பிடிக்கும். அவர் எங்கேயாவது ஃப்ரீயா பேசறார்னு தெரிஞ்சா நான் முதல் ஆளா போய் நிப்பேன்... அவர் பேசறது பெரிய பெரிய விஷயங்களாய் தான் இருக்கும். அதனால முக்கால் வாசி எனக்குப் புரியாது. ஆனாலும் கேட்டுகிட்டிருக்கப்ப மனசு லேசாயிடும். கடவுளே என்னோட மரமண்டையில இதுல கொஞ்சமாவது ஏறாதான்னு ஏக்கமாய் இருக்கும்... ஒரு தடவை இசையும் இறைவனும்கிற தலைப்புல அவர் பேசினதுல கொஞ்சம் புரிஞ்சுது. கடவுளை நெருங்க எல்லாத்தையும் விட இசை வேகமாய் உதவும்னு சொன்னார். நானும் போய் பிள்ளையார் கிட்ட பாட்டாய் பாடினேன். அன்னைக்குக் கனவுல பிள்ளையார் வந்து “கணபதி, பாட்டு மட்டும் வேண்டாம்”னு சொன்னார். அதுக்கு முன்னாடியும் பிள்ளையார் என் கனவுல வந்ததில்லை. அப்புறமும் என் கனவுல அவர் வந்ததில்லை. அப்படின்னா என் பாட்டு எப்படி இருந்திருக்கும்னு நீங்களே புரிஞ்சுக்கலாம்....”

சொல்லி விட்டு கணபதி குலுங்கக் குலுங்க சிரித்தான். அவர் அவன் சிரிப்பதையே புன்முறுவலுடன் பார்த்தார்....

இருட்ட ஆரம்பித்தது. அதைக் கவனித்த கணபதி அவசரமாக எழுந்தான். “ஐயோ பூஜை செய்ய நேரமாயிடுச்சு. நான் கிளம்பறேன். நீங்களும் வர்றீங்களா?”

“இல்லை நீ போப்பா. எனக்கும் போக நேரமாயிடுச்சு...”

***கிளம்பும் முன் கேட்டான். "நீங்க இங்கே அடிக்கடி வருவீங்களா?"***

***"எப்பவாவது தான் வருவேன்...."***

***அந்த சமயத்தில் அவன் பூக்கூடையில் இருந்து ஒரு பூ கீழே விழ அதை எடுத்தபடியே அவன் கேட்டான். "குருஜியைப் பார்த்தால் உங்களைப் பத்தி சொல்றேன். யாருன்னு சொல்லட்டும்..."***

***பதில் எதுவும் அவரிடமிருந்து வரவில்லை. அவன் நிமிர்ந்து பார்த்தான். அவர் எதிரில் இல்லை. சுற்றும் முற்றும் பார்த்தான். அவர் எங்குமே தென்படவில்லை.***

***திகைப்புடன் ஒரு நிமிடம் நின்று பார்த்து விட்டு கணபதி நகர்ந்தான்.***

# ***<u>அத்தியாயம் - 28</u>***

***குருஜி அந்த வேத பாடசாலைக்கு விஜயம் செய்வதென்று கடைசியில் முடிவெடுத்தார். தன் உதவியாளனிடம் நாலைந்து நாட்களுக்கு கொடுத்திருந்த அப்பாயின்மெண்ட்கள் அனைத்தையும் ரத்து செய்யச் சொன்னார்.***

***"நாளைக்கு மத்திய அமைச்சர் ஸ்ரீவத்சாவை சந்திக்க ஒப்புக் கொண்டிருக்கிறோம். நாளை மறு நாள் கவர்னரின் தம்பி...." என்று அவன் சொல்லச் சொல்ல அவர் இடை மறித்துச் சொன்னார்.***

*”அவசர வேலையா வெளியூர் போயிட்டார். அடுத்த முறை பார்க்கலாம்”னு சொல்லிடு”*

*உதவியாளன் தலையாட்டி விட்டுச் சென்ற பிறகு அந்த மனிதன் அவரிடம் கேட்டான். ”என்ன செய்யறதாய் இருக்கீங்க?”*

*”முதல்ல கணபதி கிட்ட பேசி அந்த பூ சமாச்சாரத்தைத் தெரிஞ்சுக்கணும். நாலைஞ்சு நாள் வேதபாடசாலையிலேயே தங்கறதா முடிவு செஞ்சுட்டேன்..”*

*’சிவலிங்கத்தின் கூடவேவா’ என்று கேட்க நினைத்த அந்த மனிதன் மாற்றிக் கேட்டான். “கணபதி கூடவேவா?”*

*”இல்லை. நான் வழக்கமாய் தங்கற இடத்துல தான். ரெண்டு நாள் தயார்ப்படுத்திக்க வேண்டி இருக்கு. அதுக்குப் பிறகு சிவலிங்கத்து கூட ஒரு நாள் தங்க நினைச்சிருக்கேன்..”. அவர் அவன் கேட்க நினைத்த கேள்விக்கே பதில் சொன்னார்.*

*ஒவ்வொரு வருடமும் அந்த வேதபாடசாலையில் குருஜி பத்து நாட்கள் தங்குவதுண்டு. அங்கே அவருக்கென்று தனியாக ஒரு வீடு இருக்கிறது. அவரைத் தவிர வேறு யாரும் அங்கே தங்க அவர் அனுமதித்தது கிடையாது. அங்கே தங்கும் நாட்களில் உயர் வகுப்புகளுக்கு அவர் பாடம் சொல்லித் தருவார். சிறப்புரைகள் ஆற்றுவார். அவர் மற்ற இடங்களில் பேசுவதைக் காட்டிலும் அங்கு பேசுவது த்த்துவ ரீதியாக மேலும் சிறப்பாக இருக்கும் என்பதால் அந்த சிறப்புரைகள் கேட்க நாட்டின் பல பாகங்களில் இருந்தும் அறிஞர்கள் வந்து கூடுவதுண்டு.*

ஆனால் இந்த முறை அங்கு அவர் செல்வது ரகசியமாக வைக்கப்படும் என்பதில் அந்த மனிதனுக்கு சந்தேகமில்லை. அவர் சிவலிங்கத்தைப் பார்க்கும் முன் எப்படி தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்கிறார் என்பதை அறிய அவனுக்கு ஆவலாக இருந்தது. ஆனால் சில விஷயங்களை எத்தனை நெருக்கமானவர்களிடமும் அவர் சொல்வதில்லை என்பதை அவன் நன்றாகவே அறிந்திருந்ததால் அதைக் கேட்கவில்லை.

குருஜி மறுநாள் அதிகாலையில் வேதபாடசாலைக்குப் புறப்பட்டுச் சென்றார்.

குருஜியின் இயற்பெயர் ராமகிருஷ்ணன். கும்பகோணத்தைச் சேர்ந்த வேத விற்பன்னர்களின் பரம்பரையில் பெற்றோருக்கு நான்காவது மகனாகப் பிறந்தவர். அவருக்குச் சிறு வயதிலிருந்தே அறிவு தாகம் அதிகமாக இருந்தது. எல்லாவற்றையும் அவர் மிக ஆழமாகத் தெரிந்து கொள்ள விரும்பினார். அவர் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் அவருடைய தந்தையார் அவரை சிறு வயதிலேயே ஒரு நாள் நூலகத்திற்குக் கொண்டு போய் விட்டார். ”நீ கேட்கறதுக்கெல்லாம் இதுல ஏதாவது ஒரு புஸ்தகத்துல பதில் இருக்கும். படிச்சுக்கோ”

அன்றிலிருந்து அந்த நூலகம் அவருக்கு இன்னொரு வீடு போல ஆகியது. சிறிது நேரம் கிடைத்தாலும் அங்கு போய் புத்தகங்களில் மூழ்கி விடுவார். எல்லாத் துறைகளிலும் அவருக்கு நிறைய ஆர்வம் இருந்த போதும் ஆன்மிகம், தத்துவம், விஞ்ஞானம் ஆகிய துறைகளில் அவருக்கு மேலும் அதிக ஆர்வம் இருந்தது.

படிப்பில் முதல் மாணவனாக ஆரம்பம் முதலே இருந்த அவர் பட்டப்படிப்பு முடிந்த பிறகு மேற்கொண்டு கல்லூரிகளில் படிக்க விரும்பாமல் ஆன்மிக அறிவை நேரடியாகக் கற்க காசி, ஹரித்வார்,

ரிஷிகேஷ் போன்ற இடங்களில் இருந்த யோகிகளையும், குருமார்களையும் நாடிச் சென்றார். பல குருமார்களுக்கு இவரே சொல்லித் தர வேண்டி இருந்தது. ஆனாலும் ஒருசில உண்மையான குருமார்களும், யோகிகளும் அவருக்குக் கிடைத்தார்கள். தேனீ பல்வேறு மலர்களிலிருந்து தேன் சேகரித்துக் கொள்வது போல அவர்களிடம் இருந்து கற்றுக் கொள்ள வேண்டியதை எல்லாம் அவர் கற்றுக் கொண்டார்.

எதைக் கற்றுக் கொள்ளும் போதும் அவருக்குச் சோர்வு இருந்ததில்லை. அலுப்பு இருந்ததில்லை. பல குருமார்கள் அவரைத் தங்களிடத்திலேயே இருத்திக் கொள்ள ஆசைப்பட்டார்கள். தங்கள் ஆசிரமங்களில் தங்களுக்கு அடுத்தபடியாக அவரை நியமிக்க விரும்பினார்கள். ஆனால் அவர் எங்கேயும் தங்கி விடவில்லை.

ஒரு குரு அவரிடம் கேட்டார். “ஏன் இங்கிருந்து போக எண்ணுகிறாய்?”

“ஒரு வகுப்பு படித்து தேர்ந்தவன் பின் அங்கேயே தொடர்ந்து இருப்பது வீண் அல்லவா?” என்றார்.

கடைசியாக சுமார் ஏழாண்டுகள் ரிஷிகேசத்திலும் அதைச் சுற்றி உள்ள இமயமலைப் பிரதேசங்களிலும் அவர் கற்றுக் கொண்ட வித்தைகளும், பெற்ற அறிவும் சாதாரணமாக இருக்கவில்லை. தியானத்திலும் அபூர்வசக்திகளிலும் அவர் அடைந்த நிலைகள் அவருடைய சகாக்கள் பலருக்கு கனவிலும் நினைத்துப் பார்க்க முடியாததாக இருந்தது.

நாற்பத்தைந்தாவது வயதில் திரும்பி வந்தவர் பத்திரிக்கைகளில் எழுதவும், பொதுக் கூட்டங்களில் பேசவும்

ஆரம்பித்த பின் பிரபலமாக ஆரம்பித்தார். அப்போது கிடைத்த குருஜி பட்டம் அவருக்கு நிரந்தரமாகத் தங்கி விட்டது. இந்தியாவில் பிரபலமாகிய அவர் சிறிது சிறிதாக வெளிநாடுகளிலும் பிரபலமாக ஆரம்பித்தார். பின் அவர் போகாத நாடில்லை, அவரை அறியாத ஆன்மிகவாதிகள் இல்லை என்ற நிலை வந்து விட்டது.

துறவியாக அவர் தன்னை எப்போதும் காட்டிக் கொண்டதில்லை. துறவியாக அவர் வாழவும் இல்லை. அவ்வப்போது சில பெண்கள் அவர் வாழ்க்கையில் இருந்தாலும் அவர் யாரையும் திருமணம் செய்து கொள்ளவில்லை. திருமணம், பிள்ளைகள், குடும்பம் எல்லாம் சிறைகள் என்று அவர் நினைத்தார். குருஜி அளவுக்கு ஆன்மிக நூல்கள் எழுதியவர் இல்லை என்று பெயரெடுத்தார். அவருக்குத் தெரியாத விஷயங்கள் இல்லை என்று அவரிடம் வந்தவர்கள் வியந்தனர். ஒரு முறை அவரிடம் வந்து பேசியவர்கள் திரும்பத் திரும்ப அவரிடம் வர விரும்பினர்.

எல்லா மதங்களைப் பற்றியும் ஆழமாக அவர் அறிந்திருந்தார். அந்த மத நூல்களை எல்லாம் கரைத்துக் குடித்திருந்தார். அனாயாசமாக அவற்றில் இருந்து மேற்கோள்கள் எடுத்துக் காட்டினார். மணிக்கணக்கில் அவரால் பெரும் தத்துவங்களைப் பேசவும் முடியும். மணிக்கணக்கில் மௌனமாக தியானத்தில் அமர்ந்திருக்கவும் முடியும். அவரிடம் வாதிட வந்தவர்கள் எப்போதும் வென்றதில்லை. அவர் பேச விரும்பாத நேரங்களில் ஒரு வார்த்தையை அவரிடம் இருந்து பிடுங்க முடிந்தவர்களும் இல்லை.

ஆன்மிக உலகில் முடிசூடா மன்னர் போல திகழ்ந்த அவர் தனிப்பட்ட வாழ்வில் புதிராக இருந்தார். அவர் தன் ஐம்பதாவது வயதுக்குப் பின் எந்தக் கோயிலுக்கும் சென்றதில்லை. அவர் வீட்டில் எந்த இறைவனின் திருவுருவப் படமும் இருக்கவில்லை. எல்லா மதக் கடவுள்களைப் பற்றியும் மணிக்கணக்கில் விளக்க முடிந்த

அவர் எந்தக் கடவுளையும் வணங்கியதில்லை. தன் தனிப்பட்ட கடவுள் மற்றும் மத நம்பிக்கைகள் பற்றி அவர் யாரிடமும் விளக்கியதோ, விவாதித்ததோ இல்லை. ஆர்வக் கோளாறுடன் அது பற்றிக் கேட்டவர்களுக்கு அவர் அது தன் தனிப்பட்ட விஷயம் என்று சொல்லி முற்றுப் புள்ளி வைப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்....

குருஜி வேதபாடசாலைக்கு வந்திருக்கிறார் என்றும் அவனை சந்திக்க விரும்புகிறார் என்றும் கேள்விப்பட்டவுடன் கணபதிக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. ”எங்கே இருக்கிறார்?”

தகவல் தெரிவித்தவன் அவனை அழைத்துக் கொண்டு போய் வீட்டைக் காண்பித்து வெளியே நின்று கொண்டு கணபதியை உள்ளே போகச் சொன்னான். வேதபாடசாலையின் இன்னொரு ஒதுக்குப் புறத்தில் இருந்த அந்த வீடு சிறியதாக இருந்தாலும் பிரத்தியேக அழகுடன் இருந்தது. அந்த வீட்டின் உள்ளே நுழையக் கூடிய பாக்கியம் வெகுசிலருக்கே வாய்க்கும் என்பதும் அந்த வெகுசிலரில் தானும் ஒருவன் என்பதும் அறியாத கணபதி உள்ளே போய் அவர் காலில் விழுந்து சாஷ்டாங்கமாக வணங்கினான்.

”எப்படி இருக்காய் கணபதி?”

”உங்க தயவுல நல்லா இருக்கேன் குருஜி”

”உனக்கு இங்கே சௌகரியத்துக்கு எதுவும் குறைவில்லையே?”

“அப்படிச் சொன்னா நாக்கு வெந்துடும் குருஜி”

*குருஜி அவனை புன்முறுவலுடன் பார்த்துக் கொண்டிருந்தார். அவன் எதைக் கேட்டாலும் வாங்கித் தரும் படி அவர் அங்கிருந்தவர்களிடம் சொல்லி இருந்தாலும் அவன் எதையுமே கேட்கவில்லை என்பதுடன் கொடுத்த சாதாரண சௌகரியங்களை கூட மறுத்து விட்டான் என்று அவர்கள் அவரிடம் தெரிவித்திருந்தார்கள். காலையில் இட்லி, மதியமும், இரவும் எளிமையான சாப்பாடு மட்டுமே கேட்டான் என்றும் படுக்கக் கொடுத்த மெத்தையைக் கூட மறுத்து விட்டு பாயும் தலையணையும் போதும் என்று சொல்லி வாங்கிக் கொண்டதாக அவர்கள் தெரிவித்திருந்தார்கள்.*

*"மெத்தை கூட வேண்டாம்னு சொல்லிட்டதா பசங்க சொன்னாங்க. ஏன் கணபதி?"*

*"குருஜி நான் இங்கே இருக்கப் போறதோ சில நாள் தான். இங்கே ரொம்ப சௌகரியத்தைப் பழகிட்டா அப்பறம் எங்க வீட்டுக்குப் போன பிறகு எனக்கு கஷ்டமாயிடும். மெத்தை இல்லாட்டி தூக்கம் வராது. எது கடைசி வரைக்கும் கிடைக்குமோ அது போதும் குருஜி"*

*கள்ளங்கபடம் இல்லாமல் கணபதி சொன்னதை புன்னகையோடு அவர் கேட்டுக் கொண்டார். அந்த சிவலிங்கம் போலவே இவனும் அபூர்வமானவனே, ஆராய்ச்சி செய்யப்பட வேண்டியவனே என்று அவருக்குத் தோன்றியது.*

*"பூஜை எல்லாம் எப்படி போய்கிட்டிருக்கு கணபதி?"*

”எனக்குத் தெரிஞ்ச அளவுல செஞ்சுகிட்டிருக்கேன். நீங்க அங்க வந்து நான் செய்யறதுல இருக்கற தப்புகளை சொன்னா நான் திருத்திக்குவேன் குருஜி”

“அந்த சிவனுக்கே புகார் எதுவும் இல்லைன்னா நான் வந்து திருத்த என்ன இருக்கு கணபதி?”

”புகார் இருக்கா இல்லையான்னு அவரைக் கேட்டாத் தான் தெரியும். ஏதோ கொஞ்ச நாளைக்கு தானே, அது வரைக்கும் இவனை அனுசரிச்சுப் போலாம்னு கூட சிவன் நினைச்சிருக்கலாம்” என்று சொல்லிய கணபதி வாய் விட்டு சிரித்தான்.

அவன் சிரித்ததை ரசித்தபடியே குருஜி அடுத்ததாக இயல்பாகக் கேட்பது போல் கேட்டார். “பூஜைக்கு வேண்டிய பூ, வில்வம், துளசி எல்லாம் உனக்கு தாராளமா கிடைக்குதில்லையா கணபதி”

”தாராளமா கிடைக்குது குருஜி. நான் இங்கே இருந்து போகிறப்ப எங்க பிள்ளையாருக்கும் கொஞ்சம் எடுத்துகிட்டு போகட்டுமா குருஜி” கணபதி ஆர்வத்துடன் கேட்டான்.

”எவ்வளவு வேணுமோ அவ்வளவு எடுத்துட்டு போ கணபதி” என்றவர் தான் எதிர்பார்த்த தகவல் அவனிடம் இருந்து வராததால் தொடர்ந்து சொன்னார். “சில சமயம் வடநாட்டுல மலைப்பகுதில கிடைக்கற பூவும் யாராவது கொண்டு வந்து தர்றதுண்டு. பார்க்க அழகா வித்தியாசமா இருக்கும்”

கணபதி உற்சாகத்துடன் சொன்னான். ”ஆமா. நேத்து கூட அந்த பூ கிடைச்சுது. உங்களுக்கு நல்லா பழக்கமானவர் தான் கொண்டு வந்து தந்தார்”

*குருஜி சாதாரணமாய் திகைப்படைபவர் அல்ல என்றாலும் அவன் சொன்னதைக் கேட்டு திகைத்தே போனார். ”எனக்கு பழக்கமானவரா. யாரது?”*

*”பேரைக் கேட்கறதுக்குள்ளே மாயமாயிட்டார். எங்கே போனார்னு தெரியலை”*

*”அவரை எங்கே பார்த்தாய், பார்க்க எப்படி இருந்தார், எனக்கு நல்லா பழக்கமானவர்னு எதை வச்சு சொல்றே கணபதி.”*

*கணபதி விளக்கமாகச் சொன்னான். அவர் சொன்னதாக அவன் சொன்ன ”உங்க குருஜியைத் தெரியும்... பல வருஷங்களுக்கு முன்னால் பழக்கம்” வாசகத்தை இன்னொரு தடவை சொல்லச் சொல்லி அவர் கேட்டார். எதையும் இரண்டாவது முறை அவர் கேட்டதாக சரித்திரமே இல்லை. முதல் தடவையே பல சந்தர்ப்பங்களில் அவருக்கு அதிகம். பாதியிலேயே சொல்ல வந்ததைப் புரிந்து கொள்ளக் கூடியவர் அவர். ஆனால் இன்று முதல் தடவையாக அவர் அப்படிக் கேட்டுத் தெரிந்து கொண்டார். அவன் எல்லாம் சொல்லி முடித்த போது அவர் சிலை போல அமர்ந்திருந்தார்.*

*”அவர் யாருன்னு தெரியுமா குருஜி?” கணபதி கேட்டான்.*

*அவன் சொன்ன அடையாளங்களும், அந்த வாசகமும் அவர் ரிஷிகேசத்தில் இருந்த நாட்களில் அறிந்த ஒரு வித்தியாசமான சித்தரை அவருக்கு நினைவுபடுத்தின. அந்த சித்தர் அவருக்குக் குருவாக சில வருடங்கள் இருந்திருக்கிறார்... அந்த சித்தர் இன்னமும் இருப்பார் என்று அவர் எண்ணியிருக்கவில்லை....*

*அவன் அவருடைய பதிலுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறான் என்பதை உணர்ந்து குருஜி சொன்னார். "நீ சொல்ற அடையாளங்கள் இருக்கற ஒரு சித்தரை எனக்கு பல வருஷங்களுக்கு முன்னாடி தெரியும். ஆனால் நீ சொல்ற ஆளும், நான் நினைக்கிற ஆளும் ஒண்ணு தானான்னு எனக்குத் தெரியலை கணபதி...."*

*தான் பார்த்த மனிதர் ஒரு சித்தராக இருக்க முடியுமா என்று யோசித்த கணபதிக்கு விடை கிடைக்கவில்லை. அவன் குருஜியைக் கேட்டான். "நீங்க சொல்ற சித்தரோட பேர் என்ன குருஜி"*

*மிகத் தாழ்ந்த குரலில் குருஜி சொன்னார். "அவருக்குப் பேர் இல்லை..."*

*பெயர் இல்லாத மனிதர்களும் இருப்பார்களா என்று திகைத்தான் கணபதி.*

*குருஜி சகஜ நிலைக்கு வந்து அவனிடம் சொன்னார். "சரி கணபதி நீ போய் உன் வேலையைப் பார்.."*

*"நீங்க எப்ப குருஜி அங்கே வர்றீங்க?"*

*"ரெண்டு நாள் வேற வேலை இருக்கு கணபதி. அதை முடிச்சுட்டு வர்றேன்.. எனக்கு நீ இன்னொரு உதவி செய்யணும் கணபதி".*

*"என்ன குருஜி இப்படி உதவிங்கற பெரிய பெரிய வார்த்தை எல்லாம் சொல்லிகிட்டு. என்ன செய்யணும் சொல்லுங்க?"*

*"அடுத்த தடவை அந்த சித்தரைப் பார்த்தால் நான் அவரைப் பார்க்க ஆசைப்படறேன்னு சொல்லு. எந்த நாளானாலும் சரி. எந்த நேரமானாலும் சரி....."*

*அவனை அனுப்பி விட்டு கண்களை மூடி யோசித்தபடி மணிக்கணக்கில் குருஜி அமர்ந்திருந்தார். அவர் பாதையும் அவர் குருவின் பாதையும் குறுக்கிடும் காலம் ஒன்று வரும் என்று அவர் கனவிலும் நினைத்துப் பார்த்ததில்லை.. ஆனாலும் அந்தக் காலம் வந்திருக்கிறது....*

# அத்தியாயம் - 29

*அந்த உறையில் இருந்து ஈஸ்வர் எடுத்த தாள் ஏதோ ஒரு பழைய ஆங்கிலப் புத்தகத்தில் இருந்து கிழித்ததாக இருந்தது. அதில் ஒருசிறிய பத்தியையும், அடுத்த பெரிய பத்தியையும் பக்கவாட்டில் யாரோ கோடிட்டிருந்தார்கள். ஈஸ்வர் பரபரப்புடன் படிக்க ஆரம்பித்தான்.*

*"இந்தியாவின் சக்தி வாய்ந்த சிவலிங்கங்கள் பற்றி மிக விரிவாகப் பார்த்து விட்டோம். அந்த சிவலிங்கங்கள் கால காலமாய் பக்தர்களைத் தங்கள் பக்கம் ஈர்த்துக் கொண்டிருக்கின்றன. பழமை வாய்ந்த அந்த சிவலிங்கங்களைத் தரிசித்த பின், இமயமலையிலிருந்து கன்யாகுமரி வரை பரந்து கிடக்கும் பாரதம் எத்தனை சக்தி மையங்களைத் தன்னிடம் வைத்துக் கொண்டிருக்கிறது என்று என்னால் ஆச்சரியப்படாமல் இருக்க முடியவில்லை. தரிசிக்க முடிந்த நானும் எத்தனை பாக்கியவான் என்று பெருமிதம் அடையாமல் இருக்க முடியவில்லை."*

”ஆனாலும் என் மனதில் சிறியதொரு ஏக்கம் இருக்கத்தான் செய்கிறது. நான் காண ஆசைப்பட்ட இரண்டு சிவலிங்கங்களைக் காணும் பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லை. இரண்டும் சித்தர்கள் சம்பந்தப்பட்டது. இந்தியாவின் உண்மையான சித்தர்கள் இன்றைய போலி சாமியார்கள் மற்றும் தங்களையே சித்தர்கள் என்று சுய அறிமுகம் செய்து கொள்ளும் ஆசாமிகள் போல நம் கண்ணில் தென்படுவதில்லை. ஏதாவது ஒரு காரணம் இருந்தால் ஒழிய, அவர்களே காணப்பட வேண்டும் என்று எண்ணினால் ஒழிய எப்போதும் மறைவாகவே இருப்பார்கள். சில சமயங்களில் வேறு சாதாரண ஆட்கள் போல பார்வைக்குத் தென்படுவதுண்டு. சரி சித்தர்களை விட்டு விட்டு சொல்ல வந்ததைச் சொல்லி விடுகிறேன். சித்தர்கள் உருவாக்கியதாகச் சொல்லப்பட்ட இரண்டு சிவலிங்கங்களை எவ்வளவோ முயன்றும் என்னால் பார்க்க முடியவில்லை. முதலாவது இமயமலையில் சித்தர்கள் வைத்து பூஜிப்பதாய் சொல்லப்பட்ட நவபாஷாண லிங்கம். எத்தகைய கொடிய வியாதி இருந்தாலும் அந்த நவபாஷாண லிங்கத்தைப் பூஜிப்பவர்கள் அந்த வியாதியிலிருந்து விடுதலை பெற்று விடுவார்கள் என்று சொன்னார்கள். ஏதோ ஒரு குகையில் இருப்பதாக அடையாளம் சொன்னார்கள். அவர்கள் சொன்ன இடத்திற்குப் போய்ப் பார்த்தால் அப்படி ஒரு குகையே இல்லை. இன்னொரு சிவலிங்கம் தமிழகத்தில் இருப்பதாகச் சொல்லப்பட்ட ஒரு விசேஷ மானஸலிங்கம். மானஸலிங்கம் என்ற பெயரில் வேறு சில சிவலிங்கங்கள் இருந்தாலும் இது அவற்றைப் போல அல்ல. சித்தர்களால் உருவாக்கப்பட்டு ரகசியமாய் பூஜிக்கப்பட்டு வந்த இந்த சிவலிங்கம் பொதுவான ஆகம விதிக்களின் படி உருவாக்கப்பட்டதோ, பூஜிக்கப்பட்டதோ அல்ல என்கிறார்கள். ரகசிய சூட்சும வித்தைகள் பலவற்றிலும் தேர்ச்சி அடைந்திருந்த சித்தர்கள் தங்கள் சக்திகளை எல்லாம் ஆவாகனம் செய்து உருவாக்கி இருந்த அந்த சிவலிங்கத்தின் சக்தி எல்லை இல்லாதது என்கிறார்கள். அதை வைத்து ஒரு கோயில் கட்ட முதலாம் ராஜேந்திரச் சோழனின் மகன் ஆசைப்பட்டு அதைத் தர சித்தர்களை

வற்புறுத்த அவன் விரைவிலேயே ஒரு போரில் மாண்டு போனதாகச் சொல்கிறார்கள். பல நூறு வருடங்களாக சித்தர்களிடமும், சித்தர்கள் தேர்ந்தெடுக்கும் ஆட்களிடமும் இருந்து வரும் அந்த சிவலிங்கம் பிரமிக்கத் தக்க சக்திகளை அளிக்கக் கூடியது என்று சொல்கிறார்கள். அந்த விசேஷ மானஸ லிங்கத்தை சித்தர்களிடமிருந்து தங்கள் வசம் எடுத்துக் கொள்ள ஒருசிலர் செய்த முயற்சிகளும் மரணத்திலோ, பைத்தியம் பிடிப்பதிலோ தான் முடிந்தன என்றும் சொல்கிறார்கள். திடீர் என்று சில வினாடிகள் ஒளிரக் கூடியதாகசவும் சொல்லப்படும் அந்த சிவலிங்கத்தை ஒருமுறை தரிசிக்கவும் நான் ஆசைப்பட்டேன். ஆனால் அது தற்போது இருக்கும் இடத்தை என்னால் அறிய முடியவில்லை. நவபாஷாண லிங்கமும், விசேஷ மானஸ லிங்கமும் நிஜமாகவே இருக்கின்றனவா இல்லை சிலரின் கட்டுக்கதையா என்று இன்று வரை எனக்கு புரியவே இல்லை"

ஈஸ்வர் அதை இரண்டு முறை படித்தான். முதல் முறை அவசர அவசரமாகவும் இரண்டாவது முறை நிதானமாகவும் படித்தான். அந்தப் புத்தகத்தாளின் மேலே ஆன்மிக பாரதம் என்று எழுதி இருந்தது அந்தப் புத்தகப் பெயராக இருக்க வேண்டும் என்று அனுமானித்தான். கீழே நீலகண்ட சாஸ்திரி என்று எழுதியவர் பெயரும் இருந்தது. பக்க எண் 178 என்று இருந்தது. தாளின் பின்புறம் ஒரு சிவலிங்கத்தை மூன்று சித்தர்கள் பூஜிப்பது போல படம் வரையப் பட்டிருந்தது. அந்தப் படம் இருந்திரா விட்டால் அந்தப் பக்கத்தில் என்ன எழுதியிருந்தது என்று தெரிந்திருக்கும்....

அந்த விசேஷ மானஸ லிங்கம் தான் பசுபதி பூஜித்து வந்தது என்பதில் இப்போது ஈஸ்வருக்கு சந்தேகமே இல்லை. அதைப் பார்க்காமலேயே கேள்விப்பட்டதில் இருந்து நீலகண்ட சாஸ்திரி என்பவர் எத்தனையோ வருடங்களுக்கு முன் தன் புத்தகத்தில் எழுதி வைத்து விட்டுப் போயிருக்கிறார். அந்தப் புத்தகத்தில் இருந்து

குறிப்பிட்ட அந்தப் பக்கத்தை மட்டும் கிழித்து அந்த சிவலிங்கத்தின் புகைப்படத்தின் பின் ஃபிரேமிற்குள் வைத்தது அவனுடைய கொள்ளுத் தாத்தாவாகத் தான் இருக்க வேண்டும். எந்த நோக்கத்தில் வைத்தார் என்று சரியாக அவனால் யூகிக்க முடியவில்லை. எதற்கும் இருக்கட்டும் என்று வைத்தாரா, இல்லை ஒரு நாள் இது தேவைப்படலாம் என்று வைத்தாரா, இல்லை வேறு காரணம் இருக்குமா என்று தெரியவில்லை.

அந்த சிவலிங்கத்தைத் திருட நினைத்தவர்கள் இறந்திருக்கிறார்கள், பைத்தியமாகி இருக்கிறார்கள் என்றெல்லாம் சொன்னதும் வெறும் கற்பனை அல்ல என்பது இப்போது நடந்த முயற்சியில் பிணமாகிக் கிடந்த ஒருவனை நினைக்கும் போது தெரிகிறது. ஆனாலும் அதையும் மீறி சிவலிங்கம் களவு போயிருப்பது ஈஸ்வரை நிறைய யோசிக்க வைத்தது. திருடிய சிவலிங்கம் இப்போது எங்கே இருக்கிறது. திருட்டில் சம்பந்தப்பட்ட மற்றவர்கள் என்ன ஆனார்கள்?

”ஏண்டா தூங்கிட்டியா?” ஆனந்தவல்லியின் சத்தம் கேட்ட்து.

“இதோ வந்துட்டேன் பாட்டி” என்று ஈஸ்வர் சத்தமாகச் சொன்னான்.

அவன் வாயால் கூப்பிடும் போது பாட்டி என்கிற சொல் எவ்வளவு இனிமையாக இருக்கிறது என்று நினைத்தவளாக ஆனந்தவல்லி புன்னகை செய்தாள்.

அந்த சிவலிங்கத்தின் புகைப்படத்தைத் திரும்பவும் அந்த ஃபிரேமிற்குள் வைத்து பழைய நிலைமையிலேயே வைத்து விட்டு,

அந்தத் தாளை மடித்துத் தன் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு ஈஸ்வர் பெட்டியை மூடி வைத்து விட்டுக் கீழே இறங்கினான்.

"எல்லாம் பார்த்தியாடா?" ஆனந்தவல்லி கேட்டாள்.

"ம்"

"அந்தப் பெட்டில இருக்கிற பட்டு வேட்டி, சட்டை, அங்கவஸ்திரம் எல்லாம் அவர் கடைசியா போட்டுகிட்டிருந்தது. அவர் அதைப் போட்டுகிட்டு சபைல நடந்தா அத்தனை பேரும் எழுந்திருச்சு நிப்பாங்க" ஆனந்தவல்லி பெருமையாகச் சொன்னாள்.

"கேள்விப்பட்டேன். உங்களைத் தவிர எல்லாரும் அவரை மரியாதையா தான் நடத்தினாங்கன்னு சொன்னாங்க" அவன் குறும்பாகச் சொல்ல ஆனந்தவல்லி பக்கத்தில் தடி எதாவது இருக்கிறதா என்று சுற்றும் முற்றும் பார்த்தாள். அவன் சிரித்துக் கொண்டே அங்கிருந்து ஓடினான். ஆனந்தவல்லி தன் கணவரின் படத்தையே பார்த்துக் கொண்டு நின்றாள். "உங்க கொள்ளுப் பேரனைப் பார்த்தீங்களா? பார்க்க உங்க மாதிரின்னாலும் கோபத்திலயும் பிடிவாதத்துலயும் என்னை மாதிரி...."

ஈஸ்வர் தனதறைக்குள் நுழைந்தவுடன் பின்னாலேயே மகேஷ் நுழைந்தான். அவன் ஈஸ்வர் கையில் வேறெதாவது வைத்திருக்கிறானா என்று பார்த்தான். பின் மெல்லக் கேட்டான். "கிழவி கிட்ட இருந்து ஏதாவது துப்பு கிடைச்சுதா?"

ஈஸ்வர் கேட்டான். "எது சம்பந்தமா?"

*மகேஷுக்கு திடீர் என்று என்ன சொல்வது என்று தெரியவில்லை. பின் சொன்னான். "அந்த சிவலிங்கம் சம்பந்தமாவோ, பெரிய தாத்தா இறந்தது சம்பந்தமாவோ தான்..."*

*ஈஸ்வர் சொன்னான். "அந்த சிவலிங்கத்தோட போட்டோ மட்டும் தான் அங்கே இருந்துச்சு. போட்டோ வச்சுகிட்டு என்ன செய்ய? நீ அந்த சிவலிங்கத்தைப் பார்த்திருக்கிறியில்ல... நீ அந்த சிவலிங்கத்தைப் பத்தி என்ன நினைக்கிறாய்?"*

*"அது சாதாரண சிவலிங்கம் மாதிரி தான் இருந்துச்சு... ஏன் நீயும் அது சக்தி வாய்ந்த சிவலிங்கம்னு நம்பறியா?"*

*"ஆமா.... அப்படி இல்லாட்டி அதைப் போய் யாராவது கடத்துவாங்களா? அதுவும் ஒரு கொலைய செஞ்சுட்டு"*

*மகேஷ் ஒன்றுமே சொல்லாமல் அவனையே பார்த்தான். பின் சொன்னான். "அதுக்கு ரொம்ப சக்தி இருக்கறதா ஆரம்பத்துல சொன்னது உன் அப்பா தானாம். அது மின்னுது அப்படி இப்படின்னு எல்லாம் சொல்லி பெருசு பண்ணிட்டார்."*

*உள்ளே எழுந்த கோபத்தை அடக்கிக் கொண்டவனாய் ஈஸ்வர் சொன்னான். "ஆனா அவர் சொன்னதை அப்ப யாரும் பெரிசுபடுத்தல. அப்ப எதுவும் நடந்துடவுமில்லை. கிட்டத்தட்ட 40 வருஷம் கழிச்சு கொலை நடக்குது, சிலை கடத்தப்பட்டிருக்குன்னா வேற யாரோ கூட அதே மாதிரி வித்தியாசமா எதாவது பார்த்திருக்கலாம்னு தோணுது. அதுவும் சமீப காலத்துல பார்த்திருக்கலாம்..."*

மகேஷ் சற்று தயங்கி விட்டுச் சொன்னான். “இருக்கலாம். கிழவிக்கு ஏதாவது தெரியுமா?”

“பெருசா எதுவும் தெரிஞ்ச மாதிரி இல்ல. இன்னும் உன் தாத்தா கிட்ட தான் இன்னைக்கு ராத்திரி பேசணும். அவர் தான் அடிக்கடி தோட்ட வீட்டுக்குப் போனவர்….”

அதற்கு மகேஷ் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் அன்றிரவு ஈஸ்வர் பரமேஸ்வரனைப் பார்த்துப் பேசிய போது அவனும் அருகில் கண்கொத்திப் பாம்பு போல் கவனித்துக் கொண்டிருந்தான். மீனாட்சியும், ஆனந்தவல்லியும் கூட அங்கிருந்தார்கள். அவர்கள் இருவருக்கும் அவனும் பரமேஸ்வரனும் எப்படி பேசிக் கொள்கிறார்கள் என்று பார்க்க ஆசை. இருவருக்கும் இடையே சுமுகமான அன்பு வந்து விடாதா என்ற நப்பாசை. இருவருக்குமிடையே சண்டை ஏதாவது வந்து விடக்கூடாதே என்ற பயம்...

ஆனால் ஈஸ்வர் பரமேஸ்வரனிடம் பனிப்பார்வை காட்டவில்லை. கோபம் காட்டவில்லை. குத்தல் பேசவில்லை. அது பரமேஸ்வரனுக்குப் பெரிய ஆசுவாசத்தைத் தந்தது. ஆனால் அதே நேரத்தில் அவன் அவரைத் தாத்தா என்று அழைக்கவும் இல்லை. ஒரு பேட்டியாளனாகத் தான் அவரிடம் அவன் கேள்விகள் கேட்டான். பார்த்தசாரதிக்கும் இவனுக்கும் இடையே பெரிய வித்தியாசத்தை அவரால் பார்க்க முடியாதது ஒரு உறுத்தலாக இருந்தது.

ஈஸ்வர் கேட்ட கேள்விகளில் பெரும்பாலானவை பார்த்தசாரதியும் மற்ற போலீஸ்காரர்களும் கேட்ட கேள்வியாக இருந்தது. ஒருசில கேள்விகள் மட்டும் வித்தியாசமாகக் கேட்டான்...

*”நீங்க போறப்ப எல்லாம் உங்கண்ணா சிவலிங்கம் பக்கத்துல தான் இருந்தாரா. இல்லை வெளியவும் இருந்தாரா?”*

*“அண்ணா பெரும்பாலும் ஹால்ல தான் இருப்பார். ஏதோ சில நேரங்கள்ல மட்டும் சிவலிங்கம் பக்கத்துலயோ, இல்லை தோட்டத்துல ஏதாவது வேலை செஞ்சுகிட்டோ இருப்பார்”*

*“சிவலிங்கம் பக்கத்துல இருந்தப்ப என்ன செஞ்சுகிட்டிருந்தார். தியானம் மாதிரி ஏதாவது செய்துட்டு இருப்பாரா, இல்லை ஸ்தோத்திரம் ஏதாவது படிச்சிகிட்டு இருப்பாரா, இல்லை அபிஷேக பூஜை மாதிரி ஏதாவது செஞ்சுகிட்டிருப்பாரா?”*

*பரமேஸ்வரன் யோசித்தபடி சொன்னார். ”சிவலிங்கம் பக்கத்துல இருக்கறப்ப அவர் பெரும்பாலும் தியானத்துல தான் இருப்பார். என்னைப் பார்த்த பிறகு வெளியே வருவார். அபூர்வமா ரெண்டு மூணு தடவை நான் அங்கு போனது தெரியாமல் கூட அவர் தியானத்திலேயே இருந்ததும் உண்டு....”*

*“அப்ப நீங்க என்ன செய்வீங்க?”*

*“அரை மணி நேரம் அல்லது ஒரு மணி நேரம் அவரைப் பார்த்துட்டே உட்கார்ந்திருந்து விட்டு வந்துடுவேன்”*

*“தியானத்துல இருந்து அவரை எழுப்ப மாட்டீங்களா?”*

*“இல்லை. அண்ணா தியானத்துல இருக்கற விதமே ரொம்ப அழகாயிருக்கும். சின்னக் குழந்தையோட ஆழமான தூக்கம் மாதிரி. அவன் வேற ஏதோ ஒரு லோகத்துல இருக்கற மாதிரி... அவரைப்*

*பார்த்துட்டே இருந்தா நாமளும் அந்த அமைதியை உணர்ந்துடலாம்... நல்ல அனுபவம் அது...”*

*”நீங்க போனது கூட தெரியாமல் தியானத்துல இருக்கறது உங்களுக்கு வருத்தமாவோ, கோபமாவோ இருக்காதா?”*

*“சேச்சே அப்படி எல்லாம் இருக்காது. எங்கண்ணா ஸ்படிகம் மாதிரி. மனசு அவ்வளவு சுத்தம். யாரையும் குறைச்சு நினைக்கவோ, அவமதிக்கவோ அவரால முடியாது....” சொல்லும் போது அவர் குரல் கரகரத்தது.*

*“உங்க கிட்ட பேசிகிட்டிருக்கறப்ப அவர் எதைப்பத்தி பேசுவார்...”*

*“அவரா எதைப் பத்தியும் பேசினதா எனக்கு ஞாபகம் இல்லை. அவரா பேசினது கடைசி ரெண்டு சந்திப்புல தான். ஒரு தடவை அம்மாவைக் கூட்டிகிட்டு வரச் சொன்னார். இன்னொரு தடவை தான் சிவலிங்கம் பத்தியும் உன்னைப் பத்தியும் சொன்னார். நான் அதைப் பத்தி தான் உன் கிட்ட ஏற்கெனவே சொல்லி இருக்கேனே”*

*“நீங்க அவர் கிட்ட எதைப் பத்தி பேசுவீங்க?”*

*“என் மனசுல எது பாரமா இருந்தாலும் அது பத்தி சொல்லுவேன். வியாபாரத்துல பிரச்சினை இருந்தால் அதைப் பத்தி சொல்லுவேன். உடம்புக்கு முடியலைன்னா அதைப் பத்தி சொல்லுவேன். எதைப் பத்தி சொன்னாலும் கவனமா பொறுமையா அவர் கேட்டுக்குவார். பதிலுக்கு “சரியாயிடும் கவலைப்படாதே”ங்கிற மாதிரி சொல்வார். அவர் கிட்ட பேசிட்டு வெளியே வர்றப்ப மனசுல பாரம் குறைஞ்சிருக்கும். அவர் கிட்ட*

*சொன்ன பிரச்சினைகள் தானா கொஞ்ச நாள்ல சரியாயிருக்கும். அந்த சக்தி எங்கண்ணா கிட்ட இருந்துச்சு....”*

*சொல்லும் போது பரமேஸ்வரன் குரலில் பெருமிதம் தொனித்தது. ஆனந்தவல்லி அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.*

*“அந்த சக்தி உங்க அண்ணா கிட்ட இருந்துச்சா. இல்லை அந்த சிவலிங்கத்து கிட்ட இருந்துச்சா? அந்த சிவலிங்கமும் அங்கே இருந்துச்சு இல்லையா அதனால கேட்டேன்”*

*“நான் அது எங்கண்ணானாலன்னு தான் நினைக்கிறேன்” உறுதியாகச் சொன்னார் பரமேஸ்வரன்.*

*‘அண்ணன் மேல இருக்கற இந்த பாசத்துல கால் வாசி கூட உங்களுக்கு உங்க மகன் மேல இல்லையே ஐயா’ன்னு கேட்க வேண்டும் போல் ஈஸ்வருக்குத் தோன்றினாலும் அவன் கேட்கவில்லை. முகத்தில் அந்த எண்ணத்திற்கான அறிகுறியையும் காட்டவில்லை.*

*“நீங்க அந்த சிவலிங்கத்துக்குப் பக்கத்துல போயிருக்கீங்களா?”*

*“இல்லை”*

*“அதுல இருந்து ஏதாவது வித்தியாசமான சக்தியை எப்பவாவது கவனிச்சிருக்கீங்களா?”*

*“இல்லை”*

*“ஏதாவது வெளிச்சம் மாதிரி?”*

*“இல்லை”*

*“உங்க அண்ணா எப்பவாவது ஸ்தோத்திரம் அல்லது தேவார திருவாசகம் எல்லாம் சிவலிங்கத்துக்காகப் படிப்பாரா?”*

*“படிச்சதை நான் பார்த்தது இல்லை”*

*“நீங்கள் எப்பவும் சாயங்கால வேளையில் தானே போவீங்க. ஒருவேளை காலையில அந்த அதையெல்லாம் படிப்பாரோ?”*

*யோசித்து விட்டு பரமேஸ்வரன் சொன்னார். “எங்கண்ணா அந்த மாதிரி எதுவுமே எப்பவுமே படிக்கிற ரகம் அல்ல?”*

*“அப்படின்னா அவரோட பூஜை ரூமில் இருந்த தேவார திருவாசக ஸ்தோத்திர புஸ்தகம் எல்லாம் யார் படிக்கறதுக்காக வச்சிருந்தார்?”*

*பரமேஸ்வரனுக்கும் அந்தக் கேள்வி அப்போது தான் உறைத்தது. அவருக்கு அதற்கான பதில் தெரியவில்லை.*

*”ஒருவேளை வெளியில் இருந்து எப்போதாவது வரும் யாராவது ஒருவருக்காக இருக்குமோ?” ஈஸ்வர் அவரைக் கூர்மையாகப் பார்த்துக் கொண்டே கேட்டான்.*

*பரமேஸ்வரன் உட்பட அனைவரும் அவனைத் திகைப்புடன் பார்த்தார்கள்.*

# அத்தியாயம் - 30

தோட்ட வீட்டில் மதியம் வேலையை முடித்து விட்டு வேலைக்காரன் முனுசாமி போன பின் அந்த சித்தர் பசுபதியைப் பார்க்க வந்து கொண்டிருந்தால் அது ’நமக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை’ என்று முன்பே தன் சந்தேகத்தைத் தாயிடம் பரமேஸ்வரன் தெரிவித்திருந்தார். இப்போது ஈஸ்வரும் தேவார திருவாசகங்களைப் படிக்கக் கூடிய வேறு நபர் வந்து போயிருக்கலாம், அதற்காகவே அந்தப் புத்தகங்களை அந்தப் பூஜையறையில் பசுபதி வைத்திருக்கலாம் என்று சொன்னது பரமேஸ்வரனுக்குத் தன் முந்தைய கருத்தை ஒப்புக் கொண்ட்து போலவே தோன்றியது. ஆனால் அந்த வேறு நபர் சித்தராகவே இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை, மூன்றாவது நபராகவும் இருக்கலாம் என்ற உண்மை பரமேஸ்வரனுக்கு இப்போது உறைத்தது.

ஈஸ்வர் அவர் முகபாவனையில் இருந்தே தன் சந்தேகம் அவருக்கும் இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டான். அடுத்த கேள்வியை அவன் பரமேஸ்வரனிடம் கேட்டான். “உங்களையும் இந்த வீட்டுக்காரங்களையும் தவிர வெளியாள் யாராவது அவரைப் போய் பார்க்கிற மாதிரி இருக்காங்களா?”

பரமேஸ்வரன் சொன்னார். “அண்ணாவோட உலகம் தனி. அந்த சிவலிங்கம் தவிர வேற யாருக்கும் அதுல இடமில்லை. நானே அவரைப் பார்க்கப் போகாமல் இருந்தாலும் அவர் நான் ஏன் வரலைன்னு தவிச்சுப் போயிட மாட்டார். அப்படி இருக்கறப்ப வெளியாள்கள் கிட்ட அவருக்கு எப்படி நெருக்கம் இருக்கும். அவர் இறந்த பிறகு அந்த சித்தரை அந்த வீட்டில் பார்த்ததால அவர்

வேணும்னா வந்து போயிருந்திருக்கலாம்னு எனக்கும் சந்தேகம் வந்தது. வேற யாரும் வர வாய்ப்பே இல்லை.”

”நீங்க பார்த்த ஆள் தான் அந்த சிவலிங்கம் கொடுத்த சித்தர்ங்கறது எப்படி சொல்றீங்க”

பரமேஸ்வரனின் அந்த சித்தரின் கண்களைப் பற்றிச் சொல்லி விட்டுச் சொன்னார். “அந்தக் கண்களை என்னால எப்பவுமே மறக்க முடியாது”

“அந்த சித்தர் பற்றி நீங்க எப்பவாவது உங்க அண்ணா கிட்ட பேசி இருக்கீங்களா, அவர் ஏதாவது சொல்லி இருக்காரா?”

“இல்லை”

“அந்த சிவலிங்கத்துக்கு உங்க அண்ணா எதாவது பெயர் சொல்லி இருக்காரா?”

“இல்லை”

ஈஸ்வர் சிறிது மௌனமாயிருந்து விட்டுக் கேட்டான். “உங்க அண்ணா கிட்ட அபூர்வ சக்திகள் இருந்ததா நீங்க நினைக்கிறீங்களா? அப்படி ஏதாவது சக்தியை நீங்க கண்கூடா பார்த்திருக்கீங்களா?”

சிறிது யோசித்து விட்டு பரமேஸ்வரன் சொன்னார். “நான் மனசு விட்டு அவரோட பேசிகிட்டிருக்கறப்ப எல்லாம் நான் சொல்லாமலேயே அத்தனையும் அவருக்குத் தெரியும்கிற உணர்வு

எனக்கு எப்பவுமே இருக்கும்.. அது எதனாலன்னு எனக்கு சொல்லத் தெரியல. நடக்கப் போகிறது எல்லாம் கூட அவருக்குத் தெரிஞ்சுருந்த மாதிரி தான் இருந்தது. ஆனா அதை அவர் வெளியில காண்பிச்சுக்கப் பிரியப்படலைன்னு தான் நினைக்கிறேன். அதே மாதிரி அவருக்கு அவரோட உடம்பு மேலயும் முழுக் கட்டுப்பாடு இருந்துச்சு. ஒரு பொசிஷன்ல உட்கார்ந்தா மணிக்கணக்கில் எந்த சங்கடமும் இல்லாமல் இயல்பா அவர் இருந்ததைப் பார்த்திருக்கேன்....”

“அதுல அவருக்கு யாரு குரு?”

”தெரியல. அந்த சித்தர் குருவாய் இருந்திருக்கலாம்...”

ஈஸ்வருக்கு அவரிடம் அதிகத் தகவல்கள் எதுவும் இல்லை என்பது புரிந்தது. அண்ணனிடம் அவருக்கு இருந்த அன்பும் அக்கறையும் அண்ணனைத் தாண்டி அந்த சிவலிங்கத்திடம் போய் விடவில்லை என்பதும் புரிந்தது. ஓரளவாவது ஆர்வம் அவருக்கு இருந்திருக்குமேயானால் கண்டிப்பாக அவருக்கு சிவலிங்கம் பற்றிய தனி அனுபவங்கள் நிகழ்ந்திருக்கும்....

பரமேஸ்வரன் ஈஸ்வரிடம் கேட்டார். ”நீ படிச்சவன். விஞ்ஞான சூழ்நிலைல வளர்ந்தவன். நீ அந்த சிவலிங்கத்துல ஏதாவது சக்தி இருக்கும்னு நிஜமாவே நம்பறியா?”

“அந்த சிவலிங்கம் சித்தர்களும், உங்கண்ணா மாதிரியானவங்களும் பூஜை செய்ததா இருக்கிறதால கண்டிப்பா அதில் சக்தி இல்லாமல் இருக்காதுன்னு நினைக்கிறேன்”

அவர் அவனைத் திகைப்புடன் பார்க்க அவன் சொன்னான். "என்னோட ஆராய்ச்சிகளே இந்த மாதிரி சக்திகளைப் பத்தினது தான். நிறைய ஆராய்ச்சி செய்திருக்கேன். செய்துகிட்டிருக்கேன்...."

ஆனந்தவல்லி ஈஸ்வரைப் பெருமையாகப் பார்த்தாள். அவளுக்குத் தெரிந்து அவள் குடும்பத்தில் இதுவரை இவனையும் இவன் தந்தையையும் போல மெத்தப்படித்த அறிவுஜீவிகள் வேறு யாரும் இருந்ததில்லை. மகேஷ் அவளுடைய பெருமிதப் பார்வையை எரிச்சலுடன் கவனித்தான். 'என்ன ஆச்சு இந்தக் கிழவிக்கு. இவன் என்ன நோபல் பரிசா வாங்கிட்டான்'.

அந்த எரிச்சலுடன் திரும்பியவன் தன் தாயும் அப்படியே ஈஸ்வரைப் பார்ப்பதைப் பார்த்து நொந்து போனான். மீனாட்சிக்குத் தன் மருமகனும் அண்ணனைப் போல பெரிய பெரிய ஆராய்ச்சிகள் செய்வதில் பெருமை இருந்தது....

இதை எல்லாம் கவனிக்காத பரமேஸ்வரன் ஈஸ்வரைக் கேட்டார். "உனக்கு எப்படி அந்த பூஜை ரூம்ல தேவாரம், திருவாசகம் எல்லாம் இருந்தது தெரிஞ்சுது?"

ஈஸ்வர் அவரைக் கூர்மையாகப் பார்த்தபடியே சொன்னான். "அப்பா சொன்னார். அவர் கிட்ட நான் நிறைய கேட்டு தெரிஞ்சுகிட்டிருந்தேன்..."

அவன் நிறைய கேட்டு தெரிந்து வைத்திருப்பது வெறும் சிவலிங்கத்தைப் பற்றி மட்டும் அல்ல என்பது அவன் சொன்ன விதத்தில் இருந்தே தெரிந்தது. இவனிடம் சிறிது நேரம் பேசினால் கூட இவனுடைய அப்பாவை நினைவுபடுத்தாமல் இருக்க மாட்டான் என்று அவருக்குப் புரிந்தது. அவர் பேச்சை மாற்றினார்.

*“இந்த வழக்கை விசாரிச்சுகிட்டிருக்கற பார்த்தசாரதிங்கற போலீஸ் அதிகாரி உன்னோட செல் நம்பரைக் கேட்டார். நான் கொடுத்திருக்கேன். உன் கிட்ட பேசணும்னார்..”*

*ஈஸ்வர் எழுந்து விட்டான். “நல்லதாச்சு. எனக்கும் அவர் கிட்ட பேச வேண்டி இருக்கு....”. வேறெதுவும் சொல்லாமல் அவன் போக மகேஷும், மீனாட்சியும் அவனைப் பின் தொடர்ந்தார்கள்.*

*ஆனந்தவல்லி மகனையே பார்த்தபடி அமர்ந்திருந்தாள். பரமேஸ்வரன் கேட்டார். “என்னம்மா பார்க்கறே?”*

*”நீ உன் அண்ணன் கிட்ட மனசு விட்டுப் பேசினப்ப எல்லாம் பாரம் குறைஞ்சிருக்குன்னு சொன்னியே. உன் மகனைப் பத்தியும் அவன் கிட்ட பேசி இருக்கியாடா?”*

*பரமேஸ்வரன் பதில் சொல்லாமல் பார்வையை வேறிடத்துக்குத் திருப்பினார். அவர் மகன் சங்கரைப் பற்றி யாரும் அவரிடம் பேசக்கூடாது என்பது இந்த வீட்டில் எழுதப்படாத விதியாக இருந்தது. ஆனந்தவல்லியும் அதை இன்று வரை கடைபிடித்து வந்தாலும் இன்று ஏனோ பேசுகிறாள். அவர் தன் அண்ணனிடமே பேசாத விஷயம் ஒன்றிருக்கும் என்றால் அது அவர் மகன் பற்றிய விஷயம் தான். அது அவருடைய தனிப்பட்ட ஒரு ரணம். அதை அவரால் யாரிடமும் சொல்லவோ பகிர்ந்து கொள்ளவோ முடியாது என்பதை ஏன் இவர்கள் யாருமே புரிந்து கொள்ள மாட்டேன்கிறார்கள் என்று நினைத்தார்..*

*அந்த மௌனத்திலேயே பதிலைத் தெரிந்து கொண்ட ஆனந்தவல்லி பரிவுடன் சொன்னாள். “நீ அதைப்பத்தி அவன் கிட்ட பேசி இருந்தா உன் பாரம் என்னைக்கோ குறைஞ்சுக்கும்டா.”*

*பரமேஸ்வரன் தாய் பக்கம் தன் பார்வையைத் திருப்பவில்லை. வாயைத் திறந்து பேசவுமில்லை. ஆனந்தவல்லி ஒரு பெருமூச்சு விட்டு எழுந்தாள்.*

*ஈஸ்வருக்குத் தன் பின்னாலேயே மகேஷ் வந்தது ஆச்சரியமாக இருந்தது. விமானநிலையத்திற்கு வராதவன், வீட்டுக்கு வந்தவுடன் கூட உடனடியாக வந்து பார்க்காதவன், இப்போது ஏன் இப்படி அட்டை போல் ஒட்டிக் கொள்கிறான் என்று குழம்பினான்.*

*அவன் செல்போன் இசைத்தது. எடுத்து யாரிடமிருந்து என்று பார்த்தான். புதிய எண்ணாக இருந்தது. பேசினான். "ஹலோ"*

*"ஹலோ. நான் பார்த்தசாரதி பேசறேன். உங்க பெரிய தாத்தா கொலைக் கேஸை நான் தான் இன்வெஸ்டிகேஷன் செய்துட்டிருக்கேன். உங்க தாத்தா கிட்ட கேட்டு தான் இந்த நம்பரை வாங்கினேன். உங்க கிட்ட கொஞ்சம் பேச வேண்டி இருக்கு..."*

*"பேசலாமே. எப்ப வீட்டுக்கு வர்றீங்க?"*

*பார்த்தசாரதிக்கு ஆனந்தவல்லி இருக்கும் இடத்திற்குப் போவதில் தர்மசங்கடம் இருந்தது. 'இந்த ரெண்டு நாள்ல என்ன கண்டுபிடிச்சு இருக்கீங்க?" என்று கண்டிப்பாகக் கேட்பாள். சம்பளம் தரும் முதலாளியைப் போல் "இதைக்கூட கண்டுபிடிக்காம என்ன செய்துகிட்டிருக்கீங்க" என்று கேட்டாலும் கேட்பாள். அந்தக் கிழவியிடம் இன்னொரு தடவை சிக்க விரும்பாமல் அவர் சொன்னார். "வெளியே எங்கேயாவது சந்திச்சா நல்லா இருக்கும்னு நினைக்கிறேன்."*

*”அப்படின்னா அந்த தோட்ட வீட்டுல சந்திக்கலாமா?”*

*ஈஸ்வருக்கு அந்தத் தோட்ட வீட்டுக்குச் சென்று பார்க்கும் எண்ணம் முன்பே இருந்தது. இன்னும் அந்த வீட்டில் சிவலிங்கம், பசுபதி சம்பந்தப்பட்ட அலைகள் நிறைந்திருக்கும் என்று தோன்றியது. அறுபது வருடங்கள் புனிதமாக இருந்த இடத்தில் இருந்து அவ்வளவு சீக்கிரம் அந்த அலைகள் கலைந்து போக வாய்ப்பில்லை....*

*“கண்டிப்பா தோட்ட வீட்டுல சந்திக்கலாம் சார். எத்தனை மணிக்கு வர்றீங்க?”*

*“சாயங்காலம் நாலு மணி சுமாருக்கு வரட்டுமா”*

*“வாங்க சார். நானும் அங்கே நாலு மணிக்குள்ளே வந்துடறேன்.”*

*அவன் செல்போனைக் கீழே வைத்து விட்டு ஈஸ்வர் மீனாட்சியிடம் சொன்னான். “எனக்கு அந்தத் தோட்ட வீட்டுல வேலை பார்த்துகிட்டிருக்கிற ஆள் கிட்டயும் பேசணும் அத்தை. எத்தனை மணிக்குப் போனால் அவனை அங்கே பார்க்கலாம்”.*

*“பெரியப்பா இருக்கிற வரைக்கும் முனுசாமி அங்கே மதியம் ரெண்டு மணி வரைக்கும் இருப்பான். இப்ப என்ன செய்யறான்னு தெரியலை. ஆனா அவன் செல்போன் நம்பர் இருக்கு. அவனை வரச்சொன்னா இங்கே கூட வருவான்.”*

*“வேண்டாம். அவனை அங்கேயே பார்க்கிறேன். அந்த போலீஸ் ஆபிசர் பார்த்தசாரதியும் அங்கே தான் வர்றதாய் சொல்லி*

இருக்கார். காலைல அவன் கிட்ட பேசிட்டு நாலு மணிக்கு அவரை சந்திக்கலாம்னு இருக்கேன்”

மகேஷ் அவனிடம் கேட்டான். “நீயும் அந்த கொலைகாரங்களைக் கண்டு பிடிக்க முயற்சி செய்யறியா?”

“இல்லை. அந்த சிவலிங்கத்தைக் கண்டுபிடிக்க முயற்சி செய்யறேன்.”

”பெரிய பெரிய ஆராய்ச்சி எல்லாம் அமெரிக்கால செய்துட்டு இருந்தாய்னு அம்மா சொன்னாங்க. அப்படிப்பட்ட நீ இந்த சிவலிங்கம் லெவலுக்கு இறங்குவாய்னு நான் எதிர்பார்க்கலை” மகேஷ் ஏளனமாய் சொல்ல மீனாட்சி மகனை முறைத்தாள். அவள் மகனைத் திட்ட வாய் திறப்பதற்குள் ஈஸ்வர் புன்னகையுடன் பதில் அளித்தான்.

“அந்த சிவலிங்கம் லெவலுக்கு உயரமுடியுமான்னு தான் யோசிக்கிறேன்”

மீனாட்சிக்கு மருமகன் கோபித்துக் கொள்ளாதது ஆறுதலாக இருந்தது. ’அப்பா கிட்ட கோவிச்சுக்கற மாதிரி இவன் யார் கிட்டயும் கோவிச்சுக்க மாட்டேன்கிறான். மத்தவங்க கிட்ட அண்ணா மாதிரியே பெருந்தன்மையா நடந்துக்கறான். கடவுளே இவன் எங்கப்பா கிட்டயும் அப்படியே நடந்துக்கற மாதிரி அருள் புரியேன்’.

ஈஸ்வர் சொன்னான். “அப்பா ஃப்ரண்ட் தென்னரசுவையும் பார்த்து பேசணும்னு நினைச்சுட்டு இருக்கேன். அவர் இங்கே இருக்காரா இல்லை வெளியூருக்குப் போயிருக்காரான்னு தெரியலை”

மீனாட்சி தன் மகனிடம் கேட்டாள். “ஏண்டா தென்னரசு அங்கிள் வெளியூருக்குப் போயிருக்காரா என்ன”

மகேஷ் வேண்டா வெறுப்பாய் சொன்னான். “இல்லை”

மீனாட்சி மகேஷிடம் கேட்டுத் தெரிந்து கொண்டதை ஈஸ்வர் ஆச்சரியத்துடன் பார்த்தான். மீனாட்சி விளக்கினாள். “இவன் என்னேரமும் அவங்க வீட்டுல தான் இருப்பான். அவரோட பொண்ணு விஷாலியும், இவனும் சின்னதுல இருந்தே ஃப்ரண்ட்ஸ். அவ கிழிச்ச கோட்டை இவன் தாண்ட மாட்டான். நானே இவன் கிட்ட ஏதாவது முக்கிய வேலையாகணும்னா அவ கிட்ட சொல்லி தான் செய்ய வைப்பேன்”

’இந்த அம்மாவுக்கு யார் கிட்ட எதைச் சொல்றதுங்கற விவஸ்தையே கிடையாது’ என்று நினைத்தவனாய் கடுகடுப்புடன் மகேஷ் தாயைப் பார்த்தான். அவளோ மகன் முகத்தைப் பார்க்கக்கூட இல்லை. மருமகன் மீதே அவள் கவனம் இருந்தது.

ஈஸ்வருக்கு மீனாட்சி சொன்ன பிறகு தான் தென்னரசு அவன் அப்பாவுடைய நண்பர் மட்டுமல்ல, மகேஷின் அப்பாவின் நண்பரும் கூட என்பது நினைவுக்கு வந்தது. மூன்று பேரும் ஒன்றாகப் படித்தவர்கள்... மகேஷின் முகத்தைப் பார்த்த போது அவன் மீனாட்சியின் பேச்சை ரசிக்கவில்லை என்பது புரிந்தது. அவனைக் கூர்ந்து பார்த்தபடியே சொன்னான். “அந்த சிவலிங்கம் ஜொலிச்சதை எங்கப்பா தனியா பார்க்கல. தென்னரசு அங்கிளும் அப்ப அவர் கூட இருந்தார்.”

மகேஷ் அதற்கு பதில் அளிக்கவில்லை. காதிலேயே அது விழாதது போல் இருந்தான்.

மீனாட்சி இன்னும் விஷாலி நினைப்பில் தான் இருந்தாள். ஈஸ்வர் சொன்னதோ, மகேஷ் மரக்கட்டை போல நின்றதோ அவள் கவனத்திற்குச் செல்லவில்லை. அவள் சொன்னாள். “விஷாலி மாதிரி ஒரு பொண்ணை இந்தக் காலத்துல நீ பார்க்க முடியாது ஈஸ்வர். அழகு, புத்திசாலித்தனம், நல்ல மனசு இத்தனையும் சேர்ந்து ஒரு பொண்ணு கிட்ட இருக்க முடிஞ்சதை நான் இது வரைக்கும் பார்த்ததில்லை.”

ஈஸ்வர் ஒரு குறும்புப் புன்னகையுடன் சொன்னான். “நீங்க எங்கம்மாவை நேர்ல இன்னும் பார்த்ததில்லை இல்லையா அத்தை”

மீனாட்சி சிரித்துக் கொண்டே சொன்னாள். “எங்கண்ணா மாதிரி ஒருத்தன் மனசுல இடம் பிடிக்கறதும், உன்னை மாதிரி ஒரு பிள்ளையைப் பெத்துக்கறதும் சாதாரணமான ஒரு பெண்ணால் முடியாதுன்னு எனக்குத் தெரியாதா ஈஸ்வர். நான் சொன்னது இந்தக் காலத்துப் பொண்ணுகள்ல அப்படி பார்த்ததில்லைன்னு தான்.”

ஈஸ்வர் சொன்னான். “நான் விஷாலியைப் பார்த்துட்டு சொல்றேன்”

மகேஷிற்கு இந்த விதமான பேச்சு சுத்தமாய் பிடிக்கவில்லை. பேச்சை மாற்ற அவன் நினைக்கையில் அவனுக்கு உதவுகிற மாதிரி மறுபடி ஈஸ்வரின் செல்ஃபோன் இசைத்தது.

போனில் பேசியது ஈஸ்வரின் நெருங்கிய நண்பன் சாந்தனு. ”டேய் ஈஸ்வர். நீ எனக்காக ஒரு வேலை செய். நான் அங்கே

*இருக்கிற வேதபாடசாலைக்கு ரெண்டு லட்ச ரூபாய் டொனேட் செய்திருக்கேன். அவங்களோட ஒரு நியூ ப்ராஜெக்டுக்கு ஃப்ரண்ட்ஸ் சில பேர் கிட்ட பணம் கலெக்ட் பண்ணியும் அனுப்பறதா இருக்கேன். நாம தான் சம்பாதிக்கறதுக்கு எல்லாத்தையும் விட்டுட்டு வந்துட்டு அமெரிக்கா லைஃப் பேட்டர்னுக்கு மாறிட்டோம். நம்ம வேதம், நம்ம கலாச்சாரத்தை எல்லாம் காப்பாத்தற ஒரு இன்ஸ்டிட்யூஷனுக்கு பணம் தந்தாவது உதவலாமேன்னு நினைக்கிறேன். நீ அங்கே போயிருக்கறதால ஒரு ஹெல்ப் பண்ணுடா. நீ ஒரு தடவை அந்த வேதபாடசாலைக்குப் போய் பார்த்துட்டு வாடா. அவங்க வெளியே சொல்ற மாதிரியே நல்ல விதமா தான் எல்லாம் செய்துட்டு இருக்காங்களா, இல்லை நம்மளை மாதிரி NRI காரங்கள் கிட்ட வசூல் பண்ற உத்தியான்னு நீ நேர்ல பார்த்துட்டு வந்து சொன்னால் நல்லாயிருக்கும். சரியாடா?”*

# ***அத்தியாயம் - 31***

*தோட்ட வீட்டில் வீட்டுப்பகுதியை இன்னும் போலீசார் பூட்டி தங்கள் வசம் தான் வைத்திருந்தார்கள். அதனால் ஈஸ்வருக்கு வீட்டின் உள்ளே போய் பார்க்க முடியவில்லை. முனுசாமியை அவன் தோட்டத்திலேயே சந்தித்துப் பேசினான்.*

*முனுசாமியிடம் சிவலிங்கம் பற்றி பெரிய உபயோகமான தகவல்கள் எதுவும் கிடைக்கா விட்டாலும் ஈஸ்வருக்கு அவன் மூலம் பசுபதி பற்றி நிறைய தெரிந்து கொள்ள முடிந்தது. முனுசாமிக்கு அவரைப் பற்றி சொல்ல நிறைய இருந்தது. படித்தவன், வெளிநாட்டில் இருப்பவன், பணக்காரன் என்ற எந்த பந்தாவையும் காட்டாமல் சரிசமமாகவும், நீண்ட காலம் அவனை அறிந்தவன் போலவும் ஈஸ்வர் பழகியதால் அவனுக்கு ஈஸ்வரை நிறையவே பிடித்து விட்டிருந்தது. அதனால் அவன் ஈஸ்வரிடம்*

மனம் விட்டுப் பேசினான். துறவி போல் வாழ்ந்த விதம், வெளியுலகம் பற்றி அறிந்து கொள்ள எந்த வித அக்கறையும் காட்டாதது, தியானத்திலேயே பெரும்பாலும் கழித்தாலும் மற்ற நேரங்களில் தோட்ட வேலைகளில் கூட அவனுக்கு சரிசமமாய் உழைத்த விதம் இப்படி எல்லாவற்றையும் நிகழ்ச்சிகளுடன் சொல்லிக் கொண்டு போனான். பசுபதி என்ற மனிதரை அவனால் முழுமையாகப் புரிந்து கொள்ள முடிந்தது.

கடைசியில் ஈஸ்வர் கேட்டான். "அந்த பூஜை ரூம்ல தேவாரம், திருவாசகம், ஸ்தோத்திரம்னு புத்தகம் எல்லாம் இருந்த்தா கேள்விப்பட்டேன். அதை பசுபதி ஐயா படிக்கறதை எப்பவாவது பார்த்திருக்கியா?"

முனுசாமி யோசித்து விட்டு சொன்னான். "இல்லைங்க தம்பி. ஒரு தடவை கூட பார்த்ததில்ல. அதெல்லாம் அவருக்கு எப்பவோ மனப்பாடம் ஆயிருக்கும் தம்பி. அதனால இருக்கலாம்"

அதுவும் ஒரு காரணமாக இருக்கலாம் என்று ஈஸ்வருக்குத் தோன்றியது.

"போலீஸ் என்ன எல்லாம் கேட்டாங்க முனுசாமி?"

முனுசாமி எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னான். கடைசியில் அவன் ஒரு முறை குடித்து விட்டு இரவு இங்கு வந்த போது 'கண்ணு ரெண்டும் நெருப்பா ஜொலிச்சுகிட்டு' இருந்த ஒரு உருவம் அவனைப் பார்த்ததையும், அவனைப் போலவே கந்தன் என்ற ஒரு திருடன் இங்கே வந்த போது எதையோ பார்த்து பயந்ததையும் சொன்னான். அவர்கள் பார்த்தது நிஜமாக ஏன் இருக்கக் கூடாது என்று பார்த்தசாரதி என்ற போலீஸ் அதிகாரி

சந்தேகப் பட்டதையும் சொன்னான். அந்தத் தகவல்கள் ஈஸ்வருக்குப் புதியதாக இருந்ததால் சுவாரசியத்துடன் கேட்டுக் கொண்டான்.

முனுசாமி போய் சிறிது நேரத்தில் பார்த்தசாரதி வந்தார். தோட்டத்திலேயே உட்கார்ந்து கொண்டு இருவரும் பேசினார்கள். அவனைப் பற்றி இண்டர்நெட்டில் அவர் மணிக்கணக்கில் படித்து எல்லாமே தெரிந்திருந்தாலும் அதைக் காண்பித்துக் கொள்ளாமல் ஒன்றுமே தெரியாதது போல் விசாரித்தார். ஈஸ்வர் தன்னை விர்ஜினியா பல்கலைக்கழகத்தில் மனோதத்துவ உதவிப் பேராசிரியராக இருப்பதாகவும், அதீத மனம் சம்பந்தமான ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருப்பதாகவும் சொன்னானே ஒழிய உலக அளவில் அவனுக்கிருந்த புகழைச் சிறிதும் வெளிப்படுத்தவில்லை.

பார்த்தசாரதிக்கு அவனை மிகவும் பிடித்திருந்தது. நிறைகுடம் தழும்பாது என்பதற்கு இவன் நல்ல உதாரணம் என்று மனதில் சொல்லிக் கொண்டார். அவருக்கு நீண்ட நாட்கள் இருந்த சந்தேகத்தை அவனிடம் கேட்டார். ”இந்த மாதிரி சக்திகள் எல்லாம் நிஜமாவே இருக்குன்னு நினைக்கிறீங்களா ஈஸ்வர்”

”கண்டிப்பா இருக்கு. அதுல சந்தேகமே தேவையில்லை”. அவன் சிறிதும் தயங்காமல் ஆணித்தரமாக சொன்னான்.

“சக்தி இருக்கறதா சொல்லிட்டு ஏமாத்திட்டு திரியற ஆளுகளைத் தான் நான் அதிகம் பார்த்திருக்கிறேன்” பார்த்தசாரதி வெளிப்படையாக தன் அனுபவத்தைச் சொன்னார்.

ஈஸ்வர் புன்னகையுடன் சொன்னான். “நீங்க மட்டுமல்ல. நானும் அப்படித்தான். சக்தி இருக்கறதா சொல்லிக்கற ஆயிரம் பேர்ல உண்மையா சக்தி இருக்கற ஆளுகள் நாலு பேர் தேர்றது கஷ்டம். அதுலயும் மூணு பேருக்கு இருக்கிற சக்திகள் தொடர்ச்சியானதா இருக்காது. சிலசமயம் அவங்க கிட்ட இருக்கும். சில சமயம் சுத்தமா இருக்காது. அந்த நேரங்கள்ல அந்த மூணு பேரு கூட தங்களோட இமேஜைக் காப்பாத்திக்க நடிக்க ஆரம்பிச்சுடுவாங்க. கடைசியா மிஞ்சறது ஒரு ஆளா தான் இருக்கும்”

அவருக்கு அவன் சொன்னது சுவாரசியமாக இருந்தது. அவர் கேட்டார். “அந்த ஒரு ஆளுக்காவது சக்திகள் எப்போதும் இருக்குமா?”

“அதை இப்படித்தான்னு சொல்ல முடியாது. சில பேருக்கு ஒரு குறிப்பிட்ட காலம் வரை தான் அந்த சக்தி இருக்கும். பிறகு குறைய ஆரம்பிச்சுடும். தொடர்ச்சியாக நீண்ட காலத்துக்கு தக்க வச்சுக்க சில பயிற்சிகளை தொடர்ந்து செய்ய வேண்டி இருக்கும். சில கட்டுப்பாடுகளை அவங்க தொடர்ந்து கடைப்பிடிக்க வேண்டும். அப்படி அவங்க இருக்கலைன்னா சக்திகள் குறைய ஆரம்பிச்சுடும்....”

”கடைசி வரைக்கும் அந்த மாதிரி சக்திகளை தங்க கிட்ட வச்சுக்கற ஆள்கள் இருக்கிறாங்களா”

“அது ரொம்ப அபூர்வம். பெரும்பாலும் அப்படி தக்க வச்சிக்கறவங்க சித்தர்களாகவோ, யோகிகளாகவோ இருப்பாங்க. ஆனா அவங்களுக்கு நம்மள மாதிரி ஆள்கள் கிட்ட தங்களோட சக்திகளைக் காட்டி நிரூபிக்க வேண்டிய அவசியம்

இருக்காதுங்கறதால அவசியம்னு தோணினால் ஒழிய அவங்க கண்ணுக்கு அகப்பட மாட்டாங்க...”

அவன் அந்த சக்திகளைப் பற்றியும் சக்தியாளர்களைப் பற்றியும் விரிவாகவே ஆராய்ச்சி செய்திருக்கிறான் என்பது அவனது தெளிவான நடுநிலையான ஆணித்தரமான பேச்சிலேயே பார்த்தசாரதியால் உணர முடிந்தது. “ரொம்ப சுவாரசியமா இருக்கு. ரிடையரான பிறகு இதைப் பத்தியெல்லாம் நிறைய படிக்கணும், தெரிஞ்சுக்கணும்னு நினைக்கிறேன்” என்று சொன்னார்.

’இது போல ரிடையர் ஆன பிறகு பிடித்தவற்றை செய்ய வேண்டும் என்று ஒதுக்கி வைத்த விஷயங்களை பெரும்பாலானவர்கள் செய்ய முடிவதே இல்லை. ஏனென்றால் அவர்கள் ரிடையர் ஆவதில்லை. ஒன்று முடியும் போது இன்னொரு வேலை அவர்களுக்குத் தயாராகக் காத்திருக்கவே செய்கிறது’ என்று நினைத்த ஈஸ்வர் அதை அவரிடம் வாய் விட்டுச் சொல்லவில்லை.

அவர் அபூர்வ சக்திகளை விட்டு விட்டு விஷயத்திற்கு வந்தார். “உங்க பெரிய தாத்தா இந்த சிவலிங்கத்துக்கோ, தனக்கோ ஏதாவது ஆகலாம்னு முதல்லயே தெரிஞ்சு வச்சிருந்த மாதிரி தோணுது. அப்படி ஏதாவது நடந்துட்டா உங்க கிட்ட சொல்லச் சொல்லி உங்க தாத்தா கிட்ட சொல்லியிருந்தாராம். அது ஏன்னு நீங்க நினைக்கிறீங்க?”

”எனக்கு அது ஏன்னு சரியா தெரியல...”

“உங்களுக்கு அந்த சிவலிங்கம் பத்தி முதல்லயே தெரிஞ்சிருந்ததா?”

*“அந்த சிவலிங்கம் பத்தி எங்கப்பா மூலமா நான் கேள்விப்பட்டிருந்தேன்.”*

*“உங்க அப்பா அந்த சிவலிங்கம் பத்தி என்ன சொன்னார்….”*

*”அந்த சிவலிங்கம் ஒளி விடுகிற மாதிரி ஒரு காட்சியை அவர் சின்ன வயதில் பார்த்திருக்கிறாராம்…”*

*பார்த்தசாரதி சந்தேகத்தோடு கேட்டார். ”ஆனா உங்க தாத்தாவோ, உங்க வீட்டுல வேற ஆள்களோ அது பத்தி ஒண்ணும் சொல்லவே இல்லையே. அது சாதாரண லிங்கம்கிற மாதிரி தான் அவங்க நினைக்கிறதா சொன்னாங்க…”*

*”அவங்க யாரும் அப்படி பார்க்கலை. அதே சமயத்துல அதைப் பார்த்தப்ப எங்கப்பாவும் சின்ன வயசுங்கறதால அவங்க அதை சீரியஸா எடுத்துக்கலைன்னு தோணுது….”*

*“உங்கப்பா பார்த்தது நிஜமாய் இருக்கும்னு நீங்க நினைக்கிறீங்களா?”*

*“ஆமா. நான் நம்பறேன். காரணம் எங்கப்பா ஒரு விஞ்ஞானி. சின்னதுல பார்த்தது ஒரு பிரமையா இருந்திருந்தா அவர் பிற்காலத்துலயாவது அதை உணர்ந்திருப்பார். அவர் கடைசி வரைக்கும் தான் பார்த்தது நிஜம்னு தான் சொன்னார். அவர் பார்த்தப்ப அவர் கூட தென்னரசுங்கற வேறொரு நண்பனும் இருந்தார். அவர் இப்போ இங்கே கல்லூரிப் பேராசிரியராக இருக்கார்.”*

*பார்த்தசாரதி தென்னரசு பற்றிய விவரங்களை ஈஸ்வரிடம் கேட்டு குறித்துக் கொண்டார். பிறகு தொடர்ந்து கேள்விகளைக் கேட்டார்.*

*"உங்கப்பா அமெரிக்கா போய் செட்டிலான பிறகு அவரோட பெரியப்பாவை எப்பவாவது வந்து சந்திச்சிருக்காரா? அந்த சிவலிங்கத்தைப் பார்த்திருக்காரா?"*

*"இல்லை"*

*"ஏன்?"*

*"எங்கப்பா காதல் கல்யாணம் செய்துகிட்டதுல அவரோட அப்பாவுக்கு உடன்பாடு இருக்கலை. அதனால அவருக்கும் இந்த குடும்பத்துக்கும் எந்த தொடர்பும் இருக்கலை. அதனால இந்தப் பக்கம் வரவே இல்லை..."*

*"நீங்க இந்தியா வரக் காரணம் உங்க பெரிய தாத்தா உங்க கிட்ட சொல்லச் சொன்னதா, இல்லை சிவலிங்கம் பத்தி முதல்லயே உங்க அப்பா சொன்னது மூலம் உங்களுக்கு ஏற்பட்டிருந்த ஆர்வமா?"*

*"ரெண்டுமேன்னு சொல்லலாம்"*

*அவன் சொல்லாத மூன்றாவது காரணமும் இருந்தது என்பதை அவனால் அவரிடம் சொல்ல முடியவில்லை. அவனுடைய அப்பாவின் ஸ்பெஷல் அப்பாவைப் பார்க்கவும் உள்மனதில் ஒரு ஆசை இருந்ததை அவனே இன்னும் அங்கீகரிக்க முடியவில்லை. பார்ப்பது மட்டுமல்ல, உறைக்கிற மாதிரி அவரிடம் நாலு வார்த்தை கேட்க வேண்டும் என்றும் தோன்றுவதை அவனால் ஏனோ தடுக்க*

*முடியவில்லை. அம்மாவின் அறிவுரை, அப்பா கடைசி வரை அவர் அப்பா மீது வைத்திருந்த பாசம் இரண்டுமே அவன் கோபத்தைக் குறைக்கவில்லை. என்ன தான் அவரை அலட்சியப்படுத்துவது போல நடந்து கொண்டாலும் உள்ளூர அவர் அவனைப் பாதித்துக் கொண்டு தான் இருந்தார். பார்த்தசாரதியின் கேள்வி கண நேரத்தில் அதையெல்லாம் நினைவுபடுத்த அவன் அந்த மூன்றாவது காரணத்தை பலவந்தமாக மறக்கப் பார்த்தான்.*

*பார்த்தசாரதி அவனிடம் சொன்னார். "வேலைக்காரன் முனுசாமி ஒரு நாள் ராத்திரி குடித்து விட்டு இங்கே வந்து எதையோ பார்த்து பயந்ததை உங்க கிட்டயும் சொல்லி இருப்பான்னு நினைக்கிறேன். அவன் பார்த்தது நிஜமாய் இருக்குமா இல்லை பிரமையா இருக்குமா?"*

*வேலைக்காரன் முனுசாமி இங்கே வந்து அவனிடம் பேசி விட்டுப் போனதை அவர் அறிந்து வைத்திருந்தது, இன்னமும் இந்த தோட்ட வீடும், முனுசாமியும் ரகசியமாய் போலீஸ் கண்காணிப்பில் இருப்பதை சுட்டிக் காட்டியது. அவன் அங்கு வந்த போது எந்த போலீஸ்காரரையும் பார்த்ததாய் நினைவில்லை....*

*அவன் சொன்னான். "நிஜமாய் இருக்கலாம்"*

*"அவன் பார்த்தது அந்த சித்தராக இருக்குமா?"*

*"இருக்கலாம். யாரோ ஒரு திருடனும் இங்கே வந்து பயந்து போனதையும் சொன்னான்.... அவன் என்ன பார்த்து பயந்தான்கிறது தெரியலை"*

பார்த்தசாரதி அவனிடம் சொல்லலாமா வேண்டாமா என்று யோசித்து விட்டு சொன்னார். ”அந்தத் திருடனைத் தேடிப் பிடித்து விசாரித்தேன். இப்ப அவன் கோயமுத்தூரில் செட்டில் ஆயிருக்கான். எத்தனையோ திருட்டு, ஜேப்படி எல்லாம் செய்திருக்கான். அதையெல்லாம் ஒத்துக்கறதுல அவனுக்கு எந்தப் பிரச்சினையும் இல்லை. ஆனா ஒரு நாள் ராத்திரி இந்த தோட்ட வீட்டுல அவன் என்ன பார்த்தான்னு சொல்றதுக்குள்ள ரொம்பவே திணறிட்டான்...” சொல்லி விட்டு சிரித்தார். இப்போதும் அந்தக் காட்சி அவர் கண் முன்னே நிற்கிறது....

**************

கோயமுத்தூரில் ஒரு சேரிப்பகுதியில் குடியிருந்த கந்தன் விசாரணைக்காக அவர் அங்கே போன போது பெரிதாய் கலங்கி விடவில்லை. எந்தக் கேஸுக்காக அவர் வந்திருக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ளத் தான் முதலில் ஆவல் காட்டினான். பல குற்றங்கள் செய்திருந்த அவனுக்கு மாட்டிக் கொண்டது எதில் என்பதை அறிந்து அதற்காகத் தன்னை ஆயத்தப்படுத்திக் கொள்ள அவன் நினைத்தான். ஆனால் அவர் வந்த நோக்கம் தெரிந்தவுடன் அவன் முகம் வெளுத்தது. தர்மசங்கடத்துடன் அவன் நெளிந்தான். அவன் மனைவி வந்து சொன்னாள். “அதை நான் அந்த நாள்ள இருந்தே கேட்டுகிட்டிருக்கேன் சார். வாயே திறக்க மாட்டேன்கிறார்...”

கந்தன் மனைவியை எரித்து விடுவது போல பார்த்தான். ”போ புள்ள உள்ளே”

அவள் அவனை முறைத்தபடியே உள்ளே போனாள். “அந்தப் பெரியவர் கிட்ட மந்திரிச்ச விபூதி வாங்கிட்டு வர்றதுக்கு மட்டும் நான் வேணும். அங்கே என்ன நடந்ததுன்னு மட்டும் என் கிட்ட சொல்ல மாட்டீங்களாக்கும்”

*கந்தன் 'உன்னைப் பிறகு கவனித்துக் கொள்கிறேன்' என்பது போல மனைவியைப் பார்த்து விட்டு பார்த்தசாரதியிடம் சொன்னான். "சத்தியமா அங்க ஒண்ணும் நடக்கல ஐயா. ஏதோ காத்து கருப்பு இருந்திருக்கும் போல இருக்கு. அது எனக்கு ஒத்துக்கலை. காய்ச்சல் வந்துடுச்சு. அவ்வளவு தான்"*

*"அங்கே திருடறதுக்கு என்ன இருக்குன்னு போனே கந்தா?"*

*"அந்தப் பெரியவரு பெரிய பணக்காரரோட அண்ணாரு. பெரிய தோட்டத்துக்கு நடுவுல வீடு இருக்கு. அதனால ஏதாவது திருடறதுக்கு இருக்கும்னு போனது என்னவோ வாஸ்தவம். ஆனா அங்க எதுவுமே இருக்கலைங்களய்யா. அங்கத்த விட என் வீட்டுல சாமான் ஜாஸ்தியா இருக்கும்..." அவன் சொல்கையில் அவனுக்கு கோபம் லேசாக வந்து போனது. பணக்காரர் வீட்டிலேயே திருட எதுவும் கிடைக்கவில்லை என்பது அவமானகரமான விஷயம் என்பது போல அவன் பேசினான்.*

*"சரி பயந்தது எதற்கு. அதைச் சொல்லு முதல்ல"*

*அவன் மறக்க நினைக்கும் விஷயத்தை அவர் கட்டாயப்படுத்திக் கேட்டது அவனுக்கு எரிச்சலாக இருந்தது. "அதான் சொன்னேனுங்களே. ஒண்ணும் பார்க்கலைங்க. ஏதோ காத்து கருப்பு இருந்துருக்கும் போல இருக்கு...." என்று பழைய பல்லவிக்கு அவன் வந்த போது அவர் அவனை இடைமறித்து அமைதியாக சொன்னார்.*

*"அந்த நாள் அந்தப் பெரியவர் உன்னைப் பார்த்து மிரட்டினாரு. பயந்து போய் கொஞ்ச நாள் காய்ச்சலாய் படுத்ததை அவமானமா*

நினைச்சு நீயும் உன் கூட்டாளியும் போய் அவரைக் கொன்னிருக்கலாம். அதுக்குப் பிறகு அந்தக் கூட்டாளிக்கும் உனக்கும் நடுவுல வந்த பிரச்சினையில நீ அவனையும் கொன்னுட்டு எஸ்கேப் ஆயிட்டேன்னு போலீஸ்ல நினைக்கிறாங்க. அந்த சிவலிங்கத்தை திருடி நீ எங்கே விற்றாய்னு மட்டும் தெரிஞ்சுதுன்னா நாங்க இந்த கேஸை முடிச்சுடுவோம்....”

“ஐயா. உங்க கற்பனைக்கு எல்லையே இல்லையா. ரெண்டு கொலைப்பழியை என் மேல போடுறீங்களே..” என்று பதறிய கந்தன் அவர் காலில் தடாலென்று விழுந்தான்.

”சரி சொல்லு. அங்கே என்ன நடந்தது. என்ன பார்த்தாய்?”

அவன் அதற்குப் பிறகு சொல்லத் தயங்கவில்லை. சொல்லி இவரை அனுப்பி விடா விட்டால் மேலும் பல கொலைகளுக்கு அவனைக் காரணமாக அவர் சொன்னாலும் சொல்வார் என்று நினைத்தான்.

“அது ஒரு சிவராத்திரிங்கய்யா. நான் நடுநிசிக்காட்சி ஒண்ணு பார்த்துட்டு அந்தப் பக்கம் வந்தேன். ரெண்டு மூணு நாளா ரொம்பவே டல்லாய் இருந்ததால அந்தத் தோட்ட வீட்டுல கண்டிப்பாய் ஏதாவது கிடைக்கும்கிற நம்பிக்கைல சுவர் ஏறி குதிச்சு உள்ளே போனேன். அந்த தோட்டத்துலயே ஒரு மாதிரியா இருந்துதுங்கய்யா. அப்பவே திரும்பி இருக்கணும். செய்யல. வீட்டுக்குள்ள அந்த அர்த்த ராத்திரியிலயும் வெளிச்சம் தெரிஞ்சது. ஆனாலும் போனேன். வெளியில ஜன்னல் வழியா பாத்தேன்....”

சொல்லும் போது அவனுக்கு உடல் லேசாக நடுங்கியது. ”ஹால்ல யாரும் இருக்கலைங்கய்யா. ஆனா பூஜை ரூம்ல

*சிவலிங்கத்த சுத்தி மூணு பேரு உக்காந்திருந்தாங்க. ரெண்டு பேர் முதுகு மட்டும் தெரிஞ்சுது. ஒருத்தர் மட்டும் நான் முகம் பார்க்கற மாதிரி உக்கார்ந்திருந்தார். அந்த ஆள் என்னைப் பாத்தாருங்கய்யா.... அவர் கண்ணுல நான் தீயை பாத்தேனுங்க...."*

*முனுசாமியின் அனுபவமே இவன் அனுபவமும் என்று புரிந்த பார்த்தசாரதி சொன்னார். "அதை பார்த்து நீ பயந்துட்டியாக்கும்"*

*கந்தன் எச்சிலை முழுங்கிக் கொண்டு சொன்னான். "அது மட்டும் பார்த்திருந்தா பரவாயில்லைங்களே.... அடுத்த நிமிஷம்...அடுத்த நிமிஷம்..."*

*"அடுத்த நிமிஷம் என்ன?"*

*அவன் உடல் அதிகமாக நடுங்க ஆரம்பித்தது. "... அந்த ரூமே ஜெகஜோதியாய் ஜொலிக்க ஆரம்பிச்சுது. சிவலிங்கமும் தெரியல. ஆளுகளும் தெரியல.... எல்லாமே நெருப்பாய் ஜொலிச்சதுங்கய்யா. ....திடீர்னு எனக்குள்ளே எதுவோ புகுந்த மாதிரி இருந்துச்சு... அது என்னன்னு முதல்ல தெரியல.... ஆனா உடம்பெல்லாம் எரிய ஆரம்பிச்சுடுச்சுங்கய்யா. பிறகு அந்த தீ ஜுவாலை தான் எனக்குள்ள புகுந்த மாதிரி இருந்துச்சு. அந்த இடத்துல நின்னா நான் செத்து சாம்பலாயிடுவேன்னு தோண ஆரம்பிச்சுது. எடுத்தேன் ஓட்டம். எப்படி எங்க வீட்டுக்கு வந்து சேந்தேன்னு இன்னைக்கு வரைக்கும் தெரியலங்கய்யா. அந்த தோட்ட வீட்டுல இருந்த அளவு பெரிய ஜுவாலை அளவு இல்லாட்டாலும் சின்னதாய் ஏதோ ஒரு தீ உள்ளே ஒட்டிகிட்டு இருந்த மாதிரியே இருந்துச்சு. உடம்பு நெருப்பா கொதிக்க ஆரம்பிச்சுது... பைத்தியம் பிடிச்ச மாதிரி இருந்துச்சுங்கய்யா. எனக்கு செத்துப் போனா பரவாயில்லன்னு கூட தோண ஆரம்பிச்சுதுங்க. இவ போய் அந்த பெரியவர் குடுத்த விபூதியக் கொண்டு வந்து பூசின பிறகு தான் அந்த தீ உள்ளே*

*அணைஞ்ச மாதிரி இருந்துச்சுய்யா. அதுக்கு பின்னாடி தான் என்னால தூங்கவே முடிஞ்சுது. ஒரு நாள் முழுசும் தூங்கிட்டே இருந்தேன்ய்யா....”*

*சொல்லி முடிக்கையில் அவன் தொப்பலாய் நனைந்திருந்தான். அந்தத் தீயின் நினைவே அவனை அப்போதும் சுட்டது போல் இருந்தது.*

# <u>*அத்தியாயம் - 32*</u>

*கந்தனின் அனுபவத்தை ஈஸ்வரிடம் சொல்லி விட்டு பார்த்தசாரதி “நீங்க என்ன நினைக்கிறீங்க?” என்று கேட்டார். அவர் அவன் அபிப்பிராயத்தைப் பெரிதும் மதித்தார். நல்ல புத்திசாலி, இது போன்ற விஷயங்களை ஆராய்ச்சி செய்து வருபவன், விருப்பு வெறுப்பு இல்லாமல் அலசக் கூடியவன் என்பதெல்லாம் அவன் கருத்துகள் மீது நல்ல மதிப்பை அவருள் ஏற்படுத்தி இருந்தது.*

*”எல்லாமே சுவாரசியமா இருக்கு” என்றான் ஈஸ்வர்.*

*“நிஜமாவே அவன் அந்தக் காட்சியைப் பார்த்திருந்தால் முனுசாமியும் அவனும் பார்த்தது அந்த சித்தரைத்தான்னு வச்சிக்கலாமா?”*

*“அப்படித் தான் தோணுது”*

*”அந்த மூணாவது ஆள் யாராய் இருக்கும்? அந்த ஆளும் ஒரு சித்தரா இருப்பாரோ?”*

*எல்லாக் கேள்விகளுக்கும் அவனிடம் பதில் இருக்கும் என்பது போல் அவர் கேள்விகள் கேட்பது அவனுக்கு வேடிக்கையாய் இருந்தது. "தெரியலை" என்றான்.*

*"அந்த சிவலிங்கம் பத்தி கூடுதலா ஏதாவது தெரிஞ்சா மேற்கொண்டு துப்பு துலக்கறது சுலபமாய் இருக்கும்...." என்று ஏதோ யோசித்தபடியே பார்த்தசாரதி சொன்னார்.*

*ஈஸ்வருக்கு அந்த சிவலிங்கம் பற்றி படித்த அந்த தாள் பற்றி சொன்னால் என்ன என்று தோன்றியது. மேற்கொண்டு துப்பு துலக்குவதற்கு அது உதவலாம். ஆனால் அதைச் சொன்னால் கண்டிப்பாக அந்தத் தாளை அவர் கேட்பார். தந்தால் அது திரும்பக் கிடைப்பது கஷ்டம். வழக்குக்கு வேண்டிய முக்கிய ஆவணம் என்று அவர் வைத்துக் கொண்டால் ஒன்றும் செய்ய முடியாது. தகவலையும் தெரிவிக்க வேண்டும், அந்தத் தாளையும் தரக்கூடாது, அதற்கு என்ன செய்யலாம் என்று யோசித்து அவன் சாமர்த்தியமாக சொன்னான்.*

*"ஆன்மிக பாரதம் (Spiritual India) என்கிற பழைய புத்தகத்தில் விசேஷ மானஸ லிங்கம்னு சித்தர்கள் பூஜித்து வந்த சக்தி வாய்ந்த சிவலிங்கம் இந்தியாவில் இருக்கிறதை படிச்சதாக எங்கப்பா கிட்ட யாரோ ஒரு நண்பர் எப்பவோ சொன்னாராம். அந்த சிவலிங்கமும், இந்த சிவலிங்கமும் ஒன்றாய் இருக்குமோன்னு எங்கப்பா சந்தேகப்பட்டார்..."*

*விசேஷ மானஸ லிங்கம் என்ற பெயரை இரண்டு முறை சொல்லிப் பார்த்துக் கொண்ட பார்த்தசாரதி ஆவலுடன் கேட்டார். "அது ஆங்கில புத்தகமா, இல்லை தமிழ் புத்தகமா?"*

*”ஆங்கிலம்னு தான் நினைக்கிறேன்”*

*“எழுதின ஆள் பெயர் ஏதாவது அந்த நண்பர் சொன்னாரா?”*

*ஈஸ்வர் ஆழமாய் யோசிக்கிற மாதிரி நடித்தான். பின் சொன்னான். “நீலகண்ட சாஸ்திரின்னு சொன்ன மாதிரி ஞாபகம்...”*

*”எந்த வருஷம் எழுதினது, பிரசுரம் செய்தது யார்ங்கிறது தெரியுமா?”*

*ஈஸ்வர் உண்மையாகச் சொன்னான். “தெரியலை”*

*பார்த்தசாரதி விசேஷ மானஸ லிங்கம், ஆன்மிக பாரதம், நீலகண்ட சாஸ்திரி என்று குறித்துக் கொண்டார். பின் கேட்டார். “பின் ஏன் நீங்கள் இதைப்பத்தி முதல்லயே சொல்லலை”*

*”அந்த புத்தகத்துல சொல்லி இருக்கற சிவலிங்கமும், இந்த சிவலிங்கமும் ஒண்ணு தானான்னு அப்பாவுக்கே குழப்பமா இருந்தது. இருக்கலாம்னு சந்தேகப்பட்டார் அவ்வளவு தான்... சரியா தெரியாததை ஏன் சொல்வானேன்னு நினைச்சேன்....”*

*பார்த்தசாரதி ஒன்றும் சொல்லவில்லை. அவன் சொன்னது போல் இந்த சிவலிங்கம் நீலகண்ட சாஸ்திரி தன் புத்தகத்தில் எழுதிய விசேஷ மானஸ லிங்கம் என்ற பெயர் பெற்றதாக இருந்தால் அதை வைத்து மேலும் பல தகவல்களைப் பெற்று விட முடியும் என்று நினைத்தார்.*

“நெட்டுல அந்த புத்தகம் பத்தியோ, ஆசிரியர் பத்தியோ தேடிப் பார்த்திருக்கீங்களா?”

நேற்று இரவு முழுவதும் அவன் மணிக்கணக்கில் தேடிப்பார்த்திருக்கிறான். ஒரு பயனும் இல்லை. அவன் சொன்னான். “அமெரிக்கால இருக்கறப்பவே தேடிப்பார்த்திருக்கேன். பிரபலமான புத்தகம் இல்லை போல இருக்கு. நீலகண்ட சாஸ்திரின்னு தேடினா கே.ஏ. நீலகண்ட சாஸ்திரின்னு ஒருத்தர் பெயர் தான் அதிகமா நெட்டுல இருக்கு. அவர் வரலாற்று நூல்கள் நிறைய எழுதியிருக்கார். சோழர்கள் காலம், தென்னிந்தியா பத்தியெல்லாம் நிறைய எழுதியிருக்கார். ஆனா ஆன்மிக பாரதம் பேர்ல எதுவும் எழுதினதா குறிப்பு இல்லை. அதனால இந்த நீலகண்ட சாஸ்திரி வேற ஆளா தான் இருக்கணும்...”

பார்த்தசாரதி சொன்னார். “அதை என் கிட்ட விடுங்க. எங்க டிபார்ட்மெண்ட்ல சிலர் கிட்ட சின்ன நூல் முனை அளவு தகவல் கிடைச்சாலும் அதை வச்சு அவங்க மொத்த விஷயத்தையும் தோண்டி எடுத்துடுவாங்க. அதனால நான் பார்த்துக்கறேன்.... உங்களுக்கு வீட்டுக்குள்ளே போய் பார்க்கணும்கிற ஆவல் இருக்கா?”

ஈஸ்வர் சொன்னான். “இருக்கு. ஆனா பூட்டி வச்சிருக்கீங்களே”

“சாவி என் கிட்ட இருக்கு. வாங்க பார்க்கலாம்....” என்ற பார்த்தசாரதி அவனை அழைத்துச் சென்றார். போகும் போது சொன்னார். “எதையும் தொடாமல் பாருங்க. ரேகைகள் எல்லாமே எடுத்தாச்சுன்னாலும் விடுபட்டுப் போனது எதோ இருக்குங்கற மாதிரி ஒரு எண்ணம் எனக்கு தொடர்ந்து இருக்கு. அதனால தான் இன்னும் பூட்டியே வச்சிருக்கேன்....”

அவன் சரியென்றான். செருப்பை வெளியே கழற்றி விட்டு அந்த வீட்டினுள் நுழையும் போது அவனுக்கு மிகவும் பரபரப்பாக இருந்தது. முனுசாமி அவனிடம் சொன்னது போல அந்த வீடு ஒரு கோயிலைப் போல் தான் இருந்து வந்திருக்கிறது. அறுபது வருடங்களாக அந்த சிவலிங்கம் இருந்த இடத்தில் கண்டிப்பாக அந்த சக்தி அலைகள் இருக்கும் என்பதில் அவனுக்கு சந்தேகமில்லை.

அவனுக்கு முன்பே செருப்போடு நுழைந்திருந்த பார்த்தசாரதி அவனைப் பார்த்து மீண்டும் வெளியே சென்று செருப்பை கழற்றி விட்டு வந்தார். அவரைப் பொருத்தவரை அது கொலை நடந்த 'சம்பவ இடம்'. ஆனால் அவனைப் பொருத்த வரை அது சிவலிங்கம் பூஜிக்கப்பட்டு வந்த புனித இடம். எனவே அவன் உணர்வுக்கு மதிப்பு தரத் தோன்றியது.

ஈஸ்வர் ஒரு குழந்தையின் ஆர்வத்தோடு அந்த வீட்டினுள் சுற்றிப் பார்த்தான். ஹாலில் பசுபதி இறந்து கிடந்த இடத்தை சாக்பீசால் குறித்து வைத்திருந்தார்கள். ஹால், சமையலறை, படுக்கையறை என ஒவ்வொரு இடமாய் சென்று பார்த்தான். அந்தத் திருடன் குறைபட்டுக் கொண்டதில் தவறே இல்லை என்று தோன்றியது. விலை உயர்ந்த பொருள் என்று அங்கு எதுவுமே இருக்கவில்லை. எல்லாம் அடிப்படைத் தேவைகளுக்கான விலை குறைந்த, விலை போகாத பொருள்களாகவே இருந்தன.

பூஜையறைக்குள் நுழைந்தான். எல்லோரையும் குழப்பிய தேவார, திருவாசக, ஸ்தோத்திர புத்தகங்கள் ஒரு ஓரமாக அடுக்கப்பட்டிருந்தன. பெரிதாய் இரண்டு விளக்குகள், விளக்குத்திரிகள், எண்ணெய் பாட்டில், தீப்பெட்டி, கற்பூர டப்பா இருந்தன. துடைக்கும் துணி ஒன்றும் இருந்தது. எல்லாம் சாதாரணமாய் ஒரு பூஜை அறையில் இருக்கக்கூடியவையே. அவனுக்குப் புதியதாய் தகவல் தரக்கூடிய ஏதோ ஒன்று

*அங்கிருக்காதா என்று மிகவும் கவனமாய் அந்த அறையை அலசினான். அப்படி எதுவும் இருக்கவில்லை....*

*பார்த்தசாரதியைப் பார்த்து ஈஸ்வர் கேட்டான். "இங்கே நான் கொஞ்ச நேரம் கண்ணை மூடிட்டு உட்கார்ந்துக்கலாமா?"*

*"தாராளமா"*

*அவன் அங்கே சுவரை ஒட்டினாற்போல் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்து கொண்ட பின் பார்த்தசாரதி அவனையே சுவாரசியத்துடன் பார்த்துக் கொண்டு நின்றார். 'தியானம் செய்கிறானா என்ன?'*

*உண்மையில் ஈஸ்வர் அங்கு நிலவி இருந்த அலைகளை உணர முயன்று கொண்டிருந்தான். மூன்று நிமிடங்களில் அவன் மனம் ஓரளவு அமைதியாகியது. வார்த்தைகளில் அடங்காத ஒரு பேரமைதியை அவன் உணர ஆரம்பித்தான். அவ்வப்போது அந்தரத்தில் தொங்கினாற்போல் காட்சி தந்து அவனைத் திகைக்க வைத்த சிவலிங்கம் அது அறுபது வருடங்களாக இருந்த இடத்தில் அவன் அமர்ந்திருக்கையில் ஏனோ அவனை எந்தத் தொந்திரவும் செய்யவில்லை. உண்மையில் அவன் அந்த சிவலிங்க தரிசனத்தை அங்கே எதிர்பார்த்தான் என்று கூட சொல்லலாம். ஆனால் ஆரம்பத்தில் பேரமைதி மட்டும் அவனை சூழ்ந்தது. அவன் காலத்தை மறந்தான்....*

*பார்த்தசாரதிக்கு அவனைப் பார்க்கும் போது சிறிது ஆச்சரியமாகத் தான் இருந்தது. அவனுடைய அழகான முகத்தில் தெரிந்த அமைதி அவர் அஜந்தா குகைகளில் பார்த்த ஒரு புத்தரை நினைவுபடுத்தியது. அமெரிக்காவில் வளர்ந்த பையன் இந்த அளவு*

*தியானத்தில் ஆழப்பட முடிவது பெரிய விஷயம் தான் என்று நினைத்துக் கொண்டார். அவரும் பல தடவை முயற்சி செய்திருக்கிறார். ஒவ்வொரு தடவை தியானம் செய்ய உட்காரும் பொழுதும் நூற்றுக் கணக்கான விஷயங்கள் என்னைக் கவனி, என்னைக் கவனி என்று படையெடுத்து வந்து மனதை ஆக்கிரமிக்க ஆரம்பித்தனவே ஒழிய தியானம் என்னவோ அவருக்கு கைகூடினதே இல்லை.....*

*ஈஸ்வர் அனுபவித்து வந்த அமைதியினூடே திடீர் என்று சிவலிங்கம் தத்ரூபமாக அவன் எதிரில் அந்தரத்தில் காட்சி அளித்தது. சிவலிங்கத்தில் இருந்து ஒரு கண் திறந்து அவனைப் பார்த்தது. பின்னணியில் வேத கோஷம் கேட்டது.*

*ஓம் பூர்ண மதப் பூர்ண மிதம்*<br>*பூர்ணாத் பூர்ண முதச்யதே*<br>*பூர்ணஸ்ய பூர்ணமாதாயப்*<br>*பூர்ண மேவா வசிஷ்யதே*<br>*ஓம் சாந்தி சாந்தி சாந்திஹி*

*சில வினாடிகள் நீடித்த அந்தக் காட்சி வந்தபடியே திடீர் என்று மறைந்தது. அவனுக்கு மயிர்க்கூச்செரிந்த்து. குப்பென்று வியர்த்தது. அவன் கண்களைத் திறந்தான்.*

*அவனையே பார்த்துக் கொண்டிருந்த பார்த்தசாரதி கேட்டார். "என்ன ஆச்சு?"*

*அவன் தன் அனுபவத்தை அவரிடம் சொல்லவில்லை. "ஒரு அழகான மன அமைதியை நான் அனுபவிச்சேன்..."*

*”உங்களுக்கு தியானம் இவ்வளவு சுலபமா வருமா?”*

*“சுலபமாவா? எனக்கா? இது வரைக்கும் இப்படி வந்ததில்லை. முதல் தடவையா இங்கே தான் இப்படி ஒரு அனுபவம் கிடைச்சிருக்கு” ஈஸ்வர் உண்மையைச் சொன்னான்.*

*”அப்படின்னா இந்த இடத்தோட மகிமை தான் அதுன்னு சொல்றீங்களா?”*

*“ஆமா. அறுபது வருஷமா ஆத்மார்த்தமா எந்த கள்ளங்கபடமும் இல்லாம இந்த இடத்துல சிவலிங்கத்தை வச்சு அந்தப் பெரியவர் பூஜை நடத்தி இருக்கார். அந்த தியான அலைகள் இங்கே நிறையவே இருக்கு. அதனால தான் இங்கே எனக்கு தியான மனநிலை சீக்கிரமாவே வந்ததுன்னு நினைக்கிறேன்.”*

*”ஆனா எனக்கு இங்கே எந்த ஒரு தியான மனநிலையும் வரலையே”*

*“ஒவ்வொருத்தனும் எதைத் தேடிட்டு போறானோ அதுக்கேத்த மாதிரி தான் அவன் அனுபவமும் அமையுது சார். நீங்க இங்கே போலீஸ்காரரா தான் வந்திருக்கீங்க. அதனால உங்களுக்கு எதாவது தடயம் இங்கே கிடைக்கலாமே ஒழிய இந்த மாதிரி தியான அனுபவம் கிடைக்காது....”*

*அவனது வார்த்தைகள் அவரை யோசிக்க வைத்தன. அவர் சிறிது மௌனமாக இருக்க அவனும் சற்று முன் மனக்கண்ணில் அந்தரத்தில் சிவலிங்கம் தோன்றிய விதத்தையும் ஒரு கண் திடீர் என்று திறந்து அவனைப் பார்த்த விதத்தையும், பின்னணியில் கேட்ட வேத கோஷத்தையும் பற்றி யோசிக்க ஆரம்பித்தான். கண் (நெற்றிக்*

*கண்ணாக இருக்குமோ?) திறந்ததும், வேத கோஷமும் அவனுக்குப் புதிதான அனுபவங்கள். இதன் அர்த்தம் என்னவாக இருக்கும் என்று அவன் யோசித்தான். ஆனால் அவன் மனக்கண்ணில் அந்த சிவலிங்கத்தைப் பார்த்து வேத கோஷம் கேட்ட அதே நேரத்தில் அந்த வேத பாடசாலையில் ”ஓம் பூர்ண மதப் பூர்ண மிதம்...” என்ற சுலோகத்தை மாணவர்கள் சேர்ந்து உச்சஸ்தாயியில் சொல்லிக் கொண்டு இருந்ததையும் அதை சிவலிங்கம் முன்பு அமர்ந்தபடி கணபதி ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்ததையும் அவன் அறிய மாட்டான்...*

**************

*அந்த மனிதன் சிலமணி நேரங்களாகவே ஒரு அசௌகரியத்தை உணர்ந்து கொண்டிருந்தான். வாய்விட்டுச் சொல்ல முடியாத பிரச்சினையில் தனியாகத் தவிப்பது ஒரு கொடுமையான அனுபவம் என்று தோன்றியது. குருஜியை உடனடியாக சந்தித்து அந்தத் தகவலைச் சொல்ல முடியாதது அவனுக்கு தலையை வெடிக்கச் செய்து விடும் போல் தோன்ற வைத்தது. தன்னுடைய சகாவிடம் தன் எண்ணங்களை எல்லாம் சொல்ல அவனுக்கு முடியவில்லை. அதற்கு முக்கிய காரணம் சகாவினுடைய அறிவுகூர்மைக்கு சில விஷயங்கள் எட்டாது என்பது தான். எல்லாம் கேட்டு விட்டு அடிப்படை விஷயங்களிலேயே சந்தேகம் கேட்கக் கூடியவன் அவன். அதனால் அவனிடம் சிக்கலான, ஆழமான விஷயங்களைப் பேசக்கூடாது என்பதை அவன் என்றோ கற்றுக் கொண்டிருந்தான்.....*

*செல்போன் அவன் சிந்தனைகளைக் கலைத்தது. ஜான்சனின் நம்பர். பரபரப்புடன் எடுத்தான். ”ஹலோ”*

*”என்ன ஆச்சு குருஜிக்கு. நான் அவரைக் கூப்பிட்டால் ஸ்விட்ச்டு ஆஃப் மெசேஜ் தான் வருகிறது”*

*”அவர் தனிமைல இருக்கார். பூகம்பமே வந்தாலும் அவரைத் தொந்தரவு செய்ய வேண்டாம்னு சொல்லி இருக்கார். சாப்பாடு கூட வேண்டாம்னு சொல்லி இருக்கார். யாரும் மறந்து கூட தொந்திரவு செய்துடக் கூடாதுன்னு வீட்டுக்கு வெளியே காவலுக்கு ஒரு தடியனை வேற நிறுத்தி இருக்கார். அவன் அந்த வீட்டுக்கு நூறடி தூரத்துலயே எல்லாரையும் நிறுத்தி அப்படியே அனுப்பிச்சுடறான்...”*

*“என்ன திடீர்னு...?”*

*“நாளைக்கு அவர் சிவலிங்கத்தைப் பார்க்கப் போகப் போகிறார்...”*

*ஜான்சன் பரபரப்பானார். “அப்படியா வெரி குட். ஆமா அவர் வீட்டுக்குள்ளே என்ன செய்துட்டு இருக்கார்னு எதாவது ஐடியா இருக்கா?”*

*”இல்லை...”*

*“மத்தபடி எல்லாம் நல்லபடியா தானே போயிட்டிருக்கு...”*

*”அப்படி நல்லபடியா போக சிவலிங்கம் விடற மாதிரி தெரியலை.”*

*“என்ன ஆச்சு?”*

*“அந்த ஈஸ்வர் வேதபாடசாலைக்கு வரப் போறதா தகவல் வந்திருக்கு. யாரோ அவன் நண்பன் போய் பார்த்துட்டு வரச் சொன்னானாம்....”*

*ஜான்சன் ஒரு நிமிடம் பேச்சிழந்தார். பின் படபடப்புடன் கேட்டார். ”எப்ப வர்றானாம்?”*

*”அது தெரியலை. எப்ப வேணும்னாலும் வரலாம். இதை குருஜி கிட்ட சொன்னா எப்படி சமாளிக்கிறதுங்கறதை அவர் பார்த்துக்குவார். ஆனா அவரை இப்போதைக்கு பார்க்க முடியாதுங்கறது தான் பிரச்சினையே....”*

*ஜான்சன் சொன்னார். “என்ன ஆனாலும் சரி அந்த சிவலிங்கத்தையோ, கணபதியையோ அவன் பார்த்துடாம பார்த்துக்கோங்க. அதே மாதிரி அவனுக்குக் கொஞ்சமும் சந்தேகம் வராமல் பார்த்துக்குங்க. அவன் எமகாதகன். ஜாக்கிரதை....”*

*முதலிலேயே உணர்ந்து வந்த அசௌகரியம் ஜான்சனின் எச்சரிக்கையால் இப்போது வளர்ந்து பெரிதாகி விட அன்றிரவெல்லாம் அந்த மனிதன் உறங்காமல் விழித்திருந்தான். அவன் மூளை ஓவர் டைம் வேலை செய்ய ஆரம்பித்தது.*

# <u>அத்தியாயம் - 33</u>

*பார்த்தசாரதி ஈஸ்வரைக் கேட்டார். ”பெரியவர் பல வருஷமா சிவலிங்கத்தை வச்சு பூஜை செய்துகிட்டு தியானத்துல ஈடுபட்டதால இங்கே தியான அலைகள் இருக்குன்னு சொன்னீங்க. அதை நீங்க இங்கே உணர்ந்ததாவும் சொன்னீங்க... இங்கே கொலையும்*

நடந்திருக்கு. கொலைகாரனும் வந்து போயிருக்கான். சிவலிங்கத்தை கடத்தினவங்களும் வந்து போயிருக்காங்க. அவங்க இருந்தது இங்கே கொஞ்ச நேரம் தான்னாலும் அவங்க சம்பந்தப்பட்ட அலைகள் இங்கே இருக்காதா?"

ஈஸ்வர் சொன்னான். "கண்டிப்பா இருக்கும்...."

"உங்களால அந்த அலைகளை கண்டு பிடிக்க முடியாதா?"

ஈஸ்வர் பொறுமையாகச் சொன்னான். "அதுக்கேத்த மாதிரி சென்சிடிவிட்டி இருக்கிற ஆட்களால அது கண்டிப்பா முடியும். நாய்க்கு மோப்ப சக்தி இருக்கற மாதிரி சில பேருக்கு சில நெகடிவ் அலைகளை கிரஹிச்சு சொல்ற சக்தி இருக்கும். அவங்களால அதை வச்சு ஏதாவது தகவல்கள் சொல்ல முடியும். எனக்கு அந்த வகையான சென்சிடிவிடி இல்லாததால் சொல்ல முடியாது...."

அமெரிக்காவிலேயே பிறந்து வளர்ந்த ஈஸ்வர் இது போன்ற விஷயங்களில் நம்பிக்கை வைத்திருப்பது கூட அவருக்கு இன்னமும் ஆச்சரியமாகத் தான் இருந்தது.

அதைப் புரிந்து கொண்டது போல புன்னகைத்தபடி ஈஸ்வர் விளக்கினான். "சார். சில கோயில்களுக்கோ, மகான்கள் இருக்கும் இடத்துக்கோ போறப்ப சில சமயங்கள்ல அங்கே நம்மையும் அறியாம நாம ஒரு விதமான அமைதியை உணரலாம். சில வீடுகளுக்குள்ளே நுழையறப்பவே ஏதோ ஒரு அசௌகரியத்தை சில சமயம் உணரலாம். அங்கே இருக்கிற மனிதர்களோட மோசமான குணங்கள், தினசரி நடக்கற சண்டை சச்சரவுகள், கொடுமைகள் எல்லாம் சேர்ந்து நமக்கு அந்த விதமான அனுபவத்தை தரும். அங்கே இருந்து சீக்கிரமா வெளியே

போயிட்டா தேவலைன்னு தோணும். சில பேர் நம்ம பக்கத்துல வந்தாலே காரணம் இல்லாமலேயே கொஞ்சம் விலகத் தோணலாம், அவங்களைப் பிடிக்காமல் போகலாம். அதுக்குக் காரணம் நம்ம அலைகளுக்கும் அவங்க அலைகளுக்கும் ஒத்துப் போகாம இருக்கறது தான் காரணம். இந்த மாதிரி நேரங்கள்ல நமக்கு ஏற்படற உணர்வுகள் காரணம் புரியாததால நாம் அப்படியே விட்டுடறோம். ஆனா உண்மைல இந்த மாதிரி அலைகள் அந்த இடங்களைச் சுத்தியும் மனுசங்களை சுத்தியும் இருக்குங்கறது தான் காரணம். இது சாதாரண மனுஷங்களுக்கு ஏற்படற அனுபவங்கள். கொஞ்சம் சென்சிடிவிடி அதிகமா இருக்கற ஆள்களுக்கு அவங்களோட சென்சிடிவிடி தன்மையப் பொறுத்து அதிகமான தகவல்கள் கிடைக்கும்..”

அவன் சொன்னது அறிவுபூர்வமாகவே அவருக்குப் பட்டது. சுவாரசியத்துடன் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

அவன் சொன்னான். “அமெரிக்கால கூட சில சமயங்கள்ல துப்பு துலக்கவே முடியாத கேஸ்கள்ல எதாவது துப்பு கிடைக்குமான்னு சில போலீஸ்காரங்க சில குறி சொல்ற ஆள்கள் கிட்ட போகறதுண்டு. அவங்க எல்லாருமே சரியா உபயோகமான தகவல்கள் கொடுப்பாங்கன்னு சொல்ல முடியாட்டியும் அப்படி ஒண்ணு ரெண்டு பேர் சொன்ன சில தகவல்கள் உண்மைகளைக் கண்டுபிடிக்க உதவி இருக்கு. அது ரொம்பக் கம்மியான சதவீதம்னே வச்சுகிட்டா கூட அதை அலட்சியப்படுத்த முடியாது இல்லையா. அப்படி ஒரு சக்தியும் இல்லாட்டி ஒரு கேஸ்ல கூட சரியான தகவல் கிடைச்சிருக்கக் கூடாது இல்லையா.”

அவன் சொன்னதை நம்ப அவருக்கு சிரமமாகத் தான் இருந்தது. அவன் சொன்னான். “இதுக்கு எல்லாம் ஆதாரம் இருக்கு.

இந்த மாதிரி சில ஆதாரபூர்வமான சம்பவங்கள் பத்தி தமிழ்ல "ஆழ்மனதின் அற்புத சக்திகள்" புத்தகத்துல கூட தந்திருக்காங்க"

பார்த்தசாரதி கேட்டார். "அப்படின்னா இந்த கேஸ்ல கூட அந்த மாதிரி ஆள்களை வச்சு கேட்கலாமா?" ஆர்வத்தில் சொல்லி விட்டாரே ஒழிய உண்மையில் அப்படி சொன்னது அவருக்கே ஒருமாதிரியாக இருந்தது. 'ஒரு அறியாமையான மூடநம்பிக்கையான செயலில் நாமே இறங்குவதா' என்ற கூச்சம் ஏற்பட்டது.

ஆனால் அவனிடம் எந்த தயக்கமோ சந்தேகமோ இருக்கவில்லை. அவன் சொன்னான். "அமெரிக்காவாக இருந்தால் நானே ஒண்ணு ரெண்டு பேரை சிபாரிசு செஞ்சிருப்பேன். இங்கே எனக்கு யாரையும் தெரியாது...."

பார்த்தசாரதி சிந்தனையில் ஆழ்ந்தார். பின் சொன்னார். "இங்கே பத்து மைல் தூரத்துல குறி சொல்ற ஒரு கிழவி இருக்கா. ஒரு தடவை என் தங்கையோட நாத்தனார் குழந்தையோட கைல இருந்த தங்க மோதிரம் காணாமல் போயிடுச்சு. எவ்வளவு தேடியும் கிடைக்கலை. யாரோ சொல்லி என் தங்கையோட நாத்தனார் இந்த குறி சொல்ற கிழவி கிட்ட போயிருக்கா. அந்தக் கிழவி கிட்ட போறவங்க வெத்திலை பாக்கும், 101 ரூபாயும் தரணுமாம். அந்தக் கிழவி அந்த வெத்திலைய தடவிகிட்டே கண்ணை மூடிகிட்டு மோதிரம் பாத்ரூம்ல வச்சிருக்கிற ஒரு தண்ணிக் குடத்துல இருக்கிறதா சொல்லி இருக்கு. போய் பார்த்தா அப்படியே இருந்திருக்கு. அதுல எல்லாருக்கும் ஒரே ஆச்சரியம். ஆனால் அதுக்கடுத்து அவங்க சொல்லி நாலஞ்சு பேர் வேற வேற விஷயங்களுக்கு அந்த கிழவி கிட்ட போய் இருக்காங்க. ஆனா அப்ப எல்லாம் கிழவி சொன்னது ஒண்ணு கூட சரியாகலை...."

*ஈஸ்வர் சொன்னான். "அதான் சொன்னேனே. சக்தி இருக்கறதா சொல்ற ஆயிரம் பேர்ல நாலு பேர் தான் தேறுவாங்க. அப்படி அந்தக் கிழவி நாலுல ஒரு ஆளா இருக்கலாம்.... அந்தக் கிழவிக்கும் தொடர்ச்சியா சக்தி இருந்திருக்காது. விட்டு விட்டு அந்த சக்தி வரலாம். அதை சொல்லாம கிழவி காசுக்கு ஆசைப்பட்டு பிறகு வாய்க்கு வந்தபடி சொல்லி இருக்கும். அதனால சரியாக இருந்திருக்காது..."*

*"அப்படின்னா அந்தக் கிழவி கிட்ட சும்மா போய் கேட்டா என்ன?"*

*"இந்த மாதிரி விஷயங்களை சம்பவம் நடந்த இடத்துல வரவழைச்சு கேட்டா அந்தக் கிழவிக்குத் தெளிவா தெரிய வாய்ப்பு இருக்கு...."*

*சிறிது தயங்கி விட்டு முயற்சி செய்வதில் என்ன தப்பு என்று நினைத்தவராக பார்த்தசாரதி போன் செய்து யாரிடமோ தாழ்ந்த குரலில் பேசினார்.*

*பின் ஈஸ்வரிடம் சொன்னார். "கிழவியை கூட்டிகிட்டு வந்துடுவாங்க. ஆனா உண்மையை சொல்லணும்னா இந்த விஷயத்துல எனக்கு முழு நம்பிக்கை வரலை...."*

*ஈஸ்வர் அமைதியாக சொன்னான். "ஏதாவது தெரிய கொஞ்சம் வாய்ப்பு இருக்குன்னு மட்டும் இப்போதைக்கு நினைக்கலாம். அவ்வளவு தான். ஒரு வேளை கிழவிக்கு எதுவுமே தெரிய வராமலும் போகலாம். ஆனாலும் நமக்கு நஷ்டம் இல்லை. நம்ம நாட்டுல என்ன பிரச்சினைன்னா இந்த மாதிரி ஆளுகளை சாமியாராக்கியோ, சாமி ஆக்கியோ ஏமாந்துடறது தான். நம்ம கிட்ட*

இல்லாத சக்தி ஒருத்தன் கிட்ட இருக்குங்கறதாலயே அப்படி ஒருத்தரை அப்படி நம்பிடறது முட்டாள்தனம். நான் அப்பவே சொன்ன மாதிரி ஒரு தடவை சொன்னது சரியாச்சுன்னா அவங்க சொல்றது எல்லாமே சரியா இருக்கும்னு முடிவு செய்துக்கறதும் முட்டாள்தனம்....”

விஞ்ஞான யுகத்தில் இப்படி பின்னால் போகிறோமே என்று பார்த்தசாரதிக்குத் தோன்றினாலும் அவன் சொன்னதில் அறிவுபூர்வமான அணுகுமுறையே தெரிந்தது. ஒரு கான்ஸ்டபிளைக் கூப்பிட்டு வெற்றிலை பாக்கு வாங்கிக் கொண்டு வரச் சொன்னார். கிழவி வரும் வரை இருவரும் தோட்டத்தில் காத்திருந்தார்கள்.

முக்கால் மணி நேரத்தில் கிழவியை ஜீப்பில் கொண்டு வந்து சேர்த்தார்கள். கிழவிக்கு கிட்டத்தட்ட எண்பது வயதாகவாவது இருக்கும் என்று ஈஸ்வர் கணக்கிட்டான். கிழவி உயரமாகவும் அகலமாகவும் இருந்தாள். காதுகளில் வெள்ளி தொங்கட்டான்கள் தொங்கின. முகமெல்லாம் சுருங்கி ரேகைகள் தெரிந்தன. கிழவி போலீஸ் அழைத்து வந்ததில் பயந்து போயிருந்தாள்.

பார்த்தசாரதி முன்னால் அவளை நிறுத்திய போது “சாமி நான் எந்த தப்பும் செய்யலை. அந்த மாரியாத்தா மேல சத்தியமா சொல்றேன்...” என்று புலம்பினாள்.

“எல்லார் கிட்டயும் 101 ரூபாய் வசூலிச்சுகிட்டு வாய்க்கு வந்ததை எல்லாம் சொல்றேன்னு நிறைய புகார் வந்துருக்கு கிழவி. நீ என்னடான்னா மாரியாத்தா மேல சத்தியம் செய்யறே...”

*கிழவி முகம் வெளுத்தது. 101 ரூபாய்க்காக போலீஸ் வரை போய் புகார் சொல்லும் மனிதர்கள் இருப்பார்கள் என்று அவள் எதிர்பார்த்திருக்கவில்லை.*

*”சாமி யாரோ எனக்கு வேண்டாதவங்க உங்ககிட்ட இப்படி புகார் செஞ்சுருக்காங்க...” என்று பலவீனமான குரலில் கதறினாள்.*

*பார்த்தசாரதி போலீஸ் பாணியில் அவளை நிறையவே பயமுறுத்தி விட்டால் அவளுக்கு இருக்கும் கொஞ்ச நஞ்ச சென்சிடிவிடியும் போய் விடும் என்று நினைத்த ஈஸ்வர் அவருக்கு கண்ணால் சமிக்ஞை செய்து விட்டு அவளிடம் சொன்னான்.*

*“பயப்படாதீங்க. இங்கே இந்த வீட்டுல ஒரு கொலையும் திருட்டும் நடந்திருக்கு. உங்களுக்கு ஏதாவது தெரியுதான்னு கேட்க தான் கூப்பிட்டோம். முயற்சி செய்து பார்க்கறீங்களா?”*

*அவள் பார்த்தசாரதியை ஒரு நிமிடம் பயத்துடன் பார்த்தாள். அவர் ஒன்றும் பேசாமல் ஒதுங்கி நிற்கவே அவள் ஈஸ்வரையே கூர்ந்து பார்த்தாள். அவள் பயம் சற்று குறையவே மெல்ல கேட்டாள். “இது யாரோட வீடுங்க?”*

*“என்னோட பெரிய தாத்தா வீடுங்க”*

*”அப்படின்னா உங்க கையால எனக்கு வெத்தல பாக்கு குடுங்க” என்றாள். பார்த்தசாரதி பக்கம் மறந்தும் அவள் திரும்பவில்லை. 101 ரூபாய் பற்றியும் பேசவில்லை.*

*ஈஸ்வர் தன் கையால் வெற்றிலை பாக்கையும் 101 ரூபாயும் தர பணத்தை சற்று தயக்கத்துடன் தான் அவள் வாங்கினாள்.*

ஈஸ்வர் சொன்னான். “ஏதாவது தெரிஞ்சா மட்டும் சொல்லுங்க. தெரியலைன்னா விட்டுடுங்க. பரவாயில்லை. கற்பனையா மட்டும் எதுவும் சொல்ல வேண்டாம்.”

அவள் அவனை வித்தியாசமாய் பார்த்தாள். அவளிடம் இப்படி ஒரு கோரிக்கையை யாரும் வைக்கவில்லை போல் இருந்தது. மெல்ல தலையாட்டினாள்.

அவளை இருவரும் வீட்டுக்குள் அழைத்துப் போனார்கள். கிழவி உள்ளே போனவுடன் கண்களை சுருக்கிக் கொண்டு வீட்டை நோட்டமிட்டாள். பின் சாக்பீசால் குறியிட்டிருந்த பசுபதி சடலம் இருந்த இடத்தை வெறித்து பார்த்தாள். பின் பூஜையறையைப் பார்த்தாள். பின் ஹாலில் ஒரு மூலையில் அமர்ந்தாள். கண்களை மூடிக் கொண்டு ஈஸ்வர் தந்த வெற்றிலையை வருட ஆரம்பித்தாள்.

சரியாக ஆறு நிமிடங்கள் 20 வினாடிகள் மௌனமாய் இருந்த கிழவி பின் மெல்ல பேச ஆரம்பித்தாள். அவள் முகத்தில் பிரமிப்பு தெரிந்தது. நிறுத்தி நிறுத்தி பேசினாள். “இள வயசு பையன்... ஈரத்துண்டை உடுத்தி இருக்கான்.... உடம்பெல்லாம் திருநீறு பூசி இருக்கான்.... சிவலிங்கத்தை தூக்கறான்.... யாரோ ரெண்டு பேர் அவனை பார்த்திட்டு இருக்காங்க.... அவன் பயப்படறான்... அவன் உடம்பெல்லாம் நடுங்குது....அவன் பயப்படறான்... ரொம்பவே பயப்படறான்.... ஏதோ ஜெபிச்சுகிட்டே இருக்கான்.... சிவலிங்கத்தை தூக்கிட்டு வெளியே போறான்.....”

சொல்லும் போதே அவள் உடம்பெல்லாம் நடுங்கியது. பின் மௌனமானாள். கண்களைத் திறந்தாள். ஈஸ்வரைக் கேள்விக்குறியுடன் சரி தானா என்பது போல பார்த்தாள்.

ஈஸ்வர் கேட்டான். “அந்த ரெண்டு பேரையும், சிவலிங்கத்தையும் பத்தி அதிகமா ஏதாவது சொல்ல முடியுமான்னு பாருங்களேன்”

அவள் தலையாட்டி விட்டு கண்களை மூடிக் கொண்டாள். “மங்கலாயிடுச்சு.. சிவலிங்கமும் தெரிய மாட்டேங்குது... அந்த ரெண்டு பேரும் தெரிய மாட்டேங்குறாங்க. அப்பவே கூட அவங்க மங்கலா தான் தெரிஞ்சாங்க...” என்றவள் சிறிது நேரம் கஷ்டப்பட்டு எதையோ பார்ப்பது போல பார்த்து சொன்னாள். “அந்த பையன் மட்டும் தெரியறான்... அவன் இப்ப ஒரு பெரிய சிவன் கோயில்ல இருக்கான்.....”

ஈஸ்வர் சொன்னான். “அந்த இடத்தைப் பத்தி இன்னும் ஏதாவது சொல்ல முடியுதான்னு பாருங்களேன்.”

கிழவி முயற்சித்தாள். “அந்த சிவன் கோயில்ல அம்மன் சன்னதிக்கு முன்னாடி பெரிய குளம் இருக்கு.... குளத்தை சுத்தி நாலா பக்கமும் கருங்கல் படிக்கட்டு இருக்கு..... அந்தப் பையன் அந்த படிக்கட்டுல உட்கார்ந்துட்டு இருக்கான். போய் அப்பப்ப குளிச்சிட்டு வருவான் போல இருக்கு. அவன் உடம்பெல்லாம் நனைஞ்சுருக்கு. அந்த ஈரத்துண்டுலயே தான் இருக்கான். எதையோ இப்பவும் ஜெபிச்சுகிட்டிருக்கான்.... அந்தக் குளத்துக்கு முன்னாடி ஒரு தோரணம் மாதிரி வளைவு இருக்கு. அதுல என்னவோ எழுதி இருக்காங்க.....”

அவள் சிறிது நேரம் அமைதியாகவே இருக்கவே பார்த்தசாரதி கேட்டார். “அந்த வளைவுல என்ன எழுதி இருக்கு?”

*“எனக்கு எழுதப் படிக்கத் தெரியாதுங்களே...”*

*“அது தமிழ் தானா இல்லை வேற எதாவது மொழியா?”*

*“தமிழ் தான்....”*

*அதற்கு மேல் அவளுக்கு அந்தக் காட்சி தெரியவில்லை போல் இருந்தது. ஆனாலும் அமைதியாக கண்களை மூடிக் கொண்டு ஐந்து நிமிடங்கள் பேசாமல் இருந்து விட்டு அவள் கண்களைத் திறந்தாள். எழுந்து பூஜை அறைக்குப் போய் தரையில் இருந்து தூசியைத் தடவி எடுத்து திருநீறு போல் பூசிக் கொண்டு ஈஸ்வர் அருகே வந்தாள். அவன் தந்த 101 ரூபாயை அவனிடமே திருப்பித் தந்தாள்.*

*ஈஸ்வர் திகைப்புடன் கேட்டான். “வச்சுக்கோங்க. ஏன் திருப்பித் தர்றீங்க?”*

*அவள் பதில் எதுவும் சொல்லாமல், வேண்டாம் என்று சைகை செய்தாள். இரண்டு கைகளையும் மேலே உயர்த்திக் காட்டி விட்டு அவனைப் பார்த்து கைகூப்பி வணங்கினாள். பின் விறு விறு என்று வேகமாக அங்கிருந்து கிளம்பி வெளியே சென்றவள் தோட்டத்தில் ஜீப் அருகே சென்று நின்று கொண்டாள்.*

*இருவரும் கிழவியின் செய்கையால் திகைப்படைந்தார்கள். பார்த்தசாரதி ஈஸ்வரிடம் கேட்டார். “இது சம்பந்தமா இனியும் ஏதாவது கிழவி கிட்ட இருந்து தெரிஞ்சுக்க முடியுமா?”*

*”இனி எதுவும் தெரிஞ்சுக்க முடியாதுன்னு நினைக்கிறேன். அந்தக் கிழவியோட சென்சிடிவிடி அந்த பையனோட அலைகளுக்கு தான் ட்யூன் ஆயிருக்கு. அதுல தெரிஞ்சதெல்லாம் சொல்லி இருக்கு.*

இனியும் வற்புறுத்திக் கேட்டா கிழவி கற்பனையா எதாவது சொல்ல ஆரம்பிச்சாலும் ஆரம்பிக்கலாம்...”

“அப்படின்னா இப்ப சொன்னது எல்லாம் கற்பனை இல்லைன்னு நினைக்கிறீங்களா?...”

”ஆமா. நாம சிவலிங்கம் பத்தி சொல்லவே இல்லை... ஆனாலும் அந்தக் கிழவி சரியா சிவலிங்கத்தை அந்தப் பையன் தூக்கிட்டு போறது பத்தி சொல்லி இருக்கிறதைப் பாருங்க...”

”இங்க கொலை நடந்து சிவலிங்கம் திருட்டு போனதை கிழவி பேப்பர்ல படிச்சு இருக்கலாம்...”

“கிழவிக்கு தான் எழுதப்படிக்கத் தெரியாதே...”

”டிவில பார்த்து இருக்கலாம்...”

அவர் சந்தேகம் அவ்னைப் புன்முறுவல் பூக்க வைத்தது. “இருக்கலாம். ஆனா கிழவி பார்த்து சொன்ன காட்சி சரியா இருக்கலாம்னு தான் என் உள்ளுணர்வு சொல்லுது. ஏன்னா அந்த சிவலிங்கத்தை குற்றவாளிகள் நேரடியா தூக்கிட்டு போக வாய்ப்பே இல்லைன்னு நான் ஆரம்பத்திலேயே சந்தேகப்பட்டேன். யாரோ ஒரு பூஜை புனஸ்காரம் செய்யற ஆள் கையால தான் எடுத்துகிட்டு போக வச்சிருப்பாங்கன்னு நினைச்சேன். கிழவி சொல்றது அதுக்கு ஒத்துப் போகுது....”

பார்த்தசாரதி சிறிது யோசித்து விட்டு கேட்டார். “சரி அந்தக் கிழவியை அனுப்பிச்சிடலாமா?”

அனுப்பி விடலாம் என்று ஈஸ்வர் சொல்ல பார்த்தசாரதி ஜீப்பருகே இருந்த போலிஸ்காரருக்கு சமிக்ஞை செய்ய கிழவியுடன் ஜீப் கிளம்பியது.

பார்த்தசாரதி ஈஸ்வரிடம் கேட்டார். "அப்படின்னா அந்தப் பையன் இப்ப இருக்கிற இடம் பத்தி கிழவி சொன்னதும் சரியாய் இருக்கும்னு நினைக்கிறீங்களா?"

"ஆமா.."

பார்த்தசாரதி யோசித்தார். 'பெரிய சிவன் கோயில்... அம்மன் சன்னிதிக்கு முன்னால் பெரிய குளம்.... குளத்துக்கு முன்னால் எழுதப்பட்ட தோரண வளைவு... அதில் தமிழில் ஏதோ எழுதப்பட்டிருக்கிறது.... குளத்தை சுற்றி நாலா பக்கமும் கருங்கல் படிக்கட்டுகள்... அந்தப்படிக்கட்டில் அந்தப் பையன் உட்கார்ந்திருக்கிறான்...."

எந்தக் கோயிலாக இருக்கும்?

# அத்தியாயம் - 34

மகேஷிற்கு ஈஸ்வர் சீக்கிரமாக அமெரிக்கா திரும்பிப் போய் விட்டால் நல்லது என்றிருந்தது. ஈஸ்வர் இங்கு இருக்கும் கணங்களில் அவன் தனக்குப் பெரிய ஆபத்தை உணர்ந்தான். ஆனந்தவல்லி, மீனாட்சி இருவரும் ஈஸ்வரைத் தலையில் வைத்துக் கொண்டாடியதைக் கூட அவனால் தாங்கிக் கொள்ள முடிந்தது. ஆனால் பரமேஸ்வரன் ஈஸ்வரை வெறுக்காததை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. வாய்க்கு வந்தபடி போனில் ஈஸ்வர் பேசி

இருந்தாலும், இங்கு வந்த பிறகும் அவருடன் இறுக்கமாகவே இருந்தாலும் கூட பரமேஸ்வரன் கொதித்து எழுவதற்குப் பதிலாக பொறுத்துப் போனது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. வேறு யாராவது அப்படி அவரிடம் நடந்து கொண்டிருந்தால் அவர் நடந்து கொண்டிருக்கும் விதமே வேறாக இருந்திருக்கும். ஈஸ்வரிடம் மட்டும் அவர் அப்படி சீறாமல் இருக்கக் காரணம் அவன் அவர் தந்தையின் தோற்றத்தில் இருப்பது தானோ என்ற சந்தேகம் அவனுக்கு வந்தது.

சிறு வயதில் இருந்தே அவன் தன் தாத்தாவைக் கவனித்த அளவிற்கு யாரையும் கவனித்தது இல்லை. காரணம் கோடிக்கணக்கான சொத்திற்கு அதிபதியாக அவர் இருந்தது தான். அவர் நினைத்தால் அந்தப் பணத்தை யாருக்கு வேண்டுமானாலும் தரலாம், என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்பதால் அவரை நன்றாகப் புரிந்து கொண்டு அவர் மனம் கோணாமல் நடந்து கொள்வது தான் புத்திசாலித்தனம் என்று கணித்து அப்படியே நடந்து வந்திருந்தான். அவரை அப்படி அறிந்திருந்ததால் அவர் ஒருவரைப் பார்க்கும் விதத்திலும், பேசும் விதத்திலும் இருந்தே அவர் அந்த மனிதரைப் பற்றி என்ன நினைக்கிறார், எந்த அளவில் மதிக்கிறார் என்பதை எல்லாம் அவனால் துல்லியமாகக் கணிக்க முடியும். அந்த வகையில் அவர் ஈஸ்வரை மதிக்கிறார் என்பதும், அவனை மிகவும் நேசிக்கா விட்டாலும் வெறுக்கவில்லை என்பதும் அவனுக்குப் புரிந்தது. மகனைப் பற்றி பேசுவதைக் கூட சகிக்க முடியாத அவர், மகனின் மகனிடம் மட்டும் இந்த அளவில் இருப்பது அவனுக்குப் பெரிய ஆபத்தை உணர்த்தியது. இது இப்படியே போனால் உறவைப் புதுப்பித்துக் கொள்வதில் முடிந்து விடுமோ என்று அவன் பயந்தான்.

இந்த நிலையில் ஈஸ்வரை தென்னரசு வீட்டுக்கு அழைத்துப் போகும் படி மீனாட்சி வேறு மகனிடம் சொல்லி இருந்தாள்.

ஆரம்பத்தில் மறுத்து டிரைவரை அழைத்துப் போகச் சொல்லுங்கள், எனக்கு முக்கியமான வேலை இருக்கிறது என்று சொல்ல நினைத்தவன் பின் மனதை மாற்றிக் கொண்டான். காரணம் விஷாலி.

விஷாலியை அவன் காதலித்து வந்தான். அவளிடம் வாய்விட்டுச் சொல்ல அவனால் முடியவில்லை. பரமேஸ்வரன் இருக்கிற வரையில் வேற்று ஜாதியும், அந்தஸ்தில் தாழவும் உள்ள அவளைத் திருமணம் செய்து கொள்ள அவனுக்கு சம்மதம் தர மாட்டார் என்பது அவனுக்குத் தெரியும். உயிருக்கு உயிராய் நேசித்த மகனையே அவன் காதல் கல்யாணத்தால் வெறுத்து ஒதுக்கிய மனிதர் பேரன் விஷயத்தில் கண்டிப்பாக ஒத்துக் கொள்ள மாட்டார் என்பதை அவன் புரிந்து கொண்டிருந்தான். அதனால் அவளிடம் தன் காதலைச் சொன்னதில்லை. தாத்தா மரணத்திற்குப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று நினைத்திருந்தான். ஆனந்தவல்லி வயது அளவிற்கு அவரும் வாழ்ந்து விட்டால் என்ன செய்வது என்று அவன் பயந்தாலும் அவருக்கு உள்ள வியாதிகளின் எண்ணிக்கை அந்தப் பயத்தைப் போக்கி இருந்தது

விஷாலியும் அவனிடம் பிரியமாகப் பழகிய அளவுக்கு வேறெந்த ஆணிடமும் பிரியமாய் பழகியது இல்லை. எனவே அவன் காதலைச் சொல்லும் போது அவள் கண்டிப்பாக ஏற்றுக் கொள்வாள் என்ற நம்பிக்கை அவனுக்கு இருந்தது. அவளுடைய தந்தை தென்னரசுவும் அவனிடம் நெருக்கமாகவும், அன்பாகவும் இருந்தார். எனவே அவர் பக்கத்தில் இருந்து எந்த எதிர்ப்பு வரவும் வாய்ப்பு இல்லை. அவன் தாயும் விஷாலியை மிகவும் நேசித்தாள். தந்தையும் அப்படித்தான். அதனால் பரமேஸ்வரன் என்ற ஒரு தடங்கல் தவிர வேறு எந்தப் பிரச்சினையும் அவனுக்குக் காதலில் இருக்கவில்லை.

*இப்போது ஈஸ்வர் வரவு விஷாலி விஷயத்தில் ஏனோ ஒரு நெருடலை ஏற்படுத்தியது. வந்து இரண்டு நாட்களிலேயே வீட்டில் பெரிய மாற்றத்தை அம்மா, தாத்தா, கொள்ளுப்பாட்டியிடம் ஏற்படுத்த முடிந்த அவன் வெற்றி விஷாலி வரை நீண்டு விட்டால் என்ன செய்வது என்ற பயம் லேசாக எழுந்ததால் அவன் விஷாலியை சந்திக்கும் சந்தர்ப்பத்தில் தான் கூட இருப்பது நல்லது என்று மகேஷிற்குத் தோன்றியது. எனவே தான் அவன் அம்மா சொன்ன போது தென்னரசு வீட்டுக்கு ஈஸ்வரை அழைத்துப் போகச் சம்மதித்தான். விஷாலிக்குப் போன் செய்து ஈஸ்வரை மறுநாள் அழைத்து வருவதாகத் தெரிவித்தான்.*

*விஷாலி சந்தோஷப்பட்டாள். "உன் கசின் ரொம்ப பிரபலம்னு அப்பா அடிக்கடி சொல்வார். உன் கசின் எப்படி இருக்கான்?"*

*"ம்... இருக்கான்"*

*"உங்க தாத்தாவுக்கும் அவனுக்கும் இடையே பிரச்சினை எதுவும் இல்லையே"*

*அவர்கள் வீட்டு விவகாரம் அனைத்தையும் விஷாலி அறிந்திருந்ததால் தான் அப்படிக் கேட்டாள். மகேஷ் சொன்னான். "பாவம் தாத்தா அவனோட திமிரை எல்லாம் பொறுத்துட்டு போறார்... அவங்கண்ணா சொன்னார்ங்கிற ஒரே காரணம் தான் அவரைப் பொறுமையா இருக்க வைக்குதுன்னு நினைக்கிறேன்."*

*"ஏன் மகேஷ், அவனுக்கு திமிர் ஜாஸ்தியா"*

*“உச்சியில் இருந்து உள்ளங்கால் வரைக்கும் திமிர் நிறைஞ்சவன். அதான் நீ சொன்னியே பிரபலமானவன்னு. அதோட அடையாளம் தான் இந்த திமிர்”*

*விஷாலி எப்போதுமே நல்ல பண்புகளுக்கு அதிக முக்கியத்துவம் தருபவள். அவளுக்கு அழகு, புத்திசாலித்தனம் எல்லாம் இரண்டாம் பட்சமே. எனவே முதலிலேயே அவன் பெயரை கொஞ்சம் ரிப்பேர் செய்து வைப்பது பாதுகாப்பு என்று மகேஷ் நினைத்தான்.*

*”அப்புறம் ஏன் அவனை எங்க வீட்டுக்கு கூட்டிகிட்டு வர்றே. அவன் எங்க கிட்ட அவனோட திமிரைக் காட்டறதுக்கா?”*

*“அவனுக்கு உங்கப்பா கிட்ட பேசணுமாம். அதான்….”*

*”சரி… ஆமா உங்க வீட்டு ஒல்டு லேடி எல்லாரையும் வைக்கிற இடத்துல வைப்பாங்களே. அவங்க அவனை ஒண்ணும் சொல்லலையா”*

*“அவங்களோட (கிழவி என்று பொதுவாகச் சொல்லும் மகேஷ் மரியாதையாகப் பேசியது பெரியவர்களை மரியாதைக் குறைவாகச் சொல்வது விஷாலிக்குப் பிடிக்காது என்பதற்காகத் தான்) வீட்டுக்காரரர் மாதிரியே அவன் பார்க்க இருப்பான். அதனால அவங்களுக்கு அவன் மேல ஒரு சாஃப்ட் கார்னர்…”*

*”சரி எத்தனை மணிக்கு வர்றே. நாளைக்கு அப்பா காலைல இருந்து ஃப்ரீ தான்..”*

*“காலைல பத்து மணிக்கு கூட்டிகிட்டு வர்றேன்…”*

*“லஞ்சுக்கு இருப்பீங்களா?...”*

*“இல்லை... சீக்கிரமே கிளம்பிடுவோம்” மகேஷ் ஈஸ்வரிடம் கேட்காமலேயே சொல்லி விட்டான். ஈஸ்வரை விஷாலி வீட்டில் அதிக நேரம் தங்க வைக்கும் எண்ணம் அவனுக்கு இல்லை. எத்தனை சீக்கிரம் அங்கிருந்து ஈஸ்வரைக் கிளப்புகிறோமோ அந்த அளவுக்கு நல்லது என்று நினைத்தான்.*

*தோட்ட வீட்டில் இருந்து ஈஸ்வர் வர இரவு ஒன்பது மணியாகி விட்டது. ஆனந்தவல்லியும் மீனாட்சியும் அவனுக்காக சாப்பிடாமல் காத்திருந்தது மகேஷிற்கு எரிச்சலைத் தந்தது. நல்ல வேளையாக பரமேஸ்வரன் அப்படிக் காத்திருக்காமல் மகேஷுடன் சேர்ந்து முன்பே சாப்பிட்டு விட்டார். அவர் சாப்பிடும் போது தாயிடம் கேட்டார். “நீ ஏம்மா சாப்பிடலை?”*

*“ஈஸ்வரும் வந்துடட்டும்” ஆனந்தவல்லி சொன்னாள்.*

*பரமேஸ்வரன் ஒன்றும் சொல்லவில்லை. அவர் குழந்தைகளுக்காக அவள் இப்படி எப்போதுமே காத்திருந்ததில்லை. மீனாட்சியிடம் அவர் கேட்கவே போகவில்லை. மருமகன் வராமல் சாப்பிட மாட்டாள் அவள் என்பதை அவர் அறிவார்.*

*”அவன் எங்கே போயிருக்கான்”*

*ஆனந்தவல்லி சொன்னாள். “தோட்ட வீட்டுக்கு. அந்தப் போலீஸ்காரன் இவனை அங்கே வரச் சொல்லி இருக்கான். எத்தனை நேரம் தான் கேள்வி கேட்பானோ தெரியலை. அவன் ஆள் சரியில்லை.. கொலைகாரங்களைக் கண்டுபிடிக்கத் தெரியலை. யார்*

மேலயாவது பழியைப் போட்டு கேஸை முடிச்சுட நினைக்கிற ரகம் மாதிரி தெரியுது”

பரமேஸ்வரன் சிரித்தார். “அந்த ஆள் நல்ல திறமைசாலி, நாணயமானவர்னு போலீஸ் டிபார்ட்மெண்டுல பேர் எடுத்தவர். அவரைப் போய் நீ ஏன் அப்படிச் சொல்றே?”

”உங்கண்ணன் இறந்து எத்தனை நாளாச்சு. அந்த ஆள் என்னடா கண்டுபிடிச்சான். என் கிட்ட கேள்வி கேட்கறப்ப நானே உங்கண்ணனை கொன்னுருக்கலாம்கிற மாதிரி கேள்வி கேட்டான். இப்ப ஈஸ்வரை சாப்பிடக் கூட அனுப்பாம கேள்வி கேட்கறான்....”

அதற்கு மேல் ஏதாவது சொல்லி அவளிடம் வாங்கிக் கட்டிக் கொள்ள பிரியப்படாமல் பரமேஸ்வரன் சாப்பிட்டு விட்டுப் போய் விட்டார். ஈஸ்வர் வந்த பிறகு ஆனந்தவல்லியும் மீனாட்சியும் செய்த உபசரிப்பைக் காண சகிக்காமல் மகேஷ் தனதறைக்குப் போய் விட்டான்.

**************

மறுநாள் தென்னரசு வீட்டுக்கு அழைத்துப் போன போது காரில் மகேஷ் ஈஸ்வரிடம் கேட்டான். “தோட்ட வீட்டுக்கு நேத்து போனியே, ஏதாவது கண்டுபிடிச்சியா?”

”கண்டுபிடிக்கறது போலீஸ்காரங்க வேலை. நான் அந்த சிவலிங்கம் இருந்த இடம் பார்க்க போனேன். அவ்வளவு தான்”.

சொல்லி விட்டு அவன் நிறுத்திக் கொண்டது மகேஷிற்கு ஏமாற்றம் அளித்தது. அழுத்தக்காரன் என்று நினைத்துக் கொண்டான்.

***தென்னரசு வீடு ஒரு நடுத்தரவர்க்கத்தின் சாதாரண வீடாக இருந்தது. வெளியே நிறைய பூச்செடிகள் இருந்தன. ஒரு நிமிடம் வெளியே நின்று ஈஸ்வர் ரசிக்க மகேஷ் எரிச்சல் அடைந்தான். மகேஷ் விஷாலி பார்க்கிறாள் என்று தெரிந்தால் தான் பார்த்து ரசிப்பது போல் நடிப்பான். இல்லா விட்டால் அவன் செடிகளைக் கவனிக்கவே மாட்டான். ஈஸ்வர் ரசிப்பதை விஷாலி ஜன்னல் வழியாகப் பார்க்கிறாளா என்று கவனித்தான். இல்லை என்பது உறுதியானவுடன் நிம்மதியாயிற்று.***

***கதவைத் திறந்த தென்னரசு ஈஸ்வரை மகிழ்ச்சியுடன் கட்டியணைத்துக் கொண்டு வரவேற்றார். "வா ஈஸ்வர்". உள்ளே வீடு சுத்தமாகவும் வசதியாகவும் இருந்தது. ஈஸ்வருக்கும் தந்தையின் மிக நெருங்கிய நண்பரை நேரில் பார்த்ததும் அவர் அன்பாக வரவேற்றதும் மகிழ்ச்சியாக இருந்தது.***

***'எப்படி இருக்கீங்க அங்கிள்"***

***"நல்லா இருக்கேன் ஈஸ்வர். நீ எப்படி இருக்கே? அம்மா எப்படி இருக்காங்க?"***

***"எல்லாரும் சௌக்கியம்"***

***அவர்கள் பேசிக் கொண்டிருக்க விஷாலி என்ன செய்கிறாள் என்று பார்க்க மகேஷ் உள்ளே போனான். விஷாலி சமையலறையில் இருந்தாள். அவனைப் பார்த்தவுடன் கேட்டாள். "என்ன சொல்றான் உன் கசின்"***

“உங்கப்பா கிட்ட எதோ கதை அளந்துட்டு இருக்கான். சரி வா அறிமுகம் செய்யறேன்...”

“கொஞ்சம் வேலை இருக்கு. முடிச்சுட்டு வர்றேன். இல்லாட்டியும் எனக்கு இந்த மாதிரி தலைக்கனம் இருக்கிற ஆசாமிகள் கிட்ட அதிக நேரம் இருக்கறது இஷ்டமில்லை. உனக்குத் தான் தெரியுமே...”

மகேஷுக்குத் திருப்தியாக இருந்தது. முன்பே அவனைப் பற்றி அப்படி சொல்லி வைத்தது நல்லதாய் போயிற்று என்று நினைத்துக் கொண்டான். அவளுடன் பேச்சுக் கொடுத்தபடி அங்கேயே நின்று கொண்டான். அன்று வழக்கத்தை விட அதிக அழகுடன் அவள் தெரிந்தாள். அவள் அழகை அவன் ரசித்தாலும் தன் கண்களுக்குத் தெரிவது போலவே ஈஸ்வர் கண்களுக்கும் அவள் தெரிவாள் என்பது அவனுக்கு சங்கடமாக இருந்தது.

கால் மணி நேரம் கழித்து அவள் வெளியே வந்த போது அவனும் பின்னால் வந்தான். ஈஸ்வர் ஏதோ சுவாரசியமாக தென்னரசிடம் சொல்லிக் கொண்டு இருந்தான். அவன் விஷாலியைக் கவனிக்கவில்லை. அதனால் சாவகாசமாக அவனைப் பார்த்து எடைபோடும் சந்தர்ப்பம் அவளுக்குக் கிடைத்தது.

“உன் கசின் ரொம்ப அழகாய் இருக்கான். அறிவோட அழகும் இருக்கறதால தான் அவனுக்குத் தலைக்கனம் போல் இருக்கு” அவள் மகேஷுக்கு மட்டும் கேட்கும்படி முணுமுணுத்தாள்.

அவள் ஈஸ்வரை ரொம்ப அழகாய் இருப்பதாகச் சொன்னது அவனுக்குப் பிடிக்கவில்லை. இத்தனைக்கும் அவள் அழகுக்கு அதிகமான முக்கியத்துவம் தருபவள் அல்ல...

தென்னரசு தான் மகளை முதலில் பார்த்தார். அவன் பேச்சை இடைமறித்து சொன்னார். “ஈஸ்வர் இதான் விஷாலி. என் மகள்”

ஈஸ்வர் திரும்பினான். சில வினாடிகள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டே இருந்தனர். அவன் பார்வையில் காந்தம் இருந்ததாய் அவளுக்குத் தோன்றியது. பார்வையை விடுவித்துக் கொள்ள அவளால் முடியவில்லை. அவன் தான் முதலில் மீண்டவன். சிநேகத்துடன் அவளைப் பார்த்துப் புன்னகைத்தான். ”ஹாய்” என்றவன் நின்று கையை நீட்ட அவளும் அவளை அறியாமல் கை நீட்டினாள். ஒரு சாதாரண கைகுலுக்கலுக்குத் தேவையான நேரத்தை விட அதிகமாக ஈஸ்வர் எடுத்துக் கொண்டதாக மகேஷிற்குத் தோன்றியது. அவளுக்கும் அதில் எந்த சங்கடமும் இருந்ததாக அவனுக்குத் தோன்றவில்லை. அவனுடைய விஷாலி.... அவன் நம்ப முடியாமல் அவர்களைப் பார்த்தான். ஏதோ ஒன்று அவனுக்குள்ளே அலறியது.

ஈஸ்வர் அவள் கையை விட்டான். அவளையும் அறியாமல் அவள் லேசாக வெட்கத்தில் முகம் சிவந்தாள். இப்போது அவனுக்குப் பார்வையை அவள் முகத்திலிருந்து விலக்கக் கஷ்டமாக இருந்தது....

மகேஷிற்கு அவனிடம் அவள் எப்போதும் வெட்கப்பட்டதாக நினைவில்லை. அவர்கள் இருவரும் சம்பிரதாயமாய் ஏதோ பேசிக் கொண்டார்கள். அவர்கள் என்ன பேசினார்கள் என்பது மகேஷ் மனதை எட்டவில்லை. ஒருவரை ஒருவர் அவர்கள் பார்த்துக் கொண்ட பார்வை மட்டும் அவன் மனதில் பற்றி எரிந்தது. சில நிமிடங்களுக்கு முன் திமிர் பிடித்தவன் என்று சொல்லி உடனடியாக ஈஸ்வரை சந்திக்க வர மறுத்த அவனுடைய விஷாலி இப்போது அவன் மீது வைத்த கண்களை விலக்க முடியாமல் இருக்கிறாள்.

ஈஸ்வர் அவளை வசியம் செய்து விட்டான் என்று தோன்றியது. அவன் சைக்காலஜியில் நிபுணன்... எந்த வசியமும் செய்வான்..... இதை முளையிலேயே கிள்ளி எறிய வேண்டும் என்று மகேஷ் நினைத்தான். இல்லா விட்டால் அவன் விஷாலியை என்றென்றைக்குமாய் இழந்து விட வேண்டி இருக்கும். அதற்காக என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று அவன் நினைத்தான்.....

**************

அதே நேரத்தில் குருஜியின் உதவியாளனுக்கு ஒரு போன் கால் வந்தது.

"ஹலோ. குருஜியோட பர்சனல் போனுக்கு நிறைய தடவை கூப்பிட்டுப் பார்த்துட்டேன். ஆனா ஸ்விட்ச்டு ஆஃப் மெசேஜ் வருது. என்ன ஆச்சு...."

குரலை வைத்து அந்த உதவியாளனால் பேசுவது யார் என்று கண்டுபிடிக்க முடியாவிட்டாலும் அவர் பர்சனல் போன் நம்பர் வைத்துக் கொண்டிருப்பது வெகுசிலரே என்பதால் மிக மிக வேண்டப்பட்ட நபர் என்பதை அவன் புரிந்து கொண்டான். "குருஜி அவசர வேலையாய் வெளியூர் போயிருக்கிறார். இப்ப நானே நினைச்சாலும் அவரை காண்டேக்ட் செய்ய முடியாது சார். என்ன விஷயம் சொல்லுங்க சார்?"

"ஒரு கேஸ்ல புதுசா ஏதாவது தடயம் கிடைச்சா சொல்லச் சொல்லி இருந்தார் அவர். கிடைச்சிருக்கு. அதான் போன் செஞ்சேன்."

"சொல்லுங்க சார். குருஜி இல்லாதப்ப வேறொருத்தர் அந்தக் கேஸ் விஷயமா பார்த்துக்கறார். அவர் கிட்ட தகவலை சொல்லிடறேன்"

*“சிவலிங்கத்தை தூக்கிட்டு போனவன் ஒரு சிவன் கோயில்ல இருக்கிறதா போலீஸுக்கு தகவல் வந்திருக்கு. அந்த இடம் என்னன்னு போலீஸ் இன்னும் கண்டுபிடிக்கலை. ஆனால் சீக்கிரமாவே கண்டுபிடிச்சு அங்கே போயிடுவாங்க...”*

*உதவியாளன் பரபரப்போடு கேட்டான். “என்ன தகவல்?”*

*“பெரிய சிவன் கோயில். அம்மன் சன்னிதிக்கு முன்னாடி ஒரு பெரிய குளம். குளத்துக்கு முன்னாடி பெரிய வளைவுல எதோ எழுதி இருக்கு. குளத்தை சுத்தி நாலு பக்கமும் கருங்கல்லால் ஆன படிக்கட்டுகள்....”*

*உதவியாளனுக்கு உடம்பெல்லாம் ஒரு கணம் ஜில்லிட்டது. அந்த அடையாளங்களை அவன் அறிவான். அவன் பிறந்து வளர்ந்த ஊரில் தான் அந்தக் கோயில் இருக்கிறது. “தேங்க்ஸ் சார். நீங்க சொன்னது பெரிய உபகாரமாச்சு. நான் பார்த்துக்கறேன். குருஜி வந்த பிறகு அவரே உங்க கிட்ட பேசுவார். அவர் வந்தா யார் பேசறதா சொல்லட்டும்?”*

*பதில் வரவில்லை. இணைப்பு துண்டிக்கப்பட்டது. உதவியாளன் அவசர அவசரமாக வேறொரு எண்ணிற்குப் போன் செய்ய ஆரம்பித்தான்.*

# ***<u>அத்தியாயம் - 35</u>***

*மகேஷ் தனது மனதில் புகைந்து கொண்டிருந்த எரிமலையில் இருந்து கவனத்தைப் பலவந்தமாகத் திருப்பிய போது தென்னரசு தன் மகளைப் பற்றி ஈஸ்வரிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.*

“விஷாலி ஃபேஷன் டிசைனரா இருக்கா. சம்பாத்தியத்துல பாதி தர்ம காரியங்களுக்குன்னு ஒரு கொள்கை வச்சிருக்கா. நல்லா வரைவா. நிறைய ப்ரைஸ் வாங்கி இருக்கா. அந்தப் பெயிண்டிங்க்ஸ் வித்து வர்ற காசு முழுசும் கூட தர்ம காரியங்களுக்குத் தான் போகுது....”

விஷாலி தந்தையை ரகசியமாய் முறைத்தாள். ’இந்த அப்பாவுக்கு எதுல பெருமை அடிச்சுக்கறதுங்கறதுங்கற விவஸ்தையே இல்லை. ஏதோ கோடிக் கணக்கில் தர்மம் செய்துட்ட மாதிரி பெருமை என்ன வேண்டி இருக்கு?’

தென்னரசு உடனடியாக நிறுத்திக் கொண்டார். அவள் அவரை முறைத்ததும் அவர் உடனடியாகத் தன் மகளைப் பற்றிப் பெருமை அடிப்பதை நிறுத்திக் கொண்டதும் ஈஸ்வருக்கு விஷாலி மேல் இருந்த மதிப்பை உடனடியாக உயர்த்தியது. அத்தை சொன்னது சரி தான் என்று தோன்றியது.

ஈஸ்வர் கேட்டான். “உங்க பெயிண்டிங்க்ஸ் பார்க்கலாமா?”

தென்னரசு மகளை முந்திக் கொண்டு சொன்னார். “இங்கே ஹால்ல இருக்கற பெயிண்டிங்க்ஸ் எல்லாம் அவள் வரைஞ்சது தான். அவ ரூம்லயும் சிலது வச்சிருக்கா”

ஈஸ்வர் எழுந்து ஹாலில் இருந்த அவளது ஓவியங்களை ஒவ்வொன்றாக பார்க்க ஆரம்பித்தான். நிஜமாகவே அவளுடைய ஓவியங்கள் பிரமாதமாகவும் உயிரோட்டத்துடனும் இருந்தன. ஒவ்வொரு ஓவியத்திலும் அவள் தெரிவிக்க நினைத்த விஷயங்கள் நளினமாகவும் அழகாகவும் சொல்லப்பட்டு இருந்தன. அவன் அதை நிதானமாக நின்று முழுமையாகப் பார்த்து தன் அபிப்பிராயங்களைச் சொல்லிப் பாராட்டிக் கொண்டே வந்தான்.

*அவன் கருத்துக்கள் மேலோட்டமாய் இல்லாமல் ஆழமாய் ஓவியங்கள் பற்றிய நுணுக்கங்கள் அறிந்தவன் சொல்வது போலவே இருக்கவே அவள் ஆர்வத்துடன் கேட்டாள். "நீங்களும் வரைவீங்களா?"*

*ஈஸ்வர் சொன்னான். "சேச்சே. நான் பார்த்து ரசிக்கறதோட சரி. பாலாஜின்னு எனக்கு ஒரு நண்பன் இருக்கான். அவனுக்கு பெயிண்டிங்க்ஸ்னா உயிர். பெயிண்டிங்க்ஸ் வாங்க நிறைய செலவு செய்வான். நிறைய கலெக்‌ஷன் வச்சிருக்கான். அவன் ஒவ்வொரு பெயிண்டிங்கையும் காட்டி நிறைய சொல்வான். இத்தனை விஷயங்கள் இதுக்குள்ள இருக்கான்னு தோணும். அவன் கிட்ட இருந்து தெரிஞ்சுகிட்டது தான் எல்லாம். பிகாஸோ, லியார்னாடோ டாவின்சி, ரவிவர்மான்னு பெரிய பெரிய ஆளுங்களோட பெயிண்டிங்க்ஸ் பத்தி மணிக்கணக்கில் பேசுவான்...."*

*விஷாலி ஈஸ்வர் சொல்வதை ஆர்வமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவள் ஈஸ்வருக்கு சற்று கூடுதல் நெருக்கத்துடன் நிற்பதாக மகேஷிற்குத் தோன்றியது. ஈஸ்வர் ஓவியங்களை இந்த அளவுக்கு ரசிப்பதும், இந்த அளவுக்குப் பேசுவதும் அவனுக்குப் பிடிக்கவில்லை. அவனுக்கு ஓவியங்களைப் பற்றி ஒன்றுமே தெரியா விட்டாலும் விஷாலிக்காக அதை ரசித்துப் பார்ப்பதாக அவன் நடிப்பதுண்டு. ஆனாலும் அதைப் பற்றிப் பேச அவனுக்கு எதுவும் எப்போதும் தெரிந்ததில்லை. ஈஸ்வர் நண்பன் சொன்னதாகச் சொல்லியே மகேஷ் தன் வாழ்நாளில் கேள்விப்படாத ஓவியர்கள் பற்றியெல்லாம் பேசினான்.*

*தென்னரசு மகளிடம் சொன்னார். "உன் ரூம்ல இருக்கற பெயிண்டிங்க்ஸையும் காட்டும்மா"*

விஷாலியும் ஈஸ்வரை அழைத்துப் போக மகேஷ் பொறாமைத் தீயில் பொசுங்கியே போனான். 'முதல் சந்திப்புலயே பெட்ரூம் வரைக்குமா!'

அவள் அறையில் இருந்த ஒரு ஓவியம் ஈஸ்வரை மற்ற ஓவியங்கள் எல்லாவற்றையும் விட அதிகமாகக் கவர்ந்தது. தெருவோரப் பிச்சைக்காரியும் அவளுடைய சின்னக் குழந்தையும் மிகத் தத்ரூபமாக அந்த ஓவியத்தில் வரையப்பட்டு இருந்தார்கள். ஒடுங்கிப் போன அலுமினியத் தட்டை முன்னால் வைத்து கிழிந்த ஆடைகளுடன் அமர்ந்திருந்த அந்தப் பிச்சைக்காரியின் முகத்தில் சொல்லுக்கு அடங்காத சோகம் தெரிந்தது. பிச்சைக்காரியின் மூன்று வயதுக் குழந்தை ஏதோ ஒரு நைந்து போன பொம்மையுடன் ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருந்தது. அந்த ஓவியத்துக்கு விஷாலி "இருவேறு உலகங்கள்" என்று மிகப் பொருத்தமாகப் பெயர் வைத்திருந்தாள்.

ஈஸ்வர் நிறைய ரசித்து விட்டு மனதாரச் சொன்னான். "விஷாலி. மத்த எல்ல பெயிண்டிங்க்ஸைவ்யும் விட இது எனக்கு ரொம்பவே பிடிச்சிருக்கு. அற்புதமா வரைஞ்சிருக்கே. தலைப்பும் பிரமாதம். என் ஃப்ரண்ட் பாலாஜி பார்த்தா நீ என்ன ரேட் சொன்னாலும் தயங்காம வாங்கிட்டு போவான்"

விஷாலி முகத்தில் தெரிந்த சந்தோஷம் பார்க்க மகேஷிற்கு சகிக்கவில்லை. ஈஸ்வர் முதல் சந்திப்பிலேயே அவளை ஒருமையில் அழைத்ததும் அவனுக்குப் பிடிக்கவில்லை. "ரசிச்சது போதும் பெட்ரூமை விட்டு வெளியே வாடா" என்று மனதினுள் கத்தினான். ஈஸ்வர் இருபது நிமிடங்கள் கழித்து தான் வெளியே வந்தான்.

வெளியே வந்ததும் மகேஷ் சொன்னான். "சரி ஈஸ்வர் போலாமா. எனக்கு கொஞ்சம் வேலை இருக்கு"

ஈஸ்வர் சொன்னான். “உனக்கு வேலை இருந்தால் போய்க்கோ மகேஷ். நான் டாக்ஸி பிடிச்சு வீட்டுக்குப் போயிக்கறேன். எனக்கு தென்னரசு அங்கிள் கிட்ட நிறைய பேச வேண்டி இருக்கு…”

தென்னரசு சொன்னார். “அப்படின்னா சாப்பிட்டுட்டே போயேன், ஈஸ்வர்”

மகேஷ் சொன்னான். “பாவம், விஷாலி சமையலை முடிச்சாச்சு போல இருக்கு”

விஷாலி எச்சிலை விழுங்கினாள். மகேஷ் பேச்சைக் கேட்டு அவள் தங்கள் இருவருக்கு மட்டும் தான் சமைத்திருந்தாள்.

ஈஸ்வர் சொன்னான். “பரவாயில்லை. சாப்பாட்டுக்கு இன்னொரு நாள் வர்றேன். கொஞ்ச நேரம் பேசிட்டு போறேன். நீ போய்க்கோ மகேஷ்”

‘இன்னொரு நாள் சாப்பாட்டுக்கு வர்றேன்’ என்று சொன்னது மகேஷ் வயிற்றில் புளியைக் கரைத்தது. ’போய்க்கோ’ என்று சொன்னதோ அடி வயிற்றில் ஓங்கிக் குத்தியது போல் இருந்தது. தயங்கி விட்டு ஈஸ்வருக்காக சம்மதிப்பது போல் சொன்னான். ”பரவாயில்லை ஈஸ்வர். நான் அப்புறமா போய் என் வேலையை செய்துக்கறேன்….”

“அப்படின்னா ரெண்டு பேரும் சாப்பிட்டுட்டே போங்களேன். நான் ஒரு மணி நேரத்துல ரெடி பண்ணிடறேன்…” விஷாலி சொன்னாள்.

இன்னொரு நாள் வரும் வேலை இல்லை என்ற திருப்தியில் மகேஷ் வேகமாக ஒகே சொன்னான். ஈஸ்வர் ”அப்படின்னா அத்தை கிட்ட சாப்பாட்டுக்கு வரலைன்னு சொல்லிடு மகேஷ். இல்லைன்னா நமக்காக காத்துகிட்டிருப்பாங்க பாவம்”

மகேஷ் தலையசைத்தான். விஷாலி சமையலறைக்குப் போக மகேஷ் பின் தொடர்ந்தான். ஈஸ்வர் தென்னரசுவிடம் அவருக்கும் அவன் தந்தைக்கும் இடையே இருந்த நட்பு பற்றி அவரிடம் கேட்க ஆரம்பித்தான்.

சமையலறையில் மகேஷ் விஷாலி சொன்னாள். ”ஏய் நீ சொன்ன அளவுக்கு தலைக்கனம் எல்லாம் உன் கசினுக்கு இல்லைம்மா. நல்லா தான் பழகறார்...”

அவன் இவன் என்று சற்று முன்பு வரை சொன்னவள் இப்போது ’அவரு’க்கு மாறியதும், ஈஸ்வர் அவளை ஒருமையிலேயே அழைத்துப் பேசியதும், அவர்கள் பேசிக் கொண்டிருந்த போதெல்லாம் அவர்கள் மற்றவர்களை மறந்து ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்ட விதமும் மகேஷை “ஏய் என்னஙகடி நடக்குது இங்கே” என்று மனதினுள் பொரும வைத்தது. இப்போது தலைக்கனம் இல்லை என்று நற்சான்றுப் பத்திரம் வேறு தருகிறாளே என்று நினைத்தவனாய் சொன்னான். “நீ அவன் எங்க தாத்தா கிட்ட நடந்துக்கற விதத்தை பார்த்தால் இப்படி சொல்ல மாட்டே”

”ஓ... நீ அவர் கிட்ட இவர் நடந்துக்கற விதத்தை வெச்சு தான் சொன்னியா. அது அவர் இவரோட அப்பா கிட்ட நடந்துகிட்ட விதம் காரணமா இருக்கலாம். நீ என்னவோ சொல்லு மகேஷ். உன் தாத்தா இவரோட அப்பாவை அந்த அளவுக்கு வெறுத்தது நியாயம்னு எனக்கும் படலை”

மகேஷ் இவர்கள் ஈர்ப்பை தகுந்த சமயத்தில் புத்திசாலித்தனமாய் தான் வெட்டி விட வேண்டும் என்று முடிவு செய்தான். இப்போது இவளோடு ஒத்துப் போய் பிற்பாடு சாமர்த்தியமாகத் தான் சாதிக்க வேண்டும் என்று நினைத்தவனாக சொன்னான். "நீ சொல்றதும் சரி தான் விஷாலி. என் அப்பா கிட்ட தாத்தா அப்படி நடந்துகிட்டா நானும் கூடத் தான் கோபமாய் நடந்துகிட்டு இருப்பேன்..."

உண்மையில் அவன் அப்பாவிடம் அவன் தாத்தா அப்படி நடந்திருந்தால் அவருக்கு இரண்டு மடங்கு அப்பாவைத் தூற்றி தூரத்தில் வைத்திருப்பான் அவன். பணம் சொத்து இந்த இரண்டும் உள்ள தாத்தாவை அவன் எக்காலத்திலும் பகைத்துக் கொள்ள மாட்டான் என்றாலும் அதெல்லாம் விஷாலிக்குத் தெரிய வேண்டிய அவசியம் இல்லை என்று நினைத்தான்.

விஷாலி அவனிடம் ஏதோ பேசிக் கொண்டே சமைக்க அவளுக்கு சின்ன சின்ன உதவிகள் செய்து கொண்டு மகேஷ் அங்கேயே இருந்தான். அவள் அதிகம் ஈஸ்வர் பற்றியே கேள்விகள் கேட்டாள். ஈஸ்வர் பற்றி பேசிய போதெல்லாம் முகத்தில் தெரிந்த பிரகாசம் மகேஷை கண்டதுண்டமாக வெட்டிப் போட்டது. அவன் பிறகு பேசிய போது ஈஸ்வரைப் பற்றி எந்தக் குறையும் சொல்லவில்லை. அவன் அவர்களுக்குள் நிரந்தரமாக வெறுப்பு வர என்னவெல்லாம் செய்யலாம் என்று யோசிக்க ஆரம்பித்தான்.

விஷாலி சமையலை முடித்து விட்டு வெளியே வந்த போது தென்னரசு ஈஸ்வரிடம் சொல்லிக் கொண்டு இருந்தார். "நான் உன் அப்பா மாதிரி ஈகோ இல்லாத ஒரு ஆளை இது வரைக்கும் பார்த்ததில்லைன்னு சொல்லலாம் ஈஸ்வர். அவனுக்குப் பெருமையா சொல்லிக்க எத்தனையோ விஷயங்கள் இருந்துச்சு. வேண்டிய

அளவு பணம் இருந்துச்சு. படிப்புல அவன் அளவுக்கு சாதிச்சவங்க எங்க ஃப்ரண்ட்ஸ் சர்க்கில்ல யாருமே இல்லை. ஏன் அவன் சாதிச்சதுல கால் வாசி சாதிச்சவன் கூட இல்லைன்னே சொல்லலாம். ஆனா அவன் ஒரு தடவை கூட பெருமையா சொல்லிகிட்டதில்லை. பிற்காலத்துல அவன் பெருமையா சொல்லிகிட்டதுன்னு சொன்னா ஒன்னே ஒண்ணு சொல்லலாம்....”

ஈஸ்வர் ஆச்சரியத்துடன் கேட்டார். “எதைச் சொன்னார்?”

“உன்னைப் பத்தி பேசறப்ப மட்டும் தான் அவனையும் அறியாமல் அவன் பேச்சுல ஒரு பெருமிதம் தெரியும்.....”

ஒரு கணத்தில் கண்கள் நிறைந்து தடுமாறிய ஈஸ்வர் மறு கணம் தன்னை சுதாரித்துக் கொண்டு மெல்ல பேச்சை மாற்றினான். அந்த ஒரு கணம் விஷாலியின் மனதில் சாசுவதமாகத் தங்கி விட்டது. அவன் தந்தைக்கும் அவனுக்கும் இடையே இருந்த அந்த பாசத்தின் ஆழம் அவள் மனதை இளக வைத்தது. அந்தக் கணம் அவன் தனித்தன்மையை கோடிட்டுக் காட்டியதாக அவள் நினைத்தாள். எதையும் மிக ஆழமாய் உணர முடிந்த நுண்ணிய உணர்வுகள் மிக்க மனிதன் அவன் என்பதும் ஆனால் எப்போதும் எல்லா உணர்வுகளையும் கட்டுப்பாட்டுடன் வைத்துக் கொள்ள முடிந்த மனிதன் என்பதும் தெளிவாக அவளுக்குத் தெரிந்தது. எத்தனை வேகமாக தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்கிறான் என்று மனதிற்குள் அவள் வியந்தாள். அவள் ஈஸ்வரைப் பார்த்த பார்வையைப் பார்க்க சகிக்காமல் மகேஷ் கண்களை மூடிக் கொண்டான்.

சாப்பிடும் போது ஈஸ்வர் விஷாலியை நிறைய கேள்விகள் கேட்டான். அவளுடைய பொழுது போக்குகள், ஃபேஷன் டிசைன் நுணுக்கங்கள், அவள் படிக்கும் புத்தகங்கள் என்று கேட்டுத் தெரிந்து

*கொண்டான். அவள் சொல்லாத ஒரு விஷயத்தை தென்னரசு சொன்னார். ”மாசம் ஒரு தடவையாவது இவ முதியோர் இல்லம், அனாதை இல்லம், பைத்தியக்கார ஆஸ்பத்திரின்னு போயிடுவா. ஒரு நாள் முழுசும் அவங்களோட இருந்துட்டு வருவா. இவளால முடிஞ்ச சர்வீஸ் செய்துட்டு வருவா... ஒரு பெயிண்டிங் வித்த காசு கிடைச்சா கண்டிப்பா இந்த மூணு இடத்துல ஒரு இடத்துக்குப் போய் காசையும் தந்துட்டு வருவா....”*

*ஈஸ்வர் அவளைப் பார்த்த பார்வையில் மதிப்பும், வியப்பும் இருந்தன. ”விஷாலி உனக்கு நாளைக்கு நேரம் கிடைச்சா என்னை இதுல ஏதாவது இடத்துக்குக் கூட்டிகிட்டுப் போறியா? நேரமில்லைன்னா பரவாயில்லை. அட்ரஸ் சொன்னா நானே போய்க்குவேன்...”*

*“இல்லை நாளைக்கு நான் ஃப்ரீ தான்”*

*நரகம் என்ற நான்கெழுத்துக்கு அர்த்தம் அடுத்த இரண்டு மணி நேரங்களில் முழுவதுமாக மகேஷ் அனுபவித்து உணர்ந்தான். நாளை போகிற இடத்துக்கு இருவருமே அவனை அழைக்கவில்லை.... அவர்கள் சேர்ந்தே தனியாகப் போகப் போகிறார்கள்.... அவன் உள்ளுக்குள் மேலும் வெந்து பொசுங்கினான்.*

*ஈஸ்வரும் விஷாலியும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்ட பார்வையில் ஒருவித உஷ்ணம் தெரிந்ததாக அவனுக்குத் தோன்றியது. சிறிய வயதில் இருந்தே பழகியும் விஷாலியிடம் அவனால் ஏற்படுத்த முடியாத ஒரு ஈர்ப்பை சில மணி நேரங்களிலேயே ஈஸ்வர் ஏற்படுத்தியது மனதை ரணமாக்கியது. அவளது ஈர்ப்புக்குக் காரணம் ஈஸ்வரின் அழகு அல்ல என்பதை மகேஷ் அறிவான். ஏனென்றால் ஈஸ்வரை விட அழகான ஒரு இளைஞன் கல்லூரியில் விஷாலி பின்னாலேயே சில காலம்*

சுற்றியும் அவள் அவனைக் கண்டு கொள்ளவில்லை. அந்த இளைஞன் மாடலாகி பிரபலமாகி இப்போது சினிமாவில் கூட நடித்துக் கொண்டிருக்கிறான். அவளைக் கவர வேறு ஏதோ தேவைப்பட்டது. அது ஈஸ்வரிடம் இருந்தது போலிருக்கிறது. ஈர்ப்பிலிருந்தும் மேலே செல்ல நிறைய உயர்ந்த குணங்கள் தேவைப்பட்டன. துரதிர்ஷ்டவசமாய் ஈஸ்வரிடம் அதெல்லாம் இயல்பாகவே இருந்தன... இவர்களுக்குள் விரிசலை ஏற்படுத்த வேண்டுமானால் அந்த உயர்ந்த குணம் எல்லாம் நடிப்பு என்று அவளை நம்ப வைக்க வேண்டும். ஏனென்றால் அவள் எல்லாவற்றையும் விட அதிகமாக தனிமனித நாணயத்தையும், ஒழுக்கத்தையும் முக்கியமாக நினைப்பவள்..... மகேஷ் தீவிரமாக சிந்திக்க ஆரம்பித்தான்...

**************

எந்தக் கோயில் என்று கண்டுபிடித்தது பார்த்தசாரதியின் கீழ் வேலை பார்க்கும் ஒரு போலீஸ்காரர் தான். அவர் ஆன்மிக ஈடுபாடு அதிகம் உடையவர். பக்தி சிரத்தையுடன் கோயில் கோயிலாகப் போபவர். “சீர்காழி சார். நான் அங்கே மூணு தடவை போயிருக்கேன். அந்தக் குளத்துக்குப் பேர் பிரம்மதீர்த்தம். அந்த பிரம்மதீர்த்தக்கரையில் தான் திருஞானசம்பந்தருக்கு பார்வதி ஞானப்பால் கொடுத்தது..... அந்தக் கோயில்ல தான் திருஞானசம்பந்தர் ’தோடுடைய செவியன்’ பாடினார்.....”

அந்தக் கதையைக் கேட்கும் மனநிலையில் பார்த்தசாரதி இல்லை. அந்த நபர் பேசப் பேச சீர்காழி போலீஸ் ஸ்டேஷனுக்குப் போன் செய்தார். கிழவி சொன்ன அடையாளங்களுடன் ஏதாவது ஒரு இளைஞன் இருக்கிறானா என்று பார்த்து வரச் சொன்னார். இருந்தால் அவனைப் பிடித்து வைக்கும் படியும் அவர் உடனேயே கிளம்பி வருவதாகவும் சொன்னார். ஆனால் உண்மையில் ஈஸ்வர்

நம்பினாலும் அந்தக் கிழவி சொன்னதில் அவருக்குப் பெரிதாய் நம்பிக்கை இருக்கவில்லை.

அவர் போன் செய்து அரை மணி நேரத்தில் போலீஸார் சீர்காழி கோயிலில் இருந்தனர். அங்கிருந்தவர்களை விசாரித்த போது சொன்னார்கள்.

“ஆமா சார்.... பத்து நாளா ஒரு இள வயசுப்பையன் இங்கே தான் இருந்தான். நாங்க ஆரம்பத்துல அவனைப் பைத்தியம்னு நினைச்சோம்... ஆனா அவன் பைத்தியம் இல்லை சார். சுலோகங்கள் எல்லாம் நல்லா சொல்றான்... பக்தியில முத்தின ஒரு டைப் போல தான் தெரிஞ்சுது. மந்திரங்கள் சொல்லிகிட்டே இருப்பான்.... குளத்துல திடீர்னு குளிப்பான்.... சிவனைப் போய் கும்பிடுவான்.... பழையபடி குளத்துப் படிக்கட்டுல வந்து உக்காந்துக்குவான்....”

“ஆமாங்க... நீங்க சொன்ன மாதிரி பையன் இங்கே கொஞ்ச நாளா இருந்தான். எங்கேயோ பயந்து போன மாதிரி இருக்கு....அடிக்கடி நடுங்குவான்... கேட்டா எந்தக் கேள்விக்கும் பதில் சொல்ல மாட்டான். நம்மளையே வெறிச்சுப் பார்ப்பான்... யார் பெத்த புள்ளையோ, எதைப் பார்த்து பயந்தானோ... யார் கிட்டயும் எதுவும் கேட்க மாட்டான். கொடுத்தா கொஞ்சம் சாப்பிடுவான்... கோயில் சாத்தறப்ப வெளியே வாசல்லயே தங்கி இருப்பான். கோயில் திறந்தவுடனே உள்ளே வந்துடுவான். கோயில் குளத்துப்படியிலே உக்காந்திருந்தான்....”

”ஐயா என்னடா இப்படி சொல்றாளேன்னு தப்பா நினைக்காதீங்க. நான் இங்கேயே பூ விக்கறவ தான். படிக்காதவ தான். ஆனா ஆளுக எப்படின்னு நான் கரிக்டா கண்டுபிடிச்சுடுவேன். அந்த பையன் வேற யாரும் இல்ல. திருஞானசம்பந்தரே தான்... இல்லாட்டி எதுக்கு வந்து அந்தப்படிக்கட்டுலயே

உட்காந்திருக்கணும்... ஒரு நாள் ரெண்டு நாள் இல்ல. பத்து நாளா வந்து நல்லா பக்தியில உட்கார்ந்தப்பவே நான் புரிஞ்சுகிட்டேன்... தினம் சாமி கும்பிட்டுட்டு வர்றப்ப அவரையும் கும்பிட்டு தான் வருவேன்....”

“இந்த பொம்பிள அந்தப் பையனைக் கும்பிட ஆரம்பிச்சவுடனே கோயிலுக்கு வர்ற பல பேரும் அவனைக் கும்பிட ஆரம்பிச்சுட்டாங்க.... அந்தப் பையன் என்னடான்னா ஆளுகளைப் பார்த்தாலே நடுங்கறான். இவங்க என்னடான்னா அதைப் பார்த்துட்டு அருள் வந்துட்டதா சொல்லி அக்கப்போர் பண்ணிட்டாங்க. நல்ல வேளையா ஒரு மணி நேரத்துக்கு முன்னாடி தான் அந்தப் பையனை கூட்டிகிட்டு போயிட்டாங்க. இல்லாட்டி இந்தப்படிக்கட்டுலயே அவனுக்கு தனியா பூஜையும் ஆரம்பிச்சிருப்பாங்க....”

“அந்தப் பையனைக் கூட்டிகிட்டு போனது யாருன்னா கேட்கிறீங்க. மூணு பேர் வந்தாங்க. அதுல ஒருத்தன் அவன் அண்ணனாம்...இன்னொருத்தன் ப்ரண்டாம்... இன்னொருத்தன் மாமனாம்.. வைட் இண்டிகா கார்ல வந்தாங்க. கார் நம்பர கவனிக்கல.... அவசர அவசரமா அவனைக் கூட்டிகிட்டு போனாங்க... இந்த பூக்காரி தான் மெனக்கெட்டு போய் அட்ரஸ் கேட்டிருக்கா. அவங்களும் கொடுத்தாங்க போல இருக்கு. இன்னும் இவ அந்த விலாசத்துக்கு அடிக்கடி போய் அவன் தான் ஞான சம்பந்தம்னு சொல்லி ரவுசு பண்ணாம இருந்தா சரி...”

போலீஸார் பூக்காரியிடம் போய் அந்த நபர்கள் தந்து விட்டுப் போன விலாசம் வாங்கினார்கள். அது கும்பகோணத்து விலாசமாக இருந்தது. அது பொய்யான விலாசம் என்று சிறிது நேரத்தில் தெரிந்து விட்டது.

எல்லா விவரங்களும் பார்த்தசாரதிக்கு சில மணி நேரங்களில் விரிவாகத் தெரிவிக்கப் பட்டது. பார்த்தசாரதி திகைத்துப் போனார். கிழவி சொன்னது கற்பனை அல்ல என்பதையும், போலீஸார் போவதற்கு ஒரு மணி நேரம் முன்பு அந்த இளைஞனை சிலர் வந்து அவசர அவசரமாக அழைத்துப் போனதையும் உடனடியாக ஜீரணிக்க அவரால் முடியவில்லை.

இந்த வழக்கில் அறிவுக்கு எட்டாத பலதும் சர்வ சகஜமாக நடப்பது அவருக்கு தலைசுற்ற வைத்தது.

# அத்தியாயம் - 36

அன்றெல்லாம் ஈஸ்வரின் நினைவில் விஷாலியே இருந்தாள். அவளுடன் இருந்த போது அவளைப் பார்த்த அளவு அவனுக்கு சலிக்கவில்லை. அவன் இப்படி ஒரு உணர்வை இது வரை உணர்ந்ததில்லை. விஷாலியிடம் விடை பெற்ற போது நீண்டகாலம் பழகிப் பின் பிரிவது போல அவனுக்குத் தோன்றியது.

அவள் மீதிருந்த நினைவுகளின் தாக்கத்தில் ஈஸ்வர் பக்கத்தில் இழவு வீட்டில் இருப்பது போல் இருந்த மகேஷின் முகபாவத்தைக் கவனிக்கவில்லை. அவன் என்றைக்குமே மகேஷை நல்ல சந்தோஷமான மனநிலையில் பார்க்காத காரணத்தால் அவனுடைய சவக்களைக்குப் பிரத்தியேக அர்த்தத்தை அவன் உணரவில்லை.

ஈஸ்வர் நிறைய அழகான பெண்களைச் சந்தித்திருக்கிறான். ஒருசிலர் அவன் மீது விருப்பமும் தெரிவித்திருக்கிறார்கள். ஆனாலும் அவன் மனதில் யாரும் இடம் பிடித்ததில்லை. முதல் பார்வையிலேயே காரணம் புரியாமல் சிலிர்க்க வைத்ததில்லை. விஷாலியுடன் பழகும் போது ஒரு அழகான இசை,

சுகமான தென்றல், கவிதை போன்ற நளினம் – இது போல் எல்லாம் அவன் உணர்ந்தான். எல்லாவற்றிற்கும் மேலாக அவளுடைய நல்ல மனது அவனை மிகவும் கவர்ந்தது. மிக நல்ல பெற்றோருக்குப் பிறந்து அவர்களால் வளர்க்கப் பட்ட அவன் அழகு, அறிவு, சாதனை, செல்வம், புகழ் இவை எல்லாவற்றையும் விட மனிதனுக்கு முக்கியமானது அவன் நல்லவனாக இருப்பதே என்று நம்பினான். அதனால் அத்தை சொன்னது போல அவள் ஸ்பெஷல் தான் என்று நினைத்தான். அவனையும் அறியாமல் அடிக்கடி அவன் உதடுகள் ஒரு ஆங்கிலக் காதல் பாடலை முணுமுணுத்தன.

அவனிடம் ஏற்பட்டிருந்த மாற்றத்தை முதல் முதலில் கண்டுபிடித்தவள் ஆனந்தவல்லி தான். மற்றவர்களைக் கூர்ந்து கவனித்து எடை போடுவதில் வல்லவளான அவளுக்கு ஈஸ்வர் வந்ததில் இருந்து அவனைக் கவனிப்பதைத் தவிர வேறு எந்த வேலையும் இல்லாததால் விஷாலி வீட்டில் இருந்து அவன் வந்த சிறிது நேரத்திலேயே அது வரை இல்லாத ஒருவித சந்தோஷத்தை அவனிடம் பார்த்தாள். அவன் ஏதோ ஒரு பாடலை அடிக்கடி முணுமுணுக்க அவள் சந்தேகம் உறுதியாயிற்று.

“என்னடா ரொம்ப சந்தோஷமாய் இருக்கிற மாதிரி இருக்கு”

கிழவியிடம் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் போல் இருக்கிறதே என்று நினைத்தவனாய் ஈஸ்வர் சொன்னான். “நான் எப்பவும் மாதிரி தானே இருக்கேன்”

”இங்கே வந்ததுல இருந்து நீ பாடி நான் கேட்டதே இல்லையேடா. காதலாடா?”

“பாடினா காதல்னு அர்த்தமா?”

*“உன்னை மாதிரி கடுகடுன்னு இருக்கறவன் பாடினா அப்படித் தான் அர்த்தம். இந்தியாவில நீ எந்தப் பொண்ணைக் காதலிச்சாலும் பரவாயில்லை. ஒரு வெள்ளைக்காரியையோ, ஒரு சைனாக்காரியையோ, ஒரு ஆப்பிரிக்காக்காரியையோ காதலிச்சு கல்யாணம் செய்துக்கறதை விட தேவலை.”*

*”ஏன் அவங்களுக்கெல்லாம் என்ன குறைச்சல்...”*

*“பொறக்கற குழந்தை சுண்ணாம்பு வெள்ளையிலயோ, சப்பை மூக்காவோ, கருகருன்னோ பிறந்துடப் போகுது....”*

*இந்தப் பாட்டிக்கு என்ன ஆயிற்று என்பது போல அவன் கிண்டலாகப் பார்த்தான். குழந்தை பெற்றுக் கொள்ளும் வரை கற்பனை பாய்ந்து விட்டதே என்று நினைத்தான். “அப்புறம் எப்படி பிறக்கணும்.?..”*

*”எனக்கு உன்னை மாதிரியே ஒரு குழந்தையைப் பெத்துக் குடுடா. அது போதும்”*

*”உங்க புருஷன் மாதிரியே நானிருக்கேன். என்னை மாதிரியே என் குழந்தையும் இருந்துட்டா இந்த வீட்டுல கார்பன் காப்பி நிறைய ஆயிடும்” என்று ஈஸ்வர் சிரித்தான்.*

*”நான் என் குழந்தைகள்ல ஒண்ணாவது பார்க்க அவர் மாதிரி வேணும்னு நினைச்சேன். பிறந்தது ஒண்ணு கூட அவர் மாதிரி இல்லை. பேரனும் அப்படி அமையில. கொள்ளுப்பேரன் நீ அப்படி இருக்கிறே. ஆனா சின்னதுல இருந்து உன்னைப் பார்க்க குடுத்து*

*வைக்கல. எனக்கு சின்னக் குழந்தையில இருந்து பார்க்கணும்னு ஆசையா இருக்குடா" ஆனந்தவல்லி ஆத்மார்த்தமாகச் சொன்னாள்.*

*"என்னவோ நான் கல்யாணம் செய்துட்டு இங்கேயே செட்டில் ஆயிடுவேன்கிற மாதிரி பேசறீங்க"*

*"நீ அமெரிக்காவுக்கு போனா நானும் அங்கேயே வந்துடறேன். எனக்கு எங்கேயானா என்ன?"*

*ஈஸ்வருக்கு ஒரு கணம் அவள் சொன்னதெல்லாம் மனம் நெகிழ வைத்தது. ஆனால் வெளியே காட்டிக் கொள்ளாமல் "ஐயோ, இங்கேயே கண்ணைக் கட்டுது. அங்கேயுமா?" என்று சொல்லியவன் இடத்தைக் காலி செய்தான். அங்கே மேலும் இருந்தால் அவன் காதலிப்பது யாரை என்று மெல்ல அவள் கேட்க ஆரம்பித்தாலும் ஆரம்பிக்கலாம் என்ற பயம் அவனை முக்கியமாகப் பிடித்துக் கொண்டது.*

*அவர்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டு இருந்த மகேஷ் மனதினுள் எரிமலையே வெடித்து விட்டது. அவன் காதலியை ஒரே நாளில் ஈஸ்வர் மாற்றியதுமில்லாமல் குழந்தை பெற்றுக் கொள்வது வரை நினைக்க ஆரம்பித்தால் அவனுக்கு எப்படி இருக்கும்?*

*மறுநாள் ஈஸ்வர் மீனாட்சியின் காரில் தனியாகவே விஷாலி வீட்டுக்குச் சென்றான். போகும் போது அவன் மகேஷை வருகிறாயா என்று கூடக் கேட்கவில்லை. விஷாலியும் மகேஷிடம் போனில் கூட எதுவும் கேட்கவில்லை. அவர்கள் தனியாகச் செல்வது அவனுக்கு வேறு சில கற்பனை பயங்களை வேறு ஏற்படுத்தியது. பேச்சு மட்டுமல்லாமல் வேறு ஏதாவது அவர்களுக்குள் நிகழ்ந்து விடுமோ என்று பயந்தான். விஷாலி அந்த மாதிரி பெண் அல்ல. ஆனால்*

ஈஸ்வரை அவனால் நம்ப முடியவில்லை. அவன் அவளை ஹிப்னாடிசம் மாதிரி ஏதாவது செய்து வரம்புகளை மீறி விடுவானோ? அமெரிக்காவில் பிறந்து வளர்ந்தவனுக்கு இது பெரிய விஷயமாகத் தெரியாது. மேலும் அவன் அழகாய் வேறு இருக்கிறான், அவளும் அவனிடம் மயங்கிப் போயிருக்கிறாள்.... மகேஷிற்கு இருப்பு கொள்ளவில்லை....

ஈஸ்வர் விஷாலி வீட்டுக்குப் போவதற்கு முன் ஒரு ஃபோட்டோ ஸ்டூடியோவுக்குப் போய் தன் பெற்றோரின் புகைப்படத்தை பெரிதாய் லேமினேட் செய்து தரக் கொடுத்து விட்டுச் சென்றான். மாலையே வேண்டுமென்று சொல்லி, கண்டிப்பாகக் கிடைத்து விடும் என்ற உத்திரவாதம் வாங்கிக் கொண்டு தான் கிளம்பினான்.

வீட்டில் தென்னரசு ஏதோ வேலையாக வெளியே போயிருந்தார். விஷாலி ஈஸ்வருக்காக இனம் புரியாத பரபரப்பான ஆவலுடன் காத்திருந்தாள். வழக்கமாக தோற்றத்திற்கு அதிக முக்கியத்துவம் தராதவள் இன்று கண்ணாடி முன் நிறைய நேரம் இருந்தாள். அவன் கார் ஹாரன் சத்தம் கேட்ட போது அவள் இதயம் அநியாயத்திற்குப் படபடத்தது. “என்ன ஆச்சு எனக்கு. டீன் ஏஜ் பொண்ணு மாதிரி நடந்துக்கறேன்” என்று தன்னைத் தானே கோபித்துக் கொண்டு பரபரப்பு, படபடப்பு இரண்டையும் அடக்கிக் கொண்டு அவள் வெளியே வந்து ஈஸ்வரை வரவேற்றாள்.

அவளைப் பிரிந்து ஒரு நாள் கூட முழுமையாக முடியவில்லை என்றாலும் அவனுக்கும் அவளைப் பார்த்த போது நீண்ட காலம் பிரிந்து பின் சந்திப்பது போல மனம் குழந்தை போல குதூகலித்தது. இன்று அவள் அழகு மேலும் கூடி இருப்பது போல் பட்டது. பார்த்துக் கொண்டே இருக்கலாம் என்று தோன்றியது.

இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு சிறிது நேரம் நின்றார்கள். அந்த மௌனம் நிறைய பேசியது. மனங்கள் நேரடியாகப் பேசும் போது வார்த்தைகள் அனாவசியம் தானே?

”எங்கே போகலாம் விஷாலி?”

”அன்பாலயம்கிற அனாதை ஆஸ்ரமத்திற்குப் போன் செஞ்சு நாம வர்றதா சொல்லி இருக்கேன்”

“அங்கே எத்தனை குழந்தைகள் இருப்பாங்க விஷாலி?”

“இருபத்தி ஒரு குழந்தைகள் இருக்காங்க”

“அவங்களுக்குத் தர ஏதாவது கிஃப்ட் வாங்கிட்டு போகலாமா?”

ஒரு கடையில் அந்த அனாதைக் குழந்தைகளுக்குப் பரிசுகள் தேர்ந்தெடுக்கும் போது தான் அன்றைய தினம் அவனுடைய அப்பாவின் இறந்த நாள் என்று அவளிடம் தெரிவித்தான். சொல்லும் போதே அவன் முகத்தில் லேசாக சோகம் பரவியது. அவனது அழகான முகத்தில் சோகம் பரவுவதை அவளால் பார்க்க முடியவில்லை. அந்த நினைவு நாளை நல்ல தர்ம காரியங்களில் செலவழிக்கும் அவன் நல்ல மனது அவளுக்குப் பிடித்திருந்தது. யோசித்துப் பார்த்தால் அவனிடம் பிடிக்காத விஷயமே அவளுக்கு இருக்கவில்லை...

தந்தையின் நினைவில் ஆழ்ந்த அவனை ஆறுதல் படுத்தும் விதமாக அவன் தோளை அவள் தொட்டாள். அவளுடைய

*புரிதலிலும், கரிசனத்திலும் மனம் நெகிழ்ந்தவனாய் அவள் கையை அழுத்தி மௌனமாக அவன் நன்றி சொன்னான்.*

*அன்பாலயம் என்ற அந்த அனாதை இல்லத்தின் மெயின் கேட்டைக் கடந்தவுடன் வலது புறம் ஒரு அரசமரத்தின் அடியில் ஒரு வினாயகர் சிலை இருந்தது. விஷாலி ஒரு நிமிடம் நின்று அந்த வினாயகரை வணங்கி விட்டு ஈஸ்வரை இல்லத்துக்குள் அழைத்துச் சென்றாள்.*

*மூன்று வயதிலிருந்து பதினான்கு வயது வரை 21 குழந்தைகள் இருந்தார்கள். விஷாலி அடிக்கடி அங்கே போகிறவளாக இருந்ததால் குழந்தைகள் முகமலர்ச்சியோடு அவளை சூழ்ந்து கொண்டார்கள். ஈஸ்வரை அந்தக் குழந்தைகளுக்கு அறிமுகப்படுத்திய போது ஒரு ஏழு வயது சிறுவன் கேட்டான். "ஆண்ட்டி, இது தான் நீங்க கல்யாணம் செய்துக்கப்போற அங்கிலா?"*

*அவன் எதனால் அப்படிக் கேட்டான் என்று தெரியவில்லை. விஷாலியின் முகம் சிவந்தது. ஈஸ்வர் அவள் வெட்கத்தை மனதினுள் ரசித்தான். அதற்குப் பதில் எதுவும் சொல்லாமல் விஷாலி பேச்சை மாற்றினாள். அவள் இதற்கு முன் மகேஷோடு சில முறை வந்திருக்கிறாள். மகேஷிற்கு இது போன்ற இடங்களுக்கு வருவது பாவற்காயை பச்சையாகச் சாப்பிடச் சொல்வது போலத் தான் என்றாலும் அவளுக்காக ஆர்வத்துடன் வருவது போல் நடிப்பான். அங்கே இருக்கின்ற ஒவ்வொரு நொடியும் ஒவ்வொரு யுகமாய் நகரும்...*

*ஆனால் ஈஸ்வர் அங்கிருந்த குழந்தைகளுடன் சேர்ந்து மிக சந்தோஷமாக இருந்தான். பரிசுப் பொருள்களை வாங்கும் போது அவர்கள் முகத்தில் தெரிந்த அளவற்ற மகிழ்ச்சி அவன் மனதை*

*நெகிழ வைத்தது. அவர்களுடன் பேசினான், விளையாடினான், பாடினான்.... அவன் சிறிதும் கர்வம் இல்லாமல், அவர்களுடன் ஒன்றிப் போன விதம் விஷாலியை வியக்க வைத்தது.....*

***************

*குருஜி காலையில் ஒன்பது மணிக்கு சிவலிங்கத்தை தரிசிக்க வருகிறார் என்பதால் கணபதியை அங்கிருந்து கிளப்பி மாலை வரை அப்புறப்படுத்தி வைப்பது என்பது முடிவெடுக்கப் பட்டது. முந்திய தினம் இரவே கணபதியிடம் வந்து ஒருவன் சொன்னான்.*

*“நாளைக்குக் காலைல பூஜை முடிந்த பிறகு ரெடியா இருங்க. நூறு மைல் தூரத்துல ஒரு சக்தி வாய்ந்த பஞ்சமுக ஆஞ்சனேயர் கோயில் இருக்கு. அங்கே உங்களைக் கூட்டிகிட்டு போக குருஜி சொல்லி இருக்கார்”*

*கணபதி ஆச்சரியத்துடன் கேட்டான். “ஏன்?”*

*”வந்ததுல இருந்து நீங்க ஒரே இடத்துல இருக்கறதால போரடிச்சுப் போய் இருக்கும்னு நினைச்சு சொல்றார்”*

*“உங்களுக்கு எதுக்கு சிரமம். எனக்கு போரடிக்கலை. அதான் கூட சிவன் இருக்காரே”*

*சிவனை நிஜமான ஒரு ஆள் போலப் பேசும் கணபதியைத் திகைப்புடன் பார்த்தவன் சொன்னான். ”குருஜி சொன்னதுக்கப்புறம் தட்ட முடியாது. நீங்க காலையில சீக்கிரம் பூஜையை முடிச்சுட்டு ரெடியா இருங்க”*

*”எத்தனை மணிக்கு பஸ்ஸு?”*

"பஸ்ஸா? குருஜி உங்களை ஏ.சி.கார்ல கூட்டிகிட்டு போகச் சொல்லி இருக்கார்"

குருஜியின் அன்பு மழையில் கணபதி திக்குமுக்காடிப் போனான். "இந்த ஏழைக்கு எதுக்கு ஏ.சி. கார்....."

ஏதோ ஒரு வேற்றுக் கிரகவாசி போல கணபதியைப் பார்த்து விட்டு மீதிப் பேச்சைக் கேட்க நிற்காமல் அவன் போய் விட்டான்.

மறு நாள் சிவனுக்குப் பூஜை செய்து விட்டு கணபதி சிவனிடம் விடை பெற்றுக் கொண்டான். "சரி, நான் பஞ்சமுக ஆஞ்சநேயரை தரிசனம் செஞ்சுட்டு வந்துடறேன். சாயங்கால பூஜைக்குள்ளே வந்துடறேன்... வரட்டுமா?"

கார் டிரைவரிடம் ஒரே ஒரு விஷயத்தை திருப்பித் திருப்பி சொல்லி இருந்தார்கள். பஞ்சமுக ஆஞ்சநேயர் கோயில் மட்டுமல்லாமல் வழியில் இருக்கும் மற்ற கோயில்களுக்கும் கணபதியை அழைத்துப் போய் வரும்படியும், எந்தக் காரணத்தைக் கொண்டும் மாலை ஐந்து மணிக்கு முன் வேதபாடசாலைக்கு கணபதியை அழைத்து வந்து விடக்கூடாது என்றும் சொல்லி இருந்தார்கள்.

ஏ.சி காரில் போகும் போது கணபதி தன் தாயை நினைத்துக் கொண்டான். "பாவம் அம்மாவும் இப்ப கூட இருந்திருந்தா சந்தோஷப்பட்டிருப்பா. அவ இது வரைக்கும் கார்ல போனதே இல்லை. அதுவும் ஏ.சி கார்ல எல்லாம் போனதே இல்ல. எப்பவாவது ஒரு தடவை கைக்காசு போட்டாவது இப்படி எங்கேயாவது கூட்டிகிட்டுப் போகணும். பாவம் கஷ்டத்துலயே அவ

*காலம் போயிடுச்சு.... என்னை மாதிரி இல்லாம நல்ல புத்திசாலியாய் ஒரு பிள்ளைய பெத்திருந்தா நல்லா இருந்திருப்பாளோ என்னவோ!"*

*காரில் அவன் தூங்கிப் போனான். திடீரென்று கார் நிற்க விழித்துக் கொண்டான். "அதுக்குள்ள பஞ்சமுக ஆஞ்சநேயர் கோயில் வந்துருச்சா?"*

*"இல்லை சாமி. கார் ரிப்பேர் ஆயிடுச்சு" என்ற டிரைவர் கீழே இறங்கி காரை பரிசோதனை செய்தான்... பிறகு வழிப்போக்கர் சிலரிடம் பக்கத்தில் வர்க்ஷாப் எங்கே இருக்கிறது என்று விசாரித்து விட்டு வந்தான்.*

*"சாமி, ரெண்டு மைல் தூரத்துல ஒரு வர்க்ஷாப் இருக்காம்... நான் ஆட்டோல போய் அந்த மெக்கானிக்க கூட்டிகிட்டு வர்றேன். வெய்ட் பண்றீங்களா?"*

*கணபதி தலையசைத்தான். 'ஆஞ்சநேயரை நான் அதிகமா கும்பிட்டதில்லை. அதனால நான் அங்கே வர்றது அவருக்குப் பிடிக்கலையோ?' என்ற சந்தேகம் அவனுக்கு வந்தது.*

*டிரைவர் ஆட்டோவுக்காக காத்திருக்கையில் கணபதி கார் ஜன்னல் வழியே பார்த்தான். அருகில் "அன்பாலயம்" என்ற பெயர்ப்பலகையுடன் ஒரு கட்டிடம் இருந்தது. அந்தக் கட்டிடத்தின் முன் வேறொரு கார் நின்றிருந்தது. கேட் சிறிது திறந்திருந்தது. திறந்திருந்த கேட் வழியே ஒரு அரசமரத்தடி பிள்ளையாரும் தெரியவே கணபதி புன்னகைத்தான்.*

அந்த டிரைவரைக் கூப்பிட்டு சொன்னான். ”நீங்க போய்ட்டு வாங்க. நான் அந்த பிள்ளையார் பக்கத்துல உட்கார்ந்திருக்கேன்...”

டிரைவரும் அந்தப் பிள்ளையாரைக் கவனித்து விட்டு “சரி சாமி” என்றான்.

அவன் ஆட்டோ கிடைத்து அதில் ஏறிப் போக கணபதி அந்த கேட்டைத் தாண்டி உள்ளே போய் பிள்ளையாரைப் புன்னகையுடன் நெருங்கினான். ’அசப்புல என்னோட பிள்ளையார் மாதிரியே இருக்கார். பாவம் இவரும் தனியா தான் உக்காந்திருக்கார்...”

# அத்தியாயம் - 37

அந்த அனாதைக் குழந்தைகளுடன் நேரம் போவதே தெரியாமல் விளையாடிக் கொண்டிருந்த ஈஸ்வர் தற்செயலாகத் தான் ஜன்னல் வழியாக அந்த நபரைப் பார்த்தான். ஐந்தடிக்கும் குறைவான உயரம், குடுமி, வேட்டியைக் கச்சை கட்டி தோளில் ஒரு துண்டு போட்டுக்கொண்டு பிள்ளையார் சிலைக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு இருக்கும் அந்த நபர் ஏதோ மந்திரம் சொல்லிக் கொண்டிருப்பது போலத் தான் ஆரம்பத்தில் அவனுக்குத் தோன்றியது. ஆனால் அந்த நபரின் முகத்தில் தெரிந்த சிரிப்பும், கையை ஆட்டிய விதமும் அது மந்திரம் சொல்வதல்ல, எதையோ பேசிக் கொண்டு இருப்பது என்று பின்பு தான் அவனுக்குப் புரிய வைத்தது.

அன்பாலயம் நிர்வாகியை அழைத்து ஈஸ்வர் கேட்டான். “அது யார்? அந்த வினாயகருக்குப் பூஜை செய்பவரா?”

அவர் ஜன்னல் வழியாகப் பார்த்து விட்டு சொன்னார். “யார்னு தெரியலையே. பிள்ளையாருக்கு பூஜை செய்ய இங்கே ஆள் எல்லாம் இல்லை. எங்கள்லயே யாராவது ஒருவர் பூஜை செய்வோம் அவ்வளவு தான்...”

விஷாலியும் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தாள். அவளுக்கும் அந்தக் காட்சி வித்தியாசமாக இருந்தது. சிறிது கவனித்து விட்டுப் புன்னகையுடன் சொன்னாள். ”வினாயகருக்கு ஃப்ரண்ட் போல இருக்கு. ஏதோ ஆள் கிட்ட பேசற மாதிரியே பேசறார்”.

ஈஸ்வருக்கு ஏனோ அந்த நபரிடம் சென்று பேசத் தோன்றியது. அவன் வெளியே வர விஷாலியும், நிர்வாகியும் கூட வெளியே வந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து சில பிள்ளைகளும் வெளியே வந்தார்கள்.

தனித்து ’போர’டித்துப் போய் உட்கார்ந்திருந்த பிள்ளையாருக்குப் பேச்சுத் துணை போல உட்கார்ந்திருந்த கணபதி திடீர் என்று ஆட்கள் வருவதைப் பார்க்கவே அவசர அவசரமாக எழுந்து நின்றான். கட்டிட உரிமையாளர்களிடம் அனுமதி வாங்கிக் கொள்ளாமல் உள்ளே வந்ததற்கு அவர்கள் கோபித்துக் கொள்வார்களோ என்ற பயம் அவனுக்குள் எழுந்தது.

கணபதி உடனே மன்னிப்பு கேட்டுக் கொண்டான். “மன்னிச்சுக்கோங்க. நான் இந்த வழியா கார்ல பிரயாணம் செய்துகிட்டு இருந்தேன். இங்கே வர்றப்ப கார் ரிப்பேர் ஆயிடுச்சு. மெக்கானிக்கை கூட்டிகிட்டு வர டிரைவர் போயிருக்கான். பிள்ளையாரைப் பார்த்தவுடனே சும்மா கார்ல தனியா உட்கார்றதுக்குப் பதிலா இவர் கூடயாவது பேசிகிட்டு இருக்கலாமேன்னு இங்கே வந்தேன். அவ்வளவு தான்...”

*’கார்ல தனியா உட்கார்றதுக்குப் பதிலா இவர் கூடயாவது பேசிகிட்டு இருக்கலாமேன்னு இங்கே வந்தேன்’ என்ற வார்த்தைகள் ஈஸ்வரை மிகவும் கவர்ந்தன. இறைவனுடன் பேச முடிந்த ஆட்களை அவன் இது வரை பார்த்தது இல்லை. சொன்னவனின் முகத்தில் தெரிந்த வெகுளித் தனமும், பேச்சில் தெரிந்த கள்ளங்கபடமற்ற தன்மையும் நிஜமாகவே அவனால் இறைவனுடன் பேச முடியும் என்ற எண்ணத்தை ஈஸ்வர் மனதில் ஏற்படுத்தின.*

*ஈஸ்வர் கேட் வழியாகப் பார்த்த போது அவன் கார் அருகே இன்னொரு கார் இருப்பது தெரிந்தது. புன்னகையுடன் கணபதியிடம் அவன் கேட்டான். “இது தான் உங்க காரா?”*

*கணபதி கலகலவென சிரித்தான். “என் கிட்ட கார் எல்லாம் இல்ல. கடவுள் தந்த கால் மட்டும் தான் இருக்கு. இது ஒரு புண்ணியவான் தந்து ஒரு கோயிலுக்குப் போயிட்டு வர அனுப்பினது.... என்னவோ ரிப்பேராயிடுச்சு...”*

*’கடவுள் தந்த கால் மட்டும் தான் இருக்கு’ என்று தன் வறுமையை எந்தத் தயக்கமும் இல்லாமல் சிரித்தபடி சொன்ன கணபதியை ஈஸ்வருக்குப் பிடித்துப் போயிற்று. இல்லாமையை இப்படிச் சொல்ல எத்தனை பேரால் முடியும்?*

*கணபதிக்கு ஈஸ்வரையும், விஷாலியையும் பார்த்த போது சினிமா நடிகர்கள் போலத் தோன்றியது. “நீங்க சினிமாக்காரங்களா?” என்று ஈஸ்வரிடம் கேட்டான்.*

*இல்லை என்று சிரித்துக் கொண்டே சொன்ன ஈஸ்வர் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டான். “நான் ஈஸ்வர். அமெரிக்கால*

இருக்கேன். மனோதத்துவ துறையில் உதவிப் பேராசிரியராய் இருக்கேன். இவங்க விஷாலி. ஃபேஷன் டிசைனராய் இருக்காங்க. சமூக சேவகியும் கூட... நீங்க?"

"நான் கணபதி. ஒரு கிராமத்துல சின்ன பிள்ளையார் கோயில்ல பூசாரியா இருக்கேன்... உங்களுக்கு இந்தியால யார் இருக்காங்க?"

"அப்பாவோட அப்பா இருக்கார்...."

"தாத்தான்னு சொல்லுங்க"

ஈஸ்வர் சொல்லவில்லை. பேச்சுக்காகக் கூட பரமேஸ்வரனை தாத்தா என்று அவன் அழைக்காததை விஷாலி கவனித்தாள். இவனை விரோதித்துக் கொண்டால் அவ்வளவு சீக்கிரம் மன்னித்து விட மாட்டான் என்பது புரிந்தது.

"நீங்க எந்தக் கோயிலுக்குப் போய்ட்டு வரக் கிளம்பினீங்க?" என்று ஈஸ்வர் பேச்சை மாற்றினான்.

"பஞ்சமுக ஆஞ்சநேயர் கோயில் ஒண்ணு நூறு மைல் தொலைவுல இருக்கு. அங்கே போகத் தான் கிளம்பினோம். என்னை தற்காலிகமா வேறொரு இடத்துல பூஜை செய்யக் கூப்பிட்டாங்கன்னு அங்கே தான் இப்ப பூஜை செய்துகிட்டு இருக்கேன்.... என் பிள்ளையாரும் இப்படித் தான் லட்சணமா இருப்பார்... இவரைப் பார்த்தவுடனே அவர் ஞாபகம் எனக்கு வந்துடுச்சு..." சொல்லும் போதே கணபதி குரலில் ஏக்கம் தெரிந்தது.

ஈஸ்வர் கணபதியின் பாசத்தை ரசித்தான். இந்தக்காலத்தில் கடவுள் கோரிக்கைகளை நிறைவேற்றும் சக்தியாகத் தான்

*பார்க்கப்படுகிறார் என்பதை அவன் அறிவான். அவர் இப்படி நேசிக்கப்படுவது அபூர்வம் தான். அந்தப் பிள்ளையார் மிகவும் கொடுத்து வைத்தவர் என்று புன்னகையுடன் நினைத்தவனாய் கேட்டான். "நீங்க இப்ப பூஜை செய்யப் போனதும் பிள்ளையாருக்குத் தானா?"*

*"இல்லை.. அவரோட அப்பாவுக்கு... அவரும் நல்ல மாதிரி..."*

*ஈஸ்வர் புன்னகை மேலும் விரிந்தது. கணபதிக்கு குருஜி ரகசியம் காக்கச் சொன்னது நினைவுக்கு வர மேற்கொண்டு தகவல்களை இத்தனை பேர் மத்தியில் சொல்ல வேண்டாம் என்று தோன்றியது. அவன் அன்பாலயம் பற்றி விசாரித்தான். அது அனாதை ஆசிரமம் என்பதையும் ஈஸ்வர் பின்னால் நின்று கொண்டிருந்தவர்கள் எல்லாம் அனாதைக் குழந்தைகள் என்பது தெரிந்த போது அவன் கண்களில் நீர் கோர்த்தது.*

*ஈஸ்வர் அந்த விழிகளின் ஈரத்தைக் கவனித்தான். அவனுக்கு கணபதியை மேலும் அதிகமாக பிடித்தது. இன்றைய உலகத்தின் சுயநலம், பேராசை, அலட்சியம் போன்றவைகளின் தாக்கம் சிறிதும் இல்லாமல் இத்தனை வெள்ளந்தியாக ஒரு மனிதன் இருக்க முடிவது சாத்தியம் இல்லை என்று அவனுக்குத் தோன்றியது.*

*அன்பாலயம் நிர்வாகியும் கணபதியால் கவரப்பட்டார். அவர் கணபதியை உள்ளே அழைக்க கணபதியும் அவர்களுடன் உள்ளே போனான். சிறிது நேரத்திலேயே ஈஸ்வரும், அவனும் மனதளவில் மிக நெருங்கி விட்டார்கள். கணபதி ஈஸ்வரை அண்ணா என்று பாசத்தோடு அழைக்க ஆரம்பித்து விட ஈஸ்வரும் ஏதோ பூர்வ ஜென்மத் தொடர்பு அவனுடன் இருக்க வேண்டும் என்று நினைக்க ஆரம்பித்தான். அவனும் கணபதியை ஒருமையில் அழைக்க ஆரம்பித்தான்.*

பேச்சின் போது கணபதியின் குடும்ப சூழ்நிலைகளும் தெரியவர ஈஸ்வருக்கு அப்பாவின் நினைவு நாளில் அவனுக்கு ஏதாவது நல்லதாய் வாங்கித் தர வேண்டும் என்று தோன்றியது. அன்பாலயத்தின் எதிரிலேயே ஒரு ஜவுளிக் கடை இருந்ததைப் பார்த்தது ஈஸ்வருக்கு நினைவு வந்தது. ஆனால் அவன் தவறாக நினைத்துக் கொள்வானோ என்ற தயக்கமும் அவனுக்கு இருந்தது. அனாதைகளுக்கு இணையாக நினைப்பதாக அவன் மனம் சங்கடமடைந்து விடக் கூடாது என்று ஈஸ்வர் நினைத்தான்....

கணபதி அவனிடம் கேட்டான். ”நீங்க எத்தனை நாள் இந்தியால இருப்பீங்க அண்ணா?”

“ஒரு மாச லீவுல வந்திருக்கேன் கணபதி. அதுக்குள்ளே போயாகணும்...”

”முடிஞ்சா எங்க கிராமத்துக்கு ஒரு தடவை வாங்க. எங்க பிள்ளையாரைப் பாத்துட்டுப் போங்க. எங்க கிராமம் ரொம்ப தூரம் இல்லை. பக்கம் தான். அதுவும் உங்க மாதிரி கார் இருக்கிறவங்களுக்கு வர்றது கஷ்டமே இல்லை.”

ஈஸ்வர் புன்னகைத்தான். ”டைம் கிடைக்கிறது கஷ்டம் கணபதி. பார்க்கிறேன். ஒரு வேளை உன்னை மறுபடி சந்திக்க முடியாமயும் போகலாம். என் ஞாபகார்த்தமா உனக்கு ஏதாவது வாங்கிக் கொடுத்தா தப்பா நினைக்க மாட்டியே கணபதி...”

”உங்க அன்பே போதும்ணா. நான் ஞாபகார்த்தமா அதையே வச்சுக்குவேன். வேற ஒண்ணும் வேண்டாம்...”

”ஒரு அண்ணா தம்பிக்கு எதாவது வாங்கிக் கொடுக்கணும்னு நினைக்கிறது தப்பா கணபதி. நீ வேண்டாம்னு சொல்லறதைப் பார்த்தா என்னை வேற மனுஷனா நினைக்கிற மாதிரியல்ல தோணுது...”

கணபதிக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. அவன் தர்மசங்கடத்துடன் ஈஸ்வரைப் பார்த்தான்.

ஈஸ்வர் தொடர்ந்து கேட்டான். “டிரஸ் வாங்கித் தரட்டா. எதிரிலேயே ஒரு ஜவுளிக்கடை இருக்கு.”

”டிரஸ் எல்லாம் எதுக்குண்ணா. என் கிட்ட தேவையான அளவு இருக்கு. நாலு வேஷ்டி நாலு துண்டு இருக்கு. அதுக்கும் மேல என்ன வேண்டும் சொல்லுங்க பார்க்கலாம்... சட்டை நான் போட்டுக்கறதே அபூர்வம்...”

’நாலு வேஷ்டி நாலு துண்டு’ என்பதே அதிகம் என்பது போலப் பேசிய கணபதியை அதிசயப் பிறவியைப் பார்ப்பது போல விஷாலி பார்த்தாள். ஈஸ்வர் விடாப்பிடியாக கணபதியை எதிரில் இருந்த ஜவுளிக்கடைக்கு அழைத்துச் சென்றான். விஷாலி அன்பாலயத்திலேயே இருக்க ஈஸ்வரும், கணபதியும் மட்டும் எதிரில் இருந்த ஜவுளிக்கடைக்குப் போனார்கள். கணபதி சற்று தயக்கத்துடன் தான் போனான்.

அந்த ஜவுளிக்கடை பெரிதாக இருந்தது. வாடிக்கையாளர்கள் யாரும் இருக்கவில்லை. ஈஸ்வர் பட்டுத் துணிகள் பகுதிக்கு கணபதியை அழைத்துச் சென்று நல்ல பட்டு வேட்டி ஒன்று கேட்க கணபதி “ஐயோ பட்டு வேஷ்டி எல்லாம் வேண்டாண்ணா.....” என்று ஆட்சேபித்தான்.

”நீ கொஞ்சம் சும்மா இரு கணபதி” என்று ஈஸ்வர் சொல்ல கணபதி தர்மசங்கடத்துடன் கைகளைப் பிசைந்தான். ஆனால் எடுத்துப் போட்ட வெண் பட்டு வேட்டி ஒன்று அவன் மனதை மிகவும் கவர்ந்தது. கோயிலில் பிள்ளையாருக்கு இருக்கும் ஒரே பட்டுத்துணி மிக நைந்த நிலையில் இருப்பது நினைவுக்கு வந்தது. இதை பிள்ளையாருக்கு உடுத்தினால் நன்றாக இருக்கும் என்று நினைத்தான். அவன் முகத்தில் புன்னகை அரும்பியது.

அதைக் கவனித்த ஈஸ்வர் கேட்டான். ”என்ன விஷயம்”

”இது எங்க பிள்ளையாருக்கு நல்லாயிருக்கும்” என்று கணபதி புன்னகையுடனேயே சொன்னான்.

“அப்படின்னா இதுல ரெண்டு பேக் பண்ணிடுங்க” என்று ஈஸ்வர் சொல்ல அந்தப் பட்டு வேட்டியின் விலையைப் பார்த்து மலைத்துப் போன கணபதி மறுத்தான். “அண்ணா ஒண்ணு போதும். அந்தக் கணபதிக்கு வாங்கிக் கொடுத்தா இந்தக் கணபதிக்கு வாங்கிக் கொடுத்த மாதிரி தான்.”

”பரவாயில்லை. ரெண்டு கணபதிக்கும் இருக்கட்டும். எங்கப்பாவோட நினைவு நாள்ல நான் கடவுளை மறந்துட்டேன். நீ ஞாபகப் படுத்திட்டே....”

கார் டிரைவருக்குப் போன் கால் வந்தது. ”உனக்கு அறிவு இருக்கா. எங்கே இருக்கே நீ...”

“நம்ம கார் ரிப்பேர் ஆயிடுச்சுங்கய்யா. மெக்கானிக் வேற ஒரு வண்டிய ரிப்பேர் பண்ணிட்டு இருக்கான். அதை முடிச்சவுடனே

அவனைக் கையோட கூட்டிகிட்டு போறதுக்காக நான் வெயிட் பண்ணிகிட்டிருக்கேன். ஏன் ஐயா?”

”கணபதியை அந்த ஈஸ்வர் கிட்டயே சேர்த்துட்டு ஏன்னா கேட்கறே?”

”நீங்க சொல்றது எனக்கு புரியலைங்களே ஐயா. கணபதி கார் ரிப்பேர் ஆன இடத்துக்குப் பக்கத்துல இருந்த பிள்ளையார் சிலை கிட்ட இருக்காரு”

”முட்டாள். நீ கார் ரிப்பேரே பண்ண வேண்டாம். வேற எதாவது காரை எடுத்துட்டாவது கிளம்பு. முதல்ல அவனை அங்கே இருந்து கூட்டிகிட்டுப் போ.... கணபதியும், ஈஸ்வரும் கார் ரிப்பேர் ஆன இடத்துக்கு எதிர்ல இருக்கற ஜவுளிக்கடையில இருக்காங்க. ஓடு...”

கணபதிக்கு பட்டு வேட்டி அல்லாமல் வேறு இரண்டு நல்ல காட்டன் வேட்டிகள், ஒரு சட்டை, இரண்டு துண்டுகள் எல்லாம் வாங்கிக் கொடுத்த ஈஸ்வரை கண்கள் கலங்க அவன் பார்த்தான். அவனுக்குப் பேச்சே வரவில்லை. ’யாரிவன்? பார்த்த சிறிது நேரத்திலேயே இப்படி அன்பு மழை பொழிகிறானே? நிஜமாகவே எனக்கு ஒரு அண்ணன் இருந்தால் கூட இப்படி இருக்க முடிவது சந்தேகம் தானே? இந்தக் கடனை நான் எப்படித் தீர்ப்பேன்?’

ஈஸ்வர் கேட்டான். “போகலாமா கணபதி?”

கணபதி தலையை மட்டும் அசைத்தான். ஈஸ்வர் வாங்கிக் கொடுத்திருந்த உடைகள் இருந்த பை அவன் கையில் மனதைப் போலவே கனத்தது. இருவரும் வாசலை நோக்கி நடக்க இருவருக்கு இடையில் யாரோ ஒருவர் நெருங்கினார். வழிக்கு

வேண்டி இருவரையும் விலக்குவது போல அவர் இருவரையும் தொட்டார். இருவருமே மின்சாரம் உடம்பில் பாய்ந்தது போல் உணர்ந்தார்கள். சில வினாடிகள் மூவருக்கும் இடையே மின்சாரப் போக்குவரத்து நீடித்தது. ஈஸ்வரும் கணபதியும் உடல் நடுங்க நடுவே வந்த நபர் சாதாரணமாக நின்றார். அவர் தன் கைகளை அவர்கள் உடலில் இருந்து விலக்கிய போது அவர்கள் தங்களையும் அறியாமல் விலகி தள்ளிப் போனார்கள்.

அந்த நபர் கணபதி பக்கம் திரும்பவேயில்லை. ஆனால் ஈஸ்வர் பக்கம் திரும்பி லேசாகப் புன்னகைத்து விட்டுப் போனார். அவர் கண்களில் அக்னியைப் போன்றதொரு ஒளி தோன்றி மறைய ஈஸ்வர் தன் கண்களை நம்ப முடியாமல் பெரும் திகைப்புடன் அவரைப் பார்த்தான். போகும் அவரை ஓடிப் போய் பிடித்துக் கொள்ள ஈஸ்வரின் அறிவு அலறியது. ஆனால் சிலை போல அவனால் நிற்கத் தான் முடிந்ததே ஒழிய இம்மியும் நகர முடியவில்லை. அவன் நகர முடிந்த போது அந்த நபர் மறைந்து போயிருந்தார்.

கணபதி திகைப்புடன் ஈஸ்வரிடம் சொன்னான். ”ஏதோ கரண்ட் பாஸான மாதிரி இருந்துச்சு.”

மின்சாரம் பாய்ந்த அனுபவம் தன்னுடையது மட்டுமல்ல என்பது உறுதியாகத் தெரிந்ததும் ஈஸ்வர் தெருவுக்கு ஓடிப் பார்த்தான். அந்த நபர் இரு பக்கமும் தென்படவில்லை.

மறுபடியும் கடைக்குள் ஓடி வந்தவன் கடைக்குள் இருந்த ஊழியர்களைக் கேட்டான். “இப்ப ஒருத்தர் போனாரே, யார் அவர்?”

அவர்களில் ஒருவரைத் தவிர மற்றவர்கள் வேறொரு நபர் இருந்ததையே கவனிக்கவில்லை. பார்த்த நபரும் ஈஸ்வர் கணபதிக்கு நடுவில் அந்த நபர் சென்ற போது தான் பின்னால் இருந்து பார்த்திருந்தார். அந்த நபர் எப்போது உள்ளே வந்தார், எப்படி வந்தார், எப்படி அவர்கள் இருவருக்கும் பின்னால் போனார் என்பது அந்த ஊழியருக்கும் தெரியவில்லை.

கடை முதலாளி கேட்டார். "உங்க பர்ஸ் எதுவும் காணாமல் போகலையே"

ஈஸ்வர் இல்லை என்றவுடன் அவர் ஆர்வம் குறைந்து போய் கல்லாவில் அமர்ந்தபடியே வெளியே வேடிக்கை பார்க்க ஆரம்பித்தார். கணபதி என்ன நடந்தது என்பதை இன்னும் ஜீரணிக்க முடியாமல் அப்படியே சிலை போல நின்றான். ஈஸ்வர் தான் பார்த்ததை கணபதியிடம் கூட சொல்லவில்லை. அவனும் திகைப்பும் அதிர்ச்சியும் குறையாமல் அப்படியே நின்றான். அந்த மர்ம நபரைக் கடைசி நேரத்தில் கவனித்த அந்த ஊழியர் அந்த நபர் உள்ளே வந்ததை எப்படி அனைவரும் பார்க்கத் தவறி விட்டார்கள் என்று குழம்பிக் கொண்டிருந்தார்.

அந்த நேரத்தில் கார் டிரைவர் ஓடி வந்தான். "சாமி இங்கேயா இருக்கீங்க. வாங்க போகலாம் நேரமாச்சு"

"கார் சரியாயிடுச்சா?" கணபதி கேட்டான்.

"இல்லை. அது மெக்கானிக் வந்து பார்த்துக்குவான். நான் வேற கார் கொண்டு வந்திருக்கேன். உங்களுக்கு சாயங்கால பூஜைக்குள்ளே வரணுமே... அதான்..."

*கணபதி ஈஸ்வரிடம் விடை பெற்றான். ”அண்ணா ரொம்ப நன்றி. இத்தனை வாங்கித் தந்திருக்கீங்க. திருப்பித் தர என் கிட்ட எதுவுமே இல்லை....”*

*”என்னை ஞாபகம் வச்சிரு கணபதி. அப்பப்ப உன் பிள்ளையார் கிட்ட என்னை கவனிச்சுக்கச் சொல்லு. அது போதும்.”*

*அன்பு நிறைந்த கணபதி தலையாட்டினான். அவன் ஏதோ சொல்ல வந்தான். ஆனால் கார் டிரைவர் பேச விடாமல் அவனை இழுக்காத குறையாக “சாமி நேரமாச்சு. அனுமார் கோயிலை மத்தியானம் சாத்திடுவாங்க...” என்று சொல்ல ஈஸ்வர் கணபதியைக் கைகுலுக்கி அனுப்பி வைத்தான். அப்போது இருவருக்கும் இடையே முன்பளவு இல்லாவிட்டாலும் லேசான மின்சாரம் மறுபடியும் பாயந்தது. இருவரும் திகைத்தனர். ஆனால் கணபதி வாய் விட்டு எதுவும் சொல்வதற்கு முன் கார் டிரைவர் அவனை அழைத்துக் கொண்டு போய் விட்டான்.*

*கணபதி போகும் போது திரும்பிப் பார்த்துக் கொண்டே சொன்னான். ”சரி கிளம்பறேன்ணா. அண்ணி கிட்டயும் சொல்லிடுங்க”*

*அவன் சொன்னது உடனடியாக ஈஸ்வரின் மூளைக்கு எட்டவில்லை. அவன் சிந்தனை எல்லாம் இப்போதைய மின் அதிர்வை சுற்றியே இருந்தது. அந்த மர்ம நபர் சித்தராகத் தான் இருக்க வேண்டும் என்பதில் அவனுக்கு சந்தேகம் இல்லை. அவர் இருவரையும் தொட்ட போது ஏதோ இனம் புரியாத ஒன்றை இருவருக்கும் ஒட்ட வைத்து விட்டுப் போனது போல் அவனுக்குத் தோன்றியது. அது தான் இப்போதும் அவர்களிடையே மின் அதிர்வுகளை ஏற்படுத்துகிறதோ?*

நடந்தது எதுவும் கனவல்ல என்று ஈஸ்வர் ஓரிரு முறை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டி இருந்தது. திகைப்புடனேயே அவன் ஜவுளிக்கடையை விட்டு வெளியே வந்த போது கணபதி முதலில் வந்த காரும் காணவில்லை. கணபதியும் போய் விட்டிருந்தான்.

ஈஸ்வருக்கு இந்த சிவலிங்க விஷயத்தில் தான் அறியாமலேயே வேறு விதத்திலும் சம்பந்தப்பட்டிருக்கலாம் என்ற சந்தேகம் வலுக்க ஆரம்பித்தது. இத்தனை நாட்கள் திரும்பத் திரும்ப சிவலிங்கம் தான் காட்சி அளித்தது என்றால் இப்போது அந்த சித்தரும் காட்சி அளித்து விட்டுப் போய் இருக்கிறார்.... அவர் தொட்டதன் பாதிப்பை நினைக்கையிலேயே உடல் மறுபடி சிலிர்த்தது. ஆனால் அவர் எதற்கு கணபதியையும் தொட்டார் என்ற கேள்விக்கு அவனால் விடை காண முடியவில்லை. அவனுடன் கணபதி இருந்ததாலா அல்லது வேறு காரணம் இருக்குமா?....

# அத்தியாயம் - 38

ஈஸ்வர் சிறிது நேரம் தெருவில் நின்று பார்த்தான். மறுபடியும் அந்த சித்தர் பார்க்கக் கிடைத்தாலும் கிடைக்கலாம் என்று சின்னதாய் ஒரு எதிர்பார்ப்பு அவனுக்கு இருந்தது. ஏதாவது தகவல் தெரிவிப்பதாக இருந்தால் நேரடியாக அவர் தெரிவித்து விட்டுப் போய் இருக்கலாமே என்று தோன்றியது. இந்தக் கண்ணாமூச்சு விளையாட்டுக்கு அது தேவலை அல்லவா? சின்னக் குழந்தைகள் விளையாட்டுப் போல தொட்டு விளையாட்டு எதற்கு? இதில் தேவை இல்லாமல் அந்தக் கணபதியையும் சித்தர் சேர்த்துக் கொண்டதை ஈஸ்வர் ரசிக்கவில்லை. பாவம் கணபதி...

திடீர் என்று அவன் போகையில் 'அண்ணி கிட்டயும் சொல்லிடுங்க' என்று சொன்னது இப்போது தான் ஈஸ்வர் மூளையில் உறைத்தது... ஏன் அப்படிச் சொன்னான்? எது அவனை அப்படிச் சொல்ல வைத்தது? ஆனாலும் ஏனோ ஈஸ்வருக்கு கணபதி அப்படிச் சொன்னது பிடித்திருந்தது. குறும்பாகப் புன்னகைத்துக் கொண்டே அன்பாலயத்தினுள்ளே நுழைந்தான்.

அவன் தனியாக வருவதைப் பார்த்தவுடன் விஷாலி கேட்டாள். "கணபதி எங்கே போயிட்டார்"

"அவனோட கார் டிரைவர் அவசரப்படுத்தி அவனைக் கூட்டிகிட்டுப் போயிட்டான். என் கிட்டயே சரியா பேச விடலை... கணபதி போறப்ப உன் கிட்ட சொல்லச் சொன்னான்...." சொல்லும் போது அவன் ஒருமாதிரியாகப் புன்னகைக்க விஷாலி கேட்டாள். "என்ன ஒரு மாதிரியா சிரிக்கிறீங்க? என்ன விஷயம்?"

"ஒண்ணுமில்லை"

அன்பாலயத்தில் இருந்து திரும்பி வருகையில் கணபதியைப் பற்றிய பேச்சு வந்தது. தனக்குப் பதிலாக பிள்ளையாருக்கு பட்டு வேட்டி வாங்க கணபதி ஆசைப்பட்டதை ஈஸ்வர் சொன்ன போது விஷாலி மனம் நெகிழ்ந்து சொன்னாள். "அந்தப் பிள்ளையார் ரொம்பக் கொடுத்து வச்சவரு. அவர் கிட்ட தங்களுக்கு அது வேணும் இது வேணும்னு வரம் கேட்க வர்ற ஆள்கள் தான் அதிகமா இருக்கும். கணபதி மாதிரி அவருக்கு ஏதாவது தர ஆசைப்படற வேற ஆள்கள் இருப்பாங்கன்னு தோணலை...."

ஈஸ்வருக்கும் அப்படியே தோன்றியது. அடுத்ததாக அன்பாலயத்தின் அனாதைக் குழந்தைகள் பற்றி பேச்சு வந்து

***அதுவும் முடிந்து போக அவர்கள் இருவரும் மௌனமானார்கள். நிறைய பேச இருந்தும் அவர்களால் ஒன்றும் பேச முடியவில்லை. ஈஸ்வர் எஃப் எம் ரேடியோவை ஆன் செய்ய சைந்தவியும், ஜி.வி.பிரகாஷும் பாடிய பாடல் ஒலிபரப்பாக ஆரம்பித்தது.***

***யாரோ இவன் யாரோ இவன்***
***என் பூக்களின் வேரோ இவன்***
***என் பெண்மையை வென்றான் இவன்***
***அன்பானவன்***

***இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளவில்லை என்றாலும் ஒருவரை ஒருவர் அந்தப் பாடலின் போது மிக ஆழமாக உணர்ந்தார்கள். அவர்களே பாடுவது போல் தோன்ற ஆரம்பித்தது.***

***உன் காதலில் கரைகின்றவன்***
***உன் பார்வையில் உறைகின்றவன்***
***உன் பாதையில் நிழலாகவே வருகின்றவன்***

***எங்கே உன்னை கூட்டிச்செல்ல***
***சொல்வாய் எந்தன் காதில் மெல்ல***
***என் பெண்மையும் இளைப்பாறவே***
***உன் மார்பிலே இடம் போதுமே***
***ஏன் இன்று இடைவெளி குறைகிறதே***
***மெதுவாக இதயங்கள் இணைகிறதே***
***உன் கைவிரல் என் கைவிரல் கேட்கின்றதே***

*திடீர் என்று அவன் அவளைத் திரும்பிப் பார்த்தான். அவளும் அவனைப் பார்த்தாள். வார்த்தைகள் சொல்ல முடியாத பலவற்றை அவர்கள் பார்வைகள் பரிமாறிக் கொண்டன. அவன் கைவிரல்கள் மென்மையாக அவள் கைவிரல்களைத் தொட்டன. தொட்டபடியே இருந்தன. கண்கள் பேசியதைப் போல கைவிரல்களும் பேசிக் கொண்டன.*

*நதியினில் ஒரு இலை விழுகிறதே*
*அலைகளில் மிதந்தது தவழ்கிறதே*
*கரைசேருமா உன் கைசேருமா*
*எதிர்காலமே !*

*சில தருணங்கள் சாசுவதமானவை. கல்லில் செதுக்கியதைப் போல மனதில் பசுமையாக என்றென்றுக்குமாய் தங்கி விடுபவை. முடிந்து போன பின்னும் நினைவுகளில் திரும்பத் திரும்ப வாழ்ந்து புதுப்பிக்கப் படுபவை. அவர்களைப் பொருத்த வரை அந்தத் தருணம் அப்படியாக மாறி இனிமையாகத் தங்கி விட்டது.*

*பாட்டு முடிந்த பின் விளம்பரம் வர அது அந்தத் தருணத்தின் இனிமையைக் குறைப்பதாகத் தோன்றவே ஈஸ்வர் ரேடியோவை ஆஃப் செய்து விட்டான். அந்த மௌனமும் இனிமையாக இருந்தது.*

*விரைவில் விஷாலியின் வீடு வந்து விட்டது. கார் நிற்கும் சத்தம் கேட்டு தென்னரசு வெளியே வந்தார்.*

*“உள்ளே வா ஈஸ்வர்”*

*“இல்லை அங்கிள் நேரமாயிடுச்சு. கிளம்பறேன். தேங்க்ஸ் விஷாலி...”*

அவன் போய் விட்டான். விஷாலி அவன் கார் கண்ணில் இருந்து மறையும் வரை பார்த்திருந்து விட்டு உள்ளே வர தென்னரசு மகளை ஆச்சரியத்துடன் பார்த்தாள். அந்தப் பாடல் மனதில் ஒலித்துக் கொண்டு இருக்க அவன் பார்வையும் பசுமையாய் நினைவில் இருக்க வேறொரு உலகில் அவள் இருந்ததால் அவள் தந்தையின் முகபாவத்தை கவனிக்கவில்லை....

ஈஸ்வர் ஃபோட்டோ ஸ்டுடியோவிற்குப் போன போது அவன் பெற்றோரின் புகைப்படம் பெரியதாக லேமினேட் செய்யப்பட்டு தயாராக இருந்தது. அவர்களை நேரில் பார்ப்பது போல் அவனுக்குத் தோன்றியது. அது அவன் பெற்றோர் கடைசியாக எடுத்துக் கொண்ட புகைப்படம். அதை எடுத்த ஒரு வாரத்தில் அவன் அப்பா இறந்து போனார்...

வீட்டுக்குப் போன போது வாசலிலேயே பெரும் தவிப்புடன் அவனுக்காக மகேஷ் காத்திருந்தான். ஈஸ்வரை அவன் கூர்ந்து பார்த்தான். ஈஸ்வர் ஏதோ பாடலை முணுமுணுத்தபடி காரை விட்டு இறங்கினான்.

“உன் காதலில் கரைகின்றவன், உன் பார்வையில் உறைகின்றவன்,
உன் பாதையில் நிழலாகவே வருகின்றவன் ”

மகேஷ் காதில் அந்தப் பாடல் நாராசமாக ஒலித்தது. நேற்றெல்லாம் ஏதோ ஆங்கிலப் பாடல் பாடிக் கொண்டிருந்தவன் இன்று தமிழுக்கு மாறி விட்டதற்கும் விஷாலிக்கும் ஏதாவது தொடர்பு இருக்குமோ என்று சந்தேகப் பட்டான்.

*ஈஸ்வர் கையில் இருந்த லேமினேட் செய்யப்பட்ட புகைப்படத்தைப் பார்த்து மகேஷ் நினைத்துக் கொண்டான். ‘முதல்லயே இவங்கப்பா ரூம் ஒரு ம்யூசியம் மாதிரி இருக்கு. அதுல இதையும் சேர்த்து வைக்கணுமாக்கும்’*

*”என்ன மகேஷ் எனக்காக காத்துகிட்டிருக்கற மாதிரி இருக்கு” ஈஸ்வர் கேட்ட்து ஏதோ பொடி வைத்துக் கேட்டது போல இருந்தது.*

*மறுக்க முடியாமல் மகேஷ் சமாளித்தான். “ஆமா... என்னோட கார் கொஞ்சம் மக்கர் பண்ணுது. அதான் அம்மா காரை எடுத்துட்டுப் போலாம்னு நினைச்சுட்டு காருக்காக காத்துகிட்டிருந்தேன்....”*

*கார் சாவியை ஈஸ்வர் மகேஷ் கையில் தந்தான். தந்தவன் ‘இனி போவதானால் போகலாம்’ என்கிற விதமாய் பார்க்கவே மகேஷ் அசடு வழிந்தபடி சொன்னான். ”பரவாயில்லை, நாளைக்குப் போய்க்கறேன்”*

*மீனாட்சி அண்ணன், அண்ணி புகைப்படத்தைப் பார்த்து பரவசம் அடைந்தாள். “இது எப்ப எடுத்தது ஈஸ்வர்?”*

*இது தான் அவருடைய கடைசி ஃபோட்டோ என்று அவன் தெரிவித்த போது அவள் அதை அண்ணன் நினைவில் கண்கலங்க பார்த்தாள். இன்று அப்பாவின் நினைவு நாள் என்று சொல்ல வாயெடுத்த ஈஸ்வர் அவளை மேலும் கண்கலங்க வைக்க மனமில்லாமல் வாயை மூடிக் கொண்டான்.*

*ஆனந்தவல்லி “யார் ஃபோட்டோ அது?” என்று கேட்டுக் கொண்டே வந்தாள்.*

*“எங்கப்பா அம்மாவோட ஃபோட்டோ. நீங்க தானே இந்த ஹால்ல அவங்க ஃபோட்டோவை மாட்டிக்கலாம்னு சொன்னீங்க”*

*”தாராளமா மாட்டிக்கோ” என்று ஆனந்தவல்லி சொல்ல ஈஸ்வர் “வீட்டு உரிமையாளர் கிட்ட அனுமதி வாங்கியாச்சு” என்று சொன்னபடியே ஐந்து நிமிடங்களில் சுவரில் ஆணியடித்து மாட்டி விட்டான்.*

*அண்ணாவின் புகைப்படம் ஹாலில் மாட்டியது மீனாட்சிக்கு ஒருபுறம் மகிழ்ச்சியாக இருந்தாலும் இன்னொரு புறம் அப்பாவை நினைக்கையில் பயமாக இருந்தது. அவள் அண்ணனின் அறையில் அவன் நினைவாக எதை வைத்துக் கொண்டாலும் எதுவும் சொல்லாத அவர் தன் மகனை நினைவுபடுத்தும் எதையும் மற்ற இடங்களில் அனுமதித்ததில்லை. ஹாலில் அவர், அவர் மனைவி புகைப்படத்தைத் தொட்ட மாதிரியே ஈஸ்வர் மாட்டி இருக்கும் படத்தைப் பார்த்தால் என்ன சொல்வார்?....*

*மகேஷ் அதிர்ச்சியுடன் அந்தப் புகைப்படத்தைப் பார்த்தான். ’இதை இங்கே மாட்டவா அவன் கொண்டு வந்தான்?’. பரமேஸ்வரனுக்கு எதிராக சிறிதும் பயமில்லாமல் ஈஸ்வர் இப்படிச் செய்யக் காரணமே ஆனந்தவல்லி தான் என்று நினைத்து அவன் மனதிற்குள் அவளை சபித்தான். “இந்தப் பாழாய் போன கிழவி தாராளமா ஃபோட்டோவை மாட்டிங்கோங்கறா. வீட்டு உரிமையாளர் கிட்ட அனுமதி வாங்கியாச்சுன்னு இவனும் சொல்றான். இப்படி ஒவ்வொரு அடியாய் எடுத்து வைக்கிற இவன் நாளைக்கு ’எங்கப்பாவோட பங்கைக் குடு’ன்னு சொல்ல மாட்டாங்கறது என்ன நிச்சயம்....”*

*பெற்றோரின் படத்தை சற்று தள்ளி நின்று ரசித்து விட்டு பாடலை முணுமுணுத்தபடியே ஈஸ்வர் தனதறைக்குப் போனான்.*

ஆனந்தவல்லி ஈஸ்வரைப் புன்னகையோடு பார்த்துக் கொண்டே மீனாட்சியைக் கேட்டாள். "ஏண்டி, உன் மருமகன் ரெண்டு நாளா ரொம்பவே சந்தோஷமாய் இருக்கான் கவனிச்சியா?"

மீனாட்சி சொன்னாள். "இப்ப தான் இந்த வீடு அவன் வீடு மாதிரி தோண ஆரம்பிச்சிருக்கு போல இருக்கு. அதான்..."

'இதொரு வெகுளி.. இதுக்கு எதுவும் சட்டுன்னு தெரியாது' என்று நினைத்த ஆனந்தவல்லி அதற்கு மேல் எதுவும் சொல்லவில்லை. ஆனால் அவள் கேட்டதன் முழு அர்த்தம் விளங்கிய மகேஷ் மனதிற்குள் எரிமலை வெடித்து சிதறிக் கொண்டிருந்தது.

அறைக்குள் நுழைந்த ஈஸ்வர் அவன் அப்பாவின் புகைப்படத்திற்கு ரோஜாப் பூமாலை போடப் பட்டிருந்ததைப் பார்த்தான். அப்போது தான் அவன் சொல்லாமலேயே அத்தை அந்த நாளை நினைவு வைத்திருந்து மாலை போட்டிருக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்ட போது அத்தை மேல் அவனுக்கு இருந்த பாசம் கூடியது.

அவன் அப்பாவின் புகைப்படம் முன் நின்று மெல்ல சொன்னான். "அப்பா. நான் ஒரு பொண்ணைக் காதலிக்க ஆரம்பிச்சிருக்கேன்னு நினைக்கிறேன்....". அவர் உயிரோடு இருந்திருந்தால் கண்டிப்பாக அவன் தன் மனதில் உள்ளதை முதலில் அவரிடம் தான் தெரிவித்திருப்பான்....

பரமேஸ்வரன் அன்று தாமதமாகத் தான் வீட்டுக்கு வந்தார். வீட்டுக்குள் நுழைந்தவுடன் ஹாலில் முதலில் கவனித்தது தன் மகன், மருமகள் புகைப்படத்தைத் தான். சுவரில் கூட அவன்

அவர் புகைப்படத்திற்கு அருகிலேயே இருந்தான்.... ஒரு சின்ன பலவீனத்திற்குப் பின் அவர் முகம் இறுகியது. அவர் முகபாவனை மறைவாக நின்று கொண்டிருந்த மகேஷிற்கு மகிழ்ச்சியைத் தந்தது. ஹாலில் என்றுமில்லாத அதிசயமாய் ஆனந்தவல்லி காலை நாளிதழை மிகவும் கவனமாகப் படிப்பது போல பாவனை செய்து கொண்டு மகனை ஓரக்கண்ணால் நோட்டமிட்டுக் கொண்டு இருந்தாள். ஆனால் அவள் தலை நிமிரவில்லை.

மீனாட்சி தந்தையின் கவனத்தைத் திருப்ப முயற்சி செய்தாள். "என்னப்பா இன்னிக்கு லேட்?"

மகள் கேள்விக்குப் பதில் சொல்லாமல் பரமேஸ்வரன் 'இதெல்லாம் என்ன' என்பதைப் போல அவளைக் கூர்மையாகப் பார்த்தார். புகைப்படத்தை மாட்டியது ஈஸ்வர் தான் என்பதால் அவர் அவனிடம் கோபமாக ஏதாவது பேசி தாத்தாவிற்கும், பேரனிற்கும் இடையே விரிசல் அதிகரித்து விடுமோ என்று பயந்த மீனாட்சி மெல்ல சொன்னாள். "அவன் பாட்டி கிட்ட கேட்டு தான் மாட்டி இருக்கான்... பாட்டி தாராளமா மாட்டிக்கோன்னு சொன்னதால தான் அவன்..." என்று இழுத்தாள்.

'அடிப்பாவி. அந்த 'தாராளமா'ங்கிற வார்த்தையை ஏண்டி அவன் கிட்ட சொல்லிக் காண்பிக்கறாய்' என்று மனதிற்குள் திட்டிக் கொண்டாலும் காதில் எதுவும் விழாதவள் போலவே நாளிதழில் மூழ்கி இருப்பது போல் ஆனந்தவல்லி நடித்தாள்.

தாயை முறைத்துப் பார்த்து சிறிது நின்ற பரமேஸ்வரன் அவள் தலை நிமிராததைப் பார்த்து "உன் பாட்டிக்கு நாளைக்கு என்ன பரிட்சையா நடக்குது இவ்வளவு சீரியசா படிக்கறதுக்கு?" என்று மீனாட்சியிடம் கேட்டார்.

மீனாட்சி சிரிப்பை கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டாள். ஆனந்தவல்லி அதுவும் காதில் விழாதது போல நடித்தாள்.

மீனாட்சி தந்தையிடம் ”சரி சாப்பிட வாங்க” என்றாள்.

“சாப்பாடு வேண்டாம்மா. பசியில்லை”

“வெறும் வயித்துல மாத்திரைகள் சாப்பிடக்கூடாது. அதனால கொஞ்சமாவது சாப்பிடுங்க.” கரிசனத்துடன் சொன்ன மகளைப் பார்த்த பரமேஸ்வரன் முக இறுக்கம் சற்று தளர்ந்தது. சாப்பிடப் போனார். ஆனந்தவல்லி நாளிதழைக் கீழே வைத்து விட்டு ஆசுவாசப் பெருமூச்சு விட்டாள். எழுந்தவள் மகன் வருவதற்கு முன் தன் அறைக்குள் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டாள்.

பரமேஸ்வரன் சாப்பிடும் போது எதுவும் பேசவில்லை. பேசும் மனநிலையில் அவர் இல்லை. மகளுக்காக ஏதோ சிறிது சாப்பிட்டு விட்டு தனதறையை நோக்கி நடந்தார். அவர் நடையில் தெரிந்த தளர்ச்சியைப் பார்த்த மீனாட்சிக்கு மனம் வலித்தது...

பரமேஸ்வரன் ஈஸ்வர் அறையைக் கடக்கையில் அவன் தன் தாயிடம் போனில் பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது. ”..இப்படி இன்னைக்கு அப்பாவோட நினைவு நாள் மறக்க முடியாத நாளாய் அமைஞ்சுடுச்சும்மா. இப்ப அவர் ரூம்ல அவர் சேர்ல உட்கார்ந்துகிட்டு தான் உன் கிட்ட பேசிகிட்டிருக்கேன். எனக்கென்னவோ அப்பா மடியிலேயே உட்கார்ந்து இருக்கற மாதிரி ஒரு ஃபீலிங்க்ம்மா....”

பரமேஸ்வரன் அன்று இரவு நீண்ட நேரம் உறங்கவில்லை. அவர் போலவே அன்று நீண்ட நேரம் உறக்கம் வராமல் தவித்த

***இன்னொரு ஜீவன் மகேஷ் தான். தாத்தா ஹாலில் இருந்த அந்தப் புகைப்படத்தைப் பார்த்து விட்டு பொங்கி எழுவார் என்று ஆவலுடன் எதிர்பார்த்து ஏமாந்த அவனுக்கு உறக்கம் வரவில்லை. அவன் தன் வாழ்க்கையில் மிக சக்தி வாய்ந்த நபராய் நினைத்த தாத்தாவே ஈஸ்வர் முன் வலுவிழந்து போய் நிற்பதை அவனால் சகிக்க முடியவில்லை. "அம்மாவும் அந்தக் கிழவியும் சேர்ந்து அவரை பலவீனப்படுத்தி விடறாங்க" என்று அவர்கள் இருவர் மீதும் கோபப்பட்டான்.***

***ஈஸ்வர் நினைத்ததை எல்லாம் ஒவ்வொன்றாக சாதித்துக் கொண்டே வருவது பெரிய ஆபத்து என்று மகேஷ் பயந்தான். அவன் சாதனை விசாலி வரைக்கும் நீண்டது அவன் இதயத்தை அமிலமாய் அரித்துக் கொண்டு இருந்தது. ஏதாவது செய்யாவிட்டால் அனைத்தையும் இழந்து போய் விட வேண்டி வரும் என்று நினைத்தான். வீட்டிற்குள் மீனாட்சியும், ஆனந்தவல்லியும் இருக்கும் வரை தன்னால் ஈஸ்வரை பெரிதாக எதுவும் செய்ய முடியாது என்பது அவனுக்குப் புரிந்தது. ஆனால் விஷாலி விஷயத்தில் அவனால் முடியும் என்பதில் அவனுக்கு எந்த சந்தேகமும் இல்லை. குழந்தைப் பருவத்தில் இருந்து அவளைக் கவனித்தவன் அவன். அவளை ஈஸ்வரிடம் இருந்து பிரிப்பது பெரிய விஷயமில்லை...***

***அன்றிரவு முழுவதும் விழித்திருந்து ஈஸ்வரையும் விஷாலியையும் நிரந்தரமாகப் பிரித்து விட திட்டம் தீட்டி முடித்து விட்டு செயல்படுத்த காலையிலேயே மகேஷ் விஷாலி வீட்டுக்குக் கிளம்பி விட்டான்.***

# ***அத்தியாயம் - 39***

***மகேஷ் விஷாலி வீட்டுக்குப் போய் சேர்ந்த போது மணி எட்டு. இத்தனை சீக்கிரமாய் மகேஷ் வருவது அபூர்வம் என்பதால் விஷாலி ஆச்சரியப்பட்டாள்.***

***“ஏய் மகேஷ், என்ன இந்த நேரத்துல?”***

***மகேஷ் உடனடியாக பதில் சொல்லவில்லை. “அப்பா இல்லையா?” என்று கேட்டான்.***

***“அவர் வெளியே போயிருக்கார். ஏன், அவர் கிட்ட அவசரமா பேச வேண்டி இருக்கா?”***

***“இல்லை.... ” என்றவன் சோபாவில் அமர்ந்து இரண்டு கைகளாலும் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டான்.***

***அவள் பயந்து விட்டாள். அவன் அருகில் அமர்ந்தபடி கேட்டாள்.“ஏய் மகேஷ் என்ன ஆச்சு? ஏன் என்னவோ மாதிரி இருக்கே?”***

***“ராத்திரி எல்லாம் தூங்கல விஷாலி... தூங்க முடியல”***

***“ஏன்?”***

***அவன் பதில் சொல்லவில்லை.***

***“வீட்டுல யாருக்காவது உடம்பு சரியில்லையா?” அவள் கவலையுடன் கேட்டாள்.***

*“எல்லாரும் நல்லா தான் இருக்காங்க” என்றான்.*

*“அப்படின்னா வேறென்ன?”*

*அவன் எதுவும் சொல்லாமல் அவளை சோகமாகப் பார்த்தான். பின் சொன்னான். “எனக்கு இதை உன் கிட்ட சொல்லலாமா கூடாதான்னு தெரியல விஷாலி. சொன்னா அவனுக்கு செய்யற துரோகம்னு தோணுது. சொல்லாட்டி உனக்கு செய்யற துரோகம்னு தோணுது. நான் என்ன செய்வேன் விஷாலி” அவன் குரல் கரகரக்க சொன்னான்.*

*விஷாலிக்கு அவன் பேசுவது ஒன்றும் புரியவில்லை. “ஏய் நீ என்ன துரோகம்னு பெரிய வார்த்தை எல்லாம் சொல்றே? ..எதைச் சொல்லலாமா கூடாதான்னு சொல்றே? அவன்னு நீ யாரைப் பத்தி சொல்றே?”*

*எச்சிலை விழுங்கிக் கொண்டு மகேஷ் சொன்னான். “ஈஸ்வர்... அவன் என் கிட்ட சொன்னதைத் தான்.....”*

*“ஈஸ்வர் என்ன சொன்னார்?”*

*மகேஷ் இருதலைக் கொள்ளி எறும்பின் நிலையில் இருப்பது போல நடித்தான். அவன் நடிப்பு வினாடிக்கு வினாடி அவளுடைய டென்ஷனை அதிகப்படுத்தியது. ஈஸ்வர் சொன்னதாகச் சொல்லி இருந்ததால் அது என்ன என்பதைத் தெரிந்து கொள்ளா விட்டால் தலை வெடித்து விடும் போல அவளுக்கு இருந்தது.*

“சொல்லு மகேஷ்?” அவள் பொறுமை போய் குரலில் எரிச்சல் தொனித்தது.

தயக்கத்தை மீண்டும் காட்டி விட்டு அவன் மெல்ல சொன்னான். ”நான் சொன்னேன்கிறதை அவன் கிட்ட நீ எந்தக் காரணத்துக்காகவும் சொல்லிடக் கூடாது.... சரியா”

“சரி சொல்லு”

“ப்ராமிஸ்?”

“ப்ராமிஸ்”

“அவன் பேசறப்ப முழுசா சுயநினைவோட இருந்தான்னு சொல்லிட முடியாது. குடி போதைல தான் பேசினான். ஆனாலும் போதைல கூட அவன் அப்படி பேசி இருக்கக் கூடாது தான்....”

அவள் முகத்தில் அதிர்ச்சி தெரிந்தது. “குடி போதைலயா?... என்ன சொன்னார்?”

மகேஷ் திடீர் என்று மனம் மாறியவனைப் போல் நடித்தான். ”காலங்கார்த்தால உன் கிட்ட சொல்ற விஷயமில்லை விஷாலி. நான் இந்தப் பேச்சையே எடுத்திருக்கக் கூடாது... நான் ஒரு லூசு.. விடு விஷாலி. நான் இப்ப இங்கே வரலை.... எதுவும் சொல்லலை.... அப்படியே எடுத்துக்கோ.. சரியா... நான் கிளம்பறேன்”

எழுந்து நின்றவனைக் கோபத்துடன் விஷாலி இழுத்து உட்கார வைத்தாள். ”நீ முதல்ல இருந்து சொல்லு.... என்ன நடந்தது?”

வேறு வழியில்லாமல் சொல்வது போல தயக்கத்துடன் சொல்ல ஆரம்பித்தான். “நேத்து ராத்திரி எல்லாரும் தூங்கின பிறகு ஈஸ்வர் என்னை அவன் ரூமுக்கு கூப்பிட்டான்... போனேன்... குடிக்க கம்பெனி தர்றியான்னு கேட்டான்.... நான் எனக்கு குடிக்கற பழக்கம் இல்லைன்னு சொன்னேன். (மகேஷ் நண்பர்களுடன் போட்டி போட்டுக் குடிப்பதில் முதலிடம் பெற்றவன் என்பது விஷாலிக்குத் தெரியாது). அவன் என்னை பட்டிக்காடுன்னு தமாஷ் செஞ்சான்... பிறகு ’பழக்கத்தை இன்னைக்கே ஆரம்பிச்சுகிட்டா போச்சு’ன்னு சொன்னான்... நான் சாரி வேண்டாம்னு சொன்னேன்.... பிறகு என் கிட்ட பேசிகிட்டே அவன் மட்டும் குடிக்க ஆரம்பிச்சான்... அது வரைக்கும் டீசண்டா பேசிகிட்டு இருந்தவன் பிறகு ஒருமாதிரியா பேச ஆரம்பிச்சான். அமெரிக்கால அவன் செஞ்ச சாதனைகளை எல்லாம் சொல்ல ஆரம்பிச்சவன் எத்தனை புது தியரிகளை எல்லாம் பப்ளிஷ் இருக்கான்கிறதை எல்லாம் சொல்லிகிட்டே வந்து கடைசில பப்ளிஷ் செய்யாத ஒரு விஷயத்துலயும் அவன் கில்லாடின்னு சொன்னான்.... அது பொண்ணுங்க சைக்காலஜிலயும் அவன் எக்ஸ்பர்ட்டாம்....அவன் கிட்ட மயங்காத பொண்ணுங்களே இல்லையாம்....”

விஷாலிக்கு அவன் சொல்வதை நம்ப முடியவில்லை. அவள் அதிர்ச்சியில் உறைந்தவளாய் அவனைப் பார்த்தாள்.

மகேஷ் பெரும் வேதனையுடன் சொல்வது போல கஷ்டப்பட்டு சொன்னான். “சில பொண்ணுங்க அழகுக்கு மயங்குவாங்களாம்... சில பொண்ணுங்க அறிவுக்கு மயங்குவாங்களாம்... சிலர் பணவசதிக்கும், சிலர் புகழுக்கும் மயங்குவாங்களாம்.. ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு பலவீனம் இருக்குமாம்... அதைப் புரிஞ்சுக்கிட்டா யாரையும் வலையில் வீழ்த்திடலாமாம். இவன் கிட்ட பொண்ணுங்க எதிர்பார்க்கறது

எல்லாமே இருக்கறதால இவன் கிட்ட மயங்காதவங்களே கிடையாதாம். அதை ஒரு பெரிய சாதனையாய் சொல்றான்... அப்ப தான் உன் பேச்சு வந்துச்சு.....”

பெரிய மலையுச்சியில் தள்ளப்படக் காத்திருக்கும் துர்ப்பாக்கியவதி போல விஷாலி அடுத்து வருவதற்குக் காத்திருந்தாள்.... அவளுக்கு இப்போதும் அவன் சொல்வதை நம்ப முடியவில்லை.... அதே நேரம் நம்பாமல் இருக்கவும் முடியவில்லை....

ஆனால் மகேஷ் சொல்ல வந்ததை உடனடியாகச் சொல்லி விடவில்லை....

“விஷாலி இதுக்கு மேல அவன் சொன்னதை உன் கிட்ட சொல்ற தெம்பு எனக்கில்லை விஷாலி...”

விஷாலி முகம் வெளிறிப் போய் இருந்தது. ஆனால் உறுதியான குரலில் சொன்னாள். “என்னவா இருந்தாலும் பரவாயில்லை மகேஷ். சொல்லு...”

சிறிது தயங்குவதாக நடித்து விட்டு மகேஷ் தொடர்ந்தான். ”உன்னை எல்லாம் சாதாரண பொண்ணுங்க லிஸ்டுல சேர்க்க முடியாதாம்... நீ எல்லாம் ரசனைக்கும், பண்பாட்டுக்கும் மதிப்பு தர்றவளாம்... அதனால உன்னை அந்த மாதிரி தான் மடக்கணுமாம்.... அவனுக்கு பெயிண்டிங்க்ஸ்ல கொஞ்சம் கூட இண்ட்ரஸ்ட் இல்லையாம். உனக்காக இண்ட்ரஸ்ட் இருக்கற மாதிரி நடிச்சானாம்... நீ அதுலயும் அவன் அழகுலயும் ஃப்ளாட் ஆயிட்டியாம்.... அனாதை ஆசிரமத்துக்கு உன்னைக் கூட்டிகிட்டுப் போனதும் உன்னை இம்ப்ரஸ் செய்யத்தானாம்....”

மலையுச்சியில் இருந்து அவள் விழ ஆரம்பித்தாள்.... அவன் வார்த்தைகள் அவள் இதயத்தை ஈட்டிகளாக துளைக்க விஷாலி திக்பிரமையுடன் மகேஷைப் பார்த்து மிகப் பலவீனமான குரலில் சொன்னாள். “எனக்கு நம்பவே முடியலையே மகேஷ்”

”எனக்கும் கூட நம்ப முடியலை விஷாலி.... அவன் மத்த நேரங்கள்ல பேசறப்ப அவனை விட டீசண்டான, தங்கமான ஆள் இருக்க முடியுமான்னு எனக்கே கூட தோணி இருக்கு. ஆனா குடிச்சுட்டு அவன் அப்படி பேசினப்ப எனக்கே என் காதுகளை நம்ப முடியலை.... பேசினது அவனல்ல அவனுக்குள்ளே போன விஸ்கி தான்னு சமாதானப் படுத்திக்கத் தான் பார்த்தேன்... ஆனா அப்படியும் அதுக்கு அடுத்ததா அவன் சொன்னதை மட்டும் என்னால சகிச்சுக்கவே முடியலை....”

”என்ன... சொன்னார்?” அவள் வார்த்தைகள் சத்தமில்லாமல் காற்றாய் வந்தன.

”...அவன் கர்வத்தோட என்கிட்ட சிரிச்சுகிட்டே சொல்றான்... அவன் நினைச்சா உன்னை படுக்கை வரைக்கும் கூட கூட்டிகிட்டு வர முடியும்கிறான்... அதைத் தான் என்னால தாங்க முடியல....”

சேற்றை வாரித் தன் மீது இறைத்தது போல் விஷாலி உணர்ந்தாள். மகேஷ் அவள் மீதிருந்த பார்வையை வேறிடத்திற்குத் திருப்பிக் கொண்டான். ”நான் தாங்க முடியாமல் அவன் கிட்ட சொன்னேன். ‘மத்தவங்க மாதிரி விஷாலிய நினைச்சுக்காதே ஈஸ்வர்’னு. அவன் சிரிச்சுகிட்டே என் கிட்ட சொன்னான். நீ இப்பவே அவன் வலையில விழுந்தாச்சாம். அனேகமா அவனை காதலிக்கவும் ஆரம்பிச்சிருப்பியாம். அடுத்த லெவலுக்கு உன்னை இழுக்கிறது அவனுக்கு ரொம்பவே சுலபமாம்... அதுக்கு மேல என்னால அங்கே நிக்க முடியல. தலை வலிக்குதுன்னு சொல்லி என்

*ரூமுக்கு வந்துட்டேன். அங்கேயே இருந்திருந்தா கண்டிப்பா அவனை ஓங்கி அறைஞ்சிருப்பேன். எங்க தகராறுல வீட்டுல எல்லாரும் முழிச்சிருப்பாங்க…"*

*அவள் அவமானத்தால் கூனிக் குறுகிப் போனாள். ஈஸ்வர் அவளை என்ன என்று நினைத்துக் கொண்டிருக்கிறான் என்று கோபத்துடன் எண்ணினாள். நேற்றைய அழகான நினைவுகள் இன்று அர்த்தம் மாறியதால் அவமான நினைவுகளாக மாறின. எல்லாம் நடிப்பா? எல்லாம் வேஷமா? இப்போதும் அவள் மனதில் ஒரு பகுதி மகேஷ் சொன்னதை நம்ப மறுத்தது. ஆனால் பெரும்பகுதி மகேஷ் ஏன் பொய் சொல்லப் போகிறான் என்று வாதிட்டது. மகேஷ் அவள் சினேகிதன். நல்ல சினேகிதன்… விளையாட்டுப் பருவத்திலே இருந்து அவளுடன் இருந்தவன்… அதுவும் இந்த மாதிரி விஷயத்தில் எல்லாம் யாராவது பொய் சொல்வார்களா?....*

*மகேஷ் தொடர்ந்தான். "அவன் என் தாத்தா கிட்ட திமிர்த்தனமா நடந்துகிட்டது எனக்கு சுத்தமா பிடிக்கலைன்னாலும் அவனுக்கு தாத்தா மேல் இருக்கிற கோபம் நியாயமானதுன்னு நீ சொன்னதால அவன் கிட்ட எனக்கு நிஜமாவே ஒரு சாஃப்ட் கார்னர் இருந்துச்சு. ஆனா உன்னை இந்த அளவுக்கு அவன் மட்டமா நினைக்கிறதுக்கு என்ன காரணம் இருக்க முடியும் சொல்லு விஷாலி? அதான் சின்ன வயசுல இருந்தே உன்னோட நல்ல நண்பனா இருந்த எனக்குத் தாங்க முடியல...."*

*நேற்று தந்தையின் நினைவு நாள் என்று சோகமாகச் சொன்னவனுக்கு ஆறுதல் தரும் விதமாக ஈஸ்வரைத் தொட்டதாலும், காரில் வருகையில் அந்தப் பாடல் வரிகளிலும் இசையிலும் மனம் பறி கொடுத்தவன் போல் அவன் அவள் கை விரல்களைத் தொட்ட போது அவள் ஒன்றும் மறுப்பு*

தெரிவிக்கவில்லை என்பதாலும் அவளைப் பற்றி இந்த அளவு மட்டமாக அவன் நினைத்து விட்டானோ என்ற சந்தேகம் அவளுக்கு வந்தது. மகேஷ் கேட்டதற்கு அவளுக்குக் கிடைத்த காரணம் இது ஒன்று தான். அவளுக்கு உடம்பெல்லாம் கூசியது.. எரிந்தது...

”அவன் எனக்கு கசினா இருக்கலாம்.. அவன் அந்தரங்கமா என் கிட்ட குடி போதைல சொன்னதை உன் கிட்ட சொல்றது அவனுக்கு செய்யற துரோகமா கூட இருக்கலாம். ஆனா உன் கிட்ட சொல்லாமல் இருக்கிறது அதை விடப் பெரிய துரோகம்னு மனசுல தோண ஆரம்பிச்சுது... நான் ராத்திரி எல்லாம் தூங்கல விஷாலி....”

அவன் முகத்தைப் பார்த்த போது அவன் இரவெல்லாம் தூங்கவில்லை என்பது உண்மையே என்று தெரிந்தது.

“அவனை சொல்லி தப்பில்ல விஷாலி. அவன் பிறந்து வளர்ந்த நாடு அந்த மாதிரி. அங்கே ஒழுக்கம் எல்லாம் பெரிய விஷயமில்லை. அவன் அழகும், அறிவும் பல பொண்ணுகளை அவன் பின்னால வர வச்சிருக்கும். அவங்களோட அவன் ஜாலியா கண்டிப்பா இருந்திருப்பான்கிறது அவன் பேச்சுல இருந்தே தெரியுது. ஆனா உன்னைப் போய் அவன்.... சே.....” மகேஷின் குரல் உடைந்தது.

இந்த இரண்டு நாட்களில் அவளுக்கு இருந்த மிக அழகான உணர்வுகள் எல்லாம் அவன் வார்த்தைகளால் வேரோடு பிடுங்கப்பட்டதால் அவள் உயிர் இருக்கும் போதே செத்துப் போனாள்.

அவளைப் புரிந்து கொள்ள முடிந்த நண்பனாய் மகேஷ் கரகரத்த குரலில் சொன்னான். “வருத்தப்படாதே விஷாலி..

இந்தியால இருக்கற கொஞ்ச நாளுக்கு உன்னை பயன்படுத்திக்கலாம்னு அவன் நினைச்சிருக்கான்.. அவனுக்கு அறிவு இருக்கிற அளவு பண்பாடு இல்லை... மனசைப் படிக்க முடிஞ்ச அளவு மதிக்கத் தெரியலை... (இதெல்லாம் அவன் நேற்று இரவில் இருந்து பல முறை ரிகர்சல் செய்த வரிகள்)... அவன் மனசுல இருக்கறது என்னன்னு நமக்கு தெரிய வந்ததே உன்னோட நல்ல மனசுக்காக கடவுளா பார்த்து ஏற்படுத்திக் கொடுத்த சந்தர்ப்பம்னு எடுத்துக்கோ... அவன் வர்றப்ப மட்டும் ஜாக்கிரதையா இருந்துக்கோ.... அவன் ஹிப்னாடிசமும் தெரிஞ்சவன்... அழகாவும் இருக்கான்...."

விஷாலி அவனை அனல் பார்வை பார்த்தாள்.

மகேஷ் கண்களைத் தாழ்த்திக் கொண்டு சொன்னான். "தப்பா நினைச்சுக்காதே விஷாலி. அவன் நேத்து ராத்திரி அவ்வளவு உறுதியா சொன்னதால் தான் நான் பயப்படறேன்... அவன் பொண்ணுங்க மனசைப் புரிஞ்சுகிட்டு அதுக்குத் தகுந்த மாதிரி திறமையா நடிக்கத் தெரிஞ்சவன்... நீ சூதுவாது தெரியாதவள்... அதான் எச்சரிக்கை செஞ்சேன்.... அவன் கண்டிப்பா தினம் வந்தாலும் வருவான்..."

விஷாலியின் மனதின் உள்ளே எரிமலை குமுறிக் கொண்டிருந்தது. "அவனை இங்கே வர வேண்டாம்னு சொல்லு..."

ஈஸ்வரை அவன் என்று அவள் அழைத்ததையும், வர வேண்டாம் என்று சொல்லச் சொன்னதையும் கேட்கவே மகேஷிற்கு சுகமாக இருந்தது. தயக்கத்துடன் சொன்னான். "நான் எப்படி சொல்றது விஷாலி. நான் சொன்னா, நேத்து அவன் சொன்னதையெல்லாம் நான் உன் கிட்ட சொல்லிட்டேன்கிறதை அவன் தெரிஞ்சுப்பான்..."

விஷாலிக்கு மகேஷ் சொன்னது போல ஈஸ்வர் கண்டிப்பாக தினம் வந்தாலும் வருவான் என்பது இப்போது சகிக்க முடியததாததாக இருந்தது. எத்தனை அழகாக அவன் இருந்தாலும், எத்தனை அறிவுஜீவியாக இருந்தாலும், எத்தனை நல்லவனாக அவன் நடித்தாலும் படுக்கைக்கு செல்ல இசையும் அளவு அவள் ஒன்றும் தரம் கெட்ட பெண் அல்ல. அப்படிப் பட்ட கீழ்த்தர நோக்கத்தோடு யாரும் அவள் வீட்டு வாசற்படியை மிதிக்க வேண்டியது இல்லை.... அவள் அவனைப் பார்க்கக் கூட விரும்பவில்லை.

"அவன் செல் நம்பரைக் குடு. நானே சொல்றேன்...". இரண்டு நாட்கள் ஏமாந்தது போதும் என்று அவள் நினைத்தாள். இனி ஒரு வினாடி கூட ஏமாற அவள் தயாரில்லை. ஒரேயடியாக ஈஸ்வரின் தொடர்பைத் துண்டித்து தலைமுழுகும் வரை அசுத்தமாகவே இருப்பது போல ஒரு உணர்வு அவளிடம் இனி இருந்து கொண்டே இருக்கும்...

இன்று காலை வரை எரிந்து கொண்டிருந்த அவன் மனதில் இப்போது ஐஸ் மழை பெய்ய ஆரம்பித்தது. தயங்குவது போல நடித்துக் கொண்டே ஈஸ்வரின் செல் நம்பரைத் தந்தான்.

ஏதோ ஒரு ஜுரவேகத்தில் இருப்பது போல விஷாலி செல் போன் எண்களை அழுத்தினாள். ஈஸ்வர் குரல் கேட்டது. "ஹலோ"

அவன் குரல் கேட்டதும் இப்போதும் மனது அவளை அறியாமல் லேசாகியது... அவளுக்குத் தன் மேலேயே கோபம் வந்தது. மகேஷ் சொன்னது சரி தான். ஈஸ்வர் ஒரு வசியக்காரன் தான்... அவள் மனதைத் திடப்படுத்திக் கொண்டு சொன்னாள். "நான்

*விஷாலி பேசறேன்... உங்களைப் பார்க்கவோ, உங்க கிட்ட பேசவோ நான் விரும்பலை... அதனால தயவு செஞ்சு இனிமேல் என் வாழ்க்கைல இருந்து விலகியே இருங்க ப்ளீஸ்...”*

*சொல்லச் சொல்ல அவள் அழுதே விட்டாள். செல் போனை வைத்தபின் அவள் அழுகை அதிகமாகியது.*

*அதை ஒரு கணம் தாக்குப்பிடித்துக் கொண்டு மகேஷிடம் சொன்னாள். “மகேஷ் எனக்கு மனசு சரியில்லை.... தனியா இருக்க விடறியா?”*

*“சாரி விஷாலி... நான் இதை உன் கிட்ட சொல்லாமலேயே இருந்திருக்கலாம் போல இருக்கு”*

*“இல்லை மகேஷ், நீ நல்லது தான் செஞ்சிருக்கே. கசப்பானாலும் உண்மை உண்மை தான்.....”*

*அவளைப் பரிதாபப் பார்வை பார்த்து விட்டு மகேஷ் எழுந்தான். “நான் கிளம்பட்டுமா விஷாலி”*

*அவள் தலையாட்டினாள். அவன் போன பின் கதவை சாத்திக் கொண்டு விஷாலி பேரழுகை அழ ஆரம்பித்தாள்.*

*ஈஸ்வருக்கு சிறிது நேரம் எதுவும் புரியவில்லை. அவளுடைய வார்த்தைகள் முழுவதும் பதிவாவதற்கு முன்னால் அவள் கடைசியில் அழுதது உணர்வில் பதிவாகியது. மனம் பதைத்தது. பின்பு தான் வார்த்தைகள் பதிவாகின. அவன் முகம் இறுகியது.*

அவனிடம் இப்படி யாரும் சொன்னதில்லை. அவன் அடிக்கடி சீண்டும் பரமேஸ்வரன் கூட இது போல அவனைப் பார்க்கவோ பேசவோ பிடிக்கவில்லை என்றும் அவர் வாழ்க்கையில் இருந்து விலகி இருக்கும் படியோ சொன்னதில்லை. அவர் அப்படிச் சொல்லி இருந்தால் கூட அவனால் புரிந்து கொள்ள முடிந்திருக்கும். ஆனால் எந்தக் காரணமும் இல்லாமல் திடீரென்று விஷாலி அப்படிச் சொன்னது அவன் ஈகோவை பலமாகத் தாக்கியது.

மனதை ஒரு அமைதி நிலைக்குக் கொண்டு வருவது அவனுக்குப் பெரும்பாடாக இருந்தது. வெளிப்பார்வைக்காவது அப்படி கொண்டு வர சாத்தியமாகும் வரை அவன் அறையிலேயே அமர்ந்திருந்தான். பின் எழுந்தவன் அப்பாவின் புகைப்படம் அருகே வந்து நின்றான்.

”எத்தனை பெரிய சைக்காலஜிஸ்டா இருந்தாலும் ஒரு பொண்ணோட மனசைப் புரிஞ்சுக்கறதுல நான் ஏமாந்துட்ட மாதிரி தான் தோணுதுப்பா. நேத்து சொன்னேன் இல்லையா ஒரு பொண்ணைக் காதலிக்க ஆரம்பிச்ச மாதிரி தோணுதுன்னு அது என் பக்க கற்பனை மாதிரி தான் தோணுது. ஆனைக்கும் அடி சறுக்கும்னு சொல்வாங்க இல்லையாப்பா. நானும் சறுக்கிட்டேன் போல இருக்கு...”

அவன் சொல்லி விட்டு சிரிக்க முயன்று தோற்றுப் போனான்.....

இந்த இரண்டு நாட்கள் அவன் மனதில் சிம்மாசனம் போட்டு அமர்ந்திருந்தவள், மிக அழகான உணர்வுகளை அவனுக்குள் முதல் முதலாக ஏற்படுத்தியவள் ஏதோ தூசியைப் போல அவனைத் தட்டி விட்டதை யோசிக்கையில் அவனுக்குள் கோபம் அதிகமாக ஆரம்பித்தது. குறைந்த பட்சம் காரணத்தையாவது அவள் சொல்லி

*இருக்கலாம்.... அதைக் கூட சொல்லத் தேவை இல்லை என்று அவள் நினைத்ததை அவனால் சகிக்க முடியவில்லை.*

*காரணம் இல்லாமல், காரணம் சொல்லாமல் இப்படி நடந்து கொள்ளக் கூடிய ஒரு பெண் கண்டிப்பாக மனநிலை பாதிக்கப்பட்டவளாகத் தான் இருக்க வேண்டும்... அவள் சிகிச்சை பெற வேண்டியவள்...*

*ஆனால் அதைப் பற்றி அவன் கவலைப்படப் போவதில்லை. அவள் இனி அவனுக்கு சம்பந்தம் இல்லாதவள்.... ஈஸ்வர் மனதில் உறுதியாக முடிவெடுத்து விட்டான்.*

# ***<u>அத்தியாயம் - 40</u>***

*அமெரிக்காவில் இருந்து டாக்டர் ஜான்சன் மும்பை விமான நிலையத்தில் வந்திறங்கிய போது அவருக்காக அவர் பெயர் எழுதிய அட்டையை வைத்துக் கொண்டு ஒருவன் நின்றிருந்தான். அவர் நெருங்கியவுடன் அவன் எதுவும் பேசாமல் நடக்க ஆரம்பித்தான். புருவங்களையும் தோள்களையும் உயர்த்திய ஜான்சன் அவன் பின்னாலேயே சென்றார். விமான நிலையத்திற்கு வெளியே சென்ற பின் தயாராக நின்று இருந்த ஒரு காரின் பின் கதவை அவன் திறந்து விட அவர் உள்ளே ஏறி அமர்ந்தார். அவன் காரில் ஏறவில்லை. கார் கிளம்பியது. அவர் பின்னால் திரும்பிப் பார்த்த போது அவன் தன் மொபைல் போனில் சுருக்கமாக ஏதோ சொல்லி மொபைல் போனை சட்டைப் பையில் வைத்துக் கொண்டு எதிர்ப்புறமாக நடக்க ஆரம்பித்தான். காரில் ஏற்றி விட்டேன் என்ற தகவலை அவன் சொல்லி இருக்க வேண்டும் என்று அவர் நினைத்தார்.*

ஜான்சன் கார் டிரைவரைப் பார்த்தார். அவனும் எதுவும் பேசத் தயாராக இருந்தது போல் தெரியவில்லை. அது ஜான்சனை ஆச்சரியப்படுத்தவில்லை. அவனை அனுப்பியவர்கள் அதிகம் பேசுபவர்களை வேலைக்கு வைத்துக் கொள்வதில்லை என்பது அவருக்கு நன்றாகவே தெரிந்தது தான். கார் தேசிய நெடுஞ்சாலை ஒன்றில் வேகமாகச் செல்ல ஆரம்பித்தது.

கார் அவரை எங்கே அழைத்துச் செல்கிறது என்பது அவருக்குத் தெரியாது. அவர் வாய் விட்டுக் கேட்கவும் இல்லை. கேட்டாலும் பதில் வந்திருக்க வாய்ப்பில்லை. அரை மணி நேரம் கழித்து ஐந்து நட்சத்திர ஓட்டல் முன் கார் நின்றது. அங்கும் ஒருவன் தயாராக நின்று கொண்டிருந்தான். அவரைப் பார்த்தவுடன் பவ்யமாக சற்று குனிந்து விட்டு அவரை உள்ளே அழைத்துச் சென்றான்.

ஓட்டலின் ஆறாவது மாடியில் இருந்த ஒரு சிறிய கான்ஃப்ரன்ஸ் ஹால் கதவைத் திறந்து அவரை உள்ளே விட்டு கதவை சாத்திக் கொண்டான். உள்ளே மிக மங்கலான விளக்கு வெளிச்சத்தில் ஆறு பேர் அமர்ந்திருந்தார்கள். அந்த மங்கலான விளக்கும் அவர்கள் தலைகளுக்குப் பின்பக்க சுவரில் எரிந்து கொண்டு இருந்ததால் யார் முகமும் அவருக்குத் தெளிவாகத் தெரியவில்லை. வெளிச்சத்தில் நின்று கொண்டு இருந்த ஒருவர் அவர் அருகில் வந்து "வாருங்கள் ஜான்சன்" என்று கைகுலுக்கி வரவேற்றார். மற்ற ஆறு ஜோடிக் கண்களும் அவரைக் கூர்ந்து கவனிப்பதை ஜான்சனால் உணர முடிந்தது.

வரவேற்றவரை ஜான்சன் மிக நன்றாக அறிவார். பாபுஜி என்று அனைவராலும் அழைக்கப்படும் அவரை நியூயார்க்கில் சந்தித்து அவர் பேசி இருக்கிறார். கடந்த சில வருடங்களாக இந்தியாவின் முதல் பணக்காரர்கள் லிஸ்டில் அவர் பெயர் நான்கு, ஐந்தாம் இடங்களில் மாறி மாறி இருந்து வந்தாலும் கணக்கில் காட்டாத பல

இடங்களில் உள்ள அவருடைய கோடிக் கணக்கான சொத்துக்களையும் சேர்த்து எடுத்துக் கொண்டால் அவர் தான் முதல் பணக்காரராக இருப்பார் என்பதில் ஜான்சனுக்குச் சந்தேகமில்லை.

”உட்காருங்கள் டாக்டர் ஜான்சன்” பாபுஜி காலியாக இருந்த ஒரு நாற்காலியைக் காட்டினார். ஜான்சன் அதில் அமர்ந்தார்.

பாபுஜி அங்கு அமர்ந்திருந்த மற்றவர்களை அறிமுகப்படுத்த வேண்டியது அவசியம் இல்லை என்பது போல் நேரடியாக விஷயத்திற்கு வந்தார்.

”டாக்டர் ஜான்சன், என் நண்பர்கள் நம் விசேஷ மானசலிங்கம் ப்ராஜெக்ட் பற்றி அறிந்து கொள்ள ஆசைப்படுகிறார்கள். அந்த சிவலிங்கம் பற்றியும் நாம் நடத்தப் போகும் ஆராய்ச்சிகள் பற்றியும் அவர்களுக்கு விளக்கமாகச் சொல்லுங்களேன்”

முகம் கூடத் தெளிவாகத் தெரியாத நபர்களிடம் விளக்கம் தருவது ஜான்சனுக்கு என்னவோ போல் இருந்தது. அவர்களால் அவரை நன்றாகப் பார்க்க முடியும் ஆனால் அவரால் அப்படிப் பார்க்க முடியாது என்பது அவருக்கு சிறிதும் பிடிக்காத சூழ்நிலையாக இருந்தது என்றாலும் பேச ஆரம்பித்தார். அவர் அருகில் அமர்ந்திருந்த பாபுஜியிடம் அவர் மணிக்கணக்கில் இதை விவரித்திருக்கிறார். பாபுஜி டாக்டர் ஜான்சனிடம் மட்டும் அல்லாமல் குருஜியிடமும் இதைப் பற்றி நிறைய பேசி இருக்கிறார். என்றாலும் ஜான்சன் பேசுவதை முதல் முறை கேட்பது போல் கேட்டார்.

விசேஷ மானசலிங்கம் பற்றி சொல்ல ஆரம்பித்து தாங்கள் மேற்கொள்ளவிருக்கிற ஆராய்ச்சிகள் பற்றியும் ஜான்சன் சொல்லிக்

கொண்டு போகையில் பரிபூரண கவனத்துடன் அவர்கள் அனைவரும் கேட்டார்கள். அந்த மங்கலான வெளிச்சமும் பழகிப் போன பின் எதிரில் அமர்ந்திருந்த ஆறு பேரில் ஒரு நபர் ஒரு பெண் என்பது மட்டும் அவருக்குத் தெரிய வந்தது. மற்றவர்கள் பற்றி அவரால் எதுவும் யூகிக்கவும் முடியவில்லை.

ஜான்சன் பேசி முடித்த பின் அங்கு அசாதாரண அமைதி நிலவியது. ஒரு நிமிடம் யாரும் எதுவும் பேசவில்லை.

பாபுஜி தான் மௌனத்தைக் கலைத்தார். “அந்த சிவலிங்க ஆராய்ச்சிகள் செய்து முடிக்க உங்களுக்கு எவ்வளவு காலம் தேவைப்படும்?”

”அதை இப்போது சொல்வது கஷ்டம்”

“பின் எப்போது சொல்வது சுலபம்?” அங்கிருந்த பெண்மணி கேட்டாள். அவள் ஆங்கிலத்தைக் கேட்கும் போது அவள் இந்தியாவைச் சேர்ந்தவள் அல்ல என்பது தெரிந்தது. அவள் எந்த நாட்டைச் சேர்ந்தவள் என்பதை ஊகிக்க முடியவில்லை.

ஜான்சன் சொன்னார். “விசேஷ மானச லிங்கம் பற்றின நமக்குக் கிடைத்திருக்கிற அத்தனை தகவல்களும் நேரடியாய் சம்பந்தப்பட்டவர்களிடம் இருந்து வந்ததல்ல. கடைசியாய் கிட்டத்தட்ட அறுபது வருடங்கள் பசுபதியிடம் இருந்த காலத்திலோ நமக்கு தகவல்கள் சொல்லக் கூடியவர்கள் யாரும் அதை நெருங்கியது கூட இல்லை. அந்த சிவலிங்கத்தின் சக்தி எல்லை இல்லாதது என்பதில் மட்டும் இது வரை கேள்விப்பட்ட விஷயங்கள் ஒத்துப் போகின்றன. அந்த விசேஷ மானச லிங்கத்தை குருஜி நேரில் பார்த்து பரிசோதித்து அவரது அபிப்பிராயம் சொன்ன பிறகு தான்

ஆராய்ச்சிகள் முடிய எவ்வளவு காலம் தேவைப்படும் என்பதைச் சரியாகச் சொல்ல முடியும்”

அந்தப் பெண்மணி கேட்டாள். “டாக்டர் ஜான்சன் நீங்கள் மெத்தப் படித்த அனுபவம் மிக்க வெற்றிகரமான சைக்காலஜிஸ்ட். அப்படி இருக்கையில் இந்த விஷயத்தில் உங்களை விட நீங்கள் அதிகமாக குருஜியை அதிகம் நம்புவது ஏன்?”

ஜான்சன் சொன்னார். ”நான் ஆராய்ச்சியாளன் மட்டுமே. ஆனால் குருஜி அந்த விசேஷ மானச லிங்கத்தை பூஜித்து வந்தவர்களுக்கு இணையான சக்தி படைத்தவர். எனக்குத் தெரிந்து இந்த சப்ஜெக்டில் குருஜி அளவுக்கு அறிந்தவர்கள் இல்லை. அவர் எத்தனையோ வருடங்கள் சித்தர்களிடமும், யோகிகளிடமும் சேர்ந்து இருந்து நிறையக் கற்றிருக்கிறார். அந்த விசேஷ மானச லிங்கத்தை நேரில் பார்க்காமலேயே அதைத் தொட்டு எடுக்கக் கூட எப்படிப்பட்டவர்களால் முடியும், எப்படி எடுத்துக் கொண்டு வர வேண்டும் என்பதை எல்லாம் விளக்கமாகச் சொன்னவர் அவர். அந்தக் கொலைகாரன் அது இருக்கும் பூஜை அறைக்குள் எந்தக் காரணம் வைத்தும் போகக் கூடாது என்று எச்சரித்தவர் அவர். அவன் அவர் பேச்சைக் கேட்டிருந்தால் அனாவசியமாகச் செத்திருக்க மாட்டான். அவன் பிணத்தைப் பார்க்காமல் இருந்திருந்தால் சிவலிங்கத்தைத் தூக்கின பையனும் அந்த அளவுக்குப் பயந்திருக்க மாட்டான்.... அந்த சிவலிங்கத்தைத் தொடவும், பூஜை செய்யவும் தகுந்த ஆளாய் கணபதியைத் தேர்ந்தெடுத்ததும் குருஜி தான். இதுவரை அவர் கணக்கு எந்த விதத்திலும் பொய்யாகவில்லை.....”

அதற்குப் பின் அந்தப் பெண்மணி எதுவும் சந்தேகம் கேட்கவில்லை. ஆனால் அவள் அருகில் இருந்து ஒரு வயதான குரல் கேட்டது. “குருஜி எப்போது சிவலிங்கத்தை நேரில் பார்ப்பார்?”

*"இன்னேரம் அவர் அந்த சிவலிங்கத்தை தரிசித்திருக்க வேண்டும்... நான் அங்கே போய் சேர்வதற்குள் அவர் தெரிந்து கொள்ள வேண்டியதைத் தெரிந்து கொண்டிருப்பார். நானும் ஆராய்ச்சியில் என்னோடு இறங்கப் போகிறவர்களும் அதை எப்படி அணுக வேண்டும் என்று அவர் சொல்வார். மீதியை நான் தீர்மானித்துக் கொள்ள முடியும்"*

*பாபுஜி கேட்டார். "ஆராய்ச்சியில் ஈடுபடுத்தப் போகிறவர்களைத் தேர்ந்தெடுத்து விட்டீர்களா?"*

*"இது வரை விசேஷ மானச லிங்கம் பற்றிக் கேள்விப்பட்டதை வைத்து சுமார் 13 பேரைத் தேர்ந்தெடுத்து வைத்திருக்கிறேன். குருஜி சிவலிங்கத்தை நேரில் பார்த்து விட்டு வந்த பிறகு நானும் அவரும் சேர்ந்து அந்த 13 பேரில் மூன்று அல்லது நான்கு பேரை வடிகட்டித் தேர்ந்தெடுப்போம்...."*

*அதன் பின் அவர்களிடம் இருந்து எந்தக் கேள்வியும் எழாமல் போகவே பாபுஜி எழுந்து நின்று "நன்றி டாக்டர் ஜான்சன்" என்று கைகுலுக்கி அனுப்பி வைத்தார். ஜான்சனும் நன்றி தெரிவித்து விட்டு முகம் தெரியாத அந்த நபர்களைப் பார்த்து கை அசைத்து விட்டு வெளியேறினார்.*

*அவரை உள்ளே அனுப்பி விட்ட அதே ஆள் அவரை வெளியே அழைத்துச் சென்று விட்டான். வேறொரு கார் அவரை விமான நிலையத்திற்கு அழைத்துச் செல்லக் காத்திருந்தது. ஜான்சன் தமிழகத்திற்குப் பயணமானார். அவர் மனம் மட்டும் கான்ஃப்ரன்ஸ் ஹாலில் இருந்த அந்த மர்ம நபர்களிடமே தங்கியிருந்தது. அந்த ஆறு பேரையும் நாளை தெருவில் நேராக சந்தித்தாலும் அவருக்கு அவர்களில் ஒருவரைக் கூட அடையாளம் தெரியாது....*

ஜான்சன் சென்றவுடன் கான்ஃப்ரன்ஸ் ஹாலில் எல்லா விளக்குகளும் எரிய ஆரம்பித்தன. அந்த அறுவருமே இந்தியாவைச் சேர்ந்தவர்கள் அல்ல. ஒரு அமெரிக்கர், ஒரு ஜப்பானியர், ஒரு தென்னாப்பிரிக்கர், ஒரு இஸ்ரேல்காரர், ஒரு ஜெர்மானியர் (பெண்மணி) மற்றும் ஒரு எகிப்தியர்.

இஸ்ரேல்காரர் பாபுஜியைக் கேட்டார். “இந்த டாக்டர் ஜான்சனை எந்த அளவுக்கு நம்பலாம்...”

பாபுஜி அமைதியாகச் சொன்னார். “அவருக்கு உயிர் மேல் ஆசை இருக்கிறது. அதிகமாய் பணத் தேவையும் இருக்கிறது. அவருக்கு விவாகரத்து கிடைக்கப் போகிறது. மனைவிக்கு செட்டில் செய்ய அவருக்கு நிறைய பணம் தேவைப்படுகிறது... அதனால் நம்மை அனுசரித்து தான் இருப்பார்”

ஜெர்மானியப் பெண்மணி கேட்டாள். ”இந்த ஆராய்ச்சியில் ஈடுபடுத்தப்படுபவர்களுக்குக் கூட நம்மைப் பற்றித் தெரியாது தானே?”

”ஜான்சனுக்கு என்னை மட்டும் தான் தெரியும். உங்களைத் தெரியாது. ஜான்சன் பயத்தாலும் பேராசையாலும் என்னைப் பற்றி வெளியே சொல்ல மாட்டார். குருஜிக்கு நம் எல்லாரையும் தெரியும் என்றாலும் நம் ப்ராஜெக்ட்டுக்கு வித்திட்டவரே அவர் தான் என்பதால் எந்த நிலையிலும் நம்மைப் பற்றி வெளியே சொல்ல மாட்டார். அதனால் நம்மைப் பற்றி எந்த தகவலும் வெளியே கசியாது. அதனால் கவலை வேண்டாம்...”

“இந்த ஆராய்ச்சி முடிவுகள் எப்போது தெரியும்?” – ஒருவர் கேட்டார்.

*“மூன்று வாரங்கள் ஆகலாம்...”*

*மேலும் பதினைந்து நிமிடங்கள் சில்லரை சந்தேகங்கள் கேட்டு திருப்தி அடைந்த அறுவரும் கிளம்பிச் சென்றனர். அறுவரில் இருவர் விமான நிலையத்திற்கும், இருவர் அந்த ஓட்டலிலேயே வேறு அறைகளுக்கும், இருவர் தாங்கள் தங்கி இருந்த வேறு வேறு ஓட்டல்களுக்கும் போனார்கள். அவர்கள் அறையை விட்டுச் சென்று மூன்று நிமிடங்கள் பொறுத்திருந்து விட்டு பாபுஜி அந்த கான்ஃப்ரன்ஸ் ஹாலில் பூட்டப்பட்டிருந்த ஒரு சிறிய அறைக் கதவைத் திறந்தார். சக்கர நாற்காலியில் அமர்ந்திருந்த முதியவர் ஒருவர் நாற்காலியை நகர்த்திக் கொண்டு ஹாலிற்கு வந்தார்.*

*“அப்பா நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?”*

*அந்த சிறிய அறைக்குள் இருந்தபடியே ஹாலில் நடந்த அத்தனையையும் ரகசிய காமிரா வழியாக டிவியில் பார்த்துக் கொண்டிருந்த பாபுஜியின் தந்தை சொன்னார். “ஒரு விஷயம் மட்டும் தான் எனக்கு இடிக்கிறது”*

*“என்ன அது?”*

*”அந்த சிவலிங்கத்தைப் பராமரிப்பதாய் சொல்லப்படும் மூன்று பேரில் இரண்டு பேராய் பசுபதியையும், அந்த ஜோதிடரின் குருநாதரையும் எடுத்துக் கொண்டால் கூட மீதம் ஒரு ஆள் இருக்கிறார் இல்லையா? சிவலிங்கத்தை பசுபதியிடம் கொண்டு வந்து கொடுத்த சித்தர் இன்னும் உயிரோடு இருக்கிறார் என்பதால் அந்த மூன்றாம் ஆள் அந்த சித்தராகத் தான் இருக்க வேண்டும். அந்த*

சித்தர் இருக்கிற வரை உங்கள் ப்ராஜெக்ட் ஒழுங்காய் முடிவது எனக்கு சந்தேகமாகத் தான் இருக்கிறது…”

பாபுஜி தந்தையை யோசனையுடன் பார்த்தார். எதிலும் ஆழமாய் சென்று பார்க்க முடிந்த அவர் தந்தையின் அறிவு கூர்மையையும், தோன்றியதை தயவு தாட்சணியம் இல்லாமல் சொல்ல முடிந்த தன்மையையும் அவர் என்றுமே மதித்தார். அதனாலேயே என்றும் முக்கியமான பிரச்சினைகள் குறித்து அவர் தன் தந்தையைக் கலந்தாலோசிப்பதுண்டு. தந்தை எழுப்பிய சந்தேகத்தை அவரால் அலட்சியப்படுத்தி விட முடியவில்லை. ஆனால் அதே சமயத்தில் ஒரு உண்மையை தந்தைக்கு சுட்டிக் காட்டத் தோன்றியது.

“அப்பா அந்த சித்தர் இருக்கிற காலத்திலேயே தான் பசுபதி கொல்லப்பட்டார். அந்த சித்தர் இருக்கிற காலத்திலேயே தான் சிவலிங்கம் இடம் பெயர்ந்தது. அதை எல்லாம் அந்த சித்தரால் தடுக்க முடியவில்லை….”

பாபுஜியின் தந்தைக்கு அதை மறுக்க முடியவில்லை. என்றாலும் இதில் இவர்களுக்குத் தெரியாத ஏதோ ஒன்று இருப்பதாக உள்ளுணர்வு அவருக்குச் சொன்னது….

குருஜி இரண்டு நாட்களாக எதுவும் சாப்பிடவில்லை. பட்டினி விரதம் அவருக்குப் புதிதானதல்ல. இமயமலைச்சாரலில் அவர் அபூர்வ சக்திகளைத் தேடி அலைந்த காலத்தில் எத்தனையோ நாட்கள் தொடர்ந்து தண்ணீர் கூடக் குடிக்காமல் சில பயிற்சிகளில் ஈடுபட்டிருக்கிறார். அந்த நாட்களில் உணவை மனம் நினைத்துக் கூடப் பார்த்ததில்லை. அடைந்து கண்ட சக்திகள் முன் உணவெல்லாம் ஒரு பொருட்டாகவே அவருக்குத் தோன்றியதில்லை.

அவரைப் போலவே தேடல்கள் உள்ளவர்கள் ஆண்டாண்டு காலம் மிகவும் கஷ்டப்பட்டு அடைந்த்தை எல்லாம் அவர் ஒருசில வாரங்களிலேயே அடைந்து விட்டார். திபெத்திய குகைகளில் தொடர்ந்தாற்போல் ஆறு மாதங்களில் ஒரு சிறிய குகையில் பத்து நாட்களுக்கு ஒரு முறை ஒரு வேளை மட்டும் சாப்பிட்டு தியானத்தில் இருந்தவர் அவர். சில சமயங்களில் கொடிய விலங்குகள் எல்லாம் அந்தக் குகைக்கு வந்து போகும். அந்த விலங்குகள் வருவதும் தெரியாமல் போவதும் தெரியாமல் அவர் தியானத்தில் இருந்திருக்கிறார். உணர்வுகளின் உன்னத உயரங்களில் இருக்கும் மனிதனை கொடிய விலங்குகள் கூட தாக்குவதில்லை. ஒரு நெருப்பு வளையத்திற்குள் இருப்பது போல புற உலகின் எந்தக் குறுக்கீட்டையும் பற்றிக் கவலைப்படாமல் இருந்த காலங்கள் அவை.

ராமகிருஷ்ணன் என்ற பெயர் உடைய அவர் குருஜியாக உலகிற்கு அறிமுகமான பிறகு நினைத்த போதெல்லாம் தியானத்திற்குள் போகவோ, மற்ற அபூர்வப் பயிற்சிகள் செய்யவோ அவருக்கு முடியாமல் போயிற்று என்றாலும் சில குறிப்பிட்ட காலங்களில் அந்தப் பயிற்சிகளையும் தியானத்தையும் தொடர்ந்து செய்வதை ஒரு கட்டாயமாக அவர் பாவித்து வந்தார். சமகாலத்திய சில கார்ப்பரேட் சாமியார்களைப் போல சொற்பொழிவுகளில் மட்டும் அவற்றைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்து விட்டு அவர் தன் சொந்த வாழ்வில் அவற்றைப் புறக்கணித்து விடவில்லை.

சிவலிங்கத்தைத் தரிசிக்கும் முன் வேதபாடசாலையில் தங்கிய முதல் இரண்டு நாட்களிலும் ஒருசில அபூர்வப் பயிற்சிகளை செய்து கொண்டும், உயர் தியான நிலையில் இருந்து கொண்டும் இருந்த அவர் மூன்றாவது நாள் காலை கணபதி பஞ்சமுக ஆஞ்சநேயர்

***கோயிலுக்குப் போன பிறகு தான் தங்கியிருந்த வீட்டை விட்டு வெளியே வந்தார்.***

***அந்த வீட்டை வேறு யாரும் நெருங்கி விடாமல் காவல் காத்து வந்த ஒரு மாணவன் அவர் தேஜசில் கண்கள் கூசினாற் போல உணர்ந்தான். இரண்டு நாட்களுக்கு முன் அவன் அவரைப் பார்த்திருக்கிறான். ஆனால் அப்போது அவர் இப்படி ஒரு தேஜசில் இருக்கவில்லை..... அவன் கைகளைக் கூப்பி வணங்கினான். அவர் அவனைப் பார்க்கக்கூட இல்லை. கம்பீரமாக சிவலிங்கம் இருந்த வீட்டை நோக்கி நடந்தார். அவர் பார்வை நேராக இருந்தது. தேவையற்ற விஷயங்களில் கவனத்தை சிதறடித்து அவர் தன் உணர்வு நிலையின் உச்சத்தை சிறிதும் இழந்து விட விரும்பவில்லை.***

***கணபதி சென்றவுடன் காமிராவை ஆஃப் செய்து விட்டிருந்தனர். குருஜி தான் சிவலிங்கத்தை சந்திக்கும் நிகழ்ச்சியைப் பதிவு செய்யவோ, பின் அதை மற்றவர்கள் காணவோ விரும்பவில்லை. எனவே முன்பே காமிரா கண்காணிப்பை நீக்கச் சொல்லி இருந்தார். அவர் வெளியே வந்தபின் மறுபடி அதைத் தொடரவும் உத்தரவிட்டிருந்தார்.***

***உள்ளே நுழைந்தவுடன் கதவைத் தாளிட்ட குருஜி சிவலிங்கம் இருந்த பூஜை அறையை நோக்கி நடந்தார்.***

# ***அத்தியாயம் - 41***

***பூஜை அறையை நோக்கி நடந்த குருஜி சிவலிங்கம் பார்வையில் பட ஆரம்பித்தவுடன் தன்னை அறியாமல் சிலையாய் சிறிது நேரம் நின்றார். சிவலிங்கம் ஜோதி சொரூபமாய் ஜொலித்துக்***

கொண்டிருந்தது. ஒளி வெள்ளத்தில் சிவலிங்கம் மிதப்பது போல் தோன்றியது. சிவலிங்கத்தின் அடிப்பாகம் அந்த ஒளி வெள்ளத்தில் மறைந்து விட்டிருந்தது தான் அப்படித் தோன்றக் காரணமா, இல்லை அந்த இடத்தில் சிவலிங்கம் முறைப்படி பிரதிஷ்டை ஆகாதது காரணமா என்பதை குருஜியால் யூகிக்க முடியவில்லை.

சில பேர் சில அபூர்வ சமயங்களில் சில வினாடிகள் மட்டுமே பார்க்க முடிந்த அந்தக் காட்சியைக் கண்டு பிரமித்த குருஜி சில நிமிடங்கள் தன்னை மறந்து நின்றார். அந்த சிவலிங்கம் காந்தமாய் அவரைத் தன்னிடத்திற்கு இழுத்தது. தன்னை அறியாமல் சில அடிகள் முன்னோக்கி வைத்த குருஜி பூஜை அறை வாசலை நெருங்கிய போது சுயநினைவுக்கு வந்து அப்படியே நின்றார்.

இரண்டடிகள் பின்னுக்கு வைத்து சற்று இடைவெளியினை அதிகப்படுத்திக் கொண்டு சாஷ்டாங்கமாய் வணங்கி விட்டு அங்கேயே குருஜி அமர்ந்தார். தன்னை மறந்து முன்பு ரசித்த அந்தக் காட்சியை குருஜி ஆராய்ச்சிக் கண்ணோடு சிறிது நேரம் பார்த்தார். பின் கண்களை மூடிக் கொண்டு தியானம் செய்யப் பார்த்தார். அவர் மனம் முற்றிலுமாக சிவலிங்கம் மீது குவிய மனமே கரைவது போல் ஒரு உணர்வு ஏற்பட பலவந்தமாகக் கண்களைத் திறந்து மனதைத் தன்னிடமே தக்க வைத்துக் கொண்டார்.

குருஜி பின் மெல்ல புன்னகைத்தார். “நான் உன்னிடம் என்னை இழப்பதற்காக வரவில்லை விசேஷ மானஸ லிங்கமே. உன்னை என் வசப்படுத்தப்படுத்த வந்திருக்கிறேன். அதற்காக உன் சக்திகளை நான் அளக்க வந்திருக்கிறேன். அளந்து உன்னை என் வசப்படுத்த அடுத்ததாக நான் என்ன செய்ய வேண்டும் என்று யோசிக்க வந்திருக்கிறேன்....”

குருஜி ஏதாவது ஒரு வகையில் சிவலிங்கத்திடம் இருந்து பதில் வரும் என்று எதிர்பார்த்தது போல சிவலிங்கத்தையே பார்த்தபடி ஒரு நிமிடம் மௌனமாக இருந்து பார்த்தார். ஜொலித்த சிவலிங்கம் அப்படியே அமைதியாக இருந்தது.

குருஜி தொடர்ந்தார். "ஒரு தனிப்பட்ட உருவம் இருக்கிற கடவுளை நம்பும் கட்டத்தை என் வாழ்க்கையில் நான் என்றோ தாண்டி விட்டேன் மானஸ லிங்கமே. மொழி, மதம், தேசம் கடந்த ஒரு மகாசக்தியை, இந்தப் பிரபஞ்சத்தையே இயக்குகின்ற அந்தப் பெரும் சக்தியைத் தான் மனிதர்கள் கடவுள் என்ற பெயரில் அழைக்கிறார்கள் என்றால் அந்தக் கடவுள் விருப்பு வெறுப்பு இல்லாத்தாகத் தான் இருக்க வேண்டும் என்பதில் எனக்கு எந்த சந்தேகமும் இல்லை. ஏனென்றால் இந்த உலகத்தில் எல்லா மகாசக்திகளும் அப்படித் தான் இருக்கின்றன..."

"... சூரியன் பிடித்தவர்களுக்கு மட்டும் ஒளிகாட்டி மற்றவர்களிடம் தன் ஒளியை மறைத்துக் கொள்வதில்லை. மழை தன்னை வரவேற்பவர்கள் மீது மட்டும் பெய்வதில்லை. சகலருக்கும் பெய்யும். சுடும் விஷயத்தில் தீ பட்சபாதம் காட்டுவதில்லை. அது யார் தொட்டாலும் சுடும். இதெல்லாம் இயற்கையின் நியதிகள். இந்தப் பிரபஞ்சம் உருவான காலத்தில் இருந்து இப்படித்தான் இருந்து வருகிறது. ஏன் பிரபஞ்சமே இந்த இயற்கையின் விதிகளின் படியே உருவானது என்பதால் இந்த விதிகளை மாற்ற முடிவது பிரபஞ்சத்தையே அழிக்க முடிவது போலத் தான் என்பதில் எனக்கு சந்தேகமே இல்லை...."

"... அதே வழியில் விருப்பு வெறுப்பில்லாதது தான் கடவுள் சக்தி என்றால் அந்தக் கடவுளை வணங்குவதில் அர்த்தம் இல்லை அல்லவா? வணங்குவதால் அந்த சக்தி ஒருவருக்கு வாரி வழங்கி விடவும் போவதில்லை. வணங்க மறுப்பதால் ஒருவர் பெற

*இருப்பதை அந்த சக்தி தடுத்து விடவும் போவதில்லை. அந்தக் கடவுள் சக்தியே ஒருவன் தன்னை வணங்குகிறானா இல்லையா என்று கவனிப்பதும் இல்லை, அதை ஒரு பொருட்டாக நினைப்பதும் இல்லை என்று நான் புரிந்து கொண்ட பிறகு நான் கடவுளை வணங்கியது இல்லை. வணங்கி என்ன லாபம், வணங்காமல் இருந்து என்ன நஷ்டம்?...”*

*“...அப்படியானால் நீ கேட்கலாம் நான் ஏன் உன்னை வணங்கினேன் என்று. நான் வணங்கியது உன்னை அல்ல. உன்னை உருவாக்குவதில் பல நூறு வருஷங்களாக ஈடுபட்ட என் குருநாதர் போன்ற சித்தர்களைத் தான் நான் வணங்கினேன். அந்த முயற்சி வணங்க வேண்டியது. அங்கீகரிக்கப்பட வேண்டியது. உன் மேல் பிரம்மாண்டமான சக்தியை ஆவாகனம் செய்து இன்று உன்னை இந்த அளவில் ஜொலிக்க வைத்திருக்கும் அவர்கள் முயற்சிகளுக்கு என் சாஷ்டாங்கமான நமஸ்காரம்...”*

*”... மனிதன் எந்த சக்திக்கும் பயப்பட வேண்டியதில்லை. அந்த சக்தி எத்தனை பிரம்மாண்டமாக இருந்தாலும் நிலைகுலைய வேண்டியதில்லை. அவனுக்குத் தந்திருக்கும் பேரறிவைப் பயன்படுத்தினால் எந்த சக்தியையும் தனக்கு வேண்டிய வகையில் அவன் பயன்படுத்திக் கொள்ளலாம். அவன் அப்படிப் பயன்படுத்த முடிந்ததால் தான் இன்று வானத்தில் பறக்கிறான், அடுத்த கிரகங்களுக்கு செல்கிறான், எத்தனையோ புதிது புதிதாய் கண்டு பிடித்து சாகசங்கள் செய்கிறான். அவனால் எதுவும் முடியும். ஏனென்றால் அவனே அந்த பிரபஞ்ச சக்தியின் ஒரு அம்சம்....”*

*“...மனிதன் எதையும் வணங்கி சாதிப்பதில்லை மானஸ லிங்கமே, அவன் எதையும் புரிந்து கொண்டு தான் சாதிக்கிறான். தன் முயற்சியினால் தான் சாதிக்கிறான். இது தான் சரித்திரம். இது தான்*

*விதி... அதனால் தான் நான் உன்னைப் புரிந்து கொள்ள வந்திருக்கிறேன்...”*

குருஜி அந்த விசேஷ மானஸ லிங்கத்தைப் பார்த்துப் புன்னகைத்து விட்டு ஆத்மார்த்தமான தொனியில் தொடர்ந்தார். *”...உன்னைப் பராமரிக்கும் மூவரில் ஒருவராக என் குருநாதர் இருந்த போதும், அவர் சீடனாக நான் இருந்த போது கூட ஒரு நாளும் உன்னைப் பற்றி என்னிடம் அவர் சொன்னதில்லை. நான் சீடனாக இருந்த அதே காலத்தில் தான் உன்னைக் கொண்டு வந்து பசுபதியிடம் ஒப்படைத்தார். உலகமெல்லாம் பிரபலமாய் இருந்திருக்க வேண்டிய உன்னை பசுபதியும் தன் தனிப்பட்ட ரகசிய சொத்தாய் அறுபது வருஷங்களாய் பாதுகாத்தார். அவரைச் சொல்லித் தப்பில்லை. அவருக்கு முந்தியவர்களும் உன்னை அப்படித்தான் வைத்திருந்தார்கள்...”*

*“... பிரமிக்க வைக்கும் நேர்த்தியுடனும், அழகுடனும் ஒரு ஓவியத்தை வரைந்து விட்டு அதை ஒளித்து வைப்பதில் என்ன அர்த்தம் என்று எனக்குப் புரியவில்லை. உனக்குப் புரிகிறதா?”*

குருஜி கேட்டு விட்டு ஏதாவது ஒரு சங்கேத மொழியிலாவது மானஸ லிங்கத்திடம் இருந்து ஒரு பதிலை எதிர்பார்த்தது போல இருந்தது. எந்த விதத்திலும் எந்த பதிலும் கிடைக்காமல் போனாலும் தொடர்ந்தார்.

*”... நான் படிக்காத சாஸ்திரம் இல்லை, நான் அறியாத வேதாந்தம் இல்லை, நான் அலசாத தத்துவம் இல்லை. அப்படிப்பட்ட நான் பிரபஞ்ச சக்தி அல்லது கடவுள் சக்தியின் ஒரு அங்கம் என்பதில் அர்த்தம் இருக்கிறது, பெருமை இருக்கிறது. ஆனால் இதில் எதுவும் தெரியாத, புரியாத ஒரு குப்பனும், சுப்பனும் கூட அந்த சக்தியின் அங்கம் என்பதை ஒத்துக் கொள்வதில் எனக்கு*

உடன்பாடு இல்லை மானஸ லிங்கமே. வரலாறு படைக்கப் போகிற நானும் வரலாறே தெரியாத குப்பனும் சுப்பனும் ஒன்றானால் நான் வாழ்நாள் முழுவதும் சாதித்து அடைந்த உயரங்களுக்கு எல்லாம் என்ன அர்த்தம் இருக்கிறது. எல்லாம் ஒன்று என்று என் தனித்தன்மையை இழந்து விட நான் விரும்பவில்லை. அது இறைசக்தியே ஆனாலும் கூட அதில் எனக்கு சம்மதமில்லை. மந்தை ஆடுகளில் ஒன்றாக வாழ்ந்து மடிவதில் எனக்கு விருப்பமில்லை. மந்தைகளை மேய்ப்பவனாக இருந்து வழிநடத்த நான் ஆசைப்படுகிறேன்...”

”... நான் குருஜி என்றழைக்கப்படுகிற ராமகிருஷ்ணன். இது வரை எனக்குக் கிடைத்த பெருமை எல்லாம் நான் அறிந்த விஷயங்களை வைத்துத் தான். ஆனால் நான் எதையும் புதிதாக இந்த உலகத்தில் அறிமுகப்படுத்தி விடவில்லை. எத்தனையோ ஞானிகள் சொன்னதையும், முன்பே இந்த உலகத்தில் இருந்த விஷயங்களையும் தெரிந்து வைத்திருக்கிறேன் என்பது மட்டுமே என் சாதனையாக இருந்திருக்கிறது. அந்த சாதனையில் எனக்கு திருப்தி இல்லை மானஸலிங்கமே. நான் புதியதாக ஒரு வரலாற்றை இந்த உலகத்தில் உருவாக்கப் போகிறேன் உன் மூலமாக. நான் உன் சக்தியைப் பயன்படுத்தி புதிய பாதையை இந்த உலகில் உருவாக்கப் போகிறேன். அந்த விதத்தில் இந்த உலக வரலாற்றில் என் பெயர் சாசுவதமாகப் பதிவாகப் போகிறது...”

“...மகாசக்தியான உனக்கும் தனிப்பட்ட விருப்பு வெறுப்பு இருக்கப் போவதில்லை. உன் சக்திக்கு இசைவாக அணுகுபவர்கள் எவருக்கும் எதையும் நீயும் மறுக்கப் போவதில்லை. பிரச்சினை உன்னிடம் இருந்து வரப் போவதில்லை. அது எனக்குத் தெரியும். பிரச்சினை சக்திகளால் உண்டாவதில்லை. மனிதர்களால் தான் உண்டாகிறது. அப்படித் தான் உன்னை வணங்கி வந்தவர்களால் பிரச்சினையை சந்திக்கிறோம். உன்னைப் பற்றி பேசக் கூட பசுபதி

தயாராக இருந்திருக்கவில்லை. அவரை சாகடித்ததில் எங்களுக்குத் துளி கூட பெருமை இல்லை. வருத்தம் தான். ஆனால் வேறு வழி எதையும் அவர் விட்டு வைக்கவில்லை... அந்தக் கொலைகார முட்டாளிடம் கூட படித்துப் படித்து சொல்லி இருந்தோம்... உன்னை நெருங்க வேண்டாம் என்று. பசுபதியைக் கொன்ற அவன் எங்கள் பேச்சைக் கேட்காமல் உன்னை நெருங்கி வீணாக உயிரை விட்டான். அதில் எங்கள் பங்கு எதுவும் இல்லை....”

குருஜி திடீரென்று நிறுத்தி வாய் விட்டுச் சிரித்தார். ”பல வருஷங்கள் தவம் இருந்து அறிந்த வித்தையை மூன்று நாள் பயிற்சி செய்து விட்டு வந்து உன்னை இந்த ஒளிக்கோலத்தில் பார்க்க முடிந்த நானே உன்னை நெருங்கினால் என் தனித்தன்மையை இழந்து விடுவேன் என்று பயப்படுகிறேன். அப்படி இருக்கையில் அந்த முட்டாள் அத்தனை வேகமாய் உன் அருகே போனது எமனுக்கு அழைப்பு விட்ட மாதிரி தான்... அவன் விதி அவனை அப்படி இழுத்திருக்கிறது....”

“...அதிருக்கட்டும். எனக்கு ஒரு சந்தேகம். உன்னைக் கேட்கலாமா? என் குருநாதர் போன்ற பெரிய சித்தர்கள் பூஜை செய்த உன்னை இப்போது கணபதி என்கிற ஒன்றும் தெரியாத ஒரு பையன் பூஜை செய்வது உனக்கு எப்படி இருக்கிறது. மௌனமும் அமைதியுமாக உன்னைப் பூஜித்து வந்தவர்களுக்குப் பிறகு இப்போது சலிக்காமல் எல்லாவற்றைப் பற்றியும் பேசிக் கொண்டிருக்கும் பையன் கிடைத்திருப்பது எப்படி இருக்கிறது. உனக்கு தனிப்பட்ட விருப்பு வெறுப்பு இல்லாததால் நீ ஒரு சலனமும் கூட இல்லாமல் இருக்கலாம். ஆனால் கணபதியைத் தேர்ந்தெடுத்து நான் உன்னைப் பூஜை செய்ய வைத்திருப்பதற்கு என் குருநாதர் என்ன நினைப்பார்? இது வரை பூஜை செய்வது யார் என்பதை தீர்மானம் செய்தது அவர்கள் கூட்டமாகத் தான் இருந்தது. இப்போது அந்த அதிகாரத்தை நான் எடுத்துக் கொண்டதைப் பற்றி

அவர் அபிப்பிராயம் என்ன? யாரும் இல்லாத போது உனக்கு இங்கே பூஜை செய்து விட்டுப் போன அவர், கணபதியிடம் கூட ஒரு தடவை பேசி பூக்களைக் கொடுத்து விட்டுப் போன அவர் ஏன் என் கண்ணில் மட்டும் படவில்லை என்று தெரியவில்லை. அவரைப் பார்க்க முடிந்திருந்தால் இதைக் கண்டிப்பாகக் கேட்டிருப்பேன்.....”

மனம் விட்டுப் பேசி முடித்த குருஜி மறுபடி சிரித்தார். “...கணபதி பேச்சைக் கேட்டு உனக்கும் இடைவிடாத பேச்சு பழக்கமாயிருக்கும் மானஸ லிங்கமே. அதனால் என் பேச்சையும் நீ பொறுமையாய் கேட்டிருக்கிறாய். நன்றி. புதியதொரு உலகத்திற்கு உனக்கு நல்வரவு. எங்கள் ஆராய்ச்சிக்கு நீ ஒத்துழைப்பாயா?”

மறுபடி மானஸ லிங்கம் மௌனம் சாதித்தது. அத்துடன் பேச்சை நிறுத்திக் கொண்ட குருஜி செயலில் இறங்கினார். பூஜை அறைக்குள் தப்பித் தவறிக் கூட நுழையாத அவர் அடுத்த சில மணி நேரங்கள் பூஜை அறைக்கு வெளியே இருந்த ஹாலில் அமைதியாக உலாவினார். ஒவ்வொரு இடைவெளியிலும் விசேஷ மானஸ லிங்கத்தை ஆராய்ந்தார். தனக்கு ஏற்படும் உணர்வுகளை மனதில் குறித்துக் கொண்டார். உலகையே மறந்து வித விதமான இடைவெளிகளில் விசேஷ மானஸ லிங்கம் ஏற்படுத்த முடிந்த தாக்கத்தை ஆராய்ந்து முடித்து அங்கிருந்து வெளியேறிய போது தான் களைப்பை உணர்ந்தார்.

அவர் வெளியே வந்த போது வாசலிலேயே ஈஸ்வர்-கணபதியின் தற்செயலான சந்திப்புச் செய்தி அவருக்காகக் காத்திருந்தது. செய்தியைக் கேட்டு முடித்த போது அவருக்கு அந்த சந்திப்பைத் தற்செயல் என்று நம்ப முடியவில்லை. சந்திக்கவே எந்த வகையிலும் வாய்ப்பில்லாத இந்த சந்திப்பு தற்செயலாக இருக்க வழியில்லை. ஏதோ ஒரு உணர்வால் உந்தப்பட்டு அவர் மறுபடி

உள்ளே எட்டிப் பார்த்தார். ஏதோ ஒரு சிரிப்புச் சத்தம் கேட்டது போல் தோன்ற அவருக்கு மயிர்க் கூச்செறிந்தது.

தன்னை சுதாரித்துக் கொண்ட குருஜி ”கணபதி இங்கே வந்து சாயங்கால பூஜை முடிந்தவுடன் என்னை வந்து பார்க்கச் சொல்” என்று தகவல் சொன்னவனிடம் அறிவித்து விட்டு தன் இருப்பிடத்திற்குச் சென்றார்.

கணபதியின் பஞ்சமுக ஆஞ்சநேயரின் தரிசனம் திருப்திகரமாக இருந்தது. கோயிலில் அதிக கூட்டமிருக்காததால் சாவகாசமாக ஆஞ்சநேயரைத் தரிசிக்க முடிந்தது. அவனைக் கூட்டிக் கொண்டு வந்த டிரைவர் தான் ஏதோ வலியில் துடிப்பது போல இருந்தான். “உங்களுக்கு உடம்பு சுகமில்லையோ?”

டிரைவர் மறுத்தான். “அப்படியெல்லாம் இல்லை”

திரும்பி வருகின்ற போது சிறிது நேரம் கணபதியின் சிந்தனையெல்லாம் மின்சாரம் பாய்ச்சி விட்டுப் போன ஆசாமி மீதே இருந்தது. ”அந்த ஆள் கையில் கரண்ட் கம்பி ஏதாவது இருந்திருக்குமோ?”. இன்னமும் லேசாக ஏதோ ஒரு மின்சார அதிர்வு அவனிடம் தங்கி இருப்பது போன்ற உணர்வு அவனிடம் இருந்தது.

காரின் சீட்டில் வைத்திருந்த அந்த ஜவுளிக்கடை பையைப் பார்த்த போது அவன் சிந்தனை ஈஸ்வர் மீது சென்றது. ”எத்தனை நல்ல மனசு. அத்தனை படிச்சிருக்கார். பார்க்க அழகாய் சினிமா ஸ்டார் மாதிரி இருக்கார். ஆனால் கொஞ்சம் கூட கர்வம் அவர் கிட்ட இல்லையே. இந்த ஏழை கிட்ட எவ்வளவு பாசம் கட்டினார்...”

சீக்கிரமாகவே அவன் தூங்கிப் போனான். வேதபாடசாலை வந்த பிறகு தான் அவன் கண்விழித்தான். இறங்கியவுடனேயே பூஜை முடித்து விட்டு குருஜியைச் சென்று சந்திக்க வேண்டும் என்ற தகவல் தெரிவிக்கப் பட்டது.

“இந்த குருஜி இன்னொரு நல்ல மனுஷன். ஏ.சி கார்ல ஆஞ்சநேயர் கோயிலுக்கு அனுப்பிச்சதும் அல்லாமல் திரும்பி வந்தவுடனே தரிசனம் நல்லபடியா ஆச்சான்னு கேட்க கூப்பிட்டனுப்பி இருக்கார். பிள்ளையாரே நான் உன் கிட்ட நேர்ல வந்து சொல்ல வேண்டியது நிறைய இருக்கு. உன் தயவுலயும் உங்கப்பா தயவுலயும் நிறைய நல்லது நடந்திருக்கு...”

சிவலிங்கத்திற்குப் பூஜை செய்யச் செய்ய கணபதியை ஒரு குற்ற உணர்ச்சி அழுத்தியது. தனக்கொரு பட்டுவேட்டியும், பிள்ளையாருக்கு ஒரு பட்டு வேட்டியும் வாங்கிக் கொண்டு வந்திருக்கும் போது சிவலிங்கத்திற்கு மட்டும் எதையும் வாங்கிக் கொண்டு வர முடியவில்லையே என்ற குற்ற உணர்ச்சி அது. “என் கிட்ட காசு இருந்திருந்தா கண்டிப்பா வாங்கிட்டு வந்திருப்பேன். ஓசியில வாங்கிக் கொடுக்கிற மனுஷன் கிட்ட எத்தனை தான் வாங்க முடியும் நீயே சொல்லு”.

ஆனாலும் அவனுக்கு மனம் கேட்கவில்லை. தனக்குக் கிடைத்த பட்டு வேட்டியை சிவலிங்கத்தின் மீது சாத்தினான். “நான் இங்கிருந்து போகிற வரைக்கும் உனக்கு இது இருக்கட்டும். போகிறப்ப கொண்டு போகிறேன். சரியா.... இதை உனக்கே கொடுத்துட்டும் போகலாம் தான். ஆனா எனக்குன்னு வாங்கிக் கொடுத்த அந்த நல்ல அண்ணனை நான் அலட்சியம் செஞ்ச மாதிரி ஆயிடும்.. அதான்...”

பட்டுவேட்டி கட்டப்பட்ட சிவலிங்கத்தின் அழகு கூடி இருப்பது போல அவனுக்குத் தோன்றியது. ”என்னோட பிள்ளையாருக்கும் இது ரொம்பவே நல்லா இருக்கும்.” என்று நினைக்கையில் அவன் முகத்தில் பெருமிதப் புன்னகை அரும்பியது.

பூஜையை முடித்து விட்டு கணபதி குருஜியைப் பார்க்கச் சென்றான். அவன் உள்ளே நுழைகையில் குருஜி ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி இருந்தார். அவன் வரும் சத்தம் கேட்டவுடன் அவன் பக்கம் திரும்பியவர் திடுக்கிட்டார். மூன்று நாள் தியானப் பயிற்சி மூலம் அடைந்திருந்த உயர்ந்த நுண்ணிய உணர்வு நிலையில் விசேஷ மானஸ லிங்கத்தின் ஜொலிப்பைப் பார்க்க முடிந்த அவருக்கு கணபதியைச் சூழ்ந்திருந்த ஏதோ ஒரு சக்தி வட்டத்தையும் பார்க்க முடிந்தது தான் அந்தத் திகைப்பின் காரணம். இது முன்பிருந்தே இவனிடம் உள்ளதா இல்லை புதியதா?...!

# அத்தியாயம் - 42

குருஜி கணபதி முகத்தையே கூர்ந்து பார்த்தார். அந்த முகத்தில் களங்கமோ, புத்திசாலித்தனமோ சிறிதும் தெரியவில்லை. புன்னகையுடன் கணபதியை வரவேற்றார். ”வா கணபதி பஞ்சமுக ஆஞ்சநேயர் தரிசனம் எப்படி இருந்துச்சு?”

”உங்க தயவுல எந்தக் குறையும் இல்லாமல் ஆஞ்சநேயர் தரிசனம் நல்லா இருந்துச்சு குருஜி. இந்த ஏழைக்கு ஏ.சி கார் தேவை இருந்திருக்கலை. பஸ்லயே போயிருந்திருப்பேன்....” கணபதி பணிவுடன் சொன்னான்.

குருஜி புன்னகையுடன் சொன்னார். “நான் சொன்னேன்னு உன்னோட பிள்ளையாரைக் கூட விட்டுட்டு சிவலிங்கத்திற்கு பூஜை

செய்ய இங்கே வந்திருக்கே. உனக்கு நான் இது கூட செய்யலைன்னா எப்படி கணபதி. எத்தனை நேரம் தான் நீ இங்கே போரடிச்சுப் போய் உட்கார்ந்திருப்பாய். அதான் போகச் சொன்னேன். அந்தக் கார் வழியில ரிப்பேர் ஆயிடுச்சுன்னு கேள்விப்பட்டேன். எனக்கே சங்கடமாயிடுச்சு....”

”அதுலயும் நல்லதே ஆச்சு குருஜி. அதனால எனக்கு ஒரு அண்ணன் கிடைச்சாரு...”

முகத்தில் ஆச்சரியத்தைக் காண்பித்த குருஜி கேட்டார். “அண்ணனா? அது யாரு?”

கணபதி உற்சாகமாய் ஈஸ்வரைச் சந்தித்த விதத்தையும் அவன் தனக்கு பட்டு உடைகள் வாங்கித் தந்ததையும் விவரித்தான். அவன் மீது வைத்த கண்களை எடுக்காமல் குருஜி மிகவும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

“...நான் வேண்டாம்னு எத்தனை சொல்லியும் அவர் கேட்கலை. ‘நீ என்னை வேற மனுஷனாய் நினைக்கறியான்னு கேட்டு வாயடைச்சுட்டார். என்னோட பிள்ளையாருக்கும் ஒரு பட்டு வேட்டி வாங்கித் தந்தார். இன்னைக்கு என்னால உங்களுக்கும் ஈஸ்வர் அண்ணாவுக்கும் அனாவசிய செலவு. எல்லார் கிட்டயும் வாங்கிகிட்டே இருக்கேன். எப்ப இதை எல்லாம் திருப்பித் தரப் போறேன்னு தெரியலை...” சொல்லும் போது அவன் குரல் தழுதழுத்தது.

அவன் ஈஸ்வர் அண்ணாவிடம் என்னவெல்லாம் பேசினான் என்பதை குருஜி துருவித் துருவிக் கேட்டு தெரிந்து கொண்டார். அவன் தன் கிராமத்து விலாசத்தை ஈஸ்வரிடம்

தெரிவித்தது அவருக்கு அபாயத்தை எச்சரித்தது. ஈஸ்வர் கணபதியின் பிள்ளையாரைப் பார்க்க வர முடிவது கஷ்டம் என்று சொன்னது சற்று திருப்தியைத் தந்தாலும் கூட அவருக்கு நெருடலாகவே இருந்தது.

வாய் விட்டே குருஜி கேட்டார். "நீ இங்கே சிவலிங்கத்திற்குப் பூஜை செய்யறதைச் சொல்லிடலையே"

"சொல்லலை. பிள்ளையாரோட அப்பாவுக்குப் பூஜை செய்யறேன்னு சொன்னேனே ஒழிய எங்கேன்னு நான் சொல்லலை. அவர் யார் கிட்டயும் சொல்லப் போக மாட்டார்னாலும் நீங்க சொன்னது ஞாபகம் வந்ததால் நான் சொல்லலை."

தலையசைத்த குருஜி கணபதியைக் கூர்ந்து பார்த்தபடி சொன்னார். "உன் கிட்ட இன்னைக்கு ஏதோ ஒரு பெரிய மாற்றம் தெரியுது கணபதி. அது என்னன்னு எனக்கு சொல்ல வரலை. ஒரு அண்ணன் கிடைச்ச சந்தோஷமா இல்லை ஆஞ்சநேயரைப் பார்த்த சந்தோஷமான்னு தெரியலை. ஆனா ஏதோ மாறின மாதிரி மட்டும் நிச்சயம் தெரியுது."

கணபதி திடீர் என்று நினைவு வந்தவனாகச் சொன்னான். "எனக்கு அந்த ஜவுளிக் கடையில ஷாக் அடிச்சுது. அதுகூட காரணமாய் இருக்கலாம்..."

"ஷாக் அடிச்சுதா எப்படி?"

கணபதி தனக்கும் ஈஸ்வருக்கும் இடையே போகும் போது தங்களைத் தொட்ட மனிதனைப் பற்றிச் சொன்னான். "... அவர் தொட்டது கரண்ட் கம்பி மேல பட்டது மாதிரி இருந்துச்சு.

அப்படித்தான் ஈஸ்வர் அண்ணாவுக்கும் இருந்துச்சுன்னு நினைக்கிறேன். நான் அந்த ஆள் முகத்தைக் கூடப் பார்க்கலை. நாங்க சுதாரிக்கறதுக்குள்ள அந்த ஆள் மாயமா மறைஞ்சுட்டார். ஈஸ்வரண்ணா அப்பவே ஓடிப் போய் பார்த்தார். அந்த ஆள் தெரியலை. ஈஸ்வரண்ணா கடைக்காரங்க கிட்ட எல்லாம் அந்த ஆளைப் பத்தி கேட்டுப் பார்த்தார். யாருமே அவரை சரியா பார்க்கலை... எனக்கு கனவு மாதிரி இருந்தாலும் இப்பவும் அந்த ஷாக் அடிச்ச உணர்வை மறக்க முடியலை."

குருஜிக்கு சிறிது நேரம் எதுவும் பேச முடியவில்லை. பேச முடிந்த போது கேள்விக்கணைகளால் கணபதியைத் துளைத்தெடுத்தார். கணபதியின் பதில்களை வைத்து அந்தக் காட்சியை நேரிலேயே பார்ப்பது போல் உணர்ந்த அவருக்கு ஈஸ்வருக்கும் கணபதிக்கும் இடையே புகுந்து தொட்டு விட்டுப் போன ஆள் யார் என்பதில் சந்தேகம் இருக்கவில்லை.

அடுத்ததாக அவர் கேள்விகள் கணபதியும் ஈஸ்வரும் தொடப்பட்ட நேரத்தைப் பற்றியதாக இருந்தன. மிகச்சரியாக வினாடி துல்லியமாக எந்த நேரம் என்பதைத் தெரிந்து கொள்ள குருஜி விரும்பினார். அந்த ஆள் தொட்டு விட்டுப் போய் ஐந்து நிமிடங்களுக்குள் டிரைவர் அழைத்துப் போக வந்து விட்டான் என்று கணபதி தெரிவிக்கவே மீதியை டிரைவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்று நினைத்த அவர் கணபதிக்கு விடை கொடுத்தார்.

அவ்வளவாக சாமர்த்தியம் போதாத கணபதிக்கே அவர் கேட்ட கேள்விகள் ஆச்சாரியத்தைத் தந்ததால் போவதற்கு முன் கேட்டான். "ஏன் இவ்வளவு தூரம் கேட்கறீங்க குருஜி?"

குருஜி கட்டாயமாய் புன்னகையை வரவழைத்துக் கொண்டு சொன்னார். "வித்தியாசமாய் எதைக் கேட்டாலும் அதை ஆழமாய் புரிஞ்சுக்கற வரைக்கும் என்னால் விட முடியாது கணபதி. உன் அனுபவம் வித்தியாசமாய் இருந்ததால் தான் கேட்டேன்"

அதற்காக அந்த நேரத்தை ஏன் துல்லியமாக தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறீர்கள், அந்த நேரத்தில் என்ன இருக்கிறது என்று கேட்கும் அளவு புத்தி கூர்மை இல்லாத கணபதி குருஜி தந்த பதிலில் திருப்தி அடைந்தவனாக அவரை வணங்கி விட்டுக் கிளம்பினான்.

அவன் போனவுடன் டிரைவரை அழைத்து கேள்விகள் பல கேட்டு அந்த நேரத்தை சரியாகத் தெரிந்து கொண்ட குருஜி அவனை அனுப்பி விட்டு அவசர அவசரமாய் பஞ்சாங்கத்தை எடுத்துப் புரட்டினார். அந்த நேரம் அபூர்வ சக்திகளின் தீட்சைக்கோ, உபதேசத்துக்கோ பொருத்தமான மிகப் புனிதமான முகூர்த்த நேரம்.....

அதிர்ச்சியில் இருந்து மீள இந்த முறை குருஜிக்கு நிறைய நேரம் தேவைப்பட்டது. கணபதியை சூழ்ந்திருந்த சக்தி வட்டம் எப்படி வந்ததென்று அவருக்கு இப்போது புரிந்தது....

அந்த நேரத்தில் குருஜியின் பர்சனல் செல்போன் இசைத்தது. ஜான்சன் தான் பேசினார். "குருஜி நான் ஒட்டலில் இருந்து பேசுகிறேன். பத்து நிமிஷங்களுக்கு முன் தான் வந்து சேர்ந்தேன். உங்களை சந்திக்க வரலாமா?"

"வா" என்று சுருக்கமாகச் சொல்லிய குருஜி முக்கால் மணி நேரம் கழித்து ஜான்சன் வந்து சேரும் வரை ஆழ்ந்த சிந்தனையிலேயே இருந்தார். எப்போதுமே தெளிவாகவும் சக்தி

*பிரவாகமாகவும் இருக்கும் குருஜி அன்று ஆழ்ந்த யோசனையுடனும், களைத்துப் போயும் இருந்ததாக ஜான்சனுக்குத் தோன்றியது. "என்ன குருஜி ஏதாவது பிரச்சினையா?" என்று ஜான்சன் கேட்டார்.*

*"எதுவுமே பிரச்சினை இல்லை ஜான்சன். எல்லாமே சில சூழ்நிலைகள் தான். சமாளிக்கத் தெரியாத வரை பிரச்சினைகள் போல தெரியலாம். சாமர்த்தியமாக சமாளிக்க முடிந்தால் அந்த சூழ்நிலைகள் நமக்கு அனுகூலமாய் கூட மாறலாம்.... இது பற்றி அப்புறம் சொல்கிறேன். மும்பையில் பாபுஜியுடன் சந்திப்பு எப்படி இருந்தது? அதை முதலில் சொல்"*

*ஜான்சன் எல்லாவற்றையும் சொன்னார். முகம் தெரியாத அறுவர் பற்றி சொன்ன போதும் குருஜி எந்த ஆச்சரியத்தையும் காட்டாததைப் பார்த்த போது அந்த அறுவர் பற்றி குருஜி முன்பே அறிவார் என்பது புரிந்தது. குருஜியை நம்பிய அளவுக்கு அவர்கள் தன்னை நம்பவில்லை அதனால் தான் இருட்டில் இருந்திருக்கிறார்கள் என்று நினைக்கையில் அவருக்கு ஒரு மாதிரியாக இருந்தது.*

*அவர் முகபாவனையிலேயே அதை உணர முடிந்த குருஜி ஆறுதல் படுத்தும் விதமாகச் சொன்னார். "ஜான்சன், சில விஷயங்கள் தெரியாமல் இருப்பது தான் நல்லது. அது தான் பாதுகாப்பு"*

*"யார் அவர்கள்?" பதில் வரும் என்று நம்பிக்கை இல்லாவிட்டாலும் ஜான்சனுக்குக் கேட்கத் தோன்றியது.*

குருஜி சொன்னார். "இந்த ப்ராஜெக்டின் ஸ்பான்சர்ஸ். வேறு வேறு நாடுகளைச் சேர்ந்தவர்கள். அந்தந்த நாடுகளில் சக்தி வாய்ந்தவர்கள். நாளைய உலகைத் தீர்மானிக்கப் போகிறவர்கள்..... உன்னிடம் ஒன்று கேட்க நினைத்து இருந்தேன்.. நீ அந்த மீட்டிங்கில் பாபுஜியின் அப்பாவைப் பார்த்தாயா?"

"அந்த ஆறு பேரில் ஒருவராக அவர் உட்கார்ந்திருந்தால் எனக்குத் தெரிய வாய்ப்பில்லை. வெளிச்சத்தில் பாபுஜியைத் தவிர வேறு யாரும் இருக்கவில்லை."

"அந்த ஆள் சக்கர நாற்காலியில் தான் உட்கார்ந்திருப்பார். மங்கலான வெளிச்சத்தில் கூட அது உனக்குத் தெரியாமல் போகாது."

"இல்லை குருஜி. சக்கர நாற்காலியில் யாரும் இருக்கவில்லை. ஏன் கேட்கிறீர்கள்?"

"அவர் ஆரம்பத்தில் இருந்தே இந்தப் ப்ராஜெக்ட் சரிவர முடியுமா என்பதில் சந்தேகமாக இருந்தவர். பாபுஜி அவர் அபிப்பிராயத்திற்கு மதிப்பு தருபவன். அதனால் தான் நீ பேசுவதைக் கேட்க அவரை அவன் அழைத்து வந்தானா என்று கேட்டேன்."

ஜான்சனிற்கு பாபுஜியின் தந்தையார் பற்றித் தெரிந்து கொள்ள பெரிய ஆர்வம் இருக்கவில்லை. அவர் ஆர்வம் முழுவதும் விசேஷ மானஸ லிங்கம் மீது இருந்தது. அதனால் பரபரப்புடன் கேட்டார். "குருஜி சிவலிங்கத்துடன் உங்கள் அனுபவம் எப்படி இருந்தது?"

குருஜி சிவலிங்கத்திடம் பேசிய பேச்சுக்களை ஜான்சனிடம் சொல்லவில்லை. மற்றபடி தன் அனுபவத்தை முழுமையாகச்

*சொன்னார். ஒளி வெள்ளத்தில் மிதந்து நிற்பது போல் காட்சி அளித்த விசேஷ மானஸ லிங்கம் காந்தமாய் தன்னை இழுத்ததையும், நெருங்க நெருங்க அவர் மனதையே கரைக்கப் பார்த்ததையும் சொன்ன போது ஜான்சனுக்கு பிரமிப்பாய் இருந்தது.*

*குருஜியின் மன உறுதியை ஜான்சன் நன்றாக அறிவார். சொல்லப் போனால் அந்த அளவு மன உறுதி உள்ள எந்த மனிதரையும் இது வரை ஜான்சன் தன் வாழ்நாளில் இது வரை பார்த்தது இல்லை. அவரையே ஆட்கொள்ள முடிந்த அந்த சிவலிங்கம் எவ்வளவு சக்தி வாய்ந்ததாக இருக்கும் என்று எண்ணிய ஜான்சன் கேட்டார். ”இப்படி இருந்தால் எப்படி ஆராய்ச்சி செய்ய முடியும்?”*

*”சிவலிங்கத்தில் இருந்து பன்னிரண்டு அடிகள் தள்ளி இருக்கிற வரை பிரச்சினை இல்லை. ஆராய்ச்சிகளை அந்தத் தூரத்தில் இருந்து கூடத் தாராளமாகச் செய்யலாம்....”*

*“நாம் ஆராய்ச்சிக்குப் பயன்படுத்துபவர்கள் அந்த சிவலிங்கத்தின் ஒளியைப் பார்க்க முடியுமா?”*

*”அபூர்வமாய் சில சமயங்களில் ஓரிரண்டு வினாடிகள் பார்க்க முடிந்தாலும் முடியலாம். ஆனால் அதற்கு மேல் பார்க்க முடியாது. அதனால் அவர்களுக்கே தாங்கள் பார்த்தது ஒளி தானா இல்லை பிரமையா என்ற சந்தேகம் வந்து விடும். அதனால் கவலைப்படாதே....”*

*”சரி... கணபதியை நாம் ஆராய்ச்சியில் பயன்படுத்த முடியுமா?”*

*“அவனை ஏதாவது சொல்லி நம்ப வைத்து ஆராய்ச்சியில் ஈடுபடுத்துவது ஒன்றும் கஷ்டமல்ல. ஆனால் இப்போது அவன் எந்த அளவுக்கு ஆராய்ச்சிக்குப் பயன்படுவான் என்பது தான் கேள்விக் குறியாக இருக்கிறது.”*

*“ஏன் குருஜி?”*

*குருஜி கணபதி-ஈஸ்வர் சந்திப்பையும் சித்தர் அவர்களைத் தொட்டு விட்டுப் போனதையும் சொல்லி விட்டுத் தொடர்ந்தார். “இப்போது கணபதியைச் சுற்றியும் ஒரு சக்தி வட்டம் தெரிகிறது. அது அந்த சித்தர் வேலை தான் என்பதில் சந்தேகம் இல்லை. இப்போதைய கேள்வி அந்த சக்தி வட்டம் என்ன எல்லாம் செய்யும், என்ன எல்லாம் செய்யாது என்பது தான்....”*

*”அப்படின்னா அந்த ஈஸ்வரைச் சுற்றியும் அந்த சக்தி வட்டம் இருக்கலாமா?”*

*“இருக்கலாம். அந்த சித்தர் அவர்களைத் தொட்ட நேரம் ஒரு அபூர்வமான முகூர்த்த நேரம். அது போன்ற முகூர்த்த நேரத்தை தீட்சை தரவும் மந்திர உபதேசம் தரவும் தேர்ந்தெடுப்பதுண்டு ...”*

*சிறிது நேரம் ஜான்சன் பேசும் சக்தியையே இழந்தது போல இருந்தது. அவருக்கு ஏதேதோ புரிகிறது போலவும் இருந்தது. ஒன்றுமே புரியாதது போலவும் இருந்தது. அவர் முகத்தில் கவலையின் ரேகைகள் படர்ந்தன.*

*“என்ன யோசிக்கிறாய் ஜான்சன்?” குருஜி கேட்டார்.*

*“நம் எதிரிகளின் பட்டியலில் ஈஸ்வர் இருப்பதை நான் விரும்பவில்லை குருஜி. நான் அன்றைக்கு உங்களிடம் சொன்னதன் பிறகு நீங்கள் அவனைப் பற்றி எல்லாம் தெரிந்து கொண்டும் இருப்பீர்கள். அதனால் புரிந்து கொள்வீர்கள் என்று நினைக்கிறேன். அந்த சித்தர் அவனையும் நமக்கு எதிராக பயன்படுத்த நினைத்தால் அவன் அவருக்குப் பயங்கரமான ஆயுதமாவான். அவனை கணபதியைப் போல் நாம் அலட்சியப்படுத்தி விட முடியாது. பசுபதி அவன் பெயரைச் சொல்லி விட்டுப் போனது, அவன் கணபதியை சந்தித்தது, சித்தர் அவனைத் தொட்டு விட்டுப் போனதில் அவனுக்கு ஏதாவது சக்தி கூடி இருந்தாலோ, சக்தி வட்டம் சேர்ந்திருந்தாலோ, அது- இந்த மூன்றுமே எனக்கு சரியாகப் படவில்லை....”*

*”ஜான்சன் நீ மனோதத்துவம் படித்தவன். அதனால் உனக்குத் தெரியாதது இல்லை. மனிதன் தைரியத்தை இழக்க ஆரம்பிக்கும் போது எல்லாவற்றையும் இழக்க ஆரம்பிக்கிறான்....”*

*ஜான்சன் பலவீனமாகச் சொன்னார். “புரிகிறது. ஆனால் என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?”*

*“எதற்குப் பயப்படுகிறோமோ அதை நேரடியாக உடனடியாகச் சந்திக்கலாம் என்கிறேன். பயத்தை விரட்ட அதை விட சிறந்த வழி என்ன இருக்க முடியும்?”*

*“எனக்குப் புரியவில்லை”*

*“ஈஸ்வரை நேரில் சந்திக்கலாம் என்று சொல்கிறேன்.”*

*“நான் அவனைச் சந்திக்க வேண்டுமா?” ஜான்சன் திகைப்புடன் கேட்டார்.*

“உன்னை இந்தியாவில் பார்ப்பது அவனுக்கு பல சந்தேகங்களை இப்போதில்லா விட்டாலும் பிறகாவது கிளப்பலாம். அதனால் நான் அவனைச் சந்திக்கிறேன். அவனை நேரில் எனக்கும் பார்க்க வேண்டி இருக்கிறது. அவனைப் பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டியது நிறைய இருக்கிறது. அவன் இந்த வேதபாடசாலைக்கு வந்து பார்க்க அனுமதி கேட்டு இருக்கிறான். நம் ஆராய்ச்சிகளை ஆரம்பிப்பதற்கு முன்னால் அவனை நான் சந்திப்பது நல்லது என்று தான் நானும் நினைக்கிறேன். அவனை நாளைக்கே வரச் சொல்கிறேன். நீ கவலையை விடு....”

அந்த சிவலிங்கத்தையே பார்த்து எடை போட முடிந்த குருஜிக்கு ஈஸ்வரை எடை போடுவது ஒரு பெரிய விஷயம் அல்ல என்ற நம்பிக்கை ஜான்சனுக்கு இருந்தது. அது மட்டுமல்ல ஈஸ்வரை எப்படிக் கையாள்வது என்பதையும் குருஜி சீக்கிரமே கண்டுபிடித்து விடுவார். ஜான்சன் முகத்தில் சற்று பிரகாசம் வந்தது.

# அத்தியாயம் - 43

வேதபாடசாலையில் இருந்து ஈஸ்வருக்கு அடுத்த நாளே வரச் சொல்லி அழைப்பு வந்தது. வேதபாடசாலையில் தற்போது குருஜி தங்கி இருக்கிறார் என்றும், ஈஸ்வர் விரும்பினால் அவரையும் சந்தித்துப் பேசலாம் என்றும் சொன்னார்கள். நண்பன் சொன்னதற்காக ஈஸ்வர் வேதபாடசாலை செல்கிறானே ஒழிய மற்றபடி அங்கு செல்வதில் அவனுக்குப் பெரிதாக ஆர்வம் எதுவும் இருக்கவில்லை. ஆனால் குருஜியைச் சந்தித்துப் பேசும் சந்தர்ப்பமும் கிடைப்பதை அவன் எதிர்பாராத அதிர்ஷ்டமாகவே நினைத்தான்.

அவன் குருஜியின் சொற்பொழிவுகளை அவன் தொலைக்காட்சி மூலமாகவும், இணையம் மூலமாகவும் நிறைய கேட்டிருக்கிறான். அவரது அறிவுத்திறனைக் கண்டு பிரமித்துப் போயிருக்கிறான். ஆன்மிகத்தில் அவருக்குத் தெரியாத விஷயங்களே கிடையாதா என்று பல முறை வியந்திருக்கிறான். வேதங்கள், உபநிஷத்துக்கள், பிரம்ம சூத்திரம், தம்மபதம், பைபிள், குரான், என்று அவர் அனாயாசமாக மேற்கோள்கள் காட்டிப் பேசுவது பேசும் விஷயத்திற்குத் திணிக்கப்படுவது போல் ஒரு முறை கூட அவனுக்குத் தோன்றியதில்லை. மிகக் கச்சிதமாகப் பொருந்தும்படியாகவே இருக்கும். பதஞ்சலியின் யோகசூத்திரங்களுக்கு அவர் ஆற்றிய உரைகளை அவன் பலமுறை கேட்டிருக்கிறான். அவனது துறைக்குப் பொருத்தமான எத்தனையோ தகவல்கள் அவர் உரைகளில் இருந்து அவனுக்குக் கிடைத்திருக்கிறது. அவர் ஒரு காலத்தில் இமயமலையில் சித்தர்களுடனும், யோகிகளுடனும் இருந்து நிறைய கற்றிருக்கிறார் என்று கேள்விப்பட்ட பின் அவரை என்றாவது ஒருமுறை சந்திக்க வேண்டும், அவர் அனுபவங்கள் பற்றி கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என சில முறை எண்ணி இருக்கிறான். இப்போது தானாகவே அந்த சந்தர்ப்பம் அமைந்தது அவனுக்கு சந்தோஷமாக இருந்தது.

சொல்லப் போனால் விஷாலியால் காயப்பட்ட மனதுக்கு கிடைத்த முதல் சந்தோஷம் அது தான். வேறெதிலாவது மூழ்கி அவளை மறந்து விட அவன் மனம் ஆசைப்பட்டது. அது முடிகிற காரியமாய் தெரியவில்லை. சில நிமிடங்கள் மறக்க முடிந்தாலும் சீக்கிரமே ஏதாவது ஒரு காரணம் பிடித்துக் கொண்டு அவள் அவன் நினைவில் வந்து கொண்டிருந்தாள். மனம் ரணமானது. அவன் அந்த ரணத்தை வெளியே காண்பிக்காமல் எத்தனை ஜாக்கிரதையாய் பாதுகாத்தாலும் முதலில் கண்டுபிடித்தவள் ஆனந்தவல்லி தான்.

*”என்னடா பாட்டு எதுவும் காணோம். ரெண்டு நாளா இங்கிலீஷ்லயும் தமிழ்லயும் பாடிகிட்டு இருந்தே. இப்ப உம்முன்னு இருக்கே”*

*‘என்னைக் கவனிக்கறதைத் தவிர இந்தப் பாட்டிக்கு வேற வேலையே இல்லையா’ என்று மனதில் நினைத்துக் கொண்ட ஈஸ்வர் வெளிப்பார்வைக்கு அலட்டிக் கொள்ளாமல் சொன்னான். “அப்படி எல்லாம் இல்லையே”*

*“சும்மா மறைக்காதேடா. எதுவா இருந்தாலும் என் கிட்ட சொல்லு. என்னடா பிரச்சனை?” என்று அவன் அருகே வந்து கவலையுடன் ஆனந்தவல்லி கேட்ட போது அவள் அன்பில் மனம் இளகியவனாய் ஈஸ்வர் அவள் தோளைப் பிடித்து அணைத்துக் கொண்டு சொன்னான். “ஒண்ணுமில்லை பாட்டி”*

*அவளும் அவனது செய்கையால் மனம் குளிர்ந்தாள். மேற்கொண்டு அவள் எதுவும் கேட்பதற்கு முன் அவன் அலைபேசி அவனைப் பாடி அழைத்தது.*

*அழைத்தவர் பார்த்தசாரதி. ”...சீர்காழி கோயில்ல இருந்த பையன் மாயமா மறைஞ்சுட்டான். அவனைப் பத்தியோ, அவனைக் கூட்டிகிட்டு போனவங்க பத்தியோ புதுசா எந்தத் தகவலும் கிடைக்கலை. போலீஸ் போகறதுக்கு கொஞ்ச நேரம் முன்னால் தான் யாரோ கூட்டிகிட்டு போயிருக்காங்க. ... நீங்க சொன்ன ஆன்மிக பாரதம் புஸ்தகம் எழுதின நீலகண்ட சாஸ்திரி பத்தின முழு விவரமும் கிடைச்சுடுச்சு. அவர் காரைக்குடியை சேர்ந்தவர். அவர் இறந்து 22 வருஷம் ஆயிடுச்சு. அவர் மூத்த மகன் இன்னும் இருக்கார். இப்ப சென்னையில மயிலாப்பூர்ல இருக்கார். ஸ்டேட் பேங்க்ல வேலை பார்த்து ரிடையர் ஆனவர். அவரைக் கண்டு பிடிச்சு பேசினேன். அந்த ஆன்மிக பாரதம் புஸ்தகத்தோட ஒரு பிரதியை*

*இன்னும் வச்சிருக்கார். என் கைல குடுத்தார். 178 ஆவது பக்கத்துல உங்க விசேஷ மானஸ லிங்கம் பத்தியும், இன்னொரு நவபாஷாண லிங்கத்தைப் பத்தியும் சொல்லி இருக்கார். படிக்கட்டுமா?"*

*அந்தப் பக்கத்தை பல முறை படித்திருந்தாலும் வேண்டாம் என்றால் பார்த்தசாரதிக்கு சந்தேகம் ஏற்படலாம் என்ற காரணத்தால் குரலில் ஆர்வத்தைக் கொட்டி சொன்னான். "படிங்க சார்"*

*பார்த்தசாரதி படித்தார். அவர் படித்து முடித்த பின் ஈஸ்வர் "ஆச்சரியமாய் இருக்கு சார். இப்ப நடந்ததை எல்லாம் பார்க்கறப்ப அவர் சொன்ன மாதிரி தான் ஆயிருக்கறதா தோணுது" என்றான்.*

*"அந்தப் புஸ்தகத்துல எழுதாத இன்னொரு தகவலையும் நீலகண்ட சாஸ்திரி மகன் சொன்னார். நம்ப முடியலை. நம்பாமல் இருக்கவும் முடியலை...."*

*"என்ன சொன்னார் சார்?" இப்போது ஈஸ்வர் உண்மையாகவே ஆர்வத்தோடு கேட்டான்.*

*"நீலகண்ட சாஸ்திரி அந்தப் புஸ்தகம் பிரசுரிச்சு சில வருஷங்கள் கழிச்சு யாரோ ஒரு பெரியவரை சந்திச்சாராம். அவர் விசேஷ மானஸ லிங்கம் பத்தி முழுசா தெரிஞ்சவராம். அவர் சொன்னாராம். "2012, 2013 வருஷங்கள்ல உலகம் எல்லாம் அனர்த்தங்கள் அதிகமா நடக்கப் போகுது. மனுஷன் விலங்குகளை விட மோசமா நடந்துக்கப் போறான். எவனும் நிம்மதியா இருக்க முடியாத மாதிரி சூழ்நிலைகளும், வியாதிகளும், இயற்கை சீற்றங்களும் இருக்கும். அந்த நேரத்துல இந்த விசேஷ மானஸ லிங்கமும் கைமாறுகிற சூழ்நிலை வரும். அது சுமுகமா இருக்காது. நிறைய அழிவுகள் வரும். இதுல நம் தேசத்து ஆட்கள்*

*மட்டுமல்லாமல் அன்னியர்களும் சம்பந்தப்படுவாங்க. அந்தக் காலக் கட்டத்துல கலிமுத்தினதுக்கு எல்லா அறிகுறிகளும் தெரியும்...” ”*

*ஈஸ்வர் திகைப்புடன் கேட்டுக் கொண்டிருந்தான். எத்தனையோ வருடங்களுக்கு முன்பே 2012, 2013 வருடங்களில் இப்படி எல்லாம் நடக்கும் என்று சொல்ல முடிந்தது ஜோதிடமா, பெரியவர்களின் தீர்க்கதரிசனமா? பசுபதியை ஒரு வெள்ளைக்காரர் பார்க்க அனுமதி கேட்டார் என்ற தகவலையும், அவர் சிவலிங்கத்தைத் திருடிச் சென்ற கூட்டத்தில் ஒருவராக இருக்கலாம் என்ற பார்த்தசாரதியின் சந்தேகத்தையும் சேர்த்துப் பார்க்கும் போது அன்னியர்களும் சம்பந்தப்படுவார்கள் என்பது பொருந்துகிறது. அவன் கேட்டான். “கடைசில என்ன ஆகும்னு சொன்னாராம்?”*

*பார்த்தசாரதி சிரித்தார். “நானும் அதைத் தான் கேட்டேன். அதை அந்தப் பெரியவர் சொல்லலையாம். நீலகண்ட சாஸ்திரி மகன் சொல்றார். “அன்னைக்கு அப்பா கிட்ட அந்தப் பெரியவர் சொன்னதெல்லாம் நடந்துட்டு வர்றதுங்கறதை தினமும் நியூஸ்பேப்பர் படிக்கறப்ப நினைச்சுப்பேன். ஆனா விசேஷ மானஸ லிங்கம் பத்தி மட்டும் ஒண்ணும் விவரம் தெரியலை. அது இமயமலைப் பக்கம் நடந்துகிட்டிருக்கோ என்னவோ”. நான் அவர் கிட்ட அது இங்கேயே நடந்துகிட்டு இருக்குன்னு சொல்லப் போகலை... எனக்கு திடீர்னு அந்த ஆளும் சிவலிங்கத்தை திருடிட்டு போன கூட்டத்துல ஒரு ஆளா இருக்குமான்னு கூட சந்தேகம் வந்துச்சு. ஆனா அந்த ஆளால் மூச்சு வாங்காமல் நாலடி நடக்க முடியலை. அதைப் பார்க்கறப்ப அந்தக் கூட்டம் இல்லை எந்தக் கூட்டத்துலயும் இடம் பிடிக்கற அளவு தெம்பு அவர் கிட்ட இல்லைன்னு தோணுது...”*

*ஈஸ்வர் புன்னகைத்தான்.*

*பார்த்தசாரதி சொன்னார். “நான் உங்க கிட்ட நேர்ல பேச வேண்டியது கொஞ்சம் இருக்கு. நாளைக்கு சந்திக்கலாமா?”*

*“நாளைக்கு வேறொரு இடத்திற்குப் போக வேண்டி இருக்கு. அடுத்த நாள் சந்திக்கலாமா?”*

*பார்த்தசாரதி சம்மதித்தார். தோட்ட வீட்டிலேயே சந்திக்கலாம் என்று சொன்னார். ஈஸ்வர் பேசி முடித்த போது ஆனந்தவல்லி கேட்டாள். “யார் பேசினது?”*

*”போலீஸ் ஆபிசர் பார்த்தசாரதி”*

*“அந்த் ஆள் பசுபதியைக் கொன்னவங்களை கண்டுபிடிச்சுட்டானா”*

*“இன்னும் இல்லை”*

*”பேச்சுல தான் கெட்டிக்காரன் போல இருக்கு. இப்படி மணிக்கணக்குல பேசிகிட்டு இருந்தா அப்புறம் கண்டுபிடிக்க எப்படி நேரம் கிடைக்கும்?”*

*ஈஸ்வர் வாய் விட்டுச் சிரித்தான். பார்த்தசாரதி இங்கு வராமல் தோட்ட வீட்டில் சந்திக்கலாம் என்று சொல்ல முக்கிய காரணம் ஆனந்தவல்லி தான் என்பதில் அவனுக்கு சந்தேகமேயில்லை.*

**************

கணபதியின் தாய் காமாட்சிக்கு நான்கு நாட்களாய் மனதில் ஏதோ இனம் புரியாத பெரும் பீதி எழுந்து கொண்டே இருந்தது. முதலில் குருஜி சொன்னார் என்ற காரணத்திற்காகவும், தினம் ஐநூறு ரூபாய் கிடைக்கும் என்ற காரணத்திற்காகவும் கணபதி போகிற இடத்தைக் கூட சொல்லாமல் போனது அந்தத் தாய் உள்ளத்திற்குச் சரியாகப் படவில்லை. தன் வயது வந்த பெண்களைக் கூட எங்கு அனுப்பவும் அவள் பயப்பட்டதில்லை. அவர்கள் தங்களைக் காத்துக் கொள்ளத் திறம் படைத்தவர்கள் என்று அவளுக்குத் தெரியும். ஆனால் கணபதி அப்படி அல்ல. தன்னைப் பற்றியோ, தன் லாபத்தைப் பற்றியோ, தன் பாதுகாப்பைப் பற்றியோ நினைக்கத் தெரியாத வெகுளி அவன். அவனை யார் வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் ஏமாற்றி விடலாம்.

ஆனால் அவனை அழைத்துக் கொண்டு போனவர் சாதாரண ஆள் அல்ல, அனைத்து தரப்பினரிடமும் நன்மதிப்பு பெற்றிருந்த குருஜி, அவர் கண் அசைவுக்கு எதையும் செய்ய அதிகார வர்க்கத்தில் இருந்து அன்றாடங்காய்ச்சி வரையும், கோடீஸ்வரர்களில் இருந்து குடிசைவாசிகள் வரையும் தயாராக இருக்கையில் அவர் கணபதியை ஏமாற்றி எதையும் சாதிக்க வேண்டிய அவசியம் இல்லாதவர் என்பதை காமாட்சி மனதில் திரும்பத் திரும்பச் சொல்லிச் சமாதானப்படுத்திக் கொண்டாள். ஆனாலும் தினமும் கணபதி போனிலாவது பேசிக் கொண்டிருந்தால் நன்றாக இருக்கும் என்று அவளுக்குத் தோன்றி வந்தது.

இந்த சந்தர்ப்பத்தில் தான் நான்கு நாட்களுக்கு முன் கணபதியைத் தேடி ஒரு முதியவர் வந்தார். முதலில் பிள்ளையார் கோயிலுக்குப் போனவரை சுப்புணி தான் வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு வந்தான். கணபதி இல்லை என்று சொன்னவுடன் அவன் எங்கே போயிருக்கிறான் என்று அவர் கேட்டார். போன இடம்

*தெரியாது என்று சொன்ன போது அந்த முதியவர் என்ன செய்வதென்று நிறைய நேரம் யோசித்தார்.*

*சுப்புணி அந்த இடத்தை விட்டுப் போகும் வரை காத்திருந்து விட்டு பிறகு ஒரு முடிவெடுத்தவராக அந்த முதியவர் அரக்கு வைத்த உறை ஒன்றை காமாட்சியிடம் தந்து விட்டு கணபதி வந்தவுடன் அதை அவனிடம் பத்திரமாக, கண்டிப்பாகத் தந்து விடச் சொன்னார்.*

*"நீங்க யாரு"*

*"சுப்பிரமணியன்" என்று மட்டும் அவர் சொன்னார்.*

*"இதுல என்ன இருக்கு? இதை ஏன் கணபதி கிட்ட தர்றீங்க?"*

*"அதுல என்ன இருக்குன்னு எனக்கே தெரியாதும்மா. கணபதி கிட்ட தரச் சொல்லி எனக்கு உத்தரவு. அதான் தந்துட்டு போக வந்தேன். தயவு செய்து நீங்கள் யாரும் அதைத் திறந்து படிக்க வேண்டாம். அது கணபதி கண்ணில் மட்டும் பட வேண்டியது. நான் வரட்டுமா"*

*அவள் மற்ற கேள்விகளை நினைப்பதற்குள் அவர் போய் விட்டிருந்தார். காமாட்சிக்கு ஒன்றுமே புரியவில்லை. யார் அவர், இதைக் கணபதியிடம் தர அவருக்கு உத்தரவு போட்டவர்கள் யார் என்றெல்லாம் அவர் தெளிவாகச் சொல்லாமல் விட்டது அவள் வயிற்றில் புளியைக் கரைத்தது. ஆனாலும் அது கணபதி கண்ணில் மட்டும் பட வேண்டியது என்பதை அந்த முதியவர் அழுத்திச் சொன்னதால் அவள் அந்த உரையைப் படிக்கப் போகவில்லை. ஆனால் நான்கு நாட்களாக அவளுக்குள் ஒரு பெரும்பயம் அடிக்கடி*

***எழுந்து அவளைப் பயமுறுத்திக் கொண்டே இருந்தது. நான்காம் நாள் இரவிலோ கணபதியின் உயிருக்கே ஆபத்து வருவது போல் கனவு வந்தது. அந்த அரக்கு வைத்த உறை கூரிய கத்தியாய் மாறி கணபதியின் கழுத்தை அறுப்பது போல வந்த கனவு கலைந்து அலறியபடி விழித்தவள் பின் உறங்கவே இல்லை.***

***மூத்த மகள் சொன்னாள். "பேசாமல் அதைப் பிரிச்சு பார்த்துடேன்"***

***"அவர் அதை அவன் மட்டும் தான் பார்க்கணும்னு சொன்னாரேடி"***

***"அப்படின்னா அவன் வந்து படிச்சுக்கட்டும். விட்டுடு" இரண்டாம் மகள் சொன்னாள்.***

***"அவன் படிச்சே ஆக வேண்டிய முக்கியமான விஷயம் அதில் இருக்கும் போல இருக்குடி. அந்தப் பெரியவர் சொன்னது எனக்கு அப்படித் தான் பட்டுது. அவன் அதை லேட்டாகப் பார்த்தால் ஏதோ ஆபத்து இருக்கும்னு தோணுதேடி"***

***"சரி அப்படின்னா அதை அவனுக்கு அனுப்பிடேன்"***

***"எப்படிடி அவன் எங்கே இருக்கான்னே தெரியலையேடி"***

***"அவன் எங்கே இருக்கான்கிறது அந்தக் குருஜி கிட்ட கேட்டால் சொல்லிட்டுப் போறாரு."***

***"அவர் போன் நம்பர் நம்ம கிட்ட இருக்காடி?"***

*மூத்த மகள் கணபதி தொலைபேசி எண்கள் எழுதி வைத்த பாக்கெட் டைரி ஒன்றை எடுத்துப் பார்த்தாள். ”இதுல குருஜி வீட்டு லேண்ட்லைன் நம்பர் இருக்கு”*

*உடனடியாக காமாட்சி அந்த எண்ணிற்குப் போன் செய்தாள். குருஜியின் காரியதரிசி பேசினான். குருஜி வெளியூர் சென்றிருப்பதாகவும் அவர் ஒரு வாரம் கழித்து தான் வருவார் என்றும் சுரத்தில்லாமல் சொன்னான். இதைச் சொல்லிச் சொல்லியே அவனுக்கு அலுத்து விட்டிருந்தது.*

*"சரி கணபதி எங்கே இருக்கான்?"*

*அவன் திடுக்கிட்டுப் போனான். "யார் பேசறது?"*

*"நான் கணபதியோட அம்மா பேசறேன்"*

*”கணபதி இங்கில்லையேம்மா. என்ன விஷயம்மா?"*

*"அவனுக்கு ஏதோ முக்கியமான கடிதம் வந்திருக்கு. அதை அவன் கிட்டே தரணும். அதான் கேட்டேன். அது பத்தி எப்படியாவது அவன் கிட்ட நான் அதைப் பேசியாகணும். அவன் இருக்கற இடத்துப் போன் நம்பர் தாங்க" காமாட்சியின் குரலில் அசாதாரண உறுதி தெரிந்தது.*

*காரியதரிசி சொன்னான். ”நான் கணபதியையே உங்க கிட்ட கொஞ்ச நேரத்துல பேசச் சொல்றேன்ம்மா"*

அடுத்து அவன் அவசர அவசரமாகக் குருஜியை அழைத்துத் தகவலைச் சொன்னான். குருஜியின் மூளை மின்னல் வேகத்தில் வேலை செய்தது. ஒரு நிமிஷம் யோசித்து முடித்து விட்டு கணபதியை உடனடியாக அங்கு அழைத்து வரச் சொன்னார்.

கணபதி வந்தான். "என்ன குருஜி?"

"உங்கம்மாவுக்கு உன் கிட்டே பேசணுமாம்"

கணபதி முகத்தில் கலவரம் பரவியது. "எங்கம்மாவுக்கு என்ன ஆச்சு?"

"ஒண்ணும் ஆகலை. உனக்கேதோ லெட்டர் வந்திருக்காம். அது பத்தி பேசணுமாம். நீயே போன் செஞ்சு பேசு."

கணபதி நிம்மதி அடைந்தான்.. "எனக்கு லெட்டர் போடறா மாதிரி யாருமே இல்லையே குருஜி. ஒருவேளை அது அட்ரஸ் மாறி வந்திருக்கும். எங்கம்மாவுக்கு அது கூட தெரியலை போல இருக்கு. நம்ம பையனுக்கும் ஏதோ லெட்டர் வந்திருக்குன்னு பெருமையா போன் பண்றா போல இருக்கு" சொல்லி விட்டு கலகலவென கணபதி சிரித்தான்.

புன்னகைத்த குருஜி சொன்னார். "எதுக்கும் நீ போன் செய்து பேசினா தெரிஞ்சுடும். அவங்களுக்கும் உன் கிட்ட பேசின திருப்தி இருக்கும். இந்தப் போன்லயே பேசு. வேணும்கிற அளவு பேசு. நான் உள்ளே போறேன்."

குருஜி உள் அறைக்குப் போனார்.

*கணபதி நன்றியுடன் தலையாட்டி விட்டு போன் எண்களை அழுத்த ஆரம்பித்தான். அவனுக்கும் அம்மாவிடம் பேச வேண்டும் போல இருந்தது. 'அம்மா கிட்ட பேசி எத்தனை நாளாச்சு...”*

*உள் அறையில் நுழைந்தவுடன் போன் ரிசீவரை எடுத்த குருஜி கணபதியின் தாய் என்ன சொல்லப் போகிறாள் என்பதைக் கேட்கத் தயாரானார்.*

# <u>*அத்தியாயம் - 44*</u>

*“ஹலோ அம்மா நான் கணபதி பேசறேன்”*

*மகன் குரலைக் கேட்டதும் காமாட்சிக்கு அழ வேண்டும் போல இருந்தது. ஏன் என்று அவளுக்குத் தெரியவில்லை. கண் கலங்க கேட்டாள். “கணபதி எப்படிடா இருக்கே?”*

*அவள் துக்கம் அவள் குரலில் பிரதிபலித்ததால் கணபதி கவலையுடன் கேட்டான். ”அம்மா உனக்கு உடம்புக்கு ஒண்ணுமில்லையே? அக்காங்க ரெண்டு பேரும் நல்லா தானே இருக்காங்க”*

*”நானும் அக்காங்களும் நல்லா தான் இருக்கோம். நீ எப்படிடா இருக்கே?”*

*கணபதி சந்தோஷமாகச் சொன்னான். “குருஜி தயவுல நான் ராஜா மாதிரி இருக்கேன். நேத்து கூட ஏ.சி. கார்ல பஞ்சமுக ஆஞ்சநேயர் கோயிலுக்கு போயிட்டு வந்தேன். எனக்கு ஒரு அண்ணா கிடைச்சிருக்கார். எனக்கு பட்டு வேஷ்டி பட்டு சட்டை*

எல்லாம் வாங்கி தந்திருக்கார். நம்ம பிள்ளையாருக்கும் கூட பட்டு வேஷ்டி வாங்கித் தந்திருக்கார். சரி பிள்ளையார் எப்படி இருக்கார்?”

”அவருக்கென்ன. நல்லாத்தான் இருக்கார்?”

“நீ தினம் போய் பார்க்கிறியா இல்லையா?”

“தினம் போய் பார்த்து உனக்காக வேண்டிகிட்டு தான் இருக்கேன்.”

”எனக்காக எதுக்கு வேண்டறே. ரெண்டு அக்காக்களுக்கும் வேண்டு. நல்ல மாப்பிள்ளைகளாய் கிடைக்கணும்னு வேண்டு.”

காமாட்சிக்கு கண்களில் நீர் பெருக்கெடுத்து ஓடியது. ‘தனக்கென்று எதுவும் கேட்கத் தெரியாத இந்தக் குழந்தைக்காக நானாவது வேண்டிக் கொள்ள வேண்டாமா?”

அவள் எதுவும் சொல்லாததைக் கூட கணபதி கவனிக்கவில்லை. “சுப்புணி பிள்ளையாருக்கு ஒழுங்காய் பூஜை செய்யறானா?”

”ஏதோ செய்யறான். பிள்ளையாருக்கு உன் அருமை தெரியணும்னா இவன் மாதிரி ஆள்கள் இடையில் சில நாள் பூஜை செய்தால் போதும்”

கணபதிக்கு வருத்தமாய் இருந்தது. ’சரி சில நாட்களுக்குத் தானே. பிள்ளையாரே கொஞ்சம் பொறுத்துக்கோ’. “நீ எனக்கு

*ஏதோ லெட்டர் வந்திருக்கிறதாய் சொன்னாயாம். அட்ரஸை நல்லா பார்த்து சொல்லு. எனக்கு வந்தது தானா?”*

*“ஒரு பெரியவர் நேராய் வந்து தந்துட்டு போனார்டா. உன் பேர் தான் போட்டிருக்கு. கணபதி, அர்ச்சகர், வரசித்தி விநாயகர் திருக்கோயில், நாகனூர்னு தெளிவாய் எழுதி இருக்கு.”*

*“அந்த பெரியவர் யாரும்மா?”*

*”சுப்பிரமணியன்னு பேர் மட்டும் சொன்னார்.”*

*“சரி அதுல என்ன தான் எழுதி இருக்குன்னு பிரிச்சு தான் பாரேன்”*

*“அந்தப் பெரியவர் உன்னைத் தவிர வேற யாரும் பிரிக்கக் கூடாதுன்னு சொல்லிட்டு போயிருக்கார். அதனால பிரிக்கலை”*

*”அம்மா அது ஏதோ கோயில் கும்பாபிஷேக நோட்டீசாய் இருக்கப் போகுது” என்று சொல்லி கலகலவென்று கணபதி சிரித்தான்.*

*காமாட்சிக்கு மகனுடைய கலகல சிரிப்பைக் கேட்ட போது மனம் நிறைந்தது. எத்தனை துக்கம் இருந்தாலும் மகன் அப்படி சிரிப்பதைப் பார்க்கும் போது அவளுக்கு அவை எல்லாமே மறந்து போகும். “அப்படி எல்லாம் இருக்காதுடா. அரக்கு வச்சு மூடின கவர்டா. அந்தப் பெரியவரும் சாதாரண ஆளா தெரியலை. அவர் சொன்னதை வச்சு பார்த்தா முக்கியமாய் இருக்கும்னு தோணுது. நீ வாயேன். வந்து படிச்சுட்டு போயேன். எனக்கும் உன்னை ஒரு தடவை பார்க்கணும்னு தோணுது.”*

***கணபதி யோசித்தான். பிறகு சொன்னான். "நான் எதுக்கும் குருஜி கிட்ட பேசிப் பார்க்கறேன்ம்மா. பிறகு உன் கிட்ட பேசறேன். சரியா?" கணபதி போனை வைத்து விட்டான்.***

***உள்ளே குருஜியும் போனை வைத்து விட்டார். அவர் மனதில் பல கேள்விகள் ஒன்றன் பின் ஒன்றாய் எழுந்தன. பெரிய திகைப்பில் அவர் மூழ்கிப் போனார். சுப்பிரமணியன் என்ற பெயருடைய பெரியவர் என்றதும் அந்த ஜோதிடர் நினைவு அவருக்கு வராமல் போகவில்லை. அந்த ஆள் அவசரமாக ஏதோ வெளியூர் போனது கணபதியை அவன் ஊரில் சந்திக்கத் தானா? அந்தக் கடிதத்தில் என்ன இருக்கிறது? அதை அரக்கு வைத்து மூடக் காரணம் என்ன? அந்தக் கடிதத்தை அவராகக் கொண்டு போய் தந்திருக்கிறாரா இல்லை யாராவது தரச் சொல்லி அவர் போயிருக்கிறாரா? அவருக்கு கணபதியை எப்படித் தெரியும்?....***

***கணபதி அவர் அறை வாசலில் தயக்கத்துடன் நின்றான்.***

***"வா கணபதி. அம்மா என்ன சொல்றாங்க? வந்திருக்கிறது என்ன லெட்டராம்?" குருஜி கேட்டார்.***

***கணபதி தாய் சொன்னதைச் சொன்னான்.***

***குருஜி அவன் தாய் அவனை வரச் சொன்னதையும், அவனைப் பார்க்க விரும்புவதாய் சொன்னதையும் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை.***

***"உனக்கு வந்த லெட்டரை நீயே படிக்க வேண்டும் என்று உன் அம்மா நினைக்கிறார்கள். அவ்வளவு தானே? கவலையை விடு.***

நானே ஆள் அனுப்பி அந்த லெட்டரை வாங்கிக் கொண்டு வந்து உன்னிடம் தரச் சொல்கிறேன். சரியா?"

முக்கியமாய் யாரிடமோ பேச வேண்டி இருப்பது அப்போது தான் நினைவு வந்தது போல அவர் செல்போனை எடுத்து எண்களை அழுத்த ஆரம்பிக்க வேறு வழியில்லாமல் கணபதி அங்கிருந்து கிளம்பினான். தனக்கு இத்தனை உதவி செய்யும் அந்த மனிதரிடம் குழந்தைத் தனமாய் என் அம்மாவைப் பார்த்து விட்டு நானே அந்தக் கடிதத்தை வாங்கி வருகிறேன் என்று சொல்ல அவனுக்குத் தயக்கமாக இருந்தது. அந்தக் கடிதத்தை வாங்கி வர ஆள் அனுப்புகிறேன் என்று அவர் சொன்னதே அவரின் பெருந்தன்மை என்று தோன்றியது. அவன் அவரை வணங்கி விட்டுக் கிளம்பினான்.

அவன் தலை மறைந்தவுடன் குருஜி சுறுசுறுப்படைந்தார். போன் செய்து கட்டளை பிறப்பித்தார். "உடனடியாய் கணபதி வீட்டுக்குப் போய் அவன் அம்மாவிடம் இருந்து அரக்கு வைத்து மூடிய கவர் ஒன்றை வாங்கி விட்டு வா. அதைத் தப்பித் தவறி கூட அவன் கண்ணில் காட்டி விடாதே. அப்படியே என்னிடம் கொண்டு வந்து தா. மீதியை நான் பார்த்துக் கொள்கிறேன்"

**************

மகேஷ் விஷாலியிடம் இப்படிப்பட்ட மாற்றத்தை எதிர்பார்க்கவில்லை. எப்போதுமே சமீபத்தில் மலர்ந்த பூவைப் போல இருக்கக் கூடியவள் அவள். எத்தனை வேலைப் பளு இருந்தாலும் எத்தனை பிரச்சினைகளை சமாளிக்க வேண்டி இருந்தாலும் அவள் முகத்தின் மலர்ச்சியை அவை பாதித்து அவன் பார்த்ததில்லை. ஆனால் அதெல்லாம் இப்போது அடியோடு மாறி விட்டது.

ஈஸ்வரைப் பற்றி அவதூறு சொல்லி விட்டு வீட்டுக்குப் போன மகேஷ் அங்கு ஈஸ்வரிடமும் வாட்டத்தைப் பார்த்தான். ஆனால் ஈஸ்வர் சீக்கிரமே அதில் இருந்து மீண்டவனாக அவனுக்குத் தெரிந்தான். ஆனந்தவல்லியிடமும், மீனாட்சியிடமும் சிரித்துப் பேச ஆரம்பித்து விட்டான். பாட்டு மட்டும் நின்று போனதே ஒழிய மற்றபடி அவனிடம் பெரிய மாற்றம் எதுவும் பிறகு தென்படவில்லை.

ஆனால் விஷாலி அப்படி துக்கத்தில் இருந்து மீளவில்லை. மகேஷ் மறுநாள் அவள் வீட்டிக்குப் போன போது பலவந்தமாய் அவனைப் பார்த்து ஒரு புன்னகை பூக்க முயன்றாள். ஆனால் அந்தப் புன்னகை மானசீகமாக இருக்கவில்லை. அந்தப் புன்னகையில் ஒரு வலி தெரிந்தது. வழக்கம் போல் அவனிடம் அவள் கதை பேசவில்லை. அவன் பேசினதற்கும் சுருக்கமாய் ஒரு வரி பதில்கள் சொன்னாள். அவன் மறு நாள் எல்லாம் சரியாகி விடும் என்று நினைத்தான்.

மறு நாள் வந்த போதும் அவள் நடைப்பிணமாய் தான் அவள் தெரிந்தாள். செயற்கையாய் ஒரு புன்னகையும், எந்திரத்தனமாய் பேச்சுக்களும் அவளிடம் இருந்து வந்த போது அவனால் தாங்க முடியவில்லை. இரண்டே நாளில் இந்த அளவு ஈஸ்வர் அவள் மனதில் வேரூன்றி இருப்பான் என்பதை அவனால் நம்ப முடியவில்லை. ஈஸ்வர் மீது அவனுக்கு ஆத்திரமாய் வந்தது. ‘என்னடா செய்தாய் என் விஷாலியை!’

மகேஷ் விஷாலியிடம் கேட்டான். “என்ன ஆச்சு விஷாலி உனக்கு?”

”ஒண்ணும் இல்லை மகேஷ்”

”இந்த அளவுக்கு நான் சொன்னது உன்னைப் பாதிக்கும்னு தெரிந்திருந்தா நான் உன் கிட்ட ஈஸ்வர் சொன்னதை சொல்லியே இருக்க மாட்டேன் விஷாலி”

”ஒரு நல்ல நண்பன் அதை சொல்லாமல் இருக்க முடியாதுன்னு எனக்கு புரியுது மகேஷ். நீ சொன்னது நல்லது தான். எனக்கு தான் ஜீரணிக்க கஷ்டமாய் இருக்கு. காலப் போக்கில் சரியாயிடும்...” விஷாலி சொன்னாள். ஆனால் காலப் போக்கில் கூட சரியாகும் என்று அவளாலேயே நம்ப முடியவில்லை. அந்த அளவு அவன் அவள் மனதில் இடம் பிடித்து இருந்தான். என்ன தான் மகேஷ் சொன்ன விஷயங்களை மனதில் இருந்த ஈஸ்வர் பிம்பத்தில் அவள் ஒட்ட வைக்க முயன்றாலும் அவை ஒட்ட மறுத்தன.

அவன் சிரிப்பு, அவன் பேச்சுக்கள், அவனுடன் இருந்த அழகான நினைவுகள் எல்லாம் அவள் மனதை விட்டு அகல மறுத்தன. அவனை மறக்க பல வேலைகளை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்தாள். தூக்கம் இமைகளை அழுத்தும் வரை அந்த வேலைகளில் மூழ்கினாள். ஆனால் கனவிலும் அவன் வந்தான். அவளிடம் பேசினான். சிரித்தான். அவள் கை விரல்களைப் பிடித்தான். கனவிலும் கூட அதெல்லாம் அவளுக்குப் பிடித்திருந்தது. அவளுக்கு அதை நினைக்கையில் அவள் மீதே வெறுப்பு வந்தது.

அவளுக்கு யாரிடமும் பேசப் பிடிக்கவில்லை. தனிமை தேவலை என்று இருந்தது. எப்போதுமே மகேஷிடம் அதிகமாகப் பேசுபவள் இரண்டாம் நாள் கூட அவனிடம் அதிகம் பேசவில்லை. வெளியே ஏதோ வேலை இருக்கிறது என்று போய் விட்டாள். மகேஷ் இதை எதிர்பார்க்கவில்லை. ஈஸ்வரிடம் உள்ள வெறுப்பு தனக்கு சாதகமாக இருக்கும் என்று அவன் கணக்குப் போட்டிருந்தானே ஒழிய அவள் தன்னிடமும் இப்படி விலகி இருப்பாள் என்று அவன் எண்ணிப் பார்க்கவே இல்லை.

அவன் தென்னரசுவின் அறைக்குப் போனான். அவர் மகள் போவதையே ஜன்னல் வழியே பார்த்துக் கொண்டிருந்தார். அவனைப் பார்த்தவுடன் சொன்னார். ”விஷாலி அவங்கம்மா இறந்தப்ப கூட இவ்வளவு சோகமாய் இருந்து நான் பார்க்கலை. இந்த ரெண்டு நாளாய் அவளைப் பார்க்க சகிக்கலை”

மகேஷ் மனதார சொன்னான். “எனக்கும் அவளை இப்படிப் பார்க்க கஷ்டமாய் இருக்கு அங்கிள்”

அவனை உட்காரச் சொல்லி விட்டு அவரும் அவனருகே உட்கார்ந்தார். “அவள் கிட்ட என்ன நடந்ததுன்னு கேட்டுப் பார்த்துட்டேன். அவள் பதில் சொல்லலை. ராத்திரி எல்லாம் தூங்காமல் முழிச்சிருக்கா. சில நேரம் ரகசியமா அழறா. அப்படி எல்லாம் மன தைரியம் இழக்காத பொண்ணு அவள் மகேஷ். எனக்குத் தாங்க முடியலை மகேஷ்” சொல்லும் போது அவர் கண்களும் ஈரமாயின.

பின் கண்களைத் துடைத்துக் கொண்டு அவனிடம் அவர் கேட்டார். “அவள் இப்படி இருக்கக் காரணம் உனக்குத் தெரியுமா?”

மகேஷ் ஜாக்கிரதையானான். ”சரியாத் தெரியலை. ஆனால் ஈஸ்வர் காரணமாய் இருக்கலாம்னு நினைக்கிறேன்.”

தென்னரசு அவனையே வெறித்துப் பார்த்தபடி சொன்னார். “ஒருத்தரை மனசுல உள்ளே அனுமதிக்கறது சுலபம். ஆனால் மனசுக்குள்ளே வந்த ஆளை வெளியே அனுப்ப முடியறது நம்ம கைல இல்லை”

மகேஷுக்கு சுருக்கென்றது. விஷாலி ஈஸ்வரைக் காதலிப்பதை தென்னரசு கவனித்து இருக்கிறார்.... எப்படி அவர் கவனிக்காமல் இருந்திருக்க முடியும். அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளும் விதத்தைக் கண்டால் சாதாரண அறிவு உள்ளவனுக்குக் கூடத் தெரியாமல் போகாது... நினைக்க நினைக்க மகேஷிற்குத் தாங்கவில்லை.

மகேஷ் மெல்ல சொன்னான். "அவன் திமிர் பிடிச்சவன். அவள் கிட்ட என்ன சொன்னான், எப்படி நடந்துகிட்டான்னு தெரியலை.... அது அவளை காயப்படுத்தி இருக்கலாம்...."

"அவங்கப்பா சங்கர் கிட்ட சொல்லி பெருமைப்பட எத்தனையோ விஷயங்கள் இருந்துச்சு. ஆனால் எனக்குத் தெரிஞ்சு அவன் பெருமையாய் சொன்னது தன் மகன் ஈஸ்வரைப் பத்தி தான்"

மகேஷ் வெளிப்பார்வைக்கு இயல்பாக இருந்தாலும் அவனுக்கு உள்ளே ரத்தம் கொதித்தது. விட்டால் இங்கே எல்லாரும் ஈஸ்வருக்கு ஒரு ரசிகர் மன்றமே ஆரம்பித்து விடுவார்கள் போல இருக்கிறது... மகேஷ் சொன்னான். "ஈஸ்வருடைய இன்னொரு முகம் தெரியணும்னா அவன் எங்க தாத்தா கிட்ட நடந்துக்கறதைப் பார்க்கணும். அவன் அந்த முகத்தை விஷாலி கிட்ட காண்பிச்சு இருக்கலாம்...."

"என்ன காரணம்னு தெரியலை. ஆனால் அவள் என்கிட்ட கூட சொல்லாத அளவுக்கு அதைப் பர்சனலா நினைக்கிறாள் போல் இருக்கு"

"விஷாலி சீக்கிரமே பழைய விஷாலியாயிடுவாள் அங்கிள். நீங்கள் கவலைப்பட வேண்டாம்"

தென்னரசு அதை நம்பியது போல தெரியவில்லை. மகேஷையே கூர்ந்து பார்த்துக் கொண்டு இருந்த அவர் முகத்தில் இன்னும் மகள் பற்றிய கவலை தெரிந்தது. ”அப்படி ஆகலைன்னா என்னால தாங்க முடியாது. இந்த உலகத்துல அவளோட சந்தோஷத்தை விட முக்கியமானது எனக்கு எதுவுமே இல்லை”

’எதுவுமே’ என்ற சொல்லுக்கு அவர் அதிகமாகவே அழுத்தம் தந்ததை மகேஷ் கவனித்தான். “ஈஸ்வர் ஒரு மாதம் தான் லீவு போட்டிருக்கிறான்னு கேள்விப்பட்டேன். ஐந்து நாள் முடிந்தாச்சு. இன்னும் 25 நாள்ல போயிடுவான். அப்புறம் எல்லாம் சரியாயிடும்”

”அவன் போறப்ப என் பொண்ணோட சந்தோஷத்தையும் சேர்த்துக் கொண்டு போயிடாமல் இருக்கணும்கிறது தான் என் கவலை மகேஷ்”

மகேஷ் அவர் அறையில் மாட்டி இருந்த விஷாலியின் புகைப்படத்தைப் பார்த்தான். முகமெல்லாம் மலர்ச்சியாக கண்களில் நட்சத்திரங்கள் மின்ன அவள் அதிலிருந்து அவனைப் பார்த்தாள். தென்னரசுவிற்கு என்ன சொல்லி தைரியப்படுத்துவது என்பது அவனுக்குத் தெரியவில்லை. எத்தனையோ விஷயங்களைப் பற்றி இருவரும் பேசினாலும் கூட விஷாலியைப் பற்றிப் பேசுவதில் ஏதோ ஒரு அசௌகரியத்தை அவர்கள் உணர்ந்ததால் அவனும் அவரும் அதிகமாக விஷாலியைப் பற்றி பேசியது இல்லை.

ஒரு பெருமூச்சு விட்ட தென்னரசு வேறு ஒரு முக்கியமான விஷயத்திற்கு மாறினார். “நாளைக்கு காலைல என்னைப் பார்க்க பார்த்தசாரதி வர்றதாக சொல்லி இருக்கார்....”

மகேஷும் ஒரு கணம் விஷாலியை மறந்தான். “அந்த ஆள் எதற்கு உங்களைப் பார்க்க வரணும்?”

“ஏதோ கேட்கணுமாம்”

மகேஷ் அவரைத் திகைப்புடன் பார்த்தான்.

தென்னரசு அவனைக் கூர்மையாகப் பார்த்தபடி சொன்னார். “அவர் வர்றப்ப உன்னை இங்கே பார்க்கறது நல்லது இல்லை. அதனால் ரெண்டு நாளைக்கு நீ இங்கே வராமல் இருக்கிறது நல்லது.”

அவன் மெல்ல தலையாட்டினான். அவன் முகம் வெளிறிப் போனது.

# அத்தியாயம் - 45

குருஜி அனுப்பிய ஆள் காமாட்சியிடம் இருந்து அரக்கு வைத்து மூடிய அந்த உறையை வாங்கிக் கொண்டு வந்தான். அவன் வரும் வரை பொறுமை இல்லாமல் காத்திருந்த குருஜி அவனிடம் கேட்டார். “அந்தம்மா எதாவது சொன்னாங்களா?”

“இல்லை குருஜி. கணபதிக்கு கொஞ்சம் சீடையும் கொடுத்து அனுப்பி இருக்காங்க. கணபதிக்கு சீடைன்னா இஷ்டமாம்”

அவன் அந்த உறையோடு சீடையையும் தர குருஜி பொறுமை இழந்தவராக முகம் சுளித்தார். ‘சீடையை அவன் கிட்டயே அப்புறமா குடு.”

*உறையை வாங்கிக் கொண்டு அவர் அவனைக் கால் மணி நேரம் கழித்து வரச் சொன்னார். அவன் போன பின் அந்த உறையை அவசரமாகப் பிரித்தார்.*

*அதன் உள்ளே பழுப்பேறிய வெள்ளைத் தாளில் எழுதி இருந்த கடிதத்தைப் படித்தார்.*

*“சிரஞ்சீவி கணபதிக்கு,*

*அநேக ஆசிர்வாதம்.*

*இந்தக் கடிதம் உனக்கு விந்தையாக இருக்கலாம். முன்பின் அறிமுகம் இல்லாத ஒரு நபரிடம் இருந்து கிடைக்கும் இந்த விவரங்கள் நம்ப முடியாததாக இருக்கலாம். ஆனாலும் இதில் சொல்லி இருப்பது அனைத்தும் உண்மை என்பதை நீ தினமும் பக்தியுடன் வணங்கும் பிள்ளையார் மீது ஆணையாக நான் கூறுகிறேன். எக்காரணத்தைக் கொண்டும் இதில் சொல்லப்பட்டுள்ள இரகசியத் தகவல்களை உன் குடும்பத்தினர் உட்பட யாரிடமும் நீ சொல்லக் கூடாது என்று உன்னைக் கேட்டுக் கொள்கிறேன்.*

*ஆயிரத்திற்கும் மேற்பட்ட ஆண்டுகளுக்கு முன்பு மூன்று சித்தர்களால் ஒரு சிவலிங்கம் உருவாக்கப்பட்டது. தங்கள் ஞானதிருஷ்டியால் எதிர்காலத்தில் கலி முற்றிப் போய் ஏற்பட இருக்கும் சீரழிவுகளை அறிந்த அந்த சித்தர்கள் அக்காலத்தில் மனித குலத்தைப் பேரழிவில் இருந்து காக்கும் எண்ணத்தில் தங்களிடம் இருக்கும் அபூர்வ சக்திகளை எல்லாம் அந்த சிவலிங்கத்தில் ஆவாஹனம் செய்து அதை வணங்கினார்கள். விசேஷ மானஸ லிங்கம் என்று நாமகரணம் சூட்டிய அந்த சிவலிங்கத்தை இரகசியமாய் மிகுந்த பக்தியுடன் பூஜித்து வந்தார்கள்.*

அவர்கள் காலத்திற்குப் பின் தகுதி வாய்ந்த அடுத்த மூவர் குழுவிற்கு விசேஷ மானஸ லிங்கத்தைப் பூஜிக்கத் தந்து விட்டுச் சென்ற அந்த சித்தர்கள் பிற்காலங்களிலும் அதே போல் தூய்மையான பக்தி, கூர்மையான அறிவு, ஞானசித்தி பெற்றிருந்தவர்களுக்கே அந்த விசேஷ மானஸ லிங்கம் ஒப்படைக்கப்பட வேண்டும் என்ற விதியை விதித்து விட்டுச் சென்றனர். ஆரம்ப காலங்களில் சித்தர்களிடம் மட்டுமே அந்த விசேஷ மானஸ லிங்கம் இருந்து வந்தது. தொடர்ந்து பூஜை செய்த சித்தர்களும் அந்த லிங்கத்திற்கு சக்தி சேர்த்து வந்தார்கள்.

ஒரு கால கட்டத்தில் தற்செயலாக அந்த விசேஷ மானஸ லிங்கம் பூஜிக்கப்படுவதைக் காண நேர்ந்த சோழ மன்னன் முதலாம் இராஜாதி இராஜ சோழன் அதனால் ஈர்க்கப்பட்டு அதற்கு தன் பாட்டனார் இராஜ இராஜ சோழனை விடப் பெரிய கோயில் ஒன்றை கட்ட ஆசைப்பட்டு விசேஷ மானஸ லிங்கத்தை சித்தர்களிடம் கேட்டான்.

எதிர்காலத்தில் வழிபாட்டுத் தலங்கள் எல்லாம் வியாபாரத் தலங்களாக மாறி விடும் என்பதை ஞானதிருஷ்டியால் அறிந்திருந்த சித்தர்கள் அதை மன்னனுக்குக் கூடத் தர சம்மதிக்கவில்லை. உடனே அந்த இடத்தை விட்டுச் சென்று விட்ட அவர்களும், அந்த சிவலிங்கத்தை வழிவழியாக பூஜித்து வந்தவர்களும் பொது மக்கள் கவனத்தை ஈர்க்காமல் இரகசியமாய் விசேஷ மானஸ லிங்கத்தைப் பூஜித்து வந்தார்கள்.

ஆரம்ப காலங்களில் சித்தர்களிடம் மட்டுமே இருந்த விசேஷ மானஸ லிங்கம் பின்பு தகுதி வாய்ந்த மற்றவர்களிடமும் கூடச் சென்றது. ஆனால் அதை ரகசியமாகவும், தூய பக்தி குறையாமலும் பூஜிக்கும் தன்மை உள்ளதா என்பது மட்டும் உறுதி செய்யப்பட்டே

அவர்களுக்குத் தரப்பட்டது. அதில் இக்காலம் வரை எந்தச் சிறு விலகலும் ஏற்படவில்லை என்பது மட்டும் நிச்சயம்.

இதை எல்லாம் உன்னிடம் நான் தெரிவிக்கக் காரணம் என்ன என்று நீ வியக்கலாம். அதன் காரணம் விசேஷ மானஸ லிங்கத்தைப் பூஜிக்கும் பெரும் பாக்கியம் உனக்குத் தரப்பட்டிருக்கிறது என்பது தான். இந்தக் கடிதம் உன்னை வந்தடையும் காலத்திற்கு சற்று முன்னதாகவோ, சற்றுப் பிந்தியோ வர இருக்கும் இந்த வாய்ப்பை நீ ஏற்றுக் கொண்டு முறையாகவும், ரகசியமாகவும் விசேஷ மானஸ லிங்கத்தைப் பூஜித்து வருவாயாக!

சாதாரணமானவனாகவே உன்னை நீ நினைத்துக் கொண்டு இருப்பதால் இதற்குப் பொருத்தமானவன் தானா என்று உன்னையே நீ சந்தேகிக்கலாம். சுபாவத்தில் எளிமையானவனும், தூய்மையானவனுமான உனக்கு விசேஷ மானஸ லிங்கத்தைப் பூஜிக்கும் முழுத்தகுதியும் உண்டு. அதனால் தான் நீ தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறாய் என்பதைப் புரிந்து கொள். விசேஷ மானஸ லிங்கத்தின் மற்ற இரண்டு பாதுகாவலர்களை இன்னேரம் நீ சந்தித்திருக்கலாம், அல்லது விரைவில் சந்திக்கலாம்.

உன்னிடம் விசேஷ மானஸ லிங்கம் வந்து சேரும் போது அது முழுமையான சக்திகளைப் பரிபூரணமாய் பெற்று இருக்கும். இனி அதற்குத் தேவை சக்தி வாய்ந்த, சக்தி சேர்க்கும் சித்தர்களோ, பூஜிப்பவர்களோ அல்ல. அதற்குத் தேவை அதை நன்மை நிறைந்த மனதுடன் தூய்மையாய் பூஜிப்பவர்களே.

விசேஷ மானஸ லிங்கம் தன் சரித்திரத்தில் மிக முக்கியமான காலகட்டத்தில் உன்னிடம் வந்துள்ளது. பூரண சக்திகளுடன் இருக்கும் விசேஷ மானஸ லிங்கம் தவறான மனிதர்களிடம் சேர்ந்து விட்டால் அந்த சக்தி தவறான வழிக்குப் பயன்படுத்தப்படும்,

உலகின் பேரழிவிற்கு அது காரணமாகி விடும் என்பதில் சந்தேகம் இல்லை. எனவே அப்படி நேராமல் காக்கின்ற பொறுப்பு உங்கள் மூவருக்கு உண்டு. அந்த சிவலிங்கத்தின் அருகிலேயே எப்போதும் இருக்க முடிந்த உனக்கு பொறுப்பு அதிகம் என்றே சொல்லலாம்.

உன்னால் முடியுமா என்று நீ சந்தேகிக்க வேண்டியதில்லை. முடியாத பொறுப்புகள் அறிஞர்களால் தரப்படுவதில்லை. உனக்கு விசேஷ மானஸ லிங்கம் நிறைய கற்றுத் தரும். அதற்கு நீ செய்ய வேண்டியதெல்லாம் இது தான்.... ”

குருஜி படித்துக் கொண்டிருக்கையில் ஜன்னல் வழியே திடீரென பெரும் காற்று வீசியது. அவர் சுதாரிக்கும் முன் அவர் கையில் இருந்த அந்தக் கடிதம் நழுவி காற்றில் பறந்தது. ஜன்னல் வழியே ஒரு பெரும்சக்தி அந்தக் கடிதத்தை வெளியே இழுத்தது போல் இருந்தது. குருஜி வேகமாய் அந்தக் கடிதத்தைக் கைப்பற்றும் முன் கடிதம் ஜன்னல் வழியே காற்றில் பறக்க ஆரம்பித்தது.

திகைத்துப் போன குருஜி அதி வேகமாக வெளியே ஓடினார். ஆனால் அந்தக் கடிதம் காற்றில் பறந்து சென்று தூரத்தில் சருகுகளை எல்லாம் சேர்த்து இரண்டு மாணவர்கள் எரித்துக் கொண்டு இருந்த தீயில் விழுந்தது. அந்தக் காகிதம் எரிந்து கருகுவதையே பார்த்துக் கொண்டு குருஜி நின்றார்.

குருஜியைக் கண்டதும் சருகுகளை எரித்துக் கொண்டிருந்த இரண்டு மாணவர்களும் பயபக்தியுடன் எழுந்து நின்றனர். தீயில் விழுந்த அந்தக் காகிதம் அவருக்குத் தேவைப்பட்ட முக்கியக் காகிதமா என்ற சந்தேகம் அவர்களுக்கு வந்தது. “குருஜி இந்தக் காகிதம்.....” என்று ஒருவன் இழுத்தான்.

தன் ஏமாற்றத்தை மறைத்துக் கொண்டு குருஜி புன்னகைத்தார். "வேண்டாத காகிதம் தான்."

சொல்லி விட்டுத் திரும்பினவருக்கு அந்தக் கடிதம் மேற்கொண்டு சொல்ல வந்தது என்னவாக இருக்கும் என்ற சிந்தனையே மேலோங்கி நின்றது. எத்தனை சிந்தித்தும் அவரால் கணபதிக்குச் சொல்லப்பட்ட அறிவுரை என்னவாக இருக்கும் என்பதை ஊகிக்க முடியவில்லை.

அரக்கு வைத்து மூடிய உறையையும், முன்பு எப்போதோ எழுதியது போல் தெரிந்த பழுப்புக் காகிதத்தையும், அதற்குள் என்ன இருக்கிறது என்று தெரியாது என்று அவர் காமாட்சியிடம் சொன்னதையும் வைத்துப் பார்த்தால் யாரோ முன்பே அவருக்குக் கொடுத்து வைத்த உறையாகத் தான் இருக்க வேண்டும் என்று தோன்றியது. மேலும் மூளை வேலை செய்த போது ஜோதிடரின் குருநாதர் சிதம்பரநாத யோகி சாவதற்கு முன் கொடுத்து விட்டுப் போன உறையாகத் தான் இருக்கலாம் என்ற முடிவுக்கு அவர் வந்தார்.

கணபதியை அவர்கள் முன்பே தேர்ந்தெடுத்து வைத்திருந்தார்கள் என்பதை நினைக்கையில் குருஜிக்கு சுருக்கென்றது. அவர் தானாகக் கணபதியைத் தேர்ந்தெடுத்தது போல நினைத்திருக்கையில் அவர்கள் தேர்ந்தெடுத்து வைத்திருந்த ஆளை அவர் தேர்ந்தெடுத்து பூஜை செய்ய ஏற்பாடு செய்தது அவரால் சகிக்க முடியாததாக இருந்தது.

விசேஷ மானஸ லிங்கத்திடம் அவர் கேட்ட கேள்விகள் இப்போது அவர் செவிகளை அறைந்தன. "என் குருநாதர் போன்ற பெரிய சித்தர்கள் பூஜை செய்த உன்னை இப்போது கணபதி என்கிற ஒன்றும் தெரியாத ஒரு பையன் பூஜை செய்வது உனக்கு எப்படி

இருக்கிறது. மௌனமும் அமைதியுமாக உன்னைப் பூஜித்து வந்தவர்களுக்குப் பிறகு இப்போது சலிக்காமல் எல்லாவற்றைப் பற்றியும் பேசிக் கொண்டிருக்கும் பையன் கிடைத்திருப்பது எப்படி இருக்கிறது. உனக்கு தனிப்பட்ட விருப்பு வெறுப்பு இல்லாததால் நீ ஒரு சலனமும் கூட இல்லாமல் இருக்கலாம். ஆனால் கணபதியைத் தேர்ந்தெடுத்து நான் உன்னைப் பூஜை செய்ய வைத்திருப்பதற்கு என் குருநாதர் என்ன நினைப்பார்? இது வரை பூஜை செய்வது யார் என்பதை தீர்மானம் செய்தது அவர்கள் கூட்டமாகத் தான் இருந்தது. இப்போது அந்த அதிகாரத்தை நான் எடுத்துக் கொண்டதைப் பற்றி அவர் அபிப்பிராயம் என்ன?....”

இந்தக் கடிதம் இன்னொரு முக்கியக் கேள்வியை அவர் மனதில் எழுப்பியது. இரண்டு முறை கணபதியைச் சந்தித்த அவருடைய குருநாதரான சித்தர் ஏன் நேரடியாகச் சொல்ல வேண்டிய அறிவுரையைச் சொல்லவில்லை. தக்க சமயத்திற்காகக் காத்திருந்தாரா? இல்லை வேறெதாவது காரணமா?

தனதறைக்குள் திரும்ப வந்து அமர்ந்த குருஜி ஜன்னல் வழியாகப் பார்த்தார். சற்று முன் அத்தனை பலமாகக் காற்றடித்ததின் அறிகுறியே காணோம். காற்று தற்செயலானது என்றோ, சரியாக முக்கியக் கட்டம் படிக்கும் முன் அந்தக் காற்றில் கடிதம் பறந்ததும், தீயில் விழுந்து எரிந்ததும் இயல்பானது என்றோ அவர் நினைக்கவில்லை. அவருடைய குருநாதர் சித்தர் தான் இதற்கெல்லாம் காரணம் என்பதை அவர் அறிவார். நேரில் தரிசனம் தரா விட்டாலும் குருநாதரின் இருப்பை இந்த நிகழ்ச்சியில் அவர் உணரவே செய்தார்.

ஆராய்ச்சிகளை ஆரம்பிக்கும் முன் குருநாதரைக் கட்டுப்படுத்தி வைக்கா விட்டால் எதுவும் நினைத்தபடி நடக்காது என்பதை அவர் அறிவார். கண்களை மூடிக் கொண்டு அவர் யோசிக்க

*ஆரம்பித்தார்.... தடைகள் என்றுமே அவரைத் தடுத்து நிறுத்தியதில்லை. இனியும் அப்படித் தடுத்து நிறுத்த அவர் அனுமதிக்க மாட்டார். எல்லா மோசமான சூழ்நிலைகளுக்கும் ஒரு தீர்வு இருக்கவே செய்கிறது. தீர்வு இல்லாத பிரச்சினை இல்லை. சொல்லப் போனால் பிரச்சினையும் தீர்வும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் தான். ஒன்று இருந்தால் இன்னொன்று இருக்கவே செய்யும்....*

*குருஜி கண்களைத் திறந்த போது என்ன எல்லாம் செய்ய வேண்டும் என்பதை யோசித்து முடித்திருந்தார். கணபதி வீட்டுக்குப் போய் அந்தக் கடிதம் வாங்கி வந்தவனை உடனே வரவழைத்தார். கணபதிக்குத் தர ஒரு புதிய கடிதம் உடனே தயார் செய்யச் சொன்னார்.*

*"சிரஞ்சீவி கணபதிக்கு,*

*நாங்கள் ஆன்மிக மார்க்கத்தில் ஈடுபட்டிருக்கும் ஒரு தர்ம ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள். தங்கள் வரசித்தி விநாயகர் கோயிலிற்கு இத்துடன் ரூ.10000/- நன்கொடையாக அடுத்த மாதம் முதல் தேதியிட்ட காசோலை மூலம் அனுப்பி உள்ளோம். இப்பணத்தை கோயில் திருப்பணிகளுக்கு உபயோகித்துக் கொள்ளுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.*

*இப்படிக்கு,*

*பாரதீய ஆன்மிகப் பேரவை"*

*பாரதீய ஆன்மிகப் பேரவை அவர் ஆதரவில் நடக்கும் பல டிரஸ்டுகளில் ஒன்று. அந்தப் பேரவையின் செக் ஒன்றை ரூ.10000/-க்கு எழுதி அக்கடிதத்துடன் இணைத்து அதை ஒரு உறையில்*

வைத்து உண்மையான உறையில் இருந்தபடியே விலாசம் எழுதி அரக்கு வைத்து மூடி விட்டு கணபதியை அழைத்து வரச் சொன்னார்.

கணபதி வந்தான்.

புன்னகையுடன் அவனை வரவேற்ற குருஜி சொன்னார். “…இந்தா கணபதி. உனக்கு வந்த லெட்டர்… கூடவே உன் அம்மா சீடையும் தந்து அனுப்பிச்சு இருக்காங்க… உனக்கு சீடை ரொம்பப் பிடிக்குமோ…”

கணபதி வெட்கப்பட்டான். ‘..இந்த அம்மாவுக்கு நான் இன்னும் சின்னப் பையன்னே நினைப்பு.. லெட்டர் கூட சீடையை யாராவது அனுப்புவாங்களா… ஆனா அம்மா செய்யற சீடையே தனி ருசி தான்…’ நினைக்கும் போதே அவனுக்கு நாக்கில் எச்சில் ஊறியது. கடிதத்தையும், சீடையையும் வாங்கிக் கொண்டான்.

குருஜி சொன்னார். “கணபதி, நாளைக்கு சிவனுக்கு விசேஷமான நாள். தொடர்ச்சியாக சில மணி நேரம் சிவலிங்கம் முன்னாடி இருந்து ருத்ர ஜபம் செய்ய இந்த வேதபாடசாலை மாணவர்கள் சிலர் கிட்ட சொல்லி இருக்கேன். நீயும் அந்த நேரத்துல சிவனுக்கு பூஜை செய்துகிட்டு இரு. உனக்கு ஒண்ணும் பிரச்சினை இல்லையே…”

கணபதிக்கு அதில் எந்தப் பிரச்சினையும் இருக்கவில்லை. சீடையோடும், கடிதத்தோடும் அவன் போன பிறகு தன் ஆளை அழைத்துச் சொன்னார். “உண்மையான பக்தி இருக்கிற நாலு பசங்களை ருத்ர ஜபம் செய்ய நாளைக்கு காலைல ஒன்பது மணிக்கு அனுப்பு. அவர்களை பூஜை அறையில் இருந்து பத்தடி தள்ளி உட்கார்ந்து மௌனமாய் ருத்ர ஜபம் செய்யச் சொல்லு. எந்தக்

காரணத்தை வைத்தும் மதியம் ரெண்டு மணி வரை கணபதி வெளியே வராத மாதிரி பார்த்துக்கோ. காலைல ஒன்பதரை மணிக்கு ஈஸ்வரை வேதபாடசாலைக்கு வரச் சொல்லி இருக்கேன். அவனை ஒன்றரை மணிக்குள் வெளியே அனுப்பிடறேன்....”

அவர் ஆள் போனபின் தன் உதவியாளனுக்குப் போன் செய்து நாளை மறுநாள் அதிகாலையில் ரிஷிகேசம் செல்ல தனி ஹெலிகாப்டர் ஏற்பாடு செய்யச் சொன்னார். ரிஷிகேசத்தில் மலைக்காட்டுப் பகுதியில் பயணம் செய்யத் தகுந்த ஜீப் ஒன்றையும் தயார் செய்யச் சொன்னார்.

போன் பேசி முடித்த போது அவருக்குப் பழைய தன்னம்பிக்கை திரும்ப வந்திருந்தது. மறுபடியும் அந்தக் கடித வரிகளை ஆரம்பத்தில் இருந்து மனதிற்குள் படித்துப் பார்த்தார். ஆர்வத்தோடு படிக்கும் விஷயங்களை அவர் ஒரு முறை படித்தாலே வரிக்கு வரி நினைவு வைத்திருக்கும் தனித்தன்மை பெற்றிருந்தார் என்பதால் மறுபடி நினைவுபடுத்திக் கொள்வதில் அவருக்குச் சிரம்ம் இருககவில்லை. அதில் சில வரிகள் அவரைப் புன்னகை பூக்க வைத்தன.

”...பூரண சக்திகளுடன் இருக்கும் விசேஷ மானஸ லிங்கம் தவறான மனிதர்களிடம் சேர்ந்து விட்டால் அந்த சக்தி தவறான வழிக்குப் பயன்படுத்தப்படும், உலகின் பேரழிவிற்கு அது காரணமாகி விடும் என்பதில் சந்தேகம் இல்லை....”

அப்படி நடக்கும் சாத்தியம் உண்டு என்பதை அவர்கள் உணர்ந்திருந்தார்கள். அவர்களுக்கு அந்தப் பயம் இருக்கிறது.... சிவலிங்கம் இன்னும் அவர் வசம் தான் இருக்கிறது.... கூடவே கணபதியும் தான்.....

நினைக்க நினைக்க குருஜிக்கு தன்னம்பிக்கை மேலும் வளர்ந்தது. அவர் புன்னகை பூத்தார். குருவிடம் அவர் மானசீகமாகப் பேசினார். "....கணபதிக்கு என்ன அறிவுரை சொல்லப்பட்டிருக்கிறது என்பது எனக்குத் தெரியா விட்டாலும் பரவாயில்லை குருவே. அதை இனி அவனும் தெரிந்து கொள்ளப் போவதில்லை. அவனுக்கு நேரடியாகவே சொல்ல முடிந்த இரண்டு சந்தர்ப்பங்களை நீங்கள் தவற விட்டு விட்டீர்கள் குருவே. இனி நீங்கள் எப்போதும் தனியாக அவனை சந்திக்கப் போவதில்லை. அவனிடம் அதைச் சொல்லவும் போவதில்லை. ஏனென்றால் இனி எப்போதும் என் ஆட்கள் பார்வையிலேயே அவன் இருப்பான்..."

குருஜி திருப்தியுடன் எழுந்தார். ரிஷிகேசம் போய் வந்த பின் எல்லாம் இனி அவர் கட்டுப்பாட்டில் வரப் போகிறது. அவர் விதியின் கைப்பாவை அல்ல. அவர் ஒரு விதி செய்வார்....

# அத்தியாயம் - 46

அது பழைய காலத்து நூலகம். உள்பரப்பே சுமார் 4700 சதுர அடிகள் இருந்தது. அடுத்த வருடம் 85ஆம் ஆண்டு விழாவைக் கொண்டாட இருக்கிறது. அங்கு மிகப் பழைய அபூர்வ புத்தகங்களும் கிடைக்கும், இரண்டு நாள் முன்பு வெளியான பிரபல புத்தகங்களும் கிடைக்கும் என்பதால் வயதானவர்கள், இளைஞர்கள், அறிவு ஜீவிகள், பொழுது போக்கு புத்தகங்கள் படிப்பவர்கள் என்று எல்லா தரப்பு உறுப்பினர்களையும் கொண்டது. பார்த்தசாரதி நூலகம் திறக்கப்படுவதற்காக வெளியே காத்திருந்தார். அவரை இந்த நூலகம் வரை வர வைத்தது ஒரு மனக்கணக்கு தான்.

விசேஷ மானஸ லிங்கம் பற்றிய தகவல்கள் அறுபது ஆண்டுகளுக்கும் முன்பே எழுதப்பட்ட புத்தகத்தில் இருந்திருக்கிறது. அது அடிக்கடி திடீர் என்று ஒளிரும் தன்மை கொண்டிருக்கிறது என்ற தகவலும் அதில் இருக்கிறது. ஆனால் பசுபதி பூஜித்து வந்த சிவலிங்கம் தான் விசேஷ மானஸ லிங்கம் என்பது வெளியுலகம் இத்தனை காலமாக அறிந்திருக்கவில்லை. ஆனால் பசுபதி பூஜித்து வந்த சிவலிங்கமும் அடிக்கடி ஒளிர்வதை ஒருசிலர் பார்த்து இருக்கிறார்கள். அந்தத் தகவலும் இந்தத் தகவலும் யாரோ சிலருக்கு சமீபத்தில் தெரியவர, பசுபதி பூஜை செய்து வந்த சிவலிங்கம் தான் விசேஷ மானஸ லிங்கமாக இருக்க வேண்டும் என்று அனுமானித்திருக்கலாம் என்ற சந்தேகம் பார்த்தசாரதிக்கு வந்தது.

அதனால் சமீப காலமாக யார் எல்லாம் அந்தப் புத்தகம் படித்திருக்கிறார்கள் என்பதைத் தெரிந்தால் ஏதாவது துப்பு கிடைத்தாலும் கிடைக்கலாம் என்று எண்ணினார். அதைப் படித்த ஆட்கள், பசுபதியின் சிவலிங்கம் பற்றியும் தெரிந்த ஆட்களாய் இருந்தால் அதை வைத்து ஏதாவது துப்பு துலக்கலாம் என்று தோன்றியது. இதில் ஒரு துப்பும் கிடைக்காமலும் போகலாம், இந்தக் கணக்கே தப்பாக இருக்கலாம் என்றாலும் இப்படிப்பட்ட கணக்குகளில் தான் அவர் பல வழக்குகளை வெற்றிகரமாகத் தீர்த்திருக்கிறார். நீலகண்ட சாஸ்திரியின் மகன் தன்னிடமுள்ள புத்தகத்தை பத்து வருடங்களுக்கு மேலாக யாரிடமும் தரவில்லை என்று உறுதியாகச் சொன்னார். அதைப் பற்றி யாரிடமாவது பேசி அதற்கும் அதிக காலமாகி விட்டது என்று சொன்னார். அதனால் அவர் மூலமாக இந்தச் செய்தி பரவி இருக்க வாய்ப்பில்லை...

நேற்று காலையில் நீலகண்ட சாஸ்திரி எழுதிய ”ஆன்மிக பாரதம்” என்ற பழைய காலத்துப் புத்தகம் நகரத்தில் எந்தெந்த நூலகங்களில் இருக்கின்றன என்பதை விசாரிக்க ஆரம்பித்தார்.

மாலையில் தான் இரண்டு நூலகங்களில் அந்தப் புத்தகம் ஒவ்வொரு பிரதி இருப்பது தெரிய வந்தது. மாவட்ட மைய நூலகத்திலும், இந்த நூலகத்திலும் இருப்பது தெரிந்ததும் முதலில் மாவட்ட மைய நூலகத்திற்குச் சென்றார்.

நீலகண்ட சாஸ்திரியின் ”ஆன்மிக பாரதம்” தூசி, சிலந்தி வலையுடன் ஆன்மிகப் பிரிவு அலமாரி ஒன்றில் இருந்தது. வருடக்கணக்கில் அந்த நூல் படிக்கப்படவில்லை என்பது அதைப் பிரிக்கும் போதே தெரிந்தது. பிரித்து 178வது பக்கத்தை ஒரு முறை பார்த்து விட்டு வைத்தார். நூலக கம்ப்யூட்டரில் அந்தப் புத்தகத்தை கடைசியாகப் படிக்க எடுத்துச் சென்றது ஏழு ஆண்டுகள் நான்கு மாதங்கள் பத்து நாட்களுக்கு முன்பு என்று குறிக்கப்பட்டிருந்தது. அங்கிருந்து இந்த நூலகத்திற்கு நேற்று மாலையே வருவதாக இருந்தார். ஆனால் நூலகம் மூடப்படும் நேரமாகி விட்டிருந்தபடியால் காலையில் வந்திருக்கிறார்.

நூலகம் திறக்கப்பட்டவுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட பார்த்தசாரதி நூலக அதிகாரி உதவியுடன் அந்தப் புத்தகத்தைத் தேடி எடுத்துப் பார்த்தார். புத்தகத்தில் தூசி, சிலந்தி வலை இல்லை. தனியார் நூலகம் என்பதால் அடிக்கடி தூசி தட்டி துடைத்து வைக்கும் பழக்கம் இருக்கிறதோ என்று எண்ணியவராக புத்தகத்தைத் திறந்து பார்த்தார். புத்தகத்தின் உள்ளே முதல் பக்கத்தில் ஒட்டி இருக்கும் நூலகக் குறிப்புக் காகிதம் இல்லை. நூலக உறுப்பினர் எண், புத்தகம் திருப்பித் தர வேண்டிய தேதி ஆகியவை எழுதி வைக்கப்படும் தாள் கிழிக்கப்பட்டிருந்தது. பார்த்தசாரதி அதைக் காண்பித்து விட்டுச் சொன்னார். “இந்தப் புத்தகத்தை இந்த ஒரு வருஷ காலத்தில் யாரெல்லாம் படிச்சிருக்காங்கன்னு எனக்கு தெரிஞ்சுக்க வேண்டி இருந்தது. அந்தப் பக்கத்தையே கிழிச்சிட்டாங்களே”

*ஆச்சரியப்பட்ட நூலக அதிகாரி சொன்னார். “கொண்டு போகிற புத்தகத்தைப் பத்திரமாய் வைக்கிற பழக்கம் பல பேர் கிட்ட கிடையாது. குழந்தைகள் கைல கிடைக்கிற மாதிரி புத்தகத்தை வச்சிடறாங்க. குழந்தைகள் கிழிச்சிடறாங்க... பரவாயில்லை. இந்தத் தகவல் எங்க கம்ப்யூட்டர்ல இருக்கும். வாங்க பார்த்துச் சொல்றேன்”.*

*அவர் பார்த்தசாரதியைத் தனதறைக்கு அழைத்துச் சென்றார். கம்ப்யூட்டரில் தேடிய அதிகாரி முகத்தில் திகைப்பு பெரிய அளவில் தெரிந்தது.*

*பார்த்தசாரதி கேட்டார். “என்ன ஆச்சு?”*

*“ஏதோ வைரஸ் அட்டேக் போல இருக்கு. எந்தப் புத்தகம் எடுத்ததற்கும் ரிகார்டு இங்கே இல்லை. எல்லாம் அழிஞ்சு போயிருக்கு... நேற்றைக்கு வரைக்கும் சரியாய் தானே இருந்துச்சு...”*

*பார்த்தசாரதியின் சந்தேகம் உறுதிப்பட்டது. புத்தகத்தில் ஒட்டி இருக்கும் தாளும் கிழிந்து போய் கம்ப்யூட்டரில் உள்ள ரிகார்டுகளும் அழிந்து போய் இருப்பது இயல்பாக இல்லை. அவர் நேற்று போட்ட மனக்கணக்கை யாரோ தெரிந்து கொண்டு வேகமாக இயங்கி இருக்கிறார்கள்.....*

*“இப்படி ஆகிறது உண்டா?” பார்த்தசாரதி கேட்டார்.*

*“என் சர்வீஸ்ல இப்படி ஆனதில்லை சார்”*

*“நான் இந்தப் புத்தகம் பற்றிக் கேட்டதை நீங்கள் யார் கிட்டயாவது சொன்னீங்களா?”*

*“இல்லையே சார். நானே தான் கம்ப்யூட்டரில் தேடிப்பார்த்து இருக்கிறதைக் கண்டு பிடிச்சு சொன்னேன்....”*

*பார்த்தசாரதிக்கு அவர் சொல்வது உண்மையாக இருக்கும் என்றே தோன்றியது. அப்படியானால் அவருடைய ஆபிசில் இருந்து தான் தகவல் கசிந்திருக்க வேண்டும். சென்ற முறை சீர்காழியில் அந்த இளைஞனைத் தேடிப் போன போதும் இதே தான் நிகழ்ந்திருக்கிறது....*

*பார்த்தசாரதி கேட்டார். “புத்தகங்களை எடுத்துப் படிச்சவங்க பத்தின தகவல்கள் மட்டும் அழிஞ்சிருக்கா? இல்லை உங்க உறுப்பினர்கள் பத்தின தகவல்கள் எல்லாம் சேர்ந்து அழிஞ்சு போயிருக்கா?”*

*“புத்தகங்களை எடுத்துப் போனதும், திருப்பித் தந்ததுமான தகவல்கள் மட்டும் அழிஞ்சு போயிருக்கு சார். உறுப்பினர் பத்தின தகவல்கள் எல்லாம் அப்படியே இருக்கு”*

*“எத்தனை உறுப்பினர்கள் இருக்காங்க?”*

*“இன்றைய தேதியில் 18365 பேர் இருக்காங்க சார். இதில் 12000 பேர் ரெகுலரா வந்து போறவங்க”*

*பரமேஸ்வரன் வீட்டு விலாசத்தைத் தந்த பார்த்தசாரதி ”இந்த விலாசத்துல ஏதாவது உறுப்பினர் இருக்காங்களான்னு பாருங்கள்”.*

*அந்த நூலக அதிகாரி பார்த்துச் சொன்னார். ”மீனாட்சிங்கறவங்க பேர் இருக்கு. இது தொழிலதிபர் பரமேஸ்வரன் ஐயா பொண்ணு. அவங்க அடிக்கடி இங்கே வர்றவங்க. அவங்க நல்ல மாதிரி ...”*

*பார்த்தசாரதி தலையாட்டினார். ”அவங்க இந்த மாதிரி புத்தகம் எல்லாம் படிப்பாங்களா?”*

*”அவங்க அதிகம் நாவல்கள் தான் படிப்பாங்க. எப்பவாவது பக்திக் கதைகளும் படிப்பாங்க. இந்த மாதிரி சீரியஸான புத்தகங்கள் எல்லாம் எடுத்துகிட்டு போனதாய் எனக்கு நினைவில்லை....”*

*வேறு யாரெல்லாம் இதைப் படித்திருக்கலாம் என்று தெரியவில்லையே என்று பார்த்தசாரதி யோசித்தார். புத்தகத்தை எடுத்துப் போய் தான் படித்திருக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை. இங்கேயே படிக்கிற ஆள்களும் உண்டு. அப்படி யாராவது படித்திருந்தாலும் தெரிய வாய்ப்பில்லை.*

*பார்த்தசாரதி எழுந்து கடிகாரத்தைப் பார்த்தார். தென்னரசுவைப் பார்க்கப் போக வேண்டும்.... திடீர் என்று நூலக அதிகாரியிடம் கேட்டார். “உங்க உறுப்பினர்கள்ல தென்னரசுங்கற பேர் இருக்கான்னு பாருங்கள்”*

*நூலக அதிகாரி பார்த்துச் சொன்னார். “இருக்கு சார். அந்தம்மா அளவுக்கு இல்லைன்னாலும் இவரும் அடிக்கடி வர்றவர் தான்”*

*“இவர் எந்த மாதிரியான புத்தகங்கள் படிப்பார்?”*

நூலகர் சிறிது யோசித்து விட்டுச் சொன்னார். “இவர் கொஞ்சம் சீரியஸ் ரீடிங் தான். அதிலும் இலக்கியம் அதிகம் படிப்பார்.”

“இவர் இந்த ஆன்மிக பாரதம் புத்தகத்தைப் படித்திருக்கலாமா?”

நூலகருக்கு உறுதியாகச் சொல்லத் தெரியவில்லை.

பார்த்தசாரதி அவருக்கு நன்றி சொல்லி விட்டுக் கிளம்பினார். ஈஸ்வரின் தந்தையுடன் சேர்ந்து சிறிய வயதிலேயே சிவலிங்கம் ஒளிர்வதைப் பார்த்த நபர் தென்னரசு...... பரமேஸ்வரன் குடும்பத்துடன் நெருங்கிய தொடர்பில் இருப்பவர்....

கணபதி அதிகாலையில் இருந்தே நிறைய யோசித்தான். அரக்கு வைத்து மூடிய உறையில் வந்த அந்த பத்தாயிரம் ரூபாயை பிள்ளையாருக்கு எப்படி செலவழிப்பது என்கிற யோசனை தான் அது. பிள்ளையாருக்குச் செய்ய வேண்டியவை நிறைய இருந்தாலும் இந்த பத்தாயிரம் ரூபாயில் அதிகபட்சமாய் என்னவெல்லாம் செய்யலாம் என்று யோசித்துக் கொண்டே இருந்தான். பிள்ளையாருக்குச் செலவு செய்யப் பத்தாயிரம் ரூபாய் கிடைத்தது அதிர்ஷ்டம் என்று நினைத்தான்.

நேற்று மீதி வைத்திருந்த அம்மாவின் சீடைகளைச் சாப்பிட்டுக் கொண்டே பிள்ளையாரிடம் பேசினான். “பிள்ளையாரே, நான் இங்கே உங்கப்பாவுக்குப் பூஜை செய்ய வந்த பிறகு நம் ரெண்டு பேருக்குமே யோகம் அடிக்க ஆரம்பிச்சிருக்குன்னு தான் சொல்லணும். எனக்கும் உனக்கும் பட்டுவேஷ்டி கிடைச்சுது. எனக்கு நாள் ஒண்ணுக்கு ஐநூறு ரூபாய் குருஜி தர்றதா சொல்லி இருக்காரு.

*எனக்கு கிடைக்கிற மாதிரி உனக்கும் மொத்தமா பணம் கிடைச்சிருக்கு பாரேன்...”*

*மணியைப் பார்த்தான். மணி 8.55. ஐந்து நிமிடங்களில் ருத்ர ஜபம் செய்ய ஐந்து நிமிடங்களில் வந்து விடுவார்கள் என்று நினைத்தவன் கை கால் கழுவிக் கொண்டு வந்து அந்த செக்கை எடுத்து இன்னொரு தடவை மகிழ்ச்சியாகப் பார்த்து விட்டு அந்த செக்கை சிவலிங்கத்தின் அடியில் வைத்து ”எல்லாம் உன் கிட்ட வந்த ராசி” என்று சொல்லி சாஷ்டாங்கமாக வணங்கினான்.*

*கண்களை மூடி வணங்கி எழுந்தவன் கண்களைத் திறந்த போது சிவலிங்கம் திடீர் என்று ஒரு கணம் ஜோதியாய் ஒளிர்ந்தது. மறு கணம் பழைய நிலையிலேயே சிவலிங்கம் இருக்க கணபதிக்கு தான் கண்டது பிரமையா உண்மையா என்கிற சந்தேகம் வந்தது. அவன் உடலில் இன்னும் மயிர்கூச்செறிந்து கொண்டிருந்ததைப் பார்த்த போது பார்த்த காட்சி உண்மை போல இருந்தது. கணபதி திகைப்போடு சிவலிங்கத்தைப் பார்த்தான். குருஜி இதைச் சக்தி வாய்ந்த சிவலிங்கம் என்று சொல்லி இருந்தது நினைவுக்கு வந்தது.*

*அவன் திகைப்பில் இருந்து மீள்வதற்குள் நான்கு வேதபாடசாலை மாணவர்கள் ருத்ர ஜபம் செய்ய வந்து விட்டார்கள்.*

*வந்தவர்கள் முதலில் கதவை மூடிப் பிறகு ஜன்னல்களை எல்லாம் மூடினார்கள். எந்தக் காரணத்தைக் கொண்டும் கணபதி ஜன்னல் வழியாகக் கூட ஈஸ்வரைப் பார்த்து விடக்கூடாது, வெளியேயும் வந்து விடக்கூடாது என்று அவர்களுக்குக் கண்டிப்புடன் சொல்லப்பட்டிருந்தது.*

“ஏன் கதவையும் ஜன்னல்களையும் மூடறீங்க?” கணபதி குழப்பத்துடன் கேட்டான்.

”ருத்ர ஜபம் பண்றப்ப வேற எந்த சத்தமோ தொந்திரவோ வந்துடக் கூடாதுன்னு குருஜி சொல்லி இருக்கார்.”

கணபதி தலையாட்டினான். அவர்கள் பூஜை அறையில் இருந்தே பத்தடி தள்ளி உட்கார மறுபடி குழப்பம் அடைந்த கணபதி சொன்னான். “இது ஏன் இவ்வளவு தள்ளி உட்கார்ந்து ஜபம் செய்யறீங்க. பக்கத்துல வாங்களேன்”

இதற்குப் பதில் உடனடியாக வரவில்லை. சிறிது கழித்து பலவீனமாய் அவர்களில் ஒருவன் சொன்னான். “பரவாயில்லை...”

அவர்கள் ருத்ரஜபம் ஆரம்பிக்க கணபதி சிவலிங்கத்திற்கு அருகில் ஒரு ஸ்தோத்திர புத்தகத்தை எடுத்து கையில் வைத்துக் கொண்டு அமர்ந்து கொண்டான். ஆனால் மனம் ஸ்தோத்திரத்தில் இசையவில்லை. சற்று முன் ஒளிர்ந்த சிவலிங்கம் பற்றியும், இப்போது தள்ளி உட்கார்ந்திருந்து ருத்ர ஜபம் செய்யும் வேதபாடசாலை மாணவர்கள் பற்றியும் மனம் யோசித்தது.

‘இந்த சிவலிங்கத்தின் சக்தி தெரிந்து தான் ஆரம்பத்தில் இருந்தே இவர்கள் தள்ளி பயபக்தியுடன் இருக்கிறார்கள் போலத் தெரிகிறது. இதன் சக்தி தெரியாமல் நான் தான் கொஞ்சம் கூட பயபக்தி இல்லாமல் மரியாதை இல்லாமல் நடந்து கொள்கிறேனோ’

அம்மா தந்தனுப்பிய சீடையை நேற்றும் இன்றும் இறைவன் முன்னாலேயே கொறித்தது நினைவுக்கு வர அவனுக்கு அவமானமாக இருந்தது. மேலும் ஏதோ கிழவி கதைப்பது போல

தினமும் இந்த சிவலிங்கம் முன்னால் உட்கார்ந்து கதைக்கிறோமே இது நியாயமா என்று மனசாட்சி கேட்க அவனுக்குப் பெரியதாக குற்ற உணர்ச்சி பிறந்தது.

சிவனிடம் மனதாரச் சொன்னான். ’சிவனே என்னை மன்னிச்சுடு. எனக்கு படிப்பு மட்டுமல்ல, அறிவும் கிடையாது. எனக்கு தெரிஞ்சதெல்லாம் எங்கம்மா, அக்காங்க, பிள்ளையார் இவங்க நாலு பேர் தான். சின்ன வட்டத்துலயே இருந்துட்டேன். இந்த மரியாதை, சுலோகம், ஜபம் இதெல்லாம் எனக்கு பிடிபட மாட்டேன்குது. இத்தனையும் மீறி நீ எனக்கு இது வரைக்கும் நல்லதே செய்திருக்கிறாய். பெருந்தன்மையாய் இருந்திருக்கிறாய். இனி மேல் நான் உன் கிட்ட ஒழுங்கா நடந்துக்கறேன். இது வரை நடந்துகிட்டதைப் பொறுத்துக்கோ. முக்கியமாய் சீடையை உலகத்தில் முதல் தடவை பார்க்கிற மாதிரி உன் முன்னாலேயே வாயில் போட்டுகிட்ட்து மகா தப்பு தான். ...பக்தியை விட நாக்கு முந்திகிட்டது தப்பு தான் மன்னிச்சுக்கோ. அம்மா சீடையை நல்லா செய்வா. அதான் அப்படி...”

சிவலிங்கத்திடம் கணபதி பேசிக் கொண்டிருக்கையில் ஈஸ்வரின் கார் வேதபாடசாலைக்குள் நுழைந்தது. அவன் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்த குருஜி ஜன்னல் வழியாக மறைவில் நின்று ரகசியமாய் பார்த்துக் கொண்டிருந்தார்.

ஈஸ்வர் காரை விட்டு இறங்கப் போன போது காலடியில் சிவலிங்கம் தெரிய பதறி போய் காலை பின்னுக்கு இழுத்துக் கொண்டான். இத்தனை நாட்கள் அந்தரத்தில் தெரிந்த சிவலிங்கம் இன்று வேதபாடசாலை மண்ணில் அவன் இறங்கப் போகும் இடத்தில் தெரிந்தது அவனுக்குத் திகைப்பாய் இருந்தது. அவன் மறுபடி கீழே பார்த்தான். இப்போது சிவலிங்கம் காட்சி அளிக்கவில்லை.

ஆனாலும் சிவலிங்கம் பார்த்த இடத்தில் காலை வைக்க ஈஸ்வருக்கு ஒரு மாதிரியாக இருந்தது. ஒரு கணம் யோசித்தவன் குனிந்து அந்த மண்ணைத் தொட்டு வணங்கி விட்டு இறங்கினான்.

# அத்தியாயம் - 47

ஈஸ்வர் காரில் இருந்து இறங்கியவுடன் சுற்றிலும் பார்த்தான். மிக விஸ்தாரமான இடம். சில வகுப்பறைகளில் இருந்து வேதகோஷம் கேட்டது.

சற்று முன் கேட்டைத் திறந்த வாட்ச்மேன் "அது தான் சார் ஆபிஸ் ரூம்" என்று கை காட்டி விட்டுப் போனான். ஈஸ்வர் அங்கு உள்ளே போய் வேதபாடசாலை நிர்வாகியிடம் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். அவன் பெயரைக் கேட்டவுடன் அவர் எழுந்து நின்று அவனை வரவேற்றார். அவருக்குக் கிட்டத்தட்ட அறுபது வயதிருக்கும். அவர் நெற்றியில் திருநீற்றுப் பட்டை இருந்தது. குடுமி வைத்திருந்தார். முடியெல்லாம் பாதி நரைத்திருந்தது. தன்னை சிவராம ஐயர் என்று அறிமுகப்படுத்திக் கொண்ட அவர் குரலில் ஏனோ படபடப்பு தெரிந்தது.

அவரே அவனை அழைத்துக் கொண்டு வேதபாடசாலையைச் சுற்றிக் காட்டினார். வகுப்பறைகள் மிக சுத்தமாக இருந்தன. வகுப்பறைகளை அவர்கள் கடந்த போது மாணவர்கள் அவர்களை வேடிக்கை பார்த்தார்கள். மாணவர்கள் தங்கும் இடங்கள், ஆசிரியர் தங்கும் இடங்கள் எல்லாம் தனித்தனியாக வசதியாக இருந்தன. பெரிய நூலகம் இருந்தது. பத்தாயிரத்திற்கும் மேல் புத்தகங்கள் இருப்பதாக அவர் பெருமையுடன் சொன்னார்.

*சற்று தள்ளி இருந்த ஒரு வீட்டைக் காண்பித்து குருஜி வருடம் ஒரு முறை வந்து அங்கு தான் தங்குவார் என்று சொன்னார். இப்போதும் குருஜி அங்கு தான் இருக்கிறார் என்று சொன்னார். ஈஸ்வர் தலையாட்டினான். நூலகத்தைத் தாண்டி நிறைய துளசிச்செடிகள், பூச்செடிகள், மரங்கள் கொண்ட தோட்டம் இருந்தது. எல்லாவற்றையும் தாண்டி ஒதுக்குப் புறமாக ஒரு பெரிய வீடு இருப்பதைக் காட்டி ஈஸ்வர் கேட்டான். ”அது என்ன?”*

*சிவராம ஐயர் அவசர அவசரமாகச் சொன்னார். “அங்கு தட்டுமுட்டுச் சாமான் எல்லாம் போட்டு வைத்திருக்கிறோம். அங்கே யாரும் இல்லை....”*

*ஈஸ்வர் தலையாட்டினான். அந்த கட்டிடத்திற்கு வெளியே இரண்டு பேர் மர வேலைகளில் ஈடுபட்டிருந்ததைப் பார்த்தான். ஈஸ்வர் ஒரு நிமிடம் நின்று அந்த ஒதுக்குப் புறக் கட்டிடத்தையே பார்க்க சிவராம ஐயருக்கு வயிற்றைக் கலக்கியது. நல்ல வேளையாக ஈஸ்வர் அவர் பக்கம் திரும்பிப் பார்க்காததால் அதைக் கவனிக்கவில்லை.*

*ஒரு ஆள் குருஜி தங்கியிருந்த வீட்டின் வாசலில் இருந்து சிவராம ஐயருக்கு சைகை காண்பித்தான். சிவராம ஐயர் ஈஸ்வரிடம் சொன்னார். “உங்களுக்கு குருஜியைப் பார்க்க விருப்பம் இருந்தால் இப்போது அவரைப் பார்த்துப் பேசலாம்....”*

*ஈஸ்வர் ஆவலுடன் குருஜியைச் சந்திக்கச் சென்றான். வாசல் வரை அவனை அழைத்துச் சென்ற சிவராம ஐயர் நிம்மதியாக அவனிடம் இருந்து விடை பெற்றார்.*

குருஜி ஈஸ்வர் வந்திறங்கிய கணத்தில் இருந்து பார்வை எட்டிய தூரத்தில் அவன் இருக்கும் போதெல்லாம் அவனையே தான் ரகசியமாய் கண்காணித்து வந்தார். அவன் இறங்கியவுடன் செய்த முதல் காரியமே அவரைத் திகைப்பில் ஆழ்த்தியது. மண்ணைத் தொட்டுக் கும்பிட்டு விட்டு அவன் இறங்கக் காரணம் அவருக்குப் புரியவில்லை. அமெரிக்காவில் பிறந்து அமெரிக்காவிலேயே வளர்ந்த அவன் கோயில் மண்ணைத் தொட்டுக் கும்பிட்டாலே அது ஆச்சரியப்பட வேண்டிய விஷயம் தான். அப்படி இருக்கையில் அவன் இங்கு வந்தவுடன் தொட்டுக் கும்பிடக் காரணம் வேதங்கள் சொல்லித் தரப்படும் இடம் என்பதாலா இல்லை.... அதற்கு மேற்பட்ட காரணத்தை அவரால் நினைக்க முடியவில்லை. முக்கியமாய் சிவலிங்கம் இங்கு இருப்பதை அவன் உணர்ந்து செய்திருக்கக் காரணமே இல்லை.. அவருடைய குருநாதரான சித்தர் சித்து விளையாட்டு ஏதேனும் செய்திருந்தால் ஒழிய.....

ஈஸ்வரைச் சுற்றி ஏதாவது ஒளிவட்டம் தெரிகிறதா என்று குருஜி பார்த்தார். எதுவும் தெரியவில்லை. அப்படி இருந்திருந்தாலும் அவருக்குத் தற்போது தெரிய வாய்ப்பில்லை. கணபதியைச் சுற்றி பார்க்க முடிந்தவரை தாக்குப் பிடித்த அந்த சக்தி அப்படியே வடிந்து விட்டது. மூன்று நாட்கள் தவமிருப்பது போல் இருந்து பெற்ற அந்த கூர்சக்தி யதார்த்த வாழ்க்கைக்கு வந்தவுடன் காணாமல் போய் விட்டது.... அதை அவர் பெரியதாக நினைக்கவில்லை. நினைக்க இப்போது எத்தனையோ முக்கிய விஷயங்கள் இருக்கின்றன!

சிவலிங்கம் இருக்கும் கட்டிடத்தை ஈஸ்வர் ஒரு நிமிடம் பார்த்து நின்றது வேறு அவருக்கு பெரும் பதட்டத்தை ஏற்படுத்தியது. கணபதி எந்தக் காரணத்தைக் கொண்டும் வெளியே வந்து விடாமல் இருக்க அவர் ஆட்களை ஏற்பாடு செய்திருந்தாலும்

கூட ஈஸ்வர் அவரைச் சந்திக்க வரும் வரை பதட்டம் அவரை விட்டு விலகவில்லை.

”வணக்கம் குருஜி” என்று கைகூப்பி வணங்கிய ஈஸ்வர் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். “நான் ஈஸ்வர். அமெரிக்காவில் விர்ஜினியா யூனிவர்சிட்டியில் சைக்காலஜி டிபார்ட்மெண்டில் இருக்கிறேன். இங்கே அப்பாவின் பூர்விக வீடு இருக்கிறது. ஒரு மாச லீவில் வந்திருக்கிறேன். அமெரிக்காவில் இருக்கும் என் நண்பன் ஒருத்தன் உங்கள் வேத பாடசாலைக்கு அடிக்கடி பணம் அனுப்புகிறவன். முடிந்தால் ஒரு தடவை பார்த்து விட்டு வரச் சொன்னான். அதனால் தான் வந்தேன். போனஸாக உங்களைப் பார்க்க சந்தர்ப்பம் கிடைத்ததில் சந்தோஷம்....”

குருஜி புன்னகையுடன் அவனை உட்காரச் சொன்னார். “உங்களைப் பார்த்ததில் எனக்கும் சந்தோஷம். வெளிநாட்டுக்குப் போனவுடனேயே தாய்நாட்டு சம்பந்தங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் அறுந்து போகிறது. ஆனால் அப்படி இல்லாமல் இன்னும் தாய்நாட்டு மண் மேல் அக்கறை இருந்து அதிலும் இது மாதிரி வேதம், ஆன்மிகம் மேல் ஆர்வம் இருந்து, முடிந்த பண உதவி செய்யும் உங்கள் நண்பர் மாதிரி ஆட்கள் பாராட்டப்பட வேண்டியவர்கள். இங்கே உங்கள் பூர்விக வீடு எங்கே இருக்கிறது? இங்கே யார் இருக்கிறார்கள்” அவர் அறியாதது போலக் கேட்டார்.

ஈஸ்வருக்கு பரமேஸ்வரனைப் பற்றிச் சொல்ல வேண்டி வந்தது.

குருஜி ஆச்சரியம் காட்டினார். “ஓ அவர் பேரனா நீங்கள்? சமீபத்தில் கூட அவர் அண்ணா கொலை செய்யப்பட்டு சிவலிங்கம் ஒன்று திருட்டுப் போனதாகக் கேள்விப்பட்டேன்....”

ஈஸ்வர் ஆமென்று தலையசைத்தானே ஒழிய அதைப் பற்றி எதுவும் சொல்லப் போகவில்லை. அவனாக அதைப் பற்றி ஏதாவது பேசுவான் என்று குருஜி எதிர்பார்த்தது நடக்கவில்லை.

தயவு செய்து பன்மையில் அழைக்காதீர்கள், ஒருமையிலேயே அழையுங்கள் என்று சொன்ன ஈஸ்வர் பிறகு அவர் எழுத்துக்களை புத்தகங்களில் படித்திருப்பதைச் சொன்னான். அவர் பேச்சுக்களை யூட்யூபில் கேட்டிருப்பதைச் சொன்னான். பதஞ்சலியின் யோகசூத்திரங்கள் பற்றி அவர் பேசிய தொடர் உரைகள் தன்னை நிறைய சிந்திக்க வைத்தது என்று சொன்னான்.

அவன் பேச்சில் ஒன்றை குருஜி கவனித்தார். அவன் புகழ்ச்சியாகப் பேசிய போதும் தேவை இல்லாமல் அபரிமிதமாகப் புகழ்ந்து விடவில்லை. பலரும் அவரைக் கண்டு பேசச் சந்தர்ப்பம் கிடைத்த மகிழ்ச்சியில் ஆஹா ஓஹோ என்று புகழ்வார்கள். புளங்காகிதம் அடைந்து பேசுவார்கள். உங்களைப் பார்த்தது நான் செய்த பெரும் பேறு என்பது போலப் பேசுவார்கள். ஈஸ்வர் வித்தியாசப்பட்டான்.

அவர்கள் பேச்சு ஆன்மிகம் பக்கம் நகர்ந்தது. குருஜி மிக அருமையாகத் தன் கருத்துக்களைச் சொன்னார். நிறைய புனித நூல்களில் இருந்து உவமைகளை சிறிய சொல் கூட மாறாமல் சொன்னார். வரலாற்று உதாரணங்களைச் சொன்னார். ஈஸ்வரால் பிரமிக்காமல் இருக்க முடியவில்லை. மனிதரா இவர் இல்லை என்சைக்ளோபீடியாவா?.....

குருஜி விர்ஜினியா பல்கலைக்கழகத்தில் அவன் உளவியல் துறையில் என்னவாக இருக்கிறான் என்று விசாரித்தார். ஈஸ்வர் உதவிப் பேராசிரியராக இருப்பதாக மட்டும் ஈஸ்வர் சொன்னானே ஒழிய உலகப் புகழ்பெற்ற மனோதத்துவக் கட்டுரைகளைத்

தந்திருப்பதாகவோ, தன் துறையில் தான் பெரியவன் என்றோ சுற்றி வளைத்துக் கூடச் சொல்லவில்லை. தன்னைப் பற்றியும் அவன் அதிகமாகப் புகழ்ந்து விடவில்லை. சிலர் அடுத்தவரைப் புகழ்வது என்றால் கஞ்சத்தனமாக இருப்பார்கள். ஆனால் தங்களை வியந்து கொள்வதில் அவர்களுக்குச் சலிப்பிருக்காது. ஈஸ்வர் இதிலும் மற்றவர்களிடம் இருந்து வித்தியாசப்பட்டான்.

இந்த வயதில் இந்த மன முதிர்ச்சி அபூர்வம் என்று குருஜி நினைத்தார்.

ஈஸ்வர் அடுத்ததாக ஆர்வத்துடன் அவர் இளமைக்காலத்தின் இமயமலை அனுபவங்களைப் பற்றிக் கேட்டான். குறிப்பாக சித்தர்களுடனான அவர் அனுபவங்களைக் கேட்டான்.

குருஜிக்கு பேச்சு தர்மசங்கடமான விஷயங்களை நோக்கித் திரும்புவது போலத் தோன்றியது. ஆனால் வேறு வழியில்லாமல் அவர் குருநாதர் தவிர மற்ற சித்தர்களைப் பற்றிப் பேசினார்.

“அதெல்லாம் மறக்க முடியாத அனுபவங்கள் ஈஸ்வர். ஒரு சித்தருடன் நான் ஆறேழு மாதம் கூட இருந்திருப்பேன். அவர் ஒரு வார்த்தை கூட வாய் திறந்து பேசினதில்லை. அவர் ஊமையோ என்று கூட எனக்கு சந்தேகமாக இருந்தது. ஆனால் அவர் ஊமையல்ல. அவசியம் இல்லாமல் பேசுவது வீண் என்று நினைக்கிற ரகம் அவர். அவ்வளவு தான். இன்னொரு சித்தர் இமயமலையில் மார்கழியில் கூட வெறும் கோவணத்தோடு தான் சுற்றிக் கொண்டிருப்பார். நமக்கெல்லாம் எத்தனை துணிகள் உடம்பில் சுற்றிக் கொண்டாலும் உடம்பு வெட வெடவென்று நடுங்கும். அவருக்கு அந்தப் பிரச்சினையே இல்லை..... பொதுவாக அவர்கள் மக்களோட கவனத்தைக் கவர விரும்புவதில்லை... மக்கள் கவனம் ஒரு தொந்திரவாகக் கூட அவர்கள் நினைக்கிறதுண்டு.... அதனாலேயே

நகரங்களுக்கு அபூர்வமாய் போனாலும் ஏதோ ஒரு பாமரன் மாதிரி தான் தென்படுவார்கள். சில நேரங்கள்ல பொது இடங்களில் இருந்தால் கூட மற்றவர்கள் கண்ணுக்குத் தென்படாமலேயே இருந்துடறதும் உண்டு...”

”கண்கள் தீ மாதிரி ஜொலிக்கிற சித்தர் யாரையாவது நீங்கள் இதுவரைக்கும் பார்த்திருக்கிறீர்களா குருஜி”

குருஜி ஒரு கணம் அப்படியே உறைந்து போனார். இந்த நேரடிக் கேள்வியை அவனிடமிருந்து அவர் எதிர்பார்த்திருக்கவில்லை. அவர் தன்னை சமாளிக்க அரை நிமிடம் தேவைப்பட்டது.

தன் கேள்வி அவரை அதிர்ச்சி அடையச் செய்து விட்டது என்று ஈஸ்வருக்குப் புரிந்தது. ஒரு கேள்விக்கு நேரம் கழித்து வரும் பதில் கூட பல உண்மைகள் சொல்லும் என்பதை உளவியலில் கரை கண்ட அவன் அறிவான். பல நேரங்களில் அப்புறமாக வரும் பதிலை விட அதற்கு முன் வரும் மௌனம் நிறைய விஷயங்களை உணர்த்தி விடும்... தெரியும் அல்லது தெரியாது என்று சொல்வதற்கு ஏன் இந்த அதிர்ச்சி?

யோசிப்பது போல பாவனை செய்த குருஜி சாதுர்யமாகப் பதில் சொன்னார். “அப்படி ஒரு சித்தரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் பார்த்ததில்லை. நீ ஏன் ஈஸ்வர் கேட்கிறாய்?”

”எங்கள் பெரிய தாத்தாவிடம் அந்த சிவலிங்கத்தைக் கொண்டு வந்து கொடுத்த சித்தர் கண்கள் அப்படி அடிக்கடி ஜொலிக்குமாம். கேள்விப்பட்டிருக்கிறேன். நீங்களும் பல சித்தர்களோடு பழகியவர் அல்லவா அதனால் தான் கேட்டேன்...”

*பேச்சு சிவலிங்கம் பற்றி வந்தவுடன் குருஜி அதைப் பிடித்துக் கொண்டார். இவன் வாயில் இருந்து அந்த சிவலிங்கம் பற்றி என்னவெல்லாம் வருகிறது என்று பார்க்க வேண்டும். ”ஈஸ்வர் அந்தக் கொலைகாரனை அனுப்பினதும், சிவலிங்கத்தைத் திருடிகிட்டு போனதும் யார் என்று தெரிந்ததா?..”*

*“இன்னும் தெரியலை குருஜி”*

*”அந்த சிவலிங்கத்தைத் திருடிகிட்டுப் போகற அளவுக்கு அதில் என்ன இருக்கிறது ஈஸ்வர்? அது ஸ்படிக லிங்கம் மரகத லிங்கம் மாதிரியான ரகமா என்ன?”*

*“இல்லை குருஜி. அதை சக்தி வாய்ந்த சிவலிங்கமாக சிலர் நம்பற மாதிரி தெரியுது”*

*குருஜி ஆச்சரியப்படுவது போல நடித்தார். ”சக்தி வாய்ந்த சிவலிங்கமாக இருந்தால் கும்பிட்டு விட்டுப் போகலாமே, ஏன் திருடிக் கொண்டு போக வேண்டும்?”*

*”தங்களிடம் அந்த சிவலிங்கம் இருந்தால் அந்த சக்தியைத் தங்களுக்குச் சாதகமாக பயன்படுத்திக் கொள்ளலாம் என்று சிலர் நினைத்திருக்கலாம்...”*

*“ஆராய்ச்சியாளனாகிய நீ என்ன சொல்கிறாய் ஈஸ்வர் அது சாத்தியமா?”*

ஈஸ்வர் விர்ஜினியா பல்கலைக்கழகத்தில் உளவியல் உதவிப் பேராசிரியர் என்று சொல்லி இருந்தானே ஒழிய ஆராய்ச்சியாளன் என்று குருஜியிடம் சொல்லவே இல்லை. அப்படி இருக்கையில் எப்படி அதைச் சொன்னார் என்ற ஆச்சரியம் ஈஸ்வருக்கு எழுந்தாலும் அவன் காண்பித்துக் கொள்ளாமல், என்ன சொல்வது என்று யோசிப்பது போல் நடித்தான். ஆனால் அவன் மூளை வேகமாய் மற்ற சில விஷயங்களையும் கவனிக்கச் சொன்னது. அவர் பொதுவாக ஆன்மிகம், வரலாறு போன்றவை பற்றிப் பேசும் போது மிக இயல்பாகவே இருந்தாலும் சிவலிங்கம் பற்றிப் பேசும் போது மட்டும் அவர் குரலிலும் கண்களிலும் ஒரு கூடுதல் ஆர்வம் இருந்தது.

அதில் தவறு ஒன்றையும் அவனால் கண்டு பிடிக்க முடியவில்லை. சிலருக்கு சில விஷயங்களை அதிகமாகத் தெரிந்து கொள்ள ஆர்வம் இருக்கும்.... ஈஸ்வருக்கு அந்த ஆர்வத்தின் ஆழத்தைச் சோதித்துப் பார்க்கத் தோன்றியது. அதனால் சொன்னான். ”எனக்கென்னவோ சிவலிங்கத்தின் சக்தியை அப்படி யாரும் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள முடியாது என்று தான் தோன்றுகிறது”

”ஏன் ஈஸ்வர்? இறைவனின் சக்தியோ இயற்கையின் சக்தியோ என்ன பெயர் வைத்துக் கொண்டாலும் சரி அது விருப்பு வெறுப்பு இல்லாதது, அதை யாரும் தங்களுக்கு சாதகமாக பயன்படுத்திக் கொள்ள முடியும் என்று நான் நினைக்கிறேன். உதாரணத்திற்கு மின்சாரத்தை எடுத்துக் கொள்ளேன். யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம். இந்த ஆள் ஸ்விட்ச் போட்டால் தான் எரிவேன் என்று அது பாரபட்சம் காட்டுமா என்ன?”

ஈஸ்வர் சொன்னான். ”அது இறைவன் சக்தியாக மட்டும் இருந்தால் நீங்கள் சொல்வது சரி. அது சித்தர்கள் தங்கள் சக்தியை

எல்லாம் ஆவாகனம் செய்து வணங்கப்பட்ட சிலை என்று சொல்கிறார்கள். அந்த சித்தர்கள் எந்த மாதிரி சக்திகளை எல்லாம் எந்த நோக்கத்திற்காகவெல்லாம் ஆவாகனம் செய்து வைத்திருக்கிறார்கள் என்று யாருக்குத் தெரியும். சித்தர்கள் கூட ஒன்றிரண்டு பேர் அல்ல. பல நூறு வருஷங்களாய் பல விதமான சித்தர்கள் அப்படிச் செய்து வணங்கி இருக்கிறார்கள். கிட்டத்தட்ட இதெல்லாம் கம்ப்யூட்டர் ப்ரோகிராம் மாதிரி. சித்தர்கள் எந்த ப்ரோகிராம் போட்டு வைத்திருக்கிறார்களோ அப்படித் தான் அந்த சிவலிங்கம் இயங்கும் என்று நினைக்கிறேன்...”

குருஜி ஒரு கணம் பேச்சிழந்து போனார். ஆழமாய் யோசித்தால் அவன் சொன்னதில் உண்மை இல்லாமல் இல்லை என்று தோன்றியது. அவன் சொன்னது ஏதோ ஒரு விதத்தில் அவரைப் பாதித்தது போல ஈஸ்வருக்குத் தோன்றியது.

குருஜி சில நொடிகளில் இயல்பு நிலைக்கு மாறினார். “நீ சொல்வதும் சரி தான் ஈஸ்வர். ஆனால் ஒரு கம்ப்யூட்டரை ஒரு ப்ரோகிராம் போட்டு ஒரு விதமாக இயக்க முடியும் என்றால் இன்னொரு ப்ரோகிராம் போட்டு வேறு விதமாகவும் இயக்க முடியும் இல்லையா?”

“முடியும். ஆனால் அந்த சித்தர்கள் போட்ட ப்ரோகிராமைப் புரிந்து கொண்டால் தான் வேறு ப்ரோகிராம் எப்படிப் போடுவது என்று சிந்திக்கக் கூட முடியும். அந்த அளவுக்கு திறமை இருக்கிறவர்கள் கைகளுக்கு அந்த சிவலிங்கம் போயிருந்தால் தான் இந்த வாதம் பொருந்தும்....”

இது பற்றி அதிகமாகப் பேசி விட்டோமோ என்ற சந்தேகம் குருஜிக்கு வந்தது. அவன் வாயில் இருந்து வார்த்தைகளை வரவழைப்பதற்குப் பதிலாக, தானும் பேசிக் கொண்டிருப்பது

*அபாயம் என்று உள்ளுணர்வு எச்சரிக்க குருஜி மெல்ல பேச்சை மாற்றினார்.*

*"நீ சித்தர்கள் யாரையாவது பார்த்திருக்கிறாயா ஈஸ்வர்?"*

*"இல்லை குருஜி. நிறைய சக்தி வாய்ந்த ஆட்களைப் பார்த்திருக்கிறேன். அமெரிக்காவிலும் அது போல ஆட்கள் உண்டு. ஆனால் சித்தர்கள் அந்த சக்திகளையும் கடந்து போகக் கூடியவர்கள் அல்லவா? அப்படிப்பட்ட ஆட்கள் பார்க்கக் கிடைக்கவில்லை."*

*ஜவுளிக்கடையில் பார்த்தது சித்தர் என்று அவனுக்கு விளங்கவில்லையா என்று குருஜிக்கு சந்தேகம் வந்தது. கணபதி சொல்வதை வைத்துப் பார்த்தால் ஒன்று அல்லது இரண்டு நிமிடங்களில் சித்தர் கண் மறைந்து போயிருக்க வேண்டும். ஈஸ்வர் அவரைச் சரியாகப் பார்க்கக் கூட நேரம் இருந்திருக்காது. கணபதியைப் பற்றிப் பேச்சு எடுக்க எந்த முகாந்திரமும் இல்லாததால் குருஜிக்கு அவன் பேச்சை எடுக்க முடியவில்லை. முடிந்திருந்தால் கணபதி பற்றி என்ன நினைக்கிறான் என்பதை அவர் தெரிந்து கொண்டிருப்பார்.*

*குருஜி தன் மற்ற முக்கிய சந்தேகத்தைக் கேட்டார். "ஈஸ்வர் தற்செயலாய் நான் நீ வேதபாடசாலைக்குள் நுழைந்த போது இந்த மண்ணைத் தொட்டுக் கும்பிட்டதைக் கவனித்தேன். என்ன காரணம்?"*

*ஈஸ்வர் இந்தக் கேள்வியை எதிர்பார்க்கவில்லை. ஆனால் சமாளித்தான். "வேதங்கள் சொல்லித் தரப்படும் இடம் என்கிறதால் அப்படிக் கும்பிடத் தோன்றியது..."*

குருஜிக்கு நம்ப முடியவில்லை. இவன் ஆள் செண்டிமெண்ட் ரகமோ, வேதங்கள் மீது ஈடுபாடு உள்ள ரகமோ அல்ல. எதையோ மறைக்கிறான்.... என்னவாக இருக்கும்?

கடிகார முள் ஒன்றரை மணியைக் காட்டியது. குருஜி அவனைச் சீக்கிரம் அனுப்பி விட நினைத்தார். "சரி... ஈஸ்வர்.. உன்னை சந்தித்ததில் ரொம்ப சந்தோஷம்.... உன் நேரத்தை நிறைய எடுத்துக் கொண்டேன் என்று நினைக்கிறேன்..."

ஈஸ்வர் எழுந்தான். "நான் சொல்ல வேண்டியதை நீங்கள் சொல்கிறீர்கள் குருஜி....."

"இன்னும் எத்தனை நாள் இந்தியாவில் இருப்பாய் ஈஸ்வர்?"

"இனி மூன்று வாரம் வரை இருப்பேன் குருஜி. நீங்கள் இந்த வேதபாடசாலையில் எத்தனை நாள் இருப்பீர்கள் குருஜி?"

"நான்.... நான்... நாளைக்குப் போய் விடுவேன்"

"இந்த வேதபாடசாலையில் தங்குகிற சமயம் ஒரு சிறப்புச் சொற்பொழிவு தருவீர்கள் என்று கேள்விப்பட்டேன். இந்த முறை இல்லையா குருஜி"

"இந்த தடவை இல்லை ஈஸ்வர்."

ஈஸ்வர் அவருக்கு நன்றி தெரிவித்து விட்டுக் கிளம்பினான். போகும் போது திடீரென்று ஒரு உண்மை உறைத்தது. அந்த சிவலிங்கம் ஒரு சித்தர் தந்தது என்று மட்டும் தான் ஆரம்பத்தில்

அவன் குருஜியிடம் சொன்னான். பல நூறு வருடங்களாக சித்தர்கள் பூஜித்தது போன்ற தகவல்களை அவன் சொல்லி இருக்கவில்லை. ஆனாலும் கூடக் கடைசியில் அதைச் சொல்லி சித்தர்கள் சக்திகளை எந்த நோக்கத்திற்காக அந்த சிவலிங்கத்தில் ஆவாகனம் செய்திருக்கிறார்களோ என்று அவன் வாய் தவறிச் சொன்ன போது கூட அவர் ஆச்சரியப்பட்டு விடவில்லை. முதல் முறை அறிவதாக இருந்தால் கேட்டிருக்கக் கூடிய கேள்விகள் எதையும் குருஜி கேட்கவில்லை.....

ஈஸ்வர் காரை நெருங்கும் வரை குருஜியின் பார்வை தன் மேல் இருப்பது போலவே அவனுக்கு உள்ளுணர்வு சொல்லியது. காரை நெருங்கியவுடன் திடீர் என்று திரும்பிப் பார்த்தான். ஜன்னல் வழியாக அவனையே பார்த்துக் கொண்டிருந்த குருஜி சடாரென்று ஜன்னலில் இருந்து விலகினார்.

வேதபாடசாலையை விட்டுக் காரில் கிளம்பும் போது ஈஸ்வருக்கு மனதில் மேலும் நிறைய கேள்விகள் இருந்தன.

# அத்தியாயம் - 48

ரிஷிகேசத்திற்கு ஹெலிகாப்டரில் வந்திறங்கிய குருஜியை யாரும் அடையாளம் கண்டுபிடிப்பது சுலபமாக இருக்காது. ஒரு தொப்பியும் கருப்புக் கண்ணாடியும் அணிந்து இருந்தார். தன் வழக்கமான உடைகளில் இருந்தும் மாறி பைஜாமா குர்தா அணிந்திருந்தார். அவருடன் ஒரே ஒரு இளைஞனை மட்டும் அழைத்து வந்திருந்தார்.

ரிஷிகேசத்தில் அவருக்காக ஜீப் தயாராக இருந்தது. அதை அவருடன் வந்த இளைஞனே ஓட்டினான். கருப்புக் கண்ணாடியையும் தொப்பியையும் கழற்றி விட்ட குருஜி அந்த இளைஞனுக்கு மலைப்பாதையில் போகும் வழியைச் சொல்லிக் கொண்டே வந்தார். ஒரு இடத்தில் ஜீப்பை நிறுத்தி ஒற்றையடிப் பாதையில் நடக்க வேண்டி இருந்தது. இளைஞன் அவர் வேகத்திற்கு ஈடு கொடுக்க முடியாமல் கஷ்டப்பட்டான்.

நகரம் மாறி விட்ட போதும் இது போன்ற காட்டு வழிப்பாதைகள் மாறாமல் அப்படியே இருக்கிறது என்று நினைத்துக் கொண்டார். ஒரு காலத்தில் அவர் இமயமலையில் பல இடங்களில் சுற்றி இருக்கிறார். தேடல் நிறைந்த காலங்கள் அவை. அவருக்குப் பலவற்றையும் சொல்லிக் கொடுத்த காலங்கள் அவை. நாளை என்பதைப் பற்றியே யோசிக்காமல் நிகழ்காலத்தில் முழுமையாக சஞ்சரித்த காலங்கள். எத்தனை விதமான மனிதர்கள்.... எத்தனை விதமான பாடங்கள்.....

கிட்டத்தட்ட மூன்று மைல் தூரம் கடந்த பின் அந்த இளைஞனை அங்கேயே ஒரு பாறை மீது உட்கார்ந்திருக்கச் சொன்னார். இளைஞன் உள்ளூர நன்றி தெரிவித்து அங்கே உட்கார்ந்து கொள்ள மேலும் ஒரு பர்லாங் நடந்த குருஜி ஒரு குகையை அடைந்தார். அந்த குகையின் நுழைவாயில் ஒற்றையடிப் பாதையில் வருபவர்களுக்குத் தெரியாதபடி இருந்தது. சில அடிகள் பாதையில் இருந்து வலப்புறம் போய் நின்றால் மட்டுமே குகை இருப்பது தெரியும்.

குருஜி அந்த குகையின் உள்ளே நுழைந்தார். குகையின் உள்ளே இருட்டாக இருந்தது. பைஜாமாவில் இருந்து சிறிய டார்ச் லைட்டை எடுத்து அதன் ஒளியின் உதவியுடன் சிறிது நடந்தார். விசாலமான ஒரு பகுதியில் கிட்டத்தட்ட அவர் வயதை ஒத்த ஒரு முதியவர்

*புலித்தோலின் மீது பத்மாசனத்தில் கண்களை மூடி அமர்ந்திருந்தார். டார்ச் லைட்டை அணைத்த குருஜி அவர் முன்னே அமர்ந்தார்.*

*மறுபடியும் குகையில் இருள் சூழ்ந்தது. பத்து நிமிடங்கள் கழிந்த பின் குரல் கேட்டது. ”வா ராமா”*

*அந்தப் பெயர் வைத்து குருஜியை அழைப்பவர்கள் இன்று ஓரிருவர்கள் தான் இருக்கிறார்கள். குருஜி டார்ச் விளக்கைப் போட்டு சொன்னார். “உன் தியானத்தை நான் கலைத்து விட்டேன் போல் இருக்கிறது. உதயா”*

*”நண்பனை ஞாபகம் வைத்துக் கொண்டு நாற்பது வருஷம் கழித்து வந்திருக்கிறாய். தியானம் கலைந்தால் பரவாயில்லை... வா, வெளியே போய் வெளிச்சத்தில் பேசலாம்.”*

*இருவரும் வெளியே வந்தார்கள். குருஜி தன் நண்பனை அன்புடன் பார்த்தார். மெலிந்த மாநிற தேகம், பரட்டைத் தலை, தீட்சண்யமான கண்கள், நீண்ட தாடி, இடுப்பில் ஒரு காவி வேட்டி எனப் பழைய கோலத்திலேயே இருந்தாலும் வயதான அறிகுறி தேகத்தில் தெரியவே செய்தது.*

*உதயன் ஒரு மர நிழலில் உட்கார்ந்து நண்பனை அருகில் உட்காரச் சொன்னார். குருஜி உட்கார்ந்தார்.*

*”ஒரு நண்பனைப் பார்க்க வேண்டுமென்றால் விசேஷ மானஸ லிங்கம் உன் வாழ்க்கையில் வர வேண்டி இருக்கிறது இல்லையா?”*

*தன் நண்பனைப் பெருமை கலந்த வியப்புடன் குருஜி பார்த்தார். ஒரு மனிதனைப் பார்த்தவுடனேயே அவன் பழைய*

சரித்திரத்தைப் படிக்கிற சக்தி இன்னும் உதயனுக்கு அப்படியே இருக்கிறது.....

குருஜியைப் போலவே உதயனும் பெரும் தேடலுடன் இமய மலைக்கு கேரளாவில் இருந்து வந்தவன். கிட்டத்தட்ட இருவருக்கும் ஒரே வயதும், தீவிர அறிவு வேட்கையும் இருந்தது. குருஜிக்கு ஞானத் தேடலிலும், புனித நூல்களிலும் மிக அதிக நாட்டம் இருந்தது என்றால் அபூர்வ சக்திகளில் மிக அதிக நாட்டம் உதயனுக்கு இருந்தது. சில வருடங்கள் இரண்டு மூன்று குருக்களிடம் சேர்ந்தே இருவரும் இருந்தார்கள். கடைசியாக தீஜுவாலையாக ஒளிர்விடும் கண்களை உடைய சித்தரிடம் இருவரும் ஒன்றாக வந்து சேர்ந்தார்கள்.

அந்த சித்தரின் சொந்தப் பெயர் என்ன என்று யாருக்கும் தெரியாது. அவர் கண்களை வைத்து இமயமலைச்சாரல்களில் அவரை மற்றவர்கள் அக்னி நேத்ர சித்தர் என்றழைத்தார்கள். அவர் தன் பெயரைச் சொன்னதில்லை. பல யோகிகளும், சித்தர்களும் அவரை மிக உயர்ந்த ஸ்தானத்தில் வைத்திருந்தார்கள். அவர் அறியாதது எதுவுமில்லை என்கிற கருத்து எல்லோரிடமும் இருந்தது. உதயனும், குருஜியும் அவரிடம் கற்கப் போன போது அவர் ஒரு மாத காலம் அவர்களைக் கண்டு கொள்ளவே இல்லை. இருவரும் விடாப்பிடியாக அவர் பின்னாலேயே இருந்தார்கள்.

ஒரு நாள் இருவரையும் கூப்பிட்டு அவர் சொன்னார். “உங்கள் இரண்டு பேரையும் பார்த்தால் நான் சொல்வதைக் கடைசி வரை கேட்கிற லட்சணம் தெரியவில்லை. அப்படி இருக்கையில் இங்கே என் பின்னாலேயே இருந்து ஏன் காலத்தை வீணடிக்கிறீர்கள்?”

குருஜி சொன்னார். ”உங்கள் பின்னால் இருக்கும் காலம் வீணடிக்கப்படும் காலம் என்று நாங்கள் நினைக்கவில்லை குருவே.

உங்கள் நிழலில் கூடப் பாடம் கிடைக்கும் என்று வந்திருக்கிறோம் குருவே”

“நான் யாருக்கும் குருவல்ல. நான் மடமோ, ஆசிரமமோ நடத்தவில்லை.” என்ற சொன்ன சித்தர் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை. மறுபடியும் அவர்கள் இருவரையும் கண்டு கொள்ளாமல் இருக்க ஆரம்பித்தார். மேலும் ஒரு மாதம் சென்றது. தன் அபூர்வ சக்தியால் அடிக்கடி சித்தர் காணாமல் போனாலும் போன வேலை முடிந்தவுடன் தன் இருப்பிடத்திற்கே வரும் பழக்கத்தை அவர் வைத்திருந்தார். அவர் அப்படி திரும்பி வரும் போதெல்லாம் அந்த இரண்டு இளைஞர்களும் பொறுமையாக அங்கு இருந்தார்கள்.

பின் ஒரு நாள் அவர்களை மறுபடியும் அழைத்தார். குருஜியிடம் கேட்டார். ”உனக்கு என்ன தெரிந்து கொள்ள வேண்டும்?”

“நிறைய தெரிந்து கொள்ள வேண்டி இருக்கிறது குருவே. எதையென்று சொல்ல?” குருஜி சொன்னார்.

“அதில் முதலில் என்ன தெரிந்து கொள்ள விரும்புகிறாய்?”

குருஜி இரண்டு மூன்று மிக அபூர்வ புத்த மத சூத்திர நூல்களைச் சொன்னார்.

உதயனிடம் சித்தர் கேட்டார். “உனக்கு என்ன தெரிந்து கொள்ள வேண்டும்?”

“அஷ்டமஹா சித்திகள் அறிந்து கொள்ள வேண்டும்?”

*”அறிந்து என்ன செய்யப் போகிறாய்?”*

*“வாழ்ந்து என்ன செய்யப் போகிறேன்?”*

*சித்தர் புன்னகைத்தார். இருவரையும் தன்னிடம் கற்றுக் கொள்ள அனுமதித்தார். இருவரும் வேறு வேறு நேரங்களில் அவரிடம் கற்றார்கள். குருஜி மிகக் கடினமான ஞானப் பொக்கிஷங்களைக் கற்றது அந்தச் சித்தரிடம் தான். எழுத்தில் இல்லாமல் காலம் காலமாய் வாய் வழியாக மட்டுமே அறிந்து கொண்டு வரப்படும் எத்தனையோ விஷயங்களை குருஜி கற்றார். அதே போல உதயனும் அபூர்வ சக்திகளைக் கற்றார். இருவரும் குரு கற்றுத் தந்த தவநிலையில் இருந்து எத்தனையோ உயர்நிலைகளை எட்டினார்கள்.*

*சித்தர் ஒரு நாள் இருவரையும் கேட்டார். “இந்த உலகத்திலேயே மிகப் பெரிய குற்றம் எது தெரியுமா?”*

*இருவரும் தங்களறிவிற்குப் பட்டதைச் சொன்னார்கள். சித்தர் சொன்னார். “சிகரத்தைத் தொடும் திறமை உள்ளவன் சராசரியாக இருந்து சாவது தான் உலகத்திலேயே அவன் செய்யக்கூடிய மிகப் பெரிய குற்றம்.”*

*இரண்டு இளைஞர்களும் அந்த வார்த்தைகளைத் தங்கள் மனதில் செதுக்கி வைத்துக் கொண்டார்கள். இருவரும் அதன் பிறகு சராசரியாக என்றுமே இருந்ததில்லை.*

*சுமார் இரண்டு வருடங்கள் கழித்து ஒரு நாள் இருவரும் காட்டு வழியாகப் போய்க் கொண்டிருந்த போது ஒரு சிங்கம் மிக*

ஆக்ரோஷமாக அவர்களை நோக்கிப் பாய்ந்து வந்தது. தான் கற்றிருந்த சக்தியால் சிங்கத்தை உதயன் ஒரு பார்வை பார்க்க சிங்கம் ஏதோ சுவர் தடுத்தது போலப் பாதியில் அப்படியே நின்றது. பின் திரும்பி ஓடியது. குருஜி அசந்து போனார்.

இருவரும் சித்தரிடம் இந்த சம்பவத்தைச் சொன்ன போது சித்தர் உதயனைப் பாராட்டுவதற்குப் பதிலாகக் கடிந்து கொண்டார். ”நல்ல சுத்தமான சாத்வீக மன அலைகளில் நீங்கள் இருந்திருந்தால் அந்தச் சிங்கம் பாய்ந்தே வந்திருக்காது. தவறான மன அலைகளில் சிங்கத்தை அப்படி வரவழைத்துப் பின் தடுத்து நிறுத்த அபூர்வ சக்தியைச் செலவழிப்பதில் பெருமை என்ன இருக்கிறது?”

அதற்குப் பின் உதயனின் பல பரிசோதனைகள் சித்தரை அதிருப்திப்படுத்த ஒரு நாள் உதயனை அழைத்துச் சொன்னார். “அடிப்படைகள் எல்லாம் உனக்குச் சொல்லித் தந்து விட்டேன். மீதியை நீயே உன் பயற்சியாலும் புத்தியாலும் அடைந்து விடலாம். இனி உனக்கு என்னால் எதுவும் சொல்லித் தர முடியாது. நீ போகலாம். கடைசியாக ஒன்று சொல்கிறேன் நினைவு வைத்துக் கொள். மனிதனாகப் பிறக்கும் வாய்ப்பு மிகப்பெரிய வரப்பிரசாதம். அற்ப விஷயங்களில் அதை வீணாக்கி விடாதே”

இனி அவர் மனம் மாறாது என்பதைப் புரிந்து கொண்ட உதயன் அவரை வணங்கி விட்டுப் போனார். உதயன் போனது குருஜிக்குப் பெரிய இழப்பாகத் தோன்றியது. அடுத்த ஆறு மாதத்தில் சித்தர் அவரையும் அனுப்பி விட்டார். ”இனி நீ என்ன படித்தாலும் ஒரே உண்மையை வேறு வேறு வார்த்தைகளில் படிப்பது போலத் தான். அதனால் நீ போகலாம். கடைசியாக உனக்கு ஒன்று சொல்கிறேன். ஒரு மனிதனை நிர்ணையிப்பது அவனுக்கு என்ன தெரியும் என்பதல்ல, அவன் என்னவாக இருக்கிறான் என்பதே அவனை நிர்ணயிக்கிறது. அதை என்றும் மறந்து விடாதே”....

சொல்லித்தர சித்தரிடம் எவ்வளவோ இருந்தாலும் அரைகுறையாக நிறுத்தி விட்டுத் தங்களை அவர் அனுப்பி விட்டதாகவே நண்பர்கள் இருவரும் எண்ணினார்கள். அதனால் குருவான சித்தரிடம் இருவருக்கும் அதிருப்தி இருந்தது.

குருஜி அங்கிருந்து வந்து விட்ட பிறகு நண்பர்கள் இருவர் பாதைகள் இணையவில்லை. உதயன் மாந்திரிகம், தந்த்ரா என்று எதெதிலோ ஆழமாக இறங்கி அபூர்வ சக்திகள் பல அடைய ஆரம்பித்தார். அடிக்கடி குருஜி தன் நண்பரைச் சென்று பார்ப்பதுண்டு. இமய மலையிலிருந்து ஒரேயடியாக குருஜி இறங்கி விட்ட பிறகு உதயனைச் சந்திக்கவில்லை. உதயன் நிரந்தரமாக ஒரு குகையில் வசித்து வந்ததால் அந்த இருப்பிடம் மட்டும் அவருக்கு நினைவு இருந்தது.....

”உதயா நீ அடைய நினைத்ததை எல்லாம் அடைந்து விட்டாயா?” குருஜி தன் நண்பனைக் கேட்டார்.

“உம்... எத்தனையோ நிலைகளைத் தொட்டு விட்டேன். ஆனாலும் முழுதாக திருப்தி வரவில்லை... ஒரு நிலை அடையும் போது அடுத்த நிலை கண்ணுக்குத் தெரிகிறது... பழையபடி அதைத் தேடி ஒரு பயணம் என்று வாழ்க்கை போகிறது... ராமா நம் சித்தர் குரு என்னை ஆரம்பத்தில் ஒன்று கேட்டாரே ஞாபகம் இருக்கிறதா? ’அஷ்டமஹா சித்திகளை அடைந்து நீ என்ன செய்யப் போகிறாய்’ என்று அவர் கேட்டதற்கு நான் ‘வாழ்ந்து என்ன செய்யப் போகிறேன்’ என்று துடுக்குத் தனமாக கேட்டேன். ஆனால் இன்று அவர் கேட்ட கேள்வி புதிய அர்த்தத்தோடு தினமும் என் மனதில் எழுகிறது”

குருஜி உதயனை ஆச்சரியத்தோடு பார்த்துச் சொன்னார். “தத்துவம் படித்தது நான் என்றாலும் நீ என்னை விடத் தத்துவம் நன்றாகப் பேசுகிறாய்”

உதயன் சிரித்தார். ”வயதும் அனுபவமும் ஒரு மனிதனை அந்த திசையில் பயணம் செய்ய வைத்து விடுகிறது என்று நினைக்கிறேன்..... அபூர்வ சக்திகள் படித்தது நான் என்றாலும் இந்த வயதில் நீ அதில் ஆர்வம் காட்டி விசேஷ மானஸ லிங்கம் பின்னால் போனது தான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது”

குருஜிக்கு அவர் வார்த்தைகளில் இருந்த உண்மை அப்போது தான் உறைத்தது. சிறிது நேரம் மௌனமாக இருந்து மரங்களில் வித விதமான ஒலிகளை எழுப்பிக் கொண்டிருந்த பறவைகளை வேடிக்கை பார்த்தார்.

திடீரென்று உதயன் வாய் விட்டுச் சிரித்தார். குருஜி கேட்டார். “என்ன?”

”நீ நம் குருவின் பாதையிலேயே குறுக்கிடுவாய் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை” உதயன் சிரித்துக் கொண்டே சொன்னார்.

”இதில் அவர் சம்பந்தப்பட்டிருப்பார் என்று எனக்கு எப்படித் தெரியும். அவர் இதைப் பற்றி நம்மிடம் பேசியது கூட இல்லை...”

உதயன் ஏதோ யோசனையில் ஆழந்து போக குருஜி கேட்டார். “என்ன யோசிக்கிறாய்”

“நம் குரு நீ இதில் சம்பந்தப்பட்டிருப்பதைப் பற்றி என்ன நினைப்பார் என்று யோசிக்கிறேன்...”

*“உன் ஞான திருஷ்டியில் அதையும் பார்த்து தான் சொல்லேன்”*

*”நம் குரு மாதிரி சித்தர்களின் எண்ணங்களையும், எதிர்காலத்தையும் சொல்லக் கூடிய அளவு நான் இன்னும் கற்றுக் கொள்ளவில்லை.... இங்க்லீஷில் “Highly Classified-Top Secret” என்று சொல்வார்களே இதெல்லாம் அது போலத் தான். அதை எல்லாம் பார்க்கக் கற்றுக் கொள்ள சாதாரணமான மேல் நிலைகள் போதாது. மாந்திரிகம் பக்கமெல்லாம் போகாமல் இருந்திருந்தால் இதற்குள் அதையும் நான் கற்றிருக்கலாம் என்று தோன்றுகிறது. ஏனென்றால் மாந்திரிகம் எல்லாம் அந்த சக்திக்கு நேர் எதிரானது....”*

*“சரி அதை விடு. அந்த நாள் அந்தக் கொலைகாரன் எப்படி இறந்தான் என்பதைப் பார்த்துச் சொல் பார்க்கலாம்.....”*

*உதயன் குருஜிக்குப் பின்னால் ஒரு வெற்றிடத்தையே சிறிது நேரம் பார்த்து விட்டுச் சொன்னார். ”அவன் சிவலிங்கத்தைப் பார்த்து விட்டு உள்ளே போகிறான்... அது தெரிகிறது..... அந்த பூஜை அறையே ஜெகஜ்ஜோதியாய் தெரிகிறது.... அந்த ஜோதி வெளிச்சத்தில் உள்ளே நடப்பது எதுவும் தெரியவில்லை.... அவன் பீதியுடன் வெளியே ஓடி வருகிறான். யாரோ துரத்துவது போல் ஓடி வருகிறான்... மெயின் கேட் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு திரும்பிப் பார்க்கிறான். அவன் கண்களில் மரண பயம்.... அவனால் மூச்சு விட முடியவில்லை.... நெஞ்சைப் பிடித்துக் கொள்கிறான்..... அப்படியே சாய்கிறான்..... சாகிறான்”*

*குருஜி கேட்டார். “அந்தப் பூஜை அறையில் அவனைப் பயமுறுத்தியது சித்தரா சிவலிங்கமா என்று கூடச் சொல்ல முடியாதா?”*

*”என்னால் ஒளி வெள்ளத்தைத் தவிர வேறு எதையும் பார்க்க முடியவில்லை ராமா”*

*குருஜி ஆழ்ந்த யோசனையுடன் நண்பனைப் பார்க்க, உதயன் குருஜியின் தலைக்கு மேல் வெற்றிடத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். தலைக்கு மேல் டிவி வைத்திருக்கிறது போல் சுவாரசியமாகப் பார்த்துக் கொண்டிருந்த நண்பனை குருஜி கேட்டார். “என்ன பார்க்கிறாய்?”*

*“நீ சிவலிங்கத்திடம் பேசிக் கொண்டிருந்ததைப் பார்க்கிறேன். உன் வாழ்க்கையில் நீ இது வரை செய்த பிரசங்கங்களிலேயே இது சிறப்பானது என்று நான் நினைக்கிறேன் ராமா. ஆனால் இதை உலகம் என்றுமே கேட்கப் போவதில்லை.... என்ன அழகாய் சொன்னாய். ”...மகாசக்தியான உனக்கும் தனிப்பட்ட விருப்பு வெறுப்பு இருக்கப் போவதில்லை. உன் சக்திக்கு இசைவாக அணுகுபவர்கள் எவருக்கும் எதையும் நீயும் மறுக்கப் போவதில்லை. பிரச்சினை உன்னிடம் இருந்து வரப் போவதில்லை. அது எனக்குத் தெரியும். பிரச்சினை சக்திகளால் உண்டாவதில்லை. மனிதர்களால் தான் உண்டாகிறது...” சரி அதை எல்லாம் விடு. நீ உன் நண்பனைப் பார்த்து விட்டுப் போக மட்டும் இத்தனை தூரம் வரை வரவில்லை என்று தெரிகிறது. உனக்கு என்னால் என்ன ஆக வேண்டும்? “*

*குருஜி உடனடியாகப் பதில் சொல்லவில்லை. அபூர்வ சக்திகளைத் தேடியே தன் வாழ்நாளில் பெரும்பகுதியைச் செலவு செய்திருந்த உதயனின் சாதனைகள் சாதாரணமானவை அல்ல என்பதை குருஜி அறிவார். நண்பனை மிக நீண்ட காலம் நேரில் சந்திக்கவில்லையே ஒழிய நண்பனின் புகழ் அவர் காதில் அவ்வப்போது விழுந்து கொண்டு தான் இருந்தது. முக்கியமாக மாந்திரிகத்தில் உதயனுக்கு இணையாக இக்காலத்தில்*

*இன்னொருவர் இல்லை என்று விஷயம் தெரிந்தவர்கள் உறுதியாகச் சொன்னார்கள்....*

*குருஜி மெல்ல சொன்னார். "சீக்கிரமே விசேஷ மானச லிங்கத்தை வைத்து பரிசோதனைகள் ஆரம்பிக்கப் போகிறோம். அதற்கு உன் உதவி கிடைத்தால் நல்லது என்று நினைக்கிறேன்...."*

*உதயன் தன் நண்பனைப் பார்த்து தயக்கமில்லாமல் சொன்னார். "ராமா, அந்த சிவலிங்கத்திடம் என் சக்திகளை நான் வீணாக்க விரும்பவில்லை"*

*ஏமாற்றத்துடன் குருஜி கேட்டார். "ஏன் அப்படிச் சொல்கிறாய் உதயா?"*

*"நீ அந்த சிவலிங்கத்தை நெருங்காமல் தள்ளியே ஏன் இருந்தாயோ அதே காரணத்திற்காகத் தான் நான் மறுக்கிறேன் ராமா. அது இறைசக்தியா, சித்தர்கள் சக்தியா, இரண்டும் சேர்ந்த கலவையா என்றெல்லாம் உன் ஆராய்ச்சிகளுக்குப் பின் தான் தெரியும் என்றாலும் இப்போதைக்கு அது மாபெரும் சக்தியாக இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. அதன் சக்தியின் அளவு கூட இன்னும் நமக்கு விளங்கவில்லை. அதோடு மோத நான் தயாராக இல்லை. வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தில் இருக்கிறேன். இந்தக் கட்டத்தில் ஆழம் தெரியாமல் நான் காலை விட விரும்பவில்லை..."*

*நண்பனின் குரலில் உறுதி இருந்தது. அவரது ஏமாற்றத்தைப் பார்த்த உதயன் மனம் இரங்கியவராகச் சொன்னார். "வேறு ஏதாவது கேள் ராமா. கண்டிப்பாகச் செய்கிறேன்..."*

குருஜி சொன்னார். “எங்கள் ஆராய்ச்சிகள் முடிகிற வரை நம் குரு சிவலிங்கத்தை எந்த விதத்திலும் நெருங்காதபடியும், ஆராய்ச்சியில் ஈடுபடுபவர்கள எந்த விதத்திலும் பாதிக்காதபடியுமாவது ஏதாவது செய்ய வேண்டும் உதயா.”

குருவின் பாதையில் தன்னையும் குறுக்கிடச் சொல்லும் நண்பனை லேசான புன்னகையுடனும் யோசனையுடனும் பார்த்த உதயன் பின் சம்மதித்தார். ’வேறு ஏதாவது கேள், கண்டிப்பாகச் செய்கிறேன்’ என்று கொடுத்த வாக்கைப் பொய்யாக்க அவர் விரும்பவில்லை... குருவைப் பிரிந்த பின் கற்ற வித்தைகளை குருவிடம் காட்ட ஒரு வாய்ப்பும் இதன் மூலம் கிடைத்திருக்கிறது என்று நினைத்த போது அவர் புன்னகை குறும்புச் சிரிப்பாக மாறியது.

# அத்தியாயம் - 49

உதயன் குருஜியைக் கேட்டார். “உங்கள் ஆராய்ச்சிகளை எங்கே நடத்தப் போவதாக உத்தேசம்”

“அதற்காகத் தனியிடம் ஒன்றைத் தேர்ந்தெடுத்து வைத்திருக்கிறோம். அங்கே எல்லா நவீன விஞ்ஞான உபகரணங்களும் பொருத்தி இருக்கிறோம். சிவலிங்கத்தை வைக்கும் அறையில் தகுந்த ஆட்கள் மூலம் பூஜைகள், ஹோமங்கள், ஜபங்கள், பாராயணம் எல்லாம் செய்து தெய்வீக அலைகள் நிறைந்திருக்கும்படி செய்திருக்கிறோம். சிவலிங்கத்தை அங்கே கொண்டு போய் வைக்க ஒரு நல்ல முகூர்த்தம் பார்த்து வைத்திருக்கிறேன்....”

உதயன் சொன்னார். “அந்த சிவலிங்கத்தை அங்கே வைப்பதற்கு முன் அந்தக் கட்டிடத்திற்கு வெளியே நாலா பக்கத்தில்

இருந்தும் சிறிது சிறிது மண்ணை எடுத்து அனுப்பு. நம் குருவோ, அவர் சக்தியோ அந்த எல்லைகளைக் கடந்து உள்ளே போய் விடாதபடி நான் அரண் ஒன்றை அமைத்துத் தருகிறேன். ஆனால் அந்த அரண் 21 நாட்கள் தான் வலிமையோடு இருக்கும். அதற்கு மேல் நான் ஒன்றும் செய்ய முடியாது....”

குருஜி நிம்மதிப் பெருமூச்சு விட்டு நன்றியுடன் சொன்னார். “அது போதும் உதயா.”

உதயன் எப்போதுமே முடிந்ததை மட்டும் தான் செய்ய ஒத்துக் கொள்வார். சிவலிங்க ஆராய்ச்சியில் நேரடியாகப் பங்கு கொள்ள முடியாது என்று ஆரம்பத்திலேயே மறுத்து விட்டதைப் போல, செய்ய முடியாததை ’முடியாது’ என்று வாய் விட்டுச் bசொல்லி ஒதுங்கி விடும் நல்ல பழக்கம் உதயனிடம் இருந்தது. அதனால் உதயன் ஒன்றைச் செய்ய ஒத்துக் கொண்டால் அது பற்றி யாரும் மேற்கொண்டு கவலைப்பட அவசியமில்லை. குருஜிக்கு பாதி ஜெயித்து விட்டது போல் ஒரு பிரமை...!

“அந்த சிவலிங்கத்திற்கு நித்திய பூஜை செய்ய கணபதியையே இப்போதைக்கு வைத்துக் கொள்கிறாயா என்ன?” குருஜியின் தலைக்கு மேல் வெற்றிடத்தைப் பார்த்தபடியே உதயன் கேட்டார். கேட்டவர் முகத்தில் புன்னகை மலர்ந்தது.

“ஆமாம்” என்ற குருஜி ”ஏன் சிரிக்கிறாய்” என்று நண்பனைக் கேட்டார்.

”சீடை மேல் இருக்கும் ஆசை, சிவலிங்கத்தின் மேல் இருக்கும் பக்தியை முந்திக் கொண்டதற்கு அவன் வருத்தப்படுவதைப் பார்த்தேன். இன்னமும் இந்த உலகத்தில் இப்படி பரிசுத்தமாய்

ஒருவனால் இருக்க முடிகிறது என்பதே ஆச்சரியமாகத் தான் இருக்கிறது”

இன்னமும் ரகசியக் காமிரா சீடை சமாச்சாரத்தைப் பிடித்த படத்தை பார்த்திராத குருஜி நண்பனிடம் அந்தக் காட்சியை விளக்கச் சொல்லிக் கேட்டுப் புன்னகைத்தார். குருஜிக்கு முதலில் கணபதியை ஆராய்ச்சிக்குப் பயன்படுத்தும் எண்ணம் பெரிதாக இருக்கவில்லை. ஆனால் இப்போது அவனையும் பயன்படுத்தினால் என்ன என்று தோன்ற ஆரம்பித்து விட்டது. அவனுக்கும் அந்தச் சிவலிங்கத்திற்கும் நல்ல இணக்கம் இருக்கிறது....

குருஜி நண்பனிடம் கேட்டார். “உதயா எங்கள் ஆராய்ச்சிகள் எப்படி இருக்கும் என்று நினைக்கிறாய்?”

வெற்றி பெறும் அல்லது வெற்றி பெறாது என்பதைச் சொல்லாமல் உதயன் சொன்னார். “சுவாரசியமாக இருக்கும் என்று நினைக்கிறேன்”

உதயன் சுவாரசியத்தோடு நிறுத்திக் கொண்டது குருஜிக்கு சற்று ஏமாற்றமாகத் தான் இருந்தது. குருஜி சொன்னார். ”ஜான்சன் இது போன்ற ஆராய்ச்சிகளில் தலைசிறந்த நிபுணர்களில் ஒருவர்.... உலகப் புகழ் பெற்றவர்.. அனுபவம் உள்ளவர்....”

உதயன் இடைமறித்தார். ”அவருக்கு அறிவும் அனுபவமும் இருக்கலாம். ஆனால் அவர் இந்த மண்ணைச் சேர்ந்தவர் இல்லை. சித்தர்களையோ, சிவலிங்கத்தையோ மானசீகமாய் உணரக் கூடிய சக்தி இருக்கிறதா என்பது யோசிக்க வேண்டிய விஷயம்... ஜான்சனுக்குப் பதிலாக ஈஸ்வர் ஆராய்ச்சியில் இறங்குவதாக இருந்தால் நன்றாக இருந்திருக்கும். ஜான்சனுக்கு இருக்கும் அறிவு,

அனுபவம் இவனுக்கும் இருக்கிறது. அதோடு சேர்ந்து அவன் உடம்பில் இந்த தேசத்தின் ரத்தம் ஓடுகிறது.... பிறந்து வளர்ந்தது அன்னிய தேசம் ஆனாலும் குணத்தில் இவன் இந்தியன் தான். அதனால் தான் சிவலிங்கத்தை இவனிடம் ஒப்படைக்க பசுபதி சொல்லி இருக்கிறார்...”

குருஜிக்கு அவன் வேதபாடசாலை மண்ணைத் தொட்டு வணங்கியது நினைவுக்கு வந்தது. ஈஸ்வர் எதிரணியில் இருப்பதை அவராலும் ரசிக்க முடியவில்லை தான். ஆனால் என்ன செய்வது....!

குருஜி பெருமூச்சு விட்டார். உதயன் நண்பனைக் கேட்டார். “ராமா, நீ இதில் ஈடுபடுவதென்று முழு மனதோடு தானே தீர்மானித்திருக்கிறாய். மாற்றம் எதுவும் இல்லையே”

”இனி மாற்ற முடியாது உதயா. புலி மீது சவாரியை நான் ஆரம்பித்து விட்டேன். இனி இடையில் இறங்க முடியாது.....” குருஜி தன் நிலையை வெளிப்படையாகச் சொன்னார்.

உதயன் நண்பனை மிகுந்த அன்புடன் பார்த்துச் சொன்னார். ”நான் வாக்குறுதி தந்தது போல் நம் குரு உன் ஆராய்ச்சிகளையோ, சிவலிங்கத்தையோ நெருங்காமல் பார்த்துக் கொள்கிறேன். ஆனால் அதோடு பிரச்சினைகள் தீர்ந்து விடும் என்று நினைத்து விடாதே. நீ ஜாக்கிரதையாகவே இருக்க வேண்டும் ராமா. புலி மேல் சவாரி சௌகரியமாக இருக்காது...”

”அது தெரிந்தே தான் நான் இதில் இறங்கி இருக்கிறேன் ராமா.. சுலபமானதில் ஜெயிப்பதில் என்ன பெருமை இருக்கிறது?”

தன் நண்பன் பாபுஜி, மற்றும் மற்ற ஆறு வெளிநாட்டு ஆட்கள் பற்றித் தானாகச் சொல்வாரா என்று பொறுத்திருந்து பார்த்த உதயன் இனி அது அவர் வாயிலிருந்து வரப் போவதில்லை என்பதைப் புரிந்து கொண்டார். என்ன தான் நண்பனானாலும் தேவைக்கு மேல் ஏன் தெரிவிக்க வேண்டும் என்று குருஜி நினைத்தது அவருக்கு வருத்தம் ஏற்படுத்தவில்லை. அந்தக் காலத்தில் இருந்தே சில விஷயங்களில் ரகசியமாக இருப்பது குருஜிக்கு இயல்பாக இருந்திருக்கிறது....

ஆனாலும் உதயன் தன் நண்பனை மிகவும் நேசித்தார். இந்த இமயமலையில் ஒன்றாகச் சேர்ந்து சுற்றிய நாட்கள், தேடிய தேடல்கள் எல்லாம் சுலபத்தில் மறக்கக் கூடியவை அல்ல. அவர் நேசித்த ஆட்கள் வேறு யாரும் இப்போது உயிரோடு இல்லை. நண்பன் செய்வது சரியா தப்பா என்று அவர் கவலைப் படவில்லை. அவர் நீதிபதி அல்ல, நண்பர்.... ஒரு நண்பனால் நேசிக்க மட்டுமே முடியும்....

உதயன் குருஜியிடம் ஆராய்ச்சி நடத்த இருக்கும் இடம், சிவலிங்கம் கொண்டு போய் பிரதிஷ்டை செய்யும் நாள், நேரம், ஆராய்ச்சிகள் ஆரம்பிக்கப் போகும் நாள், நேரம் பற்றிய விவரம் எல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டார். என்ன செய்ய வேண்டும், எப்படி எப்போது செய்ய வேண்டும் என்றெல்லாம் யோசித்து முடிவு செய்து கொண்டு விட்டு கடைசியில் உதயன் எழுந்து தன் நண்பனை அணைத்துக் கொண்டார். “ராமா, இனியொரு தடவை நாம் இருவரும் சந்திப்போமா என்பது நிச்சயமில்லை.... இது நம் கடைசி சந்திப்பாகக் கூட இருக்கலாம். இன்றாவது உன்னைச் சந்திக்க முடிந்ததில் மகிழ்ச்சி...”

குருஜிக்கு கண்கள் லேசாகக் கலங்கின. கடைசி சந்திப்பாகக் கூட இருக்கலாம் என்று நண்பன் சொன்னது அவர் மனதை

என்னவோ செய்தது. அணைத்துக் கொண்ட நண்பனிடம் எத்தனையோ சொல்ல நினைத்தாலும் அவரால் எதுவும் சொல்ல முடியவில்லை....

சில நிமிடங்கள் கழித்து நண்பர்கள் பிரிந்தார்கள்.

**************

பார்த்தசாரதி தென்னரசு வீட்டை சொன்ன நேரத்திற்குக் கால் மணி நேரம் முன்னதாகவே போய் சேர்ந்தார். விஷாலியை ஏதோ ஒரு வேலை கொடுத்து முன்பே அனுப்பி விட்டிருந்ததால் வீட்டில் தென்னரசு தனியாகத் தான் இருந்தார். பார்த்தசாரதியை மிகுந்த மரியாதையோடு தென்னரசு வரவேற்றார். தென்னரசுவின் உத்தியோகம் மற்றும் குடும்பம் பற்றி முதலில் விசாரித்துத் தெரிந்து கொண்ட பார்த்தசாரதி பரமேஸ்வரனின் குடும்பத்திற்கும், தென்னரசுவிற்கும் இடையே எப்படி தொடர்பு என்ற கேள்வியுடன் ஆரம்பித்தார்.

தென்னரசு சொன்னார். “பரமேஸ்வரனோட மகன் சங்கரும் நானும் சின்ன வயதில் இருந்தே ஒன்றாகப் படித்தவர்கள். நெருங்கிய நண்பர்கள். கல்லூரி வரை ஒன்றாகவே படித்தோம். பரமேஸ்வரன் மகள் மீனாட்சி கணவன் விஸ்வநாதனும் கல்லூரியில் எங்களுடன் படித்த நண்பன்...”

”சின்ன வயதில் பரமேஸ்வரன் வீட்டுக்கு அடிக்கடி போவீர்களா?”

”போவேன். சங்கரும் என் வீட்டுக்கு வருவான். ஆனால் நான் அவர்கள் வீட்டுக்குப் போனது தான் அதிகம். காரணம் அவன் வீடு பெரிசு. விளையாட நிறைய இடம் இருக்கும்....”

*”சங்கரைப் பற்றி சொல்லுங்களேன்...”*

*“ரொம்ப நல்லவன்... பணமும், அறிவும் எக்கச்சக்கமாய் இருந்தும் அடக்கமாகவும், நல்லவனாகவும் இருக்க முடிவது சாதாரண விஷயம் இல்லை. ஆனால் அவன் இருந்தான். ஒரு தடவை கூட அவன் வேறு மாதிரியாக இருந்ததை நான் பார்க்கலை...”*

*”அந்த வீட்டில் மற்றவர்கள் உங்களிடம் எப்படி இருப்பார்கள்?”*

*”சங்கர் இங்கே இருந்த வரை பரமேஸ்வரன் என்னிடமும் பிரியமாய் இருப்பார். சங்கரோட பாட்டி ஆனந்தவல்லி அப்படி இருக்க மாட்டாங்க. நான் ஒரு சாதாரண குடும்பத்துப் பையன்கிறது தான் அதற்கு காரணம்னு நினைக்கிறேன்... அவங்க பார்க்கிறதே நாலு அடி தள்ளி நிற்க வைக்கும்.....”*

*பார்த்தசாரதிக்கு அவர் சொல்ல வந்தது புரிந்தது. கிழவி அந்தக் காலத்தில் இருந்தே அப்படித்தானா?*

*பார்த்தசாரதி கேட்டார். “மீனாட்சி?”*

*”மீனாட்சியும் நல்ல மாதிரி... கர்வம் சுத்தமாய் கிடையாது”*

*”சங்கர் இருந்த வரை பரமேஸ்வரன் உங்க கிட்ட பிரியமாய் இருந்தார்னு சொன்னீங்க. சங்கர் போனதுக்கப்புறம்?”*

*”என் கிட்ட பேசறதையும், பழகறதையும் அவர் கூடுமான வரை தவிர்த்தார். என்னைப் பார்க்கறப்ப எல்லாம் அவருக்கு மகன்*

ஞாபகம் வந்திருக்கலாம்... அதனால நானும் அவர் வீட்டுக்குப் போகிறதை அதிகமாய் தவிர்த்து விட்டேன். மீனாட்சி கணவன் விஸ்வநாதன் கூட என் நண்பன் தான்னாலும் கூட நான் அங்கே போகிறது இப்பவெல்லாம் அபூர்வமே..."

"சங்கர் அமெரிக்கா போனதுக்கப்புறமும் உங்க கூட தொடர்பில் இருந்தாரா?"

"ஆமாம்.. மாசத்துல ஒரு தடவையாவது பேசிக்காமல் இருக்க மாட்டோம்..."

"அவர் மகன் ஈஸ்வர் கிட்டயும் பேசுவீங்களா?"

"அதிகமாய் இல்லை. ஒண்ணு ரெண்டு வார்த்தை பேசுவோம்...."

"இந்தியா வந்ததற்குப் பிறகு ஈஸ்வரைச் சந்திச்சீங்களா?"

"ஆமா. ஈஸ்வர் ஒரு தடவை இங்கே வீட்டுக்கு வந்திருந்தான்...."

"சங்கரோட பெரியப்பா பசுபதியை நீங்கள் சந்திச்சிருக்கீங்களா....?"

தென்னரசு கூடுமான வரை அமைதியாய் பதில் சொல்ல முயன்று அதில் வெற்றியும் கண்டார். "சின்னவனாய் இருக்கிறப்ப அவர் இருக்கிற தோட்ட வீட்டுக்கு சங்கரோட சேர்ந்து போயிருக்கேன்.... அப்ப பார்த்தது...."

*”உங்க கிட்ட அவர் பேசி இருக்காரா?”*

*“அவர் சங்கர் கிட்டயே அதிகமாய் பேசி நான் பார்த்ததில்லை... எப்பவுமே அவர் ஒரு தனி உலகத்தில் இருக்கிற மாதிரி இருக்கும்....”*

*“சங்கரும், நீங்களும் தோட்ட வீட்டுக்குப் போய் என்ன செய்வீங்க?”*

*“தோட்டத்தில் விளையாடுவோம். மாமரம், நெல்லிக்காய் மரமெல்லாம் அங்கே இருக்கு. மாங்காய், நெல்லிக்காய் எல்லாம் பறிச்சு சாப்பிடுவோம்..”*

*“தோட்டத்தில் மட்டும் விளையாடுவீங்களா. இல்லை வீட்டுக்குள்ளேயும் போய் விளையாடுவீங்களா?”*

*சிறு தயக்கத்திற்குப் பின் தென்னரசு சொன்னார். “வீட்டுக்குள்ளேயும் போய் விளையாடுவோம்....”*

*”பசுபதி எதுவும் சொல்ல மாட்டாரா?”*

*“அவர் தியானத்தில் உட்கார்ந்து விட்டால் அங்கே என்ன நடந்தாலும் அவர் தியானத்தில் இருந்து கலைய மாட்டார். தியானத்தில் இல்லாமல் இருந்தாலும் அவர் எங்களை வேடிக்கை பார்ப்பாரே ஒழிய திட்டியதோ, வெளியே போய் விளையாடுங்கள் என்று சொன்னதோ கிடையாது...”*

“விளையாடும் போது அந்த சிவலிங்கம் இருந்த பூஜை அறைக்குள்ளேயும் போவீங்களா?”

”அதுக்குள்ளே மட்டும் நுழைய மாட்டோம்….”

“ஏன்?”

“சங்கர் ”அங்கே மட்டும் போக வேண்டாம்டா. எங்கப்பாவே போக மாட்டார்.”னு ஆரம்பத்திலேயே சொல்லி இருக்கிறான். அதனால் அந்த பூஜை அறை தவிர மற்ற இடங்களில் விளையாடுவோம்….”

”எதையுமே ஏன் எதற்குன்னு கேட்காமல் ஏத்துக்கறது பொதுவாய் அந்த வயசுல இல்லாத பழக்கம் தானே. நீங்கள் ஏன் எதற்குன்னு சங்கர் கிட்ட கேட்டதில்லையா?”

”அந்தக் காலத்துல பெரியவங்க காரணம் பெரும்பாலும் சொல்ல மாட்டாங்க. கேள்வி கேட்டா அதிகப்பிரசங்கித் தனம், எதிர்த்துப் பேசறதுன்னு அர்த்தம் எடுத்துகிட்டுத் திட்டுவாங்க. அதனால சங்கரும் கேட்டதில்லை. புரிஞ்சுகிட்டு சங்கர் கிட்ட நானும் கேட்டதில்லை…”

”சங்கரும் நீங்களும் ஒரு தடவை சிவலிங்கம் ஜொலிக்கிறதைப் பார்த்ததாய் கேள்விப்பட்டேன். அதைப் பத்தி சொல்லுங்களேன்….”

“ஒரு நாள் மதிய நேரம் தோட்டத்தில் விளையாடிக் களைச்சுப் போய் தண்ணீர் குடிக்க வீட்டுக்குள்ளே நானும் சங்கரும் நுழைஞ்சோம். திடீர்னு மின்னல் வெளிச்சம் அந்த சிவலிங்கத்து மேலே விழுந்தது மாதிரி இருந்தது. ரெண்டு பேருக்கும் எங்கள்

கண்ணையே நம்ப முடியலை. நான் அவன் கிட்ட கேட்டேன். ”டேய் நீ அந்த வெளிச்சத்தைப் பார்த்தியா?” அவன் சொன்னான். “ஆமாடா. நீயும் பார்த்தியா?” சங்கரோட பெரியப்பா சிவலிங்கம் முன்னால் தியானத்துல உட்கார்ந்திருந்தார். அவர் கிட்டே பிறகு நாங்கள் பார்த்ததைச் சொன்னோம். அவர் ஒண்ணும் சொல்லலை... ஆனால் அதையே சங்கர் பரமேஸ்வரன் கிட்ட சொல்லி திட்டு வாங்கிகிட்டான்.... எல்லாம் எங்கள் கற்பனைன்னு அவர் நினைச்சுகிட்டார்.”

”அதற்குப் பிறகு எப்பவாவது சிவலிங்கம் ஜொலிக்கிறதை நீங்கள் பார்த்தது உண்டா?”

“இல்லை” சற்று வேகமாகவே தென்னரசு சொன்னது போல் பார்த்தசாரதிக்குத் தோன்றியது.

“உங்களுக்குப் பொழுது போக்கு என்ன?”

“நிறைய புத்தகங்கள் படிப்பேன்.”

“அதிகம் என்ன மாதிரி புத்தகம் படிப்பீங்க?”

”தமிழ் இலக்கியம் படிப்பேன். கம்பன், பாரதி, புறநானூறு எல்லாம் படிப்பேன்”

”ஆன்மிக புத்தகம் படிக்கிறதுண்டா?”

“இல்லை...”

*“புத்தகம் வாங்கிப் படிப்பீங்களா?”*

*“இல்லை. ரெண்டு நூலகங்கள்ல இருந்து புத்தகம் எடுத்துப் படிப்பேன். ஒன்று எங்கள் கல்லூரி நூலகம். இன்னொன்று தனியார் நூலகம்....”*

*பார்த்தசாரதி நூலகத்தின் விலாசம் கேட்டுத் தெரிந்து கொண்டார். அவர் போன அதே நூலகம் தான். இதில் தென்னரசு எதையும் மறைக்கவில்லை.*

*“சிவலிங்கம் திருட்டுப் போகக் காரணம் அது ஜொலிக்கறதாக இருக்குமோ. ஜொலிப்பதைப் பார்த்து விட்டு ஏதோ அதில் வித்தியாசமாய் இருக்கிறது என்று நினைச்சு செய்ததாய் இருக்குமோ?”*

*”தெரியலை”*

*“நீங்கள் அந்த சிவலிங்கம் ஜொலிக்கிறதைப் பத்தி வேற யார் கிட்டேயாவது சொல்லி இருக்கீங்களா?”*

*“சின்ன வயதில் ரெண்டு மூணு நண்பர்கள் கிட்ட நானும் சங்கரும் சேர்ந்தே சொல்லி இருக்கிறோம். அவங்க நம்பலை. அதற்குப் பிறகு நாங்கள் அதுபத்தி யார் கிட்டேயும் சொன்னதில்லை....”*

*”அதுபத்தி நீங்க ரெண்டு பேரும் அடிக்கடி பேசிகிட்டது உண்டா?”*

*“சில நேரங்களில் பேசி இருக்கிறோம்.”*

*”சமீப காலமாக யார் கிட்டயாவது இதைப் பத்தி சொல்லி இருக்கீங்களா?”*

*“இல்லை”*

*“அந்தத் தோட்ட வீட்டுக்குப் பிறகு எப்போதாவது போய் இருக்கிறீர்களா?”*

*“இல்லை”*

*“நீலகண்ட சாஸ்திரி எழுதின ஆன்மிக பாரதம்கிற புத்தகம் படிச்சிருக்கீங்களா?”*

*“இல்லை” வேகமாய் வந்தது பதில்.*

*பார்த்தசாரதிக்குப் பதில் கிடைத்து விட்டது. நன்றி சொல்லி விட்டு அவர் கிளம்பி விட்டார்.*

*தென்னரசு நீண்ட நேரம் அப்படியே அமர்ந்திருந்தார். பார்த்தசாரதி எவ்வளவு தூரம் அவர் சொன்னதை நம்பினார் என்பது தெரியவில்லை.... பார்த்தசாரதி சந்தேகப்பட்டால் கூட தென்னரசுவை எதிலும் சம்பந்தப்படுத்த ஆதாரம் எதுவும் இல்லை என்பதை தென்னரசு நன்றாக அறிவார்.*

*அமைதியாக அமர்ந்திருக்கையில் பார்த்தசாரதியின் ஒரு கேள்வி மீண்டும் நினைவில் வந்தது. ”அதற்குப் பிறகு எப்பவாவது சிவலிங்கம் ஜொலிக்கிறதை நீங்கள் பார்த்தது உண்டா?”*

*வேறு யாருமே கண்டிராத அந்த இரண்டாவது காட்சி, சங்கரிடம் கூட பகிர்ந்திராத அந்தக் காட்சி அவர் மனத்திரையில் மீண்டும் ஒரு முறை வந்து போனது. இப்போது நினைத்தாலும் அவருக்கு மயிர்க்கூச்செறிகிறது.....*

*அந்தக் காட்சியைக் கண்ட பிறகு அவரால் என்றுமே அந்த சிவலிங்கத்தை மறக்க முடிந்ததில்லை!...*

# அத்தியாயம் - 50

*ஈஸ்வர் மனதில் குருஜி ஏற்படுத்திய சந்தேகங்கள் மறு நாள் பார்த்தசாரதியை அவன் தோட்ட வீட்டில் சந்திக்கும் வரை நீடித்துக் கொண்டு இருந்தன. எனவே அவன் பார்த்தசாரதியை சந்தித்த போது கேட்டான். “நீங்கள் குருஜி பற்றி என்ன நினைக்கிறீர்கள்?”*

*பார்த்தசாரதி கேட்டார். “ஏன் கேட்கறீங்க?”*

*”நேற்று நான் வேதபாடசாலைக்குப் போயிருந்தேன். அப்போது அவரையும் நான் சந்தித்துப் பேசினேன்...”*

*பார்த்தசாரதி சொன்னார். “அவர் மாதிரி ஒரு ஆளைப் பார்க்கிறது கஷ்டம். நம் நாட்டிற்கே அவர் ஒரு பெரிய வரப்பிரசாதம். ஆன்மிகம் என்கிற போர்வையில் எத்தனையோ ஏமாற்று வேலைகள் நடக்கிற இந்த காலத்தில் ’நான் கடவுள்’ என்று சொல்லிக் கொள்ளாமல், தன்னை முற்றும் துறந்த சாமியாராகக் கூடக் காட்டிக் கொள்ளாமல் அவர் செய்து வருகிற ஆன்மிக சேவை*

சாதாரணமானதல்ல. பேசுவது, எழுதுவது மட்டுமல்லாமல் ஆன்மிக ஞானத்தை நாடு முழுவதும் பரப்ப அவர் எத்தனையோ அமைப்புகள் நடத்துகிறார்....”

ஈஸ்வர் அவரையே பார்த்துக் கொண்டிருக்க, அவன் பார்க்கும் விதத்தில் இருந்து பார்த்தசாரதிக்கு சந்தேகம் வந்தது. “நான் சொன்னதில் உங்களுக்கு உடன்பாடு இல்லையோ?”

ஈஸ்வர் மெல்ல சொன்னான். “நானும் அவரை மனதில் பெரிய உயரத்தில் தான் நிறுத்தி இருந்தேன். அவர் எழுதிய புத்தகங்கள் படித்திருக்கிறேன். பேசியதை நிறைய கேட்டிருக்கிறேன். அவர் ஆன்மிக ஞானம், சேவைகள் பற்றி எனக்கும் மிக நல்ல அபிப்பிராயம் தான் இருக்கிறது. ஆனால் நேற்று அவரை சந்தித்துப் பேசியதில் இருந்து ஏனோ ஒரு உள்ளுணர்வு அவருக்கும் இந்த சிவலிங்க விவகாரத்திற்கும் சம்பந்தம் இருக்குமோ என்ற சந்தேகத்தை எழுப்புகிறது”

பார்த்தசாரதி இது என்ன முட்டாள்தனமான அபிப்பிராயம் என்பதைப் போல ஈஸ்வரைப் பார்த்தார். இவனுக்கு என்ன சொல்லிப் புரிய வைப்பது என்று யோசித்து பிறகு சொன்னார். “ஈஸ்வர் பணம், புகழ், அதிகாரம், அங்கீகாரம் இதில் எதுவுமே அவருக்குக் குறைவில்லை. இன்று அவர் ஒரு வார்த்தை சொன்னால் கோடி கோடியாய் பணம் கொண்டு வந்து கொட்ட எத்தனையோ கோடீசுவரர்கள் தயாராக இருக்கிறார்கள். பிரதமர், ஜனாதிபதி, மந்திரிகள் முதற்கொண்டு அவரிடம் ஆசிர்வாதம் வாங்கி விட்டுப் போவதைப் பெருமையாக நினைக்கிறார்கள். வெளிநாட்டு பிரபலங்கள் கூட அவரை வந்து பார்த்து விட்டுப் போவதை பாக்கியமாக நினைக்கிறார்கள். அவருக்கு எதிலும் குறையில்லை. அவர் மறைமுகமாக ஏதாவது மோசமான வழியில் போபவராக இருந்தால் எங்கள் போலீஸ் டிபார்ட்மெண்டுக்குத் தெரியாமல்

*இருக்க வாய்ப்பே இல்லை. இது வரை சின்ன வதந்தி கூட அவரைப் பற்றி மோசமாக வந்ததில்லை. அப்படி இருக்கையில் அவர் போய் இந்த திருட்டு, கொலையில் எல்லாம் ஈடுபடுவார் என்று நினைப்பதே அபத்தம்....”*

ஈஸ்வருக்கு அவர் வாதத்தில் குறை கண்டுபிடிக்க முடியவில்லை. ஆழ்ந்து யோசித்தபடியே அவன் தலையசைத்தான். ஆனால் அறிவுக்கு எட்டிய அந்த வாதம் அவன் உள்ளுணர்வை சிறிதும் மாற்றவில்லை.

பார்த்தசாரதிக்கு ஈஸ்வரின் அறிவுகூர்மையில் சந்தேகம் இருக்கவில்லை. குருஜியைத் தவிர அவன் யாரைப் பற்றிச் சொல்லி இருந்தாலும் அவர் அப்படியே தீவிர ஆலோசனைக்கு எடுத்துக் கொண்டிருப்பார். ஆனால் அவன் குருஜியைச் சந்தேகத்துடன் சொன்னது அவரை தர்மசங்கடத்திற்கு உள்ளாக்கியது. அவர் வாழ்நாள் முழுவதும் பக்தியுடன் பார்த்த மனிதர் என்பது மட்டுமல்லாமல் இது வரை குருஜியைப் பற்றி யாரிடம் இருந்தும் தவறாக அவர் கேள்விப்பட்டிருக்கவில்லை. முதன் முதலாக ஈஸ்வர் வாயில் இருந்து வந்த இந்த சந்தேகத்தை நிவர்த்தி செய்து அவன் ”நான் சந்தேகப்பட்டது தவறு” என்று சொல்லிக் கேட்டால் தான் மனம் சமாதானம் அடையும் என்று தோன்றியது. “நீங்கள் சந்தேகப்படக் காரணம் என்ன?” என்று கேட்டார்.

ஈஸ்வர் சிறிது தயக்கம் காட்டி விட்டு குருஜியுடனான தன் சந்திப்பைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தான். அவர் பேசியதையும், தான் பேசியதையும் சொன்னானே ஒழிய தன் சந்தேகத்தைப் பற்றி ஆரம்பத்தில் அவன் எதுவும் சொல்லவில்லை. கேட்ட பார்த்தசாரதிக்கு எல்லாம் இயல்பானதாகத் தோன்றியது. ”இதில் சந்தேகப்பட என்ன இருக்கிறது. சிவலிங்கம் பற்றி அவர் பேசினது எதுவும் அவரை சந்தேகப்பட வைக்கும் படி இல்லையே ஈஸ்வர்”

ஈஸ்வர் தன் சந்தேகங்களை ஒவ்வொன்றாகச் சொல்ல ஆரம்பித்தான். ”சார். முதல் முதலில் என்னை சந்தேகப்பட வைத்தது ’கண்கள் தீ மாதிரி ஜொலிக்கிற சித்தர் யாரையாவது பார்த்திருக்கிறீர்களா?’ என்ற என் கேள்விக்கு அவர் காட்டிய ரியாக்‌ஷன்... ’இல்லை ஆனால் கேள்விப்பட்டிருக்கிறேன்’ என்று சொன்ன பதில் பொய் என்பதில் எனக்கு இப்போதும் சந்தேகமில்லை. அப்புறமாக சிவலிங்கம் பற்றி பேசிய போதெல்லாம் அவர் முகத்தில் தெரிந்த உணர்ச்சிப் பிரவாகம் சம்பந்தப்படாத ஆளுக்கு வர வாய்ப்பே இல்லை... சார் மனோதத்துவத்தின் மிக முக்கிய விதி ஒன்று இருக்கிறது. அது என்ன தெரியுமா? ஒரு மனிதன் வார்த்தைகளில் பொய் சொல்லலாம். ஆனால் அந்தப் பொய்யிற்கு அவன் உணர்ச்சிகள் ஒத்துழைப்பது அபூர்வம். அந்த உணர்ச்சிகள் வேறு விதமாய் உண்மையைப் பேச முடிந்தவை. மனோதத்துவம் நன்றாகத் தெரிந்தவன், பேசும் வார்த்தைகளுடன் காட்டப்படும் உணர்ச்சிகள் ஒத்துப் போகிறதா என்று பார்த்து தான் எதையும் உறுதி செய்வான்....”

பார்த்தசாரதி ஈஸ்வரையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார். ஈஸ்வர் தொடர்ந்தான்.

”குருஜியின் அப்பாயின்மெண்ட் கிடைப்பதே குதிரைக் கொம்பு என்பது போல் பலர் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவராக யாரையாவது பார்க்க ஆர்வம் காட்டியதை நீங்கள் இதுவரை கேள்விப்பட்டிருக்கிறீர்களா?”

யோசித்து விட்டு பார்த்தசாரதி சொன்னார். “இல்லை”

“வேதபாடசாலைக்கு நான் வருவதாகச் சொன்னவுடன் குருஜி இருக்கிறார், விருப்பம் இருந்தால் சந்திக்கலாம் என்று அவர்களாகவே சொன்னார்கள். அவர் வேதபாடசாலையில் தங்கினால் முடிவில் அவரை ஒரு சொற்பொழிவில் தான் யாரும் பார்க்க முடியும் என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன். அவர் யாரையும் அங்கே சந்தித்ததே இல்லையாம். அவர் சொல்லாமல் வேதபாடசாலை நிர்வாகிகள் அதற்கு ஏற்பாடு செய்திருக்கவே வாய்ப்பில்லை. நான் அங்கு போய் இறங்குவதற்கு முன் அந்த மண்ணைத் தொட்டு வணங்கினேன். அவர் அதைத் தற்செயலாகப் பார்த்தது போல் சொல்லிக் காரணம் கேட்டார். நான் கிளம்பி வரும் போதும் என்னையே ஜன்னல் வழியாக அவர் பார்த்துக் கொண்டிருந்தார். நான் திரும்பிப் பார்த்த போது சடாரென்று விலகி விட்டார். பொதுவாக நம்மிடம் பேசி விட்டுப் போபவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தோமானால் அவர்கள் திரும்பினால் என்ன செய்வோம். கை காட்டுவோம், புன்னகை செய்வோம், இது போல ஏதாவது ஒரு செய்கை தான் செய்வோம். திடீரென்று விலகுவது ஒருவருக்குத் தெரியாமல் பார்க்க நினைப்பவர்கள் செய்யும் காரியம் தான். நான் உள்ளே நுழையும் போதும் பார்த்து, கிளம்பும் போதும் பார்த்துக் கொண்டிருந்தது அதை மறைக்க அவர் முயலாமல் இருந்திருந்தால் இயல்பாக இருந்திருக்கும். ஆனால் மறைத்தது இயல்பாய் இல்லை....”

பார்த்தசாரதி அந்தக் காட்சிகளை மனக்கண்ணில் பார்த்து ஈஸ்வரின் வார்த்தைகளை அதனுடன் சேர்த்து புரிந்து கொள்ள முயற்சி செய்து கொண்டிருந்தார்.

“நான் ஆராய்ச்சியாளன் என்று அவரிடம் சொல்லவே இல்லை. அவராகவே என்னை ஆராய்ச்சியாளன் என்று தெரிந்து வைத்திருந்து பேசினார். அதே போல் சித்தர்கள் பூஜித்த சிவலிங்கம் என்றும் என்ன நோக்கத்திற்கு சக்திகளை ஆவாகனம் செய்து

*வைத்தார்களோ தெரியவில்லை என்று நான் சொன்ன போது அதை முதல் முதலில் கேட்பவர்கள் ”என்ன சித்தர்கள் பூஜித்த சிவலிங்கமா, சக்திகளை ஆவாகனம் செய்தார்களா’ என்றெல்லாம் கண்டிப்பாகக் கேட்காமல் இருக்க மாட்டார்கள். ஆனால் அதை அவர் செய்யவில்லை.....”*

*பார்த்தசாரதி சொன்னார். “சிவலிங்கம் பற்றின இந்த விவரங்களை அவரிடம் சொன்னது நான் தான். இந்தக் கேஸில் அவர் அபிப்பிராயம் என்ன என்று கேட்க நான் போயிருந்தேன். அப்போது இதைச் சொல்லி அதோடு உங்களைப் பற்றியும் சொல்லி இருந்தேன் என்று நினைக்கிறேன் ஈஸ்வர்...”*

*”அப்படியானால் அவர் புதிதாகக் கேட்பது போல் ஏன் கேட்க வேண்டும் சார்?”*

*“அது சில பேரின் சுபாவம் ஈஸ்வர். ஒருவர் சொன்னதை இன்னொருவரிடம் சொல்லாமல் புதிதாய் கேட்கிற மாதிரி கேட்டு அவர் சொன்னதற்கும் இதற்கும் ஒத்து வருகிறதா என்று பார்ப்பார்கள்.”*

*”நீங்கள் சொல்வது சரி தான். ஆனால் குருஜி என்னிடம் சிவலிங்கம் ப்ரோகிராம் பற்றி பேசின பேச்சுகள் எதுவும் சம்பந்தமில்லாத, வெறுமனே தெரிந்து கொள்ள ஆர்வம் காட்டுகிற ஒரு மனிதர் பேசின பேச்சாய் எனக்குத் தோன்றவில்லை சார். நான் அவர் தான் சிவலிங்கத்தைத் திருடவும், என் பெரிய தாத்தாவைக் கொல்லவும் ஏற்பாடு செய்தார் என்று சொல்லவில்லை. அந்த அளவு நினைக்க என்னாலும் முடியவில்லை. ஆனால் அவர் ஏதாவது விதத்தில் சம்பந்தப்பட்டிருக்கிறார், அதனால் தான் என்னை சந்தித்தார், பேசினார், நான் என்ன நினைக்கிறேன் என்பதிலும்,*

எனக்கு என்னவெல்லாம் அது பற்றித் தெரியும் என்பதிலும் ஆர்வம் காட்டினார் என்று எனக்கு உள்ளுணர்வு சொல்கிறது சார்”

பார்த்தசாரதிக்கு அவன் சொல்வதை ஏற்றுக் கொள்ளவும் முடியவில்லை. அலட்சியப்படுத்தவும் முடியவில்லை.... மதில் மேல் பூனையாய் மனம் முடிவெடுக்க முடியாமல் தடுமாறியது. நாளை சந்தித்து மீண்டும் பேசலாம் என்று சொல்லி ஈஸ்வரை அனுப்பி விட்டு நிறைய நேரம் அவர் யோசித்தார். ஈஸ்வர் சந்தேகம் உண்மையாக இருக்காது தான்.... ஆனால் ஒருவேளை உண்மையாக இருந்து விட்டால் என்ற கேள்வி மெல்ல எழுந்தது. மூளை தீவிரமாய் வேலை செய்ய ஆரம்பித்தது.

இந்த வழக்கை அவர் எடுத்துக் கொண்டதற்குப் பின் அவர் அலுவலகத்தில் மேல் மட்ட சிபாரிசினால் ஒருவன் சேர்ந்திருந்தான். அவனுக்கு ஏதோ இட சௌகரியங்கள் இருப்பதாகச் சொல்லி இருந்தார்கள். சீர்காழி கோயில் விவரமும், நூலகத்தில் ஆன்மிக பாரதம் புத்தக விவரமும் அவன் மூலமாகவே வெளியே கசிந்திருக்க வேண்டும் என்று சந்தேகம் அவருக்கு வர ஆரம்பித்திருந்தது.

இப்போது ஈஸ்வரும் வந்து இந்த சந்தேகப் புயலைக் கிளப்பி விட்ட பிறகு உள்ளுணர்வு உந்த அவர் போலீஸ் மேல் மட்டத்தில் உள்ள தன் நெருங்கிய நண்பர் ஒருவருக்குப் போன் செய்து அவர் அலுவலகத்தில் வந்து சேர்ந்தவன் யார் சிபாரிசில் வந்திருக்கிறான் என்று ரகசியமாய் விசாரித்துச் சொல்லச் சொன்னார்.

அரை மணி நேரத்தில் பதில் வந்தது. “சிபாரிசு செய்தது கவர்னர் ஆபிஸ். அங்கு அந்த சிபாரிசிற்கு வேண்டுகோள் விடுத்தது குருஜி”

தகவல் பார்த்தசாரதி தலையில் இடியாய் இறங்கியது.

**************

விஷாலியின் செல் போனிற்கு ஒரு வெளிநாட்டில் இருந்து அழைப்பு வந்த போது அதை எண் மூலம் புரிந்து கொண்ட அவள் ஆச்சரியத்துடன் பேசினாள். “ஹலோ. விஷாலி பேசறேன்.”

”மேடம் அமெரிக்காவில் இருந்து பாலாஜி பேசறேன். ஈஸ்வரின் ஃப்ரண்ட்”

ஈஸ்வர் பெயரைக் கேட்டவுடனேயே அவளை அறியாமல் அவளுக்குச் சிலிர்த்தது. நண்பன் மூலமாக சமாதானம் பேசுகிறானோ?

அமைதியாகச் சொன்னாள். “சொல்லுங்கள்”

“நீங்கள் வரைந்த “இருவேறு உலகங்கள்” ஓவியம் விலைக்கு வாங்க ஆசைப்படுகிறேன். என்ன விலை சொல்கிறீர்கள்?”

விஷாலி இதை எதிர்பார்த்திருக்கவில்லை. ஈஸ்வர் ஓவியங்களில் ஈடுபாடு உள்ள அவன் நண்பன் பாலாஜி என்பவனைப் பற்றிச் சொல்லி இருந்தது நினைவுக்கு வந்தது....

விஷாலி வேண்டுமென்றே அதிக விலை சொன்னாள். “இருபதாயிரம் எதிர்பார்க்கிறேன்”. இது வரை அதிகபட்சமாக அவள் ஓவியம் பத்தாயிரம் வரை தான் விலை போயிருக்கிறது.

“ஓகே மேடம். உங்கள் அக்கவுண்ட் டீடெய்ல்ஸ் சொல்லுகிறீர்களா?”

விஷாலி திகைத்தாள். "நீங்கள் அந்த ஓவியம் பார்த்தது கூட இல்லையே"

"ஈஸ்வர் ஒன்றைப் பார்த்து பெஸ்ட் என்றால் அதற்குப் பிறகு நான் பார்க்கத் தேவை இல்லை மேடம். அது பெஸ்டாகத் தான் இருக்க வேண்டும். அவன் அதில் எக்ஸ்பர்ட்"

விஷாலிக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. அப்படியானால் மகேஷ் ஈஸ்வருக்கு ஓவியங்களில் ஈடுபாடு சுத்தமாக இல்லை என்றும் அவளை வலையில் வீழ்த்த ஈடுபாடு இருப்பதாகப் பொய் சொன்னான் என்றும் சொன்னது...?

எந்திரத்தனமாக தன் அக்கவுண்ட் விவரங்களை அவள் சொன்னாள்.

பாலாஜி சொன்னான். "தேங்க் யூ. நான் இப்போதே இருபதாயிரம் ரூபாய் உங்கள் அக்கவுண்டிற்கு அனுப்புகிறேன். நீங்கள் என் அட்ரஸ் நோட் செய்து கொள்கிறீர்களா....."

அவன் சொல்ல சொல்ல அவள் குறித்துக் கொண்டாள். மனம் மட்டும் கொந்தளிக்க ஆரம்பித்திருந்தது.

அவன் எப்படி அனுப்ப வேண்டும் என்று விவரமாகச் சொல்லி விட்டுத் தொடர்ந்தான். "நான் ஈஸ்வரையே உங்களிடம் வாங்கி அனுப்பச் சொன்னேன். அவன் தான் உங்களிடமே நேரடியாக என்னையே பேசச் சொன்னான். உங்கள் மற்ற ஓவியங்கள் பற்றியும் சொன்னான். உங்கள் ஓவியங்களின் போட்டோக்களை அனுப்ப முடியுமா? என்னிடம் நிறைய கலெக்ஷன் இருக்கிறது. உங்களுக்கு

இண்ட்ரஸ்ட் இருந்தால் சொல்லுங்கள். நானும் அனுப்பி வைக்கிறேன்.....”

அவன் வார்த்தைகளில் உற்சாகம் இருந்தது. அவனிடம் யார் வரைந்த ஓவியங்கள் எல்லாம் இருக்கின்றன என்று மனக்கொந்தளிப்பின் நடுவே கேட்ட போது அவன் சொன்ன பெயர்கள் எல்லாம் அவளைப் பிரமிக்க வைத்தன. அத்தனை புகழ்பெற்ற ஓவியர்களின் ஓவியங்களுக்கு இணையாக அவள் ஓவியத்தையும் அவன் வாங்குகிறான், அதுவும் பார்க்காமலேயே, தன் நண்பன் ஈஸ்வரின் மதிப்பீட்டில் முழு நம்பிக்கையும் வைத்து .....

அவனிடம் பேசி முடித்து விட்டு அவள் தலையை இரண்டு கைகளிலும் பிடித்துக் கொண்டாள். ஓவியங்களில் ஈடுபாடு உள்ளவன் போல் ஈஸ்வர் நடிக்கவில்லை. உண்மையில் அவனுக்கு ஈடுபாடு இருந்திருக்கிறது. அவள் அவனைப் புழுவை நடத்தியது போல் நடத்தினாலும் அவள் ஓவியத்தைப் பற்றிய நல்ல வார்த்தைகளை அவன் தன் நண்பனிடம் சொல்லத் தயங்கவில்லை....

ஒருவேளை மகேஷ் ஈஸ்வரைப் பற்றிச் சொன்ன மற்ற விஷயங்களும் பொய்யாக இருந்தால்.....? அவளால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை...

கோபம் கொண்டவுடன் அவனுடன் உடனடியாகப் பேசத் தோன்றியதைப் போலவே அவளுக்கு இப்போதும் உடனடியாகப் பேசத் தோன்றியது. பேசினாள்.

ஈஸ்வர் குரல் கேட்டது. “ஹலோ”

அவன் குரல் அவளை என்னவோ செய்தது. முழு தைரியத்தையும் வரவழைத்துக் கொண்டு பேசினாள். “நான் ......விஷாலி ...பேசறேன்”

அவன் ஒன்றும் சொல்லவில்லை.

அவளாகவே சொன்னாள். “உங்கள் ஃப்ரண்ட் பாலாஜி பேசினார். என் ’இருவேறு உலகங்கள்” ஓவியம் பற்றி நீங்கள் சொன்னதால் விலைக்கு வாங்கறதாக சொன்னார். விலை கூட அவர் பேரம் பேசலை....”

அப்போதும் அவன் ஒன்றும் பேசவில்லை.

அவள் அவன் ஏதாவது சொல்வான் என்று காத்து விட்டுச் சொன்னாள். “தேங்க்ஸ்”

ஈஸ்வர் சொன்னான். “நான் உங்களுக்காக அதை அவன் கிட்ட சொல்லலை. அவனுக்காக தான் சொன்னேன். சிறப்பான ஒரு ஓவியம் ஒன்று பார்த்து விட்டு அவனிடம் சொல்லாமல் இருக்க முடியவில்லை.....”

அவன் ஒருமையில் அழைக்காமல் பன்மையில் அவளை அழைத்தது அவன் பழைய நெருக்கத்தில் இருந்து தூர விலகி விட்டதைத் தெரிவித்தது. அவன் சொன்ன விஷயத்தின் பெருந்தன்மையையும் அவளால் கவனிக்காமல் இருக்க முடியவில்லை. அவள் மனம் கனமாக ஆரம்பித்தது. அவனிடம் எத்தனையோ சொல்ல நினைத்தாள். அதை எப்படிச் சொல்வது என்று தெரியவில்லை. சொன்னாலும் அவன் அதைக் கேட்டுக் கொள்வானா என்றும் தெரியவில்லை.

*எல்லாவற்றிற்குமாகச் சேர்ந்து அவள் சொன்னாள். "சாரி..."*

*அவன் அலட்டிக் கொள்ளாமல் சொன்னான். "சரி".*

*போனை வைத்து விட்டான்.*

*விஷாலிக்கு கண்கள் குளமாயின. அவன் அவளை மன்னிக்கத் தயாராக இல்லை. என்றென்றைக்கும் அவன் தனக்கு இழைக்கப்பட்ட அநீதியை மன்னிக்க மாட்டான். அன்பாலயத்தில் பரமேஸ்வரனை அப்பாவின் அப்பா என்று அவன் சொன்னதும் தாத்தா என்று சொல்லுங்கள் என்று கணபதி சொன்ன பிறகு கூட அப்படிச் சொல்லாததும் அவளுக்கு நன்றாக நினைவிருக்கிறது....*

*அவன் வெறுப்பவர்களின் பட்டியலில் தானும் சேர்ந்து விட்டோம் என்ற எண்ணம் ஏற்பட்ட போது அவள் உடைந்து போனாள்.....*

# ***அத்தியாயம் - 51***

*ஜான்சன் குருஜியைப் பார்த்தவுடன் கேட்ட முதல் கேள்வி ஈஸ்வரைப் பற்றிய அபிப்பிராயத்தைப் பற்றியது தான். "குருஜி ஈஸ்வரைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"*

*"அழகாயிருக்கிறான். அறிவாளியாயிருக்கிறான். அடக்கமாயிருக்கிறான்....". குருஜி புன்னகையுடன் சொன்னார்.*

*“அவனைச் சுற்றியும் ஏதாவது சக்தி வட்டம் பார்த்தீர்களா குருஜி”*

*”என்னால் பார்க்க முடியவில்லை. மூன்று நாள் தியானத்தில் சேர்த்திருந்த என்னுடைய சென்சிடிவிட்டி அவனை சந்திக்கும் போது போய் விட்டிருந்தது....”*

*ஈஸ்வர் வந்ததில் இருந்து போகிற வரை நடந்ததை எல்லாம் அறிந்து கொள்ள ஜான்சன் துடித்தார். குருஜி ஒன்று விடாமல் சொன்னார். சொல்லி விட்டுக் கேட்டார். ”நீ என்ன நினைக்கிறாய் ஜான்சன்”*

*ஜான்சன் ஒரு நிமிடம் யோசித்து விட்டுச் சொன்னார். “வேதபாடசாலை மண்ணைத் தொட்டுக் கும்பிடுகிற அளவுக்கு அவன் ஆன்மிகப் பேர்வழி அல்ல. வேறு எதாவது காரணம் இருக்கும் குருஜி. நானே உங்களைக் கேட்க வேண்டும் என்று நினைத்திருந்தேன், கண்கள் தீ மாதிரி ஜொலிக்கிற சித்தரை நீங்கள் இந்த சிவலிங்க சமாச்சாரத்திற்கு முன் கேள்விப்பட்டிருக்கிறீர்களா குருஜி”*

*குருஜி கண்ணிமைக்காமல் சொன்னார். “என் நண்பன் ஒருவன் அவரிடம் சில மாதம் சிஷ்யனாய் இருந்திருக்கிறான்”*

*“நீங்கள் அவரைப் பார்த்திருக்கிறீர்களா குருஜி?”*

*“இல்லை. அவன் சொல்லிக் கேட்டிருக்கிறேன். அவருடைய பெயர் என்ன என்று கூட யாருக்கும் தெரியாது என்று அவன் சொல்லி இருக்கிறான். அவர் கண்கள் ஜொலிப்பதை வைத்து இமயமலைப் பகுதியில் அவருக்கு அக்னி நேத்திர சித்தர் என்று*

வைத்திருக்கிறார்களாம்....” குருஜிக்கு தன் குருவாக அந்த சித்தர் இருந்திருக்கிறார் என்பதை ஜான்சனிடம் தெரிவிக்க அவசியம் இல்லை என்று தோன்றியது.

ஜான்சனுக்கு குருஜி மேல் சின்னதாய் கோபம் வந்தது. அந்த சித்தர் தன் நண்பனின் குருவாக இருந்தவர் என்பதைக் கூட இப்போது தான் குருஜி சொல்கிறார். அதுவும் கேள்விப்பட்டிருக்கிறீர்களா என்று கேட்ட பிறகு. ஈஸ்வர் அதுபற்றிக் கேட்டான், அதற்கு இன்ன மாதிரி பதில் சொன்னேன் என்று சொல்லும் போது கூட அவர் சொல்லவில்லை. தன் மனத்தாங்கலை மறைத்துக் கொண்டு ஜான்சன் பரபரப்புடன் சொன்னார். “அப்படியானால் உங்கள் நண்பரைக் கேட்டால் அவரைப் பற்றிய எல்லா விவரங்களும் தெரிந்து கொள்ளலாமே”

”பெயரைக் கூட யாரிடமும் சொல்லாதவர் அவரைப் பற்றிய விவரங்கள் தன் சீடர்களுக்குத் தெரிய விடுவாரா என்ன?”

ஜான்சன் பரபரப்பு அப்படியே அமுங்கியது. ”அந்த சிவலிங்கம் பற்றிய வேறு ஏதாவது விசேஷ விவரம் உங்கள் நண்பருக்குத் தெரிந்திருக்கலாம் இல்லையா?”

”கேட்டேன். அவனுக்கும் தெரியவில்லை....”

ஜான்சன் யோசனையோடு சொன்னார். “சிவலிங்கம் சக்தியை நாம் பரிசோதித்து தெரிந்து கொள்ளத் தான் போகிறோம். ஆனால் அந்த சித்தர் எவ்வளவு சக்தி வாய்ந்தவர், நம் பரிசோதனைகளுக்கு அவர் இடைஞ்சல் செய்ய முடியுமா என்பதெல்லாம் தெரிந்தால் நன்றாக இருக்கும்.”

*குருஜி சொன்னார். "நான் நேற்று இமயமலை போனதே அந்த நண்பனைப் பார்க்கத் தான். அந்த சித்தர் ரொம்பவே சக்தி வாய்ந்தவர் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் அவர் நம் பரிசோதனைகயைத் தடுக்கவோ, அதற்கு இடைஞ்சல் செய்யவோ வாய்ப்பில்லை. அதை என் நண்பன் பார்த்துக் கொள்வான். அந்த சிவலிங்கத்தை அங்கே வைப்பதற்கு முன் அந்தக் கட்டிடத்திற்கு வெளியே நாலா பக்கத்தில் இருந்தும் சிறிது சிறிது மண்ணை எடுத்து அனுப்பச் சொல்லி இருக்கிறான். 21 நாட்களுக்கு அந்த சித்தரோ அவர் சக்தியோ அந்த எல்லையைத் தாண்டி உள்ளே போய் விடாதபடி பார்த்துக் கொள்கிறேன் என்று சொல்லி இருக்கிறான்..."*

*ஜான்சன் சந்தேகத்தோடு கேட்டார். "உங்கள் நண்பருக்கு அந்த அளவு சக்தி இருக்கிறதா?"*

*"இன்றைக்கு இந்தியாவில் மாந்திரிகத்தில் அவனை மிஞ்சிய ஆள் இல்லை ஜான்சன்"*

*"உங்கள் நண்பர் பெயர் உதயன் சுவாமியா?" ஜான்சன் நம்பிக்கை துளிரக் கேட்டார். அந்தப் பெயரை அவர் அடிக்கடி கேள்விப்பட்டிருக்கிறார். மாந்திரிகத்தில் மிகச் சிறந்தவர் என்று பலரும் சொல்லி இருக்கிறார்கள். அவர் அந்த சுவாமி பற்றி வித விதமான கதைகள் சொல்லக் கேட்டிருக்கிறார்.*

*"ஆமாம். என் நண்பன் பெயர் உதயன் தான் ..." குருஜிக்குத் தன் நண்பனைப் பற்றிச் சொல்ல பெருமையாக இருந்தது.*

*ஜான்சன் பெரும் நிம்மதியை உணர்ந்தார். அந்த சித்தர் ஈஸ்வர் மூலமாகவோ, கணபதி மூலமாகவோ தன் சக்தியைப் புதிய*

*இடத்தில் பிரயோகிக்க முடியாது. ஆராய்ச்சிக்கு 21 நாட்கள் தாராளமாகப் போதும்.*

*ஜான்சன் குருஜியைக் கேட்டார். "அப்படியானால் கணபதியையும் நாம் இந்த ஆராய்ச்சியில் சேர்த்துக் கொள்வதில் பிரச்சினை எதுவும் இல்லையே? எப்படியும் அந்த சிவலிங்கத்தைத் தூக்கிக் கொண்டு அங்கே போய் சேரும் வரை அவன் உதவி நமக்கு கண்டிப்பாக வேண்டும்..."*

*குருஜி சொன்னார். "அவனை நாம் தாராளமாய் இந்த ஆராய்ச்சியில் சேர்த்துக் கொள்ளலாம்..."*

*"நீங்கள் அவனிடம் என்ன சொல்லி இருக்கிறீர்கள்?"*

*"இனிமேல் தான் சொல்ல வேண்டும். உன் முன்னாலேயே சொல்ல வேண்டும் என்று காத்திருந்தேன். அவனை உனக்கு முதலிலேயே அறிமுகம் செய்து வைப்பதும் நல்லது என்று நினைக்கிறேன்..." என்ற குருஜி உடனடியாக ஒரு ஆளை அழைத்து கணபதியை அழைத்து வரச் சொன்னார்.*

*கணபதி அடுத்த ஐந்தாவது நிமிடம் அங்கிருந்தான்.*

*"வா கணபதி. எப்படி இருக்கிறாய்?" என்று குருஜி விசாரித்தார்.*

*"உங்கள் தயவில் எனக்கு ஒரு குறையும் இல்லை குருஜி"*

*“கணபதி. இவர் என் நண்பர் ஜான்சன். பெரிய ஆராய்ச்சியாளர். அமெரிக்காவில் இருந்து வந்திருக்கிறார். ஜான்சன், இது தான் நான் சொன்ன கணபதி…”*

*ஜான்சன் எழுந்து நின்று கைகளை நீட்ட கணபதி தன் கைகளைக் கொடுத்தான். ஜான்சன் கைகுலுக்கியது அவனுக்கு மிகவும் பெருமையாக இருந்தது. அமெரிக்காவில் இருந்து வந்த பெரிய ஆராய்ச்சியாளர் அவனையும் மதித்து எழுந்து நின்று கை குலுக்குகிறார் என்ற சந்தோஷத்தில் அவனுக்கு அவரிடம் முறையாக வாய்விட்டு வணக்கம் தெரிவிக்கத் தோன்றியது. அதை ஆங்கிலத்தில் எப்படித் தெரிவிப்பது என்று யோசித்து விட்டு அவன் “குட் மார்னிங்” என்றான்.*

*குருஜி சிரிப்பை புன்னகையாக கஷ்டப்பட்டு மாற்றிக் கொண்டார். ஜான்சனும் புன்னகைத்து விட்டு “குட்மார்னிங்” என்றார். மறுபடி அமர்ந்த ஜான்சன் எதிரில் காலியாக இருந்த நாற்காலியைக் காட்டி கணபதியை உட்கார சைகை செய்தார்.*

*”பரவாயில்லை சார்” என்ற கணபதி கைகட்டிக் கொண்டு நின்று குருஜியைப் பார்த்தான்.*

*”பரவாயில்லை கணபதி உட்கார்” என்று கனிவாக குருஜியும் கட்டாயப்படுத்தவே அந்த நாற்காலியில் கணபதி அமர்ந்தான்.*

*குருஜி ஆரம்பித்தார். ”கணபதி, இவர் நம் நாட்டு தெய்வச் சிலைகளில் சக்தி இருப்பது உண்மையா என்று ஆராய்ச்சி செய்ய இந்தியாவுக்கு வந்திருக்கிறார். வடநாட்டில் ஒரு சிலையை ஆராய்ச்சி செய்து விட்டு வந்திருக்கிறார். அமெரிக்காவுக்குப்*

*போகப் போகிற நம்ம சிவலிங்கத்தையும் ஆராய்ச்சி செய்யணும்னு ஆசைப்படறார்...”*

*சொல்லி விட்டு குருஜி அவனையே பார்க்க கணபதி தலையசைத்தான்.*

*“நம் நாட்டு கடவுள் சிலைகளில் தெய்வீக சக்திகள் இருக்கின்றன என்பது மறுக்க முடியாத உண்மை அல்லவா கணபதி. அதை நாம் உணர்கிறோமோ இல்லையோ இவரை மாதிரி வெளிநாட்டு அறிஞர்கள் புரிந்து கொண்டு இருக்கிறார்கள். அதைப் பற்றி ஆராய்ச்சி செய்து இந்த உலகத்திற்கு ஆதார பூர்வமாய் தெரிவிக்க நினைக்கிறார். அப்படி நடக்கிறது நமக்கும் பெருமை தானே கணபதி. அதனால் நான் அதற்கு உடனே சம்மதம் சொல்லி விட்டேன்... நீ என்ன சொல்கிறாய் கணபதி”*

*கணபதிக்குத் தான் பூஜை செய்யும் சிவலிங்கம் ஆராய்ச்சி செய்யப்பட்டு அதன் புகழ் உலகமெல்லாம் பரவப் போகிறது என்று நினைக்கையில் மிகவும் பெருமையாக இருந்தது. சிவலிங்கத்தை நினைத்துக் கொண்டு மனதில் அதனிடம் கேட்டான். ’உன் புகழ் உலகமெல்லாம் பரவினால் என்னை மறந்துட மாட்டியே?’*

*குருஜி அவனையே பார்க்க அப்போது தான் அவர் கேட்டது நினைவுக்கு வர அவன் திருப்தியுடன் சொன்னான். “நல்லது தான் குருஜி. கேட்கவே சந்தோஷமாக இருக்கு.”*

*சொல்லச் சொல்ல அவனுக்குத் தன் பிள்ளையார் நினைவு வந்தது. அவர் சக்தியையும் இந்த அமெரிக்காக்காரர் ஆராய்ச்சி செய்து வெளியிட்டால் அவன் பிள்ளையார் புகழும் உலகமெல்லாம் பரவும். இவரிடம் சொல்லலாமா? சொன்னால் அது*

அதிகப்பிரசங்கித் தனமாகி விடுமோ? அப்படி நினைத்த அடுத்த கணம் ஒரு பயமும் வந்தது. அப்படி ஆராய்ச்சி செய்து சிவலிங்கத்தை அமெரிக்காவிற்குக் கொண்டு போவது போல அவனுடைய பிள்ளையாரையும் இவர்கள் அமெரிக்கா கொண்டு போய் விட்டால் என்ன செய்வது? ஐயோ வேண்டாம். சிவலிங்கத்தையே பிரியும் போது அவனுக்குக் கஷ்டமாகத் தான் இருக்கும். அந்த அளவுக்கு அவன் சிவனையும் நேசிக்க ஆரம்பித்திருந்தான். அப்படி இருக்கையில் அவன் பிள்ளையாரையும் பிரிவது என்றால் அவன் உயிரையே எடுத்து விடுவது மாதிரி தான். இந்த ஆராய்ச்சி எல்லாம் அவனுடைய பிள்ளையாருக்கு வேண்டாம்....

குருஜி சொன்னார். "இவர் ஆராய்ச்சி செய்கிற இடம் வேறு இடம். அங்கே சிவலிங்கத்தைத் தற்காலிகமாய் பிரதிஷ்டை செய்து தான் ஆராய்ச்சி செய்ய வேண்டி இருக்கும். அப்படி அங்கே போகிறப்ப நீயும் கூட வரணும் கணபதி. சொல்லப் போனால் நீ தான் அந்த சிவலிங்கத்தை உன் கையால் எடுத்துகிட்டு அங்கே வரணும். உன்னைத் தவிர யாரும் அதைத் தொடறது கூட எனக்குப் பிடிக்கலை கணபதி. என்ன சொல்கிறாய்?"

குருஜி அவன் மேல் வைத்திருக்கிற அன்பு அவனை திக்குமுக்காட வைத்தது. "அங்கே எப்ப போகணும் குருஜி?"

"மூன்று நாள்ல போகணும் கணபதி. அங்கே போகிற நாள்ல இருந்து உனக்கு தினம் ஆயிரம் ரூபாய் தரணும்னு சொல்லி இருக்கேன். ஜான்சனும் ஒத்துகிட்டு இருக்கார்"

'ஒரு நாளுக்கு ஆயிரம் ரூபாயா?' கணபதி திகைத்தான். சிவலிங்கத்திற்குப் பூஜை செய்ய தினம் ஐநூறு ரூபாய் வாங்குவதே தவறு என்று சில நாட்களாக அவனுக்கு அதிகம் தோன்ற

ஆரம்பித்திருக்கிறது. ’பணம் வாங்கிக் கொண்டு தானே நீ எனக்கு பூஜை செய்கிறாய்?’ என்று சிவன் கேட்பது போல ஒரு பிரமை அவனுக்கு வந்திருக்கிறது. இப்படி இருக்கையில் அதிக பணம் வாங்குவது அதிகத் தவறாய் தோன்ற கணபதி சொன்னான். ”அதெல்லாம் எனக்கு வேண்டாம் குருஜி.”

குருஜி சொன்னார். “நீ இப்படி சொல்கிறாய். சிவன் நேத்து என் கனவில் வந்து ’கணபதி குடும்பத்தில் ஆக வேண்டியது நிறைய இருக்கிறது. பணம் அதிகமாய் வாங்கிக் கொடு’ன்னு சொல்லிட்டார். உனக்காக அவரே சொல்லிட்ட பிறகு நான் வாங்கித் தரா விட்டால் அவர் கோபத்திற்கு நான் ஆளாக வேண்டும் கணபதி”

கணபதி கண்களில் பெருகும் நீரை அடக்கக் கஷ்டப்பட்டான். ’சிவனே, நான் என் சொந்தக் கஷ்டங்களை உன்னிடம் சொன்னதை எல்லாம் கேட்டுகிட்டு இவ்வளவு பெரிய மனசு செய்து குருஜி கனவில் போய் சிபாரிசு செய்திருக்கிறாயே! நான் உன் முன்னால் உட்கார்ந்து வெட்டிப் பேச்சு பேசினதையும் சீடை சாப்பிட்டதையும் கூட நீ பெரிசா எடுத்துக்கலையே, உன் அருளுக்கு எல்லையே இல்லையா?’

**************

ஈஸ்வரின் மனநிலை அன்று சரியில்லாமல் இருந்ததற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று விஷாலி அவனிடம் பேசியது, இரண்டாவது அன்று அவன் தந்தையின் பிறந்த நாள்.

விஷாலி பேசிய போது அலட்டிக் கொள்ளாதது போல் காட்டிக் கொண்டாலும் அவள் குரலைக் கேட்டதுமே அவன் ஈகோவைப் பற்றிக் கவலைப்படாமல் மனம் வெட்கமில்லாமல் சிலிர்த்து பரவசமானதை அவனால் சகித்துக் கொள்ளவே முடியவில்லை. இந்த மனதிற்கு சூடு, சொரணை, வெட்கம், மானம் எதுவும்

*கிடையாதா என்று கோபித்துக் கொண்டு மனதை அடக்க வேண்டி வந்தது. அவளாகவே சாரி என்று விட்டாளே, இனி என்ன என்று மனம் சொன்ன போது, 'அவள் வேண்டும் என்று நினைத்தால் வலிய வந்து பேசுவாள், வேண்டாம் என்று தோன்றினால் வெட்டி எறிந்து விடுவாள். அவள் இழுத்த இழுப்பிற்குப் போக வேண்டுமா' என்று கேள்வி கேட்டு மறுக்க வேண்டி வந்தது. பதிலேதும் சொல்ல முடியா விட்டாலும் மனம் ஏனோ அவளை அலட்சியப்படுத்தியதில் வலித்தது.*

*அடுத்த காரணம் தந்தையின் பிறந்த நாள். தந்தை இருந்த வரை இந்த நாளில் அவன், அம்மா, அப்பா மூவரும் தனியாக எங்காவது போய் கொண்டாடுவார்கள். இன்று அவர் இல்லை. அவன் இங்கு தனியாக, அம்மா அமெரிக்காவில் தனியாக....! அப்பா நினைவு இன்று அதிகமாக வந்தது. அவருடைய சாந்தமான முகம், அவர் காட்டிய அபரிமிதமான பாசம்..... இதை எல்லாம் யோசித்துப் பார்க்கும் போது மனம் வலித்தது.*

*அம்மாவிற்குப் போன் செய்து பேசினான். அம்மா குரலில் இருந்து அவளும் அவர் நினைவின் துக்கத்தில் இருப்பது புரிந்தது.*

*"என்னம்மா செய்துகிட்டு இருக்கே?"*

*"அப்பா படிச்சிகிட்டிருந்த புஸ்தகம் எல்லாம் எடுத்து தூசி தட்டி வச்சுகிட்டிருக்கேன்"*

*அப்பா நிறைய புத்தகங்கள் படிப்பார்... அதிகமாய் படிப்பது அறிவியல் புத்தகங்களை... இறப்பதற்கு இரண்டு நாள் முன்பு கூட ஐன்ஸ்டீனின் க்வாண்டம் தியரி சம்பந்தமாக தற்கால விஞ்ஞானிகள் கூடுதலான ஆராய்ச்சிகள் பற்றிய புத்தகத்தை அவர் ஆர்வத்துடன் படித்துக் கொண்டிருந்தார்....*

*”ஈஸ்வர்…”*

*“சொல்லும்மா”*

*“அப்பா கடைசியா படிச்சுகிட்டிருந்த க்வாண்டம் தியரி புஸ்தகத்துக்குள்ளே…” அம்மா அந்த வாக்கியத்தை நிரப்ப முடியாமல் தடுமாறினாள்.*

*“சொல்லும்மா… அதுக்குள்ளே என்ன?”*

*”உன் தாத்தா ஃபோட்டோ இருந்ததுடா….” சொல்லச் சொல்ல அம்மா அழுது விட்டாள்.*

*“அதுக்கு ஏம்மா நீ அழறே?”*

*“அவர் அவ்வளவு நேசிச்ச அவரோட அப்பா கிட்ட இருந்து நான் அவரைப் பிரிச்சுட்டேனேங்கிறதை நினைக்கிறப்ப மனசு தாங்கலைடா….” அம்மா குமுறிக் குமுறி அழுதாள். தொடர்ந்து பேச முடியாமல் போனை அவள் வைத்து விட்டாள்.*

*ஈஸ்வருக்கு அம்மாவின் துக்கம் தாங்க முடியாததாக இருந்தது. பரமேஸ்வரன் மீது கோபம் கோபமாய் வந்தது. அத்தனை நேசித்த மகனை அந்த ஆளால் எப்படி வெறுக்கவும், அலட்சியப்படுத்தவும் முடிந்தது? அவன் மனம் எரிமலையாய் குமுறிக் கொண்டிருக்கையில் மீனாட்சி வந்து சாப்பிட அழைத்து விட்டுப் போனாள்.*

*ஈஸ்வர் போன போது டைனிங் ஹாலில் பரமேஸ்வரன், ஆனந்தவல்லி, விஸ்வநாதன் மூவரும் இருந்தார்கள். மகேஷை ஏனோ இரண்டு நாட்களாய் பார்க்க முடியவில்லை. மீனாட்சி அண்ணனின் பிறந்த நாளை நினைவு வைத்து அண்ணனிற்குப் பிடித்த சமையல் வகைகளை எல்லாம் செய்திருந்தாள்.*

*ஆனந்தவல்லி கொள்ளுப் பேரன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்ததைப் பார்த்து கேட்டாள். "ஏண்டா என்னவோ மாதிரி இருக்கே?"*

*ஈஸ்வர் சொன்னான். "இன்னைக்கு எங்கப்பா பிறந்த நாள்.... அவர் ஞாபகம் வந்தது..."*

*ஆனந்தவல்லி தன் மகனை ஓரக்கண்ணால் பார்த்தாள். இந்தக் கேள்வியைக் கேட்டிருக்க வேண்டாம் என்று அவளுக்குத் தோன்றியது. பரமேஸ்வரன் இறுகிய முகத்துடன் சாப்பிட ஆரம்பித்தார்.*

*ஈஸ்வர் பரமேஸ்வரனைப் பார்த்தபடியே மீனாட்சியிடம் சொன்னான். "அம்மா போன் பண்ணி இருந்தாங்க அத்தை..."*

*மீனாட்சி கேட்டாள். "அண்ணி எப்படி இருக்காங்க?"*

*"அவங்களுக்கும் அப்பா ஞாபகம் தான்.... அவர் உயிரோட இருக்கறப்ப நாங்க மூணு பேரும் எங்கேயாவது ஒரு பிக்னிக் ஸ்பாட்டுக்குப் போவோம்"*

மீனாட்சி தந்தையைப் பார்த்தாள். அண்ணன் சங்கரின் பிறந்த நாளுக்கு இங்கும் அவளும், அண்ணனும், அப்பாவுமாக எங்காவது போவார்கள்....

பரமேஸ்வரன் எழுந்து போய் விடலாமா என்று யோசித்தார்.

ஈஸ்வர் சொன்னான். "அப்பா கடைசியாய் படிச்சுகிட்டிருந்த புஸ்தகத்தை அம்மா எடுத்துப் பார்த்தாங்களாம்.... அதுக்குள்ளே அவரோட அப்பாவோட ஃபோட்டோ இருந்துச்சாம்....."

பரமேஸ்வரன் சாப்பிடுவதை நிறுத்தி தட்டில் கை கழுவி விட்டார். மீனாட்சி தர்மசங்கடத்துடன் தந்தையையும் மருமகனையும் பார்த்தாள்.

ஈஸ்வர் விடுவதாக இல்லை. "அவருக்கு அவங்கப்பான்னா உயிர்.... அவரை அவங்கப்பா நேசிச்ச மாதிரி உலகத்துல எந்த அப்பாவும் எந்த மகனையும் நேசிச்சு இருக்க முடியாதுன்னு அடிக்கடி சொல்வார்....."

பரமேஸ்வரன் இதயத்தில் இமயம் ஏறியது. எழுந்து அங்கிருந்து போய் விட நினைத்து எழுந்தார். ஆனால் மூச்சு விட முடியவில்லை.... நெஞ்சுக்குள் ஏதோ இறுக்கிப் பிடித்தது. அப்படியே நெஞ்சைப் பிடித்துக் கொண்டு அவரை அறியாமல் சாய்ந்தார்.

ஈஸ்வர் இதைச் சிறிதும் எதிர்பார்த்திருக்கவில்லை.... தன் வார்த்தைகள் மாரடைப்பை ஏற்படுத்தும் அளவுக்கு அவரைப் பாதிக்கும் என்று அவன் நினைக்கவேயில்லை. குற்ற உணர்ச்சியுடன் அவன் அதிர்ந்து போனான். ஓடி வந்து அவரைத் தாங்கிப் பிடித்துக்

***கொண்டான். "தாத்தா என்ன ஆச்சு...." அவனை அறியாமல் வார்த்தைகள் வெளி வந்தன.***

***பரமேஸ்வரன் நினைவை இழக்கும் முன் கேட்ட கடைசி வார்த்தைகள் அவை. அவரை அவர் பேரன் முதல் முறையாக தாத்தா என்று அழைத்திருக்கிறான். அவரை முதல் முறையாகத் தொட்டிருக்கிறான்.....***

***பரமேஸ்வரன் நினைவிழந்தார்.***

# ***<u>அத்தியாயம் - 52</u>***

***சாதாரண காலங்களில் சாமர்த்தியமாக இருக்கும் பலர் ஆபத்துக் காலங்களில் ஸ்தம்பித்துப் போய் விடுவதுண்டு. அப்படித்தான் விஸ்வநாதன், ஆனந்தவல்லி, மீனாட்சி மூவரும் பரமேஸ்வரனின் மாரடைப்பின் போது அதிர்ச்சியில் என்ன செய்வதென்று புரியாமல் சில நிமிடங்கள் செயலற்றுப் போய் இருந்தார்கள். ஆனால் ஈஸ்வர் மின்னல் வேகத்தில் இயங்கினான். அவனும் அதிர்ச்சியிலும், குற்ற உணர்விலும் பாதிக்கப்பட்டுத் தான் இருந்தான் என்றாலும் அது அவன் வேகமாக முடிவெடுக்கும் திறனையோ, அதனை செயல் படுத்தும் விதத்தையோ பாதித்து விடவில்லை. அடுத்த அரை மணி நேரத்தில் தாத்தாவை அவன் டாக்டர்களிடம் சேர்த்திருந்தான்.***

***ஐ.சி.யூ வின் வெளியே அமர்ந்திருந்த ஈஸ்வர், விஸ்வநாதன், மீனாட்சி மூவரின் மனநிலைகளும் வேறு வேறு விதமாக இருந்தன.***

ஈஸ்வர் பரமேஸ்வரனுக்கு உறைக்க வேண்டும், அவர் ஏதாவது பேசினால் நாக்கைப் பிடுங்குகிற படி கேள்வி கேட்க வேண்டும் என்று தான் நினைத்து இருந்தான். அவரை அவ்வளவு தூரம் நேசித்த அவன் தந்தையை என்றோ இறந்து விட்டதாக அவர் சொன்னதை அவனால் இன்னமும் ஜீரணிக்க முடியவில்லை. அதுவும் மகன் மரணத்தைத் தெரிவித்த மருமகளிடம் அவர் அப்படிச் சொல்ல முடிந்தது கல்நெஞ்சம் என்றே அவனுக்குத் தோன்றியது. ஆனாலும் சங்கர் கடைசி வரை தந்தையை கல் நெஞ்சனாக ஒப்புக் கொண்டதில்லை. அவனுடைய தந்தை சாந்தமானவரே ஒழிய இல்லாத ஒன்றை நம்பும் அளவு முட்டாள் அல்ல. அவன் தந்தை நினைத்ததும், அவர் தந்தை நடந்து கொண்டதும் ஒன்றுக்கொன்று முரண்பாடுகளாக இருந்தன. ஒரு மனோ தத்துவ நிபுணரான அவனுக்கு இந்த முரண்பாடுகளைப் புரிந்து கொண்டால் ஒழிய மண்டை வெடித்து விடும் போல இருந்தது. அதனால் தான் பரமேஸ்வரனின் உள் மனதில் உள்ளதை அறிய நினைத்து அவரிடம் அப்படி நடந்து கொண்டான். ஆனால் அவருக்கு மாரடைப்பு வந்தது அவனை குற்ற உணர்ச்சிக்கு உள்ளாக்கியது. அவர் மேல் இருந்த அத்தனை பகைமையும் காணாமல் போனது.

ஒரு மனிதன் பெரிதாக நோய்வாய்ப் படும் தருணத்தில் ஆரம்பத்தில் உள்ள அவன் மன உறுதியோ, அல்லது தைரியக்குறைவோ அவன் சீக்கிரம் குணமடைவானா மாட்டானா என்பதை முக்கியமாய் நிர்ணயிப்பதாக இருக்கிறது என்று அவன் மிகவும் மதிக்கும் ஒரு வயதான மருத்துவர் அடிக்கடி சொல்வார். நோய் குணமாகி நலமடைய ஒருவனுடைய ஆழ்மனதில் ஒரு உறுதி இருக்குமானால் அவன் உடல் அந்தக் கட்டளைக்கு ஏற்ப குணமாக வேண்டிய அத்தனை வேலைகளையும் செய்யும் என்பார்.

எனவே பரமேஸ்வரனை ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போகையில் அவருக்கு நினைவு கொஞ்சமாவது இருக்கிறதோ

இல்லையோ மீனாட்சியிடம் சத்தமாக அவன் சொல்லிக் கொண்டு வந்தான். "பயப்படாதீங்க அத்தை. தாத்தாவுக்கு ஒண்ணும் ஆகாது. குணமாயிடுவார்." வழியில் அரைகுறையாய் அவர் கண்களைத் திறந்து பார்த்த போது "நீங்கள் குணமாயிடுவீங்க தாத்தா. நீங்கள் குணமாகணும்..... உங்களால தாக்குப் பிடிக்க முடியும்" என்று சொன்னான்.

பின் குரல் உடைந்தவனாக ஈஸ்வர் அவரிடம் சொன்னான். "நான் இனிமே கண்டிப்பா எங்கப்பா பத்தி பேச மாட்டேன் தாத்தா. சாரி. உங்களுக்கு ஏதாவது ஆச்சுன்னா எங்கப்பா என்னை மன்னிக்க மாட்டார் தாத்தா. ப்ளீஸ் எனக்காக குணமாயிடுங்க தாத்தா"

கேட்டுக் கொண்டிருந்த மீனாட்சியால் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ஈஸ்வர் கண்களும் ஈரமாய் இருந்தாலும் அத்தையிடம், அவருக்குத் தெரிகிற மாதிரி அழ வேண்டாம் என்று சைகையால் தெரிவித்தான். பரமேஸ்வரன் காதில் அவன் சொன்னது விழுந்த்தா இல்லையா என்று தெரியவில்லை. அவர் கண்கள் மறுபடி மூடிக் கொண்டன. ஆஸ்பத்திரியில் தாத்தாவைச் சேர்த்த பின் அவர் கண்டிப்பாக நலமாக வீடு திரும்ப வேண்டும் என்று கடவுளிடம் மனமுருக பிரார்த்தனை செய்தான். அவருக்கு ஏதாவது ஆனால் மீனாட்சியையும், ஆனந்தவல்லியையும் நேருக்கு நேர் பார்க்க அவனால் முடியாது என்று தோன்றியது. இப்போதும் ஆனந்தவல்லியின் வெளிறிய முகம் அவனுக்கு நினைவுக்கு வந்தது. சில நாட்களுக்கு முன் தான் அவள் மூத்த மகனை இழந்திருக்கிறாள், இப்போது இளைய மகனுக்கு ஏதாவது ஆனால் அவள் அவனை மன்னிக்க மாட்டாள் என்று தோன்றியது. மீனாட்சியும் அவன் தந்தையைப் போலவே பரமேஸ்வரன் மீது பாசம் வைத்திருப்பவள். அவளும் அவனை வாய் விட்டு எதுவும் சொல்லா விட்டாலும் கூட அவள் துக்கமும் சாதாரணமாக இருக்காது....

மீனாட்சி சோகமே உருவாக அமர்ந்திருந்தாள். அவள் தாயைப் பார்த்ததில்லை. தாயாய், தந்தையாய், நண்பனாய், எல்லாமாய் ஆரம்பத்தில் இருந்து அவளுக்கு தந்தை தான் இருந்தார். அவள் வேண்டும் என்று எதையாவது நினைத்து முடிக்கும் போது அவளிடம் அவர் கொண்டு வந்து சேர்த்திருந்தார். அவளுடைய அண்ணன் காதல் திருமணம் செய்து கொண்டு போன பின்னோ அவர் உலகம் முழுவதுமாக அவளாகத் தான் இருந்தது. அதனால் அவள் துக்கம் இயல்பாகவே அதிகமாக இருந்தது.

ஈஸ்வர் பேசிய பேச்சு அவரை அப்படி பாதித்தது அவளுக்கு அதிர்ச்சியையும் துக்கத்தையும் தந்தது என்றால், ஈஸ்வர் ’நான் இனிமே கண்டிப்பா எங்கப்பா பத்தி பேச மாட்டேன் தாத்தா. சாரி. உங்களுக்கு ஏதாவது ஆச்சுன்னா எங்கப்பா என்னை மன்னிக்க மாட்டார் தாத்தா’ என்று சொன்னது அவள் இதயத்தை உருக்கியே விட்டது. ‘கடவுளே எனக்காக இல்லாட்டியும் ஈஸ்வருக்காகவாவது எங்கப்பாவைக் காப்பாற்றி விடு. பாவம் குழந்தை தன் மேல தான் தப்புன்னு வாழ்நாள் பூரா நினைக்கிற மாதிரி வச்சிடாதே” என்று அவள் மனதில் பிரார்த்தித்துக் கொண்டாள்.

அவள் மகன் மகேஷ் இல்லாததும் அவளுக்கு வருத்தமாக இருந்தது. “மகேஷ் எங்கே தான் போயிட்டான்?” என்று கணவனைக் கேட்டாள்.

”தெரியலை. ரெண்டு தடவை ரிங் செய்தேன். ஸ்விட்ச்டு ஆஃப் மெசேஜ் தான் வருது. இரு.. இன்னொரு தடவை செஞ்சு பார்க்கிறேன்” என்ற விஸ்வநாதன் அந்த வராந்தாவின் மறுகோடிக்குச் சென்று மறுபடி மகனைத் தொடர்பு கொள்ள முயற்சித்தார்.

மகேஷ் போய் இரண்டு நாளாகிறது. அவன் அவ்வப்போது ஓரிரு நாட்கள் தன் நண்பர்களுடன் தங்கிக் கொள்வது சகஜம். இந்த முக்கியமான தருணத்தில் அவன் இல்லாமல் இருப்பது அவருக்குப் பெரிய குறையாகத் தெரிந்தது. இந்த வீட்டில் ஈஸ்வர் கையோங்கிக் கொண்டிருக்கும் போது அடிக்கடி மகேஷ் காணாமல் போவது ஈஸ்வருக்கு அனுகூலமாகப் போகும் என்று அவர் நம்பினார். கிழவர் கண் முன்னால் மகேஷ் அனுசரணையாக இருப்பது முக்கியம் என்று அவர் நினைத்தார். ஈஸ்வர் தேளாக தாத்தாவைக் கொட்டுகையில் மகேஷ் அவர் மீது அன்பு மழை பொழிந்தால் சொத்தை தக்க வைத்துக் கொள்வது சுலபமாகி விடும் என்று விஸ்வநாதன் நினைத்தார்.

மகேஷ் சில சமயங்களில் இதெல்லாம் புரிவது போல நடந்து கொண்டாலும் சில சமயங்களில் பொறுப்பில்லாமல் அலட்சியமாக நடந்து கொள்கிறான் என்று அவருக்குத் தோன்றியது. இதை எல்லாம் அவரால் மனைவியிடம் கூடச் சொல்ல முடியவில்லை....

இந்த முறை போன் மணி அடித்தது. மகேஷ் பேசினான். “ஹலோ”

“எங்கேடா இருக்கே?”

“ஏம்ப்பா? என்ன விஷயம்”

நடந்ததைத் தெரிவித்த விஸ்வநாதன் “சீக்கிரம் வாடா. உன் தாத்தா பிழைச்சுட்டா ரொம்ப சுலபமாய் ஈஸ்வர் உன் இடத்தைப் பிடிச்சுக்குவான். இப்பவே அவன் அவரைத் தாத்தான்னு சொல்ல ஆரம்பிச்சாச்சு. உங்களுக்கு ஏதாவது ஆச்சுன்னா எங்கப்பா என்னை மன்னிக்க மாட்டார்னு எல்லாம் சொல்லியாச்சு. இதெல்லாம்

நடக்கறப்ப நீ எங்கேயோ இருக்கே. இப்படியே போச்சுன்னா நீ விலகியே இருக்க வேண்டியது தான்" என்று பல்லைக் கடித்துக் கொண்டு சொன்னார்.

"நான் உடனே வர்றேன்ப்பா" மகேஷ் பரபரப்போடு சொன்னான்.

திரும்ப மனைவி அருகே வந்தமர்ந்த விஸ்வநாதன் சொன்னார். "மகேஷ் கிடைச்சான். விஷயத்தை சொன்னேன். கேட்டு துடிச்சுப் போயிட்டான். உடனே வர்றதா சொன்னான்."

மீனாட்சி குரலடைக்கச் சொன்னாள். "அவனுக்கு தாத்தான்னா உயிரு"

டாக்டர் அவர்களிடம் வந்தார். பரமேஸ்வரன் இதயத்தில் மூன்று அடைப்புகள் இருக்கின்றன என்றும், அவருடைய சர்க்கரை வியாதி, ரத்த அழுத்தம் இரண்டும் சரியான அளவிற்குக் கொண்டு வந்து உடனடியாக அறுவை சிகிச்சை செய்தால் பிழைக்க வாய்ப்பு உள்ளது என்றும் சொன்னார். ஆனால் அப்போதும் அவர் பரமேஸ்வரன் உயிருக்கு உத்திரவாதம் சொல்ல முடியாது என்பது போலச் சொன்னார். பரமேஸ்வரன் வயது, மற்ற விதங்களில் உடல்நிலையில் இருக்கும் கோளாறுகள் எல்லாம் சேர்ந்து உத்திரவாதம் தர முடியாத நிலையை உருவாக்கி இருப்பதாய் சொன்னார். ஈஸ்வர் 'என்ன செய்ய வேண்டுமோ அதை உடனடியாகச் செய்ய ஆரம்பியுங்கள்' என்று அவரிடம் சொன்னான்.

எல்லாவற்றையும் அவனே தீர்மானித்துப் பேசுவது விஸ்வநாதனுக்குப் பிடிக்கவில்லை. மகேஷ் இருந்திருந்தால் இங்கே அவன் முக்கியத்துவம் பெற்றிருக்க முடியும் என்று தோன்றியது.

சர்க்கரை அளவு, ரத்த அழுத்தம் இரண்டையும் சரியான அளவுக்குக் கொண்டு வந்து அறுவை சிகிச்சை செய்ய எப்படியும் நாளை ஆகிவிடும் என்பதால் ஈஸ்வர் மீனாட்சியை வீட்டுக்குப் போகச் சொன்னான். “பாட்டியும் வீட்டுல தனியாக இருக்காங்க அத்தை. நீங்க போயிட்டு நாளைக்கே வாங்க....”

டாக்டர் சொன்னதைக் கேட்டு இடிந்து போய் அமர்ந்திருந்த மீனாட்சி அரை மனதோடு எழுந்தாள். பாட்டியின் தனிமை இப்படிப்பட்ட நேரத்தில் மிக வேதனையானது என்பதை அவளால் உணர முடிந்தது. ஈஸ்வர் சொன்னவுடன் மனைவி கிளம்பியதையும் விஸ்வநாதனால் சாதாரணமாக எடுத்துக் கொள்ள முடியவில்லை. ‘இவனிடம் இயல்பாகவே தலைமைப்பண்பு உள்ளது. எல்லா சூழ்நிலைகளையும் தானே கையில் எடுத்துக் கொள்கிறான். இவனை சங்கர் போல அலட்சியமாக எடுத்துக் கொள்ள முடியாது’ என்று அவருக்குத் தோன்றியது.

ஈஸ்வர் சொன்னான். “மாமா நீங்களும் போகிறதானால் போகலாம். எல்லாரும் இங்கே இருந்து எதுவும் செய்யப் போகிறதில்லை”

“நான் மகேஷ் வருகிற வரைக்கும் இருக்கேன்” என்று விஸ்வநாதன் உறுதியாகச் சொன்னார்.

மீனாட்சி வீட்டுக்கு வந்த போது ஆனந்தவல்லி ஹாலில் வாசலைப் பார்த்தபடியே அமர்ந்திருந்தாள். பேத்தியைப் பார்த்தவுடன் கேட்டாள். “உங்கப்பா எப்படிடி இருக்கான்? டாக்டர் என்ன சொல்றார்?”

டாக்டர் சொன்னதை வருத்தத்தோடு பாட்டியிடம் மீனாட்சி தெரிவித்தாள். சொல்லச் சொல்ல மீனாட்சி அழுதாள். ஆனந்தவல்லி உள்ளே மிக தளர்ந்து போய் இருந்தாலும் வெளியே அதைக் காட்டிக் கொள்ளவில்லை. பேத்திக்கு தைரியம் சொன்னாள். "எல்லாம் சரியாயிடும்டி. கவலைப்படாதே"

போகும் போது ஈஸ்வர் பரமேஸ்வரனிடம் குரலுடைந்து சொன்னதையும் மீனாட்சி பாட்டியிடம் சொன்னாள். கேட்ட ஆனந்தவல்லி முகம் மென்மையாகியது. அவள் மெல்ல தனதறைக்குக் கிளம்பினாள். அவள் நடை மிகவும் தளர்ந்திருந்ததைக் கவனித்த மீனாட்சி பாட்டியைக் கைத்தாங்கலாகப் பிடித்துக் கொண்டு வந்தாள்.

அறைக்குள் வந்தவுடன் ஆனந்தவல்லி பேத்தியிடம் சொன்னாள். "நீ போய் மத்த வேலையைக் கவனி மீனாட்சி"

மீனாட்சி பாட்டியைத் தனியாக விட்டுப் போக தயக்கம் காட்டினாள்.

தன் நாற்காலியில் அமர்ந்து கொண்ட ஆனந்தவல்லி சொன்னாள். "எனக்கு தனியா இருக்கணும் போல இருக்கு..."

அதற்கு மேல் அங்கே தங்கினால் பாட்டி எரிந்து விழுவாள் என்று புரிந்து கொண்ட மீனாட்சி கிளம்பினாள்.

ஆனந்தவல்லி பேத்தி போனவுடன் தன் மூத்த மகனின் புகைப்படத்தையே சிறிது நேரம் உற்று பார்த்தாள். அது பசுபதியின் கடைசிப் புகைப்படம். இரண்டு நாளைக்கு முன்பு தான் பிரேம் போட்டு பரமேஸ்வரன் கொண்டு வந்து தாயிடம் தந்திருந்தார்.

ஆனந்தவல்லி மூத்த மகனிடம் உணர்ச்சிப் பிரவாகத்துடன் பேச ஆரம்பித்தாள்.

“எங்கேடா இருக்கே? கைலாசத்துலயா? இல்லை வேற எதாவது உலகத்திலேயா? இங்கே என் நிலைமையை நீ பார்த்தியா? வெளியே பட்டுப் புடவை, நிறைய நகைகள்னு நல்லாத் தான் தெரியறேன். உள்ளே ரணகளமாய் இருக்கு. எல்லாம் தெரிஞ்ச ஞானின்னு உங்கப்பா பெருமையா உன்னைப் பத்திச் சொல்வாரு. உனக்கு என்னோட துக்கம் தெரியுதாடா?”

“தெரிஞ்சா தான் உனக்கென்ன? நீ உயிரோடு இருக்கறப்பவே பெத்தவளைக் கண்டுகிட்டது இல்லை. உலகத்தை விட்டுப் போனதுக்கப்பறமா நீ கண்டுக்கப் போற? என்னை விட்டுத் தள்ளு. உன் தம்பி உயிரைக் காப்பத்தறது கஷ்டம் தான்னு டாக்டர் சொல்றாராம். அவன் உன் மேல் உயிரையே வச்சிருந்தாண்டா. அப்படிப்பட்ட அவனுக்கு நீ தான் எமனாய் வந்து வாய்ச்சிருக்கேன்னு நான் சொல்றேண்டா.”

“உன்னோட பாழா போன சிவலிங்கத்தை நீ ஏண்டா அவன் பேரன் கிட்ட சேர்த்திடச் சொன்னே. அவனே மகனை மறந்துட்டு அப்படியொரு பேரன் இருக்கறதையும் மறந்துட்டு இருந்தான். நீ சொன்னாய்னு சொல்லி தாண்டா அந்தப் பேரன் அவன் முகத்தில் அடிக்கற மாதிரி பேசினாலும் திரும்பவும் பேசினான். அவன் தன் வாழ்க்கைல முதல் தடவையா கவுரவம் பார்க்காமல் இவ்வளவு தூரம் இறங்கிப் போனது உனக்காகத் தாண்டா! நான் கூட வேண்டாம்னு சொன்னேன். அண்ணன் என் கிட்ட இது வரைக்கும் எதுவுமே கேட்டதில்லைம்மா. முதல் தடவையாய் கேட்டிருக்கான். அதை எப்படிமா நான் செய்யாமல் விடறதுன்னு சொன்னான்டா. நீ சொன்ன அவனோட பேரன் இங்கே வந்ததுக்கப்பறம்

*நடந்துகிட்டதையும் பேசினதையும் தாங்காமல் தான் அவனுக்கு மாரடைப்பு வந்துருக்குடா. கூப்பிடாம அந்தப் பையனும் வந்திருக்க மாட்டான். வராமல் இருந்திருந்தால் இப்படி எல்லாம் நடந்தும் இருக்காது. இப்படி இத்தனைக்கும் மூல காரணம் நீ தானேடா"*

*"நீ அவனுக்காக இது வரைக்கும் என்னடா பெரிசா செய்திருக்கே. சொத்தைக் கொடுத்தேன்னு சொல்லாதேடா. என்னடா பெரிய சொத்து. உனக்கு வேண்டாத ஒன்னை, பெரிசுன்னு நீ நினைக்காத ஒன்னை, அவனுக்குத் தந்ததுல பெருமை என்னடா இருக்கு? அந்த சிவலிங்கத்தை தூக்கிக் கொடுத்திருப்பியாடா நீ?"*

*"நீ அவனுக்காக இது வரைக்கும் என்னடா செஞ்சிருக்கே? அவனுக்கு கல்யாணம் ஆனப்ப அப்பா ஸ்தானத்துல நின்னு வாழ்த்தியாவது இருக்கியாடா? கல்யாணம் முடிஞ்ச கையோட அவனா மனைவியோட, நீ இருக்கிற இடத்துக்கு வந்து ஆசிர்வாதம் வாங்கினான். அவனுக்கு ரெண்டு குழந்தைகள் பிறந்துச்சு. ஒரு தடவை நீ வந்து பார்த்திருப்பியாடா? அவனாய் குழந்தைகளை உன் கிட்ட கொண்டு வந்து காண்பிச்சான். அவன் பொண்டாட்டி செத்துப் போனா. அதுக்கு நீ வரலை. அவன் பொண்ணுக்குக் கல்யாணம் செய்தான். அதுக்கு நீ வரலை. இப்படி அவன் சம்பந்தப்பட்ட எதுக்குமே நீ வரலை. ஆனால் கூட அண்ணனைப் பார்க்க மாசம் ஒரு தடவையாவது அவன் வராமல் இருந்ததில்லையேடா? உன்னைப் பத்து மாசம் சுமந்து பெத்த நான் கூட உன் அலட்சியத்தை சகிச்சுக்க முடியாம உன்னைப் பார்க்க வர மாட்டேன்னு வீம்பா இருந்தேன். என்னை மாதிரியே அவனுக்கும் தன்மானம் கவுரவம் நிறைய இருந்தாலும் அதை உன் ஒருத்தன் கிட்ட மட்டும் காட்டாமல் அண்ணா அண்ணான்னு உன்னைப் பார்க்க வந்துகிட்டிருந்தானேடா அவன்."*

*“உன்னைக் கொல்றப்ப கூட உன் பத்மாசனம் கலையலை. உடம்பில் அவ்வளவு வலு இருக்கிற நீ நினைச்சிருந்தா அந்தக் கொலைகாரனை சுலபமா சமாளிச்சிருக்கலான்னு அந்தப் போலீஸ்காரன் சொன்னாண்டா. அந்த ஆள் நீ செய்துகிட்டது கிட்டத்தட்ட தற்கொலை மாதிரின்னு சொல்லாமல் சொன்னான்டா. இதை எல்லாம் செய்யறப்ப பெத்தவ ஒருத்தி இன்னும் உசிரோட இருக்கா, அவளால இதெல்லாம் தாங்க முடியுமான்னு நீ யோசிச்சியாடா? நீ போனதுக்கப்புறம் சிவலிங்கம் ஈஸ்வர் கிட்ட சேரணும் சொன்னியே, சிவலிங்கத்துக்கு மேல் இருந்த அக்கறை உனக்கு உன் பெத்தவ மேல இல்லையேடா? நான் உனக்கு என்னடா அப்படி துரோகம் செய்துட்டேன். சாகறதுக்கு முன்னாடி ஒரு தடவை கூப்பிட்டு பேசிட்டா பெத்த கடன் முடிஞ்சுடும்னு நினைச்சிட்டியாடா? முடியாதுடா”*

*”இத்தனையும் சகிச்சுகிட்டேன். எனக்கு கொள்ளி போட இன்னொரு மகன் இருக்கான்கிற ஒரு ஆறுதல் எனக்கு இருந்துச்சு. இப்ப அதுக்கும் ஆபத்து வந்திருக்குடா? நான் இனி பிழைச்சு என்ன பிரயோஜனம் சொல்லு.”*

*ஆனந்தவல்லி வாய் விட்டு அழுதாள். தாங்க முடியாத துக்கத்தை சிறிது நேரம் அழுது ஓரளவு இறக்கிக் கொண்டவள் கண்களைத் துடைத்துக் கொண்டு மூத்த மகன் புகைப்படத்தைப் பார்த்துப் பேசின போது அவள் குரலில் கடுமையும், ஆணித்தரமான உறுதியும் இருந்தது.*

*“இதையெல்லாம் உன் கிட்ட இப்ப ஏன் சொல்றேன்னு பார்க்கிறியா? நீ எனக்கு இது வரைக்கும் எதுவும் செய்ததில்லை, உன் தம்பிக்கு சுத்தமாவே எதுவும் செய்ததில்லைன்னு சொல்றேன். மனுசன் முதல்ல மனுசனா இருக்கணும்டா. பக்தி, சக்தி, கடவுள், மண்ணாங்கட்டி அதெல்லாம் அப்புறம். நீ கும்பிட்ட சிவனே*

*குடும்பஸ்தன் தானடா. அப்படி இருக்கறப்ப நீ உன் குடும்பத்தை அலட்சியப்படுத்தினது என்னடா நியாயம். எனக்கில்லாட்டியும் உன் தம்பிக்கு நீ நிறையவே கடன்பட்டிருக்கேடா. அவன் உயிரைக் காப்பாத்தற பொறுப்பு உனக்கு இருக்குடா. நான் மத்தவங்களைப் போல கடவுள் கிட்ட எதுவும் வேண்டிக்க மாட்டேன். கடவுளுக்கும் எனக்கும் எந்த கொடுக்கல் வாங்கலும் இல்லை. ஆனா உன் கிட்ட இருக்கு. பெத்தவ கேட்கறேன். உன் தம்பியை நீ பிழைக்க வைக்கணும். வாழ்நாள் பூரா நீ உன் சிவலிங்கம்னு சுயநலமாவே இருந்துட்டே. நீ இப்ப எந்த உலகத்துலே இருந்தாலும் சரி உன் குடும்பத்துக்காக இந்த ஒரு நல்ல காரியத்தையாவது செய்யுடா. நான் இது வரைக்கும் யார் கிட்டயும் எதுக்கும் கை ஏந்தினதில்லைடா. இப்ப உன் கிட்ட பிச்சை கேட்கறேண்டா. அவனைக் காப்பாத்துடா...!" சொல்லச் சொல்ல அவள் குரல் உடைந்து போனது.*

*பசுபதி சாந்தம் மாறாமல் தாயைப் பார்த்துக் கொண்டிருக்க ஆனந்தவல்லி விடாமல் பேசிய களைப்பில் கண்களை மூடிக் கொண்டாள். இறந்து போன மகனிடம் பேசியதெல்லாம் பைத்தியக்காரத்தனமா என்று அவளுக்குத் தெரியவில்லை. ஆனால் கடவுளிடம் இல்லாத நம்பிக்கை அவளுக்கு ஏனோ அவள் மூத்த மகனிடம் இருந்தது. அவள் கணவர் அவளுடைய மூத்த மகனை சக்தி வாய்ந்த மகான் என்று சொல்லி இருந்தார். மகான்கள் சக்தி அவர்கள் மரணத்துடன் முடிந்து விடுவதில்லை...!*

# ***<u>அத்தியாயம் - 53</u>***

*மகேஷ் வந்து சேரும் வரை விஸ்வநாதனுக்கு ஈஸ்வரை அருகில் இருந்து கொண்டு கூர்மையாகக் கவனிக்கும் வாய்ப்பு கிடைத்தது. அப்படிக் கவனித்த போது அவரால் ஈஸ்வரை*

மெச்சாமல் இருக்க முடியவில்லை. குற்ற உணர்வால் அவன் பாதிக்கப்பட்டு இருந்தாலும் கூட அவன் முழுக் கட்டுப்பாட்டுடனும், ஆளுமைத் திறன் சிறிதும் குறையாமலும் இருந்தான்.

வீட்டுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த டாக்டரிடம் மீண்டும் சென்று ஈஸ்வர் பரமேஸ்வரனின் உடல்நிலையின் முழு விவரங்களைக் கேட்டு வந்தான். அவரிடம் அந்த விவரங்களைச் சொன்னான். ”அந்த ஸ்கேன் ரிப்போர்ட்டையும் மற்ற ரிப்போர்ட்களையும் நான் பார்க்கணும்னு சொன்னேன், அவர் அனுப்பி வைக்கிறேன்னு சொன்னார்”

அந்த ஸ்கேன் ரிப்போர்ட்டுகளை ஒரு இளம் நர்ஸ் சிறிது நேரத்தில் கொண்டு வந்து ஈஸ்வரிடம் தந்தாள். அந்த நர்ஸ் ஈஸ்வரால் நிறையவே ஈர்க்கப் பட்டதாக விஸ்வநாதனுக்குத் தோன்றியது. பார்க்க அழகாகவும் இருந்த அந்த நர்ஸ் அடிக்கடி அவன் பார்வையில் படுகிற மாதிரி நடமாடியதையும், அவன் பார்த்த போது கவர்ச்சியாகப் புன்னகை செய்ததையும் விஸ்வநாதன் கவனிக்கவே செய்தார்.

அவள் அவனிடம் அந்த ஸ்கேன் ரிப்போர்ட்டுகளைத் தந்து விட்டு மிக அருகில் நின்ற போது ஈஸ்வர் “தேங்க்ஸ் சிஸ்டர்” என்று மரியாதையாகச் சொன்னான். அவன் குரலில் அந்த சிஸ்டருக்கு ஒரு அழுத்தம் இருந்தது. அவள் ஒரு அடி பின்னுக்கு நகர்ந்தாள். ஒருவித ஏமாற்றம் அவள் முகத்தில் தெரிந்தாலும் அவள் தன்னை சுதாரித்துக் கொண்டு ”வெல்கம்” என்று இனிமையாகச் சொல்லி விட்டுப் போனாள்.

இதில் அவன் தன்னைப் பற்றி உயர்வாகவும் அவளைப் பற்றித் தாழ்வாகவும் நினைக்கவில்லை. அவன் இந்த ஈர்ப்பு இயல்பு

என்பதாக எடுத்துக் கொண்டது போல விஸ்வநாதனுக்குத் தோன்றியது. அதே நேரத்தில் அவள் அழகாக இருக்கிறாளே என்பதற்காக நிலைமையைத் தனக்கு சாதகமாக்கிக் கொண்டு சிறிது நேர சீண்டல்களைக் கூடச் செய்யாமல், அவளைக் கையாண்ட விதத்தில் தன் கௌரவத்தை நிலை நிறுத்தி, அவளுடைய கௌரவத்தையும் காப்பாற்றி மரியாதையாக நடத்திய நுணுக்கமான விதத்தில் அவன் தனித்தன்மை தெரிந்தது. தாத்தாவின் உடல்நிலையால் ஏற்பட்டிருந்த இந்த கவலை சூழ்நிலையால் மட்டுமல்ல, மற்ற சாதாரண சூழ்நிலைகளிலும் அவன் இப்படியே தான் நடந்து கொண்டிருப்பான் என்று அவருக்குத் தோன்றியது.

அவன் அவரிடம் அந்த ரிப்போர்ட்டுகளைக் காட்டி மேலும் ஏதேதோ விளக்கினான். பரமேஸ்வரன் மிகுந்த அபாயக் கட்டத்தில் தான் இருக்கிறார் என்பதைத் தவிர விஸ்வநாதனுக்கு வேறு எதுவும் விளங்கவில்லை. அவன் திரும்பவும் அந்த நர்ஸிடம் அந்த ரிப்போர்ட்டுகளைத் தந்து விட்டு மறுபடி நன்றி சொல்லி விட்டு வந்தான். அவள் புன்னகையுடன் அதை வாங்கிக் கொண்டாள். இப்போது அவள் புன்னகையில் கவர்ச்சி போய் கண்ணியம் தெரிந்தது.

பரமேஸ்வரன் பிழைத்துக் கொண்டால் இவனை அலட்சியம் செய்ய முடியாது என்பது விஸ்வநாதனுக்குப் புரிந்தது. அவர் சங்கரை ஒதுக்கினார். சங்கரும் ஒதுங்கிக் கொண்டான். ஆனால் சங்கரின் மகன் ஒதுக்க முடிந்தவனும் அல்ல, ஒதுங்கக் கூடியவனும் அல்ல. புத்திசாலித்தனம், பக்குவம், ஆளுமைத் திறன் இவைகளில் எந்தக் காலத்திலும் மகேஷ் இவனுக்கு இணையாக முடியாது என்பதும் அவருக்குப் புரிந்தது. அந்த நிஜம் அவருக்கு வலித்தது.... கடவுள் பாரபட்சமானவர், சிலருக்கு எல்லாவற்றையும் தந்து விடுகிறார், சிலருக்கோ எதுவும் தருவதில்லை என்று தோன்றியது...

மகேஷ் வந்தான்... அவன் முகத்தில் களைப்பு தெரிந்தது. "எங்கே போயிட்ட நீ?" விஸ்வநாதன் கேட்டார்.

"ப்ரண்ட்ஸ் கூட இருந்தேன்... தாத்தாவுக்கு என்ன ஆச்சு?" முன்பே விஸ்வநாதன் சொல்லி இருந்தாலும் புதிதாகக் கேட்பவன் போலக் கேட்டான்.

""ஹார்ட் அட்டேக்" என்றார் விஸ்வநாதன். மகேஷ் கண்களில் இருந்து தாரை தாரையாய் கண்ணீர் வழிய ஆரம்பித்தது. "தாத்தா.... தாத்தா" என்று அவன் கதறினான். ஐ.சி.யூவிற்கு வெளியே அமர்ந்திருந்த வேறு சிலர் அவனை இரக்கத்தோடு பார்த்தார்கள். விஸ்வநாதன் அவனைத் தோளில் தட்டி சமாதானப்படுத்தினார். விஸ்வநாதனுக்கு உள்ளூர ஒரு பெருமை எழுந்தது. 'இதில் அவர் மகனுக்கு ஈஸ்வர் இணையாக முடியாது'. இந்த ஒன்றிலாவது அவர் மகன் ஈஸ்வரை மிஞ்சுகிறானே!

அவனை அப்படியே வராந்தாவின் எதிர்பக்க ஆளில்லாத மூலைக்கு விஸ்வநாதன் அழைத்துக் கொண்டு போனார். அங்கு போனவுடன் மகேஷ் தந்தையிடம் கேட்டான். "அம்மா எங்கே?"

"வீட்டுக்குப் போயிருக்கா! கிழவி அங்கே தனியா இருக்கறதால துணைக்கு அங்கே போய் இருக்கச் சொல்லி ஈஸ்வர் அனுப்பிச்சிட்டான்"

"இவனால தான் தாத்தாவுக்கு ஹார்ட் அட்டாக் வந்திருக்குங்கறதை அம்மாவும், கிழவியும் எப்படி எடுத்துகிட்டாங்க"

***“உங்கம்மாவுக்கு இவன் மேல இரக்கம் தான் இருக்கு. கிழவி என்ன நினைக்கிறாங்கறதை எப்பவுமே வெளிப்படுத்திக்கிறதில்லையே”***

***“தாத்தா பிழைப்பாரா?”***

***“ஸ்கேன் ரிப்போர்ட்டுகளைப் பார்த்தா அவர் பிழைக்கிறது கஷ்டம் தான்னு தோணுது. ஒரு வேளை அவருக்கு ஏதாவது ஆயிட்டா அப்புறமா கிழவியும் ரொம்ப நாள் இருக்க மாட்டா. அவளுக்கு சின்ன மகன்னா தான் உயிரு”***

***கேட்கவே மகேஷுக்கு இனிமையாக இருந்தது. ’ஒரே கல்லில் இரண்டு மாங்காய்... இல்லையில்லை.... ஈஸ்வரையும் சேர்த்தால் மூன்று மாங்காய். உன்னால் தான் இத்தனையும்னு குற்றம் சாட்டி அமெரிக்காவிற்கே துரத்தி விட இது நல்ல வாய்ப்பு’ என்று மகேஷ் நினைத்தான்.***

***மகனின் எண்ண ஓட்டத்தை ஊகித்த விஸ்வநாதன் புன்னகைத்தார். ”நான் கிளம்பறேன் மகேஷ். நீ இங்கே இரு. ஏதாவது தகவல் இருந்தால் தெரிவி” என்று சொல்லி விட்டுக் கிளம்பினார். மகேஷ் ஈஸ்வரிடம் பேசும் போது அவர் கூட இருந்தால் அவனைக் கட்டுப்படுத்த வேண்டி வரும்... அவர் மகேஷைக் கட்டுப்படுத்த விரும்பவில்லை....***

***விஸ்வநாதன் ஈஸ்வரிடமும் சொல்லிக் கொண்டு கிளம்பினார். அவர் போன பின் மகேஷ் ஈஸ்வரிடம் சத்தமாகக் கேட்டான். “இப்ப உனக்குத் திருப்தியா?... இதுக்காக தானே நீ இத்தனை நாள் காத்துகிட்டிருந்தே.”***

அங்கிருந்தவர்கள் அவர்கள் பக்கம் திரும்ப ஈஸ்வர் "மெள்ள பேசு" என்றான்.

"நான் எதுக்கு மெள்ள பேசணும்? அவருக்கு ஏதாவது ஆச்சுன்னா நான் சும்மா இருக்க மாட்டேன்... ஆமா. சொல்லிட்டேன்" மறுபடியும் சத்தமாய் மகேஷ் சொன்னான்.

"தாத்தாவுக்கு ஒண்ணும் ஆகாது" என்று அமைதியாக ஈஸ்வர் சொன்னான்.

மகேஷிற்குத் தான் கேள்விப்பட்டது தவறோ என்ற சந்தேகம் எழுந்தது. "டாக்டர் வேற மாதிரி சொன்னதாயில்ல அப்பா சொன்னார்"

"தாத்தா பிழைக்கறதுக்கு முப்பது சதவீதம் சான்ஸ் இருக்கறதா டாக்டர் சொன்னார். நூறு சதவீதம் சான்ஸ் இல்லைன்னு சொன்னா தான் கவலைப்படணும். முப்பது சதவீதம் சான்ஸ் இருக்குன்னா நம்ம எல்லாரோட பிரார்த்தனையும் சேர்ந்து அவரை அந்த முப்பது சதவீதத்துக்கு அவரை இழுத்துகிட்டு வந்துடும்." ஈஸ்வர் அமைதியாகச் சொன்னான்.

"ஒ பிள்ளையையும் கிள்ளிட்டு தொட்டிலையும் ஆட்டி விடுவியா நீ. அவரை இந்த நிலைமைக்குக் கொண்டு வந்துட்டு அவர் பிழைக்கணும்னு நீ பிரார்த்தனையும் செய்வியா" மகேஷ் சொல்லி விட்டுத் தலையை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டான். அடுத்த கணம் அவன் குமுறி குமுறி அழுதான்.

அங்கிருந்தவர்கள் மகேஷை இரக்கத்துடன் பார்த்தார்கள். ஓரக்கண்ணால் அதைப் பார்த்த மகேஷிற்குத் திருப்தியாக இருந்தது.

*“மகேஷ், அவர் எனக்கும் தாத்தா தான். ஞாபகம் வச்சுக்கோ” ஈஸ்வர் சொன்னான்.*

*ஈஸ்வர் சொன்ன வாசகமே மகேஷிற்குக் கசந்தது. அவன் பொறுக்க முடியாதவன் போலக் கத்தினான். “ஓ அப்படியா. இத்தனை நாள் நீ ஒரு தடவையாவது அவரை தாத்தான்னு கூப்பிட்டிருப்பியா? ஒரு நாள் அவர் கிட்ட நீ அன்பா பேசியிருப்பியா?....” மகேஷ் மறுபடி கத்தினான்.*

*அவனையே பார்த்துக் கொண்டிருந்த ஈஸ்வருக்கு அவன் எண்ணம் புரிந்தது. அமைதியாய் தாழ்ந்த குரலில் உறுதியாய் சொன்னான். ”இத்தனை நாள் வரைக்கும் ஒரு மாசத்துல அமெரிக்கா திரும்பிப் போயிடணும்னு தான் நினைச்சிருந்தேன். இன்னொரு தடவை நீ கத்திப் பேசினேன்னா நான் நிரந்தரமா இங்கேயே தங்கிடுவேன். தாத்தாவுக்கு என்ன ஆனாலும் சரி .... எனக்கு வர வேண்டிய சொத்தை வாங்காமல் இங்கிருந்து நகர மாட்டேன்... எப்படி வசதி?”*

*மகேஷ் ஈஸ்வரையே திகிலுடன் பார்த்தான். அவன் விளையாட்டுக்குச் சொல்லவில்லை என்பதை அவன் முகபாவனை சொன்னது. யோசித்துப் பார்த்த போது இனி வாயைத் திறக்காமல் இருப்பது புத்திசாலித்தனம் என்று மகேஷின் அறிவு எச்சரித்தது. “என்ன மாதிரி ஆளு நீ” என்று வெறுப்புடன் மெல்ல சொன்னவன் அதன் பிறகு மௌனமானான்.*

*பரமேஸ்வரன் மயக்க நிலைக்கும் விழிப்பு நிலைக்கும் மாறி மாறி சென்று கொண்டிருந்தார். விழிப்புணர்விற்கு வரும் போதெல்லாம் இதயத்தில் பெரிய பாரத்தை அவர் உணர்ந்தார்.*

ஐசியுவின் உள்ளே நர்ஸ்களின் நடமாட்ட சத்தமும் பேச்சுச் சத்தமும் கேட்டது. மயக்க நிலைக்குச் செல்லும் போதோ திரும்பத் திரும்ப ஈஸ்வர் அவரைத் தாத்தா என்றழைப்பது போல் கேட்டது. அத்துடன் அவன் சொன்னதும் திரும்பத் திரும்ப காதில் விழுந்தது. “நான் இனிமே கண்டிப்பா எங்கப்பா பத்தி பேச மாட்டேன் தாத்தா. சாரி. உங்களுக்கு ஏதாவது ஆச்சுன்னா எங்கப்பா என்னை மன்னிக்க மாட்டார் தாத்தா. ப்ளீஸ் எனக்காக குணமாயிடுங்க தாத்தா”.

அந்த வார்த்தைகள் அவர் இதயத்தை அறுப்பது போல அவர் உணர்ந்தார். அவனுடைய கோபமான வார்த்தைகளை விட அதிகமாக இந்த வார்த்தைகள் அவரைக் காயப்படுத்தின. சொல்ல முடியாததொரு சோகம் அவரை ஆட்கொண்டது. கோபத்திலும் சரி துக்கத்திலும் சரி பேரன் பயன்படுத்தும் வார்த்தைகள் சக்தி வாய்ந்தவையாக இருக்கின்றன. ஒருவனின் இதய ஆழம் வரைக்கும் பயணிக்க வல்லவையாக இருக்கின்றன....

திடீரென்று திருநீறின் மணம் அவரை சூழ்ந்தது. அந்த மணம் அவருக்கு மிகவும் பரிச்சயமானது. தோட்ட வீட்டில் அண்ணனைப் பார்க்கச் செல்கிற போதெல்லாம் அந்த மணத்தை அவர் சுவாசித்திருக்கின்றார். மெல்ல அவர் கண்களைத் திறந்து பார்த்தார்.

பசுபதி ஒளிவெள்ளத்தின் நடுவே நிற்பது தெரிந்தது. இறந்து விட்டோமா என்ன, அண்ணனிடம் வந்து சேர்ந்திருக்கிறோமே என்ற எண்ணம் அவருக்கு வந்தது. ”அண்ணா” என்றழைத்தார்.

பசுபதி தம்பியைப் பார்த்து புன்னகை செய்தார். காயப்பட்ட மனதில் அண்ணனைப் பார்த்ததும் அமைதிப்படுத்தும் ஆறுதலை பரமேஸ்வரன் உணர்ந்தார். அண்ணனிடம் தெரிவிக்க அவருக்கு நிறைய விஷயங்கள் இருந்தன. முக்கியமாய் முதலில் ஈஸ்வரைப் பற்றி அண்ணனிடம் சொல்லத் தோன்றியது. “அண்ணா என் பேரன்

*ஈஸ்வர் பார்க்க அப்படியே நம் அப்பா மாதிரியே இருக்கான்... பார்க்க மட்டும் தான் அவர் மாதிரி, குணத்தில் அப்பா மாதிரி சாதுவாக எல்லாம் இல்லை.... ரொம்பவே நல்லவன் தான்.... பிடிச்சவங்க கிட்ட நம்ம அப்பா மாதிரியே மென்மையா நடந்துக்குவான்.... ஆனா கோபம் யார் மேலயாவது வந்துட்டா பேச்சு எல்லாம் நம்ம அம்மா மாதிரி கூர்மையாய் தயவு தாட்சணியம் இல்லாமல் இருக்கும்....”*

*அம்மா பேச்சு பற்றி சொன்னதும் அண்ணன் புன்னகை மேலும் விரிந்ததாகப் பரமேஸ்வரனுக்குத் தோன்றியது. அவரும் புன்னகை செய்தார். திடீரென்று அண்ணனிடம் சிவலிங்கம் திருட்டுப் போன விவரம் பற்றிப் பேசவில்லை என்ற நினைவு வர அது பற்றிப் பேச அவர் வாயைத் திறந்தார். ஆனால் அதற்கு முன் பசுபதி தம்பியின் உடலைத் தொட்டார். அண்ணனின் கைகள் அவர் உடலைத் தொட்டவுடன் உடலில் மின்சாரம் பாய்ந்தது போல பரமேஸ்வரன் உணர்ந்தார். அவர் சொல்ல வந்த வார்த்தைகள் வாயிலேயே தங்கி விட்டன. பரமேஸ்வரன் நினைவிழந்தார்.*

*ஐசியுவில் இருந்து வெளியே நர்ஸ் ஓடி வந்த போது தாத்தாவின் நிலைமை மோசமாகப் போய் விட்டது என்பது மகேஷிற்குப் புரிந்தது.*

*எழுந்து நின்று “என்ன ஆச்சு?” என்று மகேஷ் நர்ஸைக் கேட்டான். ஆனால் அவனுக்குப் பதிலேதும் சொல்லாத அவள் ஓடிப்போய் டியூட்டி டாக்டரிடம் ஏதோ சொல்ல அவர் ஐசியூவிற்கு விரைந்து செல்ல நர்ஸ் பெரிய டாக்டருக்குப் போன் செய்து பேச ஆரம்பித்தாள். பேசி விட்டு அவளும் ஐசியூவிற்கு ஓட மகேஷ் அவளை வழி மறித்து கேட்டான். “என் தாத்தாவுக்கு என்ன ஆச்சு?”*

“சீஃப் டாக்டர் இப்ப வந்துடுவார். அது வரை எதுவும் சொல்ல முடியாது” என்று சொல்லி விட்டு நர்ஸ் ஐசியூவினுள் நுழைந்தாள்.

மகேஷ் ஈஸ்வரிடம் கேட்டான். “இப்ப உனக்கு திருப்தியா?”. வெறுப்புடன் கேட்ட போதும் அவன் குரல் தாழ்ந்தே இருந்தது.

“பொறுமையா இரு” என்று ஈஸ்வர் சொன்னான்.

”அவர் தோள்ல வளர்ந்தவன் நான். என்னால் பொறுமையாய் இருக்க முடியாது” என்று குரலில் பெரும் துக்கத்தை வரவழைத்த மகேஷ் உடனடியாகத் தந்தைக்குப் போன் செய்தான்.

“அப்பா, தாத்தா நிலைமை சீரியஸ் போலத் தெரியுது. சீஃப் டாக்டர் வராமல் எதுவும் சொல்ல முடியாதுன்னு சொல்றாங்க. எதுக்கும் நீங்க அம்மாவையும், பாட்டியையும் இப்பவே கூட்டிகிட்டு வர்றது நல்லதுன்னு நினைக்கிறேன்”

விஸ்வநாதன் அப்போது தான் வீடு போய் சேர்ந்திருந்தார். உடனே அவர்களை அழைத்து வருவதாக மகனிடம் சொன்ன அவர் மனைவியிடம் மகேஷ் சொன்னதைச் சொன்னார்.

மீனாட்சி அதிர்ந்து போனாள். அவள் காலின் கீழுள்ள நிலம் திடீரெனப் பிளந்து விட்டது போல உணர்ந்தாள். கண்கள் கடலாக அப்படியே நாற்காலியில் அமர்ந்து கொண்டாள்.

விஸ்வநாதன் மனைவியை சிறிது நேரம் தேற்றி விட்டுச் சொன்னார். “நீயே இப்படி தளர்ந்துட்டா உன் பாட்டியை நாம் எப்படி சமாதானப்படுத்தறது? முதல்ல அவங்களைக் கூட்டிகிட்டு கிளம்பு. பெரிய டாக்டர் இனிமேல் தான் வரணுமாம். அவங்களால

முடிஞ்சதை அவங்க செய்யாமல் இருக்க மாட்டாங்க. தைரியப்படுத்திக்கோ”

மீனாட்சி தன்னை ஓரளவு சுதாரித்துக் கொண்டு மெல்ல பாட்டி அறைக்குப் போனாள். “மகேஷ் போன் செஞ்சான். நம்மளை எல்லாம் வரச் சொன்னான். ஒரு தடவை போயிட்டு வந்துடலாமா பாட்டி”

ஆனந்தவல்லி பேத்தியையே சிறிது நேரம் வெறித்துப் பார்த்தாள். பின் மூத்த மகனின் புகைப்படத்தை சிறிது முறைத்துப் பார்த்து விட்டு எழுந்தாள். பேத்தி கைத்தாங்கலாகப் பிடித்துக் கொள்ள ஆனந்தவல்லி இளைய மகனைப் பார்க்கக் கிளம்பினாள்.

காரில் போகும் போது மீனாட்சியால் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ஆனால் ஆனந்தவல்லி கண்களில் இருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் கிளம்பவில்லை.

அதைக் கவனித்த விஸ்வநாதன் ஆச்சரியப்பட்டார். மகனுக்கு ஏதாவது ஆகிவிட்டால் கிழவி தாங்க மாட்டாள், நிறைய நாள் இருக்க மாட்டாள் என்று மகேஷிடம் சொன்னதை மானசீகமாக விஸ்வநாதன் வாபஸ் வாங்கிக் கொண்டார்.

’கிழவி இன்னும் பல பேரை அனுப்பாமல் சாக மாட்டாள் போல இருக்கிறதே!’

# அத்தியாயம் - 54

பரமேஸ்வரன் உடல் மின்சாரத்தினால் தாக்கப்பட்டது போல சில வினாடிகள் துடித்ததைப் பார்த்துத் தான் ஒரு நர்ஸ் டியூட்டி

*டாக்டரைக் கூப்பிட ஓடினாள். அவர் வந்து பார்த்த போது பரமேஸ்வரன் ஆழ்ந்த உறக்க நிலையில் இருந்தார். டாக்டர் இதயத் துடிப்பை பரிசோதனை செய்தார். அது இயல்பாக இருந்தது. மூச்சும் சீராக இருந்தது.*

*இரண்டு நிமிடங்கள் கழித்து வந்த நர்ஸிற்கு சற்று முன் பார்த்தது இவரைத் தானா என்ற சந்தேகம் வந்தது. அரை மணி நேரம் கழித்து வந்த பெரிய டாக்டருக்கும் பரமேஸ்வரனின் அமைதியான உறக்க நிலை ஆச்சரியப்படுத்தியது. ஏதோ சரியில்லை!*

*மெல்ல பரமேஸ்வரனை அவர் உலுக்கினார். "சார்.... பரமேஸ்வரன் சார்"*

*பரமேஸ்வரன் சில வினாடிகளுக்குப் பிறகு கஷ்டப்பட்டு கண்களைத் திறந்தார்.*

*"எப்படி இருக்கீங்க?"*

*பரமேஸ்வரன் முழு விழிப்பு நிலைக்கு வரா விட்டாலும் பலவீனமான குரலில் சொன்னார். "நான்... குணமாயிட்டேன்...."*

*டாக்டர் தன் சர்வீஸில் இப்படி ஒரு தகவலை எந்த நோயாளியிடம் இருந்தும் பெற்றதில்லை. 'பரவாயில்லை' என்ற பதிலுக்குப் பதிலாக மயக்க நிலையில் 'குணமாயிட்டேன்' என்ற வார்த்தையை பரமேஸ்வரன் பயன்படுத்தி இருக்கிறார் என்று பெரிய டாக்டர் நினைத்துக் கொண்டார்.*

*"அப்படின்னா நாளைக்கு சர்ஜரியை செய்துடலாமா?" என்று நகைச்சுவையாக அவர் பரமேஸ்வரனைக் கேட்டார்.*

பரமேஸ்வரன் கஷ்டப்பட்டு சொன்னார். "வேண்டாம்.... குணமாயிட்டேன்"

அடுத்து ஒரு வார்த்தை பேசும் சக்தி பரமேஸ்வரனிடம் இருக்கவில்லை. மறுபடி உறங்கி விட்டார்.

'இந்த ஆளுக்குப் புத்தி பேதலித்து விட்டது போல் இருக்கிறது' என்று டாக்டர் நினைத்த போதும் பரமேஸ்வரனின் தற்போதைய மாற்றமும், அதன் காரணமும் கேள்விக்குறியாக இருந்தது. எதற்கும் எல்லாவற்றையும் ஒரு தடவை மீண்டும் பரிசோதிப்பது நல்லது என்று அவருக்குத் தோன்றியது.

அடுத்த அரை மணி நேரம் நடந்த பரிசோதனைகள் அவரை திகைப்படைய வைத்தன. பரமேஸ்வரனின் இதயத்தில் அடைப்புகள் இருந்ததன் அறிகுறியே இல்லை. அவர் சில மணி நேரங்களுக்கு முன் எடுத்த ஸ்கேன் ரிப்போர்ட்டுகளை நர்ஸிடம் கொண்டு வரச் சொன்னார். அவற்றைக் கொண்டு வரப் போன நர்ஸ் சிறிது தாமதமாக வந்து குழப்பத்துடன் அந்த ரிப்போர்ட்டுகள் எதையும் காணவில்லை என்று சொன்னாள்.

என்ன ஆயிற்று எல்லோருக்கும், ஏன் இன்றைக்கு ஏதேதோ போல் நடந்து கொள்கிறார்கள் என்று டாக்டர் திகைத்தார். "நன்றாகத் தேடும்மா"

"தேடிட்டோம் சார். காணோம்"

"அதெப்படிம்மா காணாமல் போகும்" என்று டாக்டர் கேட்டார். அதைச் சொல்ல முடிந்தால் அதைக் கண்டு பிடித்தே

விடுவோமே என்பது போல நர்ஸ் அவரைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

ஐசியூவில் நுழைந்த பெரிய டாக்டர் உடனடியாக வெளியே வந்து தாத்தாவின் கதை முடிந்து விட்டது என்று சொல்வார் என்று ஆவலாக எதிர்பார்த்த மகேஷ் பொறுமை இழந்து விட்டான். பெரிய டாக்டர் வெளியே வருவதற்குப் பதிலாக நர்ஸ்களும், டியூட்டி டாக்டரும் பரபரப்புடன் வெளியே வந்து போவதும், தாத்தாவின் ஸ்கேன் ரிப்போர்ட்டுகளைக் காணாமல் தேடிக் கொண்டிருந்ததும் அவனுக்கு எரிச்சலைக் கிளப்பியது.

ஒரு நர்ஸ் ஈஸ்வரிடம் ”அந்த ரிப்போர்ட்டுகள் உங்களிடம் இருக்கிறதா” என்று கேட்க ஈஸ்வர், “அதை நான் அப்போதே உங்களிடம் தந்து விட்டேனே” என்று சொன்னதும் அவள் “ஆமா, ஆனா அது இப்ப காணோம்” என்று சொல்லி விட்டுப் போனாள்.

“என் தாத்தாவுக்கு என்ன ஆச்சு” என்று மகேஷ் டியூட்டி டாக்டரிடமும் கேட்டுப் பார்த்தான். டியூட்டி டாக்டர் என்ன சொல்வது என்று தெரியாமல் ’பெரிய டாக்டர் வந்து சொல்வார்’ என்று சொல்லி விட்டுப் போனார்.

’தேவையில்லாமல் அந்த ரிப்போர்ட்டுகளை தேடுவதை விட்டு விட்டு அவர் செத்துட்டார்னு சொல்லித் தொலையுங்களேண்டா” என்று மனதிற்குள் மகேஷ் கத்தினான்.

இந்த நேரத்தில் ஆனந்தவல்லியையும், மீனாட்சியையும் அழைத்துக் கொண்டு விஸ்வநாதன் வந்தார். ”என்னடா ஆச்சு?” என்று அவர் மகனைக் கேட்டார்.

”சரியா சொல்ல மாட்டேங்குறாங்க” என்று எரிச்சலுடன் மகேஷ் சொன்னான்.

அவன் சொல்லி முடித்த போது பெரிய டாக்டர் குழப்பத்துடன் ஐசியூவில் இருந்து வெளியே வந்தார். தன் நடிப்புத் திறமையை அரங்கேற்றும் நேரம் வந்து விட்டதென்று நினைத்த மகேஷ் ”என் தாத்தா எப்படி இருக்கார் டாக்டர்” என்று குரல் தழுதழுக்கக் கேட்டான். கேட்கும் போதே அவன் கண்கள் நிறைய ஆரம்பித்தன.

என்ன சொல்வது என்று தெரியாமல் அவர் அவனையே உள்ளே போய் பார்க்கச் சொல்லி கை காண்பித்து விட்டுச் சென்றார். ‘எல்லாம் முடிந்து விட்டது’ என்பது தான் அதன் அர்த்தம் என்று எடுத்துக் கொண்ட மகேஷ் ஆனந்தக் கண்ணீருடன் “தாத்தா” என்று கதறிக் கொண்டே உள்ளே ஓடினான்.

அவன் அப்படிக் கதறி ஓடுவதைப் பார்த்த விஸ்வநாதன், மீனாட்சி, ஆனந்தவல்லி மூவரும் அவன் பின்னால் விரைந்தார்கள். ஈஸ்வர் கலக்கத்துடன் பெரிய டாக்டர் பின்னால் போனான். “என்ன ஆச்சு டாக்டர்?”

உள்ளே சென்ற மகேஷ் பரமேஸ்வரன் மீது விழுந்து அழுது புலம்ப பரமேஸ்வரன் கஷ்டப்பட்டு கண்களைத் திறந்தார். பேரன் துக்கத்தைப் பார்த்து மனம் நெகிழ்ந்த அவர் பலவீனமான குரலில் சொன்னார். “எனக்கு ஒண்ணும் ஆகலைடா அழாதே.....”

அவர் கண்கள் திறந்து மெல்ல பேசியதில் இரண்டு இதயங்கள் மலர்ந்தன. இரண்டு இதயங்கள் நொறுங்கின. மீனாட்சிக்கு ஆனந்தக் கண்ணீரை அடக்கக் கஷ்டமாக இருந்தது. பரமேஸ்வரன் பேசியது

ஆனந்தவல்லி வயிற்றில் பாலை வார்த்தது. அவள் மகனை அது வரை இல்லாத பாசத்துடன், கண்கள் ஈரமாக, பார்த்தாள்.

மகேஷ் தன் காதில் விழுந்த சத்தம் பிரமையா என்று சந்தேகப்பட்டான். ஆனால் சந்தேகத்தை ஆனந்தவல்லியின் குரல் தீர்த்தது. ”டேய் உடம்புக்கு முடியாதவன் மேல அப்படி விழுந்து புரளாதேடா”

மகேஷ் திகைப்புடன் நிமிர்ந்தான். பரமேஸ்வரன் பேரனை ஆறுதல் படுத்தும் விதத்தில் மெல்ல புன்னகைத்து விட்டுத் தன் தாயையும், மகளையும் பார்த்தார். மீனாட்சி ஓடி வந்து தன் தந்தையின் கை ஒன்றை பெருத்த நிம்மதியுடன் பிடித்துக் கொண்டாள். ஆனந்தவல்லி மகனின் காலடியில் உட்கார்ந்தாள். மகளையும், தாயையும் பார்த்து புன்னகைத்த பரமேஸ்வரன் விஸ்வநாதனைப் பார்த்து லேசாகத் தலையசைத்தார். அவர் கண்கள் வேறு யாரையோ தேடின.

மகனையே பார்த்துக் கொண்டிருந்த ஆனந்தவல்லி கேட்டாள். “யாரைத் தேடறடா. ஈஸ்வரையா? அவன் வெளியே உட்கார்ந்திருக்கான். கூப்பிடவா?”

பரமேஸ்வரன் ஆம் என்ற விதத்தில் மிக லேசாகத் தலையசைக்க ஆனந்தவல்லி மகேஷிடம் சொன்னாள். “ஏண்டா மரம் மாதிரி நிற்கறே. போய் ஈஸ்வரைக் கூப்பிடுடா!”

மகேஷிற்கு கிழவியின் கழுத்தை நெறித்தால் என்ன என்று தோன்றியது. மெல்ல வெளியேறினான்.

*டாக்டரிடம் பேசி முடித்திருந்த ஈஸ்வர் மனதில் இருந்த பெரிய பாரம் இறங்கி இருந்தது. மகேஷ் வெளியே வந்ததைப் பார்த்துக் கேட்டான். "என்ன மகேஷ்?"*

*"நீயே போய் பாரு" என்ற மகேஷ் பெருத்த ஏமாற்றத்துடன் அங்கிருந்த ஒரு நாற்காலியில் சுரத்தில்லாமல் சரிந்தான். அவனைத் தொடர்ந்து விஸ்வநாதனும் வெளியே வந்து மகன் அருகே உட்கார்ந்தார்.*

*ஈஸ்வர் தயக்கத்துடன் ஐசியூவிற்குள் போனான். பரமேஸ்வரன் பேரனை மிகுந்த சிநேகத்துடன் பார்த்தார். ஈஸ்வருக்கு மனம் நிம்மதியாயிற்று. அவர் அவனை பக்கத்தில் வருமாறு தலையசைத்தார்.*

*ஈஸ்வர் தயக்கத்துடனேயே அவர் அருகே சென்றான். அவர் அவனைக் குனியும் படி சைகையில் சொன்னார். ஏதோ சொல்லப் போகிறார் என்று குனிந்தான். தன் சகல பலத்தையும் திரட்டி சற்று மேல் எழும்பி பேரன் கன்னத்தில் பரமேஸ்வரன் முத்தமிட்டார். ஈஸ்வர் கண்கள் அவனை அறியாமல் கலங்கின.*

*மீனாட்சி சத்தமாக அழுதே விட்டாள். முதல் முறையாக ஒரு அதிசயம் நடந்திருக்கிறது! அவள் அண்ணன் மகனை அவள் தந்தை அங்கீகரித்து விட்டார். அவனும் அவரை நேசிக்க ஆரம்பித்து விட்டான். அது போதும் அவளுக்கு!*

*ஆனந்தவல்லி பேத்தி மீது எரிந்து விழுந்தாள். "சீரியல் நடிகை மாதிரி எப்பப் பாரு என்னடி அழுகை?"*

மகளை அவள் திட்டியதை பரமேஸ்வரன் ரசிக்கவில்லை. அம்மாவை அவர் முறைத்தார். ஆனந்தவல்லி அதை சட்டை செய்யாமல் கேட்டாள். “இப்ப உனக்கு எப்படிடா இருக்கு?”

மெல்ல பரமேஸ்வரன் சொன்னார். “அண்ணா என்னை குணப்படுத்திட்டான்மா”

அதற்கு மேல் அவரால் பேச முடியவில்லை. “களைப்பாய் இருக்கு... தூங்கறேன்”. அவர் கண்கள் தானாக மூடின. மறுபடி அவர் ஆழ்ந்த உறக்கத்திற்குச் சென்றார்.

ஆனந்தவல்லி திகைப்புடன் மகனைப் பார்த்தாள். ஈஸ்வர் டாக்டர் தெரிவித்ததை அத்தையிடமும், பாட்டியிடமும் சொன்னான். பரமேஸ்வரன் இதயத்தில் இருந்த அடைப்புகளை இப்போது காணோம், அடைப்புகள் இருந்ததாய் தெரிவித்த ஸ்கேன் ரிப்போர்ட்டுகளையும் காணோம் என்று கேள்விப்பட்டவுடன் ஆனந்தவல்லி பிரமிப்புடன் மெல்ல எழுந்தாள்.

“எனக்கு வீட்டுக்குப் போகணும். நீயும் வர்றியாடி”

”என்ன அவசரம். அப்பா கொஞ்சம் முழிச்ச பிறகு போலாமே”

ஆனந்தவல்லி சம்மதிக்கவில்லை.

”நீ வராட்டி பரவாயில்லை.. டிரைவர் என்னை வீட்டுல விட்டுட்டு வரட்டும். எனக்கு வீட்டுக்குப் போகணும்”

சில நேரங்களில் பாட்டி சின்னக் குழந்தை போல பிடிவாதம் பிடிப்பதாக எண்ணிய மீனாட்சி ஈஸ்வரைப் பார்த்து தலையாட்ட

ஈஸ்வர் ஆனந்தவல்லியை கார் வரை அழைத்துச் சென்றான். ஆனந்தவல்லி கனவில் நடப்பவள் போல் நடந்தாள். யாரையும் பார்க்கவும் இல்லை. யாரிடமும் பேசவும் இல்லை.

ஈஸ்வர் கவலையுடன் கேட்டான். “பாட்டி உங்களுக்கு உடம்புக்கு எதுவுமில்லையே”

“நல்லா தாண்டா இருக்கேன்” என்று கரகரத்த குரலில் சொன்ன ஆனந்தவல்லி அதற்கு மேல் எதுவும் பேசவில்லை. அவளை டிரைவருடன் அனுப்ப மனமில்லாமல் ஈஸ்வர் தானே பாட்டியை காரில் வீட்டுக்கு அழைத்துச் சென்றான். வீடு சேர்ந்தவுடன் தனதறைக்கு நேராகச் சென்ற ஆனந்தவல்லி கொள்ளுப் பேரனிடம் சொன்னாள். “இனி நீ போடா. தாத்தா கூட இரு. அவனை வீட்டுக்கு கூட்டிகிட்டு வா”

ஈஸ்வர் நகர்ந்தவுடன் கதவை உடனடியாகச் சாத்திய ஆனந்தவல்லி வேகமாகச் சென்று தன் மூத்த மகனின் புகைப்படத்தைக் கையில் எடுத்துக் கொண்டு தன் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள்.

மகன் புகைப்படத்தில் முத்தமிட்டு அந்தப் புகைப்படத்தைக் கட்டிப்பிடித்துக் கொண்ட அவள் கண்கள் கடலாயின. “குழந்தே... குழந்தே.... உன்னைக்கூட அன்னைக்கு நீ காப்பாத்திக்கலை. ஆனா உன் தம்பியை இப்ப காப்பாத்திட்டியேடா.... போதும்டா, இந்தக் குடும்பத்துல நீ எல்லா கடனையும் தீர்த்துட்டே. அம்மா அப்ப ரொம்பவே மோசமா பேசிட்டனாடா? மன்னிச்சுடுடா...! வெந்து நொந்த மனசு பைத்தியம் மாதிரி பேசிச்சுன்னு நினைச்சுக்கோடா....”

*மகன் புகைப்படத்தைப் பிடித்துக் கொண்டு அன்று அழுததைப் போல ஆனந்தவல்லி வாழ்க்கையில் அதற்கு முன்பும் அழுததில்லை, அதற்குப் பின்பும் அழுதது இல்லை. கோபம் கொள்கையில் சரமாரியாக வார்த்தைகள் வந்தது போல இப்போது ஏனோ அவளுக்கு வார்த்தைகள் வரவில்லை. மனம் நிறைகையில் ஏனோ மௌனமே மொழியானது. கடைசியில் மகன் படத்தைக் கட்டிப்பிடித்தபடியே அவள் உறங்கிப் போனாள்.....!*

*அதே நேரத்தில் ஆஸ்பத்திரியில் பரமேஸ்வரனும் ஆழ்ந்த உறக்கத்தில் தான் இருந்தார். அவரைத் தனியறைக்கு மாற்றி இருந்தார்கள். அவர் பக்கத்தில் மீனாட்சி, விஸ்வநாதன், மகேஷ் மூவரும் இருந்தார்கள். அவர் கண் விழிக்கையில் அக்கறையுடன் பக்கத்திலேயே அவன் உட்கார்ந்திருந்தது தெரிய வேண்டும் என்பதற்காக மகேஷ் அங்கிருந்தான். அவனுக்கிருந்த சோகத்திற்கு அளவே இல்லை.*

*"தாத்தா தான் பிழைச்சுகிட்டாரே. இன்னும் ஏண்டா சோகமாய் இருக்கே?" என்று மீனாட்சி மகனைக் கேட்க விஸ்வநாதன் மனைவியின் வெகுளித் தனத்தை நினைத்து ஆச்சரியப்பட்டார்.*

*ஈஸ்வர் பெரிய டாக்டருடன் பேசிக் கொண்டிருந்தான். அவருக்கு இன்னமும் திகைப்பு அடங்கியபாடில்லை. இந்த 21 ஆம் நூற்றாண்டில் இப்படி மாயாஜாலம் போன்ற நிகழ்வுகளும் நடக்குமா என்ன? என்று தனக்குள் பல முறை கேட்டுக் கொண்ட அவர் பிறகு ஈஸ்வரிடம் அதை வாய் விட்டே கேட்டார்.*

*ஈஸ்வர் சொன்னான். "நமக்கு காரணம் புரியாமல் இருந்தாலோ, புரிந்தாலும் அது அறிவுக்கு எட்டாத பிரம்மாண்டமாக இருந்தாலோ நாம் அதை மாயாஜாலம் மாதிரின்னு நினைச்சுக்கறோம். இதெல்லாம் விஞ்ஞான விதிகளுக்கும் மேலான சில விதிகள் படி*

*நடக்கிற விஷயங்கள். அந்த விதிகள் பரிச்சயமானவங்களுக்கு இதெல்லாம் அதிசய நிகழ்ச்சிகள் அல்ல"*

*"அந்த ஸ்கேன் ஃபோட்டோக்களும், ரிப்போர்ட்டுகளும் இருந்திருந்தால் இதை நாம் ஆதாரபூர்வமாகவே பதிவு செய்திருக்கலாம். ஆனால் அதெல்லாமும் காணாமல் போனது தான் என்னால் புரிஞ்சுக்க முடியல"*

*"இதெல்லாம் ஆதாரபூர்வமாகப் பதிவாக வேண்டாம்னு அந்த சக்திகள் நினைச்சு இருக்கலாம்...."*

*"ஏன் அப்படி?"*

*ஈஸ்வர் பதில் ஏதும் சொல்லவில்லை. இதற்குப் பதில் சொல்லி டாக்டருக்குப் புரிய வைப்பது கஷ்டம் என்று அவனுக்குத் தோன்றியது. அவன் டாக்டரிடம் "தாத்தாவை எப்போது டிஸ்சார்ஜ் செய்வீர்கள்?" என்று கேட்டான்.*

*டாக்டர் நாளை காலை இன்னொரு முறை சில பரிசோதனைகள் செய்து மறுபடி உறுதிப்படுத்திக் கொண்டு பரமேஸ்வரனை வீட்டுக்கு அனுப்புவதாகச் சொன்னார்.*

*ஈஸ்வர் போன பிறகு அவன் மீதும் டாக்டருக்கு சந்தேகம் வந்தது. கடைசியாக நர்ஸிடம் அந்த ஸ்கேன் ரிப்போர்ட்டுகளை வாங்கிப் பார்த்தவன் அவன் தான். அவன் அந்த நர்ஸிடமே திருப்பிக் கொடுத்து விட்டதாகச் சொல்கிறான், அதை அந்த நர்ஸும் ஒப்புக் கொள்கிறாள். அவளுக்குத் தெரியாமல் மறுபடியும் அந்த ரிப்போர்ட்டுகளை அவனே எடுத்திருப்பானோ?*

குடும்பமே ஏதோ ரகசியக் குடும்பம் போல அவருக்குத் தோன்றியது. ஒரு சிவலிங்கம் காணாமல் போனதையும் பரமேஸ்வரனின் அண்ணன் கொலை செய்யப்பட்டதையும் பத்திரிக்கைகளில் படித்த நினைவு வந்தது. அந்தக் கிழவர் பத்மாசனம் கலையாமலேயே கடைசி வரை இருந்தார் என்று பத்திரிக்கைகளில் எழுதி இருந்தார்கள்.... அந்தக் கிழவர் தான் தம்பியின் கனவில் வந்து காப்பாற்றி இருப்பதாக குடும்பத்தினர் பேசிக் கொள்வது அறிவு பூர்வமாக ஏற்றுக் கொள்ள முடியா விட்டாலும் பரமேஸ்வரனின் இதய அடைப்புகள் நீங்கி இருப்பதென்னவோ உண்மை தான்....

ஆஸ்பத்திரியின் ரகசிய காமிரா மூலம் எடுத்த வீடியோக்களில் ஏதாவது கிடைக்கிறதா என்று டாக்டர் பார்க்க எண்ணினார். பரமேஸ்வரனுக்கு குணமானது எப்படி என்று அறிய அந்த வீடியோக்கள் உதவா விட்டாலும் அந்த ரிப்போர்ட்டுகள் காணாமல் போனது எப்படி என்று அறியவாவது அவை உதவும் என்று நினைத்தார்.

சிறிது நேரத்தில் அந்த வீடியோவையும் அவர் பார்த்தார். பார்க்கையில் முழுக் கவனமும் அந்த ரிப்போர்ட்டுகளின் மீதே இருந்தன. ரிப்போர்ட்டுகள் வழக்கமாக வைக்கப்படும் இடத்திலேயே இருப்பதையே பார்த்துக் கொண்டு வந்த அவர் திடீரென்று அடுத்த ஃப்ரேமில் அந்த ரிப்போர்ட்டுகள் காணாமல் போனதைப் பார்த்து திகைத்தார்.

மறுபடி ஒரு நிமிடம் பின்னுக்கு வந்து ஸ்லோ மோஷனில் வீடியோவை ஓட விட்டுப் பார்த்தார். ரிப்போர்ட்டுகள் இருந்த ஃப்ரேமிற்கும், இல்லாமல் போன ஃப்ரேமிற்கும் இடையே ஒரு வினாடிக்கும் குறைவான நேரத்தில் மின்னல் ஒளி போல ஏதோ

*தோன்றி மறைந்த மாதிரி இருந்தது. அந்த ஒளியோடு சேர்ந்து அந்த ரிப்போர்ட்டுகளும் மாயமாக மறைந்திருந்தன.*

*டாக்டருக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை....! அவருக்கு மயிர்க்கூச்செறிந்தது.*

# <u>*அத்தியாயம் - 55*</u>

*பார்த்தசாரதி அந்த போலீஸ் உயர் அதிகாரியின் கீழ் ஐந்து ஆண்டுகளாக வேலை பார்த்து வருகிறார். அந்த உயர் அதிகாரி நேர்மைக்கும் திறமைக்கும் பேர் போனவர். எந்தப் பொறுப்பு தந்தாலும் தன்னால் முடிந்த அளவு நல்லதை செய்ய வேண்டும் என்ற சிந்தனையுடன் அந்தப் பொறுப்பில் வேலை பார்ப்பவர். இந்த வழக்கை திறமையான ஒரு அதிகாரியிடம் ஒப்படைக்க வேண்டும் என்ற கோரிக்கை வந்த போது பார்த்தசாரதியைத் தேர்ந்தெடுத்து பொறுப்பை ஒப்படைத்தவரும் அவர் தான்.*

*அவரிடம் பார்த்தசாரதி தான் வந்த விஷயத்தை விளக்கிய போது அவர் முகத்தில் அதிர்ச்சி தெரிந்தது. கேட்ட விஷயத்தை ஜீரணிக்க அவருக்கு சிறிது நேரம் தேவைப்பட்டது. பின்பு சொன்னார். "குருஜியைக் கண்காணிக்க ஏற்பாடு செய்வது நானாக செய்ய முடிந்த விஷயம் அல்ல பார்த்தசாரதி. முதலமைச்சர் கிட்ட அனுமதி வாங்காமல் செய்ய முடியாது. ஏன்னா குருஜி பிரதமர் வரை வந்து வணங்கி விட்டுப் போகிற நபர். தகுந்த ஆதாரத்தைத் தராமல் முதலமைச்சர் அனுமதி தருவது கஷ்டம்...."*

*பார்த்தசாரதி சொன்னார். "அந்த ஆதாரங்கள் கிடைக்கறதுக்காக தான் அவரைக் கண்காணிக்க வேண்டி இருக்கிறது..."*

*அப்படி சொல்லி அனுமதி வாங்க முடியாது என்று உயர் அதிகாரி மறுத்து விட்டார். ஈஸ்வரின் உள்ளுணர்வு, குருஜியின் சில வித்தியாசமான நடவடிக்கைகள், குருஜி சிபாரிசில் வந்து சேர்ந்த ஆள் வேவு பார்ப்பவனாக இருக்கலாம் என்று சந்தேகப்படுவது போன்ற காரணங்கள் எல்லாம் போதுமானதல்ல என்று அவர் வெளிப்படையாகச் சொன்னார். எதையும் முடியும் அல்லது முடியாது என்று சுற்றி வளைக்காமல் தெரிவிக்கும் அவர் பழக்கம் பார்த்தசாரதிக்கு மிகவும் பிடித்தமானது.*

*அந்த உயர் அதிகாரி தொடர்ந்து சொன்னார். ”பார்த்தசாரதி. இந்த சிவலிங்க விவகாரத்தில் குருஜி சம்பந்தப்பட ஏதாவது ஒரு அழுத்தமான காரணம் உங்களால் சொல்ல முடியுமா? பணம், சமூகத்தில் உயர்ந்த அந்தஸ்து, புகழ், சொன்னதைக் கேட்டு உடனடியாகச் செய்ய தயாராக இருக்கிற பெரிய பக்தர் கூட்டம்- இப்படி எல்லாமே சிறப்பா இருக்கிற ஆளிற்கு இனி என்ன வேண்டும்னு அவர் சிவலிங்க விவகாரத்துல இறங்கணும்?”*

*“இதையே தான் நானும் ஈஸ்வர் கிட்டே கேட்டேன் சார். ஈஸ்வருக்கும் சரியாய் பதில் சொல்லத் தெரியல. ஆனாலும் ஈஸ்வர் சந்தேகத்தை அலட்சியப்படுத்த முடியாதுன்னு தோணுது சார். அந்த சிவலிங்கம் சக்தி வாய்ந்ததுன்னு சொல்றாங்க. பசுபதி சாகறதுக்கு முன்னால் யாரோ ஒரு வெளிநாட்டுக்காரர் அவரைப் பார்க்க முயற்சி செய்திருக்கார். குருஜி மாதிரி ஒரு சக்தி வாய்ந்த ஆசாமியும் கூட இதில் சம்பந்தப்பட்டிருந்தால் அதை நாம் அலட்சியப்படுத்தி விட முடியாது. நம் கற்பனைக்கெட்டாத அளவுக்குப் பெரிய சதி இந்த வழக்கில் இருக்கலாம்...”*

*அந்த உயர் அதிகாரி பார்த்தசாரதியை யோசனையுடன் பார்த்தார். பார்த்தசாரதியின் அறிவுகூர்மையை அவர் பல*

வழக்குகளில் பார்த்திருக்கிறார். பார்த்தசாரதி நேற்று வரை குருஜியின் பக்தராக இருந்தவர். குருஜி மேல் அதிக மரியாதை வைத்திருந்தவர். அப்படிப்பட்டவர் சந்தேகப்படுகிறார். அந்த சந்தேகத்தில் உண்மை இருந்து விட்டால்.....? உள்நாட்டு சக்தி வாய்ந்த ஆள்களும், வெளிநாட்டுக் காரர்களும் சம்பந்தப்படும் ஒரு வழக்கில் அலட்சியம் எந்த வகையிலும் நல்லதல்ல என்று அவர் அறிவு எச்சரித்தது.

சிறிது யோசித்து விட்டு அவர் சொன்னார். "பார்த்தசாரதி, வெளிப்படையாய், அதிகாரபூர்வமாய் நான் கண்டிப்பாய் குருஜியைக் கண்காணிக்க அனுமதி தரமுடியாது. காரணத்தை நான் முதல்லயே உங்க கிட்ட சொல்லி விட்டேன். ஆனால் அதிகார பூர்வமில்லாமல் எந்த ரெகார்டிலும் காட்டாமல் சில உதவிகள் நான் செய்யலாம். உங்களுக்கு நம்பிக்கையான நாலைந்து ஆட்களை நீங்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். ஏதோ ஒரு பழைய குற்றத்தை புலன்விசாரணை செய்ய நீங்கள் அவர்களைப் பயன்படுத்துவதாகக் காட்டிக் கொள்ளலாம். ஆனால் எந்தக் காரணம் வைத்தும் குருஜிக்கோ, அவருக்கு வேண்டியவர்களுக்கோ சந்தேகம் வராமல் பார்த்துக் கொள்வது உங்கள் பொறுப்பு. அப்படி ஒருவேளை வெளியே தெரிய நேர்ந்தால் நான் எனக்கு எதுவும் தெரியாதென்று கையை விரித்து விடுவேன். என்ன சொல்கிறீர்கள்?"

மிக மிக ரகசியமான வழக்குகளில் இது போல் செய்வதுண்டு. வெளிப்பார்வைக்கு வழக்கு வேறாக இருக்கும். ஆனால் விசாரணை நடப்பதோ வேறொரு ரகசிய வழக்குக்காக இருக்கும். மிகச் சிலர் மட்டுமே உண்மையை அறிந்திருப்பார்கள். பார்த்தசாரதிக்கு இந்த அளவு அவர் அனுமதி தந்ததே பெரிய உதவியாகத் தெரிந்தது. நாளைக்குப் பிரச்சினை என்று வந்தால் அந்த உயர் அதிகாரி மாட்டிக் கொள்ள மாட்டார் என்றாலும் கண்டிப்பாக அவர் இதை ரகசியமாய்

வைத்திருப்பார், மறைமுக உதவிகள் செய்வார் என்பதில் பார்த்தசாரதிக்கு சந்தேகமில்லை.

பார்த்தசாரதி நன்றி சொல்லி விட்டு எழுந்தார்.

உயர் அதிகாரி சொன்னார். "பார்த்தசாரதி, உங்களுக்கு நான் சொல்ல வேண்டியதில்லை என்றாலும் சொல்றேன். ஒருவேளை உங்கள் சந்தேகம் உண்மையாய் இருந்தால் குருஜி மிக ஆபத்தானவர். சின்ன தவறு செய்தாலும் நீங்கள் அதற்கு பெரிய விலை தர வேண்டி இருக்கும்!"

அவர் அக்கறைக்கு மறுபடி நன்றி தெரிவித்து விட்டு பார்த்தசாரதி கிளம்பினார்.

**************

ஈஸ்வர் அமெரிக்காவிற்கு சீக்கிரமே திரும்பிப் போக முடிவெடுத்திருந்தான். பெரும் ஆபத்தில் இருந்து கடைசி நிமிடத்தில் அதிர்ஷ்டவசமாகத் தப்பியவன் உடனடியாக அந்த இடத்தை விட்டுச் சென்றால் போதும் என்று நினைப்பது போல இருந்தது அவன் மனப்போக்கு.

பரமேஸ்வரன் மாரடைப்பு அவன் எதிர்பாராதது. அவருக்கு ஏதாவது ஆகி விட்டிருந்தால் அவனால் அவனையே வாழ்நாள் முழுவதும் மன்னிக்க முடியாமல் போயிருந்திருக்கும். அது போன்ற அற்புதத்தை தன் வாழ்நாளில் கண்டதில்லை என்று பரமேஸ்வரனை டிஸ்சார்ஜ் செய்த போது பெரிய டாக்டர் சொன்னார். அவனும் அப்படியே தான் நினைத்தான். பரமேஸ்வரன் குணமானது அவனுக்குப் பெரிய நிம்மதியை ஏற்படுத்தியது. குணமான பரமேஸ்வரன் அவனை அழைத்து முத்தமிட்டது அவர் மனதில்

அவன் பற்றிய வருத்தம் ஏதுமில்லை என்பதைத் தெளிவுபடுத்தியது. அது அவனை மிகவும் மனம் நெகிழச் செய்தது.

அவர் வீடு வந்து சேர்ந்த பின்னும் ஒரு நாள் முழுவதும் நன்றாக உறங்கினார். அந்த அளவு அவர் உடல் களைத்து இருந்தது. சாப்பிடுவது, உறங்குவது என்றிருந்த அவர் இடையிடையே தன்னைச் சுற்றி இருந்தவர்களிடம் சிறிது பேசினார் என்றாலும் அது ஓரிரு நிமிடங்களை மிஞ்சவில்லை. டாக்டர் ஒரு வாரமாவது வீட்டில் முழு ஓய்வு எடுத்துக் கொள்வது நல்லது என்று சொல்லி இருந்தார். அதற்குப் பிறகு மறுபடி ஒரு முறை செக்கப்புக்கு வந்து விட்டு பிறகு ஆபிஸ் போக ஆரம்பித்தால் போதும் என்று சொல்லி இருந்தார்.

மறுநாள் தான் ஓரளவு நன்றாகப் பேசும் தெம்பை அவர் பெற்றார். எல்லோரும் அவர் உடலை அவருடைய அண்ணன் குணப்படுத்தியது எப்படி என்று தெரிந்து கொள்ள ஆசைப்பட்டார்கள்.

”கனவு மாதிரி இருந்தது. திருநீறு மணம் வந்தது. கண்ணைத் திறந்து பார்த்தா அண்ணன் நின்றிருந்தான். அவன் கிட்ட கொஞ்சம் பேசினேன். பிறகு அண்ணா என்னைத் தொட்டான். அவ்வளவு தான் உடம்புல கரண்ட் பாஸான மாதிரி இருந்துச்சு. என்னால தாங்க முடியலை. மயக்கமாயிட்டேன். திரும்பவும் நினைவு வந்தப்ப அண்ணன் இல்லை.... உடம்புல இருந்த சக்தி எல்லாம் போயிட்ட மாதிரி களைப்பு......”

ஆனந்தவல்லி கேட்டாள். ”அண்ணன் கிட்ட என்னடா பேசினே?”

*பரமேஸ்வரன் ஈஸ்வரைப் பாசத்துடன் பார்த்தபடி சொன்னார். "ஈஸ்வர் நம்ம அப்பா மாதிரியே இருக்கிறான்னு சொன்னேன்..." அதற்கு மேல் அண்ணனிடம் சொன்னதை ஈஸ்வரை வைத்துக் கொண்டு சொல்ல ஒருமாதிரியாக இருந்தது.*

*"அதுக்கு அவன் என்னடா சொன்னான்...."*

*"எதுவுமே சொல்லலை. உயிரோடு இருந்தப்பவே நான் தான் அவன் கிட்டே ஏதாவது சொல்லிகிட்டிருப்பேன். எல்லாத்தையும் பொறுமையா கேட்டுக்குவானே ஒழிய அதிகமாய் அண்ணன் பேச மாட்டான். இப்பவும் நான் பேசினப்ப புன்னகை செஞ்சான்..."*

*இப்போதும் பரமேஸ்வரனுக்கு நினைவிருக்கிறது. கோபம் வந்து விட்டால் ஈஸ்வர் பேச்சும் ஆனந்தவல்லி பேச்சு போல தயவு தாட்சணியம் இல்லாமல் கூர்மையாக இருக்கும் என்று அவர் சொன்னதற்குத் தான் அண்ணன் புன்னகை செய்தார். அதை சொல்லாமல் தாயைப் பார்த்து அவரும் சின்னதாய் புன்னகை செய்தார்.*

*"ஏண்டா சிரிக்கிறே?"*

*"ஒண்ணுமில்லை"*

*"உன் ரூம்ல அவன் ஃபோட்டோ இருக்கா இல்லையா?" என்று கேட்டு விட்டு ஆனந்தவல்லி மகன் அறையை நோட்டமிட்டவள் தனதறையில் இருந்த அதே புகைப்படப் பிரதி இங்கும் இருப்பது பார்த்து திருப்தி அடைந்தவளாகச் சொன்னாள். "தினம் அவன் ஃபோட்டோவுக்கு ஒரு பூ வச்சு அவனைக் கும்பிடுடா. உனக்கு உயிர் குடுத்தவன்டா அவன் மறந்துடாதே"*

பரமேஸ்வரன் தலையசைத்தார். மீனாட்சி தந்தையிடம் சொன்னாள். "பாட்டி ரூம்ல பெரியப்பாவுக்கு பூமாலையே போட்டிருக்காங்க. தினமும் ஒரு பூமாலை கொண்டு வர ஆர்டரும் போட்டாச்சு"

பரமேஸ்வரன் சிரித்துக் கொண்டே தாயிடம் கேட்டார். "பூமாலை அண்ணன் ஃபோட்டோக்கு மட்டும் தானா? அப்பா ஃபோட்டோக்கு இல்லையா?"

"இல்லை" என்ற ஆனந்தவல்லி அதை விளக்கப் போகவில்லை. ஈஸ்வர் இங்கு வந்த பிறகு கணவர் புகைப்படத்திற்கு மாலை போடுவதை அவள் நிறுத்தி இருந்தாள். அவரே மறுபிறவி எடுத்து கொள்ளுப் பேரனாய் வந்திருக்கிறார் என்று நம்ப ஆரம்பித்த அவளுக்கு இப்போது அவன் உருவில் வாழும் அவருக்கு மாலை போடுவது அவளுக்கு சரியாகப் படவில்லை.

மகேஷ் பசுபதியை மனதிற்குள் திட்டித் தீர்த்தான். 'செத்த பிறகு இந்த ஆளிற்கு ஏன் வேண்டாத வேலை எல்லாம்!'. ஆனால் வாயைத் திறந்து வேறு மாதிரியாகச் சொன்னான். "எனக்கு இனிமே பெரிய தாத்தா தான் கடவுள்!"

பரமேஸ்வரன் அவனைப் பாசத்துடன் பார்த்தார். மீனாட்சியும் மகனைப் பெருமையாகப் பார்த்தாள். குடும்பம் என்பது இப்போது தான் முழுமையாக சந்தோஷமானதாக இருக்கிறது என்று பரமேஸ்வரன் நினைத்தார். சிறிது நேரத்தில் களைப்பில் அவர் கண்களை மூடிக் கொள்ளவே அவரை ஓய்வு எடுக்க விட்டு விட்டு அவர்கள் எல்லோரும் வெளியேறினார்கள்.

பரமேஸ்வரன் ஈஸ்வர் இருவருக்கும் இடையில் உள்ள இறுக்கம் தளர்ந்து, சினேகம் வளர்ந்திருந்தது என்றாலும் எல்லாமே சரியாகி விட்டது என்று நினைக்க ஈஸ்வரால் முடியவில்லை. மாரடைப்பில் இருந்து மீண்டு வந்த தாத்தா மீது அவனுக்குப் பழைய கோபம் இருக்கவில்லை தான். அவன் அப்பாவுக்கும் அவருக்கும் இடையே இருந்த பந்தத்தை விமரிசிப்பதும் தீர்ப்பு சொல்வதும் தனக்குத் தேவை இல்லை என்ற முடிவுக்கு அவன் வந்து விட்டதும் உண்மை தான். அவன் அப்பாவே குற்றம் சொல்லாத போது அவன் சொல்ல என்ன இருக்கிறது என்று நினைக்க ஆரம்பித்ததும் உண்மை தான்.

ஆனால் அதனாலேயே எல்லாம் சரியே என்று தவறு ஒன்றும் நடக்காதது போல நடித்துக் கொண்டோ நம்பிக் கொண்டோ இருக்க அவனால் முடியவில்லை. அவன் தந்தை இறந்த செய்தியை அவன் அம்மா அவரிடம் தெரிவித்த போது அவர் சொன்ன வார்த்தைகள் இன்னும் நினைக்கையில் சவுக்கடிகளாகத் தான் இருக்கின்றன. இன்னும் இந்த வீட்டில் அவன் தாயிற்கு அங்கீகாரம் கிடைத்து விடவில்லை. இந்த வீட்டின் பொது இடத்தில் இருக்கும் புகைப்படங்களில் அவன் தந்தைக்கு இடம் இருக்கவில்லை. அவன் வந்து பலவந்தமாகத் தான் அதை மாட்ட வேண்டி இருந்தது. அவனை முத்தமிட்டு சினேகம் பாராட்டிய தாத்தா அவன் தந்தையைப் பற்றி இன்னமும் ஒரு வார்த்தை கூட பேசவில்லை. சொல்லப் போனால் மகனைப் பற்றிய பேச்சைக் கேட்டுத் தான் அவருக்கு மாரடைப்பே வந்தது.

இந்தக் காரணங்கள் இருக்கையில் இதை அவன் வீடாக அவனுக்கு நினைக்க முடியவில்லை. சிவலிங்கமும் அவ்வப்போது அவன் எதிர்பாராத சமயங்களில் எல்லாம் காட்சி தருகிறதே ஒழிய அது இப்போது எங்கே இருக்கிறது என்றோ, அதை நேரில் பார்க்க முடியுமா என்றோ அவனுக்குத் தெரியவில்லை. எல்லாவற்றிற்கும்

மேலாக விஷாலியின் நினைவும் அவனைப் பாடாய்படுத்துகிறது. நேற்று டிவியில் "யாரோ இவன்" பாடல் கேட்கும் போது மனம் பழைய இனிய நினைவில் லயித்துப் பின் ரணமானது. என்ன தான் அவளிடம் அலட்சியமாக அவன் நடந்து கொண்டாலும் மனம் அவளை அலட்சியப்படுத்த மறுத்தது. இதை எல்லாம் நினைக்கையில் பேசாமல் இந்தியாவை விட்டுப் போய் அமெரிக்காவில் தன் வேலையில் மூழ்கி எல்லாவற்றையும் மறக்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது.

அவன் தன் முடிவை முதலில் மீனாட்சியிடம் தான் மெல்லச் சொன்னான்.

மீனாட்சிக்கு மிக வருத்தமாகி விட்டது. "என்னடா ஈஸ்வர் ஒரு மாசம் இருப்பேன்னு சொன்னியே. ரெண்டு வாரம் கூட ஆகலையேடா"

ஈஸ்வர் பொய் சொன்னான். "அவசரமான வேலை ஒண்ணு வந்துடுச்சு அத்தை. அதான்.... இப்ப போனா என்ன அத்தை, சமயம் கிடைக்கறப்ப வந்தா போச்சு"

மிக வெகுளியான மீனாட்சிக்குக் கூட அவன் இப்போது போனால் வர மாட்டான் என்று புரிந்தது. அவள் எத்தனையோ சொல்லிப் பார்த்தாள். ஆனால் அவனோ போவதில் உறுதியாக இருந்தான்.

மறுநாள், தான் மாட்டிய அப்பா அம்மா படத்தை அவன் கழற்றினான். "அதை ஏண்டா கழட்டறே?" ஆனந்தவல்லி திகைப்புடன் கேட்டாள்.

*”சும்மா தாத்தாவுக்கு பழைய நினைப்புகள் வரவழைக்க வேண்டாம்னு நினைக்கிறேன் பாட்டி” என்று நல்ல விதத்தில் ஈஸ்வர் பதில் சொன்னான்.*

*“இதைப் பார்த்துத் தானாடா அவனுக்குப் பழைய நினைவுகள் வரணும்?” ஆனந்தவல்லி கேட்டாள்.*

*“இதைப் பார்த்தா இன்னும் அதிகமா வரும் பாட்டி. இப்ப ஏதோ அவர் நிம்மதியா இருக்கார். அப்படியே இருந்துட்டுப் போகட்டும்.”*

*ஆனந்தவல்லி பெரும் அபாயத்தை உணர்ந்தாள். கோபப்படும் ஈஸ்வரே பரவாயில்லை என்று அவளுக்குத் தோன்றியது.*

*அங்கே இருந்தால் அத்தையும், பாட்டியும் ஏதாவது தர்மசங்கடமாகக் கேட்டுக் கொண்டோ, சொல்லிக் கொண்டோ இருப்பார்கள் என்று ஈஸ்வருக்குத் தோன்றியது. எங்கேயாவது வெளியே போய் நிறைய நேரம் இருந்து வர நினைத்தான். அப்போது தான் கணபதி நினைவு வந்தது. பக்கத்தில் தான் அவன் கிராமம், கண்டிப்பாக வர வேண்டும் என்று கேட்டுக் கொண்டது நினைவுக்கு வந்தது. எங்கோ பூஜை செய்து கொண்டிருப்பவன் எப்போது ஊர் திரும்புவதாகச் சொன்னான் என்பது நினைவிருக்கவில்லை. அவன் இல்லா விட்டாலும் அவன் குடும்பத்தையும், அவன் பிள்ளையாரையும் பார்த்து வரலாம் என்று தோன்ற உடனடியாகக் கிளம்பினான்.*

*அவன் போன பிறகு மீனாட்சி பாட்டியிடம் ஈஸ்வர் அமெரிக்காவுக்குப் போகத் தீர்மானித்திருப்பதைத் தெரிவித்தாள்.*

ஆனந்தவல்லியின் பயம் உறுதியாகியது. பேத்தியிடம் வருத்தத்துடன் சொன்னாள். ”என்னடி இது எல்லாம் சரியாயிட்டு வருதுன்னு நாம சந்தோஷப்படறப்ப இவன் இப்படி விலகப்பார்க்கிறான்”

மீனாட்சி ஈர விழிகளுடன் பாட்டியைப் பார்த்தாள்.

“ஏண்டி, உங்கப்பன் கிட்ட இதைச் சொன்னியா?”

“இல்லை” என்று மீனாட்சி தலையசைத்த போது பரமேஸ்வரனின் குரல் கேட்டது. “எதைச் சொன்னியான்னு கேட்கறேம்மா?”

பரமேஸ்வரன் மெல்ல நடந்து வந்து தாயருகே உட்கார்ந்தார்.

ஆனந்தவல்லிக்கு மகன் உடல்நிலை எந்த அளவு தேறியிருக்கிறது என்று உறுதியாகத் தெரியவில்லை. சொல்லலாமா வேண்டாமா என்று தயங்கியவள் மெல்லச் சொன்னாள். ”ஈஸ்வர் சீக்கிரமே அமெரிக்கா போறானாம். அவனுக்கேதோ அவசர வேலை இருக்காம்”

அவள் குரலில் தொனித்த பெரும் வருத்தம் பரமேஸ்வரனுக்கு அர்த்தம் இல்லாததாய் தோன்றியது. “இதுக்கேம்மா வருத்தப்படறே. போய் வேலையை முடிச்சுட்டு வரட்டும்” என்றார்.

ஆனந்தவல்லி ஒன்றும் சொல்லவில்லை. பரமேஸ்வரன் தாயையும், மகளையும் பார்த்தார். இருவரும் அவனை சிறிது காலம் கூடப் பிரிய வருத்தப் படுகிறார்கள் என்று நினைத்தார். அவர்

*பார்வை சுவரில் இருந்த படங்களுக்கு வந்து அங்கேயே நிலைத்தது. அங்கே சங்கரின் படத்தைக் காணவில்லை....*

*அவர் மறுபடி தாயைக் கூர்ந்து பார்த்தார். சிறிது தயங்கி விட்டு ஆனந்தவல்லி மகன் கையைப் பிடித்துக் கொண்டு உணர்ச்சிபூர்வமாகச் சொன்னாள். "பரமேஸ்வரா, ஒரு காலத்தில் நீ உன் மகன் உன்னைப் பிரிஞ்சு அமெரிக்காவுக்குப் போக விட்டே. அவனைத் திரும்பவும் நீ பார்க்க முடியாமயே போயிடுச்சு. இப்ப உன் பேரன் போனால் இவனையும் நீ திரும்பப் பார்க்க முடியாதுடா. இவன் கண்டிப்பா திரும்ப வர மாட்டாண்டா. இவனையும் நீ கை நழுவ விட்டுடாதேடா"*

*பரமேஸ்வரனுக்குப் புரிந்தது.*

# ***<u>அத்தியாயம் - 56</u>***

*பரமேஸ்வரன் கண்களை மூடிக் கொண்டு சிறிது நேரம் உட்கார்ந்திருந்தார். பின் கண்களைத் திறந்து மகளிடம் கேட்டார். "உங்க அண்ணியோட போன் நம்பர் உன் கிட்ட இருக்காம்மா?"*

*"இருக்குப்பா".*

*"நம்பர் அடிச்சுக் குடு. நான் அவ கிட்ட பேசணும்"*

*மீனாட்சிக்குத் தன் காதுகளை நம்ப முடியவில்லை. அவர் சொன்னபடியே செய்து போனை அவரிடம் தந்தாள். "ரிங் ஆகுதுப்பா"*

*மகளிடம் செல் போனை வாங்கியவர் மருமகள் குரலைக் கேட்டவுடன் பேசினார். "நான் உன் மாமா பேசறேன்ம்மா"*

*கனகதுர்காவிற்கு இது கனவா என்ற சந்தேகம் வந்தது. இதற்கு முன் ஒரே ஒரு தடவை தான் அவருடன் அவள் பேசி இருக்கிறாள். அன்று அவர் தன் மகனையே மகன் என்று ஏற்றுக் கொள்ளாமல் பேசியவர். இன்று அவராகவே அவளை மருமகள் என்று ஏற்றுக் கொண்டு 'உன் மாமா' என்று சொல்கிறார்....*

*"சொல்லுங்க மாமா. உங்க உடம்பு இப்ப எப்படி இருக்கு?" தன் திகைப்பில் இருந்து மீண்டு அவள் பேசினாள்.*

*"நல்லா இருக்கேன்ம்மா... முழுசா குணமாயிட்டேன்ம்மா"*

*"கேட்கவே சந்தோஷமாய் இருக்கு மாமா...! ஈஸ்வரும் போன் பண்ணி சொன்னான்.... மாமா, ஈஸ்வர் உங்க மனசைப் புண்படுத்தி இருந்தா தயவு செஞ்சு மன்னிச்சுடுங்க மாமா...."*

*பரமேஸ்வரன் மருமகளின் பெருந்தன்மையை ஜீரணிக்க முடியாமல் தடுமாறினார்.*

*கனக துர்கா தொடர்ந்து சொன்னாள். "அவன் என்ன தான் கோபப்பட்டு பேசினாலும் மனசுல ஒண்ணும் வச்சுக்க மாட்டான் மாமா. அவன் மனசுலயும் அவன் அப்பா மனசு மாதிரியே முழுசா அன்பு மாத்திரம் தான் இருக்கும் மாமா..." சொல்லும் போது அவள் குரல் கரகரத்தது.*

*பரமேஸ்வரன் குரலடைக்கச் சொன்னார். "அவன் அப்பா மனசு எனக்கு நல்லாவே தெரியும்மா... அவன் அம்மா மனசும் இப்ப*

தெரிஞ்சுகிட்டேன். நீங்க ரெண்டு பேரும் பெத்து வளர்த்த குழந்தை அந்த மாதிரி இல்லாமல் வேறெப்படி இருக்கும் துர்கா...”

அவர் வார்த்தைகளுக்கும், அவர் முதல் முறையாக அவள் பெயரை அழைத்ததற்கும் நெகிழ்ந்து போனாள் கனகதுர்கா. கணவர் இப்போது உயிரோடு இருந்திருந்தால் எவ்வளவு சந்தோஷப்பட்டிருப்பார் என்ற எண்ணம் அவளுக்கு அழுகையை வரவழைத்தது. துக்கத்தை அவள் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

“துர்கா உன்னால என்னை மன்னிக்க முடியுமாம்மா?” பரமேஸ்வரன் மருமகளிடம் ஆத்மார்த்தமாகக் கேட்டார். ஆனந்தவல்லியும், மீனாட்சியும் அவரை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். பரமேஸ்வரன் இத்தனை வருட வாழ்க்கையில் யாரிடமும் மன்னிப்பு கேட்டவர் அல்ல. மன்னிப்பு கேட்காததால் எத்தனை கஷ்டங்கள் வந்தாலும் சரி, எத்தனை நஷ்டங்கள் வந்தாலும் சரி அவற்றை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பாரே ஒழிய மன்னிப்பு கேட்க முடியாதவர் அவர். மீனாட்சி கண்கலங்க தந்தையின் தோளைப் பிடித்துக் கொண்டாள்.

கனகதுர்காவும் அவர் மன்னிப்பு கேட்டதில் திகைத்துப் போனாள். “என்ன மாமா நீங்க பெரிய பெரிய வார்த்தை எல்லாம் சொல்லிகிட்டு... நான் தான் உங்க மகனை உங்க கிட்ட இருந்து பிரிச்சதுக்கு மன்னிப்பு கேட்கணும்”

”இல்லைம்மா. நீ எந்தத் தப்பும் செய்யலை. எல்லாத் தப்பும் என்னோடது தான். எனக்கு எங்கம்மா கிட்ட இருந்து வந்த வரட்டுப்பிடிவாதம், போலி கௌரவம், கோபம் எல்லாம் தான் நான் இந்த மாதிரி நடக்க காரணம்...”

*ஆனந்தவல்லி மகனை முறைத்தாள்.*

*பரமேஸ்வரன் மருமகளிடம் மானசீகமாகச் சொன்னார். "நான் எத்தனை தேடி இருந்தாலும் என் மகனுக்கு உன்னை மாதிரி ஒரு நல்ல பொண்ணைக் கண்டு பிடிச்சுக் கொடுத்திருக்க முடியும்னு தோணலம்மா.... ஈஸ்வர் மாதிரி ஒரு பேரனை எனக்குப் பெத்துக் கொடுத்திருக்கிற உனக்கு நான் கைமாறா நான் என்ன செய்ய முடியும்னு எனக்குத் தெரியலம்மா...."*

*"மாமா...." கனகதுர்கா அழுது விட்டாள்.*

*பரமேஸ்வரனும் கண் கலங்கினார். "நீ எப்பம்மா நம்ம வீட்டுக்கு வர்றே?"*

*"கிறிஸ்துமஸ் லீவுல வர்றேன் மாமா"*

*"சரிம்மா. சந்தோஷம். நான் இன்னொரு நாள் பேசறேன்..." போனை மகளிடம் தந்து விட்டுக் களைப்புடன் பரமேஸ்வரன் கண்களை மூடிக் கொண்டார். அவர் மனது லேசாகி இருந்தது.*

*"ஏண்டா. மருமகள் கிட்ட மன்னிப்பு கேட்கறதுன்னா நேரடியா கேட்க வேண்டியது தானே. என்னை ஏண்டா இதில் இழுக்கிறே?" ஆனந்தவல்லி மகனிடம் கேட்டாள்.*

*"அந்தக் கேரக்டர் எனக்கு உன் கிட்ட இருந்து தான் வந்திருக்கு. நீயும் அண்ணனை ஐம்பது வருஷத்துக்கு மேல பார்க்காம இருந்தவ தானே. அண்ணன் தானே கடைசில உன்னைக் கூப்பிட்டான்."*

“ஓ... பெரிய அண்ணன். அவன் அந்த தோட்ட வீட்டுக்குப் போன பிறகு நாலஞ்சு தடவை போய் திரும்பவும் இங்கே வரச் சொல்லி கெஞ்சினவ நான். கடைசி தடவை ஒரு நாள் முழுசும் அவன் முன்னாடி உண்ணா விரதம் கூட இருந்தவடா நான். அவனுக்கு நான் சாக மாட்டேன்னு தெரிஞ்சோ என்னவோ என்னைக் கண்டுக்கவே இல்லை. அந்தக் கோபத்துல வந்தவ தான் திரும்ப போகலை. நீ அப்படியாடா. உன் மகன் போனவுடனே போன்லயாவது ஒரு வார்த்தை பேசி இருப்பியாடா. நீ பேசி இருந்தா அடுத்த ஃபிளைட்டுல இங்க வந்து உன் காலடியில விழுந்திருப்பானேடா உன் மகன். உன் மகன் நடந்துகிட்டதும், என் மகன் நடந்துகிட்டதும் ஒண்ணாடா....”

பரமேஸ்வரன் தாயின் ஆக்ரோஷமான பேச்சுத் திறமையை நினைத்து வியந்தார். ஆனால் அதைக் காட்டிக் கொள்ளாமல் தாயிடம் மெல்ல கேட்டார். “இத்தனை வயசானாலும் உனக்கேம்மா கோபமே குறைய மாட்டேங்குது....”

ஆனந்தவல்லி வயது பார்க்காமல் மகன் காதைத் திருகினாள்.

பரமேஸ்வரன் சிரித்துக் கொண்டே சொன்னார். “கனவுல அண்ணா கூட உன் கோபம் பத்தி நான் சொல்றப்ப சிரிச்சான்ம்மா”

ஆனந்தவல்லி ஆர்வத்துடன் மகனிடம் கேட்டாள். “என்னைப் பத்தி பேசினீங்களா? என்ன பேசினீங்க? அவன் எதுக்கு சிரிச்சான். விவரமா சொல்லுடா”

**************

நாகனூர் என்ற கிராமத்திற்கு இரண்டு மணி நேரத்தில் ஈஸ்வர் போய் சேர்ந்து விட்டான். பிள்ளையார் கோயில் எங்கே என்று வழியில் ஒரு கிழவரிடம் கேட்க அவர் ஆச்சரியத்துடன் பக்கத்தில்

இருந்தவரிடம் சொன்னார். “நம்ம ஊர் பிள்ளையார் கோயிலுக்கு வெளியூர்ல இருந்து கார்ல எல்லாம் வர்றாங்க பார்த்தியா ராமசாமி”.

ஈஸ்வர் சொன்னான். “நான் அங்கே பூஜை செய்யற கணபதியைப் பார்க்க வந்திருக்கேன்”

அவன் சொன்னது அந்தக் கிழவரை இன்னும் அதிகமாய் ஆச்சரியப்படுத்தியது போல இருந்தது. “நேரா போனீங்கன்னா ஒரு பெரிய ஆலமரம் வரும். அதுக்கு எதிர்ல இருக்கற தெருவுல வலது பக்கம் முதல் வீடு...”

கணபதியைத் தேடி ஒரு பெரிய காரில் வந்திறங்கிய ஈஸ்வரை கணபதியின் தாய் காமாட்சி ஆச்சரியத்துடன் பார்த்தாள். ”கணபதி இல்லைங்களே”

”ஓ.... அந்த இன்னொரு இடத்துப் பூஜை முடிஞ்சு இன்னும் கணபதி ஊர் திரும்பலையா?” என்று ஈஸ்வர் கேட்டான்.

“இல்லைங்க. நீங்க யாருன்னு தெரியலையே”

“நான்... நான்.... கணபதியோட அண்ணன்னு சொல்லிக்கலாம். சில நாளுக்கு முன்னால் சந்திச்சேன்....” என்று ஈஸ்வர் புன்னகையுடன் சொல்ல காமாட்சிக்கு மகன் போனில் பேசுகையில் தனக்கும், பிள்ளையாருக்கும் பட்டாடை வாங்கித் தந்த ஒரு அண்ணனைப் பற்றிச் சொன்னது நினைவுக்கு வந்தது.

ஈஸ்வரைப் பார்க்க பெரிய இடத்துப் பிள்ளை என்பது காமாட்சிக்குத் தெளிவாகத் தெரிந்தது. இந்தக் கிராமத்துக்கு இது போன்ற பெரிய படகுக் கார் வருவது மிக அபூர்வம். கணபதி

*அண்ணன் என்று அழைத்த நபரை, கணபதிக்குப் பட்டுத்துணி வாங்கித் தந்த நபரை வாசலோடு திருப்பி அனுப்புவது சரியென்று அவளுக்குத் தோன்றவில்லை. உள்ளே அழைத்தாலோ அவனை உட்கார வைக்க ஒரு நல்ல நாற்காலி கூட இல்லை. வறுமை இது போன்ற நேரங்களில் தான் பெரும் தர்மசங்கடத்தைத் தந்தது.*

*"உள்ளே வாங்க சார்" என்று காமாட்சி மரியாதைக்கு அழைத்தாள்.*

*ஈஸ்வர் ஒரு கணம் யோசித்து விட்டு உள்ளே நுழைய காமாட்சி அவசர அவசரமாக ஒரு மர ஸ்டூலைத் துடைத்து அவனை உட்காரச் சொன்னாள். "... உட்கார வேற நல்ல சேர் இல்லை...." என்று வருத்தத்துடன் அவள் சொன்னாள்.*

*"இதுக்கென்ன குறைச்சல். இது நல்லா தானே இருக்கு" என்று சொல்லி அவன் எந்த பந்தாவும் இல்லாமல் அமர காமாட்சி அவனை நன்றி கலந்த மரியாதையுடன் பார்த்தாள். நல்ல பையன்!*

*ஈஸ்வர் கேட்டான். "கணபதி எப்ப வருவான்ம்மா?"*

*காமாட்சி கவலையுடன் சொன்னாள். "அது தெரியலையே சார். அந்த குருஜி எப்ப அனுப்பறாரோ அப்ப தான் வருவான்"*

*ஈஸ்வர் குருஜி பெயர் கேட்டு அதிர்ச்சி அடைந்தான். வேறு ஏதாவது குருஜி இருக்குமோ? "எந்த குருஜி"*

*"டிவி, பத்திரிக்கைகள்ல எல்லாம் அடிக்கடி வருவாரே அந்த குருஜி தான் சார்"*

*”கணபதி எந்தக் கோயில்ல பூஜை செய்யப் போயிருக்கான்மா?”*

*”தெரியல சார். அவன் சொல்லலை....”*

*ஈஸ்வர் இயல்பாகக் கேட்பது போல காமாட்சியைக் கேட்டான். “குருஜி இந்த மாதிரி அடிக்கடி அவனை ஏதாவது பூஜை செய்யக் கூப்பிடுவாராம்மா?”*

*“இல்லைங்க. இது தான் முதல் தடவை. இவனுக்கு மந்திரங்கள் எல்லாம் அதிகமாய் தெரியாது. நான் என் அண்ணன் கிட்ட அனுப்பி எல்லாம் படிச்சுட்டு வரச் சொன்னேன். இவன் தலையிலே எதுவும் சீக்கிரம் ஏறலை. மந்திரம் சொல்றதை விட சாமிக்கு அலங்காரம் செய்யறதுலயும், பேசறதுலயும் ஆர்வம் அதிகம். ஏதோ இந்தக் கிராமத்துல சின்ன பிள்ளையார் கோயில்ல இவனால பூஜை செய்ய முடியுதே ஒழிய நல்லா வைதீகம் தெரிஞ்சவங்க இவன் பூஜையை ஏத்துக்கறது கஷ்டம் தான். அதனால எனக்கே குருஜி மாதிரி பெரிய ஆள் கூப்பிட்டப்ப ஆச்சரியம் தான்....”*

*“கணபதி எப்ப போனான்ம்மா?”*

*காமாட்சி கணபதி போன தேதியைச் சொன்னாள். பசுபதி கொலையாகி, சிவலிங்கம் காணாமல் போன மூன்றாம் நாள். கணபதியிடம் அன்று பேசிக் கொண்டிருந்த போது பிள்ளையாரின் அப்பாவுக்குப் பூஜை செய்யப் போனதாய் சொன்னான். அவன் சொன்னது அதே சிவலிங்கமாக இருக்குமோ? அந்த விசேஷ மானஸ லிங்கத்தைத் தொட்டுப் பூஜை செய்ய மந்திரங்களை விட மன சுத்தம் முக்கியம். கணபதியை விடப் பொருத்தமான ஆளை அந்த குருஜி தேடிக் கண்டுபிடித்திருக்க முடியாது.*

*“குருஜிக்கும் கணபதிக்கும் எப்படிம்மா பழக்கம்?”*

“இவன் அவர் பிரசங்கம் அக்கம் பக்கத்துல எங்கே இருந்தாலும் போவான். ரேடியோ, டிவில அவர் பேசினாலும் கேட்பான். அவர் பேசறதுல இவனுக்கு எத்தனை புரியுதுன்னு தெரியல. ஆனாலும் கேட்கறதுல என்னவோ இவனுக்கு ஆர்வம். பிரசங்கம் கேட்கறப்ப சில சமயம் இவன் கண்ல தண்ணி வரும். ஏண்டா அழறேன்னு கேட்டா, ‘தெரியிலம்மா. கேட்கக் கேட்க கண்ல தானா தண்ணீர் வருது’ன்னு சொல்வான்.... அப்படி ஒரு தடவை இவன் அவர் பிரசங்கம் கேட்கப் போயிருந்தப்ப அவரே இவனைக் கூப்பிட்டு பேசி இருக்கார். அப்படி தான் பழக்கம்”

”அடிக்கடி கணபதி அவரை சந்திச்சு பேசுவானாம்மா”

“இவன் அவரைப் பார்க்கப் பல தடவை போயிருக்கான் சார். ஆனால் ஒரு சில தடவை தான் அவரைப் பார்த்துப் பேச முடிஞ்சிருக்கு. கடைசி தடவை தான் அவரே இவனைக் கூப்பிட்டனுப்பிச்சார்...”

ஈஸ்வர் பொறுமையாகவும் அமைதியாகவும் கேட்கும் விதம் காமாட்சியை மிகவும் கவர்ந்தது. மனதில் இருக்கும் கவலையையும் அவனிடம் சொல்லத் தோன்றியது. சொன்னாள். “ஒண்ணு ரெண்டு நாளுக்கு அதிகமா நான் இவனை விட்டுப் பிரிஞ்சதே இல்லை சார். அதனால இந்த தடவை இவனைப் பிரிஞ்சு இருக்கறப்ப மனசுல தேவையில்லாமல் நிறைய பயம் இருக்கு. இவன் சூதுவாது தெரியாதவன். யார் என்ன சொன்னாலும் நம்பறவன். ஏமாத்தினாலும் தெரியாது. அதனால குருஜி பேரை சொல்லி எவனாவது எங்கேயாவது கூட்டிகிட்டுப் போய் கிட்னியை ஏதாவது எடுத்துடுவாங்களோன்னு கூட பயம் வந்துடுச்சு. பேப்பர்ல தினமும் எதெதோ படிக்கிறோமே சார். மனசுல இந்த மாதிரி பயம் தான் அதிகம் வருது. சொன்னா இவன் சிரிக்கிறான். பிள்ளையார்

*இருக்கிறார், பார்த்துக்குவார், பயப்படாதேம்மான்னு சொல்றான். பிள்ளையாருக்கு பக்தன் இவன் மட்டுமா இருக்கான். எத்தனை பேர் இருப்பாங்க? அவர் எத்தனையை பார்ப்பார்னும் தோணுது...”*

*காமாட்சி பேச்சைக் கேட்டு புன்னகைத்த ஈஸ்வர் சொன்னான். “எத்தனை பக்தர்கள் இருந்தாலும் கணபதி மாதிரி வேறொரு பக்தன் கண்டிப்பா பிள்ளையாருக்கு இருக்க முடியாதும்மா”.*

*காமாட்சியின் முகம் மலர்ந்தது. “நீங்க சொல்றதும் சரி தான். பெத்தவள்ங்கிறதால சொல்லல. நான் வேற ரெண்டையும் கூட பெத்திருக்கேன். ஆனா அதுகளே இவன் மாதிரி கிடையாது. இவனை மாதிரி கள்ளங்கபடமில்லாத மனசை எங்கயும் பார்க்க முடியாது.... உங்களைப் பத்திக் கூட அவன் சொன்னான். நீங்க கூட அவனுக்குப் பட்டுத்துணி வாங்கித் தந்ததா சொன்னான். அவனோட பிள்ளையாருக்கும் கூட வாங்கித் தந்தீங்களாம். சொல்றப்ப சந்தோஷம் தாங்கலை அவனுக்கு”*

*ஈஸ்வர் கேட்டான். “கணபதி கூட எப்ப பேசினீங்கம்மா?”*

*”ரெண்டு நாள் முன்னாடி” என்றவள் சுப்பிரமணியன் என்கிற வயதானவர் தங்கள் வீடு தேடி வந்து ஒரு காகித உறை தந்தது முதல் கணபதியிடம் பேசினது, ஒரு ஆள் வந்து அந்த உறை வாங்கிக் கொண்டது வரை விரிவாகச் சொன்னாள்.*

*அந்த உறையை கணபதி படித்திருக்க வாய்ப்பே இல்லை என்று ஈஸ்வருக்கு உள்ளுணர்வு சொன்னது. அந்த சுப்பிரமணியன் யார்? அந்த உறையில் கணபதி மட்டுமே படிக்க எழுதப்பட்டிருந்த விஷயம் என்ன? என்ற கேள்விகள் அவன் மனதில் எழுந்தன.*

திடீரென்று இன்னொரு நினைவும் வந்தது. ஜவுளிக்கடையில் அவனையும், கணபதியையும் ஒரே நேரத்தில் அந்த சித்தர் தொட்டதும், அவனைப் போலவே கணபதி அந்த மின் அதிர்வுகளை உணர்ந்ததும் நினைவுக்கு வர அவன் மனம் பரபரப்பாகியது. கணபதியும் அந்த சிவலிங்கம் சம்பந்தப்பட்டவன் என்பதாலேயே இருவரையும் ஒரே சமயத்தில் அந்த சித்தர் தொட்டாரோ? அதன் நோக்கம் என்ன? ஒன்றும் புரியவில்லை.

குருஜி கட்டுப்பாட்டில் ஏதோ ஒரு இடத்தில் இருப்பதே கணபதிக்கு அபாயம் என்று ஈஸ்வருக்குத் தோன்றியது. பெற்ற தாய் மனதில் ஏற்பட்டிருந்த பயமும் கவலையும் காரணம் இல்லாததல்ல.

காமாட்சிக்கு தைரியமளிக்கும் வார்த்தைகளைச் சொல்லி விட்டு, அவள் தந்த காபியைக் குடித்து விட்டு, கணபதியின் வரசித்தி வினாயகரையும் தரிசித்து விட்டு நாகனூரை விட்டு ஈஸ்வர் கிளம்பினான்.

வரும் போது அவன் மனதில் கணபதியின் கள்ளங்கபடமில்லாத சிரிப்பே அடிக்கடி நினைவுக்கு வந்தது. ’குருஜி பூஜை செய்வதற்கு மட்டும் அவனை உபயோகப்படுத்திக் கொள்வாரா இல்லை வேறெதாவது ஆபத்தான வேலைக்கும் அவனைப் பயன்படுத்துவாரா?’ என்று தன்னையே கேட்டுக் கொண்டான். அவனுக்குப் பதில் கிடைக்கவில்லை.

# அத்தியாயம் - 57

ஈஸ்வர் வீட்டுக்கு வந்த போது இரவாகி இருந்தது. அவன் வந்தவுடன் மீனாட்சி சொன்னாள். “ஈஸ்வர், தாத்தா உன் கிட்ட ஏதோ பேசணும்னு சொன்னார்ப்பா”

ஈஸ்வருக்கு பரமேஸ்வரன் என்ன பேச அழைக்கிறார் என்பதை யூகிக்க முடிந்தது. ஏன் சிக்கிரமே போகிறாய் என்று அவர் கேட்கக் கூடும். அவர் மனம் நோகாத பதிலைச் சொல்லி விட்டுப் போக ஈஸ்வர் நினைத்தான். அவன் தாயிடம் அவர் பேசியது அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. கனகதுர்கா மகனிற்குப் போன் செய்து பரமேஸ்வரன் பேசியதைத் தெரிவிக்க முயன்றும் அவன் செல்போனில் சார்ஜ் சுத்தமாக இல்லாமல் போனதால் அவளால் அவனிடம் பேச முடிந்திருக்கவில்லை.

இப்போது அவனைப் பொருத்த வரை அவன் தந்தை கடைசி வரை நேசித்த மனிதர் அவர். அவனை நேசிக்க ஆரம்பித்திருக்கும் மனிதர் அவர். சிலவற்றை அவனால் மறக்கவோ மன்னிக்கவோ முடியாதென்றாலும் கூட அவர் மேல் இருந்த கோபம் வடிந்து போய் இருந்தது. அதனால் அவரைக் காயப்படுத்தாமல் அங்கிருந்து போய் விட அவன் நினைத்தான். என்ன சொல்வது என்று மனதில் ஒத்திகை பார்த்து விட்டு அவர் அறைக்குச் சென்றான்.

பரமேஸ்வரனும் பேரன் வரவுக்குக் காத்துக் கொண்டிருந்தார். ஆனந்தவல்லி 'மகனை இழந்தது போல பேரனையும் இழந்து விட வேண்டாம்' என்று கூறிய அறிவுரை அவர் மனதில் ஆழம் வரை சென்று பாதித்திருந்தது. தன்னுடைய வாழ்க்கையையே இழக்கும் நிலை வரை போய் திரும்பி வந்த அவருக்கு இனி அவனை இழப்பைத் தாங்கும் பலம் இல்லை....! மகன் மரணத்தையே இன்னும் முழுமையாக அவரால் ஜீரணிக்க முடியவில்லை.....! மகன் நினைவுகள் தொடர்ச்சியாக மனதில் வர ஆரம்பிக்க அவர் கண்களை மூடிக் கொண்டார்... அவர் நினைவுகளைப் பேரன் கலைத்தான்.

"தாத்தா"

*பரமேஸ்வரன் கண்களைத் திறந்தார். "வா ஈஸ்வர். உட்கார்"*

*ஈஸ்வர் அவர் அருகில் அமர்ந்தான். "ஏதோ பேசணும்னு சொன்னீங்கன்னு அத்தை சொன்னாங்க"*

*"ஆமா... நீ சீக்கிரமே அமெரிக்காவுக்குப் போகப் போகிறாய்னு மீனாட்சி சொன்னா...."*

*"ஆமா தாத்தா. ஒரு அவசர வேலை வந்திருக்கு... யூனிவர்சிட்டில இருந்து கூப்பிட்டிருக்காங்க... அதான்"*

*"போய்ட்டு எப்ப வர்றதா உத்தேசம்?"*

*ஈஸ்வர் பதில் சொல்ல தடுமாறினான். "பார்க்கணும் தாத்தா"*

*பரமேஸ்வரன் கண்கள் பனிக்க பேரனிடம் கேட்டார். "உண்மைல திரும்பி வர்ற உத்தேசம் உனக்கு இல்லை இல்லையா? ஒரு தடவை உங்கப்பா என்னை விட்டுட்டு போனான். அவனை நான் அப்புறமா பார்க்கவே இல்லை. இனி உன்னையும் நான் பார்க்க முடியாதில்லையா?"*

*ஈஸ்வர் இந்த நேரடிக் கேள்வியை எதிர்பார்த்திருக்கவில்லை. அவராகவே அவன் அப்பாவைப் பற்றிப் பேசுவார் என்றும் அவன் எதிர்பார்த்திருக்கவில்லை. அவர் குரலில் இருந்த வலி அவனை என்னவோ செய்தது. "அப்படி எல்லாம் இல்லை தாத்தா" என்று பலவீனமாகச் சொன்னான்.*

*”ஹால்ல நீயே மாட்டின ஃபோட்டோவைக் கூட கழட்டிட்டே”*

***ஈஸ்வர் பாதி உண்மையும், பாதி வாக்குசாதுர்யமும் கலந்து சொன்னான். “தாத்தா! உங்களுக்குத் தேவை இல்லாமல் பழைய ஞாபகம் எல்லாம் வந்து நீங்க மனசு கஷ்டப்பட வேண்டாம்னு நினைச்சு தான் கழட்டிட்டேன். பழசை நாம மாத்த முடியாது. அப்படி இருக்கிறப்ப அதையே திரும்பத் திரும்ப நினைக்க வைக்கற விஷயங்களை சுற்றிலும் வச்சிருந்து என்ன பிரயோஜனம் சொல்லுங்க. ஏதோ ஒரு அசட்டுத்தனத்துல நான் அந்த ஃபோட்டோவை அன்னைக்கு மாட்டிட்டேன். பின்னாடி யோசிச்சுப் பார்த்தப்ப முட்டாள்தனம்னு தோணிச்சு. அதான் கழட்டிட்டேன்…”***

***பரமேஸ்வரன் எழுந்து சென்று பீரோவைத் திறந்து அதனுள் இருந்த சேஃப் லாக்கரைத் திறந்து ஒரு தடிமனான புகைப்பட ஆல்பத்தையும் ஒரு பழைய அலுமினியப் பெட்டியையும் எடுத்துக் கொண்டு வந்து பேரனிடம் தந்தார்.***

***ஈஸ்வர் அவற்றைத் திகைப்புடன் வாங்கினான். அந்த ஆல்பத்தை முதலில் திறந்தான். அவனுடைய அப்பாவின் புகைப்படங்கள் அதில் இருந்தன. ஆறு மாதக் குழந்தைப் பருவத்திலிருந்து அவர் திருமணம் செய்து கொண்டதற்கு முந்தின வாரம் வரை உள்ள புகைப்படங்கள் வரிசைப்படி இருந்தன. சிலவற்றில் அவர் தனியாக இருந்தார். சிலவற்றில் அவர் மீனாட்சியுடனும், சிலவற்றில் பரமேஸ்வரனுடன் இருந்தார். சிலவற்றில் மூன்று பேருமாகச் சேர்ந்து இருந்தார்கள். ஆனால் ஒவ்வொரு புகைப்படத்திலும் அவன் தந்தை இருந்தார். தந்தை நினைவுகளில் உணர்ச்சிவசப்பட்டவனாக அவன் ஒவ்வொரு புகைப்படமாகப் பார்த்துக் கொண்டு வந்தான். அதை அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போது பரமேஸ்வரன் ஒன்றும் பேசவில்லை. ஆனால் அவன் தந்தை அவனிடம் என்றோ சொல்லி***

*இருந்தது இப்போது அவன் காதில் ஒலிக்க ஆரம்பித்தது. இந்தப் புகைப்படங்களில் இருந்து அவரே மீண்டும் அவனிடம் சொல்வது போல.....!*

*"எனக்கு எங்கம்மாவைப் பார்த்த ஞாபகமே இல்லை ஈஸ்வர். அம்மா இறந்தப்ப எனக்கு வயசு அஞ்சு. மீனாட்சிக்கு வயசு மூணு. ஆனாலும் எங்களுக்கு அம்மா இல்லாத குறை தெரியல ஈஸ்வர். எங்கப்பா எங்களுக்குத் தெரிய விடல. வீட்டுலயே பாட்டி இருந்தாங்கன்னாலும் அவங்க எங்களைப் பார்த்துகிட்டது இல்லை. அப்பா எங்க ரெண்டு பேருக்கு அடுத்தபடி தான் எல்லாம்னு நினைச்சார். அவர் தன்னைப் பத்திக்கூட நினைச்சுகிட்டதில்லை. எங்கம்மா இறந்தப்ப எங்கப்பாவுக்கு இளம் வயசு தான். பாட்டி உட்பட எல்லாரும் அவரை ரெண்டாம் கல்யாணம் செய்துக்கச் சொல்லி கட்டாயப்படுத்தினாங்க. அவர் கேட்கல. காரணம் நாங்க தான் ஈஸ்வர்...."*

*"நாங்க எதுவும் அவர் கிட்ட கேட்க வேண்டி இருக்கல. சொல்ல வேண்டி இருக்கல. அவரா பார்த்து பார்த்து எல்லாம் செய்வார். எதுலயுமே உயர்ந்தது மட்டும் தான் எங்களுக்குக் கிடைக்கணும்னு நினைப்பார். வியாபாரத்துல யோசிச்சதை விட அதிகமா எங்களுக்கு என்ன வேண்டி இருக்கும்னு அவர் யோசிச்சது அதிகம் ஈஸ்வர். அதுலயும் மீனாட்சியையும் விட என்னை அவர் ஒருபடி அதிகமா நேசிச்சார்னு தான் சொல்லணும். உலகத்துல அவர் என்னை நேசிச்ச மாதிரி எந்தத் தகப்பனும் தன் மகனை நேசிச்சிருக்க முடியாது...."*

*(இப்படி சங்கர் சொன்ன போது ஈஸ்வர் குறும்பாக தந்தையிடம் கேட்டான். "அப்படின்னா நீங்க கூட என்னை அந்த அளவு நேசிக்கலைன்னு எடுத்துக்கலாமா?"*

*சங்கர் தயங்காமல் சொன்னார். “எடுத்துக்கலாம் ஈஸ்வர். அவர் எனக்காகச் செஞ்சிருக்கிற தியாகத்தை எல்லாம் யோசிக்கறப்ப நான் உனக்காக எந்த தியாகத்தையும் செஞ்சதில்லை”)*

*ஆல்பத்தில் இருந்த அப்பாவின் கடைசி புகைப்படத்தைப் பார்த்து முடித்த போது ஈஸ்வரின் மனம் லேசாக இருந்தது.*

*’இந்த அலுமினிய டப்பாவில் என்ன இருக்கிறது?’ என்று அவன் யோசித்த போது பரமேஸ்வரன் கரகரத்த குரலில் சொன்னார். “இது உங்கப்பா சின்னவனா இருந்தப்ப வச்சுகிட்டிருந்த டப்பா. அவனுக்கு எதெல்லாம் ரொம்ப பிடிக்குமோ அதை எல்லாம் நிரப்பி வச்சிட்டிருந்த டப்பா. இப்ப நான் அதை வச்சிட்டிருக்கேன்...”*

*ஒரு பெருந்துக்கம் உடைய ஆரம்பிக்கிறது என்பதை அவரைப் பார்த்த மாத்திரத்திலேயே ஈஸ்வர் புரிந்து கொண்டான். கண்களில் நீர் வழிய அதைத் திறந்தவர் ஒரு துணியாலான ஷூவை எடுத்துக் காண்பித்தார். “இது அவன் அம்மா அவனுக்கு தைச்ச ஷூ. தோலிலானது அவன் பாதத்தை அதிகமா உறுத்திடுமோன்னு பயந்து அவனுக்காக அவ தைச்சது. அவன் போட்டு நடந்த முதல் ஷூ இது தான்....” இன்னொரு காகிதத்தை எடுத்து அவனிடம் தந்தார். அதில் “I love you daddy” என்று குழந்தைக் கையெழுத்தில் எழுதி இருந்தது. “இது அவன் ரெண்டாம் வகுப்புல படிக்கிறப்ப எழுதி என் கைல தந்தது....”*

*அவர் அழுது கொண்டே இன்னும் பலவற்றை ஒவ்வொன்றாகக் காட்ட ஈஸ்வரும் கண்கலங்கியபடி அதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான்.*

பரமேஸ்வரன் சொன்னார். “என் மகனுக்கு ஒவ்வொன்னும் இருக்கிறதுலயே சிறந்ததாய் பார்த்து நான் வாங்கித் தருவேன். அவனா எதுவும் கேட்க மாட்டான். நானா தான் பார்த்து பார்த்து வாங்கித் தருவேன். அதனாலேயே தானோ என்னவோ அவனுக்கு மனைவியும் கூட நானாய் தான் பார்த்து தேர்ந்தெடுத்துத் தரணும்னு நம்பிட்டு இருந்துட்டேன்.... அவனாய் பார்த்து உன் அம்மாவை தேர்ந்தெடுத்ததை என்னால நம்ப முடியல.... தாங்க முடியல.... கடைசில உனக்கு நான் வேணுமா அவள் வேணுமான்னு தீர்மானிச்சுக்கோன்னு அவன் கிட்ட சொன்னேன். சொல்றப்ப எனக்கு ஒரு சதவீதம் கூட சந்தேகம் இருக்கல. என் மகன் என்னை விட வேற யாரையும் முக்கியம்னு நினைக்க மாட்டான். அவனால் நினைக்க முடியாதுன்னு உறுதியா நம்பினேன். ஏன்னா இது வரைக்கும் அந்த மாதிரி நடந்ததே கிடையாது.... ஆனால் அது நடந்துடுச்சு. அவன் உன் அம்மாவைக் கல்யாணம் செய்துகிட்டான். அவன் என்னை விட உன் அம்மா முக்கியம்னு நினைச்சுட்டாங்கிறதை என்னால தாங்க முடியல ஈஸ்வர்.... நான் அன்னைக்கே ஒரு தடவை செத்துட்டேன்....”

சொல்லி விட்டு பேரனைப் பிடித்துக் கொண்டு அவர் குமுறி அழுதார். மனோதத்துவ உதவிப்பேராசிரியரான அவனுக்கு அவரைப் புரிந்து கொள்ள முடிந்தது.

அவர் தொடர்ந்தார். “நான் அன்னைக்கு முடிவு செய்துட்டேன். என்னைப் பொருத்த வரைக்கும் அவன் இறந்துட்டான்னு.... அவனுக்கு நான் வேண்டாம்னா எனக்கும் அவன் வேண்டாம்னு நினைச்சுகிட்டேன்.... அவனைப் பத்தி யாரும் என்கிட்ட பேச வேண்டாம்னு சொல்லிட்டேன். மீனாட்சி கிட்ட அவன் முகத்துல கூட நான் முழிக்க விரும்பலன்னு சொல்லிட்டேன். அப்பா வேணும்னா அவனைப் பத்திப் பேசக் கூடாதுன்னு கறாரா சொல்லிட்டேன். என் அண்ணன் கிட்ட நான் மனசு விட்டுப் பேசாத

ஒரு விஷயம் இருக்குன்னா அது என் மகன் பத்தின இந்த துக்கம் தான்.... வெளியுலகத்துல அவனை மறந்துட்ட ஒரு கல்நெஞ்சனாய் காட்டிகிட்டேன். ஆனா எனக்குள்ள இருந்த அந்த தகப்பன்கிற பாத்திரத்துக்கு அது முடியல ஈஸ்வர். ராத்திரி என் மகன் கிட்ட கால் மணி நேரமாவது ஏதாவது பேசிகிட்டிருந்தா தான் எனக்கு தூக்கம் வரும். அவனில்லாமல் எனக்கு தூக்கம் வரலை. பைத்தியம் பிடிக்கற மாதிரி இருந்துச்சு. ராத்திரி தூங்கறதுக்கு முன்னாடி யாருக்கும் தெரியாமல் இந்த ஃபோட்டோவை எல்லாம் எடுத்துப் பார்க்க ஆரம்பிச்சேன். இந்தப் பொருள்களை எல்லாம் பார்க்க ஆரம்பிச்சேன். அவன் என் கூட இருக்கற மாதிரி ஒரு உணர்வு. *"I love you daddy"*ன்னு சொல்ற அந்த கடிதத்தை படிப்பேன்.. அவன் கூட இருந்த நாளை எல்லாம் நினைச்சுகிட்டு இருப்பேன்.. பிறகு தான் தூக்கமே வரும். இப்ப வரைக்கும் இப்படித் தான் தூங்கறேன். இதை நான் இது வரைக்கும் மீனாட்சி கிட்ட கூடச் சொன்னதில்லை..."

ஈஸ்வர் கண்கள் குளமாக பிரமிப்புடன் அவரைப் பார்த்தான். அவன் தந்தை அவரைக் கடைசி வரை நேசித்தது இந்த அன்பை உள்ளூர உணர்ந்ததால் தான் என்பது இப்போது புரிந்தது.

"அவன் இங்கிருந்து போன பிறகும் கொஞ்ச நாள் ஒரு நம்பிக்கை எனக்கு மிச்சம் இருந்துச்சு. அப்பா நான் தப்பு பண்ணிட்டேன்ப்பா. என்னை மன்னிச்சுடுங்கன்னு அவன் சொல்லிகிட்டு உன் அம்மாவை விட்டுட்டு வருவான்னு எதிர்பார்த்தேன். அவன் வரலை. நீ பிறந்த செய்தி கேட்டதுக்கப்புறம் அந்த எதிர்பார்ப்பு போயிடுச்சு. வெளியில நீ பிறந்ததைப் பத்தி நான் லட்சியம் செய்யலைன்னு காண்பிச்சுகிட்டேன். அவனைப் பத்தியே நான் யோசிக்கலைங்கற மாதிரியும் காண்பிச்சுகிட்டேன். அதுக்கப்புறமா உள்ளூர வேற ஒரு எதிர்பார்ப்பு எனக்குள்ளே வர ஆரம்பிச்சுது. அவன் உன்னை எடுத்துகிட்டு பொண்டாட்டியோட வந்து என்னைப் பார்க்க வருவான். நான் உடனடியா அவனை

ஒத்துக்க கூடாது. கொஞ்சம் பிகு காண்பிச்சுகிட்டு அப்புறமா ஏத்துக்கலாம்னு நினைச்சுகிட்டு இருந்தேன். சொல்லப்போனா காத்துகிட்டு இருந்தேன். வருஷங்கள் நகர்ந்துட்டே போச்சு. ஆனா என் குழந்தை, நான் உயிருக்கு உயிரா நேசிச்ச என் ஒரே மகன் வரவே இல்லை... கடைசியா ஒரு நாள் அவன் செத்துட்ட செய்தி தான் வந்தது....."

பரமேஸ்வரன் ஒவென்று சத்தம் போட்டு அழ ஆரம்பித்தார். அவர் இத்தனை காலமாய் சேர்த்து வைத்திருந்த துக்கம் ஒரேயடியாக அணை உடைந்த வெள்ளம் போல பீறிக் கொண்டு வந்தது.

அவர் மகன் இப்போது தான் இறந்தது போல தாள முடியாமல் பேரன் தோளில் சாய்ந்து கொண்டு அவர் கதறி அழுதார். கண்களில் அருவியாக நீர்வழிய தாத்தாவை மெல்லத் தட்டிக்கொடுத்து ஈஸ்வர் ஆறுதல் அளிக்க முயன்று கொண்டிருந்தான்.

அவர் அழும் சத்தம் கேட்டு பதறிப் போய் ஆனந்தவல்லியும், மீனாட்சியும் ஓடி வந்தார்கள். பரமேஸ்வரன் அவர்கள் இருவரையும் பார்க்கவில்லை. இது வரை அவர் அப்படி அழுது அவர்கள் பார்த்திருக்கவில்லை.

"என் குழந்தை என்னைப் பார்க்காமயே செத்துப் போயிட்டான்.... ஈஸ்வர்! என் குழந்தை என் கிட்ட ஒரு வார்த்தை கூட பேசாமயே என்னை தண்டிச்சுட்டு போயிட்டான்..... எனக்கு எதிர்பார்க்கக் கூட எதையும் விட்டு வைக்காமயே போயிட்டான்..." பரமேஸ்வரன் குலுங்கிக் குலுங்கி அழுதார்.

தாங்க முடியாமல் மீனாட்சி தந்தையை சமாதானப்படுத்தச் செல்ல முற்பட்ட போது ஆனந்தவல்லி பேத்தியை பின்னுக்கு

*இழுத்தாள். ”அழுது தீர வேண்டிய துக்கத்தை அழுது தாண்டி தீர்க்கணும். எத்தனையோ வருஷத்து துக்கம், நம்ம கிட்ட எல்லாம் காட்டாமல் வச்சிட்டிருந்த துக்கம், பேரன் கிட்டயாவது சொல்லி அழுது தீர்க்கட்டும். பொறு” என்று காதில் முணுமுணுத்தாள்.*

*ஈஸ்வருக்கு அவருக்கு ஆறுதல் சொல்ல வார்த்தைகள் கிடைக்கவில்லை. அந்த மனிதரின் சொல்லுக்கடங்காத துக்கத்துக்கு ஆறுதல் சொல்ல வார்த்தைகள் எந்த மொழியிலும் இருக்ககூடும் என்று அவனுக்குத் தோன்றவுமில்லை. அவரை அழ அனுமதித்தான்....*

**************

*கணபதியிடம் இரண்டு நாளில் புதிய இடத்திற்கு சிவலிங்கத்துடன் புறப்படத் தயாராக இருக்கும்படி குருஜி சொல்லி இருந்தார். அந்தப் புதிய இடத்தைப் பற்றி விவரமாகத் தெரிந்து கொள்ளும் ஆர்வம் கணபதிக்கு இருந்தும் அதைப் பற்றி குருஜியிடம் கேட்பது அதிகப்பிரசங்கித் தனமாகப் பட்டது. அதனால் அவன் கேட்கவில்லை. போய்ச் சேரும் போது தானாய் தெரிகிறது என்று நினைத்துக் கொண்டான். இந்த வேத பாடசாலை போல நிறைய பூச்செடிகளும், துளசிச் செடிகளும், வில்வமரங்களும் நிறைந்ததாய் அந்தப் புதிய இடம் இருந்தால் நன்றாக இருக்கும் என்று நினைத்துக் கொண்டான். ’சிவனுக்கு நன்றாக அலங்காரம் செய்யலாம்....’*

*இப்போதெல்லாம் அவன் தனியாக இருக்க முடிவதில்லை. என்னேரமும் யாராவது அவனுடன் கூடவே இருக்கிறார்கள். அவனுக்கு உதவத் தயாராக இருப்பவர்கள் போல் அவர்கள் காட்டிக் கொண்டார்கள். பூப்பறிக்கப் போனால் கூடவே வந்து பூப்பறிக்கிறார்கள். ஆனால் அவர்கள் பூக்களை வெடுக்*

***வெடுக்கென்று பிடுங்குவது கணபதிக்குப் பிடிக்கவில்லை. கடவுளுக்காகப் பிடுங்கும் போது ஒரு பக்தி வேண்டாமா? ஆனால் அவன் அதைப் பற்றி அவர்களிடம் கேட்கத் துணியவில்லை. அவர்கள் எங்களை மாதிரி மந்திரம் சொல் பார்க்கலாம் என்றால் என்ன செய்வது என்று பயந்தான்.***

***அதே போல் பூஜை செய்யும் போதும் அவர்கள் கூடவே இருந்தார்கள். ஜபம் செய்வதாகக் காட்டிக் கொண்டு எதிரில் உட்கார்ந்து கொண்டார்கள். சதா சர்வகாலம் அவர்களில் யாராவது ஒருவர் அவனுடனேயே இருப்பதால் அவனுக்கு மனம் விட்டு சிவனிடம் பேசக் கூட முடியவில்லை.***

***பரமேஸ்வரன் ஈஸ்வரிடம் அழுது கொண்டிருந்த அதே வேளையில் கணபதி தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தான். சற்றுத் தள்ளி குருஜியின் ஆள் ஒருவன் படுத்துக் கொண்டிருந்தான். அவன் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தான். அதனால் மெல்ல கணபதி எழுந்து வந்து சிவலிங்கத்தருகே உட்கார்ந்தான். பின் சிவனுக்கு மட்டுமே கேட்கும் படி மிகத் தாழ்ந்த குரலில் பேச ஆரம்பித்தான்.***

***"ரெண்டு நாள்ல புது இடத்துக்குப் போறோம். உன்னை நான் தான் தூக்கிட்டு வரணும்னு குருஜி சொல்லிட்டார். எனக்கு எத்தனை கவுரவம் தர்றார் பார்த்தியா? இப்ப எல்லாம் எனக்கு உதவறதுக்கு யாராவது ஒரு ஆள் தயாராய் பக்கத்திலேயே இருக்கற மாதிரி அவர் ஏற்பாடு செஞ்சிருக்கார். அத்தனை மரியாதைக்கு எனக்கு யோக்கியதை இருக்கற மாதிரி எனக்குத் தெரியலை.... எனக்கு அப்படி யாராவது இருக்கறப்ப உன் கிட்ட பேசக் கூச்சமா இருக்கு... அதான் இப்ப அந்த ஆள் தூங்கறப்ப மெல்ல எழுந்து வந்துட்டேன். உனக்கு ஒண்ணும் தூக்கம் வரலையே? பேசினா தொந்தரவு ஆகாது தானே?"***

சொல்லி விட்டு தூங்கும் ஆளை கணபதி ஒரு பார்வை பார்த்தான். அந்த ஆள் ஆழ்ந்த உறக்கத்திலேயே இருந்ததை திருப்தியுடன் பார்த்துவிட்டுத் தொடர்ந்தான்.

"உன்னை வச்சு என்னவோ ஆராய்ச்சி செய்யப் போறாங்கலாம். நீ வெளிநாட்டுக்குப் போறப்ப உன் புகழ் வெளிநாடு எல்லாம் பரவிடும் போலத் தோணுது. அங்கே அவங்க இங்க்லீஷ்ல பேசினா உனக்குப் புரியும் தானே. எனக்கு என்னவோ இங்க்லீஷ்ல மொத்தமாவே நாலஞ்சு வார்த்தைக்கு மேல தெரிய மாட்டேங்குது.... எங்கே போனாலும் என்னை மறந்துடாதே. உனக்கு நான் நிறைய கடன்பட்டிருக்கேன். உன்னால தான் எனக்கு தினமும் ஆயிரம் ரூபாய் கிடைக்கிற அதிர்ஷ்டம் கிடைச்சுருக்கு. உன் பிள்ளை கிட்ட என் மேல கோவிச்சுக்க வேண்டாம்னு சொல்லு. பணம் அதிகமா கிடைக்குதுங்கறதால என்னை மறந்துட்டியான்னு உன் பிள்ளை கேட்கற மாதிரி நேத்து கனவு வந்துச்சு.... காலைல இருந்து மனசே சரியில்லை... என் குடும்ப நிலைமை உனக்கும் தான் தெரியும். உன் பிள்ளைக்கும் தெரியும். நான் இது வரைக்கும் பொறுப்பா நல்லா சம்பாதிச்சு எங்கம்மா கைல தந்ததே இல்லை. இது ஒரு சந்தர்ப்பம்னு நினைச்சு தான் ஒத்துகிட்டு இங்கே இருக்கேன். அதை நீயே பக்குவமா உன் பிள்ளை கிட்ட சொல்லி புரிய வை. இனிமே கனவுல எல்லாம் வந்து இப்படி தர்மசங்கடமான கேள்வி எல்லாம் கேட்க வேண்டாம்னு சொல்லு.. இன்னொரு தடவை பிள்ளையார் அப்படிக் கேட்டால் நான் அழுதுடுவேன்.... சொல்லிட்டேன்..."

சொல்லி விட்டு சிவலிங்கத்தை மிகுந்த பக்தியுடன் கணபதி பார்த்தான். அவனுடைய பிள்ளையார் அவனிடம் கோபித்துக் கொண்டால், தப்பாக நினைத்துக் கொண்டால், சரி செய்து வைக்க வேண்டிய பொறுப்பை அவன் ஒப்படைத்துள்ள தெய்வம் அல்லவா இது!

*திடீர் என்று சிவலிங்கம் மீது ஒரு பேரொளி தோன்றி மறைந்தது.*

*“லைட்டை யார் இது மேல அடிக்கிறாங்க” என்று நினைத்து கணபதி சுற்றியும் பார்த்தான். தூங்குகிற ஆள் குறட்டை விட்டுக் கொண்டு இருந்தான். வேறு யாரும் இல்லை. கணபதிக்குக் குழப்பமாக இருந்தது.*

*அவன் சிவலிங்கத்தை இன்னும் நெருங்கி ரகசியமாய் கேட்டான். “இப்ப ஏதோ லைட் அடிச்ச மாதிரி இருந்ததே. கவனிச்சியா?”*

# *அத்தியாயம் - 58*

*பரமேஸ்வரன் துக்கம் பல வருடங்கள் சேர்த்து வைத்தது என்பதால் அவர் அழுகை அவ்வளவு சீக்கிரம் ஓயவில்லை. அழுகை ஓய்ந்த பின்னும் அவருக்கு ஈஸ்வர் மீது ஒரு ஆற்றாமை தங்கி இருந்தது. அதை அவனிடம் சொன்னார்.*

*“நீ இங்கே வந்த பிறகு நான் நிறைய தடவை உன்னையும் உங்கப்பாவையும் ஒப்பிட்டுப் பார்த்திருக்கேன் ஈஸ்வர். அவன் இடத்தில் நீ இருந்திருந்தால் அவ்வளவு சீக்கிரம் என்னை விட்டுப் போயிருக்க மாட்டாய் என்று எனக்கு தோன்றியிருக்கு. நீ என் கிட்ட சண்டை போட்டிருப்பாய். நான் ஏன் எனக்குப் பிடிச்ச பொண்ணைக் கல்யாணம் செய்துக்க கூடாதுன்னு கேட்டு என் கிட்ட மல்லுக்கு நின்னிருப்பாய். எனக்கு ஏத்துக்கறது சுலபமாயிருக்கும்.... உங்கப்பா மாதிரி நான் சொன்னதை வேத வாக்காய் நினைச்சு ஒரேயடியாய் என்னை விட்டு விலகி இருக்க மாட்டாய். அப்படி அவன் நின்னிருந்தால் எவ்வளவு நல்லா இருக்கும்னு நான் அடிக்கடி*

*நினைச்சிருக்கேன்.... ஆனால் நீயும் இப்ப என் கிட்ட பழசைப் பத்தி எதுவுமே கேட்காமலேயே அமெரிக்காவுக்குக் கிளம்பிப் போறதை என்னாலே தாங்க முடியலைடா. நீயும் உன் அப்பா மாதிரியே என்னைத் தண்டிக்க தீர்மானிச்சிட்டியாடா"*

சொல்லும் போது அவர் குரலில் தாங்க முடியாத வேதனை இருந்தது. தந்தை கேட்ட தொனியிலேயே அந்த வேதனையைப் புரிந்து கொள்ள முடிந்த மீனாட்சி இன்னொரு தடவை கண்கலங்கினாள். இதற்கு முன்பும் அவர் அவனிடம் உருக்கமாகப் பேசின போதெல்லாம் அவருக்கு இணையாகக் கண்கலங்கிய அவள் இப்போதும் கண்கலங்கி தன் புடவைத்தலைப்பு என்று எண்ணி ஆனந்தவல்லியின் புடவைத்தலைப்பை இழுத்து கண்களைத் துடைக்க ஆனந்தவல்லி பேத்தியை முறைத்தாள்.

தாத்தாவின் கேள்வி ஈஸ்வரை என்னவோ செய்தது. தாத்தாவை இறுக்கி அணைத்துக் கொண்டு ஈஸ்வர் மென்மையாகச் சொன்னான். "உங்களைத் தண்டிக்கறதுக்காக நான் அமெரிக்கா போகலை தாத்தா. உங்களுக்கு மாரடைப்பு வந்தப்ப நான் நிஜமாவே பயந்துட்டேன். எனக்கு பெரிசா குற்ற உணர்ச்சி இருந்துச்சு. அப்பா செத்துப் போனதுக்கப்புறம் அவர் போட்டோ கிட்ட மனசு விட்டு எல்லாத்தையும் பேசுவேன்... முக்கியமான எதையுமே அவர் கிட்ட சொன்னாத் தான் எனக்கு நிம்மதி. ஆனா உங்களுக்கு மாரடைப்பு வந்து நீங்க பிழைக்கற வரைக்கும் என்னால அவர் கிட்ட பேச முடியல. அவர் போட்டோவை நேரடியா பார்க்கிற தைரியம் கூட இருக்கலை. நல்ல வேளையாய் ஏதோ உங்க அண்ணா தயவுல நீங்க பிழைச்சுட்டீங்க. இன்னொரு தடவை நான் ஏதாவது பேசி உங்களை அது பாதிக்கறதை நான் விரும்பல தாத்தா. இங்கே இருந்தா சிலதைப் பேசாம இருந்துட முடியும்கிற நம்பிக்கையும் எனக்கு இருக்கல. அதான்....."

பேரனிடம் பரமேஸ்வரன் மனதார சொன்னார். “நீ கோவிச்சுகிட்டு பிரிஞ்சு போகறதைத் தவிர மத்த எல்லாத்தையும் தாங்கிக்கற சக்தி எனக்கு இருக்கு ஈஸ்வர். நீ என்ன பேசறதாய் இருந்தாலும் பேசு.... கேட்க நினைக்கிறதைக் கேளு... திட்ட நினைச்சா திட்டிடு.. பரவாயில்லை....”

ஒவ்வொரு நாளும் மகனிடம் கால் மணி நேரமாவது பேசா விட்டால் தூக்கம் வராத மனிதரிடம், மகனைப் பிரிந்த பின்னும் மகன் புகைப்படங்களைப் பார்த்தும், உபயோகித்த பொருட்களைத் தொட்டுப் பார்த்தும், இரண்டாம் வகுப்பில் படிக்கையில் நோட்டுப் புத்தகத்தில் இருந்து கிழித்த காகிதத்தில் எழுதிய *I love you daddy* வார்த்தைகளைப் படித்தும் மட்டுமே தூங்க மனிதரிடம் இனி கேட்கவோ, திட்டவோ என்ன இருக்கிறது என்று ஈஸ்வர் நினைத்தான். என்ன வேண்டுமானாலும் செய்து கொள், என்னை விட்டுப் போக மட்டும் செய்யாதே என்று சொல்லும் தாத்தாவை அவன் மனம் நெகிழ பாசத்துடன் பார்த்தான்.

உணர்ச்சிவசப்பட்டு மனதில் உள்ளதை எல்லாம் பேரனிடம் கொட்டி முடித்த பரமேஸ்வரன் கண்களை களைப்புடன் மூடினார்.

அதைக் கவனித்த ஈஸ்வர் தாத்தாவிடம் கனிவுடன் சொன்னான். “தாத்தா. இப்ப எனக்கு உங்க மேல எந்த கோபமும் இல்லை... நான் சீக்கிரமா அமெரிக்கா போகப்போறதில்லை. சரியா. நீங்க தூங்கி ரெஸ்ட் எடுத்துக்கோங்க. நாம நாளைக்குப் பேசலாம்...”

பெரிய பாரத்தை இறக்கி வைத்துக் களைத்திருந்த பரமேஸ்வரன் தலை அசைத்தார். ஈஸ்வருடன் ஆனந்தவல்லியும், மீனாட்சியும் கிளம்பினார்கள். மூவர் மனமும் லேசாகி இருந்தது.

*பேசிக் கொள்ளும் மனநிலையில் மூவருமே இருக்காததால் எதுவும் பேசாமல் தங்கள் அறைகளுக்கு உறங்கப் போனார்கள்.*

*அறைக்குச் சென்றவுடன் ஈஸ்வர் அம்மாவிற்குப் போன் செய்தான். கனகதுர்கா கேட்டாள். “எங்கடா போயிட்டே! நாலு தடவை போன் பண்ணிட்டேன். நீ எடுக்கவே இல்லை”*

*“சார்ஜ் இருந்திருக்கலை அம்மா. என்ன விஷயம்மா?”*

*”உன் தாத்தா இன்னிக்கு காலைல என் கிட்ட போன்ல பேசினார்டா...” என்று ஆரம்பித்தவள் பரமேஸ்வரன் பேசியதை எல்லாம் மகனிடம் நெகிழ்ச்சியோடு சொன்னாள். ஆரம்பத்திலிருந்தே மருமகளை வெறுத்து வந்த பரமேஸ்வரனுக்கு அவளிடம் மன்னிப்பு கேட்பது சுலபமாக இருந்திருக்காது என்பதை ஈஸ்வரால் புரிந்து கொள்ள முடிந்தது. அதுவும் சாதாரணமாய் ’மன்னிப்பு’ என்ற வார்த்தையைப் பயன்படுத்தி விட்டிருக்காமல் “நான் எத்தனை தேடி இருந்தாலும் என் மகனுக்கு உன்னை மாதிரி ஒரு நல்ல பொண்ணைக் கண்டு பிடிச்சுக் கொடுத்திருக்க முடியும்னு தோணலம்மா....” என்று ஒத்துக் கொண்டது ஆத்மார்த்தமான ஒப்புதலாக அவனுக்குத் தோன்றியது. ”ஈஸ்வர் மாதிரி ஒரு பேரனை எனக்குப் பெத்துக் கொடுத்திருக்கிற உனக்கு நான் கைமாறா நான் என்ன செய்ய முடியும்னு எனக்குத் தெரியலம்மா” என்று சொன்னது அவனை அவர் எவ்வளவு தூரம் நேசித்திருக்கிறார் என்று வியக்க வைத்தது. அவர் மேல் அவனுக்கு இருந்த கொஞ்ச நஞ்ச வருத்தமும் அம்மாவிடம் மன்னிப்பு கேட்டிருக்கிறார் என்பதை அறிந்த பின் கரைந்து போனது. இன்று அவர் தன்னிடம் பேசியதை எல்லாம் அவன் அம்மாவிடம் கண்கலங்க சொன்னான்.*

*அம்மாவிடமும் பேசிய பின் அன்று அவன் உறங்கிய உறக்கம் நிம்மதியானதாக இருந்தது.*

*காலையில் எழுந்தவுடன் பரமேஸ்வரன் பேரனைப் பார்க்க மகன் அறைக்கு வந்தார். சுமார் 27 வருடங்கள் கழித்து அவர் தன் மகன் அறைக்குள் நுழைகிறார்! ஈஸ்வர் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்க, பேரனையே பாசத்துடன் பார்த்து சிறிது நேரம் நின்ற பரமேஸ்வரன் பின் மெள்ள பார்வையைத் திருப்பினார். மகனின் புகைப்படங்களைப் பார்த்தார். மெல்ல மகன் புகைப்படத்தைத் தடவினார். ”அப்பாவை மன்னிச்சுடுடா” என்று மானசீகமாக மகனிடம் சொன்னார். மகன் படத்திலிருந்து அவரைப் பாசத்தோடு பார்த்தது போல் இருந்தது. அவர் கண்கள் ஈரமாயின.*

*அடுத்ததாக மகன் வாங்கி வைத்திருந்த பதக்கங்களையும், கோப்பைகளையும் பார்த்தார். மீனாட்சி எல்லாவற்றையும் பளபளவென்று வைத்திருந்தாள். எல்லாவற்றையும் துடைத்து வைக்கவே ஒவ்வொரு முறையும் நிறைய நேரம் அவளுக்குத் தேவைப்படும். ஆனாலும் இந்த 27 வருடங்கள் அதைச் செய்ய அவள் சலிப்படைந்தது இல்லை. மெள்ள அந்தக் கோப்பைகளைத் தடவிப் பார்த்தார். ’எப்படிப்பட்ட மகனைப் பெற்றிருந்தும் அவனைத் தக்க வைத்துக் கொள்ள எனக்கு கொடுப்பினை இருக்கவில்லையே’!*

*”அப்பா” மீனாட்சி அவரை மெல்ல அழைத்தாள். அவளுக்கு அண்ணன் அறையில் அப்பாவைப் பார்த்ததில் சந்தோஷம்.*

*மகளைப் பார்த்ததும் பரமேஸ்வரன் சொன்னார். “உன்னை உன் அண்ணன் கிட்ட இருந்து பிரிச்சுட்டேன்னு அப்பா மேல் உனக்கும் வருத்தம் இருக்காம்மா. என்னை மன்னிச்சுடும்மா”*

தான் நேசிப்பவர்கள் மீது எப்போதும் எந்தக் குறையும் காண முடியாத மீனாட்சி துக்கம் தொண்டையை அடைக்கச் சொன்னாள். "நீங்க என் கிட்ட எல்லாம் மன்னிப்பு கேட்கக் கூடாதுப்பா."

'எப்படிப்பட்ட ரத்தினங்களைக் குழந்தைகளாகப் பெற்றிருக்கிறேன்' என்று நினைக்கையில் பரமேஸ்வரன் மனம் லேசாகியது. மகளைப் பெருமிதத்துடன் பார்த்து அவர் ஏதோ சொல்ல வாயைத் திறக்கையில் ஆனந்தவல்லி வந்து தாழ்ந்த குரலில் திட்டினாள். "அப்பனும் மகளும் ஏன் இங்கே வந்து அவன் தூக்கத்தைக் கெடுக்கறீங்க. வெளியே போய் பேசிக்கறது தானே"

அவர்களைத் திட்டி விட்டு ஆனந்தவல்லி ஈஸ்வர் உறக்கம் கலைந்து விட்டதா என்று உற்றுப் பார்த்து விட்டு இல்லை என்று தெரிந்தவுடன் திருப்தி அடைந்தாள். பரமேஸ்வரனும், மீனாட்சியும் ஒருவரை ஒருவர் பார்த்து சிரித்துக் கொண்டு வெளியேற ஆனந்தவல்லியும் பின் தொடர்ந்தாள்.

அன்று நாள் முழுவதும் பரமேஸ்வரனுக்கும், ஈஸ்வருக்கும் பேசிக் கொள்ள நிறைய இருந்தது. தந்தையின் இளமைக் காலத்தை தாத்தாவிடமிருந்து அறிந்து கொள்ள ஈஸ்வர் ஆசைப்பட்டான். மகனின் பிந்தைய வாழ்க்கையைப் பேரன் மூலமாக விவரமாக அறிந்து கொள்ள பரமேஸ்வரன் ஆசைப்பட்டார். அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருக்கையில் சுவாரசியமாகக் கேட்டுக் கொண்டிருந்த மீனாட்சி இடையிடையே பேச்சில் தானும் கலந்து கொண்டாள்.

அவர்களுடனேயே இருந்து பார்த்துக் கொண்டிருந்த ஆனந்தவல்லிக்கு கடந்த காலம் திரும்பி வந்தது போல் ஒரு பிரமை ஏற்பட்டது. பரமேஸ்வரன், சங்கர், மீனாட்சி என்ற மூவரின் உலகம் தனிப்பட்டது. அதில் மற்றவர்களை எல்லாம் மறந்து மூவரும் அந்தக்

காலத்தில் லயித்திருப்பார்கள். சில அடிகள் தள்ளியே நின்று ஆனந்தவல்லி அக்காலத்தில் வெறித்துப் பார்ப்பாள். பல சமயங்கள் அவள் இருப்பதைக் கூட அவர்கள் மூவரும் கவனித்திருக்க மாட்டார்கள். இன்று சங்கருக்குப் பதில் அவன் மகன் ஈஸ்வர் சேர்ந்திருக்கிறான். அதே பழைய அன்னியோன்னியம், அதே பாசம் நிலவியது. ஒரே வித்தியாசம் ஆனந்தவல்லி தள்ளி நின்று வெறித்துப் பார்க்காமல் கூடவே அமர்ந்து ரசித்துக் கொண்டிருந்தாள்.

பரமேஸ்வரன் பேரனைக் கேட்டார். "நீ உங்கப்பா கிட்ட சண்டை போட்டிருக்கியா?"

ஈஸ்வர் சிரித்துக் கொண்டே சொன்னான். "எங்கப்பா கூட யாருமே சண்டை போட முடியாது. அதற்கு வழியே விட மாட்டார். ஓரளவாவது அவரைப் பொறுமை இழக்க வைக்கணும்னா நான் உங்களைப் பத்திப் பேசுவேன். உங்களைப் பத்தித் தப்பாய் பேசினா ஆள் மூட் அவுட் ஆயிடுவார்..."

பரமேஸ்வரன் கண்களில் நீர் திரை போட்டது. பேரனிடம் பெருந்துக்கத்தோடு கேட்டார். "அவ்வளவு தூரம் என்னை நேசிச்சவன் ஏன் ஈஸ்வர் என்னைத் திரும்பவும் சந்திக்க ஒரு தடவை கூட முயற்சி செய்யலை. நீ அவனைக் கேட்டிருக்கியா, இதைப் பத்தி"

ஈஸ்வர் சொன்னான். "கேட்டிருக்கேன். உங்களைத் திரும்ப ஒரு தடவை சந்திச்சா கடைசியா நீங்க கேட்டீங்களாமே 'நான் வேணுமா அந்தப் பொண்ணு வேணுமான்னு முடிவு பண்ணிக்கோ'ன்னு. அதுக்கு எந்த மாதிரி பதில் சொல்லி சமாளிக்கறதுன்னு அவருக்குப் புரியலை. அதை நேரடியா சொல்லாட்டியும் அதை என்னால் யூகிக்க முடிஞ்சுது..."

*தான் அப்படிச் சொல்லி மகனை ஒரு இக்கட்டான நிலைக்குத் தள்ளி இருக்க வேண்டாம் என்று இப்போது பரமேஸ்வரனிற்குத் தோன்றியது. மனம் கனமாகியது.*

*ஆனால் அப்போது ஈஸ்வர் ஏதோ நினைத்து குறும்பாய் புன்னகைக்க பரமேஸ்வரன் கேட்டார். "எதுக்கு சிரிக்கறே?"*

*"அதுக்கு நான் அவர் கிட்ட ஒரு வழி சொல்லி இருந்தேன். அதை நினைக்கிறப்ப சிரிப்பு வந்தது"*

*"என்ன வழி?"*

*"வேண்டாம் தாத்தா. சொன்னா கோவிச்சுக்குவீங்க"*

*"கோவிச்சுக்க மாட்டேன். சொல்லு"*

*ஈஸ்வர் குறும்பாய் புன்னகைத்துக் கொண்டே சொன்னான். "அப்பா கிட்ட சொன்னேன். 'நீங்க உங்கப்பா கிட்ட கேளுங்க... "அட மரமண்டை அப்பா, காதலையும் பாசத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கச் சொல்லுறீங்களே. உங்க கிட்ட வலது கண் வேணுமா, இடது கண் வேணுமான்னு கேட்டா ஏதாவது ஒண்ணை தேர்ந்தெடுத்து மற்றதை உங்களால பிடுங்கி எறிய முடியுமான்னு" கேளுங்க'ன்னு சொன்னேன்..."*

*பேரன் கேட்கச் சொன்னதில் இருந்த அழகான அர்த்தத்தை பரமேஸ்வரன் ரசித்தாலும் 'மரமண்டை அப்பா' என்ற வார்த்தைக்காக போலிக் கோபத்துடன் பேரனைப் பார்த்தார். மீனாட்சி மெல்லப் புன்னகைக்க ஆனந்தவல்லி கொள்ளுப் பேரனின் புத்திசாலித்தனத்தையும், குறும்பையும் ஒருசேர ரசித்தாள்.*

*ஈஸ்வர் தொடர்ந்து சொன்னான். இப்போது அவன் குரலில் குறும்பு போய் உணர்ச்சி நிரம்பி இருந்தது. “அவருக்கு உங்கள் கோபம் பத்தி பெரிசா பயம் இருக்கலை தாத்தா. ஆனால் உங்க மனசில் வலியைப் பார்க்கிற தைரியம் தான் அவருக்குக் கடைசி வரை வரலை...”*

*பரமேஸ்வரன் பேரனைக் கட்டியணைத்துக் கொண்டு கண்கலங்கினார். வறட்டு கௌரவம் பார்த்து வாழ்க்கையை ரணமாக்கிக் கொண்டு வாழ்ந்திருக்கிறோமே என்ற சுய பச்சாதாபம் அவரை அரித்தெடுத்தது.*

*தாத்தாவின் மனநிலையைப் புரிந்து கொண்ட ஈஸ்வர் பேச்சை மாற்றினான். “தாத்தா, எனக்கு பாட்டியைப் பத்தி சொல்லுங்களேன்”*

*ஆனந்தவல்லி கேட்டாள். “ஏண்டா என்னைப் பத்தி அவன் கிட்ட கேட்கறே?”*

*“நான் உங்களைப் பத்திக் கேட்கலை. எங்க பாட்டியைப் பத்திக் கேட்டேன்.”*

*“அப்ப நான் யார்டா பக்கத்து வீட்டுப் பாட்டியாடா?”*

*“ஐயோ நான் எங்கப்பாவோட அம்மாவைப் பத்திக் கேட்டேன். நீங்க என்னோட கொள்ளுப்பாட்டி தானே” என்ற ஈஸ்வர் குறும்பாகச் சேர்த்துச் சொன்னான். “கொஞ்சம் லொள்ளுப் பாட்டியும் கூட”*

பரமேஸ்வரனின் துக்க மனநிலை மாறி மனம் சற்று லேசாகியது. அவரும் மீனாட்சியும் சிரிக்க ஆனந்தவல்லி சற்று எட்டி பேரனின் காதைப் பிடித்துத் திருகினாள். ”ஏண்டா உனக்கு என்னைப் பார்த்தா லொள்ளுப் பாட்டி மாதிரியா தெரியுது”

சிரிப்பலை அங்கு பலமாய் எழுந்தது.

பிறகு பரமேஸ்வரன் பேரன் கேள்விக்குப் பதிலாய் மனைவியை நினைவு கூர்ந்தார். ”பாட்டி உன் அத்தை மாதிரியே இருப்பா. வெகுளித்தனம், நல்ல மனசு எல்லாம் கூட இவ மாதிரியே தான். நல்லா பாடுவா....”

சொல்வதில் ஒரு சுகம். கேட்பதில் ஒரு சுகம். அந்த இரண்டு சுகங்களையும் அங்கே காண முடிந்தது. பரமேஸ்வரன் சொல்லச் சொல்ல இடையிடையே மீனாட்சியும், ஈஸ்வரும் கேள்விகள் கேட்க கடந்த கால நிகழ்ச்சிகள் தத்ரூப நிகழ்வுகளாக அவரவர் மனதில் காணப்பட்டன. பேச்சு பரமேஸ்வரனின் தந்தை பக்கம் நகர்ந்தது. ஈஸ்வரைப் போலவே தோற்றத்தில் இருக்கும் அவரின் குணாதிசயங்களைப் பற்றிப் பேச்சு வந்த போது ஆனந்தவல்லி மிக ஆர்வத்துடன் கலந்து கொண்டாள். கணவனைப் பற்றிப் பேசும் போதெல்லாம அவளை அறியாமல் ஒரு மென்மை அவளைத் தொற்றிக் கொண்டது.

அதைப் பார்க்கும் போது சில பந்தங்களின் தாக்கம் எத்தனை காலமானாலும் குறைவதில்லை என்று ஈஸ்வருக்குத் தோன்றியது. கணவனை இழந்து ஐம்பது வருடங்களுக்கும் மேலாகி விட்டிருந்தாலும் அவர் மேல் இருந்த நேசத்தை அவள் பேச்சில் இப்போதும் அவனால் கவனிக்க முடிந்தது.

ஈஸ்வர் ஆனந்தவல்லிக்கு எட்டாத தூரத்தில் நகர்ந்து கொண்டு தாத்தாவிடம் சொன்னான். “தாத்தா, நான் கேள்விப்பட்ட வரையில் உங்கப்பா இருந்தவரை உங்கம்மா அவரைக் கரிச்சுக் கொட்டிகிட்டு இருந்தாங்கன்னு அல்லவா சொன்னாங்க”

பரமேஸ்வரன் தாயைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே சொன்னார். “ஆமா. அண்ணா அந்த சிவலிங்கம் பின்னாடி போக அப்பா தான் காரணம்னு எப்பவுமே அவருக்குத் திட்டு தான்”

“அப்ப இவங்க சித்திரவதை தாங்காம தான் அவர் சீக்கிரமே போய் சேர்ந்துட்டார்னு சொல்லுங்க” என்று ஈஸ்வர் சொல்ல ஆனந்தவல்லி சுற்றிலும் பார்த்து விட்டு அங்கிருந்த ஒரு வாரப்பத்திரிக்கையை எடுத்து அவன் மேல் வீசினாள்.

மீண்டும் சிரிப்பலை எழுந்தது. இத்தனை நாட்கள் வரை அந்த வீட்டில் இந்த மாதிரி ஒரு உயிர்ப்புள்ள சந்தோஷம் இருந்ததில்லை. சங்கர், மீனாட்சி, பரமேஸ்வரன் வட்டத்திலும் அளவு கடந்த பாசம் இருந்ததே ஒழிய இந்தக் கிண்டல், சீண்டல் எல்லாம் இருந்ததில்லை.

நான்கு தலைமுறைகள் மனிதர்கள் சேர்ந்து இப்படி அன்பாகவும், பாசமாகவும், கிண்டலாகவும், விவாதம் செய்து கொண்டும் இருக்கும் ஒரு அற்புத பந்தம் உருவாக ஈஸ்வர் தான் காரணம் என்பதை பரமேஸ்வரன் உணர்ந்தார். பேசிக் கொண்டே இருந்த அவர்கள் சிறிது சிறிதாக நெருங்கி உட்கார ஆரம்பித்து கடைசியில் ஈஸ்வர் தாத்தாவின் மடியில் படுத்துக் கொண்டான். பரமேஸ்வரன் பாசத்துடன் பேரன் தலையைக் கோதி விட ஆனந்தவல்லி நிறைந்த மனதுடன் மகனையும் கொள்ளுப் பேரனையும் பார்த்தாள். மீனாட்சி தந்தையை ஒட்டினாற்போல் உட்கர்ந்து கொண்டாள்.

அந்த நேரத்தில் தென்னரசுவும், விஷாலியும் பரமேஸ்வரனின் உடல் நலம் விசாரிக்க அங்கு வந்தார்கள். விஷாலியைப் பார்த்தவுடன் ஓரிரு வினாடிகள் தானாக ஈஸ்வரின் முகம் மலர்ந்து பின் இறுகியது. மெள்ள தாத்தாவின் மடியில் இருந்து எழுந்தான். ஈஸ்வரின் முகத்தில் வந்து போன மாற்றங்களைக் கூர்மையாக கவனித்துக் கொண்டிருந்த ஆனந்தவல்லி இந்த மாற்றத்தை ஏற்படுத்த முடிந்த பெண் யார் என்று திரும்பிப் பார்த்தாள்.

**************

ஜான்சன் குருஜியை அழைத்துப் போக வந்திருந்தார். சிவலிங்கத்தை மாற்றும் இடத்தில் ஆராய்ச்சிக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் தன் மேற்பார்வையிலேயே ஜான்சன் சிறப்பாக முடித்திருந்தார். குருஜி அதைப் பார்வையிட கிளம்பிக் கொண்டிருந்தார். குருஜிக்கு மிகவும் பரபரப்பாக இருந்தது. இந்த உலக வரலாற்றை அவர் கண்டிப்பாக மாற்றி எழுதப் போகிறார். இது அதற்கான அழகான ஆரம்பம் என்பதில் அவருக்கு சந்தேகம் இல்லை.

“உன் ஆள்கள் எல்லாம் ஆராய்ச்சிக்குத் தயார் நிலையில் தானே இருக்கிறார்கள்?” குருஜி ஜான்சனைக் கேட்டார்.

”அவர்கள் அதிகமாய் ஆல்ஃபா அலைகளிலேயே இருக்கிறார்கள் குருஜி.” ஜான்சன் சொன்னார்.

“நீ வரவழைத்திருக்கிற உபகரணங்கள் எல்லாம் வேலை செய்கிற தயார்நிலையில் தானே இருக்கின்றன”

“ஆமாம் குருஜி”

அதற்கு மேல் குருஜி கேள்வி எதுவும் கேட்கவில்லை. திருப்தி அடைந்தவராக ஜான்சனுடன் கிளம்பினார்.

ஆனால் ஜான்சன் மனதில் கணபதி தயார்நிலையில் இருப்பானா என்ற கேள்வி ஒன்று எழுந்தது. கேட்டார்.

குருஜி புன்னகையுடன் சொன்னார். “நீ தேர்ந்தெடுத்திருக்கிற ஆட்கள் எல்லாம் தங்களைத் தயார்படுத்திக்கணும் ஜான்சன். ஆனால் கணபதி எப்பவுமே தயார்நிலையில் தான் இருப்பான்”

# அத்தியாயம் - 59

விஷாலிக்குத் தன் கண்களை நம்ப முடியவில்லை. எந்த மனிதரைத் தாத்தா என்று அழைக்கக் கூட ஈஸ்வர் மறுத்திருந்தானோ அவர் மடியில் அவன் படுத்துக் கொண்டு கதை பேசிக் கொண்டிருந்தது அவளை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. அவர்கள் இருவர் கூடவே மீனாட்சியும் ஆனந்தவல்லியும் மிக ஒட்டி அமர்ந்திருந்த விதம் ஒரு அன்பான குடும்பத்தின் அழகான தருணமாகத் தோன்றியது. தாங்கள் வந்து அந்த அழகைக் குலைத்து விட்டோமோ என்று கூட விஷாலி நினைத்தாள்.

பரமேஸ்வரனுக்கு மாரடைப்பு வந்ததைத் தெரிவிக்கையில் மகேஷ் அழுதபடியே அவளிடம் சொல்லி இருந்தான். “ஈஸ்வர் வந்த வேலையை முடிச்சுட்டான் விஷாலி. எங்க தாத்தாவை அவன் கொன்னுட்டான்.... அவர் உயிருக்குப் போராடிகிட்டு இருக்கார் விஷாலி....”

ஆனால் மறுநாள் அவர்களுக்குக் கிடைத்த செய்தி வேறாக இருந்தது. பரமேஸ்வரன் பிழைத்து விட்டார் என்று தெரிந்தது மட்டுமல்லாமல் பரமேஸ்வரனின் அண்ணா கனவில் வந்து அவரைக் காப்பாற்றி விட்டார் என்று சொல்லப்பட்டது. தென்னரசு பரமேஸ்வரனை உடனே பார்த்து விட்டு வரத் தீர்மானித்தார். மீனாட்சியிடம் பேசிய போது அவர் ஓய்வில் இருக்கிறார், சதா உறங்குகிறார் என்று சொன்னாள். அதனால் தென்னரசு பரமேஸ்வரனைப் பார்ப்பதை இரண்டு நாள் தள்ளிப் போட்டார்.

பரமேஸ்வரன் தென்னரசுவிடம் நெருங்கிப் பழகுபவர் அல்ல. தென்னரசுவைப் பார்க்கும் போதெல்லாம் பரமேஸ்வரனுக்கு மகன் சங்கர் நினைவு வருவதை தவிர்க்க முடியாதது காரணமாக இருக்கும் என்பதைப் புரிந்து கொண்டு தென்னரசுவும் பரமேஸ்வரனிடம் இருந்து சற்றுத் தொலைவாகவே இருந்தார். ஆனாலும் இது போன்ற உயிருக்கு ஆபத்து வந்து பின் பிழைக்கும் சந்தர்ப்பங்களில் போய் சந்தித்து நலம் விசாரிப்பது தான் முறை என்று தென்னரசு மகளிடம் சொல்லி அவளையும் அழைத்து வந்தார்.

பரமேஸ்வரனைப் பார்ப்பதைக் காட்டிலும் ஈஸ்வரைப் பார்க்கும் சந்தர்ப்பத்தை நழுவ விட விஷாலிக்கு மனம் இல்லை. அதனால் தான் தந்தையுடன் அவள் கிளம்பினாள். ஆனால் இங்கு வந்தவுடனேயோ, வந்திருக்கவே வேண்டாமோ என்று அவளுக்குத் தோன்ற ஆரம்பித்தது. அவளைப் பார்த்தவுடனேயே ஈஸ்வர் முகம் இறுகியது மட்டுமல்ல பின் அவள் ஒருத்தி அங்கு வந்திருப்பதாக உணர்ந்ததாகவே அவன் காட்டிக் கொள்ளவில்லை. தென்னரசுவை முகம் மலர வரவேற்றவன் அவரிடமே பேசிக் கொண்டிருந்தான். மகன் சம்பந்தமான பாரத்தை இறக்கி வைத்திருந்த பரமேஸ்வரனும் தென்னரசுவிடம் அன்பாகப் பேசிக் கொண்டிருந்தார்.

விஷாலி பரமேஸ்வரனிடம் ஒருசில வார்த்தைகளில் நலம் விசாரித்து விட்டுப் பின்பு மீனாட்சியுடன் பேச ஆரம்பித்தாள். என்றுமில்லாத அதிசயமாக ஆனந்தவல்லியும் அவர்களுடன் சேர்ந்து கொண்டது விஷாலிக்கு மிக ஆச்சரியமாக இருந்தது.

சிறு வயதில் இருந்து அவர்கள் வீட்டுக்கு வந்து போகும் விஷாலியிடம் ஒரு முறை கூட ஆனந்தவல்லி பேசியதாக விஷாலிக்கு நினைவில்லை. சற்று தொலைவில் இருந்தே கண்களைச் சுருக்கி கழுகுப் பார்வை பார்க்கும் ஆனந்தவல்லி விஷாலியை ஒரு பொருட்டாக மதித்ததில்லை என்றே சொல்ல வேண்டும். ஆனால் ஈஸ்வர் வந்த பிறகு நிறையவே மாறி இருந்த ஆனந்தவல்லி ஈஸ்வருக்காகவே விஷாலி விஷயத்திலும் மாறினாள்.

ஈஸ்வர் சில நாட்களுக்கு முன் திடீரென்று மிக சந்தோஷமாக மாறியதும், பாடல்கள் முணுமுணுக்க ஆரம்பத்ததும் அவன் காதல் வசப்பட்டிருந்ததை அவளுக்கு உறுதிப்படுத்தியது. அந்த சமயத்தில் அவன் தென்னரசு வீட்டுக்கு மட்டுமே போய் வந்திருந்தபடியால் அவன் மனதைக் கவர்ந்த பெண் விஷாலியாகவே இருக்க்க் கூடும் என்ற சந்தேகமும் அவளுக்கு ஏற்பட்டு இருந்தது. ஈஸ்வர் இந்த வீட்டிலேயே பிறந்து வளர்ந்து இருந்து அவள் கருத்துக்கு மரியாதை இருந்திருக்கும் பட்சத்தில் அவள் விஷாலியை ஏற்றுக் கொண்டிருப்பது சந்தேகமே. அந்தஸ்தில் உள்ள ஏற்ற தாழ்வை அவள் காரணம் காட்டி மறுத்திருப்பாள். ஆனால் அமெரிக்காவில் வளர்ந்து பெரிதானவன், குடும்ப அந்தஸ்திற்கு அரைக்காசு மரியாதை கூட கொடுக்க நினைக்காதவன், தன் மனைவியைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை அந்தக் குடும்பத்திற்குக் கொடுக்கும் எண்ணம் சிறிதும் இல்லாதவன் ஒரு வெள்ளைக் காரியையோ, சீனாக்காரியையோ, ஆப்பிரிக்காக்காரியையோ கல்யாணம் செய்து கொண்டாலும் ஆச்சரியமில்லை என்கிற இந்த நிலையில் ஆனந்தவல்லிக்கு பெண் யாரானாலும் இந்த நாட்டுப் பெண்ணாக

இருந்தால் நல்லது என்று இறங்கி வருகிற எண்ணத்தைக் கொண்டு வந்து விட்டது.

காதலிக்க ஆரம்பித்து இரண்டே நாளில் ஈஸ்வர் முகம் வாடி, அவன் பாட்டும் காணாமல் போய் விட்டது அவளுக்கு ஏமாற்றத்தையே தந்தது. ’இந்தக் காலத்துப் பசங்களுக்குக் காதலிக்கவும் அதிக நாள் தேவைப்படுவதில்லை, அதிலிருந்து விலகி விடவும் அதிக நாள் தேவைப்படுவதில்லை’ என்று மனதில் அங்கலாய்த்துக் கொண்டிருந்தாள். அவனுக்கு ஒரு திருமணம் ஆகி அவன் குழந்தையைப் பார்த்து விட்டுக் கண்ணை மூடினால் தேவலை என்று ஆசைப்பட ஆரம்பித்திருந்த அவள் வேறு வழியில்லாமல் ஏமாற்றத்தை சகித்துக் கொண்டாள்.

ஆனால் இன்று விஷாலியைப் பார்த்தவுடன் ஈஸ்வர் தன்னை அறியாமல் ஒரு கணம் முகம் மலர்ந்ததைக் கவனித்த போது இன்னமும் அவன் மனதில் காதல் இருக்கிறது என்பதும், அவன் காதலிக்கும் பெண் விஷாலி தான் என்பதும் அவளுக்கு உறுதியாகி விட்டது. உடனடியாக அவன் முகம் இறுகியதை அவள் பெரிதுபடுத்தவில்லை. தன்னை அறியாமல் ஏற்படும் உணர்வு தான் நிஜம் என்பதில் அவளுக்கு சந்தேகமே இல்லை. தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு வெளியே அவன் காட்டுகிற பாசாங்கை அவள் நம்பவில்லை.

தூரத்தில் இருந்தே எப்போதும் பார்த்த அந்தப் பெண்ணைப் பற்றி முழுவதுமாகத் தெரிந்து கொள்ள முடிவெடுத்த ஆனந்தவல்லி மீனாட்சி, விஷாலி இருவரும் பேசும் போது இடையிடையே கலந்து கொண்டாள். பின் ஒரேயடியாக மீனாட்சியை பேச்சில் இருந்து வெட்டிவிட முடிவெடுத்தாள். “ஏண்டி, வந்திருக்கறவங்களுக்கு சாப்பிட ஏதாவது தர்றதில்லையா?”

மீனாட்சி உடனடியாக எழுந்து விட்டாள். “ஒண்ணும் வேண்டாம் ஆண்ட்டி” என்று சொல்லித் தானும் எழுந்த விஷாலியைக் கையமர்த்தி பக்கத்தில் உட்கார வைத்து விட்டு பேத்தியை அங்கிருந்து அனுப்பி விட்ட ஆனந்தவல்லி விஷாலியிடம் தாழ்ந்த குரலில் கேட்க ஆரம்பித்த கேள்விகள் கொஞ்ச நஞ்சமல்ல. விஷாலியைப் பற்றி ஒரு புத்தகமே எழுதுகிற அளவு அவள் தகவல்கள் சேகரித்து விட்டாள். விஷாலி பதில் சொல்லியே சலித்துப் போனாள். ’இந்தப் பாட்டிக்கு என்ன திடீர் என்று என் மேல் இவ்வளவு ஆர்வம்?’

சற்று தள்ளி அமர்ந்து பரமேஸ்வரன், தென்னரசுவுடன் பேசிக் கொண்டிருந்தாலும் ஈஸ்வர் கவனம் அடிக்கடி விஷாலி பக்கம் திரும்பிக் கொண்டு இருந்தது. வெளிப்பார்வைக்கு விஷாலியைக் கண்டு கொள்ளாமல் இருந்தாலும் உண்மையாகவே அவனால் அப்படி இருக்க முடியவில்லை. அதை யோசிக்கும் போது அவனுக்குத் தன் மீதே வெறுப்பாக இருந்தது. ‘என்னை இவள் இந்த அளவு பாதிக்க நான் அனுமதி கொடுத்திருக்கிறேனே’.

ஆனந்தவல்லி அவளிடம் சும்மா ஏதேதோ கேட்டுக் கொண்டிருந்தது அவனுக்குப் பிடிக்கவில்லை. காரணம் என் கொள்ளுப் பாட்டி அவளிடம் ஏன் இந்த அளவு நெருங்கிப் பேச வேண்டும் என்பதா, இல்லை விஷாலியை ஏன் இந்தப் பாட்டி இந்த அளவு பேசிக் கழுத்தறுக்கிறாள் என்பதா என்று அவனால் கணிக்க முடியவில்லை.

ஈஸ்வர் பார்வை விஷாலிக்குத் தெரியாதபடி அடிக்கடி அங்கே வருவதையும் அவன் தன்னை அறியாமல் முகம் சுளிப்பதையும் ஆனந்தவல்லி பேச்சின் நடுவே கவனிக்கத் தவறவில்லை. அதே போல் விஷாலியும் இடையிடையே ஈஸ்வரைப் பார்த்த விதம் சந்தேகத்திற்கிடமில்லாமல் அவள் காதலையும் வெளிப்படுத்தியது.

ஆனந்தவல்லி பரம திருப்தி அடைந்தாள். விஷாலியிடம் பேசியதில் அவள் பத்தரை மாற்றுத் தங்கம் என்பதை ஆனந்தவல்லியால் எடை போட முடிந்தது. நல்ல இளகிய மனம், உபகார சிந்தனை, புத்திசாலித்தனம் என்று பல மார்க்குகள் போட்ட அவள் தன் கொள்ளுப் பேரனுக்கு இவளை விட நல்ல பெண் கிடைக்காது என்ற முடிவுக்கு வந்தாள். பிறகு தான் கேள்வி கேட்பதை நிறுத்தினாள்.

அவள் கேள்வி கேட்பதில் ஒரு சின்ன இடைவெளி விட்டதும் விஷாலி எழுந்து "ஆண்ட்டி வர ஏன் இவ்வளவு நேரம்? என்ன தான் செய்யறாங்க" என்று கேட்டுக் கொண்டே மீனாட்சியைப் பார்க்க அங்கிருந்து வேகமாகத் தப்பித்தாள்.

விஷாலி போன பின் ஈஸ்வர் எழுந்து ஆனந்தவல்லி அருகே வந்தான். "அவ கிட்ட என்ன அப்படி விடாமல் பேச்சு?"

ஆனந்தவல்லி அவனைக் கூர்மையாகப் பார்த்துக் கொண்டே கேட்டாள். "ஏண்டா உனக்கு அவ கிட்ட ஏதாவது பேச இருந்துச்சா?"

"சேச்சே... அப்படி எல்லாம் இல்லை. தொண தொணன்னு பேசிகிட்டே இருந்தீங்களேன்னு கேட்டேன்" என்று ஈஸ்வர் அலட்சிய தொனியில் சொன்னான்.

ஆனந்தவல்லி புன்னகைத்தாள். அவள் மனதில் நினைத்துக் கொண்டாள். 'நீ பெரிய சைக்காலஜிஸ்டா இருக்கலாம். ஆனா நான் உனக்கு மூணு தலைமுறை மூத்தவள்டா. அந்தக் காலத்துலயே நான் உன் கொள்ளுத் தாத்தாவைக் காதலிச்சுக் கல்யாணம் செய்துகிட்டவள். என் கிட்டயே இந்த நடிப்பா'.

*ஈஸ்வருக்கு அவள் புன்னகை உள்ளர்த்தம் உள்ளதாகத் தெரிந்தது. அந்த நேரமாகப் பார்த்து பரமேஸ்வரன் அவனை அருகே அழைக்கவே, இந்த விவகாரமான பாட்டியிடம் இருந்து தப்பித்தால் போதும் என்று அவன் நகர்ந்தான்.*

*"என்ன தாத்தா?"*

*"அப்புறம் என்னோட பழைய ஸ்கேன் ரிப்போர்ட்டுகள் எல்லாம் ஆஸ்பத்திரிக் காரங்களுக்குக் கிடைச்சுதா?"*

*அந்தக் கேள்விக்குப் பதிலை பரமேஸ்வரனை விட அதிகமான ஆர்வத்துடன் தென்னரசு எதிர்பார்ப்பதாக ஈஸ்வருக்குத் தோன்றியது.*

*"கிடைக்கலை தாத்தா. அந்த டாக்டர் நானே அதை வேணும்னே எடுத்து மறைச்சிட்டேன்னு நினைச்ச மாதிரி கூட இருந்தது. ஆனால் அது எப்படி மாயமாச்சுன்னு எனக்கு இப்பவும் விளங்கலை"*

*தென்னரசு மெல்ல கேட்டார். "ஒரு ஆராய்ச்சியாளனாய் உன்னோட யூகத்தை சொல்லேன். என்ன நடந்திருக்கும்...?"*

*ஈஸ்வர் சிறிது யோசித்து விட்டுச் சொன்னான். "பெரிய தாத்தாவும் ஒரு சித்தர் மாதிரி தான்னு இப்ப எனக்கு அதிகம் தோண ஆரம்பிக்குது. சித்தர்கள் எப்பவுமே விளம்பரத்தை விரும்பாதவங்க. அவர் இருந்தப்ப எந்த சக்தியையும் வெளிப்படுத்தாதவர். அந்தப் பழைய ஸ்கேன் ரிப்போர்ட்டும், புது ஸ்கேன் ரிப்போர்ட்டும் இருந்திருந்தா அது ரெகார்டாய் இருந்திருக்கும். செய்தியாய் இருந்திருக்கும். அவர் வாழ்ந்த தோட்ட வீட்டைக் கும்பிட ஒரு*

*கூட்டம் கிளம்பி இருக்கும்.... வாழும் போது இருக்கிற இடம் தெரியாமல் இருந்த அவர் இறந்த பிறகும் அதிகமாய் பேசப்படறதை விரும்பலை போல இருக்கு... பழைய ஸ்கேன் ரிப்போர்ட் கிடைக்காத வரை நாமளும் டாக்டரும் சொல்றதை யாரும் பெரிசா எடுத்துக்க மாட்டாங்க. அதனால தான் அது கிடைக்கலைன்னு நினைக்கிறேன். சித்தர்களால முடியாதது என்ன இருக்க முடியும் அங்கிள்...”*

*தென்னரசு மெள்ளத் தலையாட்டினார். அவரையும் மீறி அவர் முகத்தில் கிலி தோன்றி மறைந்தது.*

**************

*அந்த ஆராய்ச்சி நடக்க இருக்கும் கட்டிடம் 23 ஏக்கர் நிலத்தின் மையப்பகுதியில் அமைந்திருந்தது. அந்த நிலத்தை மூன்று வருடங்களுக்கு முன் இந்தியப் பெரும் பணக்காரரான பாபுஜி வாங்கி இருந்தார். அந்த நிலத்தைச் சுற்றி மிக உயர்ந்த காம்பவுண்ட் சுவர் எழுப்பப்பட்டு இருந்தது. வெளியே கேட்டில் இருந்து பார்த்தால் அது வெறும் தோட்டமாகவே தெரியுமே ஒழிய உள்ளே ஒரு பெரிய கட்டிடம் இருப்பது தெரிய வாய்ப்பே இல்லை. அதற்கேற்றபடி பெரிய மரங்கள் அந்தக் கட்டிடத்தை மறைத்துக் கொண்டு இருந்தன.*

*கேட்டில் இரண்டு திடகாத்திரமான கூர்க்காக்கள் நின்று கொண்டிருந்தார்கள். ஜான்சனைப் பார்த்தவுடன் கேட்டைத் திறந்து விட்டார்கள். அவர்கள் கார் உள்ளே நுழைந்தது. பின்னாலேயே இன்னொரு கார் உள்நுழைய ஜான்சன் திகைப்புடன் வருவது யார் என்று பார்த்தார். பாபுஜி!*

*ஜான்சன் குருஜியைப் பார்த்தார். குருஜிக்கு பாபுஜியின் வரவு ஆச்சரியமாக இருந்தது போல் தெரியவிலை. முதலிலேயே பாபுஜி*

வரப் போவதை அவர் அறிந்திருந்தார் போல இருந்தது. ஜான்சனுக்கு பாபுஜியின் வரவு ஒருவித அசௌகரியத்தை உண்டு பண்ணியது. மும்பையில் பாபுஜியையும், முகம் தெரியாத அவரது கூட்டாளிகளையும் சந்தித்ததில் இருந்தே சொல்லத் தெரியாத அபாயத்தை அவர் உணர்ந்து வந்தார்....!

ஆனால் காரில் இருந்து இறங்கிய பாபுஜி நீண்ட நாள் நண்பரைப் போல வந்து ஜான்சனை அணைத்துக் கொண்டார். “ஜான்சன் எப்படி இருக்கீங்க?”

ஜான்சனுக்கு அதே நட்பைக் காட்ட முடியவில்லை. பலவந்தமாக முகத்தில் புன்னகையை வரவழைத்துக் கொண்டு நலமாக இருப்பதாகச் சொன்னார்.

குருஜியின் காலைத் தொட்டு வணங்கிய பாபுஜி அவரிடமும் நலம் விசாரித்தார். பின் ஆர்வத்துடன் குருஜியை பாபுஜி கேட்டார். “எல்லாம் சரியாய் தானே குருஜி போய்கிட்டிருக்கு?”

குருஜி தலையசைத்தார். பாபுஜி பொங்கும் ஆர்வத்துடன் சொன்னார். “எனக்கு இங்கே செய்திருக்கிற முன்னேற்பாடுகளை எல்லாம் பார்க்கிற வரை இருப்பு கொள்ள மாட்டேன் என்கிறது. அதனால் தான் வந்தேன்....”

தொடர்ந்து இன்னும் என்னென்னவோ கேட்கப் போன பாபுஜி ‘நிறுத்து’ என்பது போல குருஜி கை காட்டினார். பாபுஜி பேச வந்ததைப் பேசாமல் நிறுத்தி கேள்விக்குறியுடன் குருஜியைப் பார்த்தார்.

*குருஜி அமைதியாகச் சொன்னார். ”பாபுஜி நீ என்ன கேட்கணுமோ உள்ளே போய் விட்டு திரும்பி வந்த பிறகு அப்புறமா கேள். இப்ப நாம் முக்கியமான ஒரு இடத்துக்குப் போகிறோம்கிறதை ஞாபகம் வச்சுக்கோ. இது விசேஷ மானஸ லிங்கத்திற்காக தயாராய் இருக்கிற இடம். இங்கே அமைதியான சூழ்நிலையை எந்த விதத்திலும் நாம் கலைச்சுடக் கூடாது.....”*

*ஆசிரியரால் கண்டிக்கப்பட்ட மாணவனைப் போல பாபுஜி தலையாட்டினார்.*

*“உள்ளே முடிஞ்ச வரைக்கும் குறைவாய் பேசு. உள்ளே எந்த விதத்திலும் சத்தம் அதிகம் செய்யக் கூடாது. உள்ளே ஆராய்ச்சிக்கு நாம் அழைத்து வந்திருக்கிறவர்கள் தொடர்ந்து தியானம் செய்து ஆராய்ச்சிக்குத் தேவையான ரொம்ப சென்சிடிவான நிலையில் இருப்பார்கள். அதிகமாய் வர்ற சத்தங்கள் நாராசமாய் அவர்கள் காதில் விழும். அவர்கள் மன அமைதி பாதிக்கப்பட்டால் நம் ஆராய்ச்சிகளும் பாதிக்கப்படும்... சில சமயங்களில் அவர்கள் மறுபடி பழைய நிலைக்கு வருகிற வரைக்கும் ஆராய்ச்சிகளை ஒத்திப் போட வேண்டி இருக்கும்”*

*பாபுஜி ஆராய்ச்சிகள் ஒத்திப் போடப்படுவதை சிறிதும் விரும்பவில்லை. வாய் மேல் விரலை வைத்துக் காட்டி இனி பேசுவதில்லை என்று குருஜியிடம் சைகை மூலம் தெரிவித்தார். ஜான்சனுக்கு குருஜியின் ஆளுமைத் திறனை வியக்காமல் இருக்க முடியவில்லை. எத்தனை பெரிய ஆளானாலும் சரி குருஜி அதிகம் அலட்டிக் கொள்ளாமல் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதில் வல்லவர் தான் என்று நினைத்துக் கொண்டார்.*

*குருஜி பாபுஜியிடம் சொன்ன வார்த்தைகள் வெறுமனே சொல்லப்பட்டதல்ல. இந்த இடத்தில் ஆராய்ச்சிக்கான சரியான*

சூழ்நிலையில் சின்னக் குறை வந்தாலும் அதைச் சரிப்படுத்தும் வரை ஆராய்ச்சியைத் தொடர்வது முடியாத காரியம். காரணம் இது சாதாரண ஆராய்ச்சி அல்ல. இது வரை உலகத்தில் எங்குமே யாருமே செய்திராத மிகப் பெரிய ஆராய்ச்சி. இதற்கு முன்னேற்பாடுகள் செய்யவே ஜான்சன் நிறைய உழைத்திருக்கிறார். ஒவ்வொரு ஏற்பாட்டையும் அவர் குருஜியிடம் தெரிவித்து அவரது ஒப்புதலை வாங்கி இருக்கிறார். அவரது பெரும்பாலான ஏற்பாடுகளில் குருஜி குறை காணவில்லை என்றாலும் சில ஏற்பாடுகளில் என்னென்ன மாற்றம் செய்ய வேண்டும் என்று சொல்லி மாற்றி இருக்கிறார். அதற்கான காரணங்களை எல்லாம் குருஜி விளக்கிய போதெல்லாம் ஜான்சனுக்கு குருஜியைப் பார்த்து பிரமிக்கத் தோன்றி இருக்கிறது. இவர் அறிவுக்கு எட்டாத விஷயமே இல்லையா என்று அவர் வியந்திருக்கிறார்.

அது ஒரு தியான மண்டபம். உள்ளே நுழைந்த போதே மிக மெல்லிய ஸ்ருதியில் “ஓம்” என்ற ஓங்காரம் ஒலித்துக் கொண்டிருப்பது கேட்டது. அந்தத் தியான மண்டபமே அதைச் சொல்வது போல... அந்தத் தியான மண்டபமே அந்த ஒலியில் மூழ்கித் திளைப்பது போல.... பாபுஜி மிகப் பெரியதொரு அமைதி தன்னையும் ஆட்கொள்வதை உணர்ந்தார்....

சில மாதங்களுக்கு முன் தான் அந்தத் தியான மண்டபம் கட்டி முடிக்கப்பட்டது. அப்போது பாபுஜி இங்கு வந்து இருக்கிறார். இன்று அதன் கட்டிட அமைப்பிலும் தோற்றத்திலும் எந்த மாறுதலும் இல்லை.... என்றாலும் அது அன்று அவர் பார்த்த கட்டிடமாக இல்லை.... வேறு ஏதோ ஒரு உலகத்திற்கு வந்திருப்பது வந்திருப்பது போன்ற உணர்வு பாபுஜிக்கு ஏற்பட்டது.

# அத்தியாயம் - 60

இது வரை உணர்ந்திராத அந்த அழகான அமைதியில் பரவசப்பட்டு அதைப் பற்றி எதோ சொல்ல வாயைத் திறந்த பாபுஜி, குருஜி குறைவாய் பேசச் சொன்னது நினைவுக்கு வர வெளியே போன பிறகு பேசிக் கொள்ளலாம் என்று நினைத்து மௌனமானார்.

அந்தத் தியான மண்டபம் பெரிதாகவும், அழகாகவும் இருந்தது. உள்ளே நுழைந்ததும் முதலில் கவனித்தது தியானத்தில் அமர்ந்திருந்த மூன்று பேரைத் தான். மூன்று பேரும் நிறைய இடைவெளி விட்டு வேறு வேறு இடங்களில் தியான மண்டபத்தின் மையப்பகுதியைப் பார்த்தபடி உட்கார்ந்து தியானம் செய்து கொண்டிருந்தார்கள்.

தியான மண்டபச் சுவர்களில் அங்கங்கே பல காமிராக்கள் பொருத்தப்பட்டு இருந்தன. அதே போல், கண்ணுக்குத் தெரியாத நுண்ணிய அலைகளைக் கண்டுபிடித்துத் தெரிவிக்கும் மிக நவீனக் கருவிகளும் சுவர்களில் பொருத்தப்பட்டிருந்தன. ஹாலின் ஒரு மூலையில் மூளை அலைகளை அளக்கும் ஐந்து *EEG* மெஷின்கள் வைக்கப்பட்டு இருந்தன. அவை எல்லாம் அந்தத் தியான மண்டபத்தின் அமைதி அழகைக் குறைப்பது பார்ப்பது போல பாபுஜிக்குத் தோன்றினாலும் இதெல்லாம் தவிர்க்க முடியாதது என்று பாபுஜி சமாதானப்படுத்திக் கொண்டார்.

குருஜி நிதானமாக காமிராக்களையும் உபகரணங்களையும் பார்வையிட்டார். ஒவ்வொரு இடத்திலிருந்தும் ஹாலின் மையப் பகுதியை குருஜி பார்த்த போது தான் பாபுஜி ஹாலின் மையப்பகுதியில் சில சக்கரங்கள் வரையப்பட்டு இருந்ததைக் கவனித்தார். அங்கு தான் விசேஷ மானஸ லிங்கம் வைக்கப்படும் என்பதை பாபுஜி அனுமானித்தார்.

எல்லாவற்றையும் பார்வையிட்டு முடித்த குருஜி திருப்தியுடன் ஜான்சனைப் பார்த்துத் தலையசைத்தார். ஜான்சனின் முகத்தில் திருப்தி தெரிந்தது. குருஜியின் பார்வை அடுத்ததாக தியானம் செய்பவர்களின் பக்கம் திரும்பியது.

ஜான்சன் தேர்ந்தெடுத்து வைத்திருந்த எட்டு பேரில் இருந்து வடிகட்டி இந்த மூவரைத் தேர்ந்தெடுத்தது குருஜி தான். எட்டு பேருமே ஜான்சனால் முன்பு ஆராய்ச்சிகளுக்குப் பயன்படுத்தப்பட்டவர்கள். அவர்கள் ஃபைல்களுடன் குருஜியை ஜான்சன் சந்தித்த போது குறை நிறைகளை அலசி ஆராய்ந்து குருஜி இந்த மூவரைத் தேர்ந்தெடுத்திருந்தார்.

மூவர் தியானமும் இப்போது கலைந்திருந்தது என்றாலும் அவர்கள் அமைதி கலையவில்லை. மூவரில் இருவர் ஆண்கள். ஒருத்தி பெண். அவர்கள் இவர்களை எந்த வித பரபரப்பும் இல்லாமல் பார்த்தார்கள்.

குருஜி அருகில் இருந்த முதல் நபரை நோக்கிச் செல்ல பாபுஜியும், ஜான்சனும் பின் தொடர்ந்தார்கள். அந்த நபர் மெள்ள எழுந்து நின்றார்.

பாபுஜி அந்த மூவரையும் இப்போது தான் முதன்முதலாகப் பார்க்கிறார் என்றாலும் மூவரைப் பற்றியும் நன்றாக அறிவார். மூவர் பற்றிய விவரங்களும் மூன்று ஃபைல்களில் மூன்று நாட்களுக்கும் முன்பே அவர் பார்வைக்குச் சென்றிருந்தது.

இப்போது குருஜி நெருங்கும் நபர் ரஷ்யாவைச் சேர்ந்த அலெக்ஸி. வயது 53. லெனின்கிராடு நகரில் வசிப்பவர். ஒரு தினசரிப் பத்திரிக்கையில் வேலை பார்த்து வருகிறார்.

பத்தாண்டுகளுக்கு முன் அபூர்வ சக்திகள் பற்றி யாராவது பேசினால் வயிறு குலுங்க சிரிக்கக் கூடியவராக இருந்தவர் அவர். ஒரு சாலை விபத்தில் தலையில் அடிபட்டு குணமான போது சில கூடுதல் சக்திகளை அவரை அறியாமல் அவர் அடைந்திருந்தார். மனிதர்கள் சொல்லாமலேயே அவர்களைப் பற்றிய சில விவரங்கள் அவர்களை சந்திக்கையில் அவருக்குத் தெரிய ஆரம்பித்தன. அந்த சக்திகளை முழுமையாக வளர்த்துக் கொள்ள ஆசைப்பட்ட அவர் சைபீரியாவைச் சேர்ந்த பக்கிரி ஒருவரின் சிஷ்யராகச் சேர்ந்து ஆழ்மனசக்தி நுணுக்கங்களை மேலும் கற்றுக் கொண்டார். திருமணமாகி மனைவி, மகனுடன் வாழ்ந்து வரும் அவர் ரஷ்யாவில் ஆழ்மனசக்தி ஆராய்ச்சி மையத்தின் பல ஆராய்ச்சிகளில் கலந்து கொண்டு இருக்கிறார்.....

நல்ல உயரமாகவும், திடகாத்திரமாகவும் இருந்த அலெக்ஸியிடம் ஜான்சன் குருஜியையும், பாபுஜியையும் அறிமுகப்படுத்தினார். வழக்கமாக இது போன்ற சந்தர்ப்பங்களில் கை குலுக்குவது முறை என்பதால் பாபுஜி கையை நீட்ட முனைந்த போது ஜான்சன் மெல்ல அவர் கையைப் பின்னுக்கு இழுத்தார். பின் தான் பாபுஜி குருஜியும், ஜான்சனும் கை கொடுக்க முன் வராததைக் கவனித்தார். அலெக்ஸியும் கை குலுக்க முனையாமல் அப்படியே இருந்தார்.

குருஜி அலெக்ஸியிடம் இங்கு எந்த அசௌகரியமும் இல்லை அல்லவா என்று மிகத் தாழ்ந்த குரலில் கேட்க அலெக்ஸியும் இல்லை என்று பதில் அளித்தார். குருஜி பாபுஜியைக் காட்டி கேட்டார். "இவரிடம் நீங்கள் என்ன உணர்கிறீர்கள்? எங்களுக்குத் தெரியாத எதையாவது சொல்லுங்களேன்"

பாபுஜி இதை எதிர்பார்க்கவில்லை. ஆனால் குருஜி அதைக் கேட்ட பிறகு அலெக்ஸியிடம் இருந்து என்ன பதில் வருகிறது என்பதில் ஆவலாக இருந்தார்.

அலெக்ஸி கண்களை மூடி ஒரு நிமிடம் இருந்து விட்டுக் கண்களைத் திறக்காமலேயே சொன்னார். "துக்கம்.... நேசித்த ஒரு உயிரை இழந்த துக்கம்.... அது மனிதரல்ல.... விலங்கு.... நாய்"

பாபுஜி திகைத்துப் போனார். அவருடைய செல்ல நாய் இரண்டு நாட்களுக்கு முன் தான் இறந்து போயிருந்தது. அதன் மரணம் அவரை நிறையவே பாதித்திருந்தது. அன்று அவர் ஒரு நாள் முழுவதும் சாப்பிடவில்லை. அவருடைய நாயின் மரணம் ஜான்சனும், குருஜியும் கூட அறியாதது.

குருஜி பாபுஜியை உண்மையா என்ற கேள்விக்குறியுடன் பார்க்க பாபுஜி பிரமிப்புடன் ஆமென்று தலையாட்டினார். குருஜி பாபுஜியைப் புன்னகையுடன் பார்த்து விட்டு அலெக்ஸிக்கு நன்றி சொல்லி விட்டு அடுத்த நபரை நோக்கி நடந்தார். பாபுஜியும் ஜான்சனும் பின் தொடர்ந்தார்கள்.

அடுத்த நபர் கியோமி என்ற ஜப்பானியப் பெண்மணி. வயது 38. யோகோஹாமா நகரில் பிறந்து வளர்ந்த கியோமிக்கு இயல்பாகவே அபூர்வ உணர்வு சக்திகள் இருந்தன. சிறு வயதிலேயே வீட்டுக்கு ஏதாவது கடிதம் வந்தால் அதைத் திறக்காமலேயே உள்ளே இருக்கும் செய்தி என்ன என்பதைச் சொல்லி விடுவாள். காணாமல் போன பொருள்கள் தற்போது எங்கு இருக்கின்றன என்பதைச் சொல்லும் திறமையும் பெற்றிருந்தாள். பெரியவளான பிறகு ஜென் தியானம் கற்றுக் கொண்டாள். தற்போது கணவர், இரண்டு குழந்தைகளுடன் வாழ்ந்து வருகிறாள். இன்றும் ஜப்பானில் பல பகுதிகளில் இருந்து பல கேள்விகளுடன் கியோமியைச் சந்திக்க

*பலர் வருகிறார்கள். நல்ல வருமானமும் அவளுக்கு இதன் மூலம் கிடைக்கிறது....*

*கியோமி மிகவும் ஒல்லியாகவும் மென்மையாகவும் இருந்தாள். அவள் சராசரிக்கும் குறைவான உயரமாய் இருந்ததால் அருகில் வந்த மூவரையும் நிமிர்ந்து முகத்தை உயர்த்திப் பார்த்துப் புன்னகைத்தாள். ஜான்சன் இருவரையும் அறிமுகப்படுத்த கியோமி ஜப்பானிய முறைப்படி குனிந்து வணக்கம் தெரிவித்தாள்.*

*அலெக்ஸியிடம் நலம் விசாரித்தது போலவே கியோமியிடமும் குருஜி விசாரித்தார். கியோமியும் நலமே, இங்கு அசௌகரியம் எதுவும் இல்லை என்று சொல்லச் சொல்ல பாபுஜியின் செல்போன் அதிர்ந்தது. போனை எடுத்துப் பேசலாமா கூடாதா என்று பாபுஜி குருஜியை மெல்லக் கேட்க குருஜி கியோமியிடம் சொன்னார். "இவருக்கு எந்த நம்பரில் இருந்து கால் வந்திருக்கிறது என்று சொல்ல முடியுமா?"*

*நிலத்தை வெறித்துப் பார்த்தபடியே கியோமி ஒவ்வொரு எண்ணாகச் சொல்ல ஆரம்பித்தாள். அவள் முடித்த போது பாபுஜிக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அது அவர் தந்தையின் செல்போன் எண். குருஜி சொன்னார். "எடுத்துப் பார்." பாபுஜி செல்போனை எடுத்துப் பார்த்தார். அவள் சொன்னபடி அவர் தந்தையின் போன்கால் தான். குருஜி சொன்னார். "பிறகு பேசறதாய் சொல்லி வச்சுடு. வெளியே போய் பேசிக்கலாம்". பாபுஜி அப்படியே செய்தார். தன் பேண்ட் பாக்கெட்டில் இருந்த செல்போனில் வந்த எண்ணை எவ்வளவு சாதாரணமாக இந்தப் பெண்மணி பார்க்காமலேயே சொல்லி விட்டாள் என்ற திகைப்பு மட்டும் மனதில் தங்கியது. கியோமிக்கு நன்றி சொல்லி விட்டு நகர்ந்தார்கள்.*

அடுத்த நபர் இந்தியாவில் ஜம்முவில் வசிக்கும் ஹரிராம். வயது 63. முப்பது வயது வரை டெல்லியில் அரசுப் பணியில் இருந்த ஹரிராமிடம் எந்த விசேஷ சக்தியும் இருக்கவில்லை. காதலித்து திருமணம் செய்து கொண்டு மிக ஆனந்தமாக டெல்லியில் வாழ்ந்து வந்தார். மனைவி ஒரு குறைப்பிரசவத்தில் குழந்தையோடு இறந்து விட அந்த நாளில் அவர் ஆனந்தமும் செத்துப் போனது. பைத்தியம் பிடித்தது போல் ஒரு மாதம் சுற்றிக் கொண்டிருந்த ஹரிராம் பின்பு வாழ்வின் சுமை தாங்காமல் ஹரித்வார் சென்று ஒரு அதிகாலை வேலையில் கங்கையில் மூழ்கி உயிரை விடத் துணிந்தார். ஆனால் ஒரு சாதுவால் காப்பாற்றப்பட்ட அவர் வாழ்க்கை பின் திசை திரும்பியது.

அரசு வேலையை ராஜினாமா செய்து விட்டு, சில அபூர்வ சக்திகள் பெற்றிருந்த அந்த சாதுவின் சீடராக ஹரிராம் மாறினார். சுமார் இருபது வருடங்கள் அந்த சாதுவிடம் தியானத்தையும், அபூர்வ சக்திகளையும் அவர் கற்றுக் கொண்டார். அந்த சாது சமாதி அடைந்த பின் ஹரிராம் மறுபடியும் தனியரானார். அந்த சாது எந்த தனிக்கடவுளையும் வணங்கியவரல்ல. உருவமில்லாத பரம்பொருளை எல்லா இடங்களிலும் பார்க்க முடியும் என்று எல்லாவற்றையும் போற்றி வாழ்ந்த அந்த மகானுடன் இருபது ஆண்டுகள் தங்கியும் அந்த மனோநிலையும் பக்குவமும் ஹரிராமிற்கு வந்து விடவில்லை. இறைவனை வணங்கவும் செய்யாமல், மறுக்கவும் செய்யாமல் இறைவனைத் தொந்தரவு செய்யாமல் தான் பெற்றிருந்த அபூர்வ சக்திகளை பர்சோதித்துக் கொண்டும் வளர்த்துக் கொண்டும் ஹரிராம் ஜம்முவில் வசித்து வந்தார். அப்போது தான் பயணியாக அங்கு வந்த ஜான்சனால் அவர் கவனிக்கப்பட்டார். பின் ஒருசில ஆராய்ச்சிகளில் ஈடுபடுத்தவும் பட்டார்.

*இந்த மூவரில் ஹரிராமைத் தேர்ந்தெடுப்பதற்கு முன் தான் குருஜி மிக அதிகமாய் யோசித்தார். ஹரிராமின் சக்திகளைப் பொருத்தவரை குருஜிக்கு எந்த சந்தேகமும் இருக்கவில்லை. ஆனால் தனிப்பட்ட மனிதராக ஹரிராமைப் பற்றி முழுமையாக அவரால் தீர்மானிக்க முடியவில்லை. இருந்தும் ஹரிராமிற்குப் பதிலாகத் தேர்ந்தெடுக்க மேலான நபர் அவருக்குக் கிடைக்காததால் தான் ஹரிராமைத் தேர்வு செய்தார்.*

*ஹரிராமின் வயது தோற்றத்தில் தெரியவில்லை. தாடி வைத்திருந்தார். கண்ணாடி அணிந்திருந்தார். நல்ல ஆரோக்கியமாய் தெரிந்தார்.*

*ஜான்சன் அறிமுகம் செய்தவுடன் நலம் விசாரித்து விட்டு குருஜி பாபுஜியைக் காண்பித்து ஹரிராமிடம் கேட்டார். "இவர் இப்ப தான் ஒரு ஆளிடம் செல் போனில் பேசினார். இவர் கிட்ட பேசின ஆளை விவரிக்க முடியுமா?"*

*'இது கூட முடியுமா?' என்று பாபுஜி வியந்தார். ஆனால் ஹரிராம் அந்த கோரிக்கையால் அசந்து விடவில்லை. சிறிது நேரம் பாபுஜியைப் பார்த்த அவர் பின் பார்வையை பாபுஜிக்கு ஓரடி தள்ளி வெற்றிடத்திற்குத் திருப்பினார்.*

*"வயசானவர்... சக்கர நாற்காலியில் உட்கார்ந்திருக்கார்... கறுப்புக் கண்ணாடி போட்டிருக்கார்.... ஆதித்திய ஹ்ருதயம் சுலோகம் சொல்லிகிட்டு இருக்கார்...." ஏதோ நேரில் பார்த்துச் சொல்வது போல அவர் சொல்ல பாபுஜி திகைப்பின் உச்சத்திற்கே போனார். முதல் மூன்றும் உண்மை என்பது அவருக்குத் தெரியும். அவர் வயதான தந்தைக்கு நடக்க முடியாது என்பதால் சக்கர நாற்காலியில் தான் இருப்பார். ஐந்து நாட்களுக்கு முன் தான் காட்டராக்ட் ஆபரேஷன் ஆகி முடிந்திருந்த்து. அதனால் கறுப்புக்*

*கண்ணாடி அணிந்து கொண்டிருந்திருப்பதும் உண்மையே. சுலோகம் பற்றி தான் பாபுஜியால் உறுதியாகச் சொல்ல முடியவில்லை.*

*பாபுஜியின் பிரமிப்பில் இருந்தே புரிந்து கொண்ட குருஜி ஹரிராமிற்கு நன்றி சொல்லி விட்டு அங்கிருந்து கிளம்ப பாபுஜியும், ஜான்சனும் பின் தொடர்ந்தார்கள். வெளியே வந்ததும் முதல் வேலையாக பாபுஜி தன் தந்தைக்குப் போன் செய்தார்.*

*"அப்பா நீங்க என்ன செய்துட்டு இருந்தீங்க?"*

*"சும்மா தான் இருக்கேன். ஏம்ப்பா?"*

*"என் கிட்ட இப்ப போன்ல பேசறதுக்கும் முன்னாடியும், பேசின பிறகும் என்ன செய்துட்டு இருந்தீங்க? டிவி பார்த்தீங்களா, இல்லை படிச்சுட்டு இருந்தீங்களா அப்படி கேட்டேன்"*

*"டாக்டர் தான் இந்த வாரம் முழுசும், டிவி பார்க்க வேண்டாம், புஸ்தகம் படிக்க வேண்டாம்னு சொல்லிட்டாரே. என்ன தான் செய்யறது! ஆதித்ய ஹ்ரிதயம் சுலோகம் சொல்லிகிட்டு இருந்தேன். அதை விடு நீ போயிருக்கிற காரியம் என்ன ஆச்சு?"*

*"நான் அரை மணி நேரம் கழிச்சு விவரமா சொல்லறேம்ப்பா." என்று இணைப்பைத் துண்டித்த பாபுஜிக்கு வியர்த்தது. என்ன தான் அந்த மூன்று ஃபைல்களில் எழுதி இருந்ததைப் படித்திருந்த போதும் படித்த விஷயங்களின் ஆழம் அவர் அறிவிற்கு எட்டி இருக்கவில்லை. இப்போது நேரில் பார்த்த பின்போ பிரமிப்பு தான் மிஞ்சியது. இது போன்ற மனிதர்களிடம் இருந்து எதையும் மறைக்க முடியாது போல இருக்கிறதே, எந்த ரகசியமும் இவர்களுக்குத் தெரியாமல் வைத்துக் கொள்ள முடியாது போலிருக்கிறதே என்று*

நினைக்கையில் பயமும் எழுந்தது. இந்திய முன்னணிப் பணக்காரராக இருக்கும் அவருக்கு ரகசியம் காப்பது தான் பெரிய பாதுகாப்பு, மனதில் என்ன நினைக்கிறோம் என்று வெளியே தெரியாமல் பார்த்துக் கொள்வது தான் வியாபார அரிச்சுவடி. அப்படி இருக்கையில் இது போன்ற மனிதர்கள் அவரை பயமுறுத்தினார்கள். குருஜியைத் திகைப்புடன் பார்த்தார்.

குருஜியைப் பார்த்து பாபுஜி சொன்னார். "என்னைப் பார்த்தே என் சம்பந்தப்பட்டதை எல்லாம் இவ்வளவு சரியாகச் சொல்கிறார்களே. அத்தனை சக்திகளை இவர்கள் வைத்திருக்கிறார்களே, இவர்களை வைத்தே நிறைய சாதிக்கலாம் போல இருக்கே. சிவலிங்கம் கூட நமக்கு வேண்டாம் போல இருக்கே."

அறியாமல் பேசும் சிறு பிள்ளையைப் பார்ப்பது போல் குருஜி அவரைப் பார்த்தார். "பாபுஜி. எங்கோ நடந்ததையும், நடப்பதையும் இவர்கள் சொல்கிறார்கள். நமக்கு பக்கத்தில் இருந்தால் தான் தெரிகிறது. உள்ளே போய் பார்த்தால் தான் தெரிகிறது. நம்மால் முடியாதது என்கிறதால் இதைப் பார்க்கும் போது பிரமிப்பாக இருக்கிறது. ஆனால் இவர்களால் எதையும் உருவாக்கவோ, நடக்க வைக்கவோ முடியாது. சித்தர்களுக்கு அதுவும் முடியும். இதுவும் முடியும். எதுவும் முடியும். இவர்கள் எல்லாம் ஒன்றாம் வகுப்பு, இரண்டாம் வகுப்பு மாதிரி என்றால் சித்தர்கள் இந்தத் துறையில் பெரிய விஞ்ஞானிகள் மாதிரி. அப்படி ஒரு சித்தர் இரண்டு சித்தர் என்றல்ல எத்தனையோ சித்தர்கள் தங்கள் சக்தியை ஆவாஹனம் செய்து வைத்திருக்கிற சிலை தான் சிவலிங்கம். அதை வைத்துக் கொண்டு என்ன முடியும் என்று அளக்கக் கூட உன் வாழ்நாள் போதாது. இந்த சின்ன சித்து வேலைகளிலேயே இப்படி நீ மலைத்து நிற்காதே. உண்மையான சக்தியை நீ அந்த சிவலிங்கம் வந்த பிறகு தான் பார்க்கப் போகிறாய்"

ஒன்றாம் வகுப்பு இரண்டாம் வகுப்பே இப்படி என்றால் விசேஷ மானஸ லிங்கம் என்ற அந்த சிவலிங்கம் எப்படியானதாக இருக்கும் என்று உண்மையாகவே பாபுஜியால் நினைத்துப் பார்க்கக் கூட முடியவில்லை. பாபுஜி முதலில் இவர்கள் சக்தி பற்றி சரியாகப் புரிந்து கொள்ள ஆசைப்பட்டார். “குருஜி இவர்கள் எப்படி சொன்னார்கள் என்று எனக்குப் புரிகிற மாதிரி சொல்ல முடியுமா?”

”நீ நினைக்கிறதும், பேசுகிறதும், செய்கிறதும் உன்னோட ஒரு பகுதியாயிடுது பாபுஜி. அது அலைகளாய் உன்னுடன் எப்போதுமே இருக்கும். அதைப் படிக்கத் தெரிந்தவனுக்கு நீ சொல்லாமலேயே அதை எல்லாம் தெரிந்து கொள்ள முடியும். அலெக்ஸி சொன்னது அப்படித்தான். *ESP* என்கிற விசேஷ உணர்வு புலன்களின் உதவியில்லாமலேயே அந்தப் புலன்களின் மூலமாய் அறிய முடிந்ததை அறிய வைக்கும். இது கியோமிக்கு இயல்பாய் இருக்கிறது. நீ உன் அப்பா கிட்ட பேசின அந்த அலைகளைத் தொடர்ந்து போய் அவரைக் கவனிக்கும் விசேஷ சக்தி ஹரிராமிற்கு இருக்கிறது. விட்டிருந்தால் உன் அப்பா எந்த ரூமில் இருந்தார், என்ன மாதிரியான டிரஸ் செய்திருந்தார் என்கிற மாதிரியான சமாச்சாரம் கூட சொல்லி இருப்பார்....”

எந்த மாதிரியான சக்திகள் எல்லாம் இருக்கிறது என்று வியந்து பாபுஜி பேச்சிழந்து நிற்க குருஜி சிரித்துக் கொண்டே சொன்னார். “இந்த மாதிரி ஆள்களை எல்லாம் தான் நம் மக்கள் மகான்கள் ஆக்கி விடுகிறார்கள். தானாய் மக்கள் ஏமாறத் தயாராய் இருக்கிற போது அந்த சந்தர்ப்பத்தைப் பலர் நழுவ விடுவதில்லை. இல்லாத சக்திகளும் கூட இருக்கறதாய் நடிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். ஒரு சக்தி ஒருத்தருக்கு இருந்தால் கூடவே எல்லா சக்திகளும் அவருக்கு இருக்கும்கிற நம்பிக்கை பொதுவாய் நம் ஜனங்களுக்கு இருக்கிறது. ஆனால் அந்த நம்பிக்கை முட்டாள்தனமானது....”

*எந்த ஒரு விஷயத்தின் ஆழத்திற்கும் சென்று அறிந்து இது இவ்வளவு தான், இப்படித்தான் என்று ஆணித்தரமாய் சொல்லும் குருஜியின் ஞானம் பாபுஜிக்குப் பிடித்திருந்தது. 'இந்த மனிதர் நிஜமாகவே ஞானப் பொக்கிஷம் தான்".*

*சிறிது பொறுத்து பாபுஜி தியான மண்டபத்தில் தனக்கு எழுந்த சந்தேகத்தைக் கேட்டார். "EEG மெஷின் ஆராய்ச்சியில் ஈடுபடுபவர்களோட மூளை அலைகளை அளக்கத் தானே"*

*ஆமென்று குருஜி தலையசைத்தார்.*

*"மூன்று பேர் தானே இருக்கிறார்கள்."*

*"கணபதியையும் சேர்த்துக் கொள்ளலாம் என்றிருக்கிறேன்"*

*"நீங்கள் சொல்வதெல்லாம் அவனுக்குப் புரியுமா?"*

*"அவனுக்குப் புரிகிற அளவுக்குப் புரிகிற மாதிரி சொல்லலாம் என்று இருக்கிறேன்"*

*"சரி அப்படியானால் ஐந்தாவது யார்?"*

*"நான் தான். அவ்வப்போது நானும் கலந்து கொள்ளலாம் என்றிருக்கிறேன்" என்றார் குருஜி.*

*ஆச்சரியப்பட்டது பாபுஜி மட்டுமல்ல. ஜான்சனும் தான். ஐந்து EEG மெஷின்கள் இருக்கட்டும் என்று குருஜி சொன்ன போது*

*நான்கில் ஒன்றில் ஏதாவது கோளாறு ஏற்பட்டால் கூடுதல் ஒன்று இருக்கட்டும் என்ற முன் யோசனையுடன் சொல்லப்பட்டது என்று அவர் நினைத்திருந்தார். இப்போது தான் குருஜியும் கலந்து கொள்வது அவருக்கே தெரிகிறது....!*

*ஆராய்ச்சி களை கட்டத் தான் போகிறது என்ற பரபரப்பு பாபுஜியைத் தொற்றிக் கொண்டது.*

# ***<u>அத்தியாயம் - 61</u>***

*ஈஸ்வர் தான் கணபதி வீட்டிற்குப் போனதையும் அங்கு கணபதியின் தாய் சொன்னதையும் பார்த்தசாரதியிடம் விவரமாகச் சொன்னான். ஆனால் அதற்கு முன்னால் அவருக்கு கணபதியை அவன் முதன்முதலில் சந்தித்த நிகழ்ச்சியைச் சுருக்கமாகவாவது சொல்ல வேண்டி இருந்தது. ஜவுளிக்கடையில் சித்தரால் ஒரே நேரத்தில் இருவரும் தொடப்பட்டதை மட்டும் அவன் சொல்லவில்லை. சித்தருடனான அந்த அபூர்வ அனுபவம் தனது தனிப்பட்ட விஷயமாக அவனுக்குத் தோன்றியதால் அதை அவன் சொல்லத் தேவை இல்லை என்று நினைத்தான்.*

*அவன் அதைச் சொல்லாமலேயே அவன் குடும்பத்தில் நடக்கிற விஷயங்கள் எல்லாம் விசித்திரமாகவும், யதார்த்த நடப்புகளை ஒட்டி வராததாகவும் பார்த்தசாரதிக்குத் தோன்ற ஆரம்பித்திருந்தது. பரமேஸ்வரன் மாரடைப்பு ஏற்பட்டு ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு மருத்துவம் பார்க்காமலேயே முழுமையாகக் குணமாகி திரும்பி வந்த செய்தி அவர் காதிலும் விழுந்திருந்தது.*

*பரமேஸ்வரன் ஆஸ்பத்திரியில் இருந்து டிஸ்சார்ஜ் ஆன பிறகு பார்த்தசாரதி அந்த ஆஸ்பத்திரிக்குப் போய் இருந்தார். அவர்*

சந்திக்கையில் பெரிய டாக்டர் கிட்டத்தட்ட பைத்தியம் பிடிக்கிற நிலையில் தான் இருந்தார். பரமேஸ்வரன் இதயத்தில் மூன்று அடைப்புகள் இருந்தது உண்மை என்றும், ஆனால் பின் பரிசோதித்த போது ஆபரேஷன் செய்யாமலேயே அந்த அடைப்புகள் நீங்கி இருந்தன என்பதும் உண்மை என்றும் பெரிய டாக்டர் சொன்ன போது அந்த டாக்டருக்கே ஒரு மாதிரியாக இருந்தது தெரிந்தது.

பார்த்தசாரதி கேட்டார். "முதலில் மூன்று அடைப்புகள் இருக்கிறது என்பதை சரியாகப் பார்க்காமல் சொல்லி விட்டீர்களோ?"

"இந்த மாதிரி... இந்த மாதிரி ஒருத்தர் கேட்டுடக் கூடாதுன்னு தான் அந்த அடைப்புகளைக் காட்டிய பழைய ஸ்கேன் ரிப்போர்ட்டைத் தேடினேன் சார். ஆனால் அது மாயமாயிடுச்சு..." என்று அங்கலாய்த்த டாக்டர் ஆரம்பத்தில் தான் ஈஸ்வரைச் சந்தேகப்பட்டதையும் பின் காமிரா எடுத்திருந்த வீடியோவைப் பார்த்த போது கண நேரத்தில் ஏதோ ஒளிர்ந்ததையும் அந்த ஒளி மறைந்த போது ஸ்கேன் ரிப்போர்ட்டுகளையும் காணவில்லை என்பதையும் விவரித்தார். சொல்லும் போதே அந்த டாக்டருக்கு மயிர்க்கூச்செரிந்தது.

ஆரம்பத்தில் விசேஷ மானஸ லிங்கம் ஒளிர்வது ஒரு ஆச்சரியமான விஷயமாக இருந்தது. அதன் பின் அந்த சித்தர் கண்கள் நெருப்பைக் கக்கியது போல ஒளிர்வது ஒரு அதிசய விஷயமாக இருந்தது. இப்போதோ ஒரு ஒளி தெரிந்து மறையும் போது ஸ்கேன் ரிப்போர்ட்டுகள் மறைவதாக காமிரா படம் பிடித்திருக்கிறது. இதை எல்லாம் பார்த்தது ஓரிரு ஆட்களாக இருந்தால் பிரமை என்று ஒதுக்கித் தள்ளலாம். ஆனால் பார்த்திருப்பது பலர். வேறு வேறு கால கட்டங்களில் பார்த்திருக்கிறார்கள். எல்லோருக்குமா பிரமை பிடிக்கும்.

எல்லாவற்றிற்கும் மேலாக பிரமையாக இருந்தால் காமிரா பிடித்த படச்சுருளில் அப்படி வந்திருக்க வாய்ப்பே இல்லை. இந்த எண்ணங்கள் மனதில் ஓட பார்த்தசாரதி ஆஸ்பத்திரியில் இருந்து திரும்பினார்.

ஆனால் இப்போது ஈஸ்வர் சொன்னது குருஜி இதில் சம்பந்தப்பட்டிருப்பதை உறுதி செய்தாலும் மற்ற விதங்களில் அவருக்கு மேலும் தலைசுற்ற வைத்தது. கணபதி என்கிற இளைஞனை குருஜி சிவலிங்கத்திற்குப் பூஜை செய்ய அழைத்துச் சென்றிருக்கிறார். ஆனால் அவன் குருஜியே அழைத்துப் போகிற அளவு பூஜை மந்திரங்களைக் கற்றுத் தேர்ந்தவன் அல்ல. அந்த கணபதி ஏதோ ஆஞ்சனேயர் கோயில் போகும் வழியில் கார் ரிப்பேர் ஆகிறது. அந்த நேரமாகப் பார்த்து அந்த இடத்தில் ஈஸ்வர் இருக்கிறான். அந்தக் குறிப்பிட்ட இடம் இருவரும் வழக்கமாகப் போகிற இடம் இல்லை. சந்திக்கும் போது கணபதி ஈஸ்வருக்கு வீட்டு விலாசம் தருகிறான். ஆனால் எங்கே பூஜை செய்கிறான் என்ற விலாசத்தைத் தரவில்லை. அந்த கணபதி வீட்டிற்குப் போகும் உத்தேசம் ஈஸ்வருக்கு சுத்தமாக இருந்திருக்கவில்லை. ஆனாலும் திடீர் என்று போய் விட்டான். போய் குருஜி சம்பந்தப்பட்டிருக்கிறார் என்ற தகவலை வாங்கிக் கொண்டு வந்திருக்கிறான்.

ஓரிரண்டு நிகழ்ச்சிகளைத் தற்செயல் என்று சொல்லலாம். இத்தனை நிகழ்ச்சிகளையா தற்செயல் என்று சொல்ல முடியும்?

பார்த்தசாரதி அமானுஷ்யமான விஷயங்களை நம்பியவர் அல்ல. சொல்லப் போனால் அமானுஷ்யம் என்று சொல்லும் விஷயங்களின் பின்னால் எவருடையதோ ஏமாற்று வேலை இருக்கிறது என்பதில் அவருக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. அவர் அனுபவம் அப்படி. ஆனால் இந்த வழக்கில் துப்பு

துலக்க ஆரம்பித்த பின் எதுவுமே இயல்பான வழியில் போகவில்லை....

ஈஸ்வரிடம் அவர் அவன் தாத்தாவுக்கு மாரடைப்பு வந்ததைப் பற்றி விசாரித்தார். ஈஸ்வர் நடந்ததைச் சுருக்கமாகச் சொன்னான். ஆனால் அவருக்கு நம்பக் கஷ்டமாய் இருந்தது போல அவனுக்கு நடந்ததை நம்பக் கஷ்டமாய் இல்லை என்பதை பார்த்தசாரதியால் கவனிக்க முடிந்தது. இத்தனைக்கும் அவன் அதிகம் படித்தவன். அமெரிக்காவில் வசித்தவன்...

பார்த்தசாரதி வாய் விட்டுச் சொன்னார். "இந்த விஞ்ஞான யுகத்துல எனக்கு இதை எல்லாம் நம்பக் கஷ்டமாய் இருக்கு ஈஸ்வர்...."

ஈஸ்வர் ஆஸ்பத்திரியில் பெரிய டாக்டரிடம் சொன்னதையே பார்த்தசாரதியிடம் சொன்னான். "இதெல்லாம் விஞ்ஞான விதிகளுக்கும் மேலான சில விதிகள் படி நடக்கிற விஷயங்கள் சார். அந்த விதிகள் பரிச்சயமானவங்களுக்கு இதெல்லாம் அதிசய நிகழ்ச்சிகள் அல்ல..."

பார்த்தசாரதி முகத்தில் இன்னும் முழுமையான நம்பிக்கை வராததைப் பார்த்து ஈஸ்வர் சொன்னான். "பைபிள்ல யேசுநாதர் பல நோய்களை குணமாக்கினதைப் படிச்சிருக்கோம். நம் நாட்டிலேயும் கடவுள்களும், மகான்களும் தீராத நோயை எல்லாம் தீர்த்து வைத்த கதைகள் படிச்சிருக்கோம். இப்படி உலகத்தில் எல்லா பாகத்திலயும் நடந்ததாய் சொல்றாங்க. சிலது சிலரது கற்பனையாய் இருக்கலாம். எல்லாமே கற்பனையா இருக்க முடியாது சார்"

அவன் சொன்னதை உள் வாங்கிக் கொண்ட பார்த்தசாரதி சிறிது யோசனைக்குப் பின் கேட்டார். "உங்க பெரிய தாத்தாவுக்கு அந்த அளவு சக்தி இருந்ததுன்னா அவர் ஏன் தன்னைக் காப்பாத்திக்கல ஈஸ்வர்"

"தனக்கு இருக்கற சக்தியை எல்லாம் ஒருத்தர் பயன்படுத்தித் தான் ஆகணும்னு கட்டாயம் இல்லையே சார். தனக்கு இங்கே தரப்பட்டிருக்கிற காலம் முடிஞ்சுடுச்சுன்னு அவர் நினைச்சிருக்கலாம். வாழ்க்கையை நீட்டிக்க பிரியப்படாமல் இருந்திருக்கலாம். எங்க தாத்தாவைப் பொருத்த வரையில் எங்க எல்லாருடைய பிரார்த்தனைகளை பெரிய தாத்தா காது கொடுத்துக் கேட்டிருக்கலாம். இல்லைன்னா தாத்தாவிற்கு இது வெறும் கண்டம், உயிருக்கு ஆபத்தில்லைங்கற மாதிரி விதியே இருந்திருக்கலாம்.... யாருக்குத் தெரியும் சார்?"

இத்தனை புத்திசாலியான அவன் தனக்கு முழுவதுமாகத் தெரியாத விஷயங்களை எந்தத் தயக்கமும் இல்லாமல் ஒத்துக் கொள்ளும் விதம் பார்த்தசாரதிக்கு அவன் மீது மரியாதையைத் தந்தது.

ஈஸ்வர் கவலையோடு அவரிடம் சொன்னான். "அந்த கணபதி நல்ல பையன் சார். அந்த மாதிரி ஒரு வெள்ளந்தி மனசை நான் என் வாழ்க்கைல பார்த்ததே இல்லைன்னே சொல்லலாம். அவன் குருஜி கிட்ட இருக்கிறது ஆபத்துன்னு உள்மனசு சொல்லுது சார்..."

பார்த்தசாரதி தலையசைத்தார். ஆனால் ஈஸ்வரின் கவலை அவரைத் தொற்றிக் கொள்ளவில்லை. இந்தத் துறையில் வந்த பிறகு பல தனி மனிதர்களுக்கு வரும் ஆபத்துகளை அவர் பார்த்து இருக்கிறார். குற்றங்கள் நடக்கும் இடத்தில் ஆபத்துகள் தவிர்க்க முடியாது தான். அதனால் கணபதி என்ற முகம் தெரியாத

தனிமனிதன் சந்திக்கக்கூடிய ஆபத்தில் அவருக்கு அக்கறை இருக்கவில்லை.

“பூஜை செய்ய அவனைக் குருஜி தேர்ந்தெடுக்கக் காரணம் எனக்கு இன்னமும் பிடிபடலை ஈஸ்வர்....”

அவரைத் தவறு சொல்ல ஈஸ்வருக்குத் தோன்றவில்லை. விசேஷ மானஸ லிங்கத்தைப் பற்றி முழுமையாகத் தெரியாதவர்கள் எல்லோருக்கும் வரக் கூடிய சந்தேகம் அது. அவன் தந்தை அவனிடம் சொல்லி இருந்த அவரது சில அனுமானங்களை அவன் பார்த்தசாரதியிடம் சொன்னதில்லை. சங்கர் சொல்லி இருந்தவை அத்தனையும் உண்மையாக இருக்கக் கூடும் என்று அவன் முழுமையாக நம்பிய போதும் வழக்கை விசாரணை செய்யும் பார்த்தசாரதியிடம் சொல்ல தகுந்த ஆதாரங்கள் அவசியம் என்று அவன் முன்பு நினைத்தான்.

குருஜி பூஜா விதிகளை முழுமையாக அறியாத கணபதியை பூஜைக்கு நியமித்திருக்கிறார் என்றறிந்த போது அவன் தந்தை சங்கரின் அனுமானங்கள் சரியாகவே இருக்க வேண்டும் என்று உறுதியாகி விட்டது. அவன் பார்த்தசாரதியிடம் சொல்ல ஆரம்பித்தான்.

“சார், நான் இது வரைக்கும் எங்கப்பா அந்த சிவலிங்கம் ஒளிர்றதைப் பார்த்திருக்கிறார்னு மட்டும் தான் உங்க கிட்ட சொல்லி இருக்கேன். அவர் கவனிச்ச வேற சிலதை நான் உங்க கிட்ட சொல்லலை. காரணம் அது சரின்னு எனக்கு பூரணமாய் விளங்கினதே கணபதி வீட்டுக்குப் போயிட்டு வந்த பிறகு தான்....”

பார்த்தசாரதி முழு கவனத்திற்கு வந்தார்.

“…எங்கப்பா சின்ன வயசுல தாத்தாவோட சேர்ந்து தோட்ட வீட்டுக்குப் போவார். எப்பவுமே பெரிய தாத்தா, தாத்தாவை சந்திக்கிறது ஹால்லன்னு சொன்னாலும் உட்கார்ந்து பேசற நாற்காலிகளை அவர் ஒவ்வொரு தடவை ஒவ்வொரு இடத்துல வைப்பாராம். சில நாள் சிவலிங்கத்துக்கு ரொம்பவே தூரத்துல வைப்பாராம். சில நாள் சாதாரண தூரத்துல வைப்பாராம். எங்க தாத்தா அண்ணன் கிட்ட இத்தனையை சொல்லிக் கொட்டிடணும்கிறதுல தான் கவனம் வைப்பாரே ஒழிய அடிக்கடி இடம் மாறும் நாற்காலிகள் பற்றி பெருசா கண்டுக்க மாட்டாராம். ஆனால் எங்கப்பா சின்னதில் இருந்தே ரொம்ப புத்திசாலி. பெரிய தாத்தா இப்படி நாற்காலிகளை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு இடத்துல வைக்க ஏதாவது காரணம் இருக்குன்னு புரிஞ்சு கவனிக்க ஆரம்பிச்சாராம்….”

பார்த்தசாரதி சுவாரசியமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். அவர் மனதில் காரணம் என்னவாக இருக்கும் என்பதில் பல யூகங்கள் ஓடிக் கொண்டு இருந்தன.

”ரொம்ப நாள் கவனிச்சதுக்கப்புறம் ஒரு விஷயத்தை அப்பா புரிஞ்சுகிட்டார். தாத்தா எந்த மனநிலையில வர்றாருங்கறதைப் பொறுத்து அந்த நாற்காலிகளோட தூரம் இருக்குமாம். பெரிய தாத்தாவுக்கு எதையும் சொல்லாமலேயே தெரிஞ்சுக்கற சக்தி இருக்குன்னு எங்கப்பா நம்பினார். தம்பியின் மன சமாதானத்திற்காக அவர் சொல்வதை எல்லாம் கேட்டாரே ஒழிய கேட்டுத் தான் தெரிஞ்சுக்கணும்கிற நிலையில அவர் இருந்த மாதிரி தெரியலைன்னு அப்பா சொன்னார்…. தாத்தா நல்ல அமைதியான மனநிலையில் வர்றப்ப சாதாரண தூரத்துல நாற்காலிகளை வைப்பாராம். மோசமான மனநிலையில் வர்றப்ப நாற்காலிகள்

*நிறைய தூரத்துக்குப் போயிடுமாம்.... வெளி சுத்தத்தை பெரிய தாத்தா பெருசா நினைக்கலை. மன சுத்தம், மன அமைதி இதைத்தான் அதிகமாய் பார்த்தார்ங்கறதை அப்பா கண்டுபிடிச்சார்"*

*"அப்பா சொன்னார், 'அந்த சிவலிங்கத்திற்கு மன சுத்தம் தான் முக்கியம்னு தோணுதுடா. அந்த சிவலிங்கத்தை மன சுத்தம் இல்லாமல் யாரும் நெருங்கக் கூட அவர் விட்டதில்லை. அப்படி நெருங்க விட்டால் அந்த சிவலிங்கத்துக்கு ஆகாதா, நெருங்கற ஆளுக்கு ஆகாதான்னு தெரியல. ஆனா எனக்கென்னவோ ரெண்டாவது தான் சரியா இருக்கும் போலத் தோணுது'. எங்கப்பா சொன்னது எனக்கும் சரின்னு தான் தோணிச்சு. அந்த சிவலிங்கத்தோட பெயர் விசேஷ மானஸ லிங்கம்னு இங்கே தெரிய வந்தப்ப அது மானஸ லிங்கம் ஆனதால் மனசோட சுத்தம் அதிகமாய் கவனிக்கப்பட்டதோன்னு நினைச்சேன். அப்படித் தான் இருக்கணும்னு உறுதியாய் தோணினாலும் எனக்கு ஆதாரத்தைக் கொடுத்தது குருஜி தான் சார். அந்த கணபதி மாதிரி பரிசுத்தமான மனசு இருக்கிற ஆளை அவர் வேற எங்கேயும் தேடிப்பிடிக்க முடியாது சார். அது தான் அவனுக்கு வேற என்ன தெரியும்னு கூடப் பார்க்காமல் அழைச்சிருக்கார்..."*

*பார்த்தசாரதிக்கு ஈஸ்வர் சொன்னதெல்லாம் மனதில் பதிய சிறிது நேரம் ஆகியது. பசுபதியைக் கொன்றவன் இறந்து போகக் காரணம் அவன் அந்த சிவலிங்கத்தை நெருங்கியதால் இருக்கலாம். சாதாரண மன அசுத்தமே ஆகாது என்றால் அந்தக் கொலைகாரன் மகாபாதகன். அவன் அதை நெருங்கினது அவனுக்கு எமனாக முடிந்து விட்டதோ?*

*"அப்படி நெருங்கினால் என்ன ஆகும்?" பார்த்தசாரதி ஈஸ்வரின் அபிப்பிராயம் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டார்.*

*“தெரியலையே சார். அந்தக் கொலைகாரன் உயிர் கொஞ்சமாவது மிஞ்சி இருந்தால் நமக்குத் தெரிஞ்சிருக்கலாம்....”*

*பார்த்தசாரதி ஈஸ்வரைப் பார்த்துப் புன்னகைத்தார். இந்த வழக்கில் இவன் உதவி நிறையவே வேண்டி இருக்கும் என்று அவருக்குத் தோன்றியது. அதற்கு முதல் காரணம் இந்த வழக்கே இவன் சப்ஜெக்டில் தான் சுற்றி சுற்றி வருகிறது என்பது. இரண்டாம் காரணம் பசுபதி காரணம் இல்லாமல் சிவலிங்கத்திற்கான பொறுப்பை இவன் மீது விட்டு வைத்திருக்க மாட்டார் என்பது. அதனால் அவர் மனம் விட்டு அவனிடம் குருஜியைக் கண்காணிக்க உயர் அதிகாரியிடம் அதிகாரபூர்வமற்ற அனுமதி வாங்கி இருப்பதைச் சொன்னார்.*

*கேட்டு ஈஸ்வருக்கு நிம்மதியாயிற்று. பார்த்தசாரதி சொன்னார். “நான் நேற்று பப்ளிக் டெலிபோனில் இருந்து வேதபாடசாலைக்குப் போன் செய்து குருஜியைக் கேட்டேன். அவர் நேற்றே போய் விட்டதாகச் சொன்னார்கள். பிறகு அவர் ஆபிசிற்குப் போன் செய்து கேட்டேன். அவர் வெளியூர் போய் இருக்கிறார், திரும்பி வர மூன்று வாரம் ஆகும் என்று சொன்னார்கள். அவர் எங்கு இருக்கிறார், சிவலிங்கம் எங்கிருக்கிறது என்பது தான் இப்போதைய கேள்வி”*

*”சிவலிங்கம் கண்டிப்பாக அந்த வேதபாடசாலையில் தான் இருக்கும்னு தோணுது.” ஈஸ்வர் உறுதியாகச் சொன்னான்.*

*“எப்படிச் சொல்றீங்க?”*

*வேதபாடசாலையில் காரில் இருந்து காலைக் கீழே வைக்கப் போன போது அங்கு சிவலிங்கம் ஒரு கணம் தெரிந்து மறைந்ததைச் சொன்னான். அதைக் கேட்ட போது பார்த்தசாரதி முன்பு*

கொண்டிருந்த அபிப்பிராயம் மேலும் உறுதியாகியது. ‘இவர்கள் குடும்பமே அமானுஷ்யமான குடும்பம் தான். இவர்களுக்கு என்னென்னவோ தெரிகிறது, என்னென்னவோ நடக்கிறது’.

ஈஸ்வருக்கு திடீர் என்று வேதபாடசாலையில் ஒதுக்குப்புறமாக இருந்த வீடு நினைவுக்கு வந்தது. வெளியே இரண்டு பேர் மர வேலை செய்து கொண்டிருந்தார்கள்... மரவேலை செய்தார்களா இல்லை அங்கே காவல் காத்து நின்றார்களா? சிவராம ஐயர் அவசர அவசரமாகச் சொன்னது நினைவுக்கு வந்தது. “அங்கு தட்டுமுட்டுச் சாமான் எல்லாம் போட்டு வைத்திருக்கிறோம். அங்கே யாரும் இல்லை....” அவர் குரலில் இருந்த பதற்றத்தை இப்போது மனம் பதிவு செய்கிறது.... சிவலிங்கம் அந்த ஒதுக்குப்புற வீட்டில் தான் இருக்க வேண்டும்....

அதை அவன் உறுதியாக பார்த்தசாரதியிடம் சொன்னான். அவர் நிமிர்ந்து உட்கார்ந்தார்....

**************

குருஜியுடனும், ஜான்சனுடனும் வேதபாடசாலை வந்திருந்த பாபுஜி விசேஷ மானஸ லிங்கத்தைக் காணத் துடித்தார். குருஜி அவரைக் கூட்டிக் கொண்டு போகக் கிளம்பிய போது தான் பாபுஜியின் செல்போன் அடித்தது. எடுத்து தள்ளிப் போய் தாழ்ந்த குரலில் பேசிய பாபுஜியின் முகம் பேயறைந்தது போல மாறியது. பேசி முடிந்து அதிர்ச்சியுடன் நின்ற பாபுஜியைப் பார்த்து குருஜி கேட்டார். ”என்ன ஆச்சு?”

”உங்கள் வேதபாடசாலையைக் கண்காணிக்க மூன்று ரகசியப் போலீஸ்காரர்கள் இப்ப வந்திருக்கார்களாம்”

*“என்ன உளர்றே?”*

*“உளறலை. உண்மையைத் தான் சொல்றேன்”*

*“யார் சொன்னாங்க?”*

*”நான் அப்பாயிண்ட் செய்திருக்கிற டிடெக்டிவ் ஏஜென்ஸியில் இருந்து வந்த தகவல் இது. பொய்யாய் இருக்க வாய்ப்பில்லை”*

*’நீ ஏன் டிடெக்டிவ் ஏஜென்ஸியை இங்கே வேவு பார்க்கச் சொன்னாய்?’ என்று குருஜி பாபுஜியிடம் கேட்கவில்லை. இந்த விசேஷ மானஸ லிங்க ஆராய்ச்சியின் செலவுக்கு முழுப் பொறுப்பும் ஏற்றிருப்பது பாபுஜி தான். அதனால் அதில் எந்த வில்லங்கமும், தடங்கலும் வந்து விடக்கூடாது என்பதில் அவருக்கு அக்கறை உண்டு... அப்படி வேவு பார்த்து கொண்டு நின்றிருந்ததால் தான் இப்போது ரகசியப் போலீஸ் கண்காணிக்க வந்திருப்பது தெரிய வந்திருக்கிறது.*

*பதற்றத்துடன் பாபுஜி சொன்னார். “குருஜி நாம் நாளைக்குக் காலைல சிவலிங்கத்தை ஆராய்ச்சிக்கு எடுத்துகிட்டு போகலாம்னு முடிவு செய்திருக்கோம். அந்த டிடெக்டிவ் ஏஜென்சி ஆள்கள் அந்த மூணு பேரும் திறமைசாலிகள்னு சொல்றாங்க. அவங்க இருக்கிற வரையில் நாம் அவங்க கண்ணுக்கு மண்ணைத் தூவிட்டு தப்பிக்க முடியாதுன்னு சொல்றாங்க. இதுல நானும் ஜான்சனும் வேறு இங்கு வந்து மாட்டிகிட்டு இருக்கோம்... எதாவது செய்யுங்க குருஜி....”*

*தகவலைக் கேட்டவுடன், என் இடத்தையே கண்காணிப்பதா என்று ஆரம்பத்தில் குருஜிக்குக் கோபம் வந்தது. உடனடியாக ஐ.ஜியையோ, மந்திரியையோ கூப்பிட்டுப் பேசத் தோன்றினாலும்*

அமைதியாக யோசித்த போது இந்த விஷயத்தை அவரே பரப்பியது போல இருக்கும் என்று புரிந்து அந்த எண்ணத்தைக் கை விட்டார்.

அவர் இங்கிருப்பதற்காக கண்காணிக்கிறார்களா, இல்லை சிவலிங்கம் இங்கு இருக்கிறது என்ற சந்தேகத்தின் பேரில் கண்காணிக்கிறார்களா, இல்லை இரண்டிற்கும் சேர்த்தா என்று அவர் யோசித்தார். எதுவாக இருந்தாலும் இதன் பின் ஈஸ்வர் இருக்கிறான் என்பதில் அவருக்குத் துளி கூட சந்தேகம் இல்லை.

ஈஸ்வர் இந்த வேதபாடசாலை மண்ணைத் தொட்டுக் கும்பிட்டு விட்டு இறங்கியது நினைவுக்கு வந்தது. பார்த்தசாரதி ஆபிசில் வேவு பார்க்க வைத்திருப்பவனிடம் தன் உதவியாளனை விட்டு பேச வைத்தார். இந்த வேவு பார்க்கும் விஷயத்தைத் தெரிவிக்காமல் ஏதாவது விசேஷ தகவல் இருக்கிறதா என்று கேட்டதற்கு அந்த ஆள் ஒன்றுமில்லை என்றான். அப்படியானால் மிக ரகசியமாக, உடன் வேலை பார்ப்பவனுக்கே தெரியாமல் வேவு பார்க்கிறார்கள்...

என்ன ஆனாலும் சரி நாளை அதிகாலை முகூர்த்தம் நன்றாக இருக்கிறது. சிவலிங்கத்தை அந்த நேரத்தில் தான் இங்கிருந்து கொண்டு செல்ல வேண்டும். என்ன செய்வது என்று யோசித்தார். அதிகார வர்க்கத்திற்குப் போன் செய்து அவர்கள் சந்தேகத்தை உறுதி செய்யக் கூடாது, அந்த ரகசியப் போலீஸ் பார்வையிலும் சிக்கக் கூடாது. எந்தக் காரணத்தைக் கொண்டும் இந்த ஆராய்ச்சிகள் நடக்கப் போகும் இடம் அவர்களுக்குத் தெரியக் கூடாது. அதற்கு என்ன செய்வது?...

பல பேர் கவனத்தைக் கவராமல் ரகசியமாய் இங்கிருந்து சிவலிங்கத்தை எடுத்துப் போக ஒரே ஒருவர் தான் அவருக்கு உதவ முடியும் என்று கடைசியில் குருஜி முடிவுக்கு வந்தார். உதயன்... அவர் நண்பன்!

# அத்தியாயம் - 62

உடனடியாக குருஜி ரிஷிகேசத்திற்கு அழைத்துப் போயிருந்த இளைஞனுக்குப் போன் செய்தார். அவன் தற்போது டில்லியில் இருந்தான். அது ஒரு விதத்தில் நல்லதாகப் போயிற்று. அவன் சில மணி நேரங்களில் உதயனை சந்திக்க முடியும். அவனிடம் போன் செய்து உடனே உதயனிடம் போகச் சொன்னார். போய் அவனுடைய செல்போனை உதயனிடம் கொடுத்து அவரிடம் பேசச் சொல்லச் சொன்னார்.

அந்த இளைஞனுக்கு அந்த ஒற்றையடி மலைப்பாதையில் கால் வலிக்க நடந்தது நினைவுக்கு வர, சிறிது தயங்கினான். பின் ஒப்புக் கொண்டான். அதற்கு குருஜியிடம் யாரும் எதையும் முடியாது என்று சொல்ல முடியாது என்பது ஒரு காரணம். பின் கூலியை அவர் அளவுக்குத் தாராளமாகத் தருபவர் கிடையாது என்பது இன்னொரு காரணம்.

அவன் குருஜியுடன் போனதற்குப் பின் மீண்டும் ஒரு முறை உதயன் இருக்குமிடம் போய் இருக்கிறான். ஆராய்ச்சிக் கூடத்தைச் சுற்றி நாலா பக்கத்திலும் உள்ள மண்ணை எடுத்து அவன் மூலமாகத் தான் குருஜி உதயனுக்கு அனுப்பினார். அப்போது குகை வரை போக வேண்டி இருக்கவில்லை. வழியில் ஒரு பாறை மீது உதயன் அமர்ந்து கொண்டிருந்தார். அவன் தந்ததை வாங்கிக் கொண்டு தலையை மட்டும் அசைத்தார். அப்போதும் தனியாக நடந்த தூரம் அவனுக்கு சலிப்பைத் தந்தது...

குருஜியுடன் போன போதும் பிறகு தனியாக மண்ணைக் கொண்டு போன போதும் போல் அவன் இப்போது ஹெலிகாப்டரில் போக முடியாது. அந்த வசதியை செய்து தருவதாய்

இருந்தால் குருஜி சொல்லி இருப்பார். ரிஷிகேசத்தில் விமான நிலையம் இல்லை. மிக அருகில் உள்ள விமான நிலையம் டெஹ்ராடூன் விமான நிலையம் தான். விசாரித்ததில் ஒரு மணி நேரத்தில் டெஹ்ராடூனிற்கு விமானம் இருப்பதாகச் சொன்னார்கள். டிக்கெட்டை புக் செய்து விட்டு அவசரமாக அவன் கிளம்பினான்.

பார்த்தசாரதி நியமித்திருந்த ரகசிய போலீஸ்காரர்கள் அவருக்குப் போன் செய்து, வேவு பார்த்துக் கொண்டிருப்பது தாங்கள் மட்டுமல்ல வேறு சிலரும் அந்த வேலையைச் செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்தார்கள்.

அதிர்ச்சி அடைந்த பார்த்தசாரதி கேட்டார். “நம் மாநில போலீஸ்காரர்களா, வெளி மாநில போலீஸ்காரர்களா, சி.பி.ஐயா?”

“சரியாய் தெரியல சார்”

“உங்க யூகத்தைச் சொல்லுங்க”

அவர் நியமித்திருந்த நபர்கள் மிக புத்திசாலிகள். அவர்கள் யூகமே கிட்டத்தட்ட சரியாக இருக்கும்.

“ப்ரைவேட் டிடெக்டிவ்ஸ் போலத் தெரியுது”

“நீங்க அவங்களைக் கண்டுபிடிச்ச மாதிரி அவங்களும் உங்களைக் கண்டுபிடிச்சிருப்பாங்களோ?”

“கண்டு பிடிச்சிருப்பாங்க சார்” தயக்கமில்லாமல் வந்தது பதில்.

பார்த்தசாரதி வேதபாடசாலையை வேவு பார்க்கும் இன்னொரு தரப்பு யாரால் நியமிக்கப்பட்டதாய் இருக்கும் என்று யோசிக்க ஆரம்பித்தார்.

**************

குருஜி அமைதியாக பாபுஜியிடம் சொன்னார். "கவலைப்படாதே. எதுவும் நம் கையை மீறிப் போயிடலை"

குருஜியின் இத்தனை நம்பிக்கைக்குக் காரணம் அவர் நண்பன் உதயன் தான் என்பது அவர் போனில் பேசியதில் இருந்து பாபுஜி புரிந்து கொண்டார். குருஜி முன்பு உதயனைப் பார்க்க ஹெலிகாப்டரில் போக ஏற்பாடு செய்தவர் பாபுஜி தான். அதனால் அவர் உடனடியாகச் சொன்னார். "அவரை இங்கே கூட்டிகிட்டு வர ஹெலிகாப்டர் ஏற்பாடு செய்துடட்டுமா குருஜி?"

குருஜி சொன்னார். "அவன் இங்கே வரப் போகிறான்னு யார் சொன்னது?"

"அவர் இங்கே வராமல் எப்படி இந்தப் பிரச்சினையை தீர்க்கப் போகிறார்?"

"அதை அவன் அங்கே இருந்தே சரி செய்வான்" குருஜி சொல்ல பாபுஜி சந்தேகத்தோடும் குழப்பத்தோடும் ஜான்சனைப் பார்த்தார். ஜான்சன், குருஜி கவலைப்படா விட்டால் நாமும் கவலைப்பட எதுவுமில்லை என்பது போல இருந்தார்.

பாபுஜி இனி இது சம்பந்தமாக மறுபடியும் கேட்டு விடப் போகிறார் என்று பயந்தது போல குருஜி பேச்சை மாற்றினார். ‘நம்ம ஆராய்ச்சி ஏற்பாடெல்லாம் எப்படி இருக்கு பாபுஜி?”

”எல்லாம் பிரமாதமாய் இருக்கு. ஆனால் ஆழமனசக்திகளை அளக்கற மாதிரி எத்தனையோ மெஷின்கள் இண்டர்நேஷனல் மார்க்கெட்டில் வந்திருக்கிறதா கேள்விப்பட்டேன். உதாரணத்துக்கு ஒவ்வொரு சக்ராவில் இருந்தும் எத்தனை சக்தி வெளிப்படுதுன்னு அளக்கக் கூட மெஷின்கள் இருக்கறதா சொன்னாங்க. அதெல்லாம் இங்கே இல்லையே. ஏன்?”

குருஜி இதற்கு என்ன பதில் என்பது போல ஜான்சனைப் பார்த்தார். சக்திகளைப் பற்றித் தெரிந்த அளவு அவருக்கு எந்திரங்களைப் பற்றித் தெரியாது.

ஜான்சன் சொன்னார். “மார்க்கெட்டில் எத்தனையோ மெஷின்கள் என்னென்னவோ அளந்து காண்பிக்கறதா சொல்லி விளம்பரம் செய்யறாங்க. அந்த மெஷின்கள் எல்லாம் சரியாத் தான் அளக்குதா, காண்பிக்கற ரிசல்டுகள் எல்லாம் சரிதானான்னு உறுதியா நம்பக்கூடிய அளவுக்கு தரமான ஆராய்ச்சி மையங்களால ஆராயப்படலை... உறுதியாய் தெரியாத எந்த மெஷினையும் இந்த ஆராய்ச்சியில் பயன்படுத்த வேண்டாம்னு குருஜி சொன்னதால நான் நிரூபிக்கப்படாத எந்த மெஷினையும் தருவிக்கலை”

எதையும் தவறில்லாமல் கச்சிதமாய் செய்ய வேண்டும் என்று நினைத்து செயல்படுகிற குருஜியின் சிந்தனை பாபுஜிக்குப் பிடித்திருந்தது. ஒரு நடமாடும் பல்கலைக்கழகமாக இருக்கக் கூடிய அந்த மனிதர் இத்தனை ஞானத்தைப் பெற்றிருக்கிறார் என்றால் எதையும் சந்தேகத்திற்கிடமில்லாமல் தெரிந்து வைத்திருப்பதால்

*தான் என்று தோன்றியது. விசேஷ மானஸ லிங்கத்தையும் அப்படியே அல்லவா தெரிந்து வைத்திருக்கிறார்....*

*விசேஷ மானஸ லிங்கம் பற்றி நினைவுக்கு வந்தவுடன் பாபுஜி குருஜியிடம் கேட்டார். "குருஜி எப்ப எனக்கு அந்த சிவலிங்கத்தைக் காட்டப் போறீங்க?"*

*குருஜி புன்னகையுடன் சொன்னார். "இன்னமும் ஜான்சன் கூட அந்த சிவலிங்கத்தைப் பார்க்கலை.... சரி வாங்க ரெண்டு பேரும் போய் பார்க்கலாம்.. ஒன்னு மட்டும் ஞாபகம் வச்சுக்கோங்க. நான் எந்த இடம் வரைக்கும் போகிறேனோ அது தான் எல்லைன்னு தெரிஞ்சுக்கோங்க. அதைத் தாண்டி ஒரு அடி கூட முன்னால் நகர வேண்டாம்..."*

*"சரி" என்று பாபுஜியும் ஜான்சனும் தலையாட்டினார்கள் என்றாலும் பாபுஜிக்கு ஒரு சந்தேகத்தை குருஜியிடம் கேட்க வேண்டி இருந்தது. "ஒன்னு ரெண்டு அடி அதிகமாய் நெருங்கினால் என்ன ஆகும்? அந்தக் கொலைகாரனுக்கு ஆன மாதிரி ஏதாவது ஆயிடுமா?"*

*குருஜி புன்னகைத்தார். "அப்படி எல்லாம் ஆயிடாது. அவன் முட்டாள். அதற்குப் பக்கத்திலே போறதே அபாயம். அப்படி இருக்கையில் அவன் அதைத் தொட்டே விட்டான் போல இருக்கு. அதனால் தான் அப்படி ஆச்சு. நாம் பாதுகாப்பான ஒரு எல்லையைத் தாண்டி நெருங்கினால் அது ஏதாவது ஒரு விதத்தில் நம் கிட்டே பாதிப்பை ஏற்படுத்திட வாய்ப்பு இருக்கு. அந்தப் பாதிப்போட விளைவுகள் உடனடியாய் தெரியா விட்டாலும் பிற்பாடு புரியும்..."*

பாபுஜி தலையாட்டினார். குருஜி அவர்கள் இருவரையும் விசேஷ மானஸ லிங்கத்தைக் காட்ட அழைத்துச் சென்றார். அவர்கள் போன போது கணபதி சிவலிங்கத்திற்குப் பூக்கள் வைத்த விதம் திருப்தி இல்லாததால் அதை வேறு விதமாக வைத்து அலங்கரித்துக் கொண்டிருந்தான்.

குருஜியைப் பார்த்தவுடன் அவனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. அவனுக்கு அவர் இது வரை இந்த சிவனைத் தரிசிக்க வராததில் மனத்தாங்கல் இருந்தது. அவனை ஆஞ்சனேயர் கோயிலிற்கு அனுப்பி விட்டு அவர் வந்து சிவலிங்கத்தைப் பார்த்து பேசி விட்டுப் போனது அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை என்பதால் மெல்ல சிவலிங்கத்திடம் “குருஜி வந்திருக்கார்” என்று தெரிவித்து விட்டு ஓடி வந்து வரவேற்றான்.

”வாங்க குருஜி”

“எப்படி இருக்கே கணபதி?”

“உங்க தயவுல நல்லா இருக்கேன் குருஜி”

“கணபதி டாக்டர் ஜான்சனை உனக்கு முதல்லயே தெரியும் இல்லையா. இவர் பாபுஜி. பெரிய தொழிலதிபர். பத்திரிக்கைல எல்லாம் இவர் பத்தி படிச்சிருப்பே”

அவரைப் பார்த்ததும் கணபதி குட்மார்னிங் என்று கைகூப்பி வணக்கம் சொன்னான். மாலை நேரத்தில் குட்மார்னிங் சொன்ன கணபதியை பாபுஜி சுவாரசியமாகப் பார்த்தார். ஆனாலும் தானும் கைகூப்பி குட்மார்னிங் என்று சொன்னார்.

குருஜி மேலும் சொன்னார். “...இந்த ஆராய்ச்சிகளை ஜான்சன் செய்யறார்னு சொன்னேனில்லையா. அதற்கான செலவு எல்லாத்தையும் பாபுஜி தான் பார்த்துக்கறார்”

’எத்தனை பெரிய மனது இவருக்கு’ என்று நினைத்த கணபதி அதற்காக அவரைப் பார்த்து இன்னொரு தடவை கைகூப்பினான்.

பாபுஜி தலையசைத்தார். ’இவனுக்கு என்ன கைகூப்புவதே வேலையோ?’ என்று தனக்குள்ளே கேட்டுக் கொண்டார்.

அவர் பார்வை விசேஷ மானஸ லிங்கத்தின் மீது நிலைத்தது. தோற்றத்தில் பெயருக்கேற்ற விசேஷம் இல்லை என்றே பாபுஜிக்குத் தோன்றியது. சாதாரணமாய் கோயில்களில் பார்க்க முடிந்த சிவலிங்கம் போல் இருந்தது. பாபுஜி கூர்ந்து பார்த்தார். ஏதாவது ஒளி தெரிகிறதா என்று பார்த்தார். கணபதி ஏற்றி வைத்திருந்த தீபங்களின் ஒளி சிவலிங்கத்தின் மீது படர்ந்திருந்ததே தவிர அவர் கேள்விப்பட்ட ஒளி சிவலிங்கத்தில் இல்லை.

ஜான்சனும் கூர்ந்து சிவலிங்கத்தைப் பார்த்தார். ஆயிரக்கணக்கான வருடங்கள் சித்தர்களால் ரகசியமாய் பூஜிக்கப்பட்டு வந்த அந்த சிவலிங்கத்தில் இருந்து ஏதாவது சக்தி அலைகள் வருகின்றனவா, உணர முடிகின்றனவா என்று கண்களை மூடி உணர்வுகளைக் கூர்மையாக்கியும் பார்த்தார். ஆனால் எதையும் உணர முடியவில்லை.

*கணபதி அவர்கள் மூவரும் எட்டவே நிற்பதைப் பார்த்தான். அதிலும் குருஜிக்கு ஒரு அடி பின்னாலேயே மற்ற இருவரும் நின்றிருந்தனர்.*

*“பக்கத்துல வாங்க. நான் சாமிக்கு ஆரத்தி எடுக்கிறேன்” என்ற கணபதி அவசர அவசரமாகச் சென்று சிவலிங்கத்திற்கு தீப ஆரத்தி எடுத்தான். அவன் சொன்னதைக் கேட்டு அவர்கள் முன்னுக்கு வந்து விடவில்லை. கணபதி ஆரத்தித் தட்டை அவர்கள் அருகே கொண்டு வந்த போது மற்ற இருவரும் குருஜி என்ன செய்கிறார் என்பதை முதலில் கவனித்தார்கள். குருஜி ஆரத்தியை கண்களில் ஒற்றிக் கொண்டதும் அப்படியே செய்தார்கள். கணபதி நீட்டிய திருநீறை குருஜி எடுத்துக் கொண்ட பின் எடுத்துக் கொண்டார்கள்.*

*‘இதென்ன இவர்கள் ரெண்டு பேரும் குருஜியைப் பார்த்தே ஒவ்வொன்னும் செய்யறாங்க. இந்த வெளிநாட்டு விஞ்ஞானிக்கு இதெல்லாம் புதுசா இருக்கலாம். இந்த உள்நாட்டு முதலாளியும் இது வரைக்கும் கோயிலுக்குப் போனதே இல்லையோ’ என்று கணபதி நினைத்துக் கொண்டான்.*

*”சரி கணபதி கிளம்பறோம்” என்று சொன்ன குருஜி கிளம்பினார். மற்ற இருவரும் பின் தொடர்ந்தார்கள். வாசல் வரைக்கும் போன குருஜி திரும்பி கணபதிக்கு நினைவுபடுத்தினார். “என்ன கணபதி நினைவு இருக்கில்ல. நாளைக்கு காலையில் சீக்கிரமே பூஜையை முடிச்சுடு. ஆறு மணிக்கு இங்கிருந்து கிளம்பலாம். நீ தயார் தானே?”*

*பாபுஜியும், ஜான்சனும் திரும்பி கணபதி என்ன சொல்கிறான் என்று பார்த்தார்கள். கணபதி தலையசைத்தான். அந்த நேரமாகப்*

*பார்த்து ஒரு வினாடி நேரம் சிவலிங்கம் ஒளிர்ந்தது. நானும் தயார் என்று சொல்வதைப் போல.....!*

*மூவரும் சிலையாக நிற்க கணபதி மட்டும் பேசினான். "யாரோ பசங்க சும்மா டார்ச் அடிச்சு அடிக்கடி விளையாடறாங்க...."*

*டெஹ்ராடூன் விமானநிலையத்தில் இருந்தே அந்த இளைஞன் ஒரு ஜீப்பை வாடகைக்கு எடுத்துக் கொண்டு ரிஷிகேசத்திற்கு வந்தான். பின் மலைப்பாதையில் பயணித்து ஜீப்பை நிறுத்தி பின் ஒற்றையடிப் பாதையில் நடந்து நடந்து அவனுக்குக் களைத்து விட்டது. அந்த இடத்தில் மனித சத்தங்களே இல்லை. காற்றின் இரைச்சல் தான் பலமாக இருந்து ஒரு அமானுஷ்ய பீதியைக் கிளப்பியது. இந்தக் காலத்திலும் குகையில் வாழும் குருஜியின் நண்பர் மேல் அவனுக்கு எரிச்சல் வந்தது.*

*அவன் இதற்கு முன் இங்கு வந்த போது உதயன் உட்கார்ந்திருந்த பாறையில் இப்போது ஒரு கழுகு உட்கார்ந்திருந்தது. ஏமாற்றத்துடன் முன்னேறினான். சிறிது தூரம் போன பிறகு முதலில் அவன் உட்கார்ந்து களைப்பாறிய பாறையும் வந்தது. இன்று அந்த ஆளை குகையில் தான் சந்திக்க வேண்டும் போல இருக்கிறதே என்று நினைத்துக் கொண்டான். குகையில் அந்த ஆள் தனியாக இருப்பாரா இல்லை வேறெதாவது மிருகமும் இருக்குமா?...*

*திடீரென்று அவன் முன்னால் உதயன் வந்து நின்றார். அவனுக்கு இதயம் ஒரு கணம் துடிக்க மறந்தது. எங்கிருந்து வந்தார். வந்ததையே பார்க்கவில்லையே!*

*“என்ன?” என்று கேட்டார்.*

*“குருஜி உங்க கிட்ட பேசணும்னு சொன்னார்...” என்ற அந்த இளைஞன் செல் போனை எடுத்தான். டவர் இருக்கவில்லை. இந்த மலைக்காட்டுப் பகுதியில் டவர் கிடைக்காதது அவனுக்கு ஆச்சர்யமாக இல்லை. என்ன செய்வது என்று யோசித்தான்.*

*“என்ன ஆச்சு?” உதயன் கேட்டார்.*

*“டவர் இல்லை”*

*”பரவாயில்லை. நம்பர் போட்டுக் கொடு. பேசறேன்”*

*இந்தக் குகை வாழ் மனிதனுக்கு டவர் விஷயம் எல்லாம் புரியாது என்று பொறுமையாக அந்த இளைஞன் “டவர்... டவர் இல்லை... டவர் இல்லைன்னா பேச முடியாது”*

*“பரவாயில்லை. சொன்ன மாதிரி செய்”*

*பொங்கிய ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு ‘சொன்னால் புரியாது. அனுபவத்துல தான் புரியும்’ என்று நினைத்தவனாக டவர் கிடைக்காத செல்லில் குருஜியின் நம்பரை அழுத்தி விட்டு உதயனிடம் தந்தான்.*

*குருஜியின் ரகசிய செல்போன் மந்திரம் சொன்னது. குருஜி உடனே எடுத்துப் பேசினார். ”ஹலோ”*

*“ராமா உதயன் பேசறேன்”*

*“உதயா எனக்கு உன்னால் இன்னொரு உதவி ஆகணும்”*

*“என்ன சொல்லு”*

*குருஜி தற்போதைய நிலவரத்தைச் சொன்னார். “.... இந்த ஆராய்ச்சி நடக்கிற இடம் ரகசியமாய் இருக்கிறது முக்கியம் உதயா. இப்ப கண்காணிக்கிற ஆள்கள் எங்கள் பின்னால் வந்து அந்த இடத்தைக் கண்டு பிடிச்சுட்டா பிரச்சினை ஆயிடும். அதிகாரத்துல இருக்கிற ஆள்களைப் பிடிச்சு இதை வாபஸ் வாங்க வைக்கிறது பெரிய விஷயமில்லை.. ஆனால் இதுல ஏதோ ஒன்னு இருக்குன்னு நானே சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்தற மாதிரி ஆயிடும். அதான் உன் கிட்ட உதவி கேட்கறேன்”*

*உதயன் உடனடியாக ஒன்றும் சொல்லவில்லை.*

*குருஜி சொன்னார். “... இனி கண்டிப்பா உன் கிட்ட உதவி எதுவும் கேட்டு தர்மசங்கடப்படுத்த மாட்டேன் உதயா. இதுவே கடைசி”*

*உதயன் அன்புடன் சொன்னார். “என்ன ராமா நண்பன் கிட்ட போய் பெரிய வார்த்தை எல்லாம் பேசிகிட்டு... நாளைக்கு காலைல எத்தனை மணிக்கு கிளம்பறீங்க?”*

*“காலைல ஆறு மணிக்கு”*

“நீங்க பாட்டுக்குப் போங்க. யாரும் உங்களைப் பின் தொடர முடியாமல் நான் பார்த்துக்கறேன்”

குருஜி நண்பனுக்கு மனதார நன்றி சொன்னார். உதயன் சொல்லி விட்ட பின் கவலைப்பட எதுவுமில்லை. குருஜி பின்பு கேட்டார். “உதயா, என் வாழ்க்கைல மிகப் பெரிய விஷயமா இந்த ஆராய்ச்சியைத் தான் நினைச்சுகிட்டு இருக்கேன். எல்லாம் எப்படிப் போகும்னு அன்னைக்கு கேட்டப்ப சுவாரசியமாய் இருக்கும்னு சொல்லி முடிச்சுட்டே. நான் எல்லார் அபிப்பிராயத்தையும் விட அதிகமா உன் அபிப்பிராயத்தை மதிக்கிறேன். வெளிப்படையா தயக்கமில்லாமல் சொல்லு. நான் இப்ப இருக்கற நிலை என்னன்னு நீ நினைக்கிறே?...”

உதயன் யோசித்து விட்டுச் சொன்னார். “ராமா. இப்போதைக்கு நீ அனுகூலமான நிலையில் தான் இருக்கிறாய்னு நினைக்கிறேன். நம் குரு உன் ஆராய்ச்சியை எந்த விதத்திலும் பாதிக்காதபடி நான் ஏற்பாடு செய்துட்டேன். அந்தப் பையன் கணபதி உன் கட்டுப்பாட்டில் தான் இருக்கிறான். சிவலிங்கமும் உன் கிட்ட தான் இருக்கு. நாம நினைச்சுகிட்டிருக்கிற மூவர் குழுவில் மீதி இருக்கிறது ஈஸ்வர் தான். அவன் தனி ஆள்...”

குருஜிக்கு நிம்மதியாய் இருந்தது.

உதயன் தொடர்ந்து சொன்னார். “ஆனால் அவனைக் குறைச்சு நினைச்சுட வேண்டாம் ராமா. பசுபதி அவன் பேரைச் சொல்லிட்டு போயிருக்கார்னா அது பிரத்தியேக காரணம் இல்லாமல் இருக்காது. அதனால அவன் கிட்ட ஜாக்கிரதையாய் இரு”

“எதிரியைக் குறைச்சு மதிப்பிடறது தோற்கறதுக்கான அஸ்திவாரம்னு எனக்குத் தெரியும் உதயா. கண்டிப்பா ஜாக்கிரதையாய் இருப்பேன்.... நன்றி நண்பா”

உதயன் பேசிக் கொண்டிருந்த போதே அந்த இளைஞன் மலைப்புடன் பார்த்தான். அவர் பேசி முடித்து அவனிடம் செல் போனைத் திருப்பித் தந்த போது அதே மலைப்புடன் செல் போனை வாங்கிப் பார்த்தான். இப்போதும் டவர் இல்லை. அவரைப் பார்த்தான். அவர் போயிருந்தார்.

அந்த இளைஞனுக்கு அந்த இடத்தை விட்டுப் போனால் போதும் என்றாகி விட்டது. ஓட்டமும் நடையுமாக அங்கிருந்து நடக்க ஆரம்பித்தான்.

# அத்தியாயம் - 63

விஷாலியை குற்ற உணர்ச்சி சிறிது சிறிதாக அரித்து சித்திரவதை செய்து கொண்டு இருந்தது. ஒரு நல்லவனைத் தவறாக நினைத்து கேவலமாக நடத்தி விட்டோமே என்று அவள் மிகவும் வருத்தப்பட்டாள். ஈஸ்வரின் வீட்டிற்குச் சென்ற போது அவன் அவள் ஒருத்தி இருப்பதாகவே நினைக்காதபடி தான் கடைசி வரை இருந்தான். அவளைப் பார்த்தவுடன் ஆரம்பத்தில் அவனை அறியாமலேயே தெரிந்த ஓரிரு வினாடி மலர்ச்சி பின் அவளிடம் காட்டப்படவில்லை. அவள் கிளம்பும் போது அவன் அவள் பக்கம் பார்க்கவே இல்லை. வெறுப்புடன் நான்கு வார்த்தையாவது அவன் பேசி இருந்தாலும் கூட அவளுக்கு அதை சகிக்க முடிந்திருக்கும். ஆனால் அவன் பாராமுகத்தை மட்டும் அவளால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

ஆனாலும் அவளால் அவனைக் குற்றம் சொல்ல முடியவில்லை. அவளுக்கு அது தேவை தான் என்று தோன்றியது. அந்தத் தண்டனை நியாயமானது தான் என்று தோன்றியது. அவள் அவன் மீது கோபித்துக் கொண்ட போது அவனிடம் ஏன் கோபித்துக் கொண்டாள் என்பதைக் கூட தெரிவிக்கவில்லை. அவனைப் பேசக் கூட விட்டதில்லை. அன்று அவனை அவள் வாழ்க்கையில் இருந்து விலகி இருக்கச் சொன்னாள். அவன் விலகி இருக்கிறான். அவனிடம் எந்தத் தவறும் இல்லை. அவன் அவள் சொன்னபடி தான் செய்கிறான்.

ஈஸ்வரின் நண்பன் பாலாஜியிடம் பேசிய போது ஈஸ்வரைப் பற்றி மிக நல்ல அபிப்பிராயம் சொன்னான். கண்ணியம், நாணயம் என்கிற விஷயத்தில் எல்லாம் ஈஸ்வரை மாதிரி ஒருவனைப் பார்க்க முடிவது கஷ்டம் என்று சொன்னான். அவள் ஈஸ்வரின் நண்பர்களின் ஃபேஸ்புக் எல்லாம் போய் பார்த்தாள். பெண் நண்பர்கள் உட்பட எல்லோரும் அவன் மேல் மிகுந்த மரியாதை கலந்த அன்பு வைத்திருந்தார்கள் என்பது அவர்கள் தகவல் பரிமாற்றங்களின் மூலம் தெரிந்தது. சில பெண்கள் அவன் மீது மையல் கொண்டிருந்தார்கள் என்பது சந்தேகத்திற்கு இடமில்லாமல் தெரிந்தது. ஆனால் அவர்கள் எல்லாம் அவன் எட்டாத தூரத்தில் இருக்கிறான் என்பது போல் கருத்து தெரிவித்தார்களே தவிர யாரும் அவன் பற்றித் தரக்குறைவாகச் சொல்லவில்லை. எல்லோரையும் ஈஸ்வர் ஏமாற்றி இருக்க வாய்ப்பில்லை. எல்லோரும் ஏமாந்திருக்கவும் வாய்ப்பில்லை. அதனால் மகேஷ் பொய் சொல்லி இருக்கிறான் என்பதில் அவளுக்கு இப்போது சந்தேகம் இல்லை. ஆனால் அவளால் மகேஷ் ஏன் பொய் சொன்னான் என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

அவளுக்கு மகேஷ் நல்ல நண்பனாக இருந்தான். அதை அவள் இப்போதும் மறுக்க முடியாது. அவளுக்கு நினைவு தெரிந்த நாள் முதல் அவன் நண்பன் தான். சின்ன வயதில் இருந்து அவளுக்காக என்ன வேண்டுமானாலும் செய்வான். அவள் கேட்டால், அவன் வைத்திருக்கும் விளையாட்டுப் பொருளானாலும் சரி, தின்பண்டமானாலும் சரி, உடனே சிறிது கூடத் தயங்காமல் தந்து விடுவான். என்ன வேலை எந்த நேரத்தில் சொன்னாலும் அதைச் செய்வதில் அவன் சங்கடப்பட்டதில்லை.

இந்த ஒரு பொய்யைத் தவிர இது நாள் வரை அவளால் அவன் மீது ஒரு குற்றம் சொல்ல முடிந்ததில்லை. ஆனால் இந்த ஒரு பொய்யால் அவள் வாழ்க்கையில் உன்னதமான ஒரு உணர்வையே அவன் சுக்கு நூறாக்கி விட்டான். அதிலும் அவன் அன்று நடித்த நடிப்பு இப்போதும் அவள் கண்முன் நிற்கிறது. அவள் இதயம் உடைந்த கணமல்லவா அது. அதை அவள் எப்படி மறக்க முடியும்?

பரமேஸ்வரனுக்குப் பயந்து மகேஷ் தன் காதலை என்றுமே அவளிடம் சொல்லி இருக்கவில்லை என்பதால் அவளுக்கு அவன் ஈஸ்வரைத் தன் காதலுக்கு எதிரியாக நினைத்து தான் இப்படிப் பொய் சொன்னான் என்பதை ஊகிக்க முடிந்திருக்கவில்லை. தன் தாத்தாவிடம் ஈஸ்வர் முன்பு கோபமாகப் பழகியதால் அவனை மகேஷிற்குப் பிடிக்கவில்லை, அதனால் தன் தோழியான விஷாலியும் அவனுடன் நெருங்கிப் பழகுவது பிடிக்கவில்லை, அதனால் தான் பொய் சொல்லி இருக்க வேண்டும் என்ற அனுமானத்திற்கு கடைசியாக விஷாலி வந்தாள்.

மகேஷ் மீது அவளுக்கு ஆத்திரமாக வந்தது. உன்னால் எப்படி என்னிடம் நீ இப்படிப் பொய் சொல்ல முடிந்தது என்று கேட்க அவள் மனம் துடித்தது. ஆனால் அதற்கு பதிலாக மகேஷ் வேறு

கற்பனைப் பொய்களை அவிழ்த்து விடுவானே ஒழிய தன் தவறை ஒப்புக் கொள்வான் என்று அவளுக்குத் தோன்றவில்லை. இனியொரு தடவை இந்தப் பொய்களைக் கேட்க நேர்ந்தால் அவனை நிஜமாகவே வெறுக்க வேண்டி இருக்கும். அதற்கு ஏனோ விஷாலியின் நல்ல மனது இடம் தரவில்லை.

மகேஷ் சொன்ன பொய் மகாபாதகமே ஆனாலும் இது வரை அவன் அவளுக்காக செய்ததை எல்லாம் அவளால் மறக்க முடியவில்லை. அதனால் ஒரேயடியாக அவன் நட்பை அறுத்து விடவும் அவளால் முடியவில்லை. அதே நேரத்தில் முன்பு போல அவளால் பழகவும் முடியவில்லை. இந்த திரிசங்கு நிலையில் அவள் அவனிடம் அளவாகப் பேசுவதையும் பழகுவதையும் வைத்துக் கொள்ள முடிவெடுத்திருந்தாள்.

அவன் இப்போதெல்லாம் அவர்கள் வீட்டுக்கு முன்பு போல் வருவதில்லை என்பது அவளுக்கு பெரிய ஆசுவாசத்தைத் தந்தது. ஆனால் அவ்வப்போது போனில் அவளுடன் அவன் பேசினான். விஷாலி தந்தி வாசகங்களில் பதில் சொல்லி வேறு முக்கிய வேலை இருப்பதாகச் சொல்லி போனை வைக்கும் வழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தாள்.

கடைசியில் ஒரு தடவை மகேஷ் கேட்டே விட்டான். “என்ன விஷாலி. நீ என் கிட்ட சரியா பேசவே மாட்டேன்கிறாய்?”

’பதிலை என் கிட்டே கேட்காதே. உன்னையே நீ கேட்டுக்கோ’ என்று அவளுக்குச் சொல்லத் தோன்றியது. ஆனாலும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு சொன்னாள். “அப்படி ஒன்னும் இல்லை... சரி வைக்கட்டுமா. இன்னொரு கால் வருது”.

அவள் அதிகம் தனிமையை விரும்பி தனிமையிலேயே இருந்தாள். அப்படித் தனிமையில் இருக்கும் போதெல்லாம் ஈஸ்வருடன் நன்றாகப் பழகிய அந்த இரண்டு நாட்களைத் திருமபத் திரும்ப மனம் திரையிட்டுப் பார்த்து மகிழ்ந்தது. யாரோ இவன் பாடல் அடிக்கடி ஒலித்தது. அவள்-அவன்-அந்தப் பாடல் கலந்த ஒரு அழகிய தருணம் மனதை வருடிப் போனது. எல்லா நினைவுகளும் முடிவில் வலியையே தந்தாலும் அந்த அழகிய நினைவுகளை மறக்க முடியவில்லை...

தென்னரசு மகள் ஏதோ எண்ணங்களில் சோகமாய் ஆழ்ந்து போய் இருந்ததைக் கவனித்தார். அவளுக்கு அவர் அறை வாசலில் வந்து நிற்பது கூடத் தெரியவில்லை. கனத்த மனத்துடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்த அவர் தன் பழைய மகளைப் பார்க்க ஏங்கினார். என்னேரமும் சுறுசுறுப்பாய், சந்தோஷமாய், மலர்ந்த முகத்துடன் ஏதோ ஒரு வேலையை ஆர்வத்துடன் செய்து கொண்டிருக்கும் அந்த மகளை அவர் இனி எப்போது காணப் போகிறார்?

“என்ன யோசிச்சுட்டு இருக்கே விஷாலி?”

“ஒன்னும் இல்லைப்பா” சொல்லி விட்டு விஷாலி ஒரு புன்னகையைப் பலவந்தமாய் உதட்டிற்குக் கொண்டு வந்தாள். அதைப் பார்த்து அந்தத் தந்தையின் மனம் மேலும் வேதனைப் பட்டது. சிறு வயது முதல் மகளின் நிஜப்புன்னகையில் அகம் மகிழ்ந்து வந்த தந்தைக்கு மகள் போலிப் புன்னகை பூக்கும் நிலைமைக்கு வந்து விட்டதைத் தாங்க முடியவில்லை.

அவர் இனி எதுவும் கேட்டு விடுவாரோ என்று அவள் பயந்து எழுந்து தன் வேலைகளைப் பார்க்க ஆரம்பித்தாள். அரை மணி நேரத்தில் அவள் ஒரு ஓவியக் கண்காட்சிக்குக் கிளம்பிப் போனாள். “நான் போயிட்டு வரேன்ப்பா....”

போகும் மகளையே பார்த்துக் கொண்டு தென்னரசு வாசலில் நின்றார். அவள் நடையில் ஒரு ஜீவனே இல்லை....

அந்த நேரத்தில் இளைஞன் ஒருவன் சைக்கிளில் அவர் வீட்டு வாசலில் வந்து நின்றான். “சாரி சார். புக்ஸ் கொண்டு வர லேட்டாயிடுச்சு.....” என்று சத்தமாகச் சொன்னான்.

தென்னரசுக்கு அவன் பரிச்சயமானவன் அல்ல. அதனால் அவனை சந்தேகத்துடன் பார்த்தார். இடம் மாறி வந்து விட்டானோ?

அவர் யோசித்துக் கொண்டிருக்கும் போதே அவன் சைக்கிளை நிறுத்தி விட்டு இரண்டு புத்தகங்களுடன் அருகில் வந்த அவன் அவரிடம் தாழ்ந்த குரலில் சொன்னான். ‘குருஜி பேசணும்னார்”

புரிந்து கொண்ட தென்னரசு தானும் சத்தமாகவே “பரவாயில்லை. உள்ளே வாப்பா” என்று உள்ளே அவனை அழைத்துக் கொண்டு போனார். வெளியே இருந்து பார்க்கும் யாருக்கும் அந்த இளைஞன் அவரது மாணவன், தெரிந்தவன் என்று தான் நினைக்கத் தோன்றும்.

உள்ளே நுழைந்தவுடன் அந்த இளைஞன் தன் செல்போனை எடுத்து அவரிடம் தந்து ஒரு புதிய செல்போன் எண் எழுதிய சீட்டையும் தந்தான். “இந்த நம்பருக்கு இந்த செல்போன்ல பேசுங்க”

தென்னரசு திகைப்படைந்தாலும் வெளியே காட்டிக் கொள்ளாமல் அந்த எண்களை அழுத்த, குருஜி பேசினார். “தென்னரசு உன் வீட்டுக்கு வெளியே இன்னமும் ஒரு போலீஸ்காரன் இருக்கிறான்னு பாபுஜியோட ஆள்கள் சொல்றாங்க. ஆனால் போன் டேப்பிங் இருக்கற மாதிரி தெரியலை. ஆனாலும் ஜாக்கிரதையாய் இருக்கறது நல்லதுன்னு நான் நினைக்கிறேன். அதனால தான் இந்த ஏற்பாடு. நீ எந்தக் காரணத்தைக் கொண்டும் வேதபாடசாலை பக்கம் வந்துடாதே. இங்கே பலமான போலீஸ் கண்காணிப்பு இருக்கு.”

தென்னரசுவால் கேள்விப்பட்டதை நம்ப முடியவில்லை. பார்த்தசாரதி அவரைப் பார்த்துப் பேசி விட்டுப் போனது முதல் தான் கண்காணிக்கப்படுவது தென்னரசுக்குத் தெரிந்தே இருந்தது. அதனால் தான் அவர் அன்றிலிருந்து கல்லூரியைத் தவிர வேறு எங்கேயும் அதிகம் போகவில்லை. ஆனால் கண்காணிப்பு குருஜி வரைக்கும் நீளும் என்று அவர் சிறிதும் எதிர்பார்த்திருக்கவில்லை. முதலாவதாக குருஜி மேல் யாருக்காவது சந்தேகம் வரும் வாய்ப்பு இருப்பதாகவே அவருக்குத் தோன்றவில்லை. அப்படி வந்தால் கூட குருஜி இருக்கும் இடத்தைக் கண்காணிக்க போலீஸ் இலாகா துணியும் என்பதைத் துளியும் நம்ப முடியவில்லை. எங்கே என்ன தவறு நடந்தது?.

தென்னரசுவின் அதிர்ச்சியைப் புரிந்து கொள்ள முடிந்தது போல் குருஜி சொன்னார். “எல்லாம் ஈஸ்வரோட அனுமானம் தான்னு நினைக்கிறேன். ஆனாலும் பயப்பட ஒன்னும் இல்லை. நம்

திட்டப்படி நாளைக்கு காலைல ஆறு மணிக்கு இங்கிருந்து சிவலிங்கத்தோட கிளம்பறோம்... அதுக்கான ஏற்பாடு செஞ்சாச்சு. நீ ஆராய்ச்சி இடத்துக்கே நேரா வந்துடு. வீட்டுல வெளியூர் போறதா சொல்லிட்டு கிளம்பு. காலைல சரியா அஞ்சரை மணிக்கு கால்டாக்ஸி உன் வீட்டு முன்னால் வந்து நிற்கும். அது பாபுஜி ஆள்கள் ஏற்பாடு செய்தது. மீதியை அவங்க பார்த்துக்குவாங்க. உன் வீட்டுக்கு வெளியில் இருக்கற போலீஸ்காரன் அரை கிலோமீட்டருக்கு மேல பின் உன்னைப் பின் தொடர முடியாது. அதை பாபுஜி ஆள்கள் பார்த்துக்குவாங்க”

தென்னரசு நிம்மதிப் பெருமூச்சு விட்டார். குருஜி தொடர்ந்தார்.

”மகேஷ் கிட்ட நான் இன்னைக்கே சாயங்காலத்துக்கு மேல அங்கே வரச் சொல்லி இருக்கேன். நீயும் அவனும் ஒரே நேரத்துல கிளம்பி வந்தால் அனாவசியமா அவன் மேலேயும் போலீஸுக்கு சந்தேகம் வரலாம். இது வரைக்கும் அவன் மேல போலீஸுக்கு சந்தேகம் இல்லை... அதனால அவன் அவங்க கண்காணிப்பில இல்லை. அந்த மெஷின்களோட ப்ரவுச்சர்ஸ் எல்லாம் அவனுக்கு நேத்தே அனுப்பி நல்லா படிச்சு வச்சுக்க சொல்லி இருக்கேன்.... சரி நாளைக்கு காலைல பார்க்கலாம்”

தென்னரசு சொன்னார். “சரி குருஜி”

அந்த இளைஞன் கொண்டு வந்திருந்த புத்தகங்களை வைத்து விட்டு அவரிடம் இருந்து செல்போனைத் திரும்ப வாங்கிக் கொண்டு போய் விட்டான்.

அந்த இளைஞன் போய் அரை மணி நேரத்தில் மகேஷ் வந்தான். அவன் முகத்தில் சுரத்தே இல்லை. இன்னொரு விஷாலியாய் தெரிந்தான். வந்தவுடன் கேட்டான். "விஷாலி இல்லையா?"

"இல்லை. வெளியே போயிருக்கா"

மகேஷின் முகம் மேலும் சோகமானது. விஷாலி அவனிடம் சரியாகப் பேசாமல் இருக்க ஆரம்பித்ததில் இருந்து ஆரம்பித்தது அவன் சோகம். பரமேஸ்வரன் உயிர் பிழைத்து ஈஸ்வரும், அவரும் நெருக்கமானவுடன் சோகம் பல மடங்காக ஆகி இருந்தது.

தென்னரசு சொன்னார். "நான் உன்னை அதிகம் வர வேண்டாம்னு சொல்லி இருந்தேனே மகேஷ். போலீஸ் கண்காணிப்பு இன்னும் இங்கே இருந்துகிட்டு தான் இருக்கு"

"நான் அதிகம் வரலையே. வந்து நாலைந்து நாளுக்கு மேல ஆச்சு.... நாம ஃபேமிலி ஃப்ரண்ட்ஸ்னு போலீசுக்கும் தெரியும். அதனால நான் எப்பவாவது வர்றது எந்த சந்தேகத்தையும் கிளப்பாது.... சீக்கிரமே கிளம்பிடறேன்" உண்மையில் ஆராய்ச்சிக் கூடத்திற்குப் போனால் இனி சில நாட்கள் விஷாலியைப் பார்க்க முடியாது என்பதால் அவளைப் பார்த்து விட்டுப் போகத் தான் மகேஷ் வந்திருந்தான். அவளைப் பார்க்க முடியாதது அவனுக்கு வருத்தமாக இருந்தது.

தென்னரசு சொன்னார். "வேதபாடசாலையையும் கண்காணிச்சுட்டு இருக்காங்கன்னு குருஜி சொன்னார். பலமான கண்காணிப்பாம்....."

“என்ன?” மகேஷ் வாயைப் பிளந்தான். அவனுக்கு இந்தத் தகவல் தெரிவிக்கப்பட்டிருக்கவில்லை. தென்னரசு தெரிவித்தவுடன் அவனுக்குக் கோபம் வந்தது. “அந்த அளவுக்கு யாருக்குத் தைரியம் வந்திருக்கு. குருஜி ஒரு போன்கால் செய்தால் போதுமே?”

மகேஷின் அறிவு கம்ப்யூட்டர், சாஃப்ட்வேர் ப்ரோகிராம்கள், நவீன சாதனங்கள் ஆகியவற்றில் வேலை செய்வது போல வேண்டாத சில விஷயங்களிலும் அபாரமாக வேலை செய்யுமே ஒழிய மற்ற விஷயங்களில் வேலை செய்யாது என்பது தென்னரசுவிற்குத் தெரியும். பொறுமையாகச் சொன்னார். ”ரகசியமாய் கண்காணிக்கிறது அவருக்கு எப்படித் தெரியும்னு கேள்வி வரும். தப்பு செய்யாத ஆளை போலீஸ் கண்காணிச்சா என்ன, மடியில கனம் இருந்தாத்தானே வழியில பயம்னு அறிவிருக்கிறவன் நினைப்பான். இப்போதைக்கு கண்காணிக்கிறவங்களுக்கு சந்தேகம் மட்டும் தான் இருக்கு. அதை உறுதிப்படுத்திட வேண்டாம் இல்லையா?.....”

“அப்படின்னா நாளைக்கு சிவலிங்கத்தை எப்படி அங்கே இருந்து எடுத்துட்டு போவாங்க?”

”ஏதோ ஏற்பாடு செய்திருக்கிறதா குருஜி சொன்னார்”

மகேஷ் தலையசைத்தான். குருஜி, சிவலிங்கம் யோசனைகள் போய் அவன் பழையபடி சொந்த சோகத்தில் மூழ்கினான். ”அங்கிள் நான் ஒரு பெரிய முட்டாள் தனம் செய்துட்டேனோன்னு எனக்கு இப்ப தோண ஆரம்பிக்குது...”

”என்ன?”

”குருஜியே அந்த சிவலிங்கத்திற்கு எத்தனையோ அடி தூரம் தள்ளியே நிற்கறப்ப நான் அன்னைக்கு அது கார் பின் சீட்டுல இருக்கறப்ப காரை ஓட்டிகிட்டு வந்திருக்கக் கூடாதுன்னு தோணுது. அதை எடுத்துகிட்டு வந்தவன் இன்னும் பழைய நிலைக்கு வரலை. சீர்காழில இருந்து அவனைக் கூட்டிகிட்டு வந்து எத்தனை நாளாச்சு. இன்னும் அவன் பேய் அடிச்சவன் மாதிரி தான் இருக்கான்.... எனக்கும் அந்த சிவலிங்கத்துக்கும் இடைவெளி கார்ல வெறும் ரெண்டடி தான் இருந்திருக்கும். முக்கால் மணி நேரம் அந்த தூரத்துல சிவலிங்கம் கூட இருந்த அந்த நாளுக்குப் பிறகு நானும் நிம்மதியாய் இல்லை... அது வரைக்கும் இந்தியா வர்ற யோசனையே இல்லாத ஈஸ்வர் வந்தான்.... அதுல ஆரம்பிச்சு எனக்கு ஒன்னு மேல ஒன்னு பிரச்சினை இருந்துகிட்டே தான் இருக்கு. என் மேல உயிரே வச்சிருந்த என் தாத்தாவுக்கு இப்ப நான் இருக்கேன்கிறதே மறந்துட்ட மாதிரி தான் இருக்கு. இப்ப அவருக்கு அவன் தான் உயிர். எங்கம்மாவுக்கும் மருமகன் வந்த பிறகு மகன் பத்தின யோசனையே இல்லை... விஷாலி கூட இப்ப என் கிட்ட சரியா பேசறதே இல்லை...”

மகேஷ் குரல் அழுகையை எட்டி இருந்தது. ‘நீங்கள் கூட விவரமாய் இன்னொரு காரில் வந்து விட்டீர்கள்’ என்று அவன் வாய் சொல்லா விட்டாலும் பார்வை சொன்னது. தென்னரசு ஒன்றும் சொல்லாமல் அவனையே பார்த்தார். அவரும் நிம்மதியாய் இல்லை. எப்போது மகள் மறுபடி சிரிக்கிறாளோ அப்போது தான் அவர் நிம்மதி அடைய முடியும். ஆனால் அதை எல்லாம் சிவலிங்கத்துடன் முடிச்சு போட அவர் விரும்பவில்லை. இந்த ஆராய்ச்சிகளின் முடிவில் எல்லாம் சரியாகும்... அதில் அவருக்கு சந்தேகமில்லை.

தென்னரசு கனிவாக அவனைப் பார்த்துச் சொன்னார். “மகேஷ். கொஞ்ச நாள் பொறுத்துக்கோ. எல்லாம் சரியாயிடும். கவலைப்படாதே. சிவலிங்கம் பக்கத்துலயே நீ போகாமல் இருந்திருந்தால் கூட ஈஸ்வர் இந்தியாவுக்கு வந்திருப்பான். உன் தாத்தா கிட்ட அவர் அண்ணா முதல்லயே அவனுக்குத் தெரிவிக்கச் சொல்லி இருந்தார்ங்கறதை மறந்துட்டியா என்ன? இந்த ஆராய்ச்சிகள் முடியறப்ப நம்ம எல்லா பிரச்சினைகளும் முடிஞ்சிருக்கும். சரி நீ கிளம்பு... நாளைக்கு அங்கே சந்திக்கலாம்...”

மகேஷ் ஓரளவு நம்பிக்கை வந்தவனாக கிளம்பினான்.

***************

பாபுஜி தந்தைக்குப் போன் செய்து வேதபாடசாலை கண்காணிக்கப்படும் செய்தி கிடைத்ததில் இருந்து ஆரம்பித்து நடந்ததை எல்லாம் சொன்னார். சிவலிங்கம் ஒளிர்ந்ததைப் பார்த்த காட்சியை விவரிக்கையில் அவருக்கு மயிர்க்கூச்செறிந்தது. குருஜி உதயனிடம் இந்த ஆராய்ச்சிகள் பற்றி அபிப்பிராயம் கேட்ட போது இப்போதைக்கு இந்தப்பக்கம் தான் அனுகூல நிலைமை இருப்பதாக அவர் சொன்னார் என்பதைத் தந்தையிடம் விவரமாகத் தெரிவித்து விட்டு பாபுஜி சொன்னார். “எல்லாம் இப்ப எங்க கட்டுப்பாட்டுல தான் இருக்குப்பா”

முழுவதும் கேட்டு விட்டு பாபுஜியின் தந்தை பிரதாப்ஜி சொன்னார். “எனக்கு அப்படித் தோணலை”

“ஏன்ப்பா” பாபுஜி உற்சாகம் வடியக் கேட்டார்.

“சிவலிங்கம் இருக்கிற இடம் மட்டும் தான் உங்க கட்டுப்பாட்டில் இருக்கு பாபு. சிவலிங்கம் இல்லை. இப்பவும்

*சிவலிங்கத்தைத் தொட முடிஞ்சது அந்தப் பையன் கணபதிக்குத் தான். உங்களுக்கல்ல. இப்பவும் நீங்க பல அடி தள்ளித் தான் நிற்கிறீங்க. உன்னோட குருஜியையும் சேர்த்து தான் சொல்றேன். தொடக்கூட முடியாத நீங்க அதை உங்க கட்டுப்பாட்டுல வச்சிருக்கறதா சொல்றது தமாஷா இருக்கு”*

*பாபுஜி காற்றுப் போன பலூன் போல ஆனார்.*

# <u>*அத்தியாயம் - 64*</u>

*பாபுஜி உடனடியாக குருஜியிடம் சென்றார். குருஜி ஜான்சனுடன் பேசிக் கொண்டிருந்தார். பாபுஜியின் முகத்தைப் பார்த்தே ஏதோ ஒன்று பாபுஜியை நிறையவே பாதித்திருக்கிறது என்பதைப் புரிந்து கொண்ட குருஜி கேட்டார். “என்ன பாபுஜி?”*

*”உங்க நண்பர் உதயன் நினைச்ச மாதிரி எங்கப்பா நினைக்கலை. அவர் சொல்றதும் அர்த்தம் இல்லாமல் இல்லை குருஜி. வியாபாரத்துல நமக்கு சாதகமான சூழ்நிலையை விட சாதகமில்லாத சூழ்நிலைய அதிகமாய் தெரிஞ்சு வச்சுக்கிறவன் நான். அதனால அவர் சொன்னதை என்னால் அலட்சியப்படுத்திட முடியல...”*

*”சுத்தி வளைக்காமல் விஷயத்துக்கு வா பாபுஜி. அவர் என்ன சொன்னார்?”*

*பிரதாப்ஜி சொன்னதை பாபுஜி தயக்கத்துடன் அப்படியே தெரிவித்தார். கேட்டு குருஜியின் முகத்தில் புன்னகை மாறாதது அவருக்கு ஆச்சரியமாய் இருந்தது. “இவ்வளவு தானா?” என்று கேட்டார்.*

*என்ன இப்படிக் கேட்டு விட்டார் என்று நினைத்தவராக பாபுஜி "ஆமா" என்றார்.*

*குருஜி கேட்டார். "பாபுஜி, வீட்டில் தீ பயன்படுத்தறியே, அதை நீ தொடுவாயா? இல்லை தானே. கால காலமா பயன்படுத்தற தீயை நாம் இன்னும் தொடறதில்லை. ஆனால் பாத்திரம் தீயை சிரமம் இல்லாமல் தொடுது. அப்படின்னா உன்னை விட பாத்திரம் சிறப்பானதுன்னு சொல்ல முடியுமா? இல்லை பாத்திரம் தான் தீயைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்குன்னு சொல்ல முடியுமா? பாத்திரத்தையும் தீயையும் நீ தானே உன் விருப்பப்படி பயன்படுத்தறே. நீ தானே கட்டுப்படுத்தறே."*

*"அதே மாதிரி தான் மின்சாரம். அதை எத்தனையோ விதங்கள்ல பயன்படுத்தலாம். பயன்படுத்தறோம். ஆனா அதை நாம் வெறும் கையில் தொட முடியறதில்லை. ஆனால் மின்சாரத்தை ஒரு மரக்கட்டை எந்தப் பாதிப்பும் இல்லாமல் தொடுது. அப்படின்னா நம்மளை விட மரக்கட்டை உசத்தின்னு அர்த்தப்படுத்திக்க முடியுமா?"*

*ஜான்சன் குருஜியின் பதிலை ரசித்தார். இந்த மனிதருக்கு எங்கிருந்து தான் உதாரணங்கள் கிடைக்கிறதோ? பாபுஜிக்கும் குருஜி சொன்னதைக் கேட்டு மனம் சமாதானம் அடைந்தது.*

*"தப்பாய் நினைக்க வேண்டாம் குருஜி. இது நாள் வரைக்கும் உலகத்தில் யாருமே செய்யாத பரிசோதனைகளை நாம் செய்யப் போறோம். விசேஷ மானஸ லிங்கத்தைப் பத்தி முழுசா தெரிஞ்சவங்க யாருமே இல்லை. அப்படி இருக்கறப்ப நாம யோசிச்சுப் பார்க்காத பாதகமான விஷயங்களைக் கேள்விப்பட்டா*

***மனசுல சஞ்சலம் வர ஆரம்பிச்சுடுது..... நாளைக்கு காலைல போலீஸ் கண்பார்வைல இருந்து தப்பிச்சு சிவலிங்கத்தை அங்கே கொண்டு போய் சேர்க்கிற வரைக்கும் ஒரு டென்ஷன் இருக்கத் தான் செய்யும்.” பாபுஜி சொன்னார்.***

***குருஜி புன்னகை செய்தபடி சொன்னார். “நீ என் நண்பனைப் பார்த்ததில்லை பாபுஜி. அவனைப் பற்றிக் கேள்விப்பட்டதுமில்லை. ஆனால் மாந்திரிகம், அபூர்வ சக்திகள்ல ஆர்வமும், ஓரளவு ஞானமும் இருக்கிறவங்களுக்கு அவனைத் தெரியாமல் இருக்க முடியாது. உதயன் சுவாமின்னா அது உலகப் பிரசித்தம். மாந்திரிகத்தில் அவனுக்கு மிஞ்சிய ஆள் இல்லைன்னு நான் சொன்னவுடனே ஜான்சன் கூட உதயன் சுவாமியான்னு கேட்கணும்னா பார்த்துக்கோயேன்.....”***

***ஜான்சன் சொன்னார். “அவரைப் பற்றி நான் நிறையவே கேள்விப்பட்டிருக்கேன் பாபுஜி. எத்தனையோ பேர் எந்தெந்த நாடுகள்ல இருந்தோ அவரைப் பார்க்க இந்தியா வந்துட்டு போறதா கேள்விப்பட்டிருக்கேன். இருக்கற பொருட்களைக் கண்ணுல இருந்து மறைக்கறது, இல்லாத பொருட்களை இருக்கறதா காட்டறது, செய்வினை வைக்கறது, எடுக்கறது இந்த மாதிரி விஷயங்கள்ல எல்லாம் அவர் நிபுணர்னு சொல்வாங்க. அவர் நம்ம குருஜியோட நண்பர்னு சில நாள் முன்னாடி தான் தெரியும்....”***

***பாபுஜிக்கு இதை எல்லாம் எந்த அளவிற்கு நம்பலாம் என்று தெரியவில்லை. ஆனால் ஆராய்ச்சிக்கூடத்தில் கிடைத்த அனுபவத்தை யோசித்துப் பார்க்கையில் இந்த மாந்திரிகம் கூட உண்மையாக இருக்கலாம் என்று தோன்றியது. உதயன் சுவாமி நிஜமாகவே சக்தி வாய்ந்தவராக இருக்கலாம்...***

ஜான்சன் குருஜியாகச் சொல்வார் என்று எதிர்பார்த்து அவர் சொல்லாததால் பாபுஜிக்கு நம்பிக்கை ஏற்படுத்தக் கூடிய தகவலைத் தெரிவித்தார். "பாபுஜி, இன்னொரு விஷயம் தெரியுமா? இந்த சிவலிங்கத்தை பசுபதி கிட்ட கொண்டு வந்து கொடுத்த அக்னிநேத்திர சித்தர் கிட்ட சில காலம் சிஷ்யனாய் உதயன் சுவாமி இருந்திருக்கார்... "

பாபுஜி ஆச்சரியப்பட்டார். "அப்படியா? குருஜி, நாம ஏன் உங்க நண்பரை நம்மோட ஆராய்ச்சிகள்ல சேர்த்துக்கக் கூடாது. அவருக்கு என்ன வேணுமோ அதை நாம் செய்து தரலாம்...."

'பில் கேட்ஸை என்னோட கம்பெனில ஏன் வேலைக்கு சேர்த்துக்கக்கூடாது. அவர் என்ன சம்பளம் கேட்கிறாரோ கொடுத்து விடலாம்' என்று பாபுஜி சொன்னது போல குருஜி பார்த்தார். 'நல்லவேளையாக இவன் அக்னிநேத்திர சித்தரையே ஆராய்ச்சிக்கு அழைக்கவில்லை'

ரிஷிகேசத்தில் குருஜி கூட உதயனிடம் ஆராய்ச்சிகளுக்கு உதவ முடியுமா என்று கேட்டிருக்கிறார். என்றாலும் அதற்கு ஒரு கூலி தந்து விடலாம் என்று பாபுஜி நினைத்தது அகங்காரத்தின் உச்சமாக குருஜிக்குத் தோன்றியது.

குருஜியின் பார்வையைப் பார்த்த பிறகு தான் தவறாகக் கேட்டு விட்டோம் போல இருக்கிறது என்று பாபுஜிக்குப் புரிந்தது.

குருஜி சொன்னார். "உலகத்துல பணத்தால வாங்க முடியாத விஷயங்கள் நிறைய இருக்கு பாபுஜி."

பாபுஜி சொன்னார். "நான் அந்த அர்த்தத்துல சொல்லலை குருஜி. உங்க நண்பராச்சே. அதனால நல்ல சக்தி வாய்ந்த அவர் நம்ம ஆராய்ச்சில கலந்துகிட்டா சிறப்பா இருக்கும்னு நினைச்சேன். அதான்..."

குருஜி சொன்னார். "இந்த விசேஷ மானஸ லிங்க விவகாரத்தில் ஈடுபட உதயன் விருப்பமில்லைன்னு தெளிவா முதல்லயே சொல்லிட்டான். நான் உதயன் கிட்ட கொஞ்ச நேரத்துக்கு முன்னால் போனில் பேசினதை நீ கேட்டிருப்பாய்னு நினைக்கிறேன் பாபுஜி. "இனி கண்டிப்பா உன் கிட்ட உதவி எதுவும் கேட்டு தர்மசங்கடப்படுத்த மாட்டேன் உதயா. இதுவே கடைசி"ன்னு சொன்னேன். இந்த விவகாரத்தில் ஈடுபட மாட்டேன்னு அவன் சொன்ன பிறகும் அவன் கிட்ட அந்த சித்தர் கிட்ட இருந்து நான் பாதுகாப்பு கேட்டதுக்கு அவன் ஒத்துகிட்டதே அதிகம். இப்ப இன்னொரு உதவி கேட்டிருக்கேன். அதுக்கும் அவன் சரின்னு சொன்னான். இதெல்லாம் அவன் என் மேல் வச்சிருக்கிற அன்பைக் காட்டுது. அந்த அன்பு ஒன்னுக்காக தான் அவன் ஒத்துகிட்டான்...."

பாபுஜி கேட்டார். "தன் நண்பனுக்கு தன்னால முடியக் கூடிய உதவிகள் செய்யறதுல ஒருத்தருக்கு என்ன நஷ்டம் குருஜி?"

"எனக்கு உதவறதுக்காக அவன் செலவழிக்கப் போகிற சக்தியை அவன் திரும்ப சேர்த்தணும்னா அதுக்குப் பல வருஷங்கள் ஆகும் பாபுஜி."

பாபுஜி ஆச்சர்யப்பட்டார். குருஜி சொன்னார். "பாபுஜி உன் கிட்ட மொத்தமா பத்து ரூபாய் இருக்குன்னு வச்சுக்குவோம். உன் உயிர் நண்பன் அதில் பாதி கேட்டால் அஞ்சு ரூபாயை நீ

*யோசிக்காமல் கொடுத்துடுவாய். ஆனால் உன் சொத்து இப்ப ஏழாயிரம் கோடி. அதுல பாதி கேட்டால் என்ன செய்வே? யோசிப்பே இல்லையா? அந்த மாதிரி தான் நான் அவன் கிட்ட கேட்டிருக்கேன். ஒரு சித்தரோட சக்தி எந்த அளவுக்கு இருக்கும்கிறதை சாதாரண ஜனங்களால கற்பனை கூட செய்து பார்க்க முடியாது. அந்த அளவு சக்தி நம்ம ஆராய்ச்சியை பாதிக்கக் கூடாதுன்னு தடுக்கணும்னா அந்தத் தடுப்பு சக்தி எந்த அளவுக்கு இருக்கணும்னு யோசிச்சுப் பார். உதயன் வாழ்நாள் எல்லாம் சேர்த்துன தன்னோட சக்தியில பாதிக்கு மேல் செலவு செய்தால் தான் அது முடியும்? பல வருஷங்களாய் அவனைப் பார்க்கக் கூட நான் போகலை. இன்னொருத்தனாய் இருந்தால் வேலை இருந்தால் மட்டும் வர்றான் பாருன்னு நினைச்சிருப்பான். என்னோட குருவுக்கு எதிரா நான் வேலை செய்ய முடியாதுன்னு சொல்லி இருப்பான். என் நண்பன் என்னைத் தப்பா நினைக்கல. நான் கேட்டதுக்கு மறுப்பு சொல்லல. அப்படிப்பட்ட நண்பன் கிட்ட நான் திருப்பித் திருப்பி உதவி கேட்டு அவனை அந்த நிலைக்குத் தள்ளிடக் கூடாது.”*

*“அப்புறம் ஆராய்ச்சியில் கலந்து எதையாவது நிரூபிக்கிற கட்டத்தை எல்லாம் அவன் எப்பவோ தாண்டி இப்ப பெரிய நிலையில் இருக்கான். ஆரம்ப காலத்துலயே ஆக்ரோஷமாய் பாய்ந்து வந்த சிங்கத்தைத் தன் சக்தியால அப்படியே நிறுத்தினவன் அவன். இப்ப காலம் அறுபது வருஷங்களுக்கும் மேல கடந்துடுச்சு. எத்தனை சக்திகள் வச்சிருப்பான் யோசிச்சுப் பார். அவனை எல்லாம் ஆராய்ச்சிக்குக் கூப்பிடறது எடுபிடி வேலைக்குக் கூப்பிடற மாதிரி...”*

*சாதாரணமாக உணர்ச்சிவசப்படாத குருஜி நண்பனைப் பற்றிப் பேசிய போது உணர்ச்சி வசப்பட்டார். ஜான்சனும் பாபுஜியும் குருஜியின் புதிய பரிணாமத்தை வியப்புடன் பார்த்தார்கள்.*

குருஜி சொன்னார். “மணி பத்தரை ஆச்சு. சரி முடிஞ்சா கொஞ்ச நேரமாவது தூங்கப் பாருங்க. நாளைக்கு காலைல சரியா ஆறு மணிக்கு சிவலிங்கத்தோட வேதபாடசாலையை விட்டுக் கிளம்பணும்....”

ஜான்சனும், பாபுஜியும் கிளம்பினார்கள். போகும் போது பாபுஜி தன் அடக்க முடியாத ஆர்வத்துடன் ஜான்சனைக் கேட்டார். “நாளைக்கு காலைல உதயன் சுவாமி நமக்கு எப்படி உதவுவார்னு நினைக்கிறீங்க. நம்மளை மாயமாக்கிடுவாரா?”

ஜான்சன் சொன்னார். “தெரியல.”

அவர்கள் போன பிறகு குருஜி நீண்ட நேரம் விழித்திருந்தார். பாபுஜியைப் போல் காலையில் எப்படிப் போவோம் என்ற சிந்தனை அவருக்கு எழவேயில்லை. அவர் சிந்தனைகள் எல்லாம் விசேஷ மானஸ லிங்கத்தைப் பற்றியதாக இருந்தது....

குருஜி விசேஷ மானஸ லிங்கத்தைப் பற்றி முதலில் கேள்விப்பட ஆரம்பித்தது ஆன்மிகத் தேடல்களுடன் அவர் இமயமலைச் சாரல்களில் சுற்றிக் கொண்டிருந்த இளமைக் காலத்தில். அந்தக் காலத்தில் அதைப் பற்றிக் கேள்விப்பட்டதெல்லாம் அவருக்கும், உதயனுக்கும் கதை போல இருந்தது.

சித்தர்களால் உருவாக்கப்பட்டு அவர்களாலேயே பூஜிக்கப் பட்ட விசேஷ மானஸ லிங்கம் எல்லையில்லாத சக்திகளைக் கொண்டது என்றும், அவ்வப்போது ஒளிரும் தன்மை உடையது என்றும் அவர் அக்காலத்திலேயே கேள்விப்பட்டிருக்கிறார்.

முதலாம் ராஜாதி ராஜனின் அகால மரணத்தால் தான் விசேஷ மானஸ லிங்கத்தின் பெயர் ஓலைச்சுவடிகளில் இடம் பெற்றதே தவிர அதற்கு முன் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே சோழ மண்ணில் விசேஷ மானஸ லிங்கம் பூஜிக்கப்பட்டு வந்தது என்றும் அதை அடைய ஆசைப்பட்ட பலரும் பைத்தியம் பிடித்தோ, கொடிய வியாதிகள் வந்தோ, விபத்துக்கள் நேர்ந்தோ இறந்து போயிருக்கிறார்கள் என்றெல்லாம் சொல்லப்பட்டது.

இந்தியாவில் இது போன்ற மிகைப்படுத்தப்படும் கதைகளுக்குக் குறைவில்லை என்பதால் அவரும் உதயனும் அதற்கு அப்போது அதிக முக்கியத்துவம் தரவில்லை. திடீரென்று சோழ நாட்டில் இருந்து இடம் மாறி கைலாஷ் மலையருகே விசேஷ மானஸ லிங்கம் வந்திருக்கிறது, சித்தர்கள் அதை மறைவாக வைத்திருக்கிறார்கள் என்ற வதந்தி பரவ ஆரம்பித்தது. சிலர் கைலாஷ் மலையருகே இருக்கும் ரகசிய லிங்கம் விசேஷ மானஸ லிங்கம் அல்ல எல்லா நோய்களையும் போக்க வல்ல நவபாஷாண லிங்கம் என்று சொன்னார்கள்.

இந்த வதந்தியைக் கேள்விப்பட்டு இந்த இரண்டு லிங்கங்களில் எது கிடைத்தாலும் சரி என்று தேடிக் கொண்டு வந்த பல சாதுக்களை குருஜி பார்த்திருக்கிறார். ஒரு ஆர்வத்தில் அவரும், உதயனும் கூட கைலாஷ் மலைக்குப் போயிருக்கிறார்கள். போய் கிடைக்காத போது ஒரு பனி பெய்யும் இரவில் இருவரும் வயிறு வலிக்கச் சிரித்திருக்கிறார்கள். பின் அந்த வதந்திகள் நின்று போயின.

மறுபடி அவர் விசேஷ மானஸ லிங்கத்தைப் பற்றிக் கேள்விப்பட்டது உதயனைப் பிரிந்து சில வருடங்கள் கழித்து காசியில் கும்பமேளாவின் போது வந்த ஒரு அகோரி சாதுவிடம்.

*கங்கையில் மூழ்கி எழுந்தபடியே அந்த அகோரி சாது விசேஷ மானஸ லிங்கத்தைப் பற்றிச் சொன்னார்.*

*குருஜி கேட்டார். "அப்படி ஒரு லிங்கம் இருப்பது உண்மையா?"*

*அந்த சாது உறுதியாகச் சொன்னார். "உண்மை தான்"*

*"இப்போது எங்கே இருக்கிறது?"*

*"தெரியலை. ஆனால் அது சித்தர்கள் கட்டுப்பாட்டில் இருக்கிற வரைக்கும் வெளிப்படாது. இனி ஒரு காலம் வரும். சித்தர்கள் கட்டுப்பாட்டில் இருந்து கொஞ்சம் கொஞ்சமாக சாமானியர்களின் கட்டுப்பாட்டுக்கு வந்து கடைசியில் முழுவதுமாக சித்தர்கள் கட்டுப்பாட்டில் இருந்து அது விடுபடும். அப்போது அது தெரிய வேண்டியவர்களுக்குத் தெரியும். அது கலி முற்றின காலமாய் இருக்கும். அந்தக் காலத்தில் அது யார் கட்டுப்பாட்டுக்கு வர வேண்டும் என்று விதி இருக்கிறதோ தெரியவில்லை...."*

*குருஜி ஆவலோடு கேட்டார். "அந்தக் காலம் எப்ப வரும்?"*

*பதில் சொல்லாமல் அந்த அகோரி சாது கங்கையில் மூழ்கினார். எழுந்து பதில் சொல்வார் என்று எதிர்பார்த்த குருஜி ஏமாந்து போனார். அந்த சாது மூழ்கிய இடத்தில் இருந்து எழவில்லை. பிறகு அந்த சாதுவை குருஜி பார்க்கவில்லை. சற்று தள்ளிப் போய் எழுந்து போயிருக்க வேண்டும் என்று குருஜி எண்ணினார்.*

பின் அவர் அதைப் பற்றிக் கேள்விப்பட்டது தென்னரசு மூலமாக. நீலகண்ட சாஸ்திரிகள் எழுதிய ஆன்மிக பாரதம் புத்தகத்தைக் கொண்டு வந்து காட்டி தனக்கும் ஒரு ஒளிரும் லிங்கத்தைத் தெரியும் என்று தென்னரசு சொன்ன போது அந்த அகோரி சாது சொன்னபடியே தெரிய வேண்டியவர்களுக்கு தெரிவிக்கப் பட்டதாகவே குருஜி நம்பினார்.....

அன்று அவருக்குத் தன் குருவான சித்தர் சொன்னதும் நினைவுக்கு வந்தது. “சிகரத்தைத் தொடும் திறமை உள்ளவன் சராசரியாக இருந்து சாவது தான் உலகத்திலேயே அவன் செய்யக்கூடிய மிகப் பெரிய குற்றம்.”

அவர் சராசரியாக வாழ்ந்து மடிய மாட்டார்.....

**************

அன்று இரவு உறங்க முற்பட்ட போது சொல்லி வைத்தாற் போல் குருஜி, பாபுஜி, ஜான்சன் மூவருக்கும் கணபதியிடம் நீ தயார் தானே என்று கேட்டதற்கு சிவலிங்கம் ஒளிர்ந்தது நினைவுக்கு வர தூக்கம் போயிற்று. மூவருக்கும் அது சிவலிங்கம் சொன்ன பதிலாகவே தோன்றி மூவரும் அது தங்கள் பிரமையே என்று நினைத்து சமாதானப்படுத்திக் கொள்ள முயன்றார்கள். தற்செயலாக ஒளிர்ந்ததிற்கு என்னவெல்லாம் அர்த்தப்படுத்திக் கொள்கிறோம் என்று குருஜி தனக்குள் நினைத்து சிரித்துக் கொண்டார். ஜான்சன் அந்த சிவலிங்கம் ஒளிர வேண்டும் என்று எதிர்பார்த்ததன் விளைவு சில நிமிடங்கள் கழித்து நிகழ்ந்திருக்க வேண்டும் என்று அனுமானத்திற்கு வந்தார். ’ஸ்விட்ச் போட்டு சில சமயம் சிறிது நேரம் கழித்து பல்பு எரிவதில்லையா?’. பாபுஜி தன் தகப்பனாரின் அனாவசிய பயம் தன்னையும் தொற்றிக் கொண்டு விட்டது என்று நினைத்தார். அந்த சிவலிங்கம் அவ்வப்போது ஒளிர்வது அதன் இயல்பு. ஒவ்வொரு தடவை ஒளிர்வதும் அது பதில் சொல்கிற

*மாதிரி என்று எடுத்துக் கொள்வது முட்டாள் தனம் இல்லையா என்று கேட்டுக் கொண்டார். சிவலிங்கம் ஒளிர்வதை ஒதுக்கித் தள்ளிய போதும் அவர்களுக்கு உறக்கம் வரவில்லை. அதற்கு வேறு காரணங்கள் இருந்தன.*

*பரபரப்பு காரணமாக குருஜி தூங்கவில்லை. ஆராய்ச்சிகள் எப்படிப் போகும் என்ற பலவித சிந்தனைகள் காரணமாக ஜான்சன் தூங்கவில்லை. ரிஷிகேசத்தில் இருக்கும் உதயன் சுவாமி தமிழகத்தில் இருக்கும் இந்த வேதபாடசாலையில் மாந்திரிக சக்தியை வெளிப்படுத்த முடியுமா, முடியாதா என்ற கேள்விக்கு அறிவு மாறி மாறி பதில் அளித்துக் கொண்டே இருந்ததால் குழப்பத்தில் பாபுஜியும் தூங்கவில்லை. அன்று எந்தக் கவலையும், சிந்தனை ஓட்டமும், பரபரப்பும் இல்லாமல் படுத்துத் தூங்கியது கணபதி தான்.*

*அதிகாலை எழுந்து குளித்து பூஜை செய்யும் போது கணபதியின் மனநிலை மகனை முதல் நாள் பள்ளிக்கு அனுப்பும் தாயின் மனநிலையாக இருந்தது. சிவலிங்கம் தன்னை இந்த ஆராய்ச்சியில் நிரூபித்துப் பெயர் எடுக்க வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கி இருந்தது. சற்று தள்ளி ஜபம் செய்கிற சாக்கை வைத்துக் கொண்டு ஒரு மாணவன் உட்கார்ந்திருந்ததால் வாய் விட்டுப் பேச முடியாமல் மனதிற்குள் சிவனிடம் பேசினான்.*

*“பாரு குருஜி உன் மேல நிறைய நம்பிக்கை வச்சு தான் ஆராய்ச்சிக்கு ஏற்பாடு செய்திருக்கார். ஆராய்ச்சி செய்ய ஒருத்தர் அமெரிக்கால இருந்து வந்திருக்கார். இன்னொருத்தர் எல்லா செலவும் ஏத்துக்கறதா சொல்லி இருக்கார். நீ உன்னோட முழு சக்தியையும் காட்டிடணும் புரியுதா? அவங்க எல்லாரும் அசந்து போகணும்.... அப்ப தான் உன் பேர் உலகம் முழுசும் பரவும். உன்*

*பிள்ளைக்கும் பெருமையா இருக்கும்... அப்ப நான் கூட பெருமையா சொல்லிக்குவேன். "நான் கூட சில நாள் அந்த சிவலிங்கத்துக்குப் பூஜை செய்திருக்கேன்"னு. ஆனா அப்ப நீ "நீ எந்த லட்சணத்துல பூஜை செய்திருக்கேன்னு தெரியாதா. மந்திரமும் சரியா சொல்லலை. சீடை கிடைச்சப்ப என்னை மறந்து அதை சாப்பிட்டு மெய் மறந்தவன் தானே"ன்னு கேட்டுடக் கூடாது. நான் அப்பவே உன் கிட்ட மன்னிப்பு கேட்டிருக்கேன். அதை மறந்துடாதே....."*

*சொல்லிக் கொண்டிருக்கும் போதே திடீர் என்று ஒரு நினைவு வந்து அவனுக்கு வாய் விட்டுச் சிரிக்கத் தோன்றியது. சிரித்தான். ஜபம் செய்து கொண்டிருந்த மாணவன் கணபதியை ஒரு மாதிரி பார்த்தான். கணபதி சிரிப்பைக் கட்டுப்படுத்திக் கொண்டான்.*

*பின் சிரித்த காரணத்தை சிவனிடம் மனதிற்குள் சொன்னான். "இனி சீடையை சாப்பிடறப்ப எல்லாம் உன் ஞாபகம் தான் எனக்கு வரும் பாரு"*

*காலை ஐந்தரை மணிக்கு குருஜி வந்தார். "கணபதி கிளம்பலாமா? நீ தயார் தானே?" என்று கேட்டு விட்டு சிவலிங்கத்தை அவர் பார்த்தார். சிவலிங்கம் இப்போது ஒளிரவில்லை. குருஜிக்கு திருப்தியாக இருந்தது.*

*கிளம்பத் தயாரானார்கள்.*

# ***<u>அத்தியாயம் - 65</u>***

*வெளியே லேசாகப் பனி பெய்து கொண்டிருந்தது.*

மூன்று கார்கள் தயார் நிலையில் வேதபாடசாலையின் பின்பகுதியில் நின்று கொண்டிருந்தன. ஒன்று பாபுஜியின் கார். மற்றொன்று ஜான்சன் ஒரு மாத வாடகைக்கு எடுத்திருந்த கார். மற்றொன்று குருஜியின் கார்.

விசேஷ மானஸ லிங்கத்தை குருஜியின் காரிலேயே கொண்டு போவது என்று தீர்மானித்திருந்தார்கள். குருஜியின் டிரைவர் அவரிடம் முப்பது வருடங்களுக்கு மேலாக வேலை செய்கிறான். நம்பிக்கைக்குரியவன். அந்தக் காரில் கணபதி சிவலிங்கத்துடன் செல்வது என்றும் குருஜி பாபுஜியின் காரில் செல்வது என்றும் முடிவு செய்யப்பட்டிருந்தது.

வேதபாடசாலை ஒரு தெருவின் கடைசியில் இருந்தது. அதற்குப் பின் வழியோ, வேறு வழிகளோ இல்லை. வேதபாடசாலையின் முகப்பு, நடக்கப் போகும் நிகழ்ச்சிக்கான அறிகுறிகள் எதையும் காண்பிக்காமல் அமைதியாக இருந்தது. அதிகாலையின் வேதகோஷங்கள் கேட்ட வண்ணம் இருந்தது.

பாபுஜி தான் நியமித்திருந்த டிடெக்டிவ் ஏஜென்சி நபரிடம் இப்போது கண்காணிக்கும் போலீஸ் ஆட்கள் எத்தனை பேர், அவர்கள் எங்கெங்கு இருக்கிறார்கள் என்று கேட்டார். வேதபாடசாலையின் மெயின் கேட்டில் இருந்து ஐம்பது அடி தூரத்தில் பைக்கில் சாய்ந்து கொண்டு பத்திரிக்கை படித்துக் கொண்டு ஒருவன் இருப்பதாகவும், இருநூறாவது அடி அருகில் வலது பக்கம் உள்ள ஒரு கட்டிடத்தின் மொட்டை மாடியில் பைனாகுலர் வைத்துக் கொண்டு ஒருவன் நிற்பதாகவும், வேதபாடசாலை உள்ள தெரு முடிந்து மெயின் ரோட்டுடன் இணையும் இடத்தில் ஒருவன் பைக்கில் இருப்பதாகவும் அவன் மூலம் தெரிந்தது.

கணபதி தயாராக இருக்கிறான் என்பதை அறிந்து கொண்டு வெளியே வந்த  குருஜியிடம் பாபுஜி அந்தத் தகவலைச் சொன்ன போது குருஜி தலையசைத்தார். பாபுஜிக்குத் தான் பரபரப்பு தாங்கவில்லை. அந்த உதயன் சுவாமி என்ன மேஜிக் செய்வார் என்ற ஆர்வமும், அவரால் ஏதாவது செய்ய முடியுமா என்ற சந்தேகமும் அந்த நேரத்திலும் பாபுஜிக்கு இருந்தது.

மற்ற ஏற்பாடுகளையும் ஒரு முறை மேற்பார்வை பார்த்து விட்டு குருஜி தன் நண்பன் உதயனை நினைத்துக் கொண்டார். ’நாங்க கிளம்பப் போகிறோம் உதயா”

ஜான்சனையும், பாபுஜியையும் பார்த்துத் தலையசைத்த குருஜி தன் காரை சிவலிங்கம் இருக்கும் கட்டிட வாசலுக்குக் கொண்டு வர உத்தரவிட்டு விட்டு கணபதியிடம் போய்ச் சொன்னார். “நல்லா கடவுளை வேண்டிகிட்டு சிவலிங்கத்தை எடுத்துக்கோ”.

கணபதி முதலில் பிள்ளையாரை நினைத்து மானசீகமாய் வணங்கி விட்டு பின் சிவலிங்கத்தையும் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி விட்டு சிவலிங்கத்தைத் தூக்கினான். சிவலிங்கம் கனத்தது.

குருஜி அவன் முகத்தைப் பார்த்தே புரிந்து கொண்டு கேட்டார். “ரொம்பவே கனக்குதா கணபதி? தூக்கிட்டு வர முடியும் இல்லையா?”

”அப்படி ஒன்னும் பெரிய கனமில்லை. தாராளமா தூக்கிட்டு வர முடியும்” என்று சொன்ன கணபதி மனதிற்குள் சிவனிடம் சொல்லியபடியே நடக்க ஆரம்பித்தான். “என்ன இப்படி கனக்கிறே?

என் மானத்தை வாங்கிடாதே. மூச்சு வாங்குது. நான் என்ன பயில்வானா?"

திடீரென்று சிவலிங்கம் கனம் குறைந்த மாதிரி இருந்தது. கணபதி புன்னகைத்தான். "சமத்து". பின் அதற்கு அறிவுரையும் சொன்னான். "இப்படியே தான் அவங்க ஆராய்ச்சி செய்யறப்பவும் சமத்தா இருக்கணும் சரியா?"

காரில் சிவலிங்கத்துடன் கணபதி உட்கார்ந்து கொண்டான். வெளியே பனிமூட்டம் அதிகமாக ஆரம்பித்தது. குருஜி முன்புற மெயின் கேட்டைத் திறந்து வைக்க உத்தரவிட ஒருவனுக்கு சைகை செய்தார்.

முதலில் பாபுஜியின் கார் செல்ல சிவலிங்கம் இருந்த குருஜியின் கார் பின் தொடர அதற்கும் பின்னால் ஜான்சன் கார் சென்றது. மூன்று கார்களும் வேதபாடசாலையின் மெயின் கேட்டை அடைந்த போது மெயின் கேட்டே பனிமூட்ட இறுக்கத்தால் மெல்லியதாய் தான் தெரிந்தது.

பாபுஜியின் டிரைவருக்கு முன்புறம் நான்கடிகள் மட்டும் வழி நன்றாகத் தெரிந்தது. கார்கள் வெளியேறின.

திடீரென்று பனிமூட்டம் அதிகமாகியதால் முதலில் பைக்கில் இருந்த போலீஸ்காரனுக்கும் சில அடிகள் தள்ளி ஒரு மொட்டை மாடியில் பைனாகுலரை வைத்துக் கொண்டு நின்றிருந்த அடுத்தவனுக்கும் ஒரு கணம் ஒன்றும் புரியவில்லை. மெயின் கேட் திறந்ததும், கார்கள் வெளியே வந்ததும் ஏக காலத்தில் நிகழ்ந்திருந்தன. வேதபாடசாலையையும், அங்கு குருஜி இருந்தால்

அவர் நடவடிக்கைகளையும் கண்காணிக்கிற வேலையை ஏற்று முந்திய நாள் மாலையில் தான் வந்த அவர்களுக்கு வெளியே வரும் கார்களில் குருஜி இருக்கிறாரா இல்லையா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

ஆனாலும் முதலாம் போலீஸ்காரன் பைக்கில் பின் தொடர எண்ணி ஸ்டார்ட் செய்தான். பைக் ஸ்டார்ட் ஆக மறுத்தது. உடனடியாக அவன் தெருக்கோடியில் இருந்த தன் சகாவிற்குப் போன் செய்தான். அவன் அங்கே போன் எடுத்த போது பனிமூட்டம் மிக அதிகமாக இருந்தது. கார் விளக்கொளி அவன் அருகே லேசாகத் தெரிந்தது. அவன் போன் எடுத்து ”ஹலோ” சொன்ன போது டவர் கிடைக்காததால் சத்தம் எதுவும் கேட்கவில்லை. சில ஹலோக்களுக்கு பதில் எதுவும் இல்லாமல் போகவே உள்ளுணர்வு உந்த அவன் பைக்கை ஸ்டார்ட் செய்தான். அதற்குள் மூன்று கார்களும் அவனைக் கடந்திருந்தன.

பனி அவனை மேலும் நன்றாக மூட அவனுக்கு சுத்தமாக எதையும் பார்க்க முடியவில்லை. தெருக்கோடியில் பனிப்புகை குவியலாக இருந்ததே ஒழிய அதைக் கடந்த பின் சுத்தமாகப் பனி இருக்கவில்லை. தெருக்கள் தெளிவாகத் தெரிந்தன. மெயின் ரோட்டில் போய்க் கொண்டிருந்தவர்கள் அந்தக் குறிப்பிட்ட பகுதியில் மட்டும் பனி மூடிக் கொண்டிருந்ததை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள்.

பாபுஜி நம்ப முடியாமல் பிரமிப்புடன் குருஜியைப் பார்க்க குருஜி புன்னகைத்தார். ஜான்சனும் இந்த அற்புதக் காட்சியில் பிரமிப்பில் ஆழ்ந்திருந்தார்.

வேதபாடசாலை இருந்த தெருக்கோடியில் இரண்டு நிமிடங்கள் நீடித்த பனி மெல்ல விலக ஆரம்பித்தது… எல்லாம் தெளிவாகத் தெரிய ஆரம்பித்த போது சிவலிங்கம் நிறைய தூரம் சென்றிருந்தது.

**************

பார்த்தசாரதிக்குத் தகவல் வந்த போது காலை மணி 6.06. எல்லாவற்றையும் கேள்விப்பட்ட அவருக்கு ஏமாற்றமாக இருந்தது. ஈஸ்வர் சொன்னது போல் அந்த சிவலிங்கம் வேதபாடசாலையில் இருந்திருந்தால் கண்டிப்பாக இப்போது வெளியே போன கார்களில் அது இருந்திருக்கும் என்பது புரிந்தது. வெளியே போன கார்களின் எண்களைக் கூட போலீஸ்காரர்களால் பார்க்க முடிந்திருக்கவில்லை. குருஜியின் சொந்தக் காரும் அதில் இருந்திருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம். குருஜி சம்பந்தப்படாமல் வேறு நபர் சம்பந்தப் பட்டிருந்தால் போலீஸ் கண்ட்ரோல் ரூமிற்குப் போன் செய்து அந்த சுற்று வட்டாரத்தில் அவர் கார் இருக்கின்றதா என்று பார்த்து பின் தொடரச் சொல்லி இருக்கலாம். ரகசியமாய் செய்ய வேண்டிய இந்த சூழ்நிலையில் அதுவும் முடியாது. பார்த்தசாரதி பெருமூச்சு விட்டார். ஆரம்பத்தில் இருந்தே இந்த வழக்கில் எதுவும் சாதாரணமாய் இல்லை….

**************

ஆனந்தவல்லி மகனிடம் கேட்டாள். “ஏண்டா, தென்னரசு பொண்ணு விஷாலியைப் பத்தி என்ன நினைக்கிறே?”

பரமேஸ்வரன் அவளைப் பற்றி பெரிதாகத் தெரிந்து வைத்திருக்கவில்லை. ஆனாலும் நல்ல பெண்ணாகத் தான் அவள் தெரிந்தாள். தாயிடம் சொன்னார். “நல்ல பொண்ணு தான். ஏன் கேட்கிறே?”

“ஈஸ்வர் அந்தப் பொண்ணைக் காதலிக்கிறான்” ஆனந்தவல்லி அறிவித்தாள்.

பரமேஸ்வரன் சிறிது யோசித்து விட்டுச் சொன்னார். “அந்தப் பொண்ணு இங்க வந்தப்ப அவள் கிட்ட அவன் பேசின மாதிரி கூடத் தெரியலையே”

”அவங்களுக்குள்ளே ஏதோ சண்டை மாதிரி தெரியுது”

“அந்தப் பொண்ணு கூட ஒரு நாளோ ரெண்டு நாளோ தான் ஈஸ்வர் பழகி இருப்பான் போலத் தெரியுது. நீ என்னடான்னா அதுக்குள்ளே காதலுன்னும் சொல்றே, சண்டைன்னும் சொல்றே”

“காதலிக்கவும், சண்டை போடவும் இந்தக் காலத்துல ரெண்டு நாளே அதிகம் தான்...”

ஆனந்தவல்லியின் பார்வை கூர்மையானது. அவள் பார்வைக்கு அவ்வளவு சுலபமாக எதுவும் தப்பாது. அதனால் அவள் சொல்வது உண்மையாகவும் இருக்கலாம் என்று நினைத்த பரமேஸ்வரனுக்கு இப்போது தான் அந்தப் பெண்ணிடம் ஆனந்தவல்லி நிறைய நேரம் பேசிக் கொண்டிருந்தது ஏன் என்பது புரிந்தது. அவர் புன்னகைத்தார்.

“நீ மெல்ல அவன் கிட்ட என்ன பிரச்சினைன்னு கேட்டுப் பார்” என்றாள் ஆனந்தவல்லி.

*பரமேஸ்வரன் தர்மசங்கடத்துடன் கேட்டார். "நானெப்படி அதைக் கேட்கிறது?"*

*"நீயும் அவனும் தான் இப்ப நகமும் சதையுமா ஆயிட்டீங்களே. கேட்டுப்பார். சொன்னாலும் சொல்வான். நான் கேட்டா சொல்ல மாட்டான்...."*

*பரமேஸ்வரன் உறுதியாய் சொன்னார். "அதெல்லாம் அவங்கவங்க தனிப்பட்ட விஷயம். அதில் எல்லாம் நாம தலையிடக் கூடாது. எனக்கு சங்கர் விஷயத்தில் தலையிட்டதிலயே பெரிய பாடம் கிடைச்சுடுச்சு. உண்மையாகவே காதலிச்சாங்கன்னா தானா சரியாயிடுவாங்க. இல்லைன்னா அவங்க நிஜமா காதலிக்கலைன்னு அர்த்தம்"*

*ஆனந்தவல்லி சொன்னாள். "அவங்க கல்யாணம் செய்துகிட்டு குழந்தை ஒன்னைப் பெத்துக் குடுத்தா அதுகூட கொஞ்ச நாள் இருந்துட்டுக் கண்ணை மூடலாம்னு பார்க்கறேன். அவங்க தானா சரியாகிறது எப்ப, நான் ஆசைப்படறது எல்லாம் நடக்கிறது எப்ப?"*

*பரமேஸ்வரன் கிண்டலாகத் தாயிடம் கேட்டார். "அப்படின்னா உனக்கு இப்ப சாகிற உத்தேசம் இல்லை?"*

*ஈஸ்வர் வந்த பிறகு எல்லோரும் கிண்டல் செய்யப் பழகி விட்டார்கள் என்று நினைத்தபடி ஆனந்தவல்லி மகனிடம் உறுதியாய் சொன்னாள். "இல்லை."*

*சிறிது சிந்தனைக்குப் பிறகு பரமேஸ்வரனிடம் சொன்னாள். "உன் பொண்ணு கிட்ட கூட அவன் நிறையவே பிரியமாய்*

இருக்கான். அவ கேட்டா மனசு விட்டுச் சொன்னாலும் சொல்வான். ஆனா உன் பொண்ணுக்குச் சொல்லி புரிய வைக்கிறதே கஷ்டம். அது மண்ணு மாதிரி. அதுக்கு நெளிவு சுழிவு பத்தாது”

மகளைச் சொன்னவுடன் பரமேஸ்வரன் ஆனந்தவல்லியை முறைத்தார். “இருக்கிறதைச் சொன்னா ஏண்டா முறைக்கிறே”

அன்று காலை சாப்பிடும் போது மகேஷைத் தவிர அனைவரும் இருந்தார்கள். ஈஸ்வர் மகேஷைக் கேட்க பரமேஸ்வரன் சொன்னார். “அவன் ஃப்ரண்ட்ஸ் எல்லாம் கோவா போறாங்களாம். அப்படியே ஷிர்டி, சனி சிக்னாப்பூர் எல்லாம் போயிட்டு வர்றாங்களாம். ஒரு வார டூராம். நானும் போகட்டுமான்னு கேட்டான். போயிட்டு வான்னேன்....”

ஆனந்தவல்லி ஈஸ்வரைப் பார்த்தபடியே மீனாட்சியிடம் கேட்டாள். “ஏண்டி அந்தப் பொண்ணு விஷாலி எப்படி இருக்கா?”

ஈஸ்வர் சலனமே இல்லாமல் அவளைப் பார்த்தான்.

மீனாட்சி சொன்னாள். “நல்லா இருக்கா. காலைல தான் பேசினேன். அவளோட அப்பாவும் இன்னைக்குக் காலைல தான் எதோ வேலையா டெல்லிக்குக் கிளம்பிப் போனாராம்... வர அஞ்சாறு நாளாகுமாம்”

“ஏண்டி அப்ப அந்தப் பொண்ணு அங்கே தனியாவா இருக்கு”

“ஆமா. பின்ன வேற யார் இருக்கா அவங்க வீட்டுல”

“பேசாம நம்ம வீட்டுக்கு வந்து தங்க வேண்டியது தானே.” என்று ஆனந்தவல்லி சொல்ல மீனாட்சி பேராச்சரியத்துடன் பாட்டியைப் பார்த்தாள்.

ஆனந்தவல்லி சொன்னாள். “நீ போன் பண்ணிக் கூப்பிடு. இல்லாட்டி போன் பண்ணி என் கிட்ட குடு. நான் பேசறேன்”

ஈஸ்வருக்கு பாதிப்பே இல்லாமல் இருக்க முடியவில்லை. எரிச்சலுடன் ஆனந்தவல்லியைப் பார்த்தான். ஆனந்தவல்லி அவனைப் பொருட்படுத்தவில்லை.

மீனாட்சி விஷாலிக்குப் போன் செய்தாள். “ஹலோ விஷாலி.... எப்படி இருக்கே?... நீ தனியா அங்கே இருக்கறதுக்கு பேசாம இங்கேயே வந்து தங்கிடலாமேன்னு பாட்டி சொல்றாங்க....”

பின் விஷாலி சொன்னதைக் கேட்டு விட்டு மீனாட்சி பாட்டியிடம் சொன்னாள். “அவ வரலைங்கறா...”

ஆனந்தவல்லி பரமேஸ்வரனை அர்த்தமுள்ள பார்வை பார்த்தாள். ‘இது தான் உன் பொண்ணு. சொன்னா கோவிச்சுக்கறே.’ பின் மீனாட்சியிடம் இருந்து போனை வாங்கி தானே பேசினாள். ”ஏம்மா வர தயக்கப்படறே. இது புது இடமா என்ன? இது உன் வீடு மாதிரி. காலம் கெட்டுக் கிடக்கு. ஒரு நாள் ரெண்டு நாள்னாலும் பரவாயில்லை. உங்கப்பா திரும்பி வர அஞ்சாறு நாள் ஆகும்னு மீனாட்சி சொல்றா. உடனே கிளம்பி வா. சொல்றேன்..”

விஷாலி என்ன சொல்வது என்று யோசித்து விட்டு சொன்னாள். “இங்கே அக்கம் பக்கத்துல எல்லாம் நல்ல ஆள்கள் இருக்காங்க. பயமில்லை பாட்டி”

“ஏம்மா. என் வயசுக்காவது மரியாதை தர வேண்டாமா? இத்தனை வயசானவ கூப்பிடறேன்.....”

பேச்சு இந்த வகையில் போவதைப் பார்த்து தர்மசங்கடப்பட்ட விஷாலி வேறு ஒரு உபாயம் கண்டுபிடித்துச் சொன்னாள். “அப்பா எதாவது சொல்வார் பாட்டி”

“அதானா பிரச்னை. உங்கப்பன் கிட்ட நான் பேசறேன் விடு” என்று சொல்லி விட்டு போனை மீனாட்சியிடம் கொடுத்து ”தென்னரசுக்குப் போன் போடும்மா” என்றாள்.

ஈஸ்வர் எரிச்சலுடன் ஆனந்தவல்லியைக் கேட்டான். “என்ன அவள் மேல அப்படி ஒரு திடீர் அக்கறை உங்களுக்கு. இதுக்கு முன்னாடி இப்படி இருக்கலையே”

ஆனந்தவல்லி சளைக்காமல் பதில் சொன்னாள். “காலம் மாறுறப்ப நாமளும் மாறுறோம். ஒரு காலத்துல நீ உன் தாத்தா கிட்ட கோவமா இருந்தே. இப்ப உங்க ரெண்டு பேரையும் தனியா பார்க்கறதே அபூர்வமா இருக்கு. அந்த மாதிரி தான் இதுவும்னு வச்சுக்கோயேன்”

மீனாட்சி போன் செய்த போது தென்னரசு அந்த போலீஸ்காரன் கண்ணில் இருந்து தப்பித்திருந்தார். குருஜி சொன்னபடி கார் சரியான சமயத்தில் அவர் வீட்டுக்கு வந்திருந்தது.

அவர் காருக்கும் பின் தொடர்ந்த போலீஸ்காரனுக்கும் இடையில் சிறிது தூரத்திலேயே குறுக்காக ஒரு லாரி வந்து ப்ரேக் டவுனாகி சாலையை அடைத்துக் கொண்டு நின்றது. தென்னரசுவை அந்தக் கார்க்காரன் சில அடிகள் தூரத்தில் வேறொரு காரில் ஏற்றி விட தென்னரசு பிரச்னை இல்லாமல் பயணித்துக் கொண்டிருந்தார். போனை எடுத்துப் பேசினார். “ஹலோ”

“ஹலோ அண்ணா, நான் மீனாட்சி பேசறேன். எங்க பாட்டி பேசணும்கிறாங்க. ஒரு நிமிஷம்...”

தென்னரசுவிற்கு ஒரு கணம் ஒன்றும் புரியவில்லை. ஆனந்தவல்லி என்றுமே அவரிடம் பேசியவள் அல்ல.

ஆனந்தவல்லி பேசினாள். “தென்னரசு சவுக்கியமா? நீ வெளியூர் போய் உன் மகள் தனியா அங்கே இருக்கிறான்னு மீனாட்சி சொன்னா. இந்தக் காலத்துல வயசுப்பொண்ணு, அதுவும் அழகான பொண்ணு” (சொன்ன போது ஈஸ்வரைப் பார்த்தாள்) தனியா இருக்கறது பாதுகாப்பில்லை, எங்க வீட்டுக்கே வந்துடுன்னு உன் பொண்ணு கிட்ட சொன்னேன். அப்பா சொல்லாமல் வர மாட்டேன்கிறாள். அதான் உனக்கு போன் செஞ்சேன். நீயே உன் பொண்ணு கிட்ட சொல்லி இங்கே அனுப்பி வை”

தென்னரசு எத்தனையோ முறை வெளியூர் சென்றிருக்கிறார். விஷாலி எத்தனையோ நாள் தனியாக இருந்திருக்கிறாள். அப்போதெல்லாம் இல்லாமல்.... “பரவாயில்லை பாட்டி. உங்களுக்கு ஏன் வீண் சிரமம்”

“சிரமம் எல்லாம் இல்லை. இந்த வீடு உனக்கென்ன அன்னியமாப்பா. டவுசர் போட்டிருந்த காலத்துல இருந்து இங்கே வந்துகிட்டிருந்தவன் தானே நீ. சொன்னதைக் கேள். போன் செஞ்சு சொல்லி அவளை அனுப்பி வை. சரியா” பதிலுக்குக் காத்திருக்காமல் ஆனந்தவல்லி வைத்து விட்டாள்.

தென்னரசுவிற்கு ஒன்றும் புரியவில்லை. இத்தனை தூரம் சொன்ன பிறகு என்ன செய்வது. மேலும் இப்போது வரும் செய்திகளைப் பார்க்கையில் தனியாக விஷாலி இருப்பது பாதுகாப்பில்லை தான். மகளுக்குப் போன் செய்து ஆனந்தவல்லி போன் செய்ததைச் சொன்னார்.

“போங்கப்பா. நான் போகலை”

“அந்தக் கிழவி என்னை டவுசர் போட்ட காலம் வரைக்கும் இழுத்துகிட்டு போயிடுச்சு. உன்னை அனுப்பற வரைக்கும் என்னை விடாதும்மா. மீனாட்சி ஆண்ட்டி வீட்டுல இருக்கறதுல என்ன பிரச்னைம்மா. போய் இரு. இவ்வளவு தூரம் சொன்னப்பறம் உன்னை அனுப்பாமல் இருக்க நான் என்ன காரணம் சொல்ல முடியும், யோசிச்சுப் பார்”

அடுத்த ஐந்தாவது நிமிடம் விஷாலிக்கு ஆனந்தவல்லியின் போன் வந்தது.

வேறு வழியில்லாமல் விஷாலி சொன்னாள். “அப்பா சொல்லிட்டார். நான் வர்றேன் பாட்டி.”

*“நல்லது. வாம்மா. நான் உன்னைக் கூட்டிகிட்டு வர ஈஸ்வரை அனுப்பறேன்”*

*ஈஸ்வருக்குப் பொறுமையைத் தக்க வைத்துக் கொள்வது பெரும்பாடாக இருந்தது.*

*விஷாலி அவசர அவசரமாக மறுத்தாள். ”வேண்டாம் பாட்டி. அவருக்கு எதுக்கு வீண் சிரமம். அவருக்கு எத்தனையோ வேலை இருக்கும். நானே வந்துக்கறேன்”*

*“அவனுக்கு ஒரு வேலையும் இல்லை. வருவான். வைக்கட்டா”*

*ஈஸ்வர் ஆனந்தவல்லி மீது எரிந்து விழுந்தான். “நான் எனக்கு எந்த வேலையும் இல்லைன்னு உங்க கிட்ட சொன்னேனா?”*

*“உனக்கு என்ன வேலைடா இருக்கு?”*

*“ம்ம்... பார்த்தசாரதி என்னை அவசரமாய் வரச் சொல்லி இருக்கார்”*

*“அந்த ஆளை முதல்ல என்னை வந்து பார்க்கச் சொல்லு. உன் பெரிய தாத்தாவைக் கொன்னவங்களைக் கண்டுபிடிக்கச் சொன்னா அந்த ஆள் உன் கிட்ட பேசிப் பொழுதைக் கழிக்கிறான்...”*

*ஈஸ்வருக்கு இந்தப் பாட்டியை எப்படி சமாளிப்பது என்று தெரியவில்லை.*

*ஆனந்தவல்லி கேட்டாள். "பைக்குல போறியா, கார்ல போறியா?"*

*ஈஸ்வர் அவளைக் கடுகடுப்பாகப் பார்த்தான். ஆனந்தவல்லி அசராமல் கேட்டாள். "மகேஷ் இருந்திருந்தா அவனை அனுப்பிச்சிருப்போம். அவன் இல்லாததால தான் உன் கிட்டே சொல்றேன். உனக்கு ஒன்னும் அவள் கிட்ட சண்டை இல்லையே"*

*"எனக்கு அவள் கிட்ட சண்டை போட என்ன இருக்கு?" என்ற ஈஸ்வர் அங்கே இனியும் சிறிது நேரம் இருந்தால் வெடித்து விடுவோம் என்று தோன்ற அங்கிருந்து கிளம்பித் தன்னறைக்குச் சென்றான்.*

*பரமேஸ்வரன் தாயிடம் சிரித்துக் கொண்டே சொன்னார். "நீ அவன் பொறுமையை நிறையவே சோதிக்கிறே. கண்டிப்பா ஒரு நாள் உன் கழுத்தைப் பிடித்து அவன் நெறிக்கப் போறான்"*

*ஆனந்தவல்லி கவலைப்படாமல் சொன்னாள். "அவன் கிடக்கிறான் சின்னப் பையன். நான் எத்தனைய பார்த்துருப்பேன்...."*

# அத்தியாயம் - 66

*கணபதியும் ஒரு இடத்தில் புகையாய் பனி மூடி இருந்ததையும், அதற்குப் பக்கத்திலேயே தெளிவாக இருப்பதையும் கவனித்தான். "என்ன க்ளைமேட் இப்படி ஒவ்வொரு இடத்துல ஒவ்வொரு*

*மாதிரியா இருக்கு. இப்படி க்ளைமேட் இருந்தா வியாதிகள் ஜாஸ்தியா வரும்னு எங்கம்மா சொல்வா" என்றான்.*

*டிரைவர் எதுவும் சொல்லவில்லை. அவர் கைகள் அவரையும் அறியாமல் லேசாக நடுங்கின. இது போன்ற காட்சிகளை அவர் இது வரைக்கும் கண்டதில்லை.*

*பயணம் செய்யும் போது தூங்கும் பழக்கம் கொண்ட கணபதி இன்று சிவலிங்கத்தைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு தூங்கக் கூடாது என்று வைராக்கியமாக இருந்தான். சீடை சமாச்சாரம் போல எப்போதுமே கட்டுப்பாடில்லாதவனாகி விடக் கூடாது என்று சொல்லிக் கொண்டான். அது கஷ்டமாகத் தான் இருந்தது. டிரைவர் பேசுகிற ரகமாக இருந்தால் நன்றாக இருந்திருக்கும் என்று தோன்றியது... ஆனாலும் சாதித்துக் காட்டிய திருப்தி கார் நின்ற போது அவனுக்கு வந்தது. அப்பாடா!*

*குருஜி கணபதியிடம் வந்து சொன்னார். "கணபதி, இந்தக் கட்டிடத்துக்குள்ளே தான் ஆராய்ச்சிகள் நடக்கப் போகுது. ஆராய்ச்சி நடக்கிற இடத்துல அமைதி ரொம்ப முக்கியம். உள்ளே தேவை இல்லாமல் ஒரு வார்த்தை கூட பேசக் கூடாது. ஆராய்ச்சில கலந்துக்கறவங்க மூணு பேர் உள்ளே தியானம் செய்துகிட்டு இருக்காங்க. அவங்க கிட்டே உள்ளே அதிகம் பேசக் கூடாது.... பேச்சு அவங்க தியான நிலையைக் கலைச்சுடும். தியான நிலை கலைஞ்சுதுன்னா நம்ம ஆராய்ச்சியும் நின்னு போயிடும்..."*

*கணபதி பயபக்தியுடன் தலையாட்டினான்.*

குருஜி கணபதியிடம் சற்று தொலைவில் இருந்த கட்டிடத்தைக் காட்டிச் சொன்னார். ”அங்கே தான் நம்ம எல்லாருக்கும் தங்க ரூம்கள் இருக்கு. உனக்கும் தனியா ரூம் இருக்கு. அங்கே சவுகரியங்கள் எல்லாம் எப்படி இருக்குன்னு அப்புறமா பார்த்துச் சொல்லு. எதாவது கூடுதலாய் தேவைன்னா கூச்சப்படாமல் சொல்லு. உடனே அதற்கு ஏற்பாடு செய்யறேன். அங்கே நீ எப்படி வேணும்னாலும் பேசிக்கலாம். எந்தப் பிரச்சினையும் இல்லை. இங்கே ஆராய்ச்சி மண்டபத்துல மட்டும் அமைதியை பாதுகாக்கணும். சரியா?”

கணபதி மறுபடி தலையாட்டினான். ’இத்தனை பெரிய மனிதர் என் சவுகரியத்தைப் பத்திக் கவலைப்படறாரே. இந்த ஏழைக்கு அத்தனை தகுதி இருக்கா? எனக்குத் தனியா ரூமே தேவை இல்லையே. ஒதுக்குப் புறமா ஒரு பொது இடம் இருந்தாலே நான் திருப்தியாய் இருந்துக்குவேனே’

தென்னரசுவும் மகேஷும் சற்று தள்ளி நின்றிருந்தார்கள். குருஜி பெயர் சொல்லாமல் அவர்களை அறிமுகப்படுத்தினார். “அவங்க ரெண்டு பேரும் ஆராய்ச்சில நமக்கு உதவறதுக்காக வந்திருக்காங்க...”

கணபதி மரியாதையுடன் கை கூப்பினான். தென்னரசு கை கூப்பினார். மகேஷிற்கு கணபதியை சுத்தமாய் பிடிக்கவில்லை. ’சரியான பட்டிக்காடு’ என்று நினைத்துக் கொண்டான். அதனால் கை கூப்பும் சிரமத்தை அவன் எடுத்துக் கொள்ளவில்லை. ஈஸ்வருக்குப் பிடித்திருக்கிற நபர் என்பதே அவன் வெறுக்கப் போதுமான காரணமாக இருந்தது.

கணபதிக்கு மனிதர்களின் அலட்சியங்கள் பழகிப் போனவை. அதனால் அதை அவன் தவறாக நினைக்கவில்லை.

”நல்லா வணங்கிட்டு சிவலிங்கத்தை எடுத்துக்கோ” என்று குருஜி சொன்னார்.

கணபதி கைகூப்பி வணங்கினான். ‘அப்போ கனக்காதது மாதிரியே சமத்தா இருக்கணும் சரியா’ என்று மனதிற்குள் சொல்லி சிவலிங்கத்தைத் தூக்கிக் கொண்டான். சிவலிங்கம் அதிகமாய் கனக்கவில்லை. குழந்தையைத் தூக்கிக் கொண்டு போகும் தாய் போல பெருமிதப் புன்னகையுடன் கணபதி சிவலிங்கத்தைத் தூக்கிக் கொண்டு போனான். மற்றவர்கள் சிறிது இடைவெளியில் பின் தொடர்ந்தார்கள்.

ஆராய்ச்சிக்கூடமான தியான மண்டபம் மெலிதான ஓங்கார மந்திரத்தில் மூழ்கிக் கிடந்தது. சிவலிங்கத்துடன் உள்ளே போன கணபதி அங்கிருந்த பலவித கருவிகளையும், காமிராக்களையும் பார்த்து அசந்து போனான்.

குருஜி மௌனமாகச் சுட்டிக் காட்டிய இடத்தில் கணபதி சிவலிங்கத்தைப் பயபக்தியுடன் வைத்தான். வைத்து விட்டு சுற்றும் முற்றும் பிரமிப்புடன் பார்த்தான். அந்தப் பிரமிப்பு குறையாமல் அவன் குருஜியிடம் சைகையில் கேட்டான். “இதெல்லாம் இந்த சிவனுக்காகத் தானா?”

குருஜி புன்னகையுடன் தலையசைக்க கணபதிக்குப் பெருமையாக இருந்தது. சிவனிடம் மானசீகமாக பெருமிதத்துடன் கேட்டான். “உனக்காக என்ன எல்லாம் வாங்கி வச்சிருக்காங்க

பார்த்தாயா?" அவனுக்கு அதெல்லாம் சிவனைப் பெருமைப்படுத்தும் விஷயங்களாகத் தெரிந்தன. சிவனை உலகிற்குப் பிரபலப்படுத்தப் போகும் கருவிகளாகத் தெரிந்தன.

குருஜியை அவன் நன்றியுடன் பார்க்க குருஜி தன்னை அறியாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டார். பின் அவனை சைகையால் அழைத்துக் கொண்டு போய் ஒரு ஓரமாக நின்றிருந்த அலெக்ஸி, கியொமி, ஹரிராம் மூவருக்கும் மெல்லிய குரலில் வெறும் பெயர் அறிமுகம் செய்து வைத்தார். அவனையும் அவர் வெறும் கணபதி என்று மட்டும் அறிமுகம் செய்தார். கணபதி அவர்களைக் கைகூப்பி வணங்கினான். அவர்களும் வணக்கம் தெரிவித்தார்கள்.

பின்பு குருஜி தென்னரசுவைப் பார்த்து சைகை காட்ட தென்னரசு கணபதியை அவனுக்கு ஒதுக்கப்பட்டிருந்த அறையைக் காட்ட அழைத்துக் கொண்டு போனார். போவதற்கு முன் சிவலிங்கத்திடம் கணபதி "இங்கேயே தான் இருக்கேன். எங்கயும் போயிடலை. சரியா?" என்று மனதில் தெரிவித்து விட்டுப் போனான்.

அவன் போன பிறகு அலெக்ஸி, கியோமி, ஹரிராம் மூவர் பார்வையும் சிவலிங்கத்தில் நிலைத்தது.

ஜான்சன் அவர்கள் மூவரையும் அந்த தியான மண்டபத்திற்கு அடுத்திருந்த இளைப்பாறும் ஹாலிற்கு அழைத்துச் சென்றார். தெரிவிப்பதை சிவலிங்கம் வைத்திருக்கும் தியான மண்டபத்தில் தெரிவிக்க வேண்டாம் என்று நினைத்தார். அங்கு அவர்களிடம் சொன்னார். "அது தான் விசேஷ மானஸ லிங்கம். நம் ஆராய்ச்சிகள் நாளை மறு நாள் ஆரம்பிக்கப் போகிறோம். அதற்குள் நீங்கள் அந்த சிவலிங்கத்தின் அலைகளுடன் 'ட்யூன் ஆக'ப் பழகிக் கொண்டு

விடுங்கள். இது வரை இது போன்ற சக்தி மையத்தை நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்கள். இனிமேலும் நீங்கள் பார்க்கப் போவதில்லை. அதனால் அதனிடம் சர்வ ஜாக்கிரதையுடன் நீங்கள் இருக்க வேண்டும். எப்போதும் உங்கள் கட்டுப்பாட்டை இழந்து விடாமல் இருக்கிறது முக்கியம் . அது உங்களை நிறையவே தன் கட்டுப்பாட்டுக்குள் இழுப்பது போலத் தோன்றினால் பின் வாங்கி விடுங்கள். அதைக் குறைத்து மதிப்பிட வேண்டாம். எந்த எல்லை வரை உங்கள் கட்டுப்பாட்டிலேயே உங்களால் அதனுடன் 'ட்யூன் ஆக' முடிகிறதோ அதே எல்லையில் உங்களை நிறுத்திக் கொள்ளுங்கள்... புரிந்ததா?"

அவர்கள் மூவரும் புரிந்ததென்று தலையசைத்துத் தெரிவித்தார்கள்.

குருஜி அவர்களிடம் சொன்னார். "அது சமுத்திரம் போல. நாமெல்லாம் கரையில் நிற்கும் மனிதர்கள் போல. கரையில் மணல் வீடு கட்டலாம், காலை நனைக்கலாம், பாதி மூழ்கலாம், முழுகியும் குளிக்கலாம். ஆனால் எல்லாவற்றையும் ஒரு எல்லைக்குள்ளேயே செய்து கொள்ள வேண்டும். அட, இது வரை எதுவும் செய்யலையே என்று அசட்டுத் தைரியத்துடன் இன்னும் முன்னே போய் விளையாட நினைத்தால் சமுத்திரம் நம்மை இழுத்துப் போய் விடும். விளையாட்டு வினையாகி விடும். இந்த உவமானத்தை நீங்கள் எப்போதும் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்."

அவர்களுக்குத் தெளிவாகப் புரிந்தது.

**************

ஆனந்தவல்லி ஈஸ்வரை அனுப்புகிறேன் என்று சொல்லி இருந்த போதும் ஈஸ்வர் தன்னை அழைத்துப் போக வருவான் என்று

விஷாலி எதிர்பார்த்திருக்கவில்லை. இங்கு வராமல் இருக்க சரியான காரணத்தை அவனாலும் ஆனந்தவல்லியிடம் சொல்லி இருக்க முடியாது என்பது அவளுக்குப் புரிந்தது.

வாசலில் அவனைப் பார்த்து திகைத்தவள் தன்னை சுதாரித்துக் கொண்டு சொன்னாள். "உள்ளே வாங்க.... சாரி... நான் வேண்டாம்னு தான் சொன்னேன். ஆனா பாட்டி கேட்கலை"

ஈஸ்வர் ஒன்றும் சொல்லவில்லை. உள்ளே நுழைந்தான்.

"உட்காருங்க. இப்ப வந்துடறேன்..." என்ற விஷாலி அவசரமாக உள்ளே போனாள். ஈஸ்வர் உட்காரவில்லை. அவன் பார்வை சுவரில் தொங்கிக் கொண்டிருந்த ஓவியங்களுக்குச் சென்றது. எல்லாம் முதலிலேயே பார்த்தவை என்றாலும் மறுபடி பார்த்து ரசிக்கத் தோன்றியது. விஷாலி இந்த ஓவியங்களின் புகைப்படங்களை அவன் நண்பன் பாலாஜிக்கு அனுப்பி இருந்தாள். அவளது ஓவியங்கள் பற்றி பாலாஜி சிலாகித்து ஈஸ்வரிடம் நிறையப் பேசி இருந்தான். அவன் சொல்லி இருந்த விஷயங்களை வைத்து அவள் ஓவியங்களைப் பார்க்கையில் ஓவியங்களின் புதிய பரிமாணங்கள் புரிந்தன.

அவன் ஓவியங்களில் ஆழ்ந்து போய் நின்றதை விஷாலி கவனித்தாள். இப்படி ரசிப்பவனை நடிக்கிறான் என்று தவறாக நம்பி விட்டோமே என்று மறுபடி மனம் நொந்தது. அவள் தயாராகி வந்ததைக் கவனித்த ஈஸ்வர் கிளம்பினான்.

வெளியே போய் காரின் பின் கதவை அவளுக்காகத் திறந்து விட்டு ஈஸ்வர் நின்ற போது ஓங்கி அறைந்தது போல் விஷாலி

உணர்ந்தாள். இதற்கு அவன் வராமலேயே இருந்திருக்கலாம். விலகி இருக்க அவள் சொன்னதற்கு விலகியே அவளை உட்கார வைக்கிறான் போலிருக்கிறது. மனோதத்துவம் படித்தவனுக்கு மனதை வலிக்க வைக்கவும் தெரிகிறது.... 'என் தவறுக்கு இந்த தண்டனை தேவை தான்'.

காரை அவன் ஓட்டிக் கொண்டு சென்ற போது எதுவும் பேசவில்லை. அவளும் பேசவில்லை. ஆனால் அவர்களுக்கிடையே அந்த மௌனம் நிறைய பேசியது. சத்தமில்லாமல்' யாரோ இவன்' பாடல் கேட்டது. பாடலின் கடைசி வரிகள் இன்று வேறு அர்த்தத்தோடு கேட்டது.

நதியினில் ஒரு இலை விழுகிறதே

அலைகளில் மிதந்தது தவழ்கிறதே

கரைசேருமா உன் கைசேருமா

எதிர்காலமே !

விஷாலியை அறியாமல் கண்களில் இருந்து ஒரு துளி கன்னத்தில் வழிந்தது. அதைக் கண்ணாடி வழியாகக் கவனித்த போது அவன் மனம் பதைத்தது. ஒரு கணம் காரை நிறுத்தி "அன்று ஏன் அப்படி என்னிடம் பேசினாய். நான் என்ன தவறு செய்தேன் என்று நினைத்தாய்" என்று கேட்க அவன் இதயம் துடித்தது. ஆனால் அன்று அப்படிப் பேசியதற்கும் அவள் காரணம் சொல்லவில்லை, பிறகு ஒரு நாள் ஏன் சாரி என்று சொன்னாள் என்பதற்கும் அவள் காரணம் சொல்லவில்லை, அவளுக்கு சொல்லும் அவசியம் தோன்றவில்லை என்றால் உனக்குக் கேட்கும் அவசியம் என்ன வந்தது? என்று ஈகோ தடுத்தது. அவன் எதுவும் கேட்கவில்லை. வீட்டில் அவளை இறக்கி விட்டு விட்டு தான் இறங்காமலேயே

தோட்ட வீட்டுக்குப் போனான். பார்த்தசாரதி அங்கு வருவதாகச் சொல்லி இருந்தார்.

தோட்ட வீட்டில் முனுசாமி வேலையை முடித்து விட்டுக் கிளம்பத் தயாராகி இருந்தான். ”நான் இருக்கணுமா ஐயா, எனக்கு ஏதாவது வேலை இருக்கா” என்று பணிவுடன் கேட்டான்.

“வேண்டாம் முனுசாமி நீ போய்க்கோ” என்று ஈஸ்வர் அவனை அனுப்பி விட்டான்.

அவன் போன சிறிது நேரத்தில் பார்த்தசாரதி வந்தார். வேதபாடசாலையில் இருந்து அதிகாலையில் மூன்று கார்கள் வெளியே போயின என்றும் அவற்றைப் பின் தொடரவோ, உள்ளே இருந்தவர்களை அறியவோ கூட முடியவில்லை என்றும் சொன்னார்.

“இப்ப கொஞ்ச காலமாவே காலைல பனி லேசா பெய்துகிட்டு தான் இருக்கு. ஆனால் கார் நம்பரை பார்க்க முடியாத அளவுக்கோ, உள்ளே இருக்கிற ஆள்கள் தெரியாத அளவுக்கோ அத்தனை கனமான பனி பெய்யறதில்லை. ரெண்டு மூணு நிமிஷம் ஒரு இடத்துல மட்டும் பனி மூடிக்குமா என்ன? எனக்கு ஒன்னும் புரியலை. நீங்க என்ன நினைக்கிறீங்க ஈஸ்வர்?”

”சாதாரணமா அப்படி நடக்க முடியாதுன்னாலும் இயற்கையின் சக்திகளை தங்கள் விருப்பத்துக்கு குறுகிய காலத்திற்கு இயக்கிக்கற வித்தைகள் தெரிஞ்ச சில பேர் இருக்காங்க...”

*”சித்தர்கள் யோகிகள்னு நீங்க சொல்றீங்களே அவங்களா. இப்ப இந்த மாதிரி சட்ட விரோத செயல்களுக்கு உடன்படறவங்களா இருந்தா அவங்களும் குற்றவாளி ஆயிடறாங்களே ஈஸ்வர்.”*

*“இல்ல சார். சித்தர்கள் யோகிகள் சக்தி நீண்ட காலத்திற்குக் கூட செல்லுபடியாகும். சில நிரந்தர மாற்றங்களைக் கூட அவங்களால ஏற்படுத்திட முடியும். அவங்க இந்த சிவலிங்க விவகாரத்தில் கண்டிப்பா எதிரணியில் செயல்பட மாட்டாங்க. நான் சொன்ன ஆள்கள் அவர்களை விட ஒருபடி குறைஞ்ச ப்ளாக் மேஜிக் அல்லது மாந்திரிகம் மாதிரியான சித்து வித்தைகள்ல கை தேர்ந்தவங்க... அந்தப் பேரை வைத்து போலியா காசு பார்க்கிறவங்க தான் அதிகம்னாலும் இன்னமும் அந்த மாதிரி சக்தி வாய்ந்த ஆள்கள் இருக்கிறாங்க... உதயன் சுவாமி மாதிரியான ஆள்கள் பேரை இன்னமும் எங்கள் பாரா சைக்காலஜியில் சொல்றாங்க. அவர் இன்னமும் இருக்கார்னு சொல்றாங்க....”*

*பார்த்தசாரதி சந்தேகத்தோடு கேட்டார். “அந்த உதயன் சுவாமி எங்கே இருக்கார்?”*

*“இமயமலையில் எங்கேயோ இருக்கார்”*

*பார்த்தசாரதிக்கு ஆர்வம் போய் விட்டது. அவர் ஈஸ்வரிடம் சொன்னார். “பெரும்பாலும் உங்க கணபதியும் அந்த சிவலிங்கத்தோட போயிருப்பான்னு தான் நினைக்கிறேன்... அவங்க இனி என்ன செய்யப் போறாங்கன்னு தெரியல....”*

கணபதியை நினைக்கையில் ஈஸ்வருக்கு மனம் என்னவோ செய்தது. ’கடவுளிடம் பேசும் அளவு சக்தி படைத்த அவனுக்கு மனிதர்கள் மனதில் இருக்கும் வஞ்சகத்தைப் புரிந்து கொள்ளும் சக்தி இல்லை...’

பார்த்தசாரதி தென்னரசு பற்றி ஈஸ்வரிடம் சொல்வதைத் தவிர்த்தார். தென்னரசு பற்றி பேசிய போதெல்லாம் ஈஸ்வர் மரியாதையாகவே பேசினான். சற்று நேரத்திற்கு முன் கூட தென்னரசுவின் வீட்டுக்குப் போய் அவர் மகளை ஈஸ்வர் தன் வீட்டுக்கு அழைத்துப் போனதாய், கண்காணித்த போலீஸ்காரன் சொன்னான். அதனால் இப்போதைக்கு இவனிடம் தென்னரசு பற்றி எதுவும் சொல்லாமல் இருப்பது நல்லது என்று பார்த்தசாரதிக்குப் பட்டது.

தென்னரசு மேல் இருந்த சந்தேகம் இப்போது பார்த்தசாரதிக்கு உறுதியாகி விட்டிருந்தது. தென்னரசுவைப் பின் தொடர முடியாமல் குறுக்கிட்டு ப்ரேக் டவுன் ஆகி நின்ற லாரிக்காரனை விசாரித்தார்கள். லாரியைப் பரிசோதித்தார்கள். ப்ரேக் டவுன் ஆனது நிஜம் தான் என்பது தெரிந்தது. லாரிக்காரனும் இதற்கு முன்னால் எந்தக் குற்றத்திலும் ஈடுபட்டவன் அல்ல. இருந்தாலும் இதைத் தற்செயல் என்று நினைக்க முடியவில்லை.

அவரை ஏற்றிச் சென்ற கால்டாக்ஸி நம்பரை வைத்து அவனைப் பிடித்து விசாரித்தார்கள். அவன் அவரை ரயில்வே ஸ்டேஷனில் விட்டதாகச் சொன்னான். ஆனாலும் அவர் ரயிலில் வெளியூர் போயிருக்க வாய்ப்பில்லை என்று பார்த்தசாரதியின் உள்ளுணர்வு சொன்னது. இறங்கியவர் ரயில்வே ஸ்டேஷனில் இருந்து எங்கு வேண்டுமானாலும் போயிருக்கலாம்.... இப்படி

*சந்தேகப்பட்ட நபர்கள் எல்லாம் மாயமானது அவருக்கு பெருத்த ஆயாசத்தைக் கொடுத்தது.*

*பார்த்தசாரதி கிளம்பினார். "நீங்களும் வர்றீங்களா ஈஸ்வர்?"*

*"இல்லை சார். நீங்க போங்க. நான் கொஞ்ச நேரம் இருந்துட்டு வர்றேன்" என்றான். வீட்டில் விஷாலி இருப்பதால் இப்போதே போக அவனுக்கு மனம் இருக்கவில்லை. இன்னமும் அவளுக்காகத் துடிக்கும் தன் இதயத்தைக் கட்டுப்படுத்த அவனுக்குத் தெரியவில்லை.*

*பார்த்தசாரதி போய் விட்டார்.*

*ஈஸ்வர் மனதில் விஷாலியின் நினைவுகள் நீடித்துப் பின் அவன் கணபதியை நினைக்க ஆரம்பித்தான். இப்போது என்ன செய்கிறானோ? அவனை எப்படிப் பயன்படுத்தப் போகிறார்களோ? கண்களை மூடிக் கொண்டு ஈஸ்வர் என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்கையில் காலத்தை மறந்தான்.*

*திடீரென்று அருகில் யாரோ வந்து நிற்பது போல இருந்தது. கண்களைத் திறந்து ஈஸ்வர் பார்த்தான்.*

*கண்கள் தீயாய் ஜொலிக்க அந்த சித்தர் நின்று கொண்டிருந்தார். ஈஸ்வரின் இதயம் ஒரு கணம் துடிக்க மறந்தது.*

# ***அத்தியாயம் - 67***

இது கனவா என்கிற சந்தேகம் தான் ஈஸ்வருக்கு முதலில் வந்தது. கண்களை மூடிக் கொண்டிருக்கையில் அப்படியே அசந்து தூங்கி விட்டு கனவில் தான் அந்தச் சித்தரைப் பார்க்கிறோமோ என்ற சந்தேகம் வந்தது. கண்களை நன்றாகக் கசக்கிக் கொண்டான்.

ஜவுளிக்கடையில் பார்த்த அதே சித்தர், அதே லேசான புன்னகை. நெருப்பாய் ஜொலித்த கண்கள் ஜொலிப்பு நீங்கி இயல்பானதாக மாறிய போதும் அந்தக் கண்களின் தீட்சண்யம் குறையவில்லை. ஈஸ்வர் பேச வாய் திறந்தான். சீக்கிரத்தில் வார்த்தைகள் வரவில்லை. வரும் என்று நம்பிக்கை வந்த போதோ என்ன சொல்வது என்று அவனுக்குத் தெரியவில்லை. அவர் திடீரென்று இன்றும் காணாமல் மறைந்து போய் விடுவார் என்று தோன்றியது.

ஆனால் அவர் மறைந்து போகவில்லை. புன்முறுவலோடு சொன்னார். ”இன்னைக்கு திடீர்னு மறைஞ்சுட மாட்டேன். எனக்கு உன் கிட்ட பேச வேண்டி இருக்கு”

அவர் கண்களைப் போலவே குரலுக்கும் கவர்ந்திழுக்கும் தன்மை இருந்தது. பேச்சு மட்டும் சாதாரண மனிதர்கள் பேசும் பேச்சு வழக்காக இருந்தது. அவன் திகைப்பில் ஆழ்ந்திருக்கும் போதே அவர் அவன் எதிரில் அமர்ந்தார்.

ஈஸ்வர் மெல்ல இயல்பு நிலைக்குத் திரும்பினான். ”எனக்கும் உங்க கிட்ட கேட்க நிறைய இருக்கு... அன்னைக்கு எங்களைத் தொட்டுட்டு போனீங்க. ஷாக் அடிச்ச மாதிரி இருந்துச்சு. எனக்கு மட்டும் அல்ல... கணபதிக்கும் தான். ஏதோ ஒரு காரணம் இருக்கும்னு புரிஞ்சாலும் என்ன காரணம்னு தெரியலை....

அன்னைக்கு நீங்க வந்ததுக்கும் காரணம் தெரியல, பேசாம போனதுக்கும் காரணம் தெரியல....”

அக்னிநேத்திர சித்தர் சொன்னார். “சில விசேஷ முகூர்த்த நேரங்கள் இருக்கு. அது அபூர்வமாய் தான் வரும். அப்படி வரும் போது தவற விட்டுட்டா அடுத்த முகூர்த்த நேரத்துக்கு மாசக்கணக்கில் காத்திருக்க வேண்டி இருக்கும். அன்னைக்கு கிடைச்ச முகூர்த்தம் அப்படிப்பட்ட முகூர்த்தம். அந்த முகூர்த்த நேரத்தில் நீங்க ரெண்டு பேரும் கிடைச்சதை நான் பயன்படுத்திக்க வேண்டி இருந்தது...”

ஈஸ்வருக்குக் குழப்பமாக இருந்தது. என்ன சொல்ல வருகிறார்?

அவன் குழப்பத்தை மேலும் அதிகப்படுத்தும்படியாக அவர் சொன்னார். “உன் விதியும், கணபதியின் விதியும் விசேஷ மானஸ லிங்கத்தோட பல காலம் முன்னாலேயே இணைக்கப்பட்டது ஈஸ்வர். நீ எதிர்பார்க்காத நேரத்தில் எல்லாம் விசேஷ மானஸ லிங்கம் உனக்கு காட்சி தந்ததும் காரணம் இல்லாமல் இல்லை...”

ஈஸ்வர் அவரையே கூர்மையாகப் பார்த்தபடி சொன்னான். “எனக்கென்னவோ அது தானாய் காட்சி தந்த மாதிரி தெரியல. யாரோ அந்தக் காட்சியை எனக்கு அனுப்பின மாதிரி தோணிச்சு”. அவனுக்கு சந்தேகம் அவர் மேல் தான்.

ஆனால் அவர் அவன் சந்தேகத்தைத் தீர்க்கவில்லை. மாறாக அவனையே அவர் காரணம் காட்டினார். “ஏதாவது ஒரு விதத்தில் நீ ஈர்க்காமல் எதுவுமே உன் வாழ்க்கையில் வருவதில்லை ஈஸ்வர்”

ஈஸ்வர் உடனடியாக எதையும் சொல்லாமல் யோசித்தான். சின்ன வயதில் இருந்தே அவன் அப்பா மூலம் அவனுடைய பேராவலைத் தூண்டியவர்கள் பரமேஸ்வரனும், விசேஷ மானஸ லிங்கமும் தான். சங்கர் மகனிடம் சொன்ன ஒளிரும் லிங்கம் ஏதோ ஒரு இனம் புரியாத ஈர்ப்பை உண்டு பண்ணியது உண்மை தான். சங்கருக்கும் கூட அதன் மீது அதிக ஈடுபாடு இருந்தது என்றாலும் ஆழமாய் அதன் காரணமான அம்சங்களை அவர் ஆராய முற்பட்டதில்லை. ஆனால் ஆழ்மனம் மற்றும் அபூர்வ சக்திகளின் ஆராய்ச்சியாளனான ஈஸ்வர் பல ஆராய்ச்சிகளின் இடையேயும் அந்த சிவலிங்கத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட விஷயங்களை ஒப்பிட்டுப் பார்த்திருக்கிறான். ஆனால் அடிக்கடி எதிர்பாராத சந்தர்ப்பங்களில் எல்லாம் விசேஷ மானஸ லிங்கம் காட்சி அளிக்க ஆரம்பித்தது பசுபதியின் மரணத்திற்குப் பின் தான். அதற்கு முன் அந்த அனுபவம் இல்லை....

ஈஸ்வர் கேட்டான். "எங்கள் விதி எப்படி விசேஷ மானஸ லிங்கத்தோடு இணைக்கப்பட்டதுன்னு சொல்றீங்க?"

அக்னி நேத்ர சித்தர் சொல்ல ஆரம்பித்தார். "ஈஸ்வர் உனக்கு ஓரளவு விசேஷ மானஸ லிங்கத்தின் கதை தெரிந்திருக்கும். பலநூறு வருஷங்களுக்கு முன்னாலேயே சித்தர்கள் எதிர்காலத்தைத் தெரிந்து வைத்திருந்தார்கள். கலி முத்திப் போய் பேராசை, பெருங்காமம், வெறுப்பு, யுத்தம்னு உலகம் சீரழிஞ்சுடும், மனிதம் மறக்கப்பட்டுடும், இயற்கை அழிவுகள் பெருமளவு வந்துடும்ங்கறதை எல்லாம் தெரிஞ்ச அவங்க அந்த எதிர்காலத்துல மனித சமுதாயத்தைக் காப்பாத்தறதுக்கு ஒரு மிகப்பெரிய சக்தி உறுதுணையாய் வேணும்னு நினைச்சாங்க. விசேஷ மானஸ லிங்கத்தை உருவாக்கி தங்கள் சக்திகளை எல்லாம் சேர்த்து அதில் மையப்படுத்தினாங்க. தூய்மையே பிரதானமான சூழ்நிலையை உருவாக்கி அதை வணங்கி

*வந்தாங்க. ஆரம்பத்துல சித்தர்களால மட்டும் தான் விசேஷ மானஸ லிங்கம் பூஜை செய்யப்பட்டுச்சு".*

*"சமுதாயத்துல இருந்து ஒதுங்கி துறவு வாழ்க்கை வாழ்கிற சித்தர்களே, சமுதாயத்தைப் பாதுகாக்க உருவாக்கப்பட்ட விசேஷ மானஸ லிங்கத்தை காலம் காலமாய் பூஜை செய்து வர்றது சரியல்ல, கலி முத்தின அந்தக் கடைசி காலத்துக்கு முன்னால் சிறிது சிறிதாய் அந்தப் பொறுப்பை சமுதாயத்தில் அங்கம் வகிக்கிற பொது மனிதர்களுக்கு ஒப்படைச்சுடணும்னு முதல்லயே சித்தர்கள் தீர்மானிச்சிருந்தாங்க. காப்பாத்தற பொறுப்பு ஒரு சாரார் கிட்டயும், தான்தோன்றித்தனமாய் நடந்துக்கற சுதந்திரம் மீதி சாரார் கிட்டயும் இருக்கிற வரைக்கும் இந்த சமுதாயம் உருப்படாதுன்னு தீர்க்கதரிசனத்தால அவங்க உணர்ந்திருந்தாங்க. அதனால மிக முக்கியமான குறிப்பிட்ட ஒரு காலத்தில மனம், அறிவு, ஞானம் இந்த மூன்றிலயுமே பரிசுத்தமாய், உயர்வாய் இருக்கிற மூன்று மனிதர்கள் கிட்ட விசேஷ மானஸ லிங்கத்தை சேர்க்கறதுன்னு நிச்சயமாகி இருந்துச்சு"*

*"அந்தக் குறிப்பிட்ட காலம் வந்துடுச்சு ஈஸ்வர். கலிமுத்தின எல்லா அறிகுறிகளும் தெரிய ஆரம்பிச்சுடுச்சு. ஒரு காலத்துல உயர்வாய் நினைச்சு இருந்த விஷயங்கள் இன்னைக்கு செல்லாக்காசாயிடுச்சு. கேவலமாய் நினைச்சுகிட்டிருந்த விஷயங்கள் இன்னைக்கு உயர்வாயிடுச்சு. மனிதம் செத்துகிட்டிருக்கு.... அலட்சியம், அறியாமை அதிகமாயிடுச்சு... மனிதன் தன்னையே அழிச்சுகிட்டு சந்தோஷத்தைத் தேடிகிட்டிருக்கான். தன் உன்னதமான விஷயங்களை எல்லாம் தாரை வார்த்துட்டு நிம்மதி இல்லாமல் இருக்கறதுக்கு காரணம் தேடிகிட்டிருக்கான். ஒருத்தரை ஒருத்தன் அழிச்சுட்டு என்னென்னவோ சாதிக்கப் பார்க்கிறான்... என்னென்னவோ செஞ்சும் நிம்மதியும் சந்தோஷமும் அவனுக்கு அகப்படாமயே*

இருக்கு... இயற்கையின் அழிவுகளும் ஆரம்பமாயிடுச்சு. இன்னும் நிறைய அழிவுகள் வரும்... இந்த நிலையில் தான் விசேஷ மானஸ லிங்கத்தோட பாதுகாப்புக்கான பொறுப்பு உன் கிட்டயும், கணபதி கிட்டயும் வந்து சேர்ந்திருக்கு....”

ஈஸ்வருக்கு முதலில் தன் காதுகளின் மீதும் கேட்கும் திறன் மீதும் சந்தேகம் வந்தது. ஒரு மாத லீவில் இந்தியா வந்திருக்கும் அவனுக்கும், வெகுளியான கணபதிக்கும் விசேஷ மானஸ லிங்கத்தின் பாதுகாப்புப் பொறுப்பா? சித்தரை அவன் திகைப்போடு பார்த்தான். அவர் முகத்தைப் பார்த்த போது அவர் விளையாட்டுக்குச் சொல்லவில்லை என்பது தெரிந்தது. அவன் வாய் விட்டுச் சிரித்தான்.

அக்னி நேத்திர சித்தர் சிரிக்கவில்லை. அவன் சிரித்ததற்காகக் கோபப்படவுமில்லை. புன்முறுவல் மாறாமல் அவனையே பார்த்தார்.

ஈஸ்வர் சொன்னான். “சித்தரே. தமிழில் குருவி தலையில் பனங்காய்னு கேள்விப்பட்டிருக்கேன். அதுவே பெரிய பாரம்ங்கற அர்த்தத்துல சொல்வாங்க. ஆனால் நீங்க பனைமரமே வைக்கிறீங்களே. இது நியாயமா? இது நடக்கிற காரியமா?”

சித்தர் அமைதியாகச் சொன்னார். “எனக்குத் தெரிஞ்சு சுமக்க முடியாத பாரத்தை இறைவன் தர்றதில்லை”

ஈஸ்வர் திகைப்போடு கேட்டான். “ஏன் நாங்க?”

“மனம்-பக்தி மார்க்கத்துல கணபதி. புத்தி-அறிவு மார்க்கத்துல நீ” சித்தர் தெரிவித்தார்.

ஈஸ்வருக்கு இப்போது நடந்து கொண்டிருக்கும் உரையாடல் யதார்த்தத்திற்கு ஒத்து வராத ஒன்றாகத் தோன்றியது. இப்போதும் கூட இது நிஜம் போலத் தோன்றும் கனவாகவே இருக்க வேண்டும் என்று நம்பினான். நிஜம் தானா என்று உறுதிப்படுத்திக் கொள்ள மெள்ள அந்த சித்தரைத் தொட்டான். மறுபடி அவன் உடலில் மின்சாரம் பாய்ந்தது.

கனவல்ல நிஜம் தான். அவரது சக்தி வாய்ந்த அலைகளுக்கு அவன் உடல் இன்னும் பழக்கப்படவில்லை. ‘இவ்வளவு சக்திகளை வச்சுகிட்டு இவர் மாதிரி ஆள்கள் ஒதுங்கிட்டு சாதாரண ஆள்கள் கிட்ட இவ்வளவு பெரிய பொறுப்பை எல்லாம் தரலாமா?”’’

பெருமூச்சு விட்ட ஈஸ்வர் தனக்கு எழுந்த முக்கியமான சந்தேகத்தைக் கேட்டான். ”ஞான மார்க்கம்னு மூணாவது சொன்னீங்களே. அதுக்கு யாரைத் தேர்ந்தெடுத்திருக்கீங்க?”

“அதுக்கு மட்டும் நாங்க யாரையும் தேர்ந்தெடுக்கலை. நீங்க ரெண்டு பேரும் சரியா இருந்தால் ஞான மார்க்கத்து ஆளை நீங்களே கண்டு பிடிக்கலாம்”

ஈஸ்வர் சிரித்தே விட்டான். பின் சொன்னான். “சித்தரே. முதல்ல எங்களை மாதிரி ஆள்களால விசேஷ மானஸ லிங்கத்தைப் பாதுகாக்க முடியும்னோ, இந்த உலகத்தை அழிவில் இருந்து காப்பாத்த முடியும்னு நான் நம்பலை. ஒரு வேளை நீங்க சொன்ன மாதிரி முடியற விஷயமா இருந்தாக்கூட இதில் எங்களுக்கு

அனுகூலமான அம்சங்கள் எதுவுமே இல்லை. நீங்களே யோசிச்சு பாருங்க. அந்த விசேஷ மானஸ லிங்கமே எங்க கிட்ட இல்லை. என் பெரிய தாத்தாவைக் கொன்னுட்டு அந்த சிவலிங்கத்தை ஒரு கும்பல் தூக்கிட்டுப் போனப்ப அதை சுலபமா பெரிய தாத்தாவோ, நீங்களோ தடுத்திருக்கலாம். நீங்க எதுவுமே செய்யல. நீங்களா அதைக் கைல எடுத்துக் கொடுத்து அனுப்பின மாதிரி சிவலிங்கத்தை அனுப்பிச்சுட்டீங்க. இப்ப அந்த சிவலிங்கம் எங்கே இருக்குன்னு கூடத் தெரியலை. கணபதியோ எடுத்துட்டுப் போன கும்பலோட கட்டுப்பாட்டுல இருக்கான். அந்த குருஜியைப் பெரிய தர்மாத்மான்னு நினைச்சுகிட்டிருக்கான். இப்ப நான் ஒருத்தன் தான் வெளியே இங்க இருக்கேன். மூணாவது ஆளை நாங்களே கண்டுபிடிக்கணும்னு வேற சொல்றீங்க. கணபதி எங்க இருக்கான்னே கண்டுபிடிக்க முடியாமல் இருக்கிற என் கிட்டே மூணாவது ஆளையும் கண்டுபிடிக்கச் சொல்றீங்க. ரொம்பவே தமாஷா இருக்கு. சிவலிங்கம் இல்லை, கணபதி இல்லை, ஞான மார்க்கத்து ஆள் யாருன்னே தெரியாது, நான் ஒருத்தன் இருக்கேன், ஆனா எனக்கு எந்த விசேஷ சக்தியும் இல்லை... இதுல எதாவது ஒரு சாதகமான நிலைமையாவது இருக்கா. நீங்களே சொல்லுங்க"

சித்தர் அவன் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியும் என்று அவனுக்குத் தோன்றவில்லை. ஆனால் ஆணித்தரமான அவன் வாதத்தைக் கேட்ட பிறகும் அவர் அசராமல் சொன்னார். "விசேஷ மானஸ லிங்கம் இன்னும் உங்க மூணு பேர்ல ஒருத்தனான கணபதி கிட்ட தான் இருக்கு. இப்பவும் அவன் தான் பூஜை செய்யறான். இன்னும் அதை நெருங்கற சக்தி அந்த கும்பலுக்குக் கிடைச்சுடலை. இன்னொரு ஆளான நீ யார் கட்டுப்பாட்டுலயும் இல்லை. சுதந்திரமாய் தான் இருக்கே...."

”ஆனா கணபதி ஒரு இடத்துலயும் நான் ஒரு இடத்துலயும் அல்லவா இருக்கோம். அவன் கிட்டயே இப்ப எனக்கு தொடர்பு இல்லை....”

“ஒரு ஆள் கிட்ட தொடர்பு வச்சிக்க அந்த ஆள் பக்கத்திலயே இருக்கணும்னு உன்னை மாதிரி ஆராய்ச்சியாளன் சொல்றது தான் தமாஷா இருக்கு. உன் தொழிலே அந்த ஆராய்ச்சிகள்லே தான் இருக்கு....”

ஈஸ்வருக்கு அவர் என்ன சொல்கிறார் என்பது புரிந்தது. அடுத்தவர்களை வைத்து ஆராய்ச்சி செய்த அவனுக்கு தானே அதைச் செய்து காட்ட முடியாதா என்று கேட்கிறார்.

ஈஸ்வர் சொன்னான். “அந்த மூணாவது ஆளையும் நாங்களே கண்டுபிடிக்கணும்னு வேற சொல்றீங்க. ஏன் அந்த ஆளை நீங்களே சொல்லிடக் கூடாது...”

சித்தர் சொன்னர். “ஈஸ்வர். ஞானம் எப்பவுமே கடைசியா தான் வரும். மனசும், அறிவும் சரியாய் வேலை செஞ்சா தான் வரும், மனசும், அறிவும் சேர்ந்து அழைச்சா தான் வரும். அதனால அதை வரவழைக்கறது உங்க கைல தான் இருக்கு....”

ஈஸ்வருக்கு அவர் சொல்கிற தத்துவம் புரிந்தது. ஆனால் இப்போதும் இதெல்லாம் நடக்கிற காரியமாய் அவனுக்குப் படவில்லை. அவன் புத்திசாலியாக இருக்கலாம். ஆனால் சாதாரண மனிதன். இவரைப் போன்ற சித்தர் அல்ல... கணபதி அவனை விடவும் சாதாரண மனிதன்... அவனை யாரும் எப்படியும் பயன்படுத்தி விடலாம்....

அவன் மனதில் ஓடும் எண்ணத்தைப் புரிந்து கொண்ட சித்தர் சொன்னார். "ஆரம்பத்தில் இருந்தே இந்த ஆழ்மன சக்தி ஆராய்ச்சிகள்ல உனக்கு ஈடுபாடு வந்ததும், அதற்கான சூழ்நிலைகளை அமைச்சுக் கொடுத்ததும் விதி. உன்னையும் நல்ல பெற்றோருக்குப் பிறக்க வச்சு நல்ல பாதையிலயே வளர வச்சதும் விதி. இந்த ஒரு காலத்துக்காக நல்ல அறிவோட விதி உன்னைத் தயார்ப்படுத்தி தான் வச்சிருக்கு.... அதே மாதிரி கணபதியால தெரிஞ்சு தப்பு செய்யவே முடியாது ஈஸ்வர். அவன் இயல்புலயே அது இல்லை. அந்த அளவு பரிச்சுத்த மனசோட அவனையும் விதி தயார்ப்படுத்தி வச்சிருக்கு. நீங்க ரெண்டு பேரும் சேர்ந்து தேடினா மட்டும் தான் ஞானம் அகப்படும்.... ஞானம் வந்த பிறகு நீங்க மூணு பேரும் சேர்ந்தா இந்த உலகத்துல முடியாதது என்கிறதே கிடையாது..."

ஈஸ்வர் தன்னம்பிக்கைக்குப் பெயர் போனவன். ஆனால் இது போன்ற பிரம்மாண்டமான விஷயங்கள் எல்லாம் அவனால் முடியும் என்று தோன்றவில்லை....

"சித்தரே. அந்தக் குருஜிக்கு ஆள் பலம், பணபலம், அதிகார பலம் எல்லாமே இருக்கு. அதோட சிவலிங்கமும் இப்ப சேர்ந்துருக்கு.... நாங்க வெறும் நல்லவங்களா மட்டும் இருக்கோம்.."

சித்தர் சொன்னார். "நல்லவங்களோட பிரச்னையே அவங்க தைரியம் இல்லாதவங்களாவும் தன்னம்பிக்கை இல்லாதவங்களாவும் இருந்துடறது தான். அதுவே கெட்டவங்களுக்கு பலமா மாறிடுது...."

*அவர் சொல்வது உண்மை தான். ஆனால்... ஆனால்... ஈஸ்வர் கேட்டான். “சித்தரே அந்த சிவலிங்கம் சக்தி வாய்ந்தது தானே. அதுவே என்ன செய்யணுமோ அதைச் செய்யாதா? கடவுளுக்கு மனுஷங்களோட உதவி தேவையா என்ன?”*

*சித்தர் சொன்னார். “கடவுளா பார்த்தா அது கடவுள். கல்லாய் பார்த்தா வெறும் கல் தான். சக்தியா பார்த்தா சக்தி தான். ஆனா எப்படி பார்க்கிறவங்க அதை எப்படி உபயோகிக்கிறாங்களோ அப்படியே அவங்களுக்கு உபயோகமாகும்”*

*ஈஸ்வருக்குத் தலை சுற்றுகிற மாதிரி இருந்தது. அவன் அறிவுகூர்மைக்கு இது எல்லாம் பிடிபடாத விஷயங்கள் அல்ல என்றாலும் தற்போதைய வில்லங்கமான சூழ்நிலை அவனுக்குக் குழப்பத்தைத் தான் தந்தது.*

*”ஒரு வேளை என்னால் எதுவும் செய்ய முடியலைன்னா என்ன ஆகும்...”*

*”கெட்டவங்க யுத்தம் இல்லாமல் ஜெயிச்சிடுவாங்க அவ்வளவு தான். அவங்க கிட்டயும் அறிவு நிறையவே இருக்கு. அவங்க செய்யறது எல்லாம் தான் சரின்னு கணபதியை நம்ப வைக்க அவங்களுக்கு சுலபமா முடியும். கணபதி அவங்க பக்கம் போனா மத்ததெல்லாம் அவங்களுக்கு சுலபம். தப்பான மனசு, தப்பான அறிவு, தப்பான ஞானம் இது மூணும் போதாதா உலகத்தை அழிக்கிறதுக்கு?”*

*”அப்ப கடவுள்?”*

*“கடவுளுக்கு காப்பாத்தற வேலை மட்டுமா இருக்கு. அழிக்கிற வேலையும் அவரோடது தானே. அவர் அந்த வேலையைச் செய்வார்....”*

*ஈஸ்வருக்கு பகீரென்றது. “என்ன இப்படிச் சொல்றீங்க சித்தரே?”*

*”நல்ல மனசும், நல்ல அறிவும் இருக்கறவங்களே காப்பாத்தப்படணும்னு உறுதியா முயற்சிகள் எடுக்கலைன்னா அவங்க இருக்கிற சமுதாயம், உலகம் காப்பாத்தக்கூட தகுதி இல்லாததாயிடுது.... கடவுளுக்கு கவனிக்க இந்த உலகம் மட்டும் இல்லை, கோடான கோடி உலகங்கள் இருக்கு.... தகுதி இருக்கற உலகங்களை அவர் காப்பாத்திட்டுப் போறார்...”*

*ஈஸ்வருக்கு சித்தர் பேசியது கடூரமாக இருந்தது. ஆனால் அர்த்தம் இல்லாததாகத் தோன்றவில்லை....*

*”எனக்கு இதுல என்ன செய்யணும், எப்படி செய்யணும்னு ஒன்னுமே புரியலை சித்தரே. ஏதோ ஆராய்ச்சிகள் செய்துகிட்டிருந்தேனே ஒழிய இந்த அளவு பெரிய வேலைக்கான அனுபவம் எல்லாம் எனக்கு இல்லை....” ஈஸ்வர் பரிதாபமாகச் சொன்னான்.*

*சித்தர் கனிவாகச் சொன்னார். “வாழ்க்கைப் பயணம் வரைபடத்தோட தரப்படறதில்லை ஈஸ்வர். பல நேரங்கள்ல பாதைகளை நாமளே தான் தேடிக் கண்டுபிடிச்சுப் போக வேண்டி இருக்கு. போகப் போக வழி கிடைக்கும்...”*

சித்தர் எழுந்தார். அவர் கிளம்புகிறார் என்று ஈஸ்வருக்குப் புரிந்தது. அவரிடம் அவனுக்குக் கேட்க நிறைய இருந்தன. அதில் எதை முதலில் கேட்பது என்று பரபரப்புடன் அவன் யோசிப்பதற்குள் அவர் கை அவன் தலை உச்சியை லேசாகத் தொட்டது. உச்சியில் இருந்து உள்ளங்கால் வரை அவனுக்குச் சிலிர்த்தது. அவர் இரண்டடி நடந்தது தெரிந்தது. அவன் ஏதோ கேட்க வாயைத் திறக்கும் முன் அவர் மறைந்து போனார். ஈஸ்வர் சிலையாக அமர்ந்திருந்தான்.

# அத்தியாயம் - 68

ஆனந்தவல்லி விஷாலி மட்டும் வீட்டிற்குள் நுழைவதை ஜன்னல் வழியாகப் பார்த்தாள். விஷாலியின் முகம் மிகவும் வாடி இருந்ததையும், விஷாலியை விட்டு விட்டு உள்ளே வராமல் வேறெங்கோ ஈஸ்வர் மறுபடி போய் விட்டதையும் கவனித்த அவளுக்கு ஈஸ்வர் அவ்வளவு சுலபமாக விஷாலியிடம் இருந்த கோபத்தை முடித்துக் கொள்ள மாட்டான் என்பது புரிந்தது. 'இந்தப் பெண் ஏதோ தப்பு செய்து அவனுக்குக் கோபத்தை வரவழைத்திருக்க வேண்டும், அவன் ஈகோவை நிறையவே பாதித்திருக்க வேண்டும்' என்பது மட்டும் அவளுக்குத் தெளிவாகத் தெரிந்தது. மீனாட்சி விஷாலியை வரவேற்றுப் பேசிக் கொண்டிருக்கையில் மகன் அறையில் அமர்ந்து கொண்டிருந்த ஆனந்தவல்லி மகனிடம் சொன்னாள்.

"இந்தப் பொண்ணு நல்ல பொண்ணு. புத்திசாலியான பொண்ணு. ஆனா சில விஷயங்கள்ல சாமர்த்தியம் பத்தாது. ஈஸ்வர் மாதிரி ஆளை எல்லாம் கொஞ்சம் நாசுக்கா தான் கையாளணும். இதுக்கு அது தெரியலை..." என்று மகனிடம் சொன்னாள்.

பரமேஸ்வரன் தாயைக் கடிந்து கொண்டார். “ஆமா, உன் சாமர்த்தியம் யாருக்கும் வராது. நீயா இருந்தா என்ன செய்திருப்பே?”

”ஈஸ்வர் ஒரு செண்டிமெண்ட் ஆசாமி. ஒரு காலத்துல உன் கிட்ட எவ்வளவு கோபமா இருந்தான். உனக்கு மாரடைப்பு வந்து உன் உயிருக்கு ஆபத்துன்னு தெரிஞ்சப்ப அவனோட அத்தனை கோபமும் காத்துல போச்சு. இன்னைக்கு உன் மேல எவ்வளவு பாசமா இருக்கான். அந்தப் பொண்ணு அவன் உதாசீனப்படுத்தறத தாங்காமல் தற்கொலை செய்யப் போறாள்னு வச்சுக்கோ. உன் பேரன் பாகாய் உருகிடுவான்....”

பரமேஸ்வரன் அதிர்ந்து போனார். ”என்ன கொடுமையான ஐடியா எல்லாம் சொல்றே....”

“தற்கொலை செஞ்சுக்கச் சொல்லலைடா. அப்படி நடிக்க தான் சொல்றேன். பின் உன் பேரன் மாதிரி செண்டிமெண்ட் ஆள்களை எப்படித் தான் வழிக்குக் கொண்டு வர்றது.”

பரமேஸ்வரன் படபடத்தார். ”உன் வயசுக்கு இது எல்லாம் நல்லா இருக்கா? தயவு செஞ்சு இதை எல்லாம் அந்தப் பொண்ணு கிட்ட சொல்லிடாதே. ஒண்ணு கிடக்க ஒண்ணு ஆயிடப் போகுது....”

“உன் கிட்ட சும்மா சொன்னேண்டா. அவ கிட்ட எல்லாம் சொல்லுவேனா?” என்ற ஆனந்தவல்லி யோசித்தாள். ஆனால் அவளுக்கு விஷாலி அந்த மாதிரி ஏதாவது நாடகம் போட்டு ஈஸ்வரை மடக்கினால் தேவலை என்று இப்போதும் தோன்றியது. அம்மாவின் எண்ணப் போக்கு போகும் விதம் பரமேஸ்வரனுக்கு

***விபரீதமாகத் தெரிந்தது. அம்மா யோசிப்பதை பலத்த சந்தேகத்தோடு பார்த்தார். 'இனி என்ன பயங்கரமான கற்பனை எல்லாம் வருமோ!'***

***ஆனந்தவல்லி அவரிடம் சொன்னாள். "உன் மருமகளோட போன் நம்பர் குடுடா"***

***பரமேஸ்வரன் இன்னும் பயந்தார். "எதுக்கு?"***

***"ஊம்... அமெரிக்கால இப்ப க்ளைமேட் எப்படி இருக்குன்னு கேக்க. போன் நம்பர் கேட்டா தர வேண்டியது தானடா... நீ தர்றியா இல்லை உன் மகள் கிட்ட போய் கேட்கட்டுமா?"***

***பரமேஸ்வரன் தயக்கத்துடன் தந்தார். ஆனந்தவல்லி கண்களை சுருக்கிக் கொண்டு அந்த எண்களைத் தானே அழுத்த ஆரம்பித்தாள்.***

***"ஹலோ நான் ஆனந்தவல்லி பேசறேம்மா... எப்படிம்மா இருக்கே?"***

***பரமேஸ்வரன் போன் செய்ததை விட ஆனந்தவல்லி போன் செய்து பேசுவது கனகதுர்காவிற்கு ஆச்சரியத்தை அளித்தது. காரணம் அவள் கணவர் தன் பாட்டியைப் பற்றி நிறையவே அவளிடம் சொல்லி இருக்கிறார்....***

***"நான் நல்லா இருக்கேன். நீங்க எப்படி இருக்கீங்க பாட்டி?"***

*”முன்ன மாதிரி இப்பவெல்லாம் உடம்புக்கு முடியறதில்லம்மா. இனி எத்தனை நாள்னு தெரியல.... கண்ணை மூடறதுக்குள்ள உன்னை ஒரு தடவை பார்க்கணும்னு ஆசையா இருக்கு. அதான் போன் செஞ்சேன்... நீ எப்பம்மா வர்றே?”*

*“கிறிஸ்துமஸ் லீவுல வர்றேன் பாட்டி”*

*“அது வரைக்கும் நான் இருப்பேன்கிற நம்பிக்கை எனக்கு இல்லம்மா துர்கா.. நீ உடனடியா ஏன் கிளம்பி வரக் கூடாது?”*

*கனகதுர்கா திகைத்தாள். ”உடனடியாவா?”*

*“திடீர்னு கிளம்பினா விமான செலவெல்லாம் அதிகம்னு கேள்விப்பட்டிருக்கேன். எத்தனை செலவானாலும் பரவாயில்லை. நான் அந்த செலவை ஏத்துக்கறேன்... நீ ஒரு தடவை வந்துட்டு போயேன்ம்மா”*

*கனகதுர்காவிற்கு உடனடியாக என்ன சொல்வது என்று தெரியவில்லை.*

*ஆனந்தவல்லி அடுத்த அஸ்திரம் விட்டாள். “ஏம்மா உன் மகன் ஒரு பொண்ணைக் காதலிக்கிறான். அது தெரியுமாம்மா?”*

*கனகதுர்கா ஆச்சரியத்துடன் கேட்டாள். “அப்படியா யார் பாட்டி?”*

“இப்ப நம்ம வீட்டுல தான் இருக்கா அந்தப் பொண்ணு.... நான் சொன்னேன்னு உன் பையன் கிட்ட தயவு செஞ்சு சொல்லிடாதே. கோவிச்சுக்குவான்.... என்னவோ மூச்சடைக்குதும்மா.... வச்சுடறேன்.”

ஆனந்தவல்லி இணைப்பைத் துண்டித்து விட்டு கண்களை மூடிக் கொண்டாள்.

பரமேஸ்வரன் சந்தேகத்துடன் கேட்டார். “உனக்கு என்னாச்சு...? உடம்பு சரியில்லையா”

“எனக்கு என்ன, நல்லாத் தான் இருக்கேன்” ஆனந்தவல்லி கண்களைத் திறந்து சாதாரணமாகச் சொன்னாள்.

பரமேஸ்வரன் கோபத்துடன் கேட்டார். “பின்ன எதுக்கு இப்படி டிராமா போடறே. மூச்சு முட்டுதுங்கறே. நாளை எண்ணறேங்கறே. இதை எல்லாம் சொல்லி பாவம் அவளை ஏன் இங்கே இப்பவே வரவழைக்கப் பார்க்கறே”

ஆனந்தவல்லி சொன்னாள். “பின்ன என்ன பண்றது. சாதாரணமா வரச் சொன்னா அவ வர மாட்டேன்கிறா”

“இப்பவே அவ வந்து என்ன உனக்கு ஆகணும்?”

“உன் பேரனுக்கு சீக்கிரமே ஒரு கல்யாணம் ஆகணும்... அவன் குழந்தையைப் பார்த்துக் கொஞ்ச நாள் கொஞ்சிட்டு நான் சாகணும்... இதை எல்லாம் அவன் போக்கிலயே விட்டா சீக்கிரம்

நடக்காது. அவனுக்கு எப்ப அந்தப் பொண்ணு மேல கோபம் தணியறது. எப்ப மத்ததெல்லாம் நடக்கிறது. அவன் அம்மா வந்தால் எல்லாத்தையும் கொஞ்சம் வேகப்படுத்திடலாம். அவன் நம்ம கிட்ட எல்லாம் நடிக்கலாம். அவன் அம்மா கிட்ட நடிக்க மாட்டான். எனக்குத் தெரியும்... அவ சொன்னா அவன் கேட்பான்... துர்காவுக்கும் விஷாலியைப் பிடிக்காமல் போகாது. முடிஞ்சா கல்யாணத்தை முடிச்சுட்டே இங்கே இருந்து அவங்க போகட்டும். என்ன சொல்றே?"

பரமேஸ்வரன் வாயடைத்துப் போய் தாயைப் பார்த்தார்.

**************

குருஜி தனக்கு ஒதுக்கப்பட்டிருந்த அறையில் ஓய்வெடுக்க முயன்று கொண்டு இருந்தார். முடியவில்லை. இது வரை எல்லாமே அவர் எதிர்பார்த்ததற்கும் அதிகமாகவே சாதகமாக நடந்து கொண்டு இருக்கிறது. சிவலிங்கம் அவர் கட்டுப்பாட்டில். கணபதி அவர் கட்டுப்பாட்டில். உலகில் மிகத் திறமையான ஆழ்மன ஆராய்ச்சியாளர் அவருடன் இருக்கிறார். மிகத் திறமையான ஆழ்மன சக்தியாளர்கள் ஆராய்ச்சிக்கு உதவ வந்துள்ளார்கள். ஆராய்ச்சிகளைத் தடுக்க முடிந்த அக்னி நேத்திர சித்தர் நெருங்க முடியாதபடி ஏற்பாடுகள் செய்தாகி விட்டது. ஆனாலும் கூட அவரால் திருப்தியுடன் இருக்க முடியவில்லை.

தியான மண்டபத்தில் அந்த மூவரும் விசேஷ மானஸ லிங்கத்துடன் தனியாக இருக்கிறார்கள். கணபதியை அவன் அறையிலேயே இருக்கும்படி சொல்லியாகி விட்டது. அவர்களது ஆரம்பக் கணிப்புக்கு அவன் ஒரு இடைஞ்சல் தான். இன்று தியான மண்டபத்தில் கருவிகளைக் கூடக் கண்காணிக்கவோ, பயன்படுத்தவோ வேண்டாம் என்று முன்பே ஜான்சன் சொல்லி இருந்தார். முழுமையாக விசேஷ மானஸ லிங்கத்தில் மூவர்

கவனமும் இருக்கட்டும் என்று அவர் நினைத்தார். அவர்கள் அபூர்வ சக்திகள் மூலம் விசேஷ மானஸ லிங்கத்தின் சக்திகள் பற்றி கணிக்கும் கணிப்பு என்ன என்று அறிய அவரைப் போலவே குருஜியும் ஆவலாக இருந்தார்.

அவர்கள் கருத்தை அறியும் வரை சும்மா இருக்க முடியாமல் குருஜி முன்பு கிடைத்த ஓலைச்சுவடிகளின் வார்த்தைகளைத் தெளிவுபடுத்தி அந்த தமிழாராய்ச்சி வல்லுனர் எழுதி இருந்ததை எடுத்துப் படித்தார். முதலாம் ராஜாதிராஜ சோழன் மற்றும் இரண்டாம் ராஜேந்திரச் சோழன் சம்பந்தப்பட்ட கதைகளை அந்த ஓலைச்சுவடிகளில் தெளிவாகப் புரிந்து கொண்ட அந்த தமிழாராய்ச்சி வல்லுனர் சிவலிங்கத்தின் தன்மை, அதனைப் பாதுகாப்பவர்கள் யார் என்பதை எல்லாம் புரிந்து கொள்ள முடியாமல் தென்னரசுவிடம் சொல்லி இருந்தது இப்போதும் குருஜியின் உதடுகளில் சிறு புன்னகையை வரவழைத்தது.

”வார்த்தைகள் தெளிவாய் கிடைச்சாலும் பொருள் தெளிவாய் விளங்கலை” என்று தமிழாராய்ச்சி வல்லுனர் சொல்லி இருந்தார். தத்துவ ஞானத்தில் கரை கண்டவர்களே அதன் பொருளை விளங்கிக் கொள்ள முடியும். குருஜிக்கு அந்த வார்த்தைகளின் பொருள் விளங்க சில முறைகள் படிக்க வேண்டி இருந்தது. படித்ததை மனதில் ஊறப்போட வேண்டி இருந்தது. பிறகு புரிந்தது.

ஓலைச்சுவடிகளை வைத்திருந்த ஜோதிடர் சுப்பிரமணியனின் தம்பி சொல்லும் வரை சிவலிங்கத்தைப் பாதுகாக்கும் மூன்று நபர்களைக் கொண்ட ரகசியக்குழு பற்றி குருஜி அறிந்திருக்கவில்லை. சிவலிங்கத்தைப் பூஜை செய்வது யார் என்று தீர்மானிக்கும் விஷயம் ஓலைச்சுவடிகளில் இல்லை என்று தமிழாராய்ச்சி வல்லுனர் சொன்ன போதும் பாதுகாக்கும் பொறுப்பு

என்ற பொருளில் இருந்த சில சுவாரசியத் தகவல்களை ஓலைச்சுவடிகள் தான் அவருக்கு அதைப் பின்பு தெரியப்படுத்தின.எல்லையில்லாத சக்திகளின் ஊற்றாக அந்த சிவலிங்கம் இருப்பதையும் அந்த சிவலிங்கத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு ஆரம்பத்தில் மூன்று சித்தர்களிடம் இருக்கும் என்பதையும், அந்த மூவர் பக்தி மார்க்கம், அறிவு மார்க்கம், ஞான மார்க்கம் என்று மூன்று மார்க்கங்களில் தேர்ந்தவர்களாக இருப்பார்கள் என்பதையும் ஓலைச்சுவடிகள் கூறின. பின் காலப் போக்கில் இரண்டு சித்தர்கள், ஒரு சித்தரல்லாதவர் வசம் சிவலிங்கம் செல்லும். பின் ஒரு சித்தர், இரண்டு சித்தரல்லாதவர் வசம் செல்லும். கடைசியில் சித்தரல்லாத மனிதர்களிடம் சிவலிங்கம் செல்லும். ஆனால் அந்த மூன்று மார்க்கங்களைச் சேர்ந்தவர்களாகவே மனிதர்களும் இருப்பார்கள். ஆனால் அப்படி முழுவதுமாக சித்தரல்லாத மனிதர்கள் வசம் சிவலிங்கம் செல்லும் காலம் மனித இனத்தின் மிகவும் மோசமான காலம், கலி முற்றிய காலம் என்று ஓலைச்சுவடிகள் சொல்லி இருந்தன. அந்தக் காலத்தைப் பற்றிய நிறைய மோசமான விவரங்கள் அவற்றில் இருந்தன.

சித்தர்கள் முழுவதுமாக அந்த சிவலிங்கத்தின் மீதிருக்கும் தங்கள் ஆதிக்கத்தை இழக்கும் அந்தக் கடைசி மாற்றம் நேர்வழியில் நடக்க வாய்ப்பில்லை என்றும் குழப்பம் இருக்கும் என்றும் ஓலைச்சுவடிகள் தெரிவித்தன. உண்மை தான் என்று குருஜி நினைத்தார். ‘ஈஸ்வரை நியமித்த பசுபதி நேரடியாக சிவலிங்கத்தை அவனிடம் ஒப்படைக்கவும் இல்லை, அவனை சந்திக்கவும் இல்லை. கணபதியை நியமித்தவரும் அவனை நேரில் சந்திக்கவில்லை. அவர் யார் என்றே இன்னும் கணபதி அறிந்திருக்கவில்லை. மூன்றாவது நபர் நியமனமாகவே இல்லை. அதற்கு முன் நான் இந்த சிவலிங்கத்தை என் கட்டுப்பாட்டில் கொண்டு வந்து விட்டேன்....”

”என்னை சித்தர்களோ மனிதர்களோ யாரும் நியமிக்கவில்லை. விதி தான் என்னை நியமித்து இருக்கிறது. சித்தர்கள் கட்டுப்பாட்டில் இருந்து சிவலிங்கம் விடுபடும் போது ’தெரிய வேண்டியவர்களுக்குத் தெரியும்’ என்று புனித கங்கையில் நின்று கொண்டு அந்த அகோரி சாது சொன்னது சரி தான். எனக்குத் தெரிய வந்ததும் விதியின் தீர்மானம் தான்....”

நினைக்கும் போதே குருஜிக்குப் பெருமிதமாக இருந்தது. கணபதி வீட்டுக்குச் சென்று அரக்கு வைத்து மூடிய உறையில் வைத்து அந்த ஜோதிடர் தந்து விட்டுப் போன கடிதத்தைப் படித்த போது அவருக்கு அதிர்ச்சி ஏற்பட்டது உண்மை தான். அவனை அவர் தேர்ந்தெடுத்ததாக நினைத்துக் கொண்டு இருந்த போது முன்பே வேறொரு நபரால் அவன் தேர்ந்தெடுக்கப்பட்டவனாக இருந்ததை அவரால் சகிக்க முடியவில்லை. விதியின் கைப்பாவையாக செயல்பட்டிருக்கிறோமோ என்று கூட சந்தேகம் அவரை அரித்தது. ஆனால் நன்றாக யோசித்துப் பார்த்த போது எல்லாம் சரியாகத் தான் முடிந்திருக்கிறது என்று தோன்றியது.

’சித்தர்கள் சக்தி கற்பனைக்கு அடங்காதது தான். ஆனால் அக்னி நேத்ர சித்தர் ஏதோ ஒரு காரணத்திற்காக மூன்றாவது ஆளைத் தேர்ந்தெடுப்பதில் தாமதம் செய்து விட்டார். நல்ல முகூர்த்தத்திற்காகக் காத்திருந்தாரா சரியான மனிதனிற்காக அவர் காத்திருந்தாரா என்று தெரியவில்லை. அதுவே அவருக்கு வினையாகி விட்டது. அதுவே சிவலிங்கத்தின் புதிய விதியாகி விட்டது. நான் அவரை முந்திக்கொண்டு விட்டேன். வேகமாக செயல்பட்டு விட்டேன்... கணபதிக்கு எழுதப்பட்ட கடிதத்தைக் காற்றில் பறக்க வைத்து தீயில் எரித்தது, சிவலிங்கத்திற்கு இமயமலைப்பக்கம் பூக்கும் பூக்களைக் கொண்டு வந்து அலங்கரித்தது போன்ற சித்து வித்தைகளில் காட்டிய தன் சக்தியை மூன்றாவது பாதுகாவலனைக் கண்டுபிடிக்க அவர் பயன்படுத்த

முடியாமல் போனது விதியே. விதியின் சக்திக்கு முன் சித்தர் சக்தியும் எம்மாத்திரம்?'

ஓலைச்சுவடிகளின் விளக்கங்களை மறுபடியும் ஒருமுறை குருஜி புரட்டினார். ஓலைச்சுவடிகளின் கடைசியில் இருந்த செய்யுள் போன்ற இரு வரிகளை எழுதியிருக்கும் விதம் மற்ற வரிகளை எழுதிய விதத்தில் இருந்து வித்தியாசப்பட்டிருக்கிறது என்றும் அதற்கு ஏதாவது பிரத்தியேகக் காரணம் இருக்கலாம் என்றும் தமிழாராய்ச்சி வல்லுனர் சொல்லி இருந்தார்.

அந்த வரிகளை மீண்டும் குருஜி படித்தார்.

தூய உளமறிவு கூடித் துஞ்சாமல் நாடினால் சேர்ந்திடும் மெய்ஞானம்

மூன்றும் காக்க மிஞ்சிடும் பூவுலகம் அன்றேல் நஞ்சாகும் சிவஞானம்

'தூய உள்ளமும், அறிவும் சேர்ந்து தூங்காமல் தேடினால் மெய்ஞானம் பெற முடியும். உள்ளம், அறிவு, ஞானம் மூன்றும் சேர்ந்து காத்தால் பூவுலகம் அழியாமல் மிஞ்சும். இல்லையேல் சிவஞானம் என்ற இறைஞானம் கூட அழிக்கும் விஷமாக மாறி விடும்' என்று பொருள் சொல்லலாம். இங்கே தூங்காமல் என்பதற்கு சோம்பல் இல்லாமல், தளராமல் என்று பொருள் எடுத்துக் கொள்ளலாம். அது தான் பொருத்தமாக இருக்கும்.

நல்ல தத்துவார்த்தமான விஷயம் என்பதால் வித்தியாசப்படுத்தி எழுதி இருக்கிறார்களா இல்லை வேறு ஏதாவது ஒரு காரணம் இருக்குமா என்று குருஜி பல முறை யோசித்துப் பார்த்திருக்கிறார். ஆனால் தத்துவம் விட்டால் வேறு ஒரே ஒரு அர்த்தம் தவிர மற்ற

அர்த்தம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. அந்த ஒரு அர்த்தமும் மகா அபத்தமாகத் தோன்றியது.

இன்னும் நியமிக்கப்படாத ஞானவழி ஆளை அறிவு, பக்தி மார்க்க ஆட்கள் சேர்ந்து தேடினால் கண்டுபிடிக்கலாம் என்ற அர்த்தமும் கொள்ளலாம். அந்த மூன்று பேரும் சேர்ந்தால் உலகத்தைக் காப்பாற்றலாம், இல்லா விட்டால் சிவலிங்கம் உலக அழிவிற்கான விஷமாகி விடும் என்றும் பொருள் கொள்ளலாம். அப்படி இருந்தால் அது நகைப்பிற்குரிய விஷயம் தான்.... இது வரை நியமன முறையில் நடந்த ஞானவழி ஆள் தேடிக் கண்டு பிடிக்க வேண்டிய நபராக ஆள் என்றாகி விடும்.

குருஜி எண்ணப் போக்கு இப்படியாக இருந்தது. ’அப்படி இருக்க வாய்ப்பே இல்லை.... அறிவு வழி நியமனமான ஈஸ்வரும், மனம்-பக்தி வழி நியமனமான கணபதியும் இனி சேர வாய்ப்பே இல்லை.... அதனால் அவர்கள் ஞானவழி ஆளைக் கண்டுபிடிக்க வாய்ப்பே இல்லை.... ஞான வழி ஆள் என்று வேறு ஒருவன் எங்கோ இருந்தால் கூட அவர்களுடன் சேரவும் வாய்ப்பே இல்லை... உண்மையான ஞானம் நான் தான்... சித்தர்கள் கட்டுப்பாட்டிலிருந்து விசேஷ மானஸ லிங்கம் எப்போது விலகியதோ அப்போதே சித்தர்கள் கடைபிடித்த நியமன வழிமுறையும் மாறி விட்டது. இனி ஞானம் தான் மற்ற இரண்டு வழி மனிதர்களைத் தீர்மானம் செய்யும். நான் அப்படித்தான் செய்திருக்கிறேன்..... கணபதியை நான் தீர்மானித்து இருந்தேன். ஆச்சர்யமாக அவர்களும் அவனையே நியமித்து இருக்கிறார்கள்.... ஆனால் அவர்கள் தேர்ந்தெடுத்த ஈஸ்வருக்குப் பதிலாக நான் ஜான்சனைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். உதயன் சொன்னது போல இந்த மண்ணின் மைந்தனாக ஜான்சன் இல்லாமல் இருக்கலாம். ஆனால் அறிவைப் பொருத்த வரை அது அவசியமும் இல்லை. ஞானத்திற்கு மட்டும் தான் இந்த மண்ணின் மகான்கள் பேர் போனவர்கள்.... அறிவு உலகமெல்லாம் பரவிக்

*கிடக்கிறது.... கணபதியை நான் இனி மெல்ல மாற்றுவேன். ஜான்சனை வழி நடத்துவேன்.... இனி என்ன நடக்க வேண்டும் என்பதை நான் தீர்மானிப்பேன்... இனியொரு விதி செய்வேன்....”*

*அவர் எண்ண ஓட்டத்தை கர்ணகடூரமான ஒரு அலறல் நிறுத்தியது. யார் இப்படி அலறுகிறார்கள் என்று அவர் திகைத்தார். யாரோ தலை தெறிக்க ஓடி வரும் சத்தம் கேட்டது....*

# அத்தியாயம் - 69

*ஈஸ்வருக்கு அக்னி நேத்ர சித்தர் திடீரென்று போய் விட்டது ஏமாற்றமாக இருந்தது. அவர் திடீரென்று வந்து அவன் எதிர்பார்க்காததை எல்லாம் சொல்லி, பெரிய பொறுப்பை அவன் மீது சுமத்தி, தத்துவம் பேசி, வந்தபடியே திடீரென்று மறைந்தும் போனது அவனுக்கு நியாயமாகத் தோன்றவில்லை. விசேஷ மானஸ லிங்கத்துடன் அவன் இப்படி சம்பந்தப்பட்டிருப்பதும், சித்தரைச் சந்திக்க முடிவதும் முன்பே தெரிந்திருந்தால் என்னென்ன கேள்விகள் எல்லாம் அவரிடம் கேட்க வேண்டும் என்பதை முன்கூட்டியே தயாரித்து வைத்துக் கொண்டு கேட்டிருக்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது.*

*அவன் தன்னம்பிக்கை இல்லாதவன் அல்ல. ஆனாலும் கூட குருஜியிடம் போய் மாட்டிக் கொண்ட விசேஷ மானஸ லிங்கத்தை மீட்டு, இந்த உலகம் சந்திக்க இருக்கும் அழிவிலிருந்து காப்பாற்றுகிற அளவு தனக்கு சக்தி இருக்கிறதாக அவனால் நம்ப முடியவில்லை....*

அம்மாவின் போன் கால் வந்தது. ஈஸ்வர் செல் போனை எடுத்துப் பேசினான். "ஹலோ சொல்லும்மா?"

"என்னடா குரல் என்னவோ மாதிரி இருக்கு. உடம்பு சரியில்லையாடா?"

அவன் குரலை வைத்தே அவன் மனநிலையை அம்மாவால் புரிந்து கொள்ள முடிந்தது அவனுக்கு ஆச்சரியமாய் இல்லை. அவன், அப்பா, அம்மா மூன்று பேரும் எப்போதும் மனதளவில் மிகவும் இணைந்தவர்கள். ஒருவரை ஒருவர் எப்போதும் படிக்க முடிந்தவர்கள். ஒருவரிடம் ஏற்படும் சின்ன மாற்றங்கள் கூட மற்ற இருவருக்கும் நிறைய தகவல்கள் தந்து விடும். அப்பா தான் இப்போது இல்லை.... அவர் இருந்திருந்தால் இப்போது நன்றாக இருந்திருக்கும் என்று அவனுக்குத் தோன்றியது...

"ஈஸ்வர்?" அம்மா குரல் கவலையுடன் கேட்டது.

"சொல்லும்மா. எனக்கு உடம்புக்கெல்லாம் ஒன்னும் இல்லை. நல்லாத் தான் இருக்கேன்ம்மா."

"நான் இந்தியாவுக்கு வந்துகிட்டிருக்கேண்டா"

ஈஸ்வர் திகைத்தான். "என்னம்மா திடீர்னு"

கனகதுர்கா ஆனந்தவல்லி போன் செய்து பேசியதைச் சொன்னாள். ஆனந்தவல்லி ஈஸ்வர் ஒரு பெண்ணைக் காதலிப்பதாய் சொன்னதை மட்டும் தவிர்த்து மற்றதெல்லாம்

சொன்னாள். ”....வயசானவங்க. அவ்வளவு தூரம் சொன்னதுக்கப்புறம் அங்கே வராமல் இருக்க மனசு கேட்கலைடா. நான் என் சவுகரியத்துக்கு வந்தால் ஒருவேளை அவங்களைப் பார்க்க முடியாமல் போயிட்டா அப்புறம் மனசுல அதுவே உறுத்திகிட்டிருக்கும். உன் தாத்தாவையும் பார்க்கணும்னு தோணுது. அதனால வேற எதையும் யோசிக்காமல் கிளம்பிட்டேன்....”

அம்மா வருவது ஈஸ்வருக்கு சந்தோஷமாய் இருந்தாலும் ஆனந்தவல்லி அவன் மனதில் சந்தேகத்தைக் கிளப்பினாள். ’பாட்டிய கொஞ்ச நேரத்துக்கு முன்னே தானே பார்த்தேன். நல்லா தானே இருந்தாங்க’

கனகதுர்கா எந்த விமானத்தில் வருகிறாள் என்பதை மகனிடம் தெரிவித்து நேரில் பார்க்கலாம் என்று சொல்லிப் பேச்சை முடித்துக் கொண்டாள். அவளுக்கு மகன் ஒரு பெண்ணைக் காதலிக்கிறான் என்பதையும், அவர்கள் வீட்டிலேயே அந்தப் பெண் இருக்கிறாள் என்பதையும் கேட்டது கூட இந்தியாவுக்கு உடனடியாகக் கிளம்ப முக்கியமான காரணமாய் இருந்தது.

ஓரிரு நாட்கள் மகன் குரலில் தெரிந்த அளவில்லாத சந்தோஷத்தை உணர்ந்த போதே மகன் காதல் வயப்பட்டிருப்பானோ என்கிற சந்தேகம் அவளுக்கு வந்திருந்தது. பின் அந்த சந்தோஷம் அவன் குரலில் காணாமல் போன போது அவளுக்கும் ஏமாற்றமாய் இருந்தது. அவனாக எதையும் சொல்லவில்லை. அவளாக மேற்கொண்டு விசாரிக்கவுமில்லை. ஆனந்தவல்லி சொன்னதைக் கேட்ட போது அவளுக்குப் பரபரப்பாக இருந்தது. ஆனந்தவல்லியையும் மாமனாரையும் பார்த்த மாதிரியும் ஆயிற்று, மகன் காதலியைப் பார்த்த மாதிரியும் ஆயிற்று என்று உடனடியாகக் கிளம்பி விட்டிருந்தாள்.

*ஈஸ்வரும் வீட்டுக்குக் கிளம்பினான். கிளம்புவதற்கு முன் பரமேஸ்வரனுக்குப் போன் செய்தான். "தாத்தா, பாட்டிக்கு என்ன ஆச்சு?"*

*பரமேஸ்வரன் தன் எதிரில் அமர்ந்திருந்த தாயை முறைத்தார். செல் போனைக் கையால் மறைத்துக் கொண்டு தாயிடம் கேட்டார். "ஈஸ்வர் உனக்கு என்ன ஆச்சுன்னு கேட்கறான்..... துர்கா அவனுக்குப் போன் செய்திருப்பா போல இருக்கு. என்ன சொல்றது?"*

*"எனக்கு குளிர் காய்ச்சல்னு சொல்லுடா"*

*அவளை முறைத்துக் கொண்டே பரமேஸ்வரன் பேரனிடம் சொன்னார். "அம்மாவுக்கு குளிர் காய்ச்சல் மாதிரி இருக்கு. ஆனா பயப்பட ஒன்னும் இல்லை ஈஸ்வர்"*

*"அம்மா கிட்ட பாட்டி பேசி இருக்காங்க. உடம்புக்கு முடியலைன்னும் சொல்லி இருக்காங்க போல இருக்கு. அவங்களையும் உங்களையும் பார்க்கணும்னு தோணி அம்மா உடனே இங்கே வரக் கிளம்பியிருக்காங்க தாத்தா"*

*"ரொம்ப சந்தோஷம் ஈஸ்வர். எப்ப உங்கம்மா இங்கே வந்து சேர்வா?" என்று கேட்டுக் கொண்ட பரமேஸ்வரன் பிறகு தாயிடம் அதைத் தெரிவித்தார்.*

*“எனக்குத் தெரியும்டா ஒரு தாயோட மனசு. என்னைப் பார்க்க இல்லாட்டி கூட விஷாலியைப் பார்க்க அவள் கிளம்புவாள்னு நினைச்சேன்... அதே மாதிரி கிளம்பிட்டா பார்த்தியா?”*

*“உன் நடிப்பு தெரிஞ்சா ஈஸ்வர் கோவிச்சுக்குவான் பார்”*

*அந்தப் பயம் ஆனந்தவல்லிக்குத் துளியும் இருக்கவில்லை. “தெரிஞ்சா தானே. அதை விடுடா, ஈஸ்வர் கல்யாணத்தை எந்த மண்டபத்துல வச்சிக்கலாம்?” என்று யோசனையோடு மகனைக் கேட்டாள்.*

*பரமேஸ்வரன் பெருமூச்சு விட்டார். ஈஸ்வர் வரும் வரை அவன் கல்யாண ஏற்பாடுகளை எப்படிச் செய்ய வேண்டும் என்றெல்லாம் மகனிடம் சொல்லிக் கொண்டு வந்த ஆனந்தவல்லி ஈஸ்வர் கார் போர்ட்டிகோவில் வந்து நிற்கும் சத்தம் கேட்டு வேகமாக எழுந்து தன் அறைக்கு ஓட்டமும் நடையுமாய் போனாள்.*

*ஈஸ்வர் வந்து பார்த்த போது ஆனந்தவல்லி தன் அறையில் போர்வையைப் போர்த்திக் கொண்டு படுத்துக் கொண்டு இருந்தாள். அவன் அருகில் வந்து நின்ற போது கஷ்டப்பட்டு கண்களைத் திறப்பது போல் நடித்தாள். “யாரு?”*

*“நான் ஈஸ்வர் பாட்டி. உடம்புக்கு என்ன ஆச்சு?”*

*பலவீனமான குரலில் பதிலை மெல்ல சொன்னாள். “திடீர்னு குளிர் காய்ச்சல் ஆரம்பிச்சுடுச்சுடா....”*

*“டாக்டருக்கு போன் செய்தாச்சா. இல்லை இனி மேல் தான் செய்யணுமா?”*

*ஆனந்தவல்லி அசரவில்லை. விரக்தி தொனிக்க சொன்னாள். “வேண்டாம்டா... இனி எனக்கு ஒரே டாக்டர் சாவு தான்.... அவர் கிட்ட நாம போக வேண்டியதில்லை.... அவராவே வந்துடுவாரு”*

*ஆனந்தவல்லி என்றுமே இப்படி விரக்தியாகப் பேசியவள் அல்ல என்பதால் அவளுக்கு நிஜமாகவே உடல்நிலை சரியில்லை என்ற முடிவுக்கு வந்த ஈஸ்வர் அவளை சிறிது நேரத்திற்கு முன்னால் சந்தேகப்பட்டதற்காகத் தன்னையே திட்டிக் கொண்டன். கனிவாக அவளிடம் சொன்னான். “பாட்டி அப்படி எல்லாம் பேசக் கூடாது. காய்ச்சல் தானேன்னு அலட்சியமா இருந்துடக் கூடாது. டாக்டருக்குப் போன் செய்றேன்...”*

*அவசரமாக ஆனந்தவல்லி சொன்னாள். “எனக்கு இங்க்லீஷ் மருந்தெல்லாம் கேட்காதுடா. உன் அத்தை கிட்ட கஷாயம் செய்யச்சொல்லு. அது குடிச்சா சரியாயிடும்...”*

*ஈஸ்வர் ஆனந்தவல்லியின் நெற்றியைத் தொட்டுப் பார்த்தான். காய்ச்சல் இருப்பதாய் தெரியவில்லை... உள் காய்ச்சலாக இருக்கும் போல் தெரிகிறது... எதற்கும் அவள் சொன்னது போல் கஷாயம் கொடுத்துப் பார்க்கலாம். அதிலும் குணமாகா விட்டால் டாக்டரை அழைக்கலாம் என்று நினைத்தவனாய் சொன்னான். “இப்பவே அத்தை கிட்ட சொல்றேன் பாட்டி. நல்லா ரெஸ்ட் எடுத்துக்கோங்க”*

விலகி இருந்த பாட்டியின் போர்வையைச் சரி செய்து விட்டு பாசமாய் தட்டிக் கொடுத்து விட்டு மீனாட்சியைத் தேடி அவன் போன பிறகு பரமேஸ்வரன் உள்ளே நுழைந்தார்.

“இவ்வளவு பாசம் வச்சிருக்கான் அவனைப் போய் ஏமாத்தறியே.... உன்னை இந்தப் பாவம் எல்லாம் சும்மா விடாது பார்” என்று தாயிடம் சொன்னார்.

ஆனந்தவல்லி சொன்னாள். “இது பாவம்னா குழந்தை கிட்ட “நீ சாப்பிடலைன்னா அம்மா அழுதுடுவேன்’னு நடிக்கிற அம்மாவும், ’குறும்பு செஞ்சா பூச்சாண்டி கிட்ட பிடிச்சு குடுத்துடுவேன்’னு பயமுறுத்தற அம்மாவும் கூட பாவம் செய்யறவங்க தான். நான் இத்தனையும் அவனுக்காக தாண்டா செய்யறேன்... இனி உன் மகள் கொண்டு வர்ற கஷாயத்தை வேற நான் அவனுக்காகக் குடிச்சுத் தொலையணும். இந்த தியாகத்தை எல்லாம் நீ உன் பாவ புண்ணியக் கணக்குல எடுத்துக்க மாட்டேன்கிறியே..”

**************

தியான மண்டபத்தில் விசேஷ மானஸ லிங்கத்தை, அதன் சக்தியை, பரிச்சயப்படுத்திக் கொள்ள அமர்ந்திருந்த மூன்று பேரும் விசேஷ மானஸ லிங்கத்தை மானசீகமாக அணுகிய விதம் வேறு வேறாக இருந்தது.

இந்தியாவிலேயே பிறந்து வளர்ந்திருந்த ஹரிராம் அந்த சிவலிங்கத்தை சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி விட்டு குருஜி குறிப்பிட்டிருந்த தொலைவிலேயே அமர்ந்து விசேஷ மானஸ லிங்கத்தில் தன் பார்வையையும் மனதையும் லயிக்க விட்டார். தனிப்பட்ட கடவுளையும், அதன் நிச்சயிக்கப்பட்ட தோற்றத்தையும் அவர் என்றுமே நம்பியதில்லை. இறைவன் ஒரு மகாசக்தி என்கிற

அளவிலேயே அவர் நம்பிக்கை இருந்தது. உருவமும், அருவமும் அற்ற அருவுருமாய் இருந்த சிவலிங்கத்தில் அவர் கவனம் குவிந்த சிறிது நேரத்திற்கெல்லாம் அவர் தனியானதொரு உலகில் சஞ்சரிக்க ஆரம்பித்தார்.

சமுத்திரமாய், ஆகாயமாய், அக்னியாய், மலையாய், சமவெளியாய், வயலாய் காட்சிகள் மனக்கண்ணில் தெரிய ஆரம்பித்தன. அவர் உருவமில்லாமல் அந்த பிரம்மாண்ட இடங்களில் காற்றில் மிதந்து கொண்டு பார்ப்பது போல் ஒரு பிரமை அவருக்கு ஏற்பட்டது. சிறிது நேரத்தில் அந்தக் காட்சிகள் எல்லாம் மறைய ஆரம்பித்தன. ஒரு வெட்ட வெளியில் அந்த விசேஷ மானஸ லிங்கம் தெரிந்தது. அதை அவர் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே அது வளர ஆரம்பித்தது. பெரிதாகி, பெரிதாகி, பெரிதாகிக் கொண்டே போய் அது ஆகாயத்தையும் கிழித்துக் கொண்டு இன்னும் உயர்வதாய் தோன்றியது. அவர் பிரமித்துப் போய் அதைப் பார்த்துக் கொண்டு இருக்கையிலேயே ஏதோ ஒரு சக்தி அவரை இழுக்க ஆரம்பிப்பது போலத் தோன்றியது. இது ஆபத்தான கணம் என்று புலப்படவே அவர் உடனடியாக சர்வ சக்தியையும் திரட்டி பழைய நிலைக்கு வந்தார். மீண்டும் அதை வணங்கி விட்டு அவர் தியான மண்டபத்தில் இருந்து வெளியேறினார்.

கியோமியைப் பொறுத்த வரை விசேஷ மானஸ லிங்கம் புத்தர் பிறந்த மண்ணில் வணங்கப்படும் தெய்வம். அதில் பிரம்மாண்டமான சக்திகள் இருப்பதாய் ஜான்சன் சொல்லி இருக்கிறார். எனவே வணக்கத்திற்கும், மரியாதைக்கும் அது உரியது என்று அவள் நினைத்தாள். தங்கள் நாட்டு வழக்கப்படி அதை வணங்கி அதில் தன் கவனத்தைக் குவித்து தியான நிலைக்குச் சென்றாள். அவள் மானசீகமாக உணர்ந்த காட்சி ஹரிராம் கண்ட காட்சியாக இருக்கவில்லை. விசேஷ மானஸ லிங்கம் சிறிது

நேரத்தில் மெல்ல அந்தரத்தில் மிதக்க ஆரம்பித்தது. அவள் ஆச்சரியத்துடன் அதைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

விசேஷ மானஸ லிங்கம் ஆகாயத்தில் சஞ்சரிப்பது போல் தோன்றியது. சிறிது நேரத்தில் விசேஷ மானஸ லிங்கம் பனி மூடிய ஒரு மலையின் முகட்டில் தங்கியது. அது மவுண்ட் ஃப்யூஜி என்ற ஜப்பானியப் புனித மலை என்பதில் கியோமிக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை. ஏனென்றால் அவள் அங்கே ஒரு முறை போயிருக்கிறாள். மிகத் தத்ரூபமாய் கியோமி அந்தப் புனித மலையை நேரில் பார்ப்பது போல இப்போதும் பார்த்தாள். இப்போது பார்ப்பதில் ஒரு பெரிய வித்தியாசம் இருந்தது. இப்போது அவள் வானத்தில் இருந்து பார்ப்பது போல் இருந்தது. அதைச் சுற்றிலும் உள்ள ஐந்து பெரிய ஏரிகளையும் அவளால் பார்க்க முடிந்தது. கவாகுச்சி, யமனாகா, சாய், மொடொசு, ஷோஜி என்ற அந்த ஐந்து ஏரிகளிலும் விசேஷ மானஸ லிங்கம் அழகாய் பிரதிபலிப்பதை வியப்புடன் அவள் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அந்த ஃப்யூஜி மலையின் உச்சியில் இருந்த விசேஷ மானஸ லிங்கத்தை புத்தரைப் போன்ற ஒரு உருவம் வணங்குவதை அவள் தெளிவாகப் பார்த்தாள். சிறிது நேரத்தில் புத்தர் அந்த சிவலிங்கத்திற்குள்ளே போய் மறைந்தார். திகைப்புடன் பார்த்துக் கொண்டிருந்த அவளையும் அந்த சிவலிங்கம் இழுப்பது போல உணர்வு தோன்றவே கியோமியும் ஜான்சன் எச்சரித்த ஆபத்தான கணம் அது என்று உடனடியாகப் புரிந்து கொண்டு கவனத்தை சிவலிங்கத்தில் இருந்து கஷ்டப்பட்டுத் திருப்பினாள். முழுவதுமாகத் தன் பழைய நிலைக்குத் திரும்பிய அவள் விசேஷ மானஸ லிங்கத்தை ஒரு முறை வணங்கி விட்டு அந்தத் தியான மண்டபத்தை விட்டு வெளியேறினாள்.

*அலெக்ஸி பிறந்ததில் இருந்தே இறைவன் இருப்பதை நம்பாதவர். ஆழ்மன சக்தியையும் கூட அவர் நம்பாதவராகத் தான் இருந்தார் என்றாலும் பிற்கால அனுபவங்களும், கற்றுக் கொண்ட வித்தைகளும் அவரை ஆழ்மன சக்தியை நம்ப வைத்திருந்தன. ஆனால் இறைவனைப் பற்றிய அவநம்பிக்கை மட்டும் இன்னமும் மாறாமலேயே இருந்தது. அதனால் அவர் மற்ற இருவரைப் போல் வணங்கி விட்டு தியான நிலைக்குப் போகும் சிரமத்தை மேற்கொள்ளவில்லை.*

*அவர் ஆல்ஃபா அலைகளுக்குச் சென்று தன் கவனத்தை விசேஷ மானஸ லிங்கம் மீது திருப்பினார். சிறிது நேரம் அந்த சிவலிங்கத்தில் இருந்து அவருக்கு எதுவும் பிடிபடவில்லை. சிவலிங்கம் சாதாரணமாகவே தோன்றியது.*

*ஜான்சனின் எச்சரிக்கை அவசியம் இல்லாதது போல அலெக்ஸிக்குத் தோன்றியது. இந்தியர்கள் தான் சாமி, பூதம் என்று பயப்படுகிறார்கள் என்றால் இந்த ஜான்சனும் சேர்ந்து ஏன் பயப்படுகிறார் என்று தோன்றியது. ஏதாவது சக்தி கண்டிப்பாக அந்த சிவலிங்கத்தில் இருக்கக்கூடும், ஆனாலும் இவர்கள் பயப்படுவது போல எதுவும் இருக்க வாய்ப்பில்லை என்று அவர் நினைத்தார்.*

*’ஜான்சன் அந்த குருஜியை எங்கள் மூன்று பேரை விடப் பெரிய ஆள் போல நினைத்து விட்டார். நாங்கள் செய்கிற வேலையை அந்த ஆள் செய்ய முடியுமா? பிரசங்கங்கள் செய்வது வேறு, சக்திகளைப் பெற்றிருப்பது வேறு. உலக அளவில் பிரபலம் அடைந்து விட்டால் யாருக்கும் அறிவுரை சொல்லலாம் என்று அந்த குருஜி நினைத்து விட்டார். இதில் கடல் உவமானம் வேறு!....’*

அலெக்ஸிக்கு வேடிக்கையாக இருந்தது. இந்த எண்ண ஓட்டங்கள் ஆல்ஃபா அலைகளில் இருந்து பீட்டா அலைகளுக்கு அலெக்ஸியைக் கொண்டு வந்து விட்டது புரிய அவர் தன் எண்ணங்களை ஒதுக்கி விட்டு மீண்டும் ஆல்ஃபா அலைகளுக்குப் போனார். அலெக்ஸி மீண்டும் அந்த சிவலிங்கத்தில் தன் கவனத்தை குவித்தார். சிவலிங்கம் மெல்ல ஒளிர்ந்தது. பின் சிவலிங்கம் திடீரென்று காணாமல் போனது.... சிவலிங்கம் எங்கோ சென்று ஒளிந்து கொண்டது போல அலெக்ஸிக்குத் தோன்றியது.

அலெக்ஸி மேலும் தன் கவனத்தை ஆழப்படுத்தினார். சிவலிங்கம் இருந்த இடத்தில் ஒரு மகாசமுத்திரம் தெரிந்தது. இது குருஜியின் உவமானத்தால் வந்த வினை என்று நினைத்த அலெக்ஸி சமுத்திரத்தைப் புறக்கணித்து விட்டு சிவலிங்கத்தைத் தேடினார். சமுத்திரத்தைப் புறக்கணிக்க முடியவில்லை. பேரலைகள் வேகமாய் நெருங்கி வருவது போல் அவருக்குத் தோன்றியது. அதைப் பொருட்படுத்தாமல் அலெக்ஸி மானசீகமாக முன்னேறினார். சிவலிங்கம் தென்படவில்லை. காணும் இடமெல்லாம் சமுத்திரத்தின் நீர்ப்பரப்பு... திடீரென்று அலைகளும் நின்று விட்டன.... வினோதமாக இருக்கிறதே என்று திரும்பிப்பார்த்த போது தூரத்தில் அலைகள் தெரிந்தன.... அப்போது தான் அவருக்கு சமுத்திரத்தின் அலைப்பகுதியையும் தாண்டி நிறையவே முன்னேறி வந்திருக்கிறோம் என்று புரிந்தது....

*‘உண்மையான சமுத்திரம் என்றால் இவ்வளவு தூரம் வந்திருக்கவே முடியாது.... மனக்காட்சியானதால் சுலபமாக வந்திருக்கிறோம்.... எங்கே சிவலிங்கம்.....?’*

திடீரென்று பிரம்மாண்டமாய் சிவலிங்கம் அவர் முன்னால் சமுத்திரத்தில் இருந்து மேல் எழுந்தது. இது அவர் தியான

*மண்டபத்தில் பார்த்த சாதாரண அளவைக் கொண்ட சிவலிங்கம் அல்ல. அதனைக் காட்டிலும் பலநூறு மடங்கு பெரியது. அலெக்ஸி வெலவெலத்துப் போனார். சிவலிங்கத்திடம் இருந்து விலகிப் பின்னுக்குப் போகப் பார்த்தார். சிவலிங்கம் அவரை நோக்கி முன்னேறியது. அலெக்ஸி பின்னால் திரும்பி ஓடப்பார்த்தார். சமுத்திரம் நிஜமானது போல் ஒரு பிரமை. அவர் சமுத்திரத்தில் மூழ்க ஆரம்பித்தார்.... மூழ்கும் போது சமுத்திரத்தின் அடியிலும் சிவலிங்கத்தின் அடிப்பாகம் பிரம்மாண்டமாய் தெரிந்தது. சமுத்திரம் அவரை மேல் மட்டத்திற்கு மறுபடி இழுத்தது. மேல்மட்டம் வந்த போது அலெக்ஸி அண்ணாந்து பார்த்தார். சிவலிங்கத்தின் அடிப்பகுதியே கண்ணுக்கு எட்டிய தூரம் தெரிந்தது. அதுவே வானைத் தொட்டு நின்றது.... மீதி எங்கே?*

*அலெக்ஸியின் இதயம் வாய் வழியாக வந்து விடும் போலத் தோன்றியது. பெரும் பீதியுடன் அலறினார்....*

*அந்த நேரத்தில் தியான மண்டபத்தின் மிக அருகில் இருந்தவன் மகேஷ் தான். அவன் காரில் வைத்திருந்த தன் லாப்டாப்பை எடுத்துக் கொண்டு தனதறைக்குச் சென்று கொண்டிருந்தான். அலறல் சத்தம் கேட்டு தியான மண்டப ஜன்னல் வழியே உள்ளே பார்த்தான்.*

*அலெக்ஸி குருஜி குறித்திருந்த எல்லையைத் தாண்டி சில அடிகள் சிவலிங்கத்தை நோக்கி முன்னேறி இருந்தார். அலெக்ஸியின் பார்வை விட்டத்தில் இருந்தது. அலெக்ஸியின் கண்கள் பெரிதாய் விரிந்திருந்தன. அந்தக் கண்களில் தெரிந்த பயம் மகேஷிற்கு பசுபதியைக் கொன்றவன் முகத்தில் தெரிந்த பயத்தை நினைவுபடுத்தியது....*

*மகேஷ் குருஜி அறையை நோக்கி ஓட்டம் எடுத்தான்...*

# ***அத்தியாயம் - 70***

***மகேஷ் மூச்சு வாங்க ஓடி வந்து குருஜி அறையில் வந்து நின்றவுடன் குருஜி கேட்டார். "என்ன மகேஷ்?"***

***மகேஷிற்கு உடனடியாகப் பேச்சு வரவில்லை. குருஜியின் பக்கத்து அறைகளில் தங்கி இருந்த தென்னரசுவும், ஜான்சனும் கூட குருஜியின் அறைக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களும் ஒரே குரலில் கேட்டார்கள். "என்ன மகேஷ்?"***

***மகேஷ் மூவரையும் பேந்தப் பேந்தப் பார்த்தான். அவன் நிறையவே மிரண்டு போயிருந்தான். அவனுக்கு என்ன சொல்வது என்று கூட விளங்கவில்லை. கஷ்டப்பட்டு தியான மண்டபம் இருந்த திக்கைக் கைகாட்டி "அலெக்ஸி... அலெக்ஸி....." என்று குழறினான்.***

***என்ன ஆகியிருந்திருக்கும் என்பதை யூகிக்க முடிந்த ஜான்சன் உடனே தியான மண்டபத்தை நோக்கி ஓடினார். அவர் பின்னாலேயே மூவரும் ஓடினார்கள். குருஜியால் இந்த வயதில் தங்களுக்கு சரிசமமாக ஓடி வர முடிவது மகேஷிற்கும், தென்னரசுவிற்கு ஆச்சரியமாக இருந்தது. அவர்கள் போகும் போது பாபுஜியும் வந்து சேர்ந்து கொண்டார்.***

***ஜான்சன் தியான மண்டபத்தை அடைந்த போது அலெக்ஸி விட்டத்தைப் பார்த்தபடி விசேஷ மானஸ லிங்கத்திற்கு மூன்றடி தூரத்தில் நின்று கொண்டு இருந்தார். அவர் முகம் பேயறைந்தது போல மாறி இருந்தது. நிலைமையைப் பார்த்த ஜான்சனுக்கு கால் வினாடிக்கும் குறைவான நேரத்தில் என்ன செய்ய வேண்டும்***

என்பது புரிந்தது. ”அலெக்ஸி” என்று ஜான்சன் தொண்டை கிழிய கத்தினார்.

தன்னை அழைத்த சத்தம் கேட்டு அலெக்ஸி நிஜ உலகத்திற்குத் திரும்பினார். ஆனால் பார்த்த காட்சியின் பாதிப்பில் இருந்து அவரால் திரும்ப முடியவில்லை. அவர் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. வியர்வை மழையில் நனைந்து போயிருந்த அவர் திரும்பிப் பார்த்தார். ஜான்சன் கத்தினார். “பின்னால் வா”.

அலெக்ஸி பிறகு தான் விசேஷ மானஸ லிங்கத்தை நெருங்கி இருப்பதைத் திகிலுடன் கவனித்தார். அவர்கள் எல்லோருமே தள்ளியே இப்போதும் நின்று கொண்டிருப்பதையும் கவனித்தார். உடனடியாகப் பின் வாங்கி விட வேண்டும் என்று புரிந்து கொண்டாலும் அலெக்ஸியின் கால் தரையில் பதிந்து விட்டது போலத் தோன்றியது. காலைத் தரையில் இருந்து எடுக்கவே முடியவில்லை. அலெக்ஸி பீதியுடன் அவர்களைப் பார்த்தார்.

ஜான்சன் என்ன செய்யலாம் என்பது போல் குருஜியைப் பார்த்தார். குரு மெல்ல ‘’ஓம்” என்று ஓங்கார மந்திரத்தைச் சொல்ல ஆரம்பித்தார். ஜான்சனும் அதில் இணைந்து கொண்டார். தென்னரசுவும் அந்த ஓங்கார மந்திரத்தை அவர்களுடன் சேர்ந்து உச்சரிக்க ஆரம்பித்தார்.

ஜான்சன் அலெக்ஸிக்கு “நீயும் சொல்” என்று சைகை செய்தார். தலையசைத்து விட்டு அலெக்ஸியும் சொல்ல ஆரம்பித்தார். இரண்டு நிமிடங்களில் அலெக்ஸியால் காலைத் தூக்க முடிந்தது. முடிந்த மறு கணம் அவர் அவர்களருகே வந்திருந்தார். கண்ணிமைப்பதற்குள் அங்கிருந்து தப்பித்தால் போதும் என்று அலெக்ஸி வந்து சேர்ந்த

வேகம் பாபுஜியை மிகவும் ஆச்சரியப்படுத்தியது. ‘பயம் எப்படியெல்லாம் வேகமாக மனிதனை இயங்க வைக்கிறது!’

என்ன ஆயிற்று என்று அலெக்ஸியிடம் கேட்க பாபுஜிக்கு ஆவலாக இருந்தது. அவர் வாயைத் திறந்த போது ஜான்சன் தன் கண்டிப்பான பார்வையால் தடுத்தார். பாபுஜி வாயை மூடிக் கொண்டார். தென்னரசுவும், மகேஷும் கூட அலெக்ஸியிடம் கேட்க நினைத்திருந்தனர். ஜான்சன் பாபுஜியைப் பார்த்த பார்வையில் அவர்களும் மௌனத்தைக் கடைபிடித்தார்கள்.

அலெக்ஸியிடம் ஜான்சன் சிரித்துக் கொண்டே கேட்டார். ”எப்படி இருந்தது உன் அனுபவம்?”

இன்னும் திகில் விலகாத அலெக்ஸி ’என்ன இவர் இப்படி தமாஷாகக் கேட்கிறார்’ என்று நினைத்தார். ஆனால் ஜான்சன் பாணியில் தானும் இயங்கிய குருஜியும் சிரித்துக் கொண்டு அலெக்ஸியின் தோளைத் தட்டிக் கொடுத்தார். குருஜி மற்றவர்களைப் பார்த்து லேசாகத் தலையசைக்க பாபுஜியும், தென்னரசுவும் அதைப் புரிந்து கொண்டு தாங்களும் சிரித்தனர். அலெக்ஸிக்குக் கூட உடனே அது சிரிக்கக் கூடிய விஷயமாகவே தோன்ற ஆரம்பித்தது. அவரும் வரட்டுச் சிரிப்பு சிரித்தார். ஆனால் அவர்களுக்கு அவரால் பதில் சொல்ல முடியவில்லை.

அவர்களில் சிரிக்காமல் இருந்தவன் மகேஷ் மட்டும் தான். அவனுக்கு நடிப்பிற்காகக் கூட சிரிப்பு வரவில்லை. அலெக்ஸி மட்டும் விசேஷ மானஸ லிங்கத்தை நெருங்கி இருந்தால் அவால் இன்னேரம் உயிரோடு இருந்திருக்க முடியாது என்று உறுதியாக நம்பிய அவனுக்கு சிரிப்பு வரவில்லை.

ஜான்சன் அலெக்ஸியிடம் புன்னகையுடன் சொன்னார். “நீ போய் சிறிது நேரம் இளைப்பாறிட்டு குளிச்சுட்டு குருஜியின் ரூமுக்கு வா அலெக்ஸி. பிறகு பேசலாம்”

அலெக்ஸி தலையசைத்து விட்டு தனதறைக்குக் கிளம்பினார்.

**************

அலெக்ஸியின் அலறலுக்குச் சிறிது நேரத்திற்கு முன் வரை கணபதி நேரம் போகாமல் கஷ்டப்பட்டான். பேச்சுத் துணைக்கும் ஆளில்லாமல் எத்தனை நேரம் தான் அறைக்கு உள்ளேயே முடங்கிக் கிடப்பது? பிள்ளையார் ஞாபகம் அதிகமாய் வந்தது. சிவலிங்கத்தின் அருகே கூட இருக்க விடாமல் ”ரெஸ்ட் எடுத்துக்கோ கணபதி” என்று குருஜி சொல்லி விட்டதால் தன் ஏ.சி. அறையில் ஒரு குட்டித் தூக்கமும் போட்டு விட்டு பிறகு நேரம் போகாமல் வெளியே வந்தான்.

அவர்கள் தங்கி இருந்த கட்டிடத்தில் அறைகள் இரண்டு பிரிவுகளில் இருந்தன. கணபதி, ஹரிராம், கியோமி, அலெக்ஸி ஆகியோர் அறைகள் ஒரு பகுதியிலும் குருஜி, பாபுஜி, ஜான்சன், தென்னரசு, மகேஷ் அறைகள் இன்னொரு பகுதியிலும் இருந்தன. கணபதி தன் அறையில் இருந்து வெளியே வந்த போது பக்கத்து அறையிலிருந்து ஹரிராமும் வெளியே வந்து வெளியே இருந்த தோட்டத்து செடிகளைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

கணபதி அவரைப் பார்த்தவுடன் ஒரு கும்பிடு போட்டான். அவரும் அவனைப் பார்த்து கை கூப்பினார். அவருக்குப் புரியுமோ, புரியாதோ என்ற சந்தேகம் இருந்தாலும் கணபதி தமிழில்

ஹரிராமிடம் சைகையுடன் சொன்னான். “எனக்கு தமிழ் தவிர வேற பாஷை தெரியாது. நீங்க ஹிந்திக்காரரா?”

ஹரிராம் தமிழிலிலேயே சொன்னார். “நான் மராட்டி. ஆனால் தமிழ் நல்லாத் தெரியும்.... எழுதப் படிக்க மட்டும் தெரியாது....”

கணபதிக்கு சந்தோஷம் தாங்கவில்லை. தமிழ் தெரியும் என்று சொல்லி விட்டாரே! சிவனின் சக்தியைப் பரிசோதனை செய்ய வந்தவர் அவனுக்கு ஆசிரியர் போலத் தோன்றினார். அவர் மற்ற இரண்டு பேருடன் சென்று சிறிது நேரம் சிவனுடன் இருந்தது அவனுக்குத் தெரிந்திருந்ததால் அவரிடம் ஆவலாகக் கேட்டான். “எங்க சிவன் எப்படிங்க? பரவாயில்லையா?”

ஹரிராம் இதை எதிர்பார்க்கவில்லை. அவன் கேட்ட விதம் தன் குழந்தையின் பள்ளிக்கூட முதல் நாளில் ஆசிரியரிடம் ‘எப்படி என் குழந்தை? ‘ என்று கேட்கும் தாயின் அக்கறையாக இருந்தது. ‘யாரிடம், யார், யாரைப் பற்றிக் கேட்பது!’ என்று வியந்தார் ஹரிராம். உலகத்தைக் கட்டிக் காக்கும் இறைவனையே தன் குழந்தை போல் நினைக்கும் தகுதியும், மனமும் அந்த வெள்ளை உள்ளத்திற்கு இருப்பது அவருக்கு பிரமிப்பாய் இருந்தது. அவர் என்ன சொல்வது என்று யோசித்த போது தான் அலெக்ஸியின் அலறல் சத்தம் கேட்டது. தொடர்ந்து யாரோ ஓடும் சத்தம் கேட்டது.

கணபதி பயந்து போய் ஹரிராம் அருகே வந்து நின்று கொண்டான். “பாவம் யார் இப்படிக் கத்தறாங்க? யார் இப்படி தலை தெறிக்க ஓடறாங்க”

சத்தம் வந்த திசையை நோக்கிப் பார்வையை செலுத்திய ஹரிராம் தியான மண்டபத்தில் நடப்பதை நேரில் பார்ப்பது போலப் பார்த்தார். பின் கணபதியிடம் சொன்னார். ”பாவம் யாரோ பயங்கரமான கனவு கண்டு பயந்துட்டாங்க போல இருக்கு. சத்தம் கேட்டுட்டு யாரோ பார்க்க ஓடறாங்க”

அவர் சொன்னதற்கப்புறம் அப்படியே தான் இருக்க வேண்டும் என்று உறுதியாக நம்பி விட்ட கணபதியின் பயம் நொடியில் மறைந்தது. “இதுக்கு தான் சொல்றது, தூங்கப் போகிறதுக்கு முன்னால் சாமி கும்பிடணும்னு... சாமி கும்பிட்டுட்டுத் தூங்கினா மோசமான கனவெல்லாம் வராது” என்று கணபதி தீர்க்கமாகச் சொன்னான்.

ஹரிராம் அவனை சுவாரசியத்துடன் பார்த்தார். இப்போது வேறு சிலரும் ஓடும் சத்தம் கேட்டது. ஹரிராம் தியான மண்டபத்தின் பக்கம் பார்த்த போது ஏதோ திரையில் அவர் படம் பார்ப்பது போல் இருந்தது கணபதியை வியக்க வைத்தது. அவர் உண்மையாகவே படம் பார்ப்பது போல பார்த்துக் கொண்டு இருக்கிறார் என்பதை அவன் அறியவில்லை.

சிறிது நேரம் கழித்து அலெக்ஸி தளர்ந்த நடையுடன் தனதறைப்பக்கம் வந்த போது கணபதியையும், ஹரிராமையும் பார்த்தார். அவர்களைப் பார்த்து அலெக்ஸி நமட்டுச் சிரிப்பு சிரித்தார். ஹரிராமும் அவரைப் பார்த்துப் புன்னகைக்க, கணபதி வெளிநாட்டுக்காரரான அவரை முறைப்படி வணங்குவதாக நினைத்து சல்யூட் அடித்தான். அலெக்ஸி முகத்தில் நிஜமாகவே ஒரு இளம் சிரிப்பு மலர்ந்தது. அவர் தன் அறைக்குள் போய் விட்டார்.

***சிவலிங்கம் பற்றிக் கேட்ட தன் கேள்விக்கு ஹரிராம் இன்னமும் பதில் அளிக்கவில்லை என்று நினைவுக்கு வந்த கணபதி மறுபடி ஹரிராமிடம் கேட்க வாயைத் திறந்தான். அந்த நேரமாகப் பார்த்து மகேஷ் அங்கு வந்தான். ஹரிராமிடம் குருஜி அறைக்கு வருமாறு சொல்லி விட்டு கணபதியை முறைத்துப் பார்த்து விட்டு கியோமியின் அறையைத் தட்டினான்.***

***கணபதி நினைத்துக் கொண்டான். "இந்த அண்ணனுக்கு ஏனோ என்னைப் பிடிக்கலை".***

***கதவைத் திறந்த கியோமியிடம் பத்து நிமிடம் கழித்து குருஜியின் அறைக்கு வரச் சொல்லி விட்டு மகேஷ் போய் விட்டான். ஹரிராம் கணபதியைப் பார்த்து தலையசைத்து விட்டு குருஜி அறைக்குப் போய் விட்டதால் கணபதிக்கு அவனுடைய சிவலிங்கம் பற்றி அவர்கள் அபிப்பிராயத்தை அறிந்து கொள்ள முடியாமல் போனது.***

***ஆனால் ஜான்சனும் குருஜியும் ஹரிராமிடமும், கியோமியிடமும் விசேஷ மானஸ லிங்கத்துடனான அவர்கள் அனுபவங்களை தனித்தனியாக அழைத்துப் பேசி பெற்றுக் கொண்டனர். ஹரிராமும், கியோமியும் போன பிறகு குருஜி ஜான்சனிடம் கேட்டார். " நீ என்ன நினைக்கிறாய் ஜான்சன்?"***

***"அவரவர் எதைப் புனிதமாயும், சக்தியாயும் நினைத்தார்களோ அதையே அவர்களுக்குக் காட்சியாய் விசேஷ மானஸ லிங்கம் காட்டி இருக்குன்னு நினைக்கிறேன்"***

***"அலெக்ஸி?"***

“அவனுக்குப் புனிதம்னு எதுவும் இருப்பதாய் தெரியலை. சக்தி மட்டும் தான் தெரியும். அதனால் விசேஷ மானஸ லிங்கம் சக்தியை மட்டும் காட்டி இருக்கணும்... என்ன பார்த்தான்னு அவன் சொன்னால் தான் தெரியும். ஆனால் அவன் பயம் நீடிச்சா அவன் நம்ம ஆராய்ச்சிக்குப் பயன்பட மாட்டான் குருஜி. உடனடியா அவன் பயத்தைப் போக்க நாம ஏதாவது செய்தாகணும்...”

“அவன் என்ன தப்பு செய்திருப்பான்னு நீ நினைக்கிறே ஜான்சன்....”

”அலட்சியமாய் இருந்திருப்பான்னு தோணுது. அது அவனை எச்சரிக்கையாய் இருக்க விட்டிருக்காது...”

குருஜிக்கு மனிதர்களின் முட்டாள்தனம் சலிப்பைத் தந்தது. விசேஷ மானஸ லிங்கம் சாதாரணமானதல்ல என்பதை ஜான்சன் அவர்கள் மூவருக்கும் பல முறை சொல்லி இருக்கிறார். சௌகரியமான எல்லையிலேயே நின்று கொள்ளும்படி திரும்பத் திரும்ப சொல்லி இருக்கிறார். சர்வ ஜாக்கிரதையுடன் இருக்கச் சொல்லி எச்சரித்து இருக்கிறார். குருஜியும் தன் பங்குக்கு சமுத்திரத்தின் உதாரணம் சொல்லி விளக்கி இருக்கிறார். கடைசியில் எல்லாம் தெளிவாகப் புரிந்த மாதிரி காட்டிக் கொண்டு இப்படி முட்டாள்தனம் செய்தால் என்ன செய்வது! என்ன விசேஷ சக்திகள் இருந்து என்ன பயன்!

அலெக்ஸி சிறிது நேரத்தில் வந்து சேர்ந்த போது ஜான்சன், குருஜி இருவரும் மிக நெருங்கிய நண்பனை வரவேற்பதைப் போல அவரை வரவேற்றார்கள். அலெக்ஸி தோற்றத்தில் நிறைய

முன்னேற்றம் தெரிந்தது என்றாலும் பழைய அதிர்ச்சியின் தடயம் இன்னும் லேசாகத் தெரிந்தது.

அலெக்ஸியை உட்கார வைத்து விட்டு ஜான்சன் விசேஷ மானச லிங்கத்துடனான சற்று முந்தைய அனுபவத்தைக் கேட்டார்.

அலெக்ஸி சற்று தயக்கத்துடன் தன் அனுபவத்தைச் சொன்னார். ஆனால் அந்த அனுபவத்திற்கு முன் ஜான்சனையும், குருஜியையும் பற்றி ஏளனமாக நினைத்ததை அவர் சொல்லவில்லை. திடீரென்று பார்வையில் இருந்து மறைந்த சிவலிங்கம், சமுத்திரத்தின் நடுவிலிருந்து பிரம்மாண்டமாய் எழுந்ததைச் சொன்ன போது அவர் குரலில் நடுக்கம் தெரிந்தது. அந்த நிகழ்ச்சிகளை முழுமையாய் விவரிக்கச் சொல்லிக் கேட்டு முடித்த பிறகும் ஜான்சனும், குருஜியும் எந்த அதிர்ச்சியும் கொள்ளாதது அலெக்ஸிக்கு ஆச்சரியமாய் இருந்தது.

ஜான்சன் அவரிடம் பொறுமையாய் சொன்னார். “அலெக்ஸி. விசேஷ மானஸ லிங்கம் உனக்கிருப்பதை விட ஆயிரம் மடங்கு விசேஷ சக்திகள் கொண்ட சித்தர்களால் உருவாக்கப்பட்டு, பூஜிக்கப்பட்டு வந்தது. ஆயிரம் வருஷங்களுக்கு மேல் அவர்களால் ஆவாகனம் செய்யப்பட்ட சக்திகளை சேமித்து வைக்கப்பட்டது. இதை விசேஷ மானஸ லிங்கத்தை நீ அணுகும் போது எப்போதும் நினைவு வைத்திருக்க வேண்டும். அதை நீ அலட்சியமாக அணுகி இருக்கலாம். அதில் அப்படி என்ன பெரிய சக்தி இருக்குன்னு நினைச்சிருக்கலாம். முதலில் அந்த சிவலிங்கம் காணாமல் போனது உன் எண்ணத்தின் பிரதிபலிப்பாய் இருக்கலாம்.... பெரிதாய் ஒன்றுமில்லைன்னு நினைச்சதால் அதற்கேற்ற மாதிரி இல்லாமல் போயிருக்கலாம்.... அடுத்ததாய் நீ பார்த்த பிரம்மாண்டம் தான் சிவலிங்கத்தின் உண்மையான சக்தியின் ஒரு வெளிப்பாடு....

*உனக்குத் தெரிஞ்ச எதாலயும் நீ அதை அளக்க முடியாதுங்கற மாதிரி அளக்க முடியாத அளவுக்கு விஸ்வரூபம் எடுத்திருக்கு.... விசேஷ மானஸ லிங்கம்கிற பெயரிலேயே விசேஷமாய் மனசினால் உருவான அல்லது மனம் சம்பந்தப்பட்ட சிவலிங்கம் அர்த்தம் இருக்கிறது. அதனால் நம் எண்ணங்களுக்கும் பார்க்கும் விளைவுகளுக்கும் சம்பந்தம் கண்டிப்பாக சம்பந்தம் இருக்கவே செய்யும்."*

*அலெக்ஸிக்கு ஆச்சரியமாக இருந்தது. 'இந்த ஆள் ஆராய்ச்சியாளர் மட்டும் தான். இவரிடம் என் எண்ணத்தைப் படிக்கும் சக்தி கண்டிப்பாகக் கிடையாது. ஆனாலும் எப்படி என் எண்ணத்தைச் சொல்ல முடிகிறது. இவர் சொன்னது போல் தான் இருக்க வேண்டும்.... ஆரம்பத்தில் காணாமல் போனது என் மனதின் பிரதிபலிப்பாய் இருக்கும். பின்னால் தெரிந்த பிரம்மாண்டம் ஆழ்மனதினால் உணரப்பட வேண்டிய அதன் பிரம்மாண்ட சக்தியாய் இருக்க வேண்டும்... ஒன்று மேல்மனதின் வெளிப்பாடு... இன்னொன்று ஆழ்மனதின் வெளிப்பாடு....' எல்லாம் அலெக்ஸிக்குப் புரிகிற மாதிரி இருந்தது.*

*அலெக்ஸியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த குருஜிக்கு ஜான்சன் அலெக்ஸியின் மனதில் பதிகிற மாதிரி சொல்லி இருக்கிறார் என்பது புரிந்தது. ஜான்சன் சந்தேகப்பட்டது போல அலட்சியம் தான் அலெக்ஸியின் காட்சிக்குக் காரணமாய் இருந்திருக்கிறது.*

*ஜான்சன் தொடர்ந்தார். "அலெக்ஸி இன்று நடந்தது வெறும் ஒத்திகை தான். நாளை தான் நாம் எல்லாவற்றையும் பதிவு செய்யப் போகிறோம். அதற்கு முன் நீ தயாராய் விட வேண்டும்.... நீ மறுபடி இப்போதே இன்னொரு முயற்சி எடுத்து விட வேண்டும்...."*

அலெக்ஸிக்குக் கண நேரத்தில் மீண்டும் கிலி எழும்பியது. கற்பனையாகவே இருந்தாலும் கூட அதன் தாக்கம் கற்பனையாக இருக்கவில்லை...

ஜான்சன் சொன்னார். “இந்த தடவை நீ மட்டும் தனியாகப் போக வேண்டாம். குருஜியும் கூட வந்து அங்கே தியானம் செய்வார். சரியா?”

அலெக்ஸி தயக்கத்துடன் தலையசைத்தார்.

குருஜி அலெக்ஸியிடம் ஒரு நெருங்கிய நண்பன் சொல்வது போல் சொன்னார். ”அலெக்ஸி. அலட்சியத்தினால் எந்தப் பெரிய காரியத்தையும் யாரும் சாதித்து விட முடியாது. குறைவாய் மதிப்பிட்டு எதிலிருந்தும் பெரிய பலனை ஒருவன் அடைந்து விடவும் முடியாது. விசேஷ மானஸ லிங்கம் நம் கற்பனைக்கும் அடங்காத பிரம்மாண்ட சக்தி. அதை முறையாக, மரியாதையாக அணுகணும்.... நான் உனக்கு ஒரு மந்திரம் உபதேசிக்கிறேன். அதை நீ புனிதமாய் பாவிக்கணும். அது முக்கியம். அது நீ அடிக்கடி கேட்கிற சாதாரண வார்த்தையாக இருந்தாலும் கூட உன்னைப் பொருத்த வரை புனிதம் தான்...சரியா.... அதை சிறிது நேரம் ஜபித்து ஞாபகம் வைத்துக் கொள். எப்போதெல்லாம் விஷயங்கள் உன் கட்டுப்பாட்டை மீறிப் போகிறதோ அப்போதெல்லாம் முதல் முதலாக ஞாபகம் வருவது அந்த மந்திரமாய் இருக்கணும். சொல்வது அந்த வார்த்தையாய் இருக்கணும்..... புரிகிறதா? அந்த மந்திர உபதேசம் வாங்க நீ தயாரா?”

அலெக்ஸி தலையசைத்தார். ’சிவலிங்கம் இந்த நாட்டு தெய்வம். அதன் சக்தியை ஒரு தடவை லேசாகப் பார்த்தாகியும்

விட்டது. மந்திரங்களும், உபதேசங்களும் கூட இந்த நாட்டு வழிகள். இந்த சிவலிங்கத்தை இவர்கள் வழியிலேயே அணுகுவது புத்திசாலித்தனம்'

ஜான்சன் அங்கேயே தியானம் செய்து ஆல்ஃபா நிலைக்குப் போகச் சொல்ல அலெக்ஸி அப்படியே செய்தார். வழக்கத்தை விட அந்த நிலைக்குப் போக இப்போது அவருக்கு அதிக நேரம் தேவைப்பட்டது. ஆனால் போக முடிந்தது.

குருஜி அந்த நேரத்தில் அலெக்ஸியின் காதில் மந்திரோபதேசம் செய்தார். "ஓம் நமசிவாய". அலெக்ஸியை அந்த மந்திரம் சாந்தப்படுத்தியது. தியான நிலையில் இருந்து மீண்டு வந்த பிறகு அந்த மந்திரத்தை சரியாக உச்சரிப்பது அந்த ரஷ்யருக்கு சிரமமாகத் தான் இருந்தது.

குருஜி சத்தமாக "ஓம் நமசிவாய" என்று உச்சரிக்க ஆரம்பிக்க அலெக்ஸியும் சேர்ந்து அதை உச்சரிக்க ஆரம்பித்தார். பத்து நிமிடங்களில் அலெக்ஸியால் அதைத் தெளிவாக உச்சரிக்க முடிந்தது. பின் தனியாக சிறிது நேரம் அங்கேயே அமர்ந்து சத்தமாகவும், பின் மௌனமாகவும் அலெக்ஸி ஜபித்துப் பழகினார்.

அடுத்த அரை மணி நேரத்தில் தியான மண்டபத்தில் குருஜியும், அலெக்ஸியும் தியானம் செய்ய ஆரம்பித்திருந்தார்கள். சற்று தொலைவில் ஜான்சன் நின்றிருந்தார்.

அலெக்ஸி ஆல்ஃபா நிலைக்குச் சென்று விசேஷ மானஸ லிங்கத்தின் மீது கவனத்தைச் செலுத்தினார். இப்போது அலட்சியத்தோடு அணுகா விட்டாலும் கூட அந்த சிவலிங்கம்

*அவரை சோதிப்பது போல காணாமல் மறைய ஆரம்பித்தது. அந்த இடத்தில் மகா சமுத்திரம் அலைகளோடு தத்ரூபமாகத் தெரிந்தது. ஆனால் அலெக்ஸி அமைதியாகவே இருந்தார். அந்த அலைகள் அவர் காலை நனைப்பது போலவே உணர்ந்த போதும் அலெக்ஸி ஆல்ஃபா அலைகளிலேயே இருந்தார். அந்த அமைதி நிலையில் இருந்து நழுவ அவர் விரும்பவில்லை.*

*அலைகள் பேரலைகளாக ஆரம்பித்தன. பேரலைகளுக்கு நடுவில் ஒரு கண் உருவாகி அலெக்ஸியை உற்றுப் பார்ப்பது போல இருந்தது. அது அமானுஷ்யமாய் தெரிந்தது. அது ஒரு சுழியாகி அவரை இழுக்க ஆரம்பித்தது. அதன் காந்த ஈர்ப்பில் அலெக்ஸி வலிமை இழக்க ஆரம்பித்தார்.....*

# அத்தியாயம் - 71

*ஒரு தடவை செய்த தவறை அலெக்ஸி திரும்பவும் செய்யத் துணியவில்லை. அந்த முதல் முறை அனுபவமே அவருக்குப் போதுமானதாக இருந்தது. கண்ணாகத் தெரிந்த சுழி இழுக்க ஆரம்பித்தவுடன் சிறிதும் தாமதம் செய்யாமல் குருஜி சொல்லித் தந்திருந்த 'ஓம் நமசிவாயா" என்ற மந்திரத்தைச் சொல்ல ஆரம்பித்தார். மௌனமாக மனதிற்குள்ளே சொன்னால் போதும் என்று அவருக்கு குருஜி சொல்லி இருந்த போதும் மௌனமாகச் சொல்வதை விடச் சத்தமாகச் சொல்வது தைரியமளிப்பதாய் இருந்தது. அவர் சொல்லச் சொல்ல அலைகளின் கண்-சுழி மறைந்தது. அதன் கூடவே அவரை இழுக்கும் சக்தியும் மறைந்தது. சமுத்திரத்தின் நடுவே சிவலிங்கம் தோன்ற ஆரம்பித்து சமுத்திரமும் மறைந்தது. சிவலிங்கம் ஒரு முறை ஒளிர்ந்து விட்டு சாதாரணமாகக் காட்சி அளிக்க ஆரம்பித்தது. அலெக்ஸியின் மனதில் ஒரு பெரிய ஆசுவாசம் ஏற்பட்டது.*

*’ஓம் நமசிவாய’ மந்திரத்தைச் சொல்ல ஆரம்பிக்கும் முன் அலெக்ஸியின் உடல் விறைத்ததைப் பார்த்த போது ஜான்சனுக்கு மனம் துணுக்குற்றது. அலெக்ஸியின் மூச்சும் வேகமாகியது. ’அலெக்ஸி மறுபடியும் ஏதோ மனப்பிராந்தியில் மாட்டிக் கொண்டாரோ?’ ஆனால் மந்திரத்தைச் சொல்ல ஆரம்பித்த பிறகு அலெக்ஸியின் உடலில் தெரிந்த விறைப்பு போய் இயல்பு நிலை தெரிந்தது. அவர் மூச்சும் சீராகியது. ஜான்சன் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்.*

*ஜான்சனின் பார்வை அலெக்ஸி மீதிருந்து தாவி குருஜி மேல் தங்கியது. குருஜி தியானம் செய்வதை எத்தனையோ முறை ஜான்சன் பார்த்து இருக்கிறார். குருஜி தியானம் செய்வதைப் பார்ப்பதே ஒரு அழகான அனுபவம். அப்படிப் பார்க்கையில் பல முறை குளத்தில் அசைவற்று நிற்கும் கொக்கின் நினைவு ஜான்சனுக்கு வந்திருக்கிறது. இந்த தியானத்தில் இருந்து வெளிவரும் போது ஏதோ ஒரு உண்மையைக் கண்டு பிடித்து விட்டிருப்பார் என்று அவர் நம்பியதுண்டு. அந்த அளவுக்கு சலனமே இல்லாமல் இருப்பார் குருஜி. ஆனால் இன்று ஏனோ அந்த அளவு அமைதியாக குருஜி இருக்கவில்லை... அவர் அனுபவம் இன்று எப்படிப்பட்டதாய் இருக்கும் என்று ஜான்சன் யூகிக்க முயன்றார். ’ஹரிராம் இயற்கையைப் பார்த்ததைப் போல, கியோமி புனித மலையைப் பார்த்தது போல, அலெக்ஸி சமுத்திரத்தைப் பார்த்தது போல குருஜி எதைப் பார்த்துக் கொண்டிருப்பார்?’*

*ஆனால் குருஜி எதையுமே பார்க்கவில்லை என்பதே உண்மை. அவர் அதன் மீது கவனத்தைக் குவித்த பின்னும் விசேஷ மானஸ லிங்கம் சிவலிங்கமாக அப்படியே காட்சி அளித்தது. எந்த மாற்றமும் அதில் இல்லை. முதலில் கண்ட போதிருந்தது போல ஜோதி ஸ்வருபமும் இல்லை, பிறகு பார்த்த போது மின்னிய திடீர்*

மின்னல் இல்லை. அலெக்ஸியின் 'ஓம் நமசிவாய' கேட்ட போதும் குருஜி தன் கவனத்தை சிவலிங்கத்தில் இருந்து திருப்பவில்லை. ஆனால் சிவலிங்கம் உனக்கெதுவும் காட்சி இல்லை என்று பிடிவாதமாக இருப்பது போல் இருந்தது. சிவலிங்கத்திற்கென்று தனியாக ஏதாவது கொள்கையோ, விருப்பு வெறுப்பு இருக்கிறதா என்ன?...

எதிர்பாராமல் திடீர் என்று சிவலிங்கத்தில் கணபதி தெரிந்தான்.... குருஜி திகைத்தார்.... கணபதி மறைந்து ஈஸ்வர் தெரிந்தான்.... விசேஷ மானஸ லிங்கத்தின் நியமிக்கப்பட்ட இரண்டு பாதுகாவலர்களைப் பார்த்த குருஜி மூன்றாவதாக யார் தெரிகிறார்கள் என்று ஆவலாகப் பார்த்தார். மூன்றாவதாக யார் உருவமும் தெரியவில்லை... சிவலிங்கம் மட்டுமே தெரிந்தது. அப்படியானால் மூன்றாவதான ஞான மார்க்கத்திற்கு நானே தான் என்றா சிவலிங்கம் சொல்கிறது? ஒரு கணம் குருஜி மூச்சும் நின்று பின் தொடர்ந்தது. அப்படி இருக்க வாய்ப்பில்லை... மூன்றுமே மனிதர்கள் தான் என்று தான் ஓலைச்சுவடிகள் சொல்லி இருக்கின்றன.....

திடீர் என்று குருஜியை சிவலிங்கம் மிக வேகமாகத் தன்னிடம் இழுப்பது போல் இருந்தது. ஆனால் உடனடியாக குருஜி சுதாரித்துக் கொண்டார். தன் முழு மனோ பலத்தையும் பிரயோகித்து உறுதியாய் நின்றார். திட மனதுடன் முதல் சந்திப்பில் சொன்னதையே இப்போதும் சொன்னார். "நான் உன்னிடம் என்னை இழப்பதற்காக வரவில்லை விசேஷ மானஸ லிங்கமே. உன்னை என் வசப்படுத்தப்படுத்த வந்திருக்கிறேன்."

சிவலிங்கம் தன் முயற்சியை உடனே நிறுத்திக் கொண்டது போலத் தோன்றியது. லேசாக ஒரு முறை ஒளிர்ந்து விட்டு

*சிவலிங்கம் பழைய நிலையிலேயே அவருக்குத் தெரிய ஆரம்பித்தது. இனி எந்த மாற்றமும் ஏற்பட வாய்ப்பில்லை என்று தோன்ற குருஜி எழுந்து கொண்டார்.*

*ஜான்சன் முன்பு சொன்னது அவருக்கு நினைவுக்கு வந்தது. ”அவரவர் எதைப் புனிதமாயும், சக்தியாயும் நினைத்தார்களோ அதையே அவர்களுக்குக் காட்சியாய் விசேஷ மானஸ லிங்கம் காட்டி இருக்குன்னு நினைக்கிறேன்”*

*’அப்படியானால் கணபதியையும், ஈஸ்வரையும் புனிதமாக அடிமனதில் நினைத்திருக்கிறேன் என்று அர்த்தமா என்ன?’ நினைக்கவே குருஜிக்கு கசப்பாய் இருந்தது..... ’என்ன பைத்தியக்காரத்தனமான கோட்பாடு.’*

*இந்த முறை முதல் அனுபவத்தை விட வித்தியாசமாக இருந்த இன்னொரு அம்சமும் அவருக்கு நெருடலாக இருந்தது. முதல் சந்திப்பில் விசேஷ மானஸ லிங்கம் அவர் மனதைக் கரைப்பது போல இருந்தது. அவர் தன் எண்ணங்களை எல்லாம் இழந்து விட ஆரம்பிப்பது போல அன்று உணர்ந்தார். ஆனால் தியான மண்டபத்தில் விசேஷ மானஸ லிங்கம் வந்து சேர்ந்த பின்னரோ ஆட்களையே தன் பக்கம் இழுப்பது போன்ற அனுபவத்தைத் தான் அவர் உட்பட அனைவரும் உணர்ந்திருக்கிறார்கள். அலெக்ஸி அப்படி இழுக்கப்பட்டு இந்த சிவலிங்கத்தை நெருங்கியும் விட்டிருக்கிறார். விசேஷ மானஸ லிங்கத்தின் இந்த ஆபத்தான மாற்றம் அவர் எதிர்பாராதது. இன்னும் எத்தனை புதிய குணாதிசயங்கள் இந்த சிவலிங்கத்திடம் இருக்கின்றனவோ என்ற சந்தேகத்தோடு குருஜி சிவலிங்கத்தைப் பார்த்தார். விசேஷ மானஸ லிங்கம் பரமசாதுவாய் காட்சி அளித்தது!*

**************

*விஷாலி வீட்டுக்கு வந்த பிறகு ஆனந்தவல்லியின் அட்டகாசம் ஈஸ்வரால் சகிக்க முடியாததாகி விட்டது. குளிர் காய்ச்சல் என்று படுத்திருந்த ஆனந்தவல்லி மீனாட்சியின் கஷாயத்தைக் குடித்த பிறகு குணமாகி விட்டதாக எழுந்து உட்கார்ந்து கொண்டாள். அதன் பின் ஈஸ்வர் இருக்கும் இடங்களில் எல்லாம் எப்படியாவது விஷாலியைத் தருவிப்பது என்ற உறுதியோடு இருந்தாள். ஈஸ்வரோ அவளை எப்படித் தவிர்ப்பது என்று மனதிற்குள் போராடிக் கொண்டிருந்தான். அவளைப் பார்க்கிற போதெல்லாம் அவன் மனம் கட்டுப்பட மறுத்தது. அவளை அது தன்னிச்சையாக ரசித்தது. அது அவன் ஈகோவைப் பெரிதும் பாதித்தது. ஆனால் ஆனந்தவல்லி அதை எல்லாம் அறியாதவள் போல் நடித்தாள். ஏதாவது செய்து ஈஸ்வரும், விஷாலியும் பேசிக் கொள்ள வேண்டிய சூழ்நிலையை உருவாக்கினாள். அவன் ஆனந்தவல்லியை முறைத்ததையோ, எரிந்து விழுந்ததையோ ஒரு பொருட்டாகவே அவள் நினைக்கவில்லை.*

*ஈஸ்வருடன் தனியாக இருக்கும் போது கூட ஆனந்தவல்லி விஷாலியைப் பற்றி அவனிடம் பேசினாள். "விஷாலிக்கு நல்ல குடும்பப்பாங்கான அழகு! அவளைப் பார்க்கிறப்பவே மனசு நிறைகிறது."*

*ஈஸ்வர் எரிச்சலுடன் கேட்டான். "நீங்க எப்ப அவளோட ரசிகையாய் மாறினீங்க"*

*"நீ வந்ததுக்கப்புறம் தான்....னு நினைச்சுக்காதே. எனக்கு முதல்ல இருந்தே அந்தப் பொண்ணை ரொம்பப் பிடிக்கும். அழகோட சேர்ந்து, கொஞ்சம் கூட அகங்காரம் இல்லாத நல்ல குணமும் எத்தனை பொண்ணுகளுக்கு அமையும் சொல்லு பார்க்கலாம்..."*

*ஈஸ்வர் ஆனந்தவல்லியை சந்தேகத்துடன் பார்த்தான். கிழவி என்னை வேண்டும் என்றே சீண்டுகிறாளா என்ன? அவள் சொன்னதை மறுத்தான். "எனக்கெல்லாம் அப்படித் தோணல."*

*"சரி உனக்கு எப்படித் தான் தோணுது?"*

*"அவள் ரொம்ப சாதாரணமாய் இருக்கிற மாதிரி தான் தோணுது"*

*"அது நீ அவளை சரியாவே பார்க்காததுனாலன்னு நினைக்கிறேன். நீ அவள் வர்றப்ப எல்லாம் வேற எங்கேயோ பார்க்கிறாய். அவளையே ஒரு பத்து நிமிஷம் கவனிச்சுப் பாரு. அழகும் தெரியும், குணமும் புரியும். அவளைக் கூப்பிடவா?"*

*அவளிடம் பொறுமையாய் இருப்பது மிகவும் கஷ்டமாய் தோன்றியது. அவன் பேசாமல் அங்கிருந்து போய் விட்டான்.*

*பரமேஸ்வரன் உள்ளே வந்து தாயைத் திட்டினார். "நீ ரொம்பவே அவனை சீண்டறே."*

*"எனக்கும் அவனுக்கும் இடையில ஆயிரம் இருக்கும். உனக்கென்னடா?"*

*பரமேஸ்வரனுக்கு அதற்கு மேல் அவளிடம் பேச முடியவில்லை.*

*விஷாலிக்கு ஆனந்தவல்லியின் செயல்கள் எல்லாம் தர்மசங்கடத்தை ஏற்படுத்தின. அவளை ஈஸ்வர் வெறுக்கிறான் என்று புரியாமல் அடிக்கடி ஆனந்தவல்லி அவன் முன்னால் கூப்பிடுவதும், ஏதாவது பேச்சில் ஈடுபடுத்துவதும் அவளுக்குக் கஷ்டமாக இருந்தது. அவனோ அவளைப் பார்ப்பதை விட ஜடப் பொருள்களைப் பார்ப்பது உத்தமம் என்பது போல நடந்து கொண்டான்.*

*"ஏண்டீம்மா. உனக்கு ஆள்களைப் படம் வரைய முடியுமா?" ஆனந்தவல்லி விஷாலியைக் கேட்டாள்.*

*"ம்... வரைவேன் பாட்டி. உங்களை வரையணுமா?"*

*"என்னை வரைய வேண்டாம். என் வீட்டுக்காரரை வரையணும்"*

*"ஓ.. வரையலாமே. அவர் போட்டோவைக் கொடுங்க. வரைஞ்சு தர்றேன்"*

*"போட்டோ என்னத்துக்கு. இவனைப் பார்த்தா அவரைப் பார்க்க வேண்டியதில்லை. இவனை வரைஞ்சு குடு..."*

*விஷாலி தர்மசங்கடத்துடன் ஈஸ்வரைப் பார்த்தாள். ஈஸ்வரோ அப்படி ஒரு பேச்சே அங்கு கேட்கவில்லை என்பது போல இருந்தான். ஆனந்தவல்லி விடுவதாய் இல்லை. "ஏண்டா இவள் முன்னாடி தினம் கொஞ்ச நேரம் உன்னால் போஸ் தர முடியுமா?"*

*ஈஸ்வர் அவளைச் சுட்டேரிப்பதைப் போல் பார்த்தான்.*

*“இப்படி போஸ் கொடுக்கக் கூடாது.... சாந்தமா போஸ் தரணும். பேருக்கேத்த மாதிரி உன் கொள்ளுத் தாத்தா சாந்த ஸ்வரூபி” என்றவள் விஷாலியிடம் கேட்டாள். “ஏம்மா. உனக்கு தினம் எத்தனை நேரம் போஸ் கொடுத்தா வரைய சௌகரியமாய் இருக்கும்”*

*மனதில் நிரந்தரமாய் தங்கி விட்ட உருவத்தை வரைய போஸ் தர வேண்டியதில்லை என்று நினைத்தாள் விஷாலி. ஆனால் அவள் எதுவும் சொல்வதற்கு முன் ஈஸ்வர் இடத்தைக் காலி செய்தான். அவன் போன பிறகு ஆனந்தவல்லி கேள்விக்குப் பதிலை அவளிடமிருந்து எதிர்பார்க்கவில்லை.*

*கனகதுர்கா மறு நாள் அதிகாலை வருகிறாள் என்பதை ஈஸ்வர் அத்தை மீனாட்சியிடம் சொன்ன போது அவள் சொன்னாள். “நீ வந்த அதே ஃப்ளைட்டு தானே. காலையில் ஆறு மணிக்கு தானே. நாம ரெண்டு பேரும் அஞ்சே காலுக்கே கிளம்பினால் தான் சரியாய் இருக்கும்”*

*பரமேஸ்வரன் சொன்னார். “என்ன ரெண்டு பேரும்னு சொல்றே. நானும் வர்றேன்”. ஈஸ்வரும், மீனாட்சியும் திகைப்புடன் பரமேஸ்வரனைப் பார்த்தார்கள். ஈஸ்வருக்குத் தாத்தாவைக் கட்டிப்பிடித்து முத்தம் தர வேண்டும் போலத் தோன்றியது. தாத்தா எத்தனை தூரம் மாறி இருக்கிறார்!*

*மீனாட்சி முகம் மலர சொன்னாள். “சரி நாம மூணு பேரும் அஞ்சே கால் மணிக்கே இங்கே இருந்து கிளம்பிடலாம்”*

ஆனந்தவல்லி சொன்னாள். “என்னடி மூணு பேரு. நானும் வர்றேன். என் பேச்சுக்கு மதிப்பு கொடுத்து அவ வர்றா. நான் ஏர்போர்ட் வந்து வரவேற்காட்டி நல்லா இருக்காது....” ஈஸ்வர் இதை எதிர்பார்க்கவில்லை. ’கிழவி அப்பப்ப எரிச்சலைக் கிளப்பினாலும் மனசு நல்ல மனசு’. அவன் நினைத்து முடிவதற்குள் ஆனந்தவல்லி சொன்னாள். “விஷாலி நீயும் வாம்மா. நீயும் எங்க குடும்பத்து ஆள் தான்”

**************

குருஜியைக் கண்காணிக்க பார்த்தசாரதிக்கு மறைமுகமாக அனுமதி தந்திருந்த உயர் போலீஸ் அதிகாரி பார்வைக்கு ஒரு ரகசியத் தகவல் உளவுத்துறையில் இருந்து வந்தது. அது போன்ற தகவல்கள் அடிக்கடி உளவுத் துறையில் இருந்து வருவதுண்டு. இந்திய உளவுத் துறையால் பெறப்படும் சில சந்தேகத்திற்குரிய தகவல்கள் மாநில உயர் போலீஸ் அதிகாரிகளிடம் ரகசியமாய் பகிர்ந்து கொள்ளப்படுவதுண்டு. அது போன்ற சந்தேகத்தைக் கிளப்பும் தகவல்கள் உண்மையில் தற்செயலாக நடந்தவையாகவும், ஆபத்திற்கான முகாந்திரம் இல்லாதவையாகவும் கூட இருக்கலாம். ஆனால் அவற்றை மத்திய உளவுத் துறை, மாநிலங்களின் உயர் போலீஸ் அதிகாரிகள் கவனத்திற்குக் கொண்டு வருவதன் நோக்கம் ஏதாவது வகையில் சமூகக் குற்றங்களுக்கு சம்பந்தப்பட்டவையாக அந்தத் தகவல்கள் இருக்கவும் கூடும் என்று எச்சரிப்பதற்காகவே.

அது போன்ற தகவல்கள் ஏதாவது ஒரு மாநிலத்தில் ஒரு நடந்து கொண்டிருக்கும் குற்ற விசாரணையைத் தெளிவிப்பதில் பெரிய உதவியாக இருப்பதுண்டு. அல்லது நடக்க இருக்கும் குற்றங்களைத் தவிர்க்க எச்சரிக்க மணியை அடிப்பதும் உண்டு. அப்படி சம்பந்தப்பட்டப்பவர்களுக்குப் பெரிய உதவியாக இருக்கும் அந்தத்

தகவல்கள் பெரும்பாலான மற்றவர்களுக்கு ஃபைல் செய்து வைத்துக் கொள்ளும் ஒரு காகிதமாக மாத்திரமே இருக்கும்.

அடிக்கடி வரும் அந்தத் தகவல்களில் சுமார் 98 சதவீதம் உபயோகம் இல்லாத தகவல்களாக இருப்பதாக, நடவடிக்கை எடுக்கும் அவசியம் இல்லாத தகவல்களாக இருக்கின்றன என்பது போலீஸ் அதிகாரிகளின் அனுபவம். அதனாலேயே மேலோட்டமாகப் பார்த்து விட்டு அதை ஃபைல் செய்து விடுவது உண்டு. சில சமயங்களில் உண்மையாகவே ஏதேனும் அசம்பாவிதம் நடந்தால் உளவுத்துறை முன்பே எச்சரிப்பதாகச் சொல்வதும், மாநில போலீஸ் அதிகாரிகள் ஏதேனும் சொல்லி சமாளிப்பதும் அடிக்கடி நிகழக் கூடிய விஷயங்கள்.

இப்போது அந்த உயர் போலீஸ் அதிகாரிக்குக் கிடைத்திருக்கும் ரகசியத் தகவலில் சில தினங்களுக்கு முன் மும்பையில் ஒரு ஐந்து நட்சத்திர ஓட்டலில் எட்டு உலக நாடுகளின் எட்டு செல்வாக்கு மிக்க மனிதர்கள் ஒரே நேரத்தில் இருந்தார்கள் என்று குறிப்பிடப்பட்டு இருந்தது. எட்டு பேர்களில் நான்கு பேர் அங்கேயே தங்கி இருந்தவர்கள் என்றும் மீதி நான்கு பேர் மற்ற இடங்களில் இருந்து வந்து சென்றார்கள் என்றும், இந்தியப் பெரும் பணக்காரரான பாபுஜியும் சிறிது நேரம் தந்தையுடன் அங்கு சென்றிருந்தார் என்றும், ஜான்சன் என்ற அமெரிக்க ஆழ்மனசக்தி ஆராய்ச்சியாளரும் ஒரு மணி நேரம் அங்கு தங்கி இருந்தார் என்றும் குறிப்பிடப்பட்டு இருந்தது. பாபுஜி அந்த ஓட்டலின் கான்ஃப்ரன்ஸ் ஹாலை புக் செய்திருந்தார், அங்கு அந்த செல்வாக்கு மிக்க வெளி நாட்டார் சிலரை அவர் சந்தித்துப் பேசி இருக்க வாய்ப்பிருக்கிறது என்றும் ஜான்சன் தமிழகம் செல்ல விமான நிலையம் புறப்பட்டுப் போனார் என்றும், அவர் போய் சிறிது நேரம் கழித்து நான்கு வெளிநாட்டவர்கள் வெளியேறினார்கள், அவர்கள் போய் ஒரு மணி

நேரம் கழித்து பாபுஜி தந்தையுடன் வெளியேறினார் என்றும் சொல்லப்பட்டிருந்தது.

பாபுஜி அவர்களை சந்தித்துப் பேசியிருந்தாரேயானால் அது வியாபார நிமித்தமாக இருக்காது, அவர்கள் அவருடன் எந்த விதத்திலும் வியாபாரத்தில் சம்பந்தப்பட்டவர்கள் அல்ல என்றும் கூட சொல்லப்பட்டிருந்தது.

அந்த ஐந்து நட்சத்திர ஓட்டலின் உரிமையாளர் பிரதமரின் மருமகன் என்பதால் அதன் உள்ளே சென்று வேவு பார்ப்பதில் உளவுத்துறைக்கு சில சிரமங்கள் இருந்தன. வெளியே இருந்து வேவு பார்த்ததிலும், விசாரித்ததிலும் கிடைத்த தகவல்களை வைத்து உள்ளே ஒரு சந்திப்பு நடந்திருக்கலாம் என்று சந்தேகப்பட்டு அவர்கள் அறிக்கை அனுப்பி இருந்தார்களே ஒழிய உறுதியாய் அவர்களால் சொல்ல முடியவில்லை.. அந்த சின்ன கான்ஃப்ரன்ஸ் ஹாலில் ஜான்சன் பேச்சைக் கேட்டது ஆறு வெளிநாட்டவர்கள் என்றாலும் மேலும் இரண்டு வெளி நாட்டவர்கள் அதே ஓட்டலில் தங்கி இருந்ததும், அவர்களும் செல்வாக்கில் குறைந்தவர்களாக இல்லாமல் இருந்ததும் அவர்களையும் உளவுத்துறை கணக்கில் எடுக்க காரணமாகியது.

எட்டு பேர் பெயர்களும், அவர்கள் எந்த நாட்டவர்கள் என்ற தகவல்களும், குறிப்புகளும், ஜான்சன் பற்றிய குறிப்புகளும் அந்த அறிக்கையில் இருந்தன. வெளிநாட்டவர்கள் என்ற தகவலும், ஆழ்மனசக்தி ஆராய்ச்சியாளர் ஜான்சன் என்ற தகவலும் தான் அந்த உயர் அதிகாரிக்கு பார்த்தசாரதி விசாரிக்கும் வழக்கை நினைவுபடுத்தின. முக்கியமாய் ஜான்சன் தமிழ்நாடு வந்திருப்பது சந்தேகத்தைக் கிளப்பியது.

*எதற்கும் பார்த்தசாரதியிடம் தகவலைத் தெரிவிப்பது நல்லது என்று அந்த அதிகாரி நினைத்தார்.*

# <u>அத்தியாயம் - 72</u>

*விமான நிலையத்தில் கனகதுர்காவிற்காக அவர்கள் காத்திருந்தார்கள். ஈஸ்வருக்கு பரமேஸ்வரனும் ஆனந்தவல்லியும் கூட அந்த அதிகாலையில் எழுந்து தயாராகி வந்தது மனநிறைவை ஏற்படுத்தி இருந்தது. அவன் அம்மாவிற்கு மறுபடியும் அந்த வீட்டிலும், வீட்டு மூத்தவர்களிடமும் அங்கீகாரம் கிடைத்தது மட்டுமல்ல நேசத்தோடு அவளை வரவேற்கவும் வந்திருப்பது இப்போதும் கனவு போல் நம்ப சிரமமாகத் தான் இருந்தது. பெருமிதத்தோடு பரமேஸ்வரனையும், ஆனந்தவல்லியையும் பார்த்தான்.*

*ஆனந்தவல்லியோ பின்னால் தள்ளி நின்றிருந்த விஷாலியை "நீ ஏன் அங்கே நிற்கறே. நீ எங்க வீட்டுப் பொண்ணு தான். என் பக்கத்துல வந்து நில்" என்று அழைப்பதில் மும்முரமாக இருந்தாள்.*

*விஷாலி தயக்கத்துடன் ஈஸ்வரை ஓரப்பார்வை பார்த்தாள். அவனுக்கு அவள் வந்ததே பிடிக்கவில்லை என்று தெரியும். ஆனந்தவல்லி தான் அவளை வலுக்கட்டாயமாக அழைத்து வந்திருந்தாள். அதனால் தான் வேறு வழியில்லாமல் வந்த அவள் முடிந்த வரை விலகியே இருக்க நினைத்தாள். ஆனால் ஆனந்தவல்லி அதற்கும் அனுமதிக்கவில்லை.*

ஈஸ்வர் முகத்தைக் கடுகடுவென்று வைத்திருந்தான். அதைக் கவனித்த பரமேஸ்வரன் தாயிடம் தாழ்ந்த குரலில் சொன்னார். “நீ ஏன் அவளைக் கட்டாயப்படுத்தறே. அவனுக்குப் பிடிக்கலை பார்”

ஆனந்தவல்லி தாழ்ந்த குரலில் மகனிடம் சொன்னாள். ”உன் மருமகள் என்னைப் பார்க்க வர்றதை விட அதிகமாய் அவள் மருமகளைப் பார்க்க தான் வர்றா. அதனால் தான் அவளைப் பக்கத்துல கூப்பிடறேன். உன் பேரனைப் போகச் சொல்லு”

”நீ இத்தனை நாள் அவன் கட்சில இருந்தே. இப்ப விஷாலி பக்கம் சேர்ந்துட்டே. என்ன ஆச்சு?”

“நான் எப்பவுமே அவன் பக்கம் தான். அவன் காதலியை அவன் கூட சேர்த்து வைக்கத் தாண்டா இந்தப்பாடு படறேன். மனசுல இருந்து அவளை எடுக்க முடியாமல் அவன் தவிக்கிறான். பிடிக்காத மாதிரி நடிக்கிறான். லூஸுடா உன் பேரன்…” சொல்லிக் கொண்டே விஷாலியைக் கையைப் பிடித்து இழுத்து தன் பக்கத்தில் நிற்க வைத்துக் கொண்டாள்.

பேரனை லூஸு என்று அழைத்ததற்காகத் தாயைக் கோபத்துடன் பரமேஸ்வரன் பார்த்தார். ஆனந்தவல்லி வேறு பக்கம் வேடிக்கை பார்த்தாள். ‘இவன் நேசிக்கிறவர்களை யாரும் ஒரு வார்த்தை தாழ்த்திச் சொல்லிடக்கூடாது’

ஈஸ்வருக்கு அன்று விஷாலி தனி அழகோடு இருப்பதாக மனம் சொன்னது. அவள் மட்டும் அன்று அவனை அநியாயமாக அவமானப்படுத்தி இருக்கவில்லையானால் கண்டிப்பாக அவளை ஆனந்தவல்லி பக்கம் நிற்க அனுமதித்திருக்க மாட்டான். தன் பக்கம்

*அவளை இருக்க வைத்திருப்பான். அவளை அம்மாவிடம் அறிமுகப்படுத்த துடித்திருப்பான். “எப்படி இருக்கிறது எங்கள் ஜோடிப்பொருத்தம்” என்று ஆவலோடு கேட்டிருப்பான். ஒரு அழகான உணர்வை விஷாலி அவமானப்படுத்தி விட்டாள். ஒரு முறை உடைந்த கண்ணாடியை மீண்டும் ஒட்ட வைக்க முடியாது....*

*அவன் மனம் அந்த உவமானத்தை ஏற்க மறுத்தது. அது வேறு உவமானம் சொன்னது. நீரடித்து நீர் விலகாது என்றது. அந்த உவமானத்தைச் சொன்னதற்காகவும், அவள் அழகாக இருப்பதை ரசிப்பதற்காகவும் அவன் மனதையே அவனுக்குப் பிடிக்கவில்லை.*

*கனகதுர்காவின் விமானம் வந்தது. எல்லோரையும் விட அதிகமாக மீனாட்சி பரபரத்தாள். மனதிற்குள் அண்ணனிடம் சொன்னாள். “அண்ணா உன் மனைவியை வரவேற்க அப்பா, பாட்டி எல்லாம் வந்திருக்காங்க பார்த்தாயா? நீயும் இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்...” நினைக்க நினைக்க அவள் கண்கள் கலங்கின.*

*கனகதுர்கா விமான நிலையத்தில் தன் மகனையும் மீனாட்சியையும் மட்டுமே எதிர்பார்த்திருந்தாள். மாமனாரையும், ஆனந்தவல்லியையும் எதிர்பார்த்திருக்கவில்லை. இருவரும் வயதானவர்கள் உடல்நிலை சரியில்லாதவர்கள். அதையும் மீறி அவர்கள் அங்கு அவளை வரவேற்க வந்திருந்தது அவள் மனதை நெகிழ வைத்தது. அவளாலும் அந்தக் கணத்தில் கணவனை நினைக்காமல் இருக்க முடியவில்லை. “பார்த்தீங்களா யாரெல்லாம் வந்திருக்காங்கன்னு..!”*

*வந்தவள் விமானநிலையம் என்றும் பார்க்காமல் மாமனார் காலைத் தொட்டு வணங்கினாள். பரமேஸ்வரன் கண்கலங்கினார்.*

மருமகளின் இரு கைகளையும் பிடித்துக் கொண்டு தன் கண்களில் ஒற்றிக் கொண்டார். இப்படிப்பட்ட மருமகளைப் பூவும் பொட்டுமாகப் பார்க்கும் பாக்கியத்தை தன் வறட்டு கௌரவத்தால் இழந்து விட்டோமே என்ற பச்சாதாபம் அவருக்குப் பலமாக எழுந்தது. கனகதுர்காவிற்கும் கண்கள் ஈரமாகின.

ஆனந்தவல்லியையும் காலைத் தொட்டு வணங்கிய அவளுக்கு இந்தப் பாட்டி சாகப் போகிற நிலையில் இருப்பதாகத் தெரியவில்லையே என்ற எண்ணம் வந்தது. அதை உணர்ந்தது போல ஆனந்தவல்லி சொன்னாள். “நீ வர்றதா கேள்விப்பட்டதுமே என் உடம்பு நல்லாயிடுச்சு”

மீனாட்சி அண்ணியைக் கட்டியணைத்துக் கொண்டு அழுதாள். ஈஸ்வர் தாயைப் பெருமிதத்தோடு பார்த்தான். கனகதுர்காவுக்கு மகனைப் பார்த்த போது சந்தோஷமாக இருந்தது. என்ன தான் தினமும் போனில் பேசினாலும் இந்த சில நாட்கள் பிரிவே அவளுக்கு கஷ்டமாகத் தான் இருந்திருந்தது. மகனை ஒரு கையால் இழுத்து அணைத்துக் கொண்டாள். அவளது மறு கைப்பக்கம் ஆனந்தவல்லி விஷாலியை லேசாகத் தள்ளினாள்.

“இது விஷாலி! தென்னரசு பொண்ணு”

**************

குருஜி வீடியோ கான்ஃப்ரன்ஸிங்கில் அந்த ஆறு பேருடன் பேசிக் கொண்டு இருந்தார். அந்த அறுவர் முகமும் தெளிவாகத் தெரியாதபடி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவர்களிடம் அலெக்ஸி விவகாரத்தை பாபுஜி சொல்லி இருந்ததால் எல்லாம் கட்டுப்பாட்டிற்குள் தான் இருக்கிறதா என்ற சந்தேகம் அவர்களுக்கு

வந்திருந்தது. அவர்கள் குருஜி வாயால் தற்போதைய நிலவரத்தை அறிந்து கொள்ள ஆசைப்பட்டார்கள். உதயன் தயவால் போலீசார் பார்வையில் இருந்து தப்பி விசேஷ மானஸ லிங்கத்தைப் பத்திரமாக அங்கு கொண்டு வந்து சேர்த்ததை பாபுஜி அவர்களிடம் முன்பே தெரிவித்திருந்தார். அந்த நிகழ்வு அவர்களுக்கு ஆச்சரியத்தையும் நம்பிக்கையையும் ஊட்டியது என்றால் அலெக்ஸியின் அனுபவம் அவர்களுக்கு கவலையையும் சந்தேகத்தையும் ஏற்படுத்தி இருந்தது.

அமெரிக்கர் குருஜியிடம் வெளிப்படையாகச் சொன்னார். “குருஜி. எங்களால் அந்த சிவலிங்கத்தைப் புரிந்து கொள்ல முடியவில்லை”

குருஜி அமைதியாகச் சொன்னார். “உங்களால் புரிந்து கொள்ள முடிந்திருந்தால் அது விசேஷ மானஸ லிங்கமாக இருந்திருக்காது. அதன் விசேஷமே அறிவால் உணர முடியாமல் இருப்பது தான்”

இஸ்ரேல்காரர் சொன்னார். “ஆரம்பத்தில் இருந்தே எங்களுக்கு சிவலிங்கம் பற்றி கிடைத்திருக்கும் தகவல்கள் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக இருக்கிறது குருஜி. ஒரு பக்கம் பார்த்தால் அது சுயமான சக்தி படைத்ததாக இருக்கிறது. இன்னொரு பக்கம் பார்த்தால் அப்படி இல்லை என்று தோன்றுகிறது. அதனால் எங்களால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. உதாரணத்துக்கு சொல்ல வேண்டுமானால் பசுபதியைக் கொல்லும் போது சிவலிங்கம் எந்த விதத்திலும் தடுக்கவில்லை. ஏன் பசுபதியே தடுக்கவில்லை... அப்போது சாதுவாக இருந்த சிவலிங்கம் திடீரென்று அந்தக் கொலைகாரனைக் கொன்றிருக்கிறது.... நீங்கள் அதை எடுத்துக் கொண்டு வந்த போது ஒன்றும் செய்யாத சிவலிங்கம் இப்போது அலெக்ஸியை இழுத்திருக்கிறது. சரியான நேரத்துக்கு நீங்களும், ஜான்சனும் போயிருக்கா விட்டால் அலெக்ஸி

இன்னேரம் செத்தே போயிருக்கலாம். அந்த சிவலிங்கத்தை மிகப்பெரிய சக்தியாக நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் அது இத்தனை காலம் பூஜை செய்த பசுபதியைக் கூட காப்பாற்றவில்லை... சரி சக்தியே இல்லையா என்றால் இன்னும் நீங்கள் கூட அதை நெருங்க முடியவில்லை.... எங்களுக்கு எப்படி எடுத்துக் கொள்வது என்று ஒன்றும் விளங்கவில்லை"

ஜெர்மானியப் பெண்மணி கேட்டாள். "அந்த சிவலிங்கம் கல்லா, கடவுளா, வெறும் சக்தியா, இல்லை சித்தர்கள் செய்து வைத்த ஒரு ப்ரோகிராமா?"

குருஜி புன்னகைத்தார். கடைசியாக அந்த ஜெர்மானியப் பெண்மணி உபயோகித்த வாக்கியம் முன்பு ஈஸ்வர் அவரிடம் சொன்னது தான். கண்டங்களைக் கடந்தும் மனிதர்கள் மூளை ஒரே அனுமானத்திற்கு எப்படி தான் எட்டுகிறதோ!

குருஜி அமைதியாகவும் தெளிவாகவும் சொன்னார். "விசேஷ மானஸ லிங்கம் கடவுள் அல்ல. அதாவது உலகங்களை உருவாக்கியும், பாதுகாத்தும் வருகிற சக்தியைத் தான் நீங்கள் கடவுள் என்று சொல்கிறீர்கள் என்று நான் எடுத்துக் கொள்ளும் பட்சத்தில் நான் இதை உறுதியாய் சொல்ல முடியும். இந்த விசேஷ மானஸ லிங்கம் உருவாவதற்கு முன்பும் இந்த உலகம் இயங்கிக் கொண்டு தான் இருந்தது. ஆதி அந்தம் இல்லாதவன் இறைவன் என்று எங்கள் வேதங்கள் சொல்கின்றன. அது உண்மை தான் என்பதில் எனக்கு சந்தேகம் இல்லை.... இந்த விசேஷ மானஸ லிங்கத்திற்கு ஆரம்பம் உண்டு. ஒரு நாள் ஒரு முடிவும் உண்டு. அதனால் கண்டிப்பாக அது கடவுள் இல்லை."

“அது கண்டிப்பாகக் கல் அல்ல. நீங்களே சுட்டிக் காட்டியபடி அதை நெருங்க எங்களாலும் முடியவில்லை. நெருங்கிய ஒருவன் இறந்து விட்டான். இன்னொருவன் பைத்தியம் பிடித்தது போல் இருக்கிறான். நெருங்கப் போகும் போதே மிரண்டு போனவன் பற்றியும் உங்களிடம் பாபுஜி சொல்லி இருப்பார். அது ஒரு மகாசக்தி. அப்படி இல்லா விட்டால் அதை இத்தனை கஷ்டப்பட்டு நாம் கடத்தி இருக்க மாட்டோம். கல் அல்லாத, கடவுளும் அல்லாத, அந்த மகாசக்தி சித்தர்களால் உருவாக்கப்பட்டது ஒரு ப்ரோகிராமா, அவர்கள் நினைத்தபடி தான் இயங்குமா என்றால் இதற்கு ஒரே வார்த்தையில் ஆமாம் அல்லது இல்லை என்று பதில் சொல்லி முடித்து விடுவது கஷ்டம்...”

குருஜி நிறுத்தி விட்டு சிறிது தண்ணீர் குடித்தார். வேறு வேறு நாடுகளில் இருந்து அவர் சொல்வதைக் கூர்ந்து கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த அந்த அறுவரைப் போலவே ஜான்சனும், தென்னரசுவும், பாபுஜியும் அவர் என்ன சொல்லப் போகிறார் என்பதை ஆவலாகக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். மகேஷிடம் மட்டும் அந்த ஆவல் இருக்கவில்லை. அவனுக்கு லேசான பயமும், சலிப்பும் மட்டுமே இருந்தது. அவன் குருஜியையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்...

குருஜி தொடர்ந்தார். தொடர்ந்து சிந்தித்து, தியானத்தில் ஆழ்ந்து சில முடிவுகளை அவரால் எட்டியிருக்க முடிந்திருந்தது. எனவே முன்பிருந்த ஒருசிலக் குழப்பங்கள் இப்போது தெளியப்பட்டு இருந்தன. எனவே சொல்வதை ஆணித்தரமாகச் சொன்னார். “....விசேஷ மானஸ லிங்கத்தை உருவாக்கிய சித்தர்கள் தங்கள் சக்திகளை எல்லாம் திரட்டி அதில் ஆவாகனம் செய்திருக்கிறார்கள். ஒரு காலத்தில் மனித சமுதாயம் பெரிய மாற்றத்தைச் சந்திக்கும், அந்த சமயத்தில் அந்த சக்தி அந்த மனித சமுதாயத்தைக் காப்பாற்றி வழிகாட்டும் என்பது தான் அவர்கள்

நோக்கம்... அவர்கள் கணக்கு, அப்படியொரு காலம் வரும் போது அது மனிதர்கள் வசம் போகும் என்பதாக இருந்தது. அப்படிக் கை மாறும் விதம் இயற்கையாக இருக்காது என்று அவர்கள் அன்றைக்கே சொல்லி வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். அதை சிலர் எழுதி வைத்து விட்டும் போயிருக்கிறார்கள். சம்பந்தப்பட்ட ஓலைச்சுவடியும் விதி வசமாக நம் கையில் கிடைத்திருக்கிறது....”

“விசேஷ மானஸ லிங்கத்தின் சக்தி தேவைப்படும் வரை, அல்லது அதன் சக்தி பூரணமாய் முழுமையாகும் வரை, அது புனிதமானவர்களால் பூஜிக்கப் பட வேண்டும் என்று நினைத்த அவர்கள் மூன்று பேரை நியமித்து அது வழி வழியாகக் கடைபிடிக்கப்பட்டும் வந்திருப்பது உங்களுக்கும் தெரியும்... கடைசியாக அக்னி நேத்ர சித்தர், பசுபதி, சிதம்பரநாத யோகி என்ற மூன்று பேரிடம் வரும் வரை இந்த நியமனப்படியே நடந்து வந்தது. கிட்டத்தட்ட பசுபதியும் சித்தருக்கு சமமானவர் தான். சிதம்பரநாத யோகியையும் அப்படியே சொல்லலாம். அந்தக் காலம் வரை தான் சித்தர்கள் ஆரம்பத்தில் முடிவு செய்த நியமன முறை வேலை செய்தது. முழுவதுமாக மனிதர்கள் கையில் அந்த சிவலிங்கம் மாறும் இந்தக் காலம் வந்த போது, மாற்றத்தை எதிர்கொள்ள வேண்டிய நிலையில் இந்த உலகம் வந்திருக்கிற போது, யாரால் அந்த சக்தி முழுமையாக உபயோகப்படுத்த முடியுமோ அவர்கள் கைக்கு அந்த சிவலிங்கம் வந்து சேர்ந்திருக்கிறது. இது தான் விதி. இது தான் அந்த சித்தர்களின் நோக்கம். இது தான் உங்கள் நவீன வார்த்தையில் சொல்வதானால் சித்தர்களின் ப்ரோகிராம்...”

உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டே வந்த எகிப்தியர் கேட்டார். “ஆனால் பசுபதி அவர் தம்பி பேரன் ஈஸ்வரை நியமித்திருக்கிறார்.... சிதம்பரநாத யோகி கணபதியை நியமித்திருக்கிறார். அவனையே தான் விதிவசமாக நீங்களும் சிவலிங்கத்திற்குப் பூஜை செய்ய தேர்ந்தெடுத்திருக்கிறீர்கள். மூன்றாவது ஆள் என்று ஒரு ஆளை

*அவர்கள் நியமித்திருக்கிறார்களா இல்லையா என்று தெரியவில்லை. இங்கே தான் எங்களுக்குக் குழப்பம் வருகிறது.”*

*தென்னாப்பிரிக்கரும் சொன்னார். “ஆமாம்”*

*குருஜி லேசாக சிரித்துக் கொண்டே சொன்னார். “அர்த்தபூர்வமாகச் செய்யும் காரியங்கள் வெறும் சம்பிரதாயமாக மாறிவிடும் போது அர்த்தம் இழந்து போகிறது. அந்தத் தவறைத் தான், ஈஸ்வரைத் தேர்ந்தெடுத்து, பசுபதி செய்து இருக்கிறார். அக்னி நேத்ர சித்தருக்கு மூன்றாவது ஆளைக் கண்டு பிடிக்கவே முடியவில்லை. சிதம்பரநாத யோகி நியமித்திருக்கிற கணபதிக்கோ எந்தப் பெரிய விஷயத்தையும் கிரகித்துக் கொள்ளும் சக்தியே இல்லை. பின் எப்படி அவன் மாதிரி ஆளால் உலகத்தைக் காப்பாற்றவோ, வழி நடத்தவோ முடியும். இப்படி இருக்கிறது அவர்கள் நியமனக் குழப்பம்….. அந்த நியமன முறை காலாவதியான பிறகும் அவர்களால் விட முடியவில்லை….”*

*“அப்படியானால் இன்னும் அந்த கணபதி மாத்திரம் தான் அதைத் தொட முடிகிறது என்பது பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?” –இஸ்ரேல்காரரர் மறுபடியும் கேட்டார்.*

*குருஜி பாபுஜியிடம் முன்பு விவரித்த தீ-பாத்திரம் உதாரணத்தையும், மின்சாரம்-மரக்கட்டை உதாரணத்தையும் மறுபடியும் அவர்களிடம் சொல்லி விளக்கினார். அவர் சொன்னதில் அதற்கு மேல் அவர்களால் தவறு காண முடியவில்லை.*

*குருஜி தொடர்ந்து சொன்னார். “நாளை காலை மறுபடியும் ஆராய்ச்சிகளைத் தொடரப் போகிறோம். நாளை தியானம் செய்யும்*

*போது மன அலைகளை அளக்கப் போகிறோம்.... விசேஷ மானஸ லிங்கத்துடன் ட்யூன் ஆக முடிவது எந்த அலைகளில் சாத்தியமாகப் போகிறது என்று குறித்துக் கொள்ளப் போகிறோம். நாளை மறு நாள் பிரதானமான ஆராய்ச்சி ஆரம்பமாகப் போகிறது....”*

*அமெரிக்கர் சொன்னார். “நாங்கள் பிரதான ஆராய்ச்சியை இங்கிருந்தே பார்க்க ஆசைப்படுகிறோம். அது உங்கள் ஆராய்ச்சிக்குத் தடங்கல் ஆகாதே”*

*குருஜி பின்னால் திரும்பி ஜான்சனைப் பார்த்தார். ஜான்சன் சொன்னார். “எந்த வித சத்தமும் உங்கள் பக்கம் இருந்து வராத வரை பிரச்சினை இல்லை”*

*குருஜி மகேஷிடம் கேட்டார். “சத்தமே செய்தாலும் அது நமக்குக் கேட்காதபடி செய்ய முடியாதா என்ன?”*

*மகேஷ் சொன்னான். “அதை ம்யூட் செய்து விடலாம். பிரச்சினை இல்லை.”*

*குருஜி சொன்னார். “அப்படியானால் நீங்கள் அங்கிருந்தே தாராளமாய் பிரதான ஆராய்ச்சிகளை நாளை மறு நாள் முதல் பார்க்கலாம்”*

*ஜெர்மானியப் பெண்மணி ஆர்வத்துடன் கேட்டாள். “நாளை மறுநாள் ஆரம்பிக்கும் பிரதான ஆராய்ச்சி என்ன குருஜி?”*

***"நாளை சாயங்காலம் சொல்கிறோம்" என்றார் குருஜி. அந்த அறுவராலும் காத்திருக்க முடியவில்லை. அதை அமெரிக்கரும், ஜெர்மானியப் பெண்மணியும் வாய் விட்டே சொன்னார்கள்.***

***பிரதான ஆராய்ச்சியின் ஆரம்பம் என்ன என்பதை குருஜியும், ஜான்சனும் தான் விவாதித்துக் கொண்டிருந்தார்களே ஒழிய அதை அவர்கள் இன்னும் முடிவு செய்திருக்கவில்லை. எனவே பாபுஜி, தென்னரசு, மகேஷ் உட்பட மற்றவர்கள் யாருமே அறியவில்லை என்பதால் அவர்களும் அதை அறிய பரபரப்போடு காத்திருந்தார்கள்.***

# <u>அத்தியாயம் - *73*</u>

***மகனை ஒரு கையில் அணைத்துக் கொண்டிருக்கையிலேயே ஆனந்தவல்லி விஷாலியை மறு கைப்பக்கம் நிறுத்தியதால் அதிகமாய் யோசிக்க முடியாத கனகதுர்கா விஷாலியைப் பார்த்துப் புன்னகைத்தபடி அவளையும் மறு கையால் அணைத்துக் கொண்டாள். ஈஸ்வருக்கு மிக அருகில் வந்ததால் விஷாலிக்கு முகம் சிவந்தது.***

***'ஓ...இவள் தானா அந்தப் பெண்' என்று நினைவு வந்தவளாக கனகதுர்கா விஷாலியைக் கூர்ந்து பார்த்தாள். அவளுக்கு விஷாலியை மிகவும் பிடித்துப் போனது. அவள் மகனைப் பார்த்தாள். ஈஸ்வர் விஷாலியின் அருகாமையால் பாதிக்கப்படாமல் இருக்க பாடுபட்டுக் கொண்டிருந்தான். மனதிற்குள் 'யாரோ இவன்' பாடல் தானாக ஒலிக்க அவன் கஷ்டப்பட்டு முகத்தை இயல்பாக வைத்திருந்தான். விஷாலி முகம் சிவக்கையில் கூடுதல் அழகாய்***

*இருக்கிறாள் என்று மனம் சொல்ல அவன் பார்வையைத் திருப்பிக் கொண்டான்.*

*மகன் எப்போதும் தன் உணர்ச்சிகளை அதிகமாக வெளியில் காட்டிக் கொள்பவன் அல்ல என்றாலும் அவன் சாதாரணமாக இருக்கும் விதங்களிலேயே பல வித்தியாசங்களைப் படிக்க முடிந்த கனகதுர்காவுக்கு இந்தப் பெண் அவனை நன்றாக பாதிக்க முடிந்தவள் என்பது புரிந்தது.*

*ஆனந்தவல்லி அவர்களைப் பெருமிதத்தோடு பார்த்தாள். அம்மா-மகன்-மருமகள் என்று ஒரு அழகான குடும்பம் அவள் கண்முன் தெரிந்தது. தன் மகனைப் பார்த்தாள்.*

*பரமேஸ்வரனுக்குத் தாயின் நடவடிக்கைகள் சிறுபிள்ளைத்தனமாய் பட்டது. விட்டால் அம்மா ஈஸ்வர் மேலேயே அந்தப் பெண்ணைத் தள்ளி விடுவாள் போல இருக்கிறதே, என்ன ஆயிற்று இவளுக்கு? அம்மாவிடம் முணுமுணுத்தார். “அம்மா, உன் வயசுக்குத் தகுந்த மாதிரி நடந்துக்கோம்மா”*

*ஆனந்தவல்லி மகனிடம் குறும்பு பொங்க முணுமுணுத்துச் சொன்னாள். “உன் பேரனைச் சீண்டறதுன்னா எனக்கு உங்கப்பாவைச் சீண்டற மாதிரி அவ்வளவு சந்தோஷமா இருக்குடா. ஆனா அவர் கிட்ட என்ன பிரச்சினைன்னா அதிகமா கோபமே படமாட்டார். சில சமயம் மண்ணு மாதிரி இருப்பார். ஆனா இவன் அப்படி இல்லைடா... அதனால தான் இவனைச் சீண்டாமல் இருக்க முடியறதில்லை....”*

பரமேஸ்வரன் சின்னப் புன்முறுவலுடன் மௌனமானார். அவர் தாயின் எத்தனையோ பரிமாணங்களை அவர் இப்போது தான் பார்க்கிறார். ஈஸ்வரைக் கணவனின் மறு ஜென்மமாகவே நினைக்கிறதால் விஷாலியைத் தானாக நினைக்க ஆரம்பித்துத் தான் இப்படி அந்தப் பெண்ணுக்காக வரிந்து கட்டி இறங்குகிறாளோ என்று கூட அவருக்குத் தோன்ற ஆரம்பித்தது. மனித மனதின் விசித்திரங்கள் தான் எத்தனை?

கனகதுர்கா விஷாலியைக் கேட்டாள். "அப்பா எப்படிம்மா இருக்கார்?"

"சௌக்கியமா இருக்கார் ஆண்ட்டி" என்றாள் விஷாலி.

"இந்தக் காலத்துக் குழந்தைகள் இந்தியால இருக்கற மாதிரியே பேசறதில்லை. ஆண்ட்டின்னு கூப்பிடறதுக்கு பதிலா அத்தைன்னு கூப்பிட்டா கேட்க எவ்வளவு நல்லா இருக்கும்" என்று ஆனந்தவல்லி சொன்னாள்.

இத்தனை நாட்களாக மீனாட்சியை ஆண்ட்டி என்று தான் விஷாலி அழைத்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் ஒரு முறை கூட ஆனந்தவல்லி இந்தக் கருத்தைச் சொன்னதில்லை. விஷாலிக்கு ஆனந்தவல்லியின் பேச்சுக்கான அர்த்தம் புரியாமல் இல்லை. சில நாட்களாகவே ஆனந்தவல்லி நடந்து கொள்வதன் அர்த்தம் இப்போது தெளிவாகவே புரிந்தது. விஷாலிக்கு ஆச்சரியமாக இருந்தது. கௌரவம் பார்ப்பதில் பரமேஸ்வரனை மிஞ்சுபவள் ஆனந்தவல்லி. அப்படிப்பட்டவள் தன் கொள்ளுப்பேரனுடன் அவளை இணைக்க முயற்சிகள் எடுப்பது எதனால் என்று புரியவில்லை. அந்தக் குடும்பத்துக்கு நிகராக எந்த விதத்திலும் தாங்கள் இல்லை என்பது விஷாலிக்குத் தெரியும்.

ஆனந்தவல்லியிடம் விஷாலி மனதிற்குள் சொன்னாள். “அவருக்கு என்னைப் பிடிக்கலை பாட்டி. நீங்க செய்யற முயற்சிகள் எல்லாம் வீண். அந்தஸ்துல மட்டுமல்ல, அழகிலும் அறிவிலும் கூட அவருக்கு நான் பொருத்தம் இல்லாதவள்.... நான் அவர் கிட்ட நடந்துகிட்ட விதத்துக்கு அவர் என்னைக் காறித் துப்பாததே பெரிய விஷயம்....”

கண்களில் பெருகிய நீரைக் காண்பிக்க விரும்பாமல் வேறு பக்கம் விஷாலி திரும்பிக் கொண்டாள்.

ஆனந்தவல்லியை முறைத்த ஈஸ்வரின் அலைபேசி இசைத்தது. அழைத்தது பார்த்தசாரதி தான். ”ஈஸ்வர் நீங்க எங்கே இருக்கீங்க?”

”ஏர்போர்ட்டுல இருக்கேன் சார். அம்மா வந்திருக்காங்க”

“நம்ம கேஸ்ல ஒரு முக்கியமான தகவல் கிடைச்சிருக்கு. உங்க கிட்டே பேச வேண்டி இருக்கு. நேர்ல வர முடியுமா?”

“சாயங்காலம் வர்றேன் சார்”

**************

ஹரிராம் சிவலிங்கம் பற்றிய தன் கருத்தைச் சொல்லும் முன் போய் விட்டதால் கணபதி அவரிடம் மறுபடி கேட்டுத் தெரிந்து கொள்ள ஆர்வமாக இருந்தான். மகேஷ் வந்து குருஜி அவரை அழைப்பதாகச் சொல்லி விட்டுப் போனதும் கிளம்பிப் போன ஹரிராம் நிறைய நேரம் வரவில்லை. ஆனாலும் கணபதி அன்று அவருக்காக ஆவலாகக் காத்திருந்தான்.

அவர் வந்த போது ஆவலாக அவர் முகத்தைப் பார்த்தான். அவனைப் பார்த்த பிறகு தான் ஹரிராமிற்கு அவன் கேள்வி நினைவுக்கு வந்தது. அதற்கு என்ன பதில் சொல்வது என்று ஹரிராமிற்குப் புரியவில்லை. கணபதி அவருக்குத் தன் கேள்வியை மீண்டும் நினைவூட்டினான். "எங்க சிவனோட சக்தி பரவாயில்லைங்களா?"

சற்று முன் அலெக்ஸியின் நிலைமையைப் பார்த்திருந்தால் இவனுக்கு சிவனின் சக்தி முழுவதுமாய் புரிந்திருக்கும் என்று ஹரிராமிற்குத் தோன்றியது. ஆனால் விசேஷ மானஸ லிங்கம் இவனுக்கு அந்த மாதிரி சக்தியைக் காட்டி இருக்க வாய்ப்பில்லை...

ஹரிராம் அவனிடம் சொன்னார். "நான் இந்த மாதிரி அற்புதத்தை வேறெங்கேயும் பார்த்ததில்லை"

கணபதிக்குப் பெருமை தாங்கவில்லை. அவன் மாதிரி அவர்கள் மந்த புத்திக்காரர்கள் இல்லை. அவர்கள் சரியாகத் தான் மதிப்பிட்டு இருப்பார்கள். பாவம் அப்படிப்பட்ட உயர்ந்த சிவலிங்கம் அவனைப் போன்று மந்திரமோ, பூஜா முறைகளோ சரியாகத் தெரியாத ஒரு தற்குறி பூஜை செய்கிற நிலைமைக்கு வந்திருக்கிறது என்றெல்லாம் தோன்றியது.

மானசீகமாக அவன் சிவனிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டான். "என்னை மன்னிச்சு கொஞ்ச நாள் பொறுத்துக்கோ. அப்புறம் நல்லபடியா பூஜை செய்யறவங்க உனக்குக் கிடைப்பாங்க. சரியா?"

***ஹரிராம் அவனைப் பிரமிப்புடன் பார்த்தார். ஒருவர் மனதில் ஓடும் சிந்தனைகள் அவருக்கு சத்தமாய் பேசுகிற மாதிரி. ஆனால் அவர் ஏன் அப்படி அவனைப் பார்க்கிறார் என்பது கணபதிக்குப் புரியவில்லை.***

***குழந்தையை அணைத்துத் தூக்கிக் கொண்டு வருவது போல அன்று காலை அவன் விசேஷ மானஸ லிங்கத்தைத் தூக்கிக் கொண்டு வர முடிந்தது அவருக்கு நினைவு வந்தது. அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. ஆராய்ச்சிக்கு உகந்தது சிவலிங்கம் மட்டுமல்ல, இந்த கணபதியும் தான். இவனும் விசேஷமானவன் தான்….***

***கண்பதி அவரிடம் ஆவலுடன் கேட்டான். "சார், நீங்க எல்லாம் சிவலிங்கத்தை மட்டும் தான் ஆராய்ச்சி செய்வீங்களா, இல்லை பிள்ளையார் சிலை மாதிரி மத்ததையும் செய்வீங்களா?"***

***ஹரிராம் சொன்னார். "இந்த மாதிரி தெய்வ விக்கிரகங்களை ஆராய்ச்சி செய்யறது எங்களுக்கெல்லாம் இது தான் முதல் தடவை. ஏன் கேட்கறீங்க?"***

***"ஐயோ என்னைப் போய் நீங்க ஏன் பன்மையில பேசறீங்க. ஒருமையிலயே பேசுங்க. நீங்க எனக்கு அப்பா மாதிரி" என்றவன் தன்னுடைய பிள்ளையாரைப் பற்றி அவரிடம் சொல்ல ஆரம்பித்தான். "நாகனூர் தான் எங்க கிராமம். அங்கே வரசித்தி விநாயகர்ங்கிற என்னோட பிள்ளையார் இருக்கார்….."***

***ஹரிராம் அவனையே சுவாரசியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார். 'சிவனும் எங்க சிவன் தான், வினாயகரும்***

***என்னோட பிள்ளையார் தான். இறைவனின் குடும்பமே இவன் குடும்பம் தான் போல் இருக்கிறது’. கணபதி பேசும் போது அவருக்கு இன்னொரு உண்மை புரிந்தது. எண்ணும் எண்ணங்களுக்கும், பேசும் வார்த்தைகளுக்கும் இடையே கடுகளவும் வித்தியாசம் இல்லாத ஒருவனை முதல் முறையாக அவர் பார்க்கிறார். இந்த உலகத்தின் அழுக்கு இன்னமும் தொட்டு விடாத ஒரு ஸ்படிகத்தை அவர் பார்க்கிறார்.....***

***மகேஷ் குருஜியை பிறகு எச்சரித்தான். “அந்த கணபதியை ஹரிராம் கிட்ட பேச விடறது ஆபத்துன்னு நினைக்கிறேன். விடாம பேசிகிட்டே இருக்கான்....”***

***குருஜி சொன்னார். “அவனுக்குப் பேச ஆள் வேணும் இல்லாட்டி அவன் விசேஷ மானஸ லிங்கத்து கிட்டயே போய் பேச ஆரம்பிச்சாலும் ஆச்சரியம் இல்லை. அவன் ஹரிராம் கிட்ட பேசறது ஆபத்து இல்லை. அவன் சொல்லாமயே அவருக்கு அதெல்லாம் தெரிஞ்சுடும். அவன் என்னத்தைப் பேசிடப் போறான். பேச்செல்லாம் அவனோட பிள்ளையார் புராணமா தான் இருக்கும்....”***

***மகேஷ் ரகசியமாய் வந்து அவர்கள் பேசுவதைக் கேட்டான். கணபதி அவன் பிள்ளையார் புராணத்தைத் தான் சொல்லிக் கொண்டிருந்தான். குருஜி எவ்வளவு துல்லியமாய் இவனைத் தெரிந்து வைத்திருக்கிறார் என்று வியந்து விட்டு நகர்ந்தான்.***

**************

***மறு நாள் அதிகாலையில் கணபதி பூஜை செய்கையில் சிவனிடம் ஹரிராம் சொன்னதை மனதிற்குள் தெரிவித்தான். ”அவர் உன்னை அற்புதம்னு சொன்னார். நீ பாஸாயிட்டே. மத்தவங்க***

*ரெண்டு பேர்கிட்டயும் கேட்கலாம்னா அவங்க பாஷை தெரிய மாட்டேங்குது.... அவர் கிட்ட உன் பையனைப் பத்தியும் சொல்லி இருக்கேன். பிள்ளையாரையும் ஆராய்ச்சி செய்வீங்களானு கேட்டேன். ஆனா அமெரிக்காவுக்கு எல்லாம் என் பிள்ளையாரை எடுத்துகிட்டு போக நான் விட மாட்டேன்னு தெளிவாய் சொல்லிட்டேன். அவரையும் எடுத்துட்டு போயிட்டா நான் என்ன பண்ணுவேன் சொல்லு.....”*

*குருஜி வந்து தான் அவன் பூஜையை துரிதப்படுத்த வேண்டியதாயிற்று. அவன் பூஜையை முடித்த பிறகு சொன்னார். ”கணபதி உண்மையில இன்னைக்கு தான் ஆராய்ச்சியோட முதல் நாள். முக்கிய ஆராய்ச்சி நாளைல இருந்து தான் ஆரம்பிக்குதுன்னாலும் இன்னைக்கு தான் எங்களைத் தயார்ப்படுத்திக்கிறோம். உன் சிவன் தயாராய் இருக்காரா?”*

*”கடவுள் எப்பவுமே தயார் தானே குருஜி. மனுஷங்க தான் அவருக்குத் தயாரா இருக்கறதில்லை”*

*குருஜி அவனையே பார்த்தார். கணபதிக்குத் திடீர் என்று வேறு நினைவு ஒன்று வந்தது. “இன்னைக்கு முதல் நாள்னு வேற சொல்றீங்க. சிவனுக்கு கட்ட என் கிட்ட புது பட்டு வேஷ்டி இருக்கு. நான் கொண்டு வந்துட்டடுமா?”. கணபதி அவர் பதிலுக்குக் காத்திராமல் தனதறைக்கு ஓட குருஜி அருகே இருந்த ஜான்சனையும் பாபுஜியையும் பார்த்தார்.*

*பாபுஜி சொன்னார். “இவன் பார்க்க பாவமா இருந்தாலும் வில்லங்கமாயும் பேசறான். கடவுள் எப்பவுமே தயார், மனுஷங்க தான் தயாரில்லைன்னு சொல்றானே”*

குருஜி புன்னகை செய்தார். "சில சமயங்கள் குழந்தைகள் வாயில இருந்து பெரிய தத்துவார்த்தமான வார்த்தைகள் வந்துடறது இல்லையா? அப்படித் தான் இதுவும்..."

அலெக்ஸி, கியோமி, ஹரிராம் மூவரும் தியான மண்டபத்திற்குள் நுழைந்தனர். ஜான்சன் அவர்களைப் பார்த்ததும் அவர்கள் அருகே விரைந்து சென்றார். "தயாராக இருக்கிறீர்கள் அல்லவா?" என்று அவர்களைக் கேட்டார். அவர்கள் ஆம் என்றார்கள். இந்த ஆராய்ச்சிகளுக்காக அவர்கள் பல நாட்களாகத் தயார்ப்படுத்தப் பட்டிருந்தார்கள்.

ஜான்சன் சொன்னார். "இன்றைக்கு நீங்கள் உங்கள் முழுக்கட்டுப்பாட்டில் இருந்து சிவலிங்க சக்தியோடு ட்யூன் ஆகிறதை உணர்கிற போது செய்ய வேண்டியவை இரண்டு. ஒன்று உங்கள் வலது சுட்டு விரலை மட்டும் மேலே நீட்டுங்கள். இரண்டாவது ரோஜாப்பூவை நினையுங்கள். சரியா?"

அவர்கள் தலையசைத்தார்கள். மூவருக்கும் தலையில் மாட்டிக் கொள்ள வயர்லெஸ் EEG மெஷின் செட்கள் தரப்பட்டன. அவர்கள் மாட்டிக் கொண்டார்கள்.

கணபதி புதிய பட்டு வேட்டியுடன் தியான மண்டபத்திற்குள் ஓட்டமும் நடையுமாய் வந்தான். அதை விசேஷ மானஸ லிங்கத்திற்கு அணிவித்து விட்டு இரண்டடி பின்னுக்கு வந்து அந்த சிவலிங்கத்தைப் பெருமிதத்துடன் பார்த்தான். 'நல்லா அம்சமா இருக்கு' என்று நினைத்துக் கொண்டான்.

***ஹரிராம் புன்னகைத்தார். மகேஷ் 'இவன் என்ன லூஸா?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டான். குருஜி தானும் வயர்லெஸ் EEG மெஷின் செட்டை தலையில் பொருத்திக் கொண்டார். பின் கணபதியிடம் கேட்டார். "கணபதி நீயும் இதைப் போட்டுக்கறியா?"***

***"எதுக்கு?" கணபதி வெகுளித்தனமாய் கேட்டான்.***

***"ஆராய்ச்சியில் உன்னையும் சேர்த்துக்கத் தான்"***

***அந்த வயர்லெஸ் EEG மெஷின் எதை அளக்கிறது என்பது கணபதிக்குத் தெரியவில்லை. "இதை என் தலையில் மாட்டிகிட்டா உள்ளே இருக்கிற களிமண் தான் தெரியும்" என்று சொல்லி விட்டு கலகலவென்று கணபதி சிரித்தான். மேலும் அவனுக்கு அதை மாட்டிக் கொள்வது ஆஸ்பத்திரி சூழலை நினைவுபடுத்தியது.***

***அவனை வற்புறுத்த குருஜி விரும்பவில்லை.***

***ஜான்சன் மகேஷைப் பார்த்து சைகை செய்ய மகேஷ் ஒரு மெஷினைக் கொண்டு வந்தான். தூரத்திலேயே நின்றான். குருஜி கணபதியிடம் சொன்னார். "கணபதி அந்த மெஷினை வாங்கி சிவலிங்கத்துக்கு ரெண்டடி தள்ளி அந்தப் பக்கம் வையேன்".***

***"ஓ சிவன் பக்கத்திலேயும் ஒரு மெஷின் இருக்கா" என்று கேட்டபடியே மகேஷிடம் இருந்து அந்த மெஷினை வாங்கிய கணபதி குருஜி கைகாட்டிய இடத்தில் வைத்தான். அந்த மெஷின் விலை உயர்ந்த மெஷினாக கணபதிக்குத் தோன்றியது. சிவன் பக்கத்தில் அதை வைப்பது சிவனுக்குப் பெருமை சேர்ப்பது போல***

அவனுக்குத் தோன்றியது. “பார்த்தியா உனக்காக என்ன எல்லாம் வாங்கிட்டு வந்திருக்காங்க”

அந்த மெஷின் ஜெர்மனியில் தயாரானது. ஃபவுண்டரிகளில் உலோகங்கள் உருக்கப்படும் போது ஏற்படும் வெப்பத்தை அளக்கும் ஒரு வகை ஆப்டிகல் பைரோமீட்டர் அது. அத்துடன் ஒளியின் தீட்சண்ணியத்தையும் அளக்கும் அமசத்தையும் சேர்த்து விசேஷ மானஸ லிங்கத்தை ஆராய்ச்சி செய்வதற்காகவே ஜெர்மனியில் பிரத்தியேகமாகத் தயாரித்திருந்தார்கள்.

மகேஷ் அந்த மெஷினை எப்படி வைக்க வேண்டும் என்று தூரத்தில் இருந்தே சொல்ல கணபதி அந்த மெஷினை வைத்த விதத்தை சரிப்படுத்தினான். அந்த மெஷினில் இருந்த லென்ஸ் பகுதி இப்போது சிவலிங்கத்தைப் பார்த்தபடி இருந்தது. கணபதி ஒதுக்குப் புறமாக நகர்ந்து ஒரு சுவரோரமாக நின்றான்.

மகேஷ் தியான மண்டபத்தின் சுவர்களில் பொருத்தப்பட்டிருந்த கம்ப்யூட்டர் திரைகளைப் பார்த்தான். நான்கு பேர்களுடைய வயர்லெஸ் EEG மெஷின்களின் அளவீடுகள் நான்கு திரைகளில் தெரிந்தன. ஐந்தாவது வயர்லெஸ் EEG மெஷின் அணியப்படாததால் ஐந்தாவது திரை மட்டும் காலியாக இருந்தது. ஆறாவது திரையில் சிவலிங்கத்தை அளக்கும் விசேஷ பைரோமீட்டர் அளவீடு தெரிந்தது. எல்லாம் வயர்லெஸ் மூலமாக முன்பே கம்ப்யூட்டர்களில் முன்பே இணைக்கப்பட்டிருந்தன. திரையில் தெரிவது மட்டுமல்லாமல் கம்ப்யூட்டர்களில் துல்லியமாகப் பதிவாகிக் கொண்டிருந்தன.

நான்கு பேருடைய மூளை மின்னலைகளும் பீட்டா அலைகளைக் காட்டின. (தெரியாதவர்களுக்கு சிறு குறிப்பு:

*மூளையின் மின்னலைகள் ஒரு வினாடிக்கு எத்தனை சிபிஎஸ் CPS (Cycle per second) ஏற்படுகின்றன என்பதை வைத்து தான் அளக்கப்படுகின்றன. பெரும்பாலும் நாம் இருப்பது பீட்டா (14க்கும் மேற்பட்ட சிபிஎஸ்) அலைகளில் தான். தியான நிலை அல்லது அரைத்தூக்க அமைதி நிலையில் ஆல்ஃபா (8 முதல் 13 வரை சிபிஎஸ்) அலைகளிலும், ஆழ்ந்த தூக்கத்தில் தீட்டா (4 முதல் 7 வரை சிபிஎஸ்) அலைகளிலும் இருக்கிறோம். சமாதி நிலைக்குச் செல்லக் கூடிய யோகிகள், சித்தர்கள் அதற்கும் அடுத்த நிலையான டெல்டா (4க்கும் குறைவான சிபிஎஸ்) அலைகளில் சஞ்சரிக்க முடிந்தவர்கள்.)*

*விசேஷ பைரோமீட்டரில் அறையின் வெப்ப நிலையும், அருகில் எரிந்து கொண்டிருந்த விளக்குகள் ஒளியளவும் தெரிந்து கொண்டிருந்தன. மகேஷ் திருப்தியுடன் ஜான்சனைப் பார்த்துத் தலையாட்டினான். எல்லாம் சரியாக இருக்கின்றன என்று சைகையால் தெரிவித்தான்.*

*நால்வரில் குருஜியும், கியோமியும் ஆல்ஃபா அலைகளுக்கு சீக்கிரமே வந்தார்கள். அடுத்ததாக ஹரிராமும், அதற்கும் அடுத்ததாக அலெக்ஸியும் ஆல்ஃபா அலைகளுக்கு வந்தார்கள். ஆனால் சிவலிங்கத்திடம் எந்த மாற்றமும் இல்லை. பைரோ மீட்டர் பழைய அளவுகளையே காண்பித்தது.*

*திடீரென்று சிவலிங்கம் ஒளிர்ந்தது. விசேஷ பைரோமீட்டர் அதிக பட்ச அளவுக்குப் போய் உடனே டுப் என்ற சத்தத்தோடு பழுதாகியது.*

*அதையே பார்த்துக் கொண்டிருந்த கணபதிக்கு வருத்தமாயிற்று. சிவனின் மெஷின் பாழாகி விட்டதே என்று*

வருத்தப்பட்டவன் சத்தமாக அங்கலாய்த்தான். ”நல்ல மெஷினாய் வாங்கியிருக்கலாமே”.

# அத்தியாயம் - 74

பாபுஜிக்கு கணபதி கிண்டல் செய்வது போல் தோன்றியது. ஜான்சன் முகத்தில் ஈயாடவில்லை. அவருக்கு கணபதி சொன்னது பெரிதாய் பாதிக்கவில்லை. அந்த பைரோமீட்டர் உலோகங்கள் உருகும் போது அந்த வெப்பத்தைக் கணக்கிடக் கூடியது. ஒளியிலும் பல ஆயிரம் வாட்ஸ் வரைக்கும் துல்லியமாக அது அளக்கும் என்று தயாரித்த நிறுவனம் சொல்லி இருந்தது. அப்படிப்பட்ட உயர் அளவுகளை அளக்க முடிந்த மெஷின் தன் உச்ச அளவு வரை அளந்து விட்டு செயல் இழந்து போனது ஜான்சனுக்கு ஏமாற்றமாய் இருந்தது. தென்னரசுவும் மகேஷும் கலவரத்துடன் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

கணபதி சத்தமாய் சொன்னதைக் கேட்ட பிறகு நால்வரின் தியானம் கலைந்ததால் அவர்கள் ஆல்ஃபா அலைகளில் இருந்து பீட்டா அலைகளுக்கு வந்தனர். குருஜியின் பார்வை பைரோ மீட்டரில் தங்கிப் பின் கணபதியிடம் சென்றது. தன்னருகே கணபதியை அவர் அழைத்தார்.

கணபதி அருகே வந்த பிறகு கனிவாகச் சொன்னார். “கணபதி. இங்கே ஆராய்ச்சி நடக்கறப்ப சத்தமா பேசவே கூடாது. அப்படிப் பேசினா ஆராய்ச்சிக்குத் தடங்கல் ஆயிடும். அப்புறம் உன்னோட சிவனை சரியா ஆராய்ச்சி செய்ய முடியாது. அந்த மெஷின் ரிப்பேரானா என்ன மத்த மெஷின்கள் இருக்கல்லவா? ஆராய்ச்சிக்கு அது போதும் சரியா?”

தன்னால் ஆராய்ச்சிக்குத் தடங்கல் வந்து விட்டது கணபதிக்கு குற்ற உணர்ச்சியை ஏற்படுத்தியது. இனி பேச மாட்டேன் என்கிற மாதிரி கைகட்டி வாய் மேல் விரலை வைத்தான்.

புன்னகைத்த குருஜி அவனைப் போகுமாறு சைகை செய்து விட்டு ஜான்சனை அருகே அழைத்தார். ஜான்சன் அருகே வந்த போது மெல்ல சொன்னார். “அந்த பைரோ மீட்டர் வேலை செஞ்சிருந்தா தான் அது ஆச்சர்யம். அதனால கூட அளக்க முடியாத அளவு சக்தி இந்த சிவலிங்கத்துக்கு இருக்குன்னு நிரூபணம் ஆயிருக்கில்லையா, அது போதும். பழையபடி ஆரம்பிப்போம்.....”

ஜான்சனுக்கு மனோ தைரியம் திரும்பியது. அவர் மற்ற மூன்று பேரையும் பார்த்து தொடரச் சொல்லி சைகை செய்தார். மறுபடி ஆரம்பித்தார்கள்.

நால்வரும் மறுபடி ஆல்ஃபா அலைகளுக்கு வந்தார்கள். மகேஷிற்கு இன்னொரு முறை சிவலிங்கம் ஒளிர்ந்து வேறெதாவது கோளாறை ஏற்படுத்தி விடுமோ என்ற பயம் இருந்து கொண்டே இருந்தது. ஆனால் அவன் பயந்தபடி சிவலிங்கம் ஒளிரவில்லை.

கணபதி கம்ப்யூட்டர் திரையில் நெளி நெளியாய் கோடுகள் போவதையும், நெளிவுகள் குறைந்து கொண்டே வருவதையும் வேடிக்கை பார்த்தான். நெளிவுகள் அதிகமாக இருப்பது நல்லதா, குறைவாக இருப்பது நல்லதா என்று அவனுக்குப் புரியவில்லை. சிவனை நோக்கி அமர்ந்தவர்கள் சிவனின் சக்தியை அளக்கும் குறியீடா அந்த நெளிவுகள் என்றும் தெரியவில்லை. ’சிவனை நேரடியாக அளக்கும் மெஷின் ரிப்பேரான மாதிரி இந்த

மெஷின்களும் ரிப்பேராயிடக் கூடாது' என்கிற பயத்தில் அவனும் இருந்தான்.

குருஜி விரைவிலேயே ஆல்ஃபா அலைகளின் கடைசியும், தீட்டா அலைகளின் ஆரம்பத்திலுமாய் (7, 8 சிபிஎஸ் அலைகளில்) சஞ்சரிக்க ஆரம்பித்தார். சரியாக 7 எண்ணில் சிவலிங்கத்தின் அலைகளுடன் ஓரளவு இசைவு ஏற்பட ஆரம்பித்தது.

அடுத்ததாக கியோமி ஆல்ஃபா அலைகளின் கடைசியில் அதாவது எட்டிலும், பிறகு ஹரிராம் தீட்டா அலைகளின் ஆரம்பத்தில் அதாவது ஏழிலும், அலெக்ஸி ஆல்ஃபா அலைகளின் ஒன்பதிலும் ஓரளவு இணைய ஆரம்பித்தார்கள். அவர்கள் அனைவராலும் அதற்கும் ஆழத்தில் கூட பயணிக்க முடிந்தாலும் தங்களை இழக்காமல் முழுக் கட்டுப்பாட்டுடன் அவர்கள் சௌகரியமாக இருக்க முடிந்த நிலைகள் அதுவாகத் தான் இருந்தது. அவர்கள் வலது கை சுட்டுவிரலை மேலே உயர்த்த மகேஷ் வேகமாக அவரவர் இருந்த அலைகளைக் குறித்து வைத்துக் கொண்டான்.

நான்கு பேரும் ஒவ்வொருவராக ரோஜாவை நினைக்க ஆரம்பித்தார்கள். சிறிது நேரத்தில் ஒரு அற்புதம் நிகழ ஆரம்பித்தது. ரோஜாவின் மணம் அங்கு பரவ ஆரம்பித்தது. ஜான்சன் பிரமிப்புடன் தென்னரசுவைப் பார்த்தார். தென்னரசுக்கு மயிர் கூச்செறிந்தது. பாபுஜிக்கு வெற்றி வெற்றி என்று கத்த வேண்டும் போல் இருந்தது. மகேஷ் பரபரப்புடன் இந்த மணம் கற்பனை அல்லவே என்று பல தடவை சரிபார்த்துக் கொண்டான்.

தியானநிலையில் இருந்த நால்வரும் இயல்பு நிலைக்குத் திரும்பினார்கள். அவர்கள் முகத்திலும் பிரமிப்பு தெரிந்தது. அவர்கள் மன அலைகளில் சிவலிங்கத்தின் சக்தியோடு லயிக்க

முடிந்த நிலையில் தங்கள் கட்டுப்பாட்டை உறுதி செய்து கொள்ள முன்பே நிச்சயித்த ஒரு பெயரை நினைத்துக் கொள்ள வேண்டும் என்று திட்டமிட்டார்களே ஒழிய, அந்தப் பெயரை நினைத்தவுடன் அந்தப் பொருளின் சாரத்தை அந்த இடத்தில் உணர முடியும் என்று எதிர்பார்த்திருக்கவில்லை.....

கணபதிக்கு மட்டும் ரோஜா மணம் வந்ததன் காரணம் விளங்கவில்லை. 'இவங்கள்ல யார் செண்ட் அடிச்சிருக்காங்க?' என்று ஒவ்வொருவரையும் பார்க்க ஆரம்பித்தான்.

குருஜி பெருமையுடன் விசேஷ மானஸ லிங்கத்தைப் பார்த்தார். விசேஷ மானஸ லிங்கம் அவர்கள் வசமாக ஆரம்பித்து விட்டது.

**************

கணவன் பிறந்து வளர்ந்த அந்த வீட்டில் முதல் முதலாகக் காலடி எடுத்து வைத்த போது கனகதுர்கா நிறையவே உணர்ச்சி வசப்பட்டாள். அவளுடன் வந்து விட்ட பிறகு அவளுடைய கணவன் அந்த வீட்டில் திரும்பவும் காலடி எடுத்து வைக்கவில்லை. அதை நினைக்கையில் மனம் கனத்தது. கண்கள் கசிந்தன. உடலும் பலவீனமானது போல் உணர்ந்த கனகதுர்கா மகன் கைகளை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டாள்.

ஈஸ்வர் தாயின் பிடி இறுக்கத்திலேயே அவள் மனநிலையை உணர்ந்தான். அவள் முக மாற்றத்தைப் பார்த்த போது மற்றவர்களும் உணர்ந்தார்கள். ஆனந்தவல்லி உடனடியாகச் சொன்னாள். "துர்கா நீ ரூமுக்குப் போய் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்கோம்மா. அப்புறம் பேசலாம்...."

கனகதுர்கா மெள்ள தலையசைத்தாள். ஈஸ்வர் தாயைத் தன் அறைக்கு அழைத்துச் சென்றான். அவள் தளர்ச்சியுடன் போவதைப் பார்த்த பரமேஸ்வரனுக்கு மனதை என்னவோ செய்தது. என்ன தான் இப்போது அவர் மனம் மாறினாலும், முந்தைய செயல்களின் விளைவுகளை அவர் சந்தித்துத் தானாக வேண்டி உள்ளது.

'வீடு வெறும் வசிக்கும் இடம் மாத்திரம் அல்ல. வசித்தவர்கள், வசிக்கிறவர்கள் நினைவுகளையும் அது தன்னிடம் தக்க வைத்துக் கொள்வதால் அது நினைவுகளின் கூடாரமும் கூட.' கணவரின் அறைக்குள் நுழைந்தவுடன், அங்கிருந்த புகைப்படங்கள், அவர் வாங்கிக் குவித்திருந்த கோப்பைகள், பதக்கங்களைப் பார்த்தவுடன், அணை திறந்த வெள்ளம் போல் கனகதுர்காவின் துக்கம் வெளிப்பட்டது. மகனைக் கட்டிக் கொண்டு அவள் அழுதாள். ஈஸ்வரும் கண்கலங்கினான்.

அவள் அழும் சத்தம் வெளியே கேட்ட போது பரமேஸ்வரனும் தளர்ந்து போனார். ஹாலில் இருந்த நாற்காலியில் சரிந்து உட்கார்ந்து கொண்ட அவர் கண் கலங்க மீனாட்சியிடம் கேட்டார். "உன் அண்ணன் என்னை மன்னிப்பான்னு தோணுதா மீனாட்சி"

மீனாட்சி கண்கலங்க தந்தையிடம் சொன்னாள். "அப்படி எல்லாம் சொல்லாதீங்கப்பா. அண்ணன் ஆத்மா எந்த உலகத்துல இருந்தாலும் இப்போ தான் சாந்தி அடைஞ்சிருக்கும்ப்பா..."

இது போன்ற சந்தர்ப்பங்களில் உணர்ச்சிப் பிரவாகங்கள் சர்வசகஜம் என்று நினைத்தவளாய் ஆனந்தவல்லி தனது அறைக்கு இளைப்பாறச் சென்றாள். காலையில் சீக்கிரம் எழுந்திருந்ததால் அவளுக்குக் களைப்பாக இருந்தது. இளைப்பாறி விட்டு கனகதுர்காவிடம் பேச அவளுக்கு நிறைய இருந்தது.

சங்கரின் அறையில் கனகதுர்கா அழுகையினூடே மகனிடம் சொன்னாள். “உங்கப்பா எல்லாமே விட்டுட்டு என் கூட வந்தாலும் இந்த வீடு, அவரோட அப்பா, தங்கச்சி இவங்களை விட்டுட்டு மனசளவுல அவரால வர முடிஞ்சதில்லை ஈஸ்வர். இந்த வீட்டுக்கு என்னைக் கூட்டிகிட்டு வர முடியலைங்கற மனத்தாங்கல் அவருக்கு எப்பவுமே இருந்துச்சுடா. இன்னைக்கு இங்கே நான் வந்திருக்கேன். அவர் இல்லையேடா…”

ஈஸ்வர் சொன்னான். “அம்மா, அப்பா இப்ப நம்ம கூட தான் இருக்காரம்மா. நான் இந்த ரூம்ல ஃபீல் செய்திருக்கேன்…. அப்பா ஃபோட்டோவைப் பாரு. அவர் உன்னையே பார்த்துட்டு இருக்கார்….”

கனகதுர்கா அவன் காட்டிய புகைப்படத்தைப் பாத்தாள். அது சங்கரின் இளமைக்காலப் புகைப்படம். அவரை முதல் முதலில் அவள் சந்திக்கும் போது அப்படி தான் இருந்தார்…. அவன் சொன்ன படியே அவர் அவளையே பார்த்துக் கொண்டிருந்தது போலத் தான் இருந்தது. கண்கள் பனிக்க சிறிது நேரம் அதையே பார்த்துக் கொண்டு மனதில் அவருடன் நிறைய பேசினாள். அவருடைய வீட்டில் அவருடைய அறையில் அவள் அவருடன் பேசிக் கொண்டிருக்க ஈஸ்வர் தாயையே பார்த்தபடி அமைதியாக அமர்ந்திருந்தான்.

இந்த அளவு நேசிக்கும் மனைவியைப் பெற அப்பா நிறையவே கொடுத்து வைத்தவர் என்று தோன்றியது. அனாவசியமாக நெருஞ்சி முள்ளாய் விஷாலி நினைவு இடையில் வந்தது. ’எல்லோருக்கும் எல்லா கொடுப்பினைகளும் இருப்பதில்லை’ என்று நினைத்தவனாய் விஷாலி முள்ளைத் தன் மனதில் இருந்து

எடுத்து எறியப் பார்த்தான். ஆழமாய் செருகி இருந்த அந்த முள்ளை அவ்வளவு சுலபமாய் அகற்ற அவனால் முடியவில்லை.

கனகதுர்கா இயல்பு நிலைக்குத் திரும்பிய பிறகு அவளும் ஈஸ்வரும் நிறைய நேரம் சங்கரைப் பற்றிப் பேசினார்கள். பேச்சின் இடையில் அடிக்கடி சங்கரின் புகைப்படத்தைப் பார்த்துக் கொண்டார்கள். சில சமயங்களில் சங்கர் அங்கு இருப்பது போலவே இருவரும் உணர்ந்தார்கள். முடிவில் மனம் லேசாகி மௌனமாகவே சிறிது நேரம் அமர்ந்திருந்தார்கள்.....

**************

தன் உயரதிகாரி தந்திருந்த தகவல்களை அலசி ஆராய்ந்து தன் பங்குக்கு பார்த்தசாரதியும் அந்த ஒன்பது வெளிநாட்டவர்கள் பற்றி மேலும் நிறைய தகவல்களை சேகரித்து வைத்திருந்தார். எட்டு வெளிநாட்டவர்கள் சில மணி நேரங்களுக்கு மேல் அந்த நட்சத்திர ஓட்டலில் தங்கியிருந்தவர்கள், ஒரு வெளிநாட்டவர் ஒரு மணி நேரம் அங்கு வந்து போனவர்.

அந்த எட்டு பேரும் அவரவர் நாடுகளில் மிகவும் செல்வாக்கு மிக்கவர்கள் என்றாலும் பார்த்தசாரதியை அவர்களை விட அதிகம் யோசிக்க வைத்தவர் ஜான்சன் என்ற உலகப் புகழ்பெற்ற மனோதத்துவம் மற்றும் ஆழ்மனசக்தி ஆராய்ச்சியாளர் தான்.

அமெரிக்காவில் இருந்து மும்பை வந்த ஜான்சன் ஏன் அந்த நட்சத்திர ஓட்டலுக்குப் போனார், அங்கு இருந்த ஒரு மணி நேரத்தில் என்ன செய்தார் என்பதை அவரால் ஊகிக்க முடியவில்லை. மும்பையில் இருந்து இங்கு ஏன் வந்தார் என்பதும் புரியாத புதிராக இருந்தது. ஜான்சன் கலந்து கொள்ளக்கூடிய விழாக்கள் ஏதாவது

இருக்கின்றனவா என்று நகரத்தில் உள்ள பெரிய மனோதத்துவ அறிஞர்களை விசாரித்துப் பார்த்தார். அப்படி நிகழ்ச்சிகள் எதுவும் இருக்கவில்லை.

ஜான்சனுடைய பாஸ்போர்ட் தகவலை வைத்து ஆராய்ந்ததில் அவர் இந்தியாவுக்குப் பல முறை வந்து போயிருக்கிறார் என்பது தெரிந்தது. அதனால் அவர் சுற்றுலாவுக்கு வந்தவர் போலத் தோன்றவில்லை. அவர் தங்கி இருந்த நட்சத்திர ஓட்டலைக் கண்டுபிடித்து அங்கும் சென்று பார்த்தசாரதி விசாரித்துப் பார்த்தார். இரண்டு நாள் முன்பு போன ஜான்சன் பின் திரும்ப வரவே இல்லை என்று தெரிந்தது. அவர் அறையைக் காலி செய்யவும் இல்லை....

ஜான்சன் ரிசப்ஷனில் சாவியைக் கொடுத்து விட்டுப் போயிருந்தார். பார்த்தசாரதி ரகசியமாக அவர் அறையைச் சோதித்துப் பார்த்தார். இரண்டு சூட்கேஸ்களில் அவருடைய உடைகள் மட்டும் இருந்தன. சந்தேகத்திற்கிடமாக எதுவும் கிடைக்கவில்லை. அந்த நட்சத்திர ஓட்டலில் அந்த அறையைக் கண்காணிக்க பார்த்தசாரதி ஏற்பாடுகள் செய்து விட்டு வந்தார். ஈஸ்வர் வரும் வரை பல கோணங்களில் யோசித்த அவருக்கு ஜான்சன் மீது சந்தேகம் நிலைத்தது.

ஈஸ்வர் வந்தவுடன் அவனிடம் எல்லாத் தகவல்களையும் சொல்லி விட்டு அவன் அபிப்பிராயத்தைக் கேட்டார். அவனுக்கு என்ன நினைப்பது என்றே சிறிது நேரம் விளங்கவில்லை.

”ஜான்சன் மேல உங்களுக்கு என்ன சந்தேகம் சார்?” ஈஸ்வர் கேட்டான்.

*“அந்த ஆள் ஏன் இங்கே வந்திருக்கார்னு தெரியலை. இப்ப எங்கே இருக்கார்னும் தெரியலை. அதே மாதிரி சிவலிங்கம் எங்கேன்னும் தெரியலை, குருஜி எங்கேன்னும் தெரியலை.”*

*அவர் மொட்டைத்தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுவதாக ஈஸ்வருக்குத் தோன்றியது. “அதனால என்ன?”*

*பார்த்தசாரதி சொன்னார். ”காணாமல் போன சிவலிங்கம் அபூர்வ சக்தி வாய்ந்ததுன்னு சொல்றாங்க. ஜான்சன் உங்களை மாதிரியே அபூர்வமான சக்திகளை ஆராய்ச்சி செய்யறவரு. ஒரே நேரத்தில் சிவலிங்கமும் அவரும் காணோம்னா, எங்கேன்னு தெரியாட்டியும் ஒரே இடத்துல இருக்கலாம்னு தோணுது.... ஈஸ்வர் இப்படி யோசிச்சுப் பாருங்க. அந்த சிவலிங்கத்தோட சக்திகள் பத்தி கேள்விப்பட்டு யாரோ திருடிகிட்டுப் போயிட்டாங்க. ஆனால் அந்த சக்திகளை எப்படிப் பயன்படுத்தறதுன்னு அவங்களுக்குத் தெரியலை. அப்படி இருக்கறப்ப அவங்க என்ன செய்வாங்க. அந்த சக்திகளை உபயோகப்படுத்தறது எப்படின்னு சம்பந்தப்பட்ட எக்ஸ்பர்ட் கிட்ட தானே கேட்டுத் தெரிஞ்சுக்குவாங்க? ஜான்சன் அதற்கேத்த ஆள் தானே?”*

*ஈஸ்வர் சொன்னான். “சார். அவர் கிட்டத்தட்ட என்னை மாதிரியான ஆராய்ச்சியாளர் தான். என்னை விட அறிவும், அனுபவமும் அதிகமாய் இருக்கிற ஆள்னே சொல்லலாம். நாங்க ரெண்டு பேரும் மனிதனின் ஆழ்மனசக்தியை ஆராய்ச்சி செய்யறவங்க. பொருள்களை ஆராய்ச்சி செய்யறவங்க இல்லை. மனிதனோட ஆழ்மன சக்தியால ஜடப்பொருள்களை எப்படி எல்லாம் இயக்க முடியும்னு எல்லாம் ஆராய்ச்சி நடந்திருக்கு. உதாரணத்துக்கு சொல்லணும்னா நிலாகுலாகினாங்கற ரஷ்யாக்காரம்மாவும் யூரி கெல்லர்ங்கற இஸ்ரேல்காரரும்*

மனோசக்தியாலயே பொருள்களை நகர்த்தினதையும், வளைச்சதையும் ஆராய்ச்சி செய்திருக்காங்க. ப்ரின்ஸ்டன் பல்கலைக்கழகத்து பேராசிரியர் ராபர்ட் ஜான்ங்கறவர் எலக்ட்ரானிக் கருவிகளைக் கூட மனோசக்தியால நினைக்கிற மாதிரி இயக்க வைக்கலாம்னு கூட ஆராய்ச்சி மூலமா கண்டு பிடிச்சிருக்கார். இப்படி எல்லா ஆராய்ச்சியுமே மனிதனோட மனோசக்தி பத்தி தான் நடந்திருக்கே ஒழிய கடவுள் சிலைகளோட சக்தி பத்தியோ, வேற ஜடப் பொருள்களோட சக்தி பத்தியோ நடக்கலை. அப்படி இருக்கிறப்ப சிவலிங்க சக்தி பத்தி தெரிஞ்சுக்க அவங்க ஜான்சனைக் கேட்கறதுல அர்த்தமே இல்லையே"

பார்த்தசாரதிக்கு அவன் சொல்வதும் சரியாகத் தான் பட்டது என்றாலும் ஜான்சன் இந்த சமயத்தில் சரியாகத் தெரிந்த காரணம் இல்லாமல் இங்கு வந்ததும், அப்படி வந்தவர் ஏறத்தாழ சிவலிங்கத்தோடு குருஜி காணாமல் போன சமயத்திலேயே தலைமறைவானதும் தற்செயலானதாக நினைக்க அவர் மனம் மறுத்தது.

அதை அவர் அவனிடம் சொன்ன போது அவனும் யோசித்தான். அவனுக்குக் குழப்பமாகவே இருந்தது.

திடீரென்று அவன் கண்கள் முன்னால் இருந்த பார்த்தசாரதி மறைந்து வேறு காட்சி தெரிந்தது. அந்தரத்தில் சிவலிங்கம் மிதந்து கொண்டிருந்தது. வேதபாடசாலையில் தெரிந்ததற்குப் பிறகு அவன் காட்சியில் சிவலிங்கம் வருவது நின்று போயிருந்தது. ஆனால் இப்போது மறுபடியும் தத்ரூபமாகத் தெரிந்த சிவலிங்கம் திடீரென்று கீழே இறங்க ஆரம்பித்தது.... இல்லை இல்லை விழுந்து கொண்டிருக்கிறது... அதனுடன் சேர்ந்து கணபதியும் கீழே விழுந்து கொண்டிருக்கிறான்..... அதள பாதாளத்தில் விழுந்து

*கொண்டிருக்கும் அவர்கள் சிறுத்துக் கொண்டே போய் அவன் பார்வையில் இருந்து முழுவதுமாக மறைந்து போனார்கள்.*

*ஈஸ்வர் அதிர்ந்து போனான். உடல் நடுங்க, முகம் வெளுக்க எழுந்து நின்ற அவன் ஒருசில வினாடிகளில் அந்தக் காட்சி மறைந்து முடிந்த போது அவன் வியர்வையில் தொப்பலாக நனைந்திருந்தான்.*

*பார்த்தசாரதி திகைத்துப் போனார். "ஈஸ்வர் உங்களுக்கு என்னாச்சு?"*

# அத்தியாயம் - 75

*ஈஸ்வரால் உடனே எதுவும் பேச முடியவில்லை. அவன் இதயத்துடிப்புகள் சம்மட்டி அடிகளாக மாறி விட்டிருந்தன. சற்று முன் கண்ட காட்சியை நினைத்துப் பார்க்கவே பயங்கரமாக இருந்தது. அன்று அந்த சித்தர் சொன்ன வார்த்தைகள் நினைவுக்கு வந்தது.*

*"கெட்டவங்க யுத்தம் இல்லாமல் ஜெயிச்சிடுவாங்க அவ்வளவு தான். அவங்க கிட்டயும் அறிவு நிறையவே இருக்கு. அவங்க செய்யறது எல்லாம் தான் சரின்னு கணபதியை நம்ப வைக்க அவங்களுக்கு சுலபமா முடியும். கணபதி அவங்க பக்கம் போனா மத்ததெல்லாம் அவங்களுக்கு சுலபம். தப்பான மனசு, தப்பான அறிவு, தப்பான ஞானம் இது மூணும் போதாதா உலகத்தை அழிக்கிறதுக்கு?"*

*"நல்ல மனசும், நல்ல அறிவும் இருக்கறவங்களே காப்பாத்தப்படணும்னு உறுதியா முயற்சிகள் எடுக்கலைன்னா அவங்க இருக்கிற சமுதாயம், உலகம் காப்பாத்தக்கூட தகுதி*

இல்லாததாயிடுது.... கடவுளுக்கு கவனிக்க இந்த உலகம் மட்டும் இல்லை, கோடான கோடி உலகங்கள் இருக்கு.... தகுதி இருக்கற உலகங்களை அவர் காப்பாத்திட்டுப் போறார்..."

ஈஸ்வர் ஒரு குற்றவாளியைப் போல் உணர்ந்தான். இப்போதைக்கு அவன் இதைப் பற்றி வீட்டில் யாரிடமும் சொல்லும் நிலைமையில் இல்லை....

மறுபடி பார்த்தசாரதி பதற்றத்துடன் கேட்டார். "ஈஸ்வர் உங்களுக்கு என்ன ஆச்சு? உடம்புக்கு முடியலையா?"

ஈஸ்வர் பதில் சொல்லாமல் அவரையே பார்த்தான். இத்தனை நாட்கள் பழகிய வரையில் அவர் நேர்மையானவர், நம்பிக்கைக்கு உகந்தவர் என்பதில் அவனுக்கு சந்தேகம் இருக்கவில்லை. யாரிடமாவது அவனுக்குச் சொல்ல வேண்டும், கேட்கிற ஆளுக்குப் புரியவும் வேண்டும். அதற்கு இவர் பொருத்தமானவர் தான் என்று தோன்றியது.

பசுபதி மறைவுக்குப் பின் சில சமயங்களில் சிவலிங்கம் காட்சி தந்ததைச் சுருக்கமாக அவரிடம் தெரிவித்த ஈஸ்வர் அக்னி நேத்திர சித்தரை நேரில் பார்த்த இரண்டு சந்தர்ப்பங்களையும், கடைசியாக சந்தித்த போது அவர் சொன்ன விஷயங்களையும், கடைசியாக இப்போது தோன்றிய காட்சியையும் விரிவாகவே சொன்னான்.

பார்த்தசாரதிக்கு ஏதோ மாயாஜாலக் கதையைக் கேட்பது போல் இருந்தது. சொன்னது ஈஸ்வராக இல்லாமல் இருந்திருந்தால், அவனது தற்போதைய அதிர்ச்சி நிலையை நேரில் பார்க்காமல்

*இருந்திருந்தால் கண்டிப்பாக அவர் நம்பி இருக்க மாட்டார். கேட்டதை ஜீரணிக்க மேலும் சிறிது நேரம் தேவைப்பட்டது.*

*ஈஸ்வர் சொன்னான். "எனக்கென்னவோ உலகத்தைக் காப்பாத்தற பொறுப்பை ஒன்னு ரெண்டு பேர் கிட்ட கடவுள் ஒப்படைப்பார்ங்கறதை இன்னும் நம்ப முடியலை."*

*பார்த்தசாரதிக்கும் நம்ப முடியவில்லை. ஆனால் சித்தர் சொன்னதாய்ச் சொன்ன அந்த வாக்கியத்தை அவரால் புறக்கணிக்க முடியவில்லை. "நல்ல மனசும், நல்ல அறிவும் இருக்கறவங்களே காப்பாத்தப்படணும்னு உறுதியா முயற்சிகள் எடுக்கலைன்னா அவங்க இருக்கிற சமுதாயம், உலகம் காப்பாத்தக்கூட தகுதி இல்லாததாயிடுது…". இது ஈஸ்வருக்கு மட்டுமல்ல, ஒவ்வொரு பொறுப்புள்ள மனிதனுக்கும் சொல்லப்பட்ட எச்சரிக்கையாக அவருக்குத் தோன்றியது.*

*"கடவுளுக்கு காப்பாத்தற வேலை மட்டுமா இருக்கு. அழிக்கிற வேலையும் அவரோடது தானே. அவர் அந்த வேலையைச் செய்வார்…." அது சித்தர் கிண்டலாகச் சொல்லியதாக ஒரு பக்கம் தோன்றினாலும் இன்னொரு பக்கம் 'எல்லாம் கடவுள் பார்த்துக் கொள்வார்' என்று அலட்சியமாக எந்த மனிதனும் இருந்து விட முடியாது என்று சுட்டிக்காட்டிய பயங்கர உண்மையாகத் தான் அவருக்குத் தோன்றியது. இது ஈஸ்வர் என்கிற தனிப்பட்ட மனிதனுக்கு சொல்லப்பட்டதா, இல்லை அவன் மூலம் எல்லோருக்கும் சொல்லப்பட்டதா?*

*"சரி என்ன செய்யலாம்னு இருக்கீங்க?" பார்த்தசாரதி கேட்டார்.*

“தெரியலை” ஈஸ்வர் ஒப்புக் கொண்டான். ”ஆனா எதாவது உடனடியாய் நான் செய்தாகணும். உலகத்தைக் காப்பாத்தப்போற சூப்பர் ஹீரோவாய் இல்லாட்டியும் என்னை அண்ணான்னு கூப்பிட்ட கள்ளங்கபடமில்லாத கணபதியைக் காப்பாத்தறதுக்காகவாவது நான் ஏதாவது செய்தாகணும்.... இல்லாட்டி நான் என்னையே மன்னிக்க முடியாது சார்...”

பார்த்தசாரதி சொன்னார். “சீர்காழில இருந்த அந்தப் பையன் இருக்கறதைக் குறிபார்த்துச் சொன்ன கிழவியையே மறுபடியும் கூப்பிட்டு முதல்ல சிவலிங்கமும் இருக்கிற இடத்தைக் கண்டுபிடிக்க முயற்சி செய்யலாமா? தெரிஞ்சா தெரியுது. தெரியாட்டியும் நமக்கு நஷ்டம் இல்லையே”

ஈஸ்வர் சம்மதித்தான். இருவரும் அடுத்த முக்கால் மணி நேரத்தில் அந்தக் கிழவியின் வீட்டில் இருந்தார்கள். பார்த்தசாரதியைப் பார்த்ததுமே கிழவி முகத்தில் திகில் பரவியது.

ஈஸ்வர் கிழவியிடம் நட்புடன் பேசினான். “பயப்படாதீங்க. எங்களுக்கு இன்னொரு தகவல் தெரிய வேண்டி இருக்கு. அதுக்காகத் தான் வந்தோம். ஏதாவது தெரிஞ்சா மட்டும் சொல்லுங்க. தெரியலைன்னா பரவாயில்லை...”

கிழவி மெல்ல தலையாட்டினாள். ஈஸ்வர் சிவலிங்கம் கணபதி இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்க முடியுமா என்று கேட்டான். கிழவி கேட்டாள். “அந்தப் பையனைப் பத்தி சொல்லுங்க சாமி. பேர் என்ன? வயசு, தொழில் என்ன? பார்க்க எப்படி இருப்பான்?”.

*ஈஸ்வர் சொன்னான். பின் வெற்றிலை பாக்கையும் 101 ரூபாயையும் தந்தான். அவள் இந்த முறை பணத்தை மறுக்கவில்லை. வாங்கிக் கொண்டாள். பிறகு கண்களை மூடிக்கொண்டே அவன் தந்த வெற்றிலையை வருட ஆரம்பித்தாள். ஐந்து நிமிடங்கள் கழித்துக் கண்களைத் திறந்து சொன்னாள்.*

*"ஒன்னுமே பாக்க முடியல சாமி. என்னமோ மந்திரம் பண்ணி அந்த இடத்த மூடி வச்சிருக்காங்க மாதிரி தெரியுது.... நான் மட்டுமில்ல சாமி, வேறெந்த குறி பார்க்கற ஆளாலும் அந்த இடத்தைக் கண்டு பிடிக்க முடியாது.... அந்த அளவு உறுதியாய் அந்த இடத்துக்கு மந்திர கவசம் போட்டுருக்காங்க"*

*ஈஸ்வர் ஏமாற்றத்துடன் எழுந்தான். அவனையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்த கிழவி அப்போது தான் அவனிடம் ஏதோ ஒன்றைக் கவனித்து விட்டு "ஒரு நிமிஷம் அப்படியே நில்லுங்க சாமி" என்று சொல்லி மறுபடியும் கண்களை மூடினாள். இரண்டு நிமிடங்கள் கழித்து கண்களைத் திறந்து சொன்னாள். "ஆனா... உங்களால அந்த இடத்த பாக்க முடியும் சாமி...."*

*"என்னாலயா?" ஈஸ்வர் ஆச்சரியத்துடன் கேட்டான். "இப்ப தான் எந்த குறி சொல்ற ஆளும் அந்த இடத்தைக் கண்டுபிடிக்க முடியாதுன்னு சொன்னீங்க. நான் குறி சொல்ற ஆள் கூட இல்லை. பின்ன எப்படி என்னால பார்க்க முடியும்னு சொல்றீங்க?"*

*கிழவி சொன்னாள். "நீங்களும், அந்த பையனும், அந்த சிவலிங்கமும் முதல்லயே சம்பந்தப்பட்டவங்க சாமி. சம்பந்தப்பட்டவங்கள அந்த மந்திரத்தால கூட தடுக்க முடியாது"*

ஈஸ்வர் திகைத்துப் போனான். இதற்கு மேல் தன்னால் ஒன்றும் சொல்ல முடியாது என்று கிழவி சொல்லி விட்டாள். கட்டாயப்படுத்தி சொல்லச் சொன்னால் கிழவி கற்பனையாகத் தான் எதையாவது சும்மா சொல்ல ஆரம்பிப்பாள் என்று புரிந்து கொண்ட இருவரும் அங்கிருந்து கிளம்பினார்கள்.

**************

கனகதுர்காவிற்கும் மீனாட்சிக்கும் பேச நிறைய இருந்தது. சங்கரைப் பற்றி சலிக்காமல் பேசினார்கள். பிறகு தங்கள் பிள்ளைகளைப் பற்றிப் பேசினார்கள். மகேஷைப் பற்றி மீனாட்சி சொல்ல, ஈஸ்வரைப் பற்றி கனகதுர்கா சொன்னாள். விஷாலி ஈஸ்வரைப் பற்றி கனகதுர்கா சொன்னதை எல்லாம் மிகவும் சுவாரசியத்துடன் கேட்டுக் கொண்டிருந்தாள். மகனின் சின்னச் சின்ன குறும்புகள், புத்திசாலித்தனம், கோபம், பிடிவாதம் பற்றி எல்லாம் கனகதுர்கா உதாரணங்களுடன் சொல்லியதை தன்னை மறந்து ரசித்து விஷாலி கேட்டுக் கொண்டிருந்தாள்.

அதை இடையே கவனிக்க முடிந்த கனகதுர்காவிற்கு அந்தப் பெண் ஈஸ்வரைக் காதலிக்கிறாள் என்பதில் சிறிதும் சந்தேகம் இருக்கவில்லை. அவனைப் பற்றிய பேச்சைக் கேட்கும் போது அவ்வப்போது விஷாலி முகத்தில் தெரிந்த வெட்கம் அவளைக் காட்டிக் கொடுத்தது.

மீனாட்சி சொன்னாள். “மகேஷ் அவங்கப்பா கிட்டயும் தாத்தா கிட்டயும் கோபத்தைக் காட்டறதில்லை. எல்லா கோபமும் எங்கிட்ட தான் காண்பிப்பான்....”

தாய்மார்களுக்குக் குழந்தைகள் தங்களிடம் கோபம் காட்டுவது கூடப் பெருமை தான் என்று விஷாலிக்குத் தோன்றியது.

கனகதுர்கா சொன்னாள். “ஈஸ்வருக்கு யாராவது நியாயமில்லாமல் அவன் கிட்ட நடந்துகிட்டா தாங்க முடியாது. நாங்களே அவன் செய்யாத தப்புக்கு அவனை ஏதாவது சொல்லிட்டாலோ, அநியாயமா ஏதாவது திட்டிட்டாலோ அவனால பொறுத்துக்க முடியாது. எரிமலையா வெடிக்க ஆரம்பிச்சுடுவான். வெளியாள்கள் கிட்ட அப்படி வெடிக்க மாட்டான். பனிமலையாய் மாறிடுவான். அவங்க கிட்ட அவனுக்குப் பேசக் கூடப் பிடிக்காது. அவன் வாழ்க்கைல இருந்தே அவங்களை ஒதுக்கிடுவான்.....”

விஷாலி முகம் ஒரேயடியாய் மாறியது. விழிகளில் ததும்ப ஆரம்பித்த கண்ணீரை அவர்களுக்குக் காட்ட விரும்பாமல் ஏதோ வேலையாகப் போவது போல அங்கிருந்து அவள் போய் விட்டாள். அதை கனகதுர்கா கவனிக்கத் தவறவில்லை.

விஸ்வநாதன் வந்து சம்பிரதாயத்திற்கு கனகதுர்காவிடம் பேசி விட்டுச் சென்றார். இந்த வீட்டுக்கு சங்கர் திரும்பி வரா விட்டாலும் அவர் மகன் முதலில் வந்தான்... இப்போது மனைவியும் வந்து விட்டிருக்கிறாள்... அவர்கள் ராஜாங்கம் தான் இனி நடக்கப் போகிறது என்று நினைக்கையில் விஸ்வநாதனுக்கு வயிறு எரிந்தது.

அவரிடம் மீனாட்சி சொன்னாள். “என்னங்க மகேஷ் போன் செஞ்சா அத்தை வந்திருக்காங்கன்னு சொல்லிடுங்க...”

விஸ்வநாதனுக்குத் தலையில் அடித்துக் கொள்ளத் தோன்றியது.

சிறிது நேரம் தூங்கி விட்டு சுறுசுறுப்புடன் எழுந்து வந்த ஆனந்தவல்லி பிறகு மீனாட்சியை கனகதுர்காவிடம் பேச விடவில்லை. “நீ அப்புறமா உங்க அண்ணி கிட்ட பேசு மீனாட்சி. எனக்கு அவள் கிட்ட முக்கியமான ஒரு விஷயம் பேச வேண்டி இருக்கு” என்று சொல்லி கனகதுர்காவைத் தனதறைக்குக் கூட்டிக் கொண்டு போய் விட்டாள்.

”துர்கா உன் மகன் அந்தப் பொண்ணைக் காதலிக்கறதை கண்டுபிடிச்சியா இல்லையா” என்பது தான் அவள் முதல் கேள்வியாக இருந்தது.

“அந்தப் பொண்ணு அவனை பாதிச்சிருக்கான்னு புரிந்துச்சு பாட்டி. ஆனா அது காதலா, காதல்னா எந்த அளவு இதெல்லாம் சரியா தெரியலை” கனகதுர்கா சொன்னாள்.

”உன் பையன் பாடிக் கேட்டிருக்கியோ?”

“ரொம்ப சந்தோஷமாய் இருக்கறப்ப பாட்டை முணுமுணுப்பான். ஆனா அது அபூர்வம் தான்”

”ரெண்டு நாள் இங்க அவன் ஒரே பாட்டு தான். முதல் நாள் ஏதோ இங்கிலீஷ் பாட்டு பாடினான். ரெண்டாவது நாள் தமிழ்ப் பாட்டுப் பாடினான்... முகத்துல ஆயிரம் வாட்ஸ் பல்பு எரிஞ்சுகிட்டே இருந்துச்சு. நான் அவனை அந்த அளவு சந்தோஷமாய் பார்த்ததே இல்லை. அந்தப் பொண்ணு வீட்டுக்கு அவன் போயிட்டு வந்ததுக்கப்பறம் தான் இதெல்லாம். ஆனா அதுக்கப்பறம் எல்லாம் நின்னு போச்சு. ரெண்டு மூணு நாள் அவனைப் பார்க்கவே சகிக்கலை.... பாட்டும் இல்லை...பல்பும் இல்லை... என்னடான்னு

கேட்டேன். அவன் எங்கே என் கிட்ட பிடி குடுத்துப் பேசறான்... அப்புறம் இந்தப் பொண்ணு இங்கே பரமேஸ்வரனைப் பார்க்க வந்துச்சு. அப்ப தான் இவனோட நடவடிக்கை எல்லாம் பார்த்து கண்டுபிடிச்சேன்....”

கனகதுர்காவிற்கு அவன் விஷாலி வீட்டுக்குப் போய் விட்டு வந்த பிறகு பேசுகையில் விஷாலியைப் பற்றி பேசின போது அவன் குரலில் கூடுதலாக ஒரு குதூகலம் இருந்தது மறுபடியும் நினைவுக்கு வந்தது. மறுநாள் கூட அனாதாசிரமம் போய் வந்ததை விவரிக்கையில் விஷாலி பற்றி மிக நெருக்கமாக அவன் பேசியது போல் இருந்தது. ஆனால் அதற்குப் பின் அவன் அவளைப் பற்றிப் பேசவே இல்லை. ’எல்லாம் என் கற்பனை தானோ’ என்று எண்ணிய கனகதுர்கா பின் அதை மறந்து விட்டிருந்தாள். இப்போது தான் அது கற்பனை அல்ல என்று புரிகிறது.

ஆனந்தவல்லி சொன்னாள். “அவங்க ரெண்டு பேரும் நடந்துக்கறதைப் பார்த்தா அந்தப் பொண்ணு மேல தான் ஏதோ தப்பிருக்கிற மாதிரி தெரியுது. ஆனா அந்தப் பொண்ணு இப்ப அதுக்காக வருத்தப்படற மாதிரியும் தெரியுது. ஆனா உன் பையன் லேசுப்பட்டவன் இல்லையே. இன்னும் கோவமாவே இருக்கிறான்.... நீ தான் ஏதாவது செஞ்சு அவன் மனசை மாத்தி சட்டுபுட்டுன்னு அவன் கல்யாணத்துக்கு சீக்கிரம் ஏற்பாடு செய்யணும்...”

ஆனந்தவல்லி உடனடியாக கல்யாணம் வரைக்கும் போனது கனகதுர்காவுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவள் சொன்னாள். “பாட்டி அவனை யாரும் கட்டாயப்படுத்த முடியாது. அப்படி கட்டாயப்படுத்தினா அவன் பிடிவாதம் அதிகம் தான் ஆகும்.... ரொம்பவே ரோஷக்காரன்....”

ஆனந்தவல்லி பெருமையும் ஆதங்கமும் கலக்கச் சொன்னாள். "பார்க்க தான் அவன் என் புருஷன் மாதிரி. ரோஷத்துல என்னை மாதிரி. நான் அப்படி தான் இருந்தேன். எங்கப்பாவை படாதபாடு படுத்தி இருக்கேன்.... என் புருஷனையும் தான்... என்ன புத்தி சொன்னாலும் என் தலையில ஏறாது.... ஆனா அவன் என்னை விடப்பரவாயில்லை... நான் யார் சொன்னாலும் கேட்க மாட்டேன்... அவன் ரொம்ப நேசிக்கிறவங்க சொன்னா கேட்பான்... முக்கியமா நீ சொன்னா கேட்பான்... உன் மேல உயிரையே வச்சிருக்கான்...."

ஈஸ்வர் சொல்லிக் கேட்கிற ரகம் அல்ல என்று கனகதுர்கா சொன்னாலும் ஆனந்தவல்லி ஒத்துக் கொள்ளவில்லை. குறைந்தபட்சம் அவனை எப்படி வழிக்குக் கொண்டு வருவது என்றாவது கனகதுர்காவிற்குத் தெரியும் என்று நம்பிய அவள் அதையாவது செய்யச் சொன்னாள்.

"உண்மையாய் அவன் காதலிச்சா அவனை யாரும் வழிக்குக் கொண்டு வரணும்னு இல்லை பாட்டி. அந்த உண்மைக்காதலே அதைச் செஞ்சுடும். நீங்க கவலைப்படாதீங்க"

ஆனந்தவல்லி கனகதுர்காவின் கைகளைப் பிடித்துக் கொண்டு குரல் கரகரக்கச் சொன்னாள். "உண்மை தான் துர்கா. இல்லைங்கலை. ஆனா காலம் என் பக்கம் இல்லைம்மா. உன் மகன் கோபம் தானாய் குறைய காலம் நிறைய ஆகும். அது வரைக்கும் நான் இருக்க மாட்டேன். பசுபதி என்னைக்குப் போயிட்டானோ அப்பவே நான் பாதி போயிட்டேன். உன் மகனைப் பார்த்த பிறகு மீதியை கொஞ்ச காலம் தக்க வைக்க போராடிகிட்டு இருக்கேன்... வாழ்க்கைல ஒரு பிடிப்பு வந்திருக்கு.... அவரே இவனாய் வந்த மாதிரி ஒரு பாசம் ஏற்பட்டிருக்கு.... அவன் கல்யாணம், அவனுக்கொரு குழந்தை, அது கூட கொஞ்ச நாள்னு பேராசை

வந்திருக்கு.... அந்தப் பொண்ணு நல்ல பொண்ணு... ஆனா அதுக்கு அவனை எப்படி சமாளிக்கணும்னு கூடத் தெரியலை... நீ தான் ஏதாவது வழி செய்யணும்... ”

**************

தென்னரசுக்கு இப்போது தான் பயம் பூரணமாய் விலகி விட்டிருந்தது. சின்ன வயதில் இருந்தே அவரை ஈர்த்திருந்த விசேஷ மானஸ லிங்கம் கடவுளா இல்லை சித்தர்கள் சேமித்து வைத்திருந்த விசேஷ சக்தியா என்பதில் அவருக்கு எப்போதுமே குழப்பம் தான் இருந்தது. இப்போது அது கடவுள் இல்லை என்று தெளிவாகப் புரிந்தது.

சங்கர் இந்தியாவில் இருந்த காலத்தில் அது சித்தர்கள் பூஜித்த லிங்கம் என்பது சங்கருக்கே தெரிந்திருக்கவில்லை. அதனால் அந்தத் தகவல் தென்னரசுக்கும் தெரியவில்லை. அந்த சிவலிங்கம் ஒளிர்ந்ததை ஒரு முறை பார்த்திருந்ததால் அதைப்பற்றி மட்டும் அவர்கள் இருவரும் ஆச்சரியத்துடன் பேசிக் கொண்டார்கள். ஒரு சித்தர் கொண்டு வந்து தந்த அந்த சிவலிங்கத்தில் ஏதோ விசேஷ சக்தி இருக்கிறது என்பது மட்டும் அவர்களுக்குத் தெரிந்திருந்தது.

அவர்கள் இருவரும் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த காலத்தில் சங்கரும் அவரும் சேர்ந்து படிக்க தோட்ட வீட்டிற்கு அடிக்கடிப் போவதுண்டு. அந்தத் தோட்டத்தில் யார் தொந்தரவும் இல்லாமல் அவர்களால் அமைதியாகப் படிக்க முடிந்தது. பசுபதி அவருடைய தனி உலகத்தில் எப்போதும் இருப்பவர் என்பதால் அவரும் அவர்கள் படிப்பிற்கு இடைஞ்சலாக இருக்கவில்லை.

அப்படி ஒரு விடுமுறை நாளில் சங்கரும் அவரும் அங்கு படிக்கலாம் என்று தீர்மானமாகி இருந்தது. தென்னரசு படிக்கக்

கிளம்பி தோட்ட வீட்டை அடைந்த போது அப்போதைய தோட்டக்காரன், தற்போதைய தோட்டக்காரன் முனுசாமியின் மாமன், சொன்னான். “சங்கர் தம்பி போன் செஞ்சார். அவர் படிக்க வரலையாம்... அவங்கப்பா கூட எங்கேயோ வெளியே போறாராம். சொல்லச் சொன்னார்.”

அது செல் போன் இல்லாத காலமாய் இருந்ததால் சங்கருக்கு தென்னரசுவை நேரடியாகத் தொடர்பு கொள்ள முடிந்திருக்கவில்லை. என்ன செய்வது என்று யோசித்த தென்னரசு, வந்ததற்குப் படித்து விட்டே போகலாம் என்று முடிவு செய்து உள்ளே போனார்.

தோட்டக்காரன் சொன்னான். “....பெரியவர் ஏதோ தியானத்துல இருக்கார் போல் இருக்கு. போன் அடிச்சது அவர் காதுலயே விழலை. நான் தான் போய் போன் எடுத்துப் பேசினேன். அது கூட அவருக்குத் தெரியலை”

பசுபதியின் தியானம் அவ்வளவு சீக்கிரம் கலைக்க முடியாதது என்பதை முதலிலேயே தென்னரசுவும் அறிந்திருந்தார்.

தோட்டத்தில் அமர்ந்து அவர் படிக்க ஆரம்பிக்க தோட்டக்காரக் கிழவன் தன் வேலையைச் செய்து கொண்டிருந்தான். அரை மணி நேரம் கழித்து தாகம் எடுக்க தென்னரசு தண்ணீர் குடிக்க வீட்டுக்குள் போனார். அந்த நேரத்தில் தான் அந்த அபூர்வக் காட்சியைத் தென்னரசு பார்க்க நேர்ந்தது. அவருக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

பசுபதி சிவலிங்கத்தின் அருகே ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்திருக்க அந்த சிவலிங்கத்தின் மேலே ஒரு பிரம்மாண்டமான சக்தி தாண்டவம் நடந்து கொண்டிருந்தது....

# அத்தியாயம் - 76

தென்னரசுக்கு சிவலிங்கத்தின் மேலே ஒரு வெட்ட வெளி தான் தெரிந்தது, அதன் பின்னால் இருந்த சுவர் உட்பட அறையே காணாமல் போய் அந்த வெட்ட வெளியில் அர்த்தநாரீஸ்வரர் ஆனந்த நடனம் ஆடிக் கொண்டிருந்தார். இடப்பாக உமையவளின் அசைவுகளில் பெண்மையின் நளினம் இருந்தது என்றால் வலப்பாக சிவனின் அசைவுகளில் ஆண்மையின் கம்பீரம் தெரிந்தது. ஒவ்வொரு அசைவிலும் இயற்கையின் சக்திகள் பின்புறம் தாண்டவமாடின. ஒரு அசைவில் அக்னி ஜொலித்தது. நிஜமாகவே அந்த இடம் தீப்பிடித்துக் கொண்டது போன்ற பிரமை தென்னரசுக்கு ஏற்பட்டது. அந்த வெப்பத்தை அவர் நன்றாகவே உணர்ந்தார். சிவனின் அடுத்த அசைவில் அக்னி போய் பிரம்மாண்டமான சமுத்திரப் பேரலை தென்னரசுவை மூழ்கடிப்பது போல முன்னேறி வந்தது. தென்னரசு தன்னையறியாமல் பின்னுக்கு நகர்ந்தார். ஆனால் அது வெறும் தோற்றம் மட்டும் தான். ஆனாலும் தென்னரசு நனைந்து போயிருந்தார்.

தென்னரசுவிற்கு நெஞ்சு வெடித்து விடும் போல இருந்தது. ஆனால் சிவனின் அடுத்த முத்திரையில் சூறாவளிக் காற்று அடிக்க ஆரம்பித்தது. அந்தக் காற்றில் பறந்து விடுவோமோ என்று பயந்த தென்னரசு ஜன்னல் கம்பி ஒன்றைப் பலமாகப் பிடித்துக் கொண்டார். அந்தக் காற்றின் வேகம் அவரை ஜன்னலோடு ஒட்ட வைத்தது. அந்தக் காற்றில் அவரும் அவரின் உடைகளும் உலர்ந்து போயின. தென்னரசுக்கு இந்த அனுபவம் மூளையைச் சிதறச்

செய்வதாய் தோன்றியது. அத்தனையும் முடிந்தால் போதும் என்றிருந்தது.

அப்போது தான் பசுபதி கண்களைப் பாதி மூடிய நிலையில் எதிரே இருந்த காட்சிகளைக் கண்டு அதில் லயித்துப் போயிருந்ததை தென்னரசு கவனித்தார். திடீரென்று சிவனின் தலையிலிருந்து பெரிய நீர்வீழ்ச்சியும், நெற்றிக் கண்ணில் இருந்து தீப்பிழம்பும், நாட்டிய அசைவிலிருந்து பெருங்காற்றும் ஏக காலத்தில் தோன்ற ஆரம்பித்தன. சிவனோடு சேர்ந்து அண்ட சராசரங்களும் ஒரு தாள லயத்துடன் நாட்டியம் ஆடுவது போன்ற ஒரு பிரமை தென்னரசுக்கு ஏற்பட்டது.

பசுபதி முழுவதுமாகக் கண்களை மூடிக் கொண்ட போது அத்தனையும் மறைந்து போய் எதிரே சிவலிங்கம் மட்டும் எதுவுமே நடந்திருக்கவில்லை என்பது போல இயல்பாகத் தெரிந்தது. தென்னரசு அடுத்த கணம் அங்கிருந்து ஓட்டம் எடுத்தார். அவர் நின்றது தெருக்கோடியில் தான். புத்தகங்களைக் கூட அவர் அந்தத் தோட்டத்திலேயே விட்டிருந்தார்.

அன்று காய்ச்சலில் படுத்தவர் அதில் இருந்து மீள ஒரு வாரம் தேவைப்பட்டது. அந்த ஒருவார காலத்தில் கனவில் எல்லாம் சிவ தாண்டவத்தை பல தடவை பார்த்தார். சங்கர் மறு நாளே அவரை வந்து பார்த்த போது ஏனோ தென்னரசுக்கு அதை நண்பனிடம் சொல்லத் தோன்றவில்லை. சொல்லாமல் இருந்ததற்கான காரணத்தை அவருக்குச் சொல்லத் தெரியவில்லை. தனக்கு மட்டுமே தெரிந்த அந்தக் காட்சி சங்கருக்கு அது வரை எப்போதும் தெரிந்திருக்க வாய்ப்பில்லை என்று தெரிந்தது. தெரிந்திருந்தால் சங்கர் கண்டிப்பாக அவரிடம் சொல்லி இருப்பார். தனக்கு மட்டுமே தெரிந்த அந்த பிரம்மாண்டக் காட்சியை நண்பனிடம் கூடப் பகிர்ந்து

கொள்ள விரும்பவில்லை. நண்பனுக்கு அதிகம் தெரியாமல் இருப்பதே நல்லது என்று தென்னரசு நினைத்தார். பெரிய புதையலைக் கண்டுபிடித்தவன் அது பற்றித் தன் நெருங்கிய நண்பனிடம் கூடச் சொல்லத் தயங்கும் மனநிலையாக அது இருந்தது.

தற்செயலாகத் தனக்குத் தெரிந்த காட்சியில் ஏதோ பெரிய ரகசியத்தின் சூட்சுமம் மறைந்திருப்பதாக அவருக்குத் தோன்றியது. சங்கர் காதல் திருமணம் செய்து கொண்டு அமெரிக்கா போன பிறகு அவருக்கு அந்த சிவலிங்கத்தை தரிசிக்கும் வாய்ப்பு கிடைக்கவில்லை. அவருடைய இன்னொரு நண்பனான விஸ்வநாதனையே சங்கரின் தங்கை மீனாட்சி திருமணம் செய்து கொண்டதால் பரமேஸ்வரன் குடும்பத்தோடு இருந்த தொடர்பு விட்டுப் போகவில்லையே தவிர தோட்ட வீட்டுக்குப் போகும் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை.

விஸ்வநாதன் மாமனாரின் கட்டாயத்திற்காகவும், மனைவியின் நச்சரிப்பிற்காகவும் எப்போதாவது நல்ல நாட்களில் தோட்ட வீட்டுக்குப் போய் பசுபதியையும் சிவலிங்கத்தையும் வணங்கி விட்டு வந்தாரே ஒழிய அவருக்கு மற்ற எந்த விதத்திலும் அங்கு போகத் தோன்றவில்லை. அதை அவர் வெளிப்படையாகவே தென்னரசுவிடம் சொல்லி இருக்கிறார்.

வருடங்கள் ஓடின. ஆனால் அந்த சிவலிங்கமும், அந்த சக்தி தாண்டவமும் தென்னரசால் மறக்கப்படவில்லை. அதைப் பற்றி யாரிடமும் அவர் பேசவுமில்லை. நீலகண்ட சாஸ்திரி எழுதிய ஆன்மிக பாரதம் புத்தகத்தை அவர் படிக்க நேரிட்ட போது விசேஷ மானஸ லிங்கம் பற்றித் தெரிந்தது. ஒளிரும் அந்த விசேஷ மானஸ லிங்கம் தான் தோட்ட வீட்டில் பசுபதி வணங்கிக் கொண்டிருக்கும்

சிவலிங்கம் என்பதில் அவருக்குச் சந்தேகமே இல்லை. ஆன்மிகத்திலும் அபூர்வ சக்திகளிலும் மிகத் தெளிவான ஞானம் இருந்த குருஜியிடம் போய் இதைச் சொல்லி விளக்கம் கேட்கத் தோன்றியது.

ஏழு முறை சென்று குருஜியைத் தரிசிக்க முடியாமல் திரும்பிய அவருக்கு எட்டாவது முறை தரிசனம் கிடைத்தது. குருஜியின் உதவியாளன் பத்து நிமிடத்திற்குள் பேசி முடித்து விட வேண்டும் என்று சொல்லித்தான் அவரை உள்ளே அனுப்பினான். அதனால் தென்னரசு நேரத்தை வீணாக்காமல் ஆன்மிக பாரதம் புத்தகத்தில் விசேஷ மானஸ லிங்கம் இருந்த பகுதியைச் சுட்டிக் காட்டி அந்த விசேஷ மானஸ லிங்கம் இருக்கும் இடம் தனக்குத் தெரியும் என்றும் அந்தப் புத்தகத்தில் இருக்கும் மற்ற தகவல்கள் எல்லாம் உண்மையா என்று அறிந்து கொள்ள ஆவலாக இருப்பதாகவும் சொன்னார்.

குருஜி அவரை உடனடியாக நம்பி விடவில்லை. அதனால் அந்த சிவலிங்கம் ஒளிர்வதைத் தான் பார்த்து இருப்பதாகவும் அந்த சிவலிங்கத்தை ஒரு சித்தர் தான் தன் நண்பன் வீட்டில் பல ஆண்டுகளுக்கு முன் கொண்டு வந்து தந்தார் என்றும் தென்னரசு தெரிவித்தார். குருஜி கண்களில் ஒரு மின்னல் வந்து போனது.

தன் உதவியாளனை அழைத்து மீதமுள்ள பார்வையாளர்களை திருப்பி அனுப்பச் சொல்லி விட்டு தன் முழு கவனத்தையும் தென்னரசுவிடம் திருப்பினார். அன்று குருஜி அந்த சிவலிங்கத்தைப் பற்றியும், பசுபதியைப் பற்றியும் நிறைய கேள்விகளைத் தென்னரசுவிடம் கேட்டுத் தகவல்களைப் பெற்றுக் கொண்டார். குருஜியின் கூர்மையான அறிவிற்கு இன்னும் முக்கியமான தகவல் ஒன்றை தென்னரசு மறைப்பதாகத் தோன்றவே நேரடியாகக்

*கேட்டே விட்டார். ”ஏதோ ஒரு விஷயத்தை நீ இன்னும் மறைக்கிற மாதிரித் தெரியுதே”*

*தென்னரசு தயக்கத்துடன் சொன்னார். ”சொன்னால் நீங்க நம்புவீங்களோ இல்லையோ தெரியலை. அதான் சொல்லலை...”*

*“பரவாயில்லை சொல்லு.”*

*தென்னரசு தயக்கத்துடன் ஆரம்பித்தாலும் சொல்லும் போது அந்தக் காட்சியை மறுபடியும் காண்பது போல உணர்ந்தார். அவருடைய வார்த்தைகளில் இருந்த பயமும், பரவசமும், சொன்ன விஷயத்தின் தன்மையும் குருஜியை நம்ப வைத்தன. அந்தக் கணத்தில் ஒரு பலத்த கூட்டணி ஆரம்பமாகியது.*

*தென்னரசுவிடம் குருஜி தனக்கு முன்பே விசேஷ மானஸ லிங்கம் பற்றித் தெரியும் என்று காண்பித்துக் கொள்ளவில்லை. ஆனால் தென்னரசு சொன்னதை எல்லாம் வைத்துப் பார்க்கும் போது அது தான் விசேஷ மானஸ லிங்கம் என்று நம்புவதில் தனக்குத் தயக்கம் இல்லை என்று சொன்னார்.*

*தென்னரசு தன் நெடுநாளைய சந்தேகத்தைக் கேட்டார். “குருஜி. நீங்க கடவுளுக்கு ஒரு குறிப்பிட்ட உருவம் கிடையாதுன்னு சொல்றதை நான் பல சொற்பொழிவுகள்ல கேட்டிருக்கேன். ஆனால் நான் பார்த்தது சிவனின் அர்த்தநாரீஸ்வரன் உருவத்தை. சிவனோட நாட்டிய அசைவுகள்லயே ரெண்டு பக்கமும் இருந்த நுணுக்கமான வித்தியாசங்களைக் கூட நான் கவனிச்சேன். அப்படின்னா அந்த உருவம் நிஜம் தான்னு ஆகுது தானே?”*

குருஜி தாமதிக்காமல் பதில் அளித்தார். “நீ பார்த்தது பசுபதியோட காட்சியை. அந்த மானஸ லிங்கம் யார் எந்தப் பார்வையில பார்க்கிறாங்களோ அந்தக் காட்சியைக் காட்டக் கூடிய சக்தி படைச்சது. ஒரு கிறிஸ்துவருக்கு அதுல லயிக்க முடிஞ்சுதுன்னா அவர் யேசு கிறிஸ்துவைப் பார்த்திருப்பார். ஒரு முஸ்லீம் அதுல லயிக்க முடிஞ்சிருந்ததுன்னா அல்லாவோட சக்திகளை அதில் பார்த்திருப்பார். ஸ்கிரீன் ஒன்னு தான் எந்தப்படம் போடறாங்களோ அந்தப் படம் ஸ்கிரீன்ல தெரியுது இல்லையா. அந்த மாதிரி தான் இதுவும். ஒரே வித்தியாசம் என்னன்னா அது வெறும் காட்சியா மட்டும் தான் இருக்கும். இதுல அது நிஜமாகவே நடக்கும்....”

குருஜி தென்னரசுவை ஒரு வாரம் கழித்து வரச் சொன்னார். தென்னரசு இரண்டாவது முறை சென்ற போது ஜான்சனும் இருந்தார். விசேஷ மானஸ லிங்கத்தைத் தான் ஒரு முறை நேரில் பார்க்க வேண்டும் என்றும், பசுபதியுடன் பேச வேண்டும் ஜான்சன் விரும்பினார். பரமேஸ்வரன் குடும்பம் மூலமாகப் போக தென்னரசுவிற்குத் தயக்கம் இருந்தது. அப்படிப் போவதில் பல கேள்விகள் எழும்...

நேரடியாகவே போனால் என்ன என்று தோன்றி அவர் ஜான்சனை அழைத்துக் கொண்டு போனார். ஆனால் பசுபதி அவர்களைச் சந்திக்க மறுத்து விட்டார். ஏமாற்றத்துடன் அவர்கள் திரும்பினார்கள்.

குருஜி அந்த விசேஷ மானஸ லிங்கம் நினைத்ததை எல்லாம் ஏற்படுத்தித் தர முடிந்த பிரம்மாண்டமான சக்திகளைக் கொண்டது என்று தீர்க்கமாக நம்பினார். அந்த அளவு நம்பிக்கை ஜான்சனுக்கு இருக்கவில்லை.. சித்தர்கள் சக்தி மீது அவருக்கு நம்பிக்கை இருந்த

போதிலும் சித்தர்கள் தங்கள் சக்திகளை அந்த விசேஷ மானஸ லிங்கத்தில் சேகரித்து வைத்திருக்க முடியும் என்றும் அதை வசப்படுத்திக் கொள்ள முடிந்தவர்கள் அந்த சக்திகளைப் பயன்படுத்திக் கொள்ள முடியும் என்பதை நம்ப அவர் அறிவியல் அறிவு தடுத்தது. தென்னரசு கண்ட காட்சி கூட அவர் சந்தேகத்தைத் தீர்த்து விடவில்லை. தென்னரசுவிற்கே கூட அரைகுறையாய் தான் நம்பிக்கை வருகிற மாதிரி இருந்தது. ஆனால் குருஜியின் நம்பிக்கை மட்டும் உறுதியாக இருந்தது.

தென்னரசுக்கோ நம்பிக்கை வருவதும் போவதுமாக இருந்தது. அவருக்கு ஈஸ்வர் குருஜியிடம் எழுப்பிய சந்தேகம் போல் விசேஷ மானஸ லிங்கம் சித்தர்களின் சித்தப்படியே நடக்கும் 'ப்ரோகிராமா'க இருக்குமோ என்ற பயம் இருந்தது. அப்படி இருந்து விட்டால், என்ன தான் அதைக் கடத்தி வைத்துக் கொண்டாலும் அது பலன் தராது என்று அவர் பயந்தார். அவருடைய ஒரே தைரியம் குருஜியாகத் தான் இருந்தார். அத்தனை கூர்மையான அறிவுக்குத் தெரியாத, புரியாத சக்திகள் இருக்க முடியாது என்று அடிக்கடி தனக்குள்ளே தென்னரசு சொல்லிக் கொண்டார். இந்த முதல் மாதிரி ஆராய்ச்சியில் கிடைத்த சிறிய வெற்றி பெரிய வெற்றிக்கு அஸ்திவாரமாய் இப்போது தான் நம்பிக்கை பிறந்திருந்தது....

விதி அவருக்கு இது நாள் வரையில் சாதகமாக இருந்தது இல்லை. ஏழ்மையான குடும்பத்தில் பிறந்த அவர் அப்படியே தன் நிலைமையை ஒத்தவர்களோடு மட்டும் பழகி இருந்திருந்தால் அது அவரை வெட்கப்பட வைத்திருக்காது. ஆனால் சங்கரைப் போன்ற பணக்கார நண்பனுடன் பழக ஆரம்பித்த போது தான் ஏழ்மையில் இழப்பது எத்தனை என்பது அவருக்குப் புரிந்தது. தமிழகத்தின் மிகப்பெரிய பணக்காரர்களில் ஒருவரின் மகன் என்ற கர்வம் சங்கருக்குச் சிறிதும் இருக்கவில்லை. சொல்லப்போனால் சங்கர் தன்

பணக்கார அந்தஸ்து குறித்த பிரக்ஞையில் கூட இருக்கவில்லை. ஆனால் அந்த வீட்டில் மற்ற பெரியவர்களிடம் அது இருந்தது.

பரமேஸ்வரன் மகனின் நண்பன் என்ற ஒரே காரணத்தால் தென்னரசுவை மரியாதைக் குறைவாக நடத்தவில்லை என்ற போதும் தன் பணக்கார அந்தஸ்துக்கு தென்னரசு இணை அல்ல என்பதைப் பல முறை மறைமுகமாக சுட்டிக் காட்டியுள்ளதை தென்னரசு உணர்ந்திருக்கிறார். ஆனந்தவல்லியோ வெளிப்படையாகவே தீண்டத்தகாத நபரைப் பார்ப்பது போலத் தான் தென்னரசுவைப் பார்த்தாள். அப்போதெல்லாம் 'எனக்கும் பணம் நிறைய இருந்திருந்தால்!...." என்ற ஏக்கம் தென்னரசுக்கு ஏற்படும்.

படித்து முடித்து கல்லூரியில் ஆசிரியராக வேலை கிடைத்த பிறகு ஏழை, நடுத்தர வர்க்கமாக முடிந்ததே ஒழிய பணக்காரராக முடியவில்லை. சங்கரின் தங்கை மீனாட்சி அவரது இன்னொரு நண்பனைக் கல்யாணம் செய்து கொண்டு அந்த நண்பன் வீட்டோடு மாப்பிள்ளையாக செல்வந்தனாக மாறிய போது பொறாமையாக இருந்தது. சங்கரின் உயிர் நண்பனாக இருந்து சங்கருடனேயே எப்போதும் சுற்றிக் கொண்டிருந்தபடியால் மகனை நினைவுபடுத்திய தென்னரசுவை பரமேஸ்வரன் மருமகனாகத் தேர்ந்தெடுக்கவில்லை என்று தோன்றிய போது அதற்கும் அவர் விதியை நொந்து கொண்டார்.

விதி அவர் மனைவியையும் சீக்கிரமே பறித்துக் கொண்டது. தன் மகளையாவது பரமேஸ்வரன் தன் குழந்தைகளை வளர்த்தியது போல செல்வச் செழிப்பில் வளர்த்த ஆசைப்பட்டார். குழந்தைகள் நினைத்தவுடன் அதை வாங்கிக் கொடுக்க முடிந்த பரமேஸ்வரன் தான் அவருக்கு ஒரு உதாரணத் தந்தையாக இருந்தார். ஏனென்றால்

அதை அவர் சங்கருடன் கூடவே இருந்து பல முறை பார்த்திருக்கிறார். ஆனால் அவருடைய நிலைமை, மகள் ஆசைப்படுவதில் ஒன்றிரண்டை வாங்கித் தருவதில் கூட சிரமத்தை ஏற்படுத்துவதாய் இருந்தது. இயல்பிலேயே நல்ல பெண்ணான விஷாலி நிலைமையை உணர்ந்து தந்தையிடம் கேட்பதையே தவிர்த்தாலும் அவருக்கு அதைப் புரிந்து கொள்ள முடிந்ததால் இதயத்தின் ஆழத்தில் வலித்தது.

காலம் பல கழிந்து மகேஷ் விஷாலியைக் காதலிக்க ஆரம்பித்த போது மீண்டும் அவர் ஆசைகள் துளிர்த்தன. சங்கரும், சங்கரின் மகனும் என்றுமே இந்தியா வரப்போவதில்லை, சகல சொத்துக்கும் அதிபதியாக மாறப் போகிறவன் மகேஷ் தான் என்பதால் அவன் காதலை அவர் வரவேற்றார். விஷாலி அவனை நல்ல நண்பனாகத் தான் நினைத்தாள் என்றாலும் அவன் காதலைக் கண்டிப்பாக நிராகரிக்க மாட்டாள் என்று எடை போட்டிருந்தார். ஆனால் மகேஷ் பரமேஸ்வரனுக்குப் பயந்து தன் காதலை விஷாலியிடம் சொல்வதைக் கூடத் தள்ளிப் போட்ட போது மறுபடி ஏமாற்றமாக இருந்தது. ஆனந்தவல்லியே சாகவில்லை, அப்படி இருக்கையில் பரமேஸ்வரனும் பல காலம் வாழ்வார் என்றே தோன்றியது. அடுத்தவன் காசுக்காக இப்படிப் பிச்சைக்காரனாகக் காத்திருப்பதை விட நம்மிடமே பணம் வேண்டிய அளவு இருந்தால் எப்படி இருக்கும் என்ற ஆசை அவர் மனதில் இருந்து கொண்டே இருந்தது.

விசேஷ மானஸ லிங்கம் ‘எல்லாம் தர முடிந்த கல்பதரு’ என்று தெரிந்த போது முதல் முறையாக அவர் வாழ்க்கையில் நம்பிக்கை ஒளிக்கீற்று தெரிய ஆரம்பித்தது.

**************

குறி சொல்லும் கிழவியின் வீட்டில் இருந்து திரும்பி வரும் போது பார்த்தசாரதி ஈஸ்வரிடம் சொன்னார். “அந்தக் கிழவி

சொன்னதும் அந்த சித்தர் சொன்னதும் ஒத்துப் போகுது ஈஸ்வர். நீங்களே முயற்சி செய்து பாருங்க"

ஈஸ்வர் தலையசைத்தான். முயற்சி செய்வதற்கு முன் தன்னை அமைதிப்படுத்திக் கொள்வதும் தன்னை சில விதங்களில் தயார்ப்படுத்திக் கொள்வதும் முக்கியம் என்பதை ஆராய்ச்சியாளனான அவன் உணர்ந்திருந்தான். அதற்கு அவனுக்கு சில மணி நேரங்கள் தேவைப்படும்...

"நான் நாளைக்குக் காலையில் ஆரம்பிக்கலாம்னு நினைக்கிறேன் சார்..."

பார்த்தசாரதி சரியென்றார். "நானும் வரட்டுமா? இல்லை வேற யாரையாவது உங்கள் உதவிக்கு அனுப்பட்டுமா?"

"உங்களுக்கு சிரமம் இல்லாட்டி நீங்களே வர்றது நல்லது சார்"

"நானே வர்றேன். எனக்கு சிரமம் என்ன இருக்கு. இப்ப எனக்கு இந்த கேஸ்னாலன்னு இல்லை நிஜமாவே தனிப்பட்ட முறையிலயே சுவாரசியம் கிளம்பி இருக்கு...."

அவன் நன்றியுடன் தலையசைத்தான். ஒரு நிமிடம் கழித்து அவராகவே சொன்னார். "நான் உறுதியா சொல்றேன் ஈஸ்வர். உங்களால கண்டிப்பா முடியும்... ஏன்னா நீங்க அந்தத் தோட்ட வீட்டுல ஒரு தடவை தியானத்துல உட்கார்ந்தீங்க ஞாபகம் இருக்கா, அப்ப எத்தனை சீக்கிரமாய் உங்களால தியானத்துக்குப் போக முடிஞ்சது... எனக்கு அப்ப அஜந்தா குகையில பார்த்த ஒரு புத்தர்

*ஞாபகம் வந்துச்சு. அந்த அளவு ஆழமா தியானத்துல நீங்க லயிச்சீங்க”*

*ஈஸ்வருக்கு அந்த நேரத்தில் அந்த நம்பிக்கை வார்த்தைகள் நிறையவே தேவைப்பட்டன. மனதார சொன்னான். “தேங்க்ஸ் சார்”*

*அன்றைய நாளை அவன் நினைத்துப் பார்த்தான். அன்று கிடைத்த தியான அனுபவம் அவனுக்கு அதற்கு முன் எப்போதும் கிடைத்திருக்கவில்லை. பின்பும் கிடைத்திருக்கவில்லை. அன்றைய அனுபவத்தின் முடிவிலும் கூட அவனுக்கு சிவலிங்கம் காட்சி அளித்திருந்தது. அந்த நேரத்தில் வேத கோஷம் கூடக் கேட்டுக் கொண்டிருந்தது....*

*திடீரென்று ஒரு உண்மை அவனுக்கு உறைத்தது. அன்றே சிவலிங்கம், தான் வேத பாடசாலையில் இருப்பதாகச் சொன்ன செய்தி தானோ அது, அதை அவன் தான் புரிந்து கொள்ளவில்லையோ?.... அவன் சம்பந்தப்பட்டவன் என்பதால் தான் விசேஷ மானஸ லிங்கம் அவனை நினைவுபடுத்திக் கொண்டே இருந்ததோ?*

# <u>அத்தியாயம் - 77</u>

*கனகதுர்காவிற்கு விஷாலியை மிகவும் பிடித்திருந்தது. ஈஸ்வர் மதிக்கக் கூடிய நிறைய குணங்கள் அந்தப் பெண்ணிடம் இருப்பதை அவளிடம் பேசிக் கொண்டிருக்கும் போது கனகதுர்கா கண்டு பிடித்தாள். ஏதோ ஒரு எல்லையில்லாத சோகத்தில் மூழ்கி இருந்ததைத் தவிர குறையாகச் சொல்லக் கூடிய எந்த அம்சமும்*

அந்தப் பெண்ணிடம் இல்லை. அந்தச் சோகம் கூட ஈஸ்வருக்கும் அவளுக்கும் இடையே இருக்கும் ஊடலால் இருக்கலாம்.

ஈஸ்வரிடம் நிறைய நேரம் பேச கனகதுர்காவுக்கு நேரம் கிடைத்திருக்கவில்லை. அவன் பார்த்தசாரதியைப் பார்க்கப் போனவன் இன்னும் வரவில்லை. அவனிடம் பேச நேரம் கிடைத்தால் கூட இதைப் பற்றி நாசுக்காகத் தான் பேச வேண்டும். ஆனந்தவல்லி சொல்வது போல அவசரப்பட முடியாது. நாசுக்காகப் பேசினால் கூடக் கண்டுபிடித்துக் கொள்ளக் கூடிய புத்திசாலி அவன்.

தாயை அவன் அதிகம் நேசிப்பவன் என்றாலும் அவன் வாழ்க்கையைத் தீர்மானிக்கும் அதிகாரத்தை அவன் அவளுக்குத் தந்து விட மாட்டான். அனாவசியமாக அவன் தனிப்பட்ட விஷயங்களில் அவள் மூக்கை நுழைப்பதை அவன் விரும்பவும் மாட்டான். ஆனால் அதையெல்லாம் ஆனந்தவல்லிக்கு அவளால் புரிய வைக்க முடியவில்லை. ஆனந்தவல்லிக்குப் புரியவில்லை என்பதை விட அவள் புரிந்து கொள்ள விரும்பவில்லை என்பதே உண்மையாக இருந்தது. வேறு வழியில்லாமல் அவனிடம் பேசிப் பார்க்கிறேன் என்று கனகதுர்கா சொல்லி அப்போதைக்குத் தப்பித்தாள்.

விஷாலியைப் பற்றி மீனாட்சியிடமும் கனகதுர்கா விசாரித்தாள். மீனாட்சி விஷாலியை ஆஹா ஓஹோ என்று புகழ்ந்தாள். அவள் புகழ்ந்தது மிகை அல்ல என்பது விஷாலியிடம் பேசும் போது கனகதுர்காவுக்கும் புரிந்தது. அவள் விஷாலியிடம் பேசிக் கொண்டிருக்கும் போது தான் ஈஸ்வர் வந்தான்.

அவன் மிகவும் களைப்பாக இருந்தான். அவனை அத்தனை சோர்வாய் கனகதுர்கா பார்த்ததே இல்லை என்பதால் அவனைப் பார்த்தவுடன் கவலையுடன் கேட்டாள். “என்னடா என்னவோ மாதிரி இருக்கே”

அவனுக்கு விஷாலி முன்னால் அம்மாவிடம் அதிகம் பேசப் பிடிக்கவில்லை. ”ஒன்னுமில்லைம்மா” என்றவன் தனதறைக்குப் போய் விட்டான். விஷாலி முகத்தில் அவனைப் பார்த்தவுடன் தெரிந்த சோகம் அவனை என்னவோ செய்தது. அவள் இங்கு வந்ததில் இருந்தே இப்படி சோகமாய் இருந்தே கொல்கிறாள். இப்போது அவள் அவன் ஆரம்பத்தில் பார்த்த விஷாலியே அல்ல. அந்த விஷாலியின் உருவம் மட்டும் இப்போது இருக்கிறதே ஒழிய அந்த ஒளியும், உயிரோட்டமும் இல்லை. அவள் மீது இருந்த கோபத்தை அவனால் முழுமையாகத் தக்க வைத்துக் கொள்ள முடியவில்லை. கையில் இறுகப் பிடித்திருந்த மணல் விரலிடுக்கில் சிறிது சிறிதாக வெளிப்பட்டுக் குறைந்து கொண்டே வருவது போல கோபமும் குறைந்து கொண்டே வந்தது. அதை அதிகப்படுத்திக் கொள்ள அவன் மறுபடி மறுபடி அன்று அவள் நிர்த்தாட்சணியமாய் பேசிய கடூர வார்த்தைகளை நினைத்துக் கொள்ள வேண்டியதாக இருந்தது

கனகதுர்கா விஷாலியைப் பார்த்து தலையசைத்து விட்டு மகனைப் பின் தொடர்ந்தாள். ஈஸ்வர் கண்களை மூடிக் கொண்டு படுக்கையில் சரிந்திருந்தான்.

மிக இறுக்கமான சூழ்நிலைகளில் சின்னச் சின்னக் கேள்விகளைக் கூட அவன் விரும்புவதில்லை என்பதால் மௌனமாக அவன் அருகே அமர்ந்து அவன் தலையைக் கோதி விட்டாள். அவனுக்கு அது மிகவும் பிடிக்கும்.....

ஈஸ்வரைத் தாயின் விரல்கள் அமைதிப்படுத்தின. கண்களைத் திறக்காமல் அவன் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தான். விஷாலியைக் கஷ்டப்பட்டு ஒதுக்கி வைத்து விட்டு விசேஷ மானஸ லிங்கத்தில் கவனம் செலுத்த ஆரம்பித்தான். உலகத்தின் தலைவிதி அவனிடம் இருக்கிறதோ இல்லையோ கணபதியின் தலைவிதி அவனிடம் இருக்கிறது. கள்ளங்கபடமில்லாத கணபதியின் சிரிப்பு நினைவுக்கு வந்தது..... அவன் கண்டிப்பாக இயங்கியே ஆக வேண்டும். என்ன செய்ய வேண்டும், எப்படி செய்ய வேண்டும் என்ற தெளிவான முடிவை அவனால் எடுக்க முடியவில்லை.

இந்த நேரத்தில் அப்பா இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும் என்று அவனுக்குத் தோன்றியது. விசேஷ மானஸ லிங்கத்தைப் பற்றி அவன் முதல் முதலில் கேள்விப்பட்டது அவரிடம் இருந்து தான். அதைப் பற்றி அதிகம் அவனிடம் பேசியவரும் அவர் தான். மணிக்கணக்கில் ஒருகாலத்தில் அவர்கள் பேசி இருக்கிறார்கள். அறிவியல் ரீதியாக அவன் அவருடைய எத்தனையோ கேள்விகளுக்கு விளக்கமாகப் பல அனுமானங்களைத் தந்துமிருக்கிறான். இந்த இக்கட்டான நிலையில் அவர் இருந்திருந்தால் அவரிடம் அவன் மனம் விட்டுப் பேசி இருக்கலாம். பேசும் போதே அவனுக்கு ஒரு தெளிவு பிறந்திருக்கும்.

இப்போது அவன் பார்த்தசாரதியிடம் அதைப் பற்றிப் பேசுகிறான் என்றாலும் அவருக்கு அதில் புரிய முடிந்தது குறைவு தான். அவருக்கு அவன் மீது உள்ள நம்பிக்கை தான் விசேஷ மானஸ லிங்கத்தின் மீதுள்ள நம்பிக்கையை விட அதிகமாய் இருக்கிறது. அதனால் அவன் ஏதாவது சொன்னால் தலை ஆட்டுவாரே ஒழிய ஆக்கபூர்வமான வேறு கருத்துகள் அவரிடம் இருந்து வராது...

ஈஸ்வர் கண்களைத் திறந்து தாயைப் பார்த்துப் புன்னகைத்தான். அவள் கை விரல்களுக்கு பாசத்தோடு முத்தமிட்டு விட்டு களைப்பு நீங்கியவனாக எழுந்தான். “எனக்கு கொஞ்சம் வேலை இருக்கும்மா” என்றவன் தன் லாப்டாப்பைத் திறந்து அதில் அவன் சேமித்து வைத்திருந்த ஆழ்மனசக்தி ஆராய்ச்சிகள் பற்றிய தகவல்களில் மூழ்க ஆரம்பித்து விட்டான். காலம், இடம், சூழல் அத்தனையும் மறந்து விட்டான்.

மகனையே பார்த்துக் கொண்டிருந்த கனகதுர்கா பின் வெளியே வந்து ஹாலில் மற்றவர்களுடன் பேசிக் கொண்டிருந்தாள். மூன்று மணி நேரம் கழித்து ஈஸ்வர் வெளியே வந்தான். ஒரு ஓரமாக அமர்ந்திருந்த விஷாலியை அலட்சியம் செய்தபடி மற்றவர்களிடம் பேசிக் கொண்டிருந்து விட்டு கடைசியில் சொன்னான்.

“நான் நாளைக்கு காலைல தோட்ட வீட்டுக்குப் போறேன்... சில நாள் அங்கேயே இருக்க வேண்டி வரும்னு நினைக்கிறேன்”

மற்றவர்கள் திகைப்பும் ஆச்சரியமும் அடைந்தார்கள் என்றால் இடி விழுந்தது போல உணர்ந்தவள் ஆனந்தவல்லி தான். அவளுடைய மூத்த மகன் அங்கு போனவன் பின்பு அவள் மகனாகத் திரும்பி வரவேயில்லை.... இப்போது இவன் போகிறேன் என்கிறான்.... அவள் உள்மனம் அபாயச்சங்கு ஊதியது.

“எதுக்குடா அங்கே தங்கப் போறே?” பரமேஸ்வரன் திகைப்புடன் கேட்டார்.

*“எனக்கு கொஞ்சம் அங்கே ஆராய்ச்சிகள் பண்ண வேண்டி இருக்கு தாத்தா...” கணபதியையும் சிவலிங்கத்தையும் கண்டு பிடிக்கப் போகிற அவன் முயற்சிகள் ஒரு விதத்தில் ஆராய்ச்சிகள் தானே?*

*“என்ன ஆராய்ச்சி?”*

*“எத்தனையோ வருஷங்களாய் அந்த இடத்துல அந்த சிவலிங்கத்துக்கு, பெரிய தாத்தா பூஜை செய்துகிட்டு இருந்திருக்கார். அங்கே நிறைய சக்தி அலைகள் இருக்கும் தாத்தா. அதை நானே உணர்ந்திருக்கேன். என் சப்ஜெக்டுக்கு இந்த ஆராய்ச்சிகள் உதவும் தாத்தா....”. ஈஸ்வர் சமாளித்தான்.*

*பரமேஸ்வரன் திருப்தி அடைந்தார். ”அங்கே வசதிகள் போதுமாடா. அண்ணன் ஒரு சன்னியாசி மாதிரி இருந்தவர்... எந்த வசதியும் தேவை இல்லைன்னு ஒதுக்கி வச்சவர்.... உனக்கு கஷ்டமா இருக்காதாடா?”*

*“அது ஒன்னும் பிரச்சினை இல்லை தாத்தா....”*

*அதற்குப் பின் மற்றவர்கள் அதைப் பெரிதுபடுத்தாமல் வேறு பேச்சுக்கு நகர்ந்தார்கள். ஆனந்தவல்லி மட்டும் சிலையாக அமர்ந்திருந்தாள். பின் ஈஸ்வரும் கனகதுர்காவும் தங்கள் அறைக்குப் போக மீனாட்சியும் விஷாலியும் கூட அங்கிருந்து நகர்ந்தார்கள்.*

*பேயறைந்தது போல் அமர்ந்திருந்த தாயிடம் பரமேஸ்வரன் கேட்டார். “என்னம்மா ஆச்சு உனக்கு?”*

“எனக்கு ஈஸ்வர் அந்த தோட்ட வீட்டுக்குப் போறது பிடிக்கலைடா. பயமாயிருக்கு”

“பயமா? என்னத்துக்குப் பயம்?”

“உங்கண்ணன் அங்கே போனவன் சன்னியாசியாவே மாறிட்டாண்டா. அங்கே அதிகம் தங்கி இருந்தவங்க எல்லாம் சிவனாண்டிகள் தான்... இவனும் இப்ப போறேன்கிறான்.... உங்கண்ணன் சாகறதுக்கு முன்னாடி இவனை நியமிச்ச மாதிரி சொல்லிட்டு வேற போயிருக்கிறான்..” ஆனந்தவல்லி குரலடைக்கச் சொன்னாள்.

பரமேஸ்வரன் வாய் விட்டுச் சிரித்தார். “ஆராய்ச்சி பண்ணப் போகிறவனைப் போய் ஆண்டியாயிடுவானோன்னு பயப்படறியே. என்னாச்சும்மா உனக்கு?”

ஆனந்தவல்லி மகனுக்குப் பதில் அளிக்கவில்லை. பரமேஸ்வரன் தனதறைக்குப் போன பின்பும் அப்படியே ஆழ்ந்த சிந்தனையுடன் அவள் அமர்ந்திருந்தாள். ஈஸ்வரை துறவியாகாமல் திரும்ப வரவழைக்கும் சக்தி விஷாலி ஒருத்திக்குத் தான் உண்டு... அவன் அங்கு போவதற்கு முன்னால் அவர்கள் இருவரும் மனம் விட்டுப் பேசிப் பிரச்சினையை தீர்த்துக் கொண்டால் பின் அவன் கண்டிப்பாகத் திரும்பி வருவான், கவலைப்பட வேண்டியதில்லை என்று தோன்றியது. விஷாலி என்ற துருப்புச் சீட்டைப் பயன்படுத்தா விட்டால் பின் என்றென்றைக்கும் கொள்ளுப்பேரனை அந்த சிவலிங்கத்திடம் இழந்து விட வேண்டி இருக்கும்.... ஆனந்தவல்லி அதை அனுமதிக்க மாட்டாள்... இனி கனகதுர்காவையும் நம்பி பயனில்லை... அவளே எதாவது செய்தாக வேண்டும்....

ஒரு தீர்மானத்துடன் எழுந்த ஆனந்தவல்லி ஈஸ்வரின் அறைக்குப் போனாள். ஈஸ்வர் தாயிடம் ஏதோ பேசிக் கொண்டே மறுநாள் போகும் போது எடுத்துக் கொண்டு போக வேண்டிய பொருட்களை எடுத்து வைத்துக் கொண்டு இருந்தான்.

ஆனந்தவல்லி ஈஸ்வரிடம் சீரியஸாகக் கேட்டாள். "ஏண்டா, செத்துப் போகணும்னு போல இருக்குன்னு சொல்றவங்க அப்படியே தற்கொலை ஏதாவது செய்துக்குவாங்களா, இல்லை பேச்சுக்குச் சொல்றது தானா அது"

"அது சொல்ற ஆளைப் பொருத்தது. ஏன் பாட்டி யார் சொன்னாங்க"

ஆனந்தவல்லி அதற்குப் பதில் சொல்லவில்லை. "சும்மா ஒரு பேச்சுக்குக் கூட சொல்லியிருக்கலாம் இல்லை" என்று கேட்டாள்.

"யார் சொன்னாங்கன்னு முதல்ல சொல்லுங்க"

ஆனந்தவல்லி கூசாமல் பொய் சொன்னாள். "விஷாலி தான்... செல் போன்ல யார் கிட்டயோ பேசிகிட்டு இருந்தா. செத்துப் போயிடணும் போல இருக்குன்னு அவ சொன்னது காதுல விழுந்துச்சு"

ஈஸ்வர் கையில் இருந்த ப்ளாஸ்க் பெரும் சத்தத்துடன் கீழே விழுந்தது. அதிர்ச்சியின் எல்லைக்கே போன அவன் பலவீனமாய் கேட்டான். "என்ன சொல்றீங்க?"

”யாரோ ஃப்ரண்டு கிட்ட பேசிகிட்டு இருந்தா போல இருக்கு. பாதி அழுகையோட அவ சொன்னது என் காதுல விழுந்துச்சு...”

ஆனந்தவல்லி சொன்னதை அவர்கள் இருவரும் நம்பினார்கள். சில நாட்களாகவே விஷாலி சோகமாகத் தான் இருக்கிறாள்.... ஈஸ்வர் முகத்தில் தெரிந்த வலி அளக்க முடியாததாக இருந்தது. கனகதுர்கா மகனிடம் சொன்னாள். “போய் என்னன்னு விசாரிடா”

ஆனந்தவல்லி அவசரமாய் சொன்னாள். “என் காதுல விழுந்த விஷயத்தை அவ கிட்ட சொல்லாதே... முதல்ல என்ன பிரச்சினைன்னு கேளு.... அப்புறம் புத்தி சொல்லு”

ஈஸ்வர் அடுத்த நிமிடம் விஷாலியின் அறையில் இருந்தான். விஷாலி உறங்க ஆயத்தமாகி இருந்தாள். திடுதிடுப்பென்று அறைக்குள் ஈஸ்வர் வந்தது அவளுக்கு திகைப்பை ஏற்படுத்தியது. கூடவே ஒரு சின்ன சந்தோஷத்தையும் அது ஏற்படுத்தியது. அவனாக அவளைத் தேடி வந்திருக்கிறான்....

அவள் இன்னமும் எந்த முட்டாள்தனமும் செய்யாமல் நலமாக இருப்பது அவனுக்குப் பெரிய ஆசுவாசத்தைக் கொடுத்தாலும் தன்னைச் சில நிமிடங்கள் பெரிதாகப் பயமுறுத்தி விட்ட அவள் மீது அவனுக்கு அளவு கடந்த கோபம் வந்தது. “உனக்கு என்ன பிரச்சினை” கோபம் குறையாமல் கேட்டான்.

அவன் பன்மையில் பேசாமல் ஒருமையில் பேசியது, அது கோபத்தினால் ஆனாலும் கூட, அவளுக்கு இதமாக இருந்தது.

அவன் திடீரென்று வந்து எந்தப் பிரச்சினையைக் கேட்கிறான் என்று அவள் புரியாமல் விழித்தாள்.

ஈஸ்வர் சொன்னான். “கொஞ்ச நாளாவே ரொம்ப சோகமாய் இருக்கியே. அதுக்கு காரணம் கேட்டேன்”. அவன் குரலில் அனல் இருந்தது.

விஷாலிக்கு அவன் கோபத்திற்கும், இந்தக் கேள்வியை இப்போது ஏன் கேட்கிறான் என்பதற்கும் காரணம் புரியவில்லை. அக்கறையோடு அவன் கேட்ட போதும் அவன் முகத்தில் சினேகம் இல்லை. ”நான் ஒரு சைக்காலஜிஸ்ட். உடம்போட பிரச்சினையை டாக்டர் கிட்ட சொல்ற மாதிரி மனசோட பிரச்சினையை என் கிட்ட சொல்லலாம். முட்டாள்தனமாய் எதுவும் செய்துக்க வேண்டியதில்லை”

முட்டாள்தனமாக எதைச் செய்ய வேண்டாம் என்கிறான் என்று விஷாலிக்குப் புரியவில்லை. ஆனால் சம்பந்தமில்லாத மனோதத்துவ மருத்துவர் போல அவன் கேட்டாலும் மீண்டுமொரு மன்னிப்பு கேட்க இது நல்ல சந்தர்ப்பம் என்று தோன்றியது. குறைந்தபட்சம் காது கொடுத்துக் கேட்கும் தயவாவது காட்டி இருக்கிறானே என்று நினைத்தவளாக மனோதத்துவ மருத்துவரிடம் சொல்வது போலவே தலை குனிந்து கொண்டு சொல்ல ஆரம்பித்தாள்.

“நான்... ஒரு நல்லவரைத் தப்பா புரிஞ்சுகிட்டு என்னென்னவோ பேசிட்டேன்... தப்புன்னு தெரிஞ்சதுக்கப்புறம் அவர் கிட்ட மன்னிப்பும் கேட்டேன்.... ஆனா அவர் மன்னிக்கலை.... அது ரொம்பவே உறுத்தலா இருக்கு”

*”தப்பா புரிஞ்சுக்க என்ன காரணம்?” அவளையே கூர்ந்து பார்த்தபடி ஈஸ்வர் கேட்டான்.*

*“சின்ன வயசுல இருந்தே பழகின நண்பன்....” என்று ஆரம்பித்தவள் ’மகேஷ் சொன்னதை நம்பி தவறாகப் புரிந்து கொண்டேன்’ என்று சொல்ல வந்தவள் அப்படியே அந்த வார்த்தைகளை முழுங்கி விட்டாள். அந்த ஒரு பாதகத்தைச் செய்தது தவிர மகேஷ் அவளுக்கு எல்லா விதங்களிலும் நல்ல நண்பனாகத் தான் இருந்திருக்கிறான். அவனைக் காட்டிக் கொடுக்க அவள் மனம் விரும்பவில்லை. “... சின்ன வயசுல இருந்தே பழகின நண்பனாய் இருந்திருந்தால் தேவையில்லாமல் சந்தேகம் வந்திருக்காது. அவர் புதியவரானதால நானா ஏதோ பைத்தியக்காரத்தனமா கற்பனை செய்துகிட்டு தப்பா பேசிட்டேன்....”*

*ஆனால் அவள் சொல்ல வந்த விஷயத்தை அவன் சரியாகப் புரிந்து கொண்டு விட்டான். அவள் அவனிடம் போனில் பேசியதற்கு சிறிது முன்பு தான் மகேஷ் வீட்டில் இருந்து வெளியேறியதைப் பார்த்திருந்தது ஈஸ்வரின் நினைவுக்கு வந்தது. இந்த அதிகாலையில் எங்கே போகிறான் என்று யோசித்ததும் நினைவுக்கு வந்தது. மகேஷ் போய் இவளிடம் ஏதோ பொய்யைச் சொல்லி விட்டிருக்க வேண்டும்....*

*ஈஸ்வர் அமைதியாகக் கேட்டான். ”என்ன பைத்தியக்காரத்தனமான கற்பனை?”*

*குரல் நடுங்க பலவீனமாய் விஷாலி சொன்னாள். “என்னைத் தரக்குறைவா நினைச்சு தான் அவர் என் கிட்ட பழகினதாய் நினைச்சுகிட்டேன்....”*

எந்த ஒரு கண்ணியமான பெண்ணானாலும் அந்த சந்தேகம் உண்மையாக இருக்கும் பட்சத்தில் தாங்கி இருக்க முடியாது தான் என்பது அவனுக்குப் புரிந்தது. அவன் கேட்டான். “அப்படி நினைக்கிற மாதிரி அந்த ஆள் உன் கிட்ட நடந்துகிட்டிருக்காரா”

“இல்லை.... ஆனா சந்தேகத்தோட பார்க்கறப்ப சாதாரணமானது கூட மோசமாகத் தோணுமில்லையா... அப்படி தான் நினைச்சு ஏமாந்துட்டேன்....” அவள் குரல் கரகரத்தது.

ஈஸ்வருக்கு அவள் கைவிரல் ஸ்பரிசம் இப்போதும் நினைவிருந்தது. அதைக் கூட அவனது தவறான கண்ணோட்டச் செய்கையாய் அவள் நம்பி இருக்கலாம்....

“நினைச்சது தப்புன்னு எப்ப புரிஞ்சுது?”

“அவரோட நண்பர் ஒருத்தர் கிட்ட பேசினப்ப புரிஞ்சுது”

பாலாஜி! ஈஸ்வர் மௌனமாக அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அவள் கண்களில் நீர் நிறைய சொன்னாள். “அவர் என்னை மன்னிச்சு என் கிட்ட சாதாரணமா பேசிகிட்டிருந்தார்னா போதும்... அதுக்கு மேல நான் எதிர்பார்க்கலை.”

அவன் கேட்டான். “அது மட்டும் போதுமா?”

***”போதும். அதுக்கு மேல எதிர்பார்க்க எனக்கு.... எனக்கு.... அருகதை இல்லைங்க” விசும்பலோடு வார்த்தைகள் வெளி வந்த போது ஈஸ்வரால் அதற்கு மேல் தாங்க முடியவில்லை....***

***“விஷாலி” என்று உருகியவன் அவளைத் தன்னிடம் இழுத்து அணைத்துக் கொண்டான். “விஷாலி....!”***

# ***அத்தியாயம் - 78***

***ஈஸ்வர் மிக வேகமாக விஷாலியின் அறைக்குப் போவதைப் பார்த்த பரமேஸ்வரனுக்கு என்னவோ அசம்பாவிதம் நிகழ்ந்து விட்டதாகத் தோன்றியது. என்ன என்று விசாரிக்க கனகதுர்காவிடம் சென்றார். கனகதுர்கா கவலையுடன் இருக்க ஆனந்தவல்லி சாவதானமாக அமர்ந்திருந்தாள்.***

***என்ன ஆயிற்று என்று விசாரித்த மாமனாரிடம் கனகதுர்கா ஆனந்தவல்லி சொன்னதைச் சொன்னாள். கேட்டு அவரும் கவலைப்பட ஆனந்தவல்லி அவர்களிடம் கவலைப்பட வேண்டாம் என்று சொன்னாள்.***

***“நம்ம வீட்டுக்கு வந்த பொண்ணு ஏடாகூடமா ஏதாவது செய்துகிட்டா என்ன பண்றதும்மா. நீ சுலபமா கவலைப்பட வேண்டாம்னு சொல்றே.”***

***“அந்தப் பொண்ணு அப்படி எதுவும் செய்துக்காது. அது அப்படியெல்லாம் சொல்லவே இல்லை. நான் சும்மா தான்***

*சொன்னேன்....” ஆனந்தவல்லி அலட்டிக் கொள்ளாமல் சொன்னாள்.*

*கனகதுர்கா விழிபிதுங்க நின்றாள். ‘இப்படியும் கூட சும்மா சொல்வார்களா?’ பரமேஸ்வரன் தாயிடம் கோபத்துடன் கேட்டார். “அம்மா உன் வயசுக்கு இதெல்லாம் கௌரவமா? நீ என்ன காரியம் செய்திருக்கே. பைத்தியம் பிடிச்சுடுச்சா?”*

*ஆனந்தவல்லி மகன் கோபத்தைப் பொருட்படுத்தவில்லை. கனகதுர்காவிடம் சொன்னாள். ”இப்படித் தான் என் மூத்த மகனும் சில நாள்னு அந்த தோட்ட வீட்டுக்குப் போனான். சிவலிங்கம் அவனைத் தன் பக்கம் இழுத்துகிச்சு. போனவனைத் திரும்ப கூட்டிகிட்டு வர பெத்தவ பாசம் பத்தலை... இவன் போகிறவன் ஒரேயடியாய் சிவலிங்கம் பின்னால போயிடாமல் திரும்ப வரணும்னா அந்தப் பொண்ணால தான் முடியும். அதுக்கு அவங்க ரெண்டு பேரும் மனசு விட்டுப் பேசணும்.... சுமுகமாயிடணும்... அதுக்கு இது தான் ஒரே வழின்னு தோணுச்சு...”*

*கனகதுர்காவிற்கு என்ன நினைப்பது என்று தெரியவில்லை. மகன் அதை எப்படி எடுத்துக் கொள்வான் என்று பயந்தாள்.*

*நேரம் போய்க் கொண்டிருந்தது. ஆனந்தவல்லி முகத்தில் லேசாய் புன்னகை அரும்ப ஆரம்பித்தது. நீண்ட நேரம் கழித்து ஈஸ்வர் கோபத்துடன் வந்த போது சங்கரின் பதக்கங்களை எல்லாம் முதல் தடவை பார்ப்பது போல் ஆனந்தவல்லி பார்த்துக் கொண்டிருந்தாள்.*

*ஈஸ்வர் பரமேஸ்வரனைக் கேட்டான். “உங்கம்மாவுக்கு அறிவே இல்லையா?”*

*கனகதுர்கா மகனைக் கடிந்து கொண்டாள். “என்னடா பெரியவங்களை இப்படி எல்லாம் பேசிகிட்டு..”*

*“நீ சும்மா இரும்மா. பெரியவங்க மாதிரியா இவங்க நடந்துக்கிறாங்க. எனக்கு அப்படியே கழுத்தை நெறிச்சுடலாம் போல இருக்கு”*

*பரமேஸ்வரன் சொன்னார். “செய். பல பேர் பல தடவை நினைச்சது தான் அது.” ஆனந்தவல்லி மகனை முறைத்தாள்.*

*ஈஸ்வருக்கு, குறும்பு செய்து விட்டு ஒன்றும் தெரியாத சாது போல் நடிக்கும் குறும்புக் குழந்தையை ஆனந்தவல்லி நினைவுபடுத்தினாள். அவள் இல்லா விட்டால் இன்னேரம் விஷாலியுடன் இருந்த பிணக்கு இன்னும் சரியாக வாய்ப்பு இல்லை என்றாலும் சில நிமிஷங்களுக்காவது அவனைக் கதிகலங்க வைத்த ஆனந்தவல்லியை சின்னக் கோபத்தோடு ஈஸ்வர் நெருங்கினான்.*

*“ஏண்டா சாக வேண்டாம்னு சொல்லிட்டு வர இவ்வளவு நேரமா?” ஆனந்தவல்லி கேட்க ஈஸ்வர் அவள் கழுத்தை நெறிப்பது போல் நடித்துக் கை வைக்க ஆனந்தவல்லி சளைக்காமல் கேட்டாள். “விஷாலி போட்டுட்டிருக்கற செண்ட் மணம் உன் கிட்ட இருந்து எப்படி வருது?”*

*ஈஸ்வர் முகம் வெட்கத்தில் சிவந்தது. அவள் கழுத்தை செல்லமாக நெறிக்க, ஆனந்தவல்லி கொள்ளுப் பேரனைக்*

*குறும்புப் பார்வை பார்த்தாள். பரமேஸ்வரனுக்கு மீண்டும் தந்தை நினைவுக்கு வந்தார். மகன் வெட்கத்தை ரசித்த கனகதுர்காவிற்கு ஈஸ்வர் ஆனந்தவல்லியிடம் அவ்வளவு உரிமை எடுத்துக் கொள்வது ஆச்சரியமாக இருந்தது. சங்கர் தன் பாட்டியை யாரும் நெருங்க முடியாத கண்டிப்பான நபராக விவரித்திருந்தார். அவர் மகன் இந்த வீட்டில் எப்படிப்பட்ட மாற்றங்களை வரவழைத்திருக்கிறான்!...*

**************

*மீனாட்சி சந்தோஷம் தாளாமல் கணவரிடம் ஓடி வந்தாள். "என்னங்க உங்களுக்கு விஷயம் தெரியுமா?"*

*"என்ன மீனாட்சி?"*

*"நம்ம ஈஸ்வரும் விஷாலியும் காதலிக்கிறாங்களாம்... பாட்டி அவங்க ரெண்டு பேர் கல்யாணத்தை சீக்கிரமாவே செஞ்சுடணும்னு அப்பா கிட்ட சொல்லிகிட்டு இருக்காங்க... தென்னரசு அண்ணன் டெல்லியில இருந்து திரும்பி வந்ததும் பேசலாம்னு அப்பா சொல்றார். எனக்கு ரொம்பவே சந்தோஷமாய் இருக்குங்க"*

*விஸ்வநாதனுக்கு மகன் நினைவு வந்தது. அவனுக்காக மனம் கதறியது. எந்தப் பெண்ணை அவன் திருமணம் செய்வதற்கு அவன் தாத்தா சம்மதம் தெரிவிக்க மாட்டார் என்று நினைத்து இத்தனை காலம் அதைத் தெரிவிக்காமலேயே இருந்தானோ, அதே பெண்ணை இன்னொரு பேரனுக்குத் திருமணம் செய்து வைக்க அந்தத் தாத்தா முடிவெடுத்திருக்கிறார். அவன் எப்படித் தாங்குவான் என்று அவர் வேதனைப்பட்டார். அது தெரியாமல் மீனாட்சி சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறாள்.*

மகேஷ் இப்போது இங்கு இல்லாமல் இருப்பது துரதிர்ஷ்டமே என்று தோன்றியது. மிக முக்கியமான நேரங்களில் எல்லாம் அவன் இங்கிருப்பதில்லை. பரமேஸ்வரனுக்கு மாரடைப்பு வந்த போதும் அவன் இங்கு இல்லை. அவன் காதலிக்கு அவன் வெறுக்கும் நபருடன் திருமணம் தீர்மானமாகிக் கொண்டிருக்கிறது. இப்போதும் அவன் இங்கு இல்லை.

வரலாறு திரும்பத் திரும்ப ஒரே மாதிரி வருகிறது என்று நினைத்துக் கொண்டார். கல்லூரி நாட்களில் அவர் சங்கரைப் பார்த்து நிறைய பொறாமைப்பட்டிருக்கிறார். நல்ல குணம், அசாத்திய அறிவு, தன்னடக்கம், அளவில்லாத செல்வம் அத்தனையும் இருந்த சங்கரை கல்லூரி ஆசிரியர்களும், சக மாணவர்களும் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு ஆடாத குறை தான். சங்கர் முன்னால் மற்றவர்கள் எல்லாரும் களையிழந்து போனார்கள். அதனால் நண்பனாகப் பழகினாலும் உள்ளூர சங்கர் மீது தீராத வயிற்றெரிச்சல் அவருக்கு இருந்தது.

சங்கர் காதல் திருமணம் செய்து கொண்டு நிரந்தரமாய் சென்ற பின், சங்கரின் தங்கையைத் திருமணம் செய்து கொண்டு வந்த பிறகு, சங்கரை வென்று விட்டது போல் ஒரு எண்ணம் அவருக்கு ஏற்பட்டிருந்தது. அவருக்கு ஒரு மகன் பிறந்து அவன் மீது பரமேஸ்வரன் பாசமழை பொழிந்த போது ஒரு தைரியம் பிறந்திருந்தது. இனி பயப்படத் தேவையில்லை என்று நினைத்திருந்தார். ஆனால் ஈஸ்வரின் வரவில் எல்லாம் மாறி சரித்திரம் திரும்பி விட்டது. அவர் மகனும் அவரைப் போலவே உயர முடியாத அளவுக்கு ஒரு எதிரியை சம்பாதித்து விட்டிருக்கிறான். அறிவு, பாசம், சொத்து, காதல் என்று எல்லா விதங்களிலும் அவன் ஈஸ்வரால் தோற்கடிக்கப் பட்டிருக்கிறான்....

மகேஷிற்கு நிறைய சம்பாதிக்க வேண்டும், புகழ் பெற வேண்டும் என்கிற ஆசை நிறைய இருக்கின்றது. சமீப காலங்களில் பல முறை விஸ்வநாதனிடம் அவன் சொல்லி இருக்கிறான். “அப்பா! தாத்தா சொத்தெல்லாம் ஒன்னுமே இல்லைன்னு சொல்ற அளவுக்கு நான் சம்பாதிச்சுக் காட்டறேன் பாருங்க...”

அப்படிச் சொன்னானே ஒழிய பெரியதாய் அவனுக்குத் தொழில் நுட்பங்கள் தெரிந்திருக்கவில்லை. கம்ப்யூட்டர், சாஃப்ட்வேர் ஆகியவற்றில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தானே ஒழிய மற்றபடி பெரிய சாமர்த்தியம் எதிலும் இருக்கவில்லை. அடிக்கடி நண்பர்களிடம் போவது, இரவு வேளைகளிலும், நாட்கணக்கிலும் எங்கேயோ கழிப்பது எல்லாம் அவருக்கு கவலையைத் தந்தது. ஆனால் அவனுக்கு பெரிய இடத்து நண்பர்கள் இருப்பதாகச் சொன்னான். இந்தியாவிலேயே மிகப் பெரிய பணக்காரர்களில் ஒருவரான பாபுஜி கூடத் தனக்கு நண்பர் என்று சொன்னான். அவருக்கு நம்பக் கஷ்டமாக இருந்தபோது தன் செல் போனில் இருந்த பாபுஜியின் எண்ணைக் கூடக் காட்டினான். அவர் முன்னாலேயே போனில் பாபுஜியிடம் பேசினான்....

சில நாட்களாக ஆகாயக் கோட்டை கட்டி அதில் வாழ்ந்து கொண்டிருக்கும் மகேஷின் அஸ்திவாரத்தையே ஈஸ்வர் கலைத்துக் கொண்டிருக்கிறான். மற்றவற்றையாவது அவன் தாங்கிக் கொள்ள முடியலாம். ஆனால் காதல் விஷயத்தில் அவனால் தாங்க முடியும் என்று தோன்றவில்லை. உடனடியாகப் போன் செய்து விஷயத்தைச் சொல்லலாமா என்று நினைத்த விஸ்வநாதன் பிறகு எண்ணத்தை மாற்றிக் கொண்டார். அவனாகப் போன் செய்தால் சொன்னால் போதும் என்று தோன்றியது. கோவாவில் ஜாலியாக இருக்கும் இந்த சில நாட்களாவது அவனுக்கு மிஞ்சட்டும்.

**************

குருஜி  தன்னை விதியின் நாயகனாக உணர்ந்தார். இது வரை அவர் அறிந்ததும் அனுமானித்ததும் விசேஷ மானஸ லிங்கத்தைப் பொறுத்த வரையில் மிகச்சரியாகவே இருக்கிறது. ஆர்க்கிமிடிஸ் சொன்னது அவருக்கு நினைவுக்கு வந்தது. ”நான் நிற்க ஒரு இடமும், ஒரு சரியான நெம்புகோலும் எனக்குக் கிடைத்தால் நான் இந்த பூமியையே அசைத்துக் காட்டுவேன்”

குருஜிக்கு சரியான ஒரு இடமும் கிடைத்திருக்கிறது. விசேஷ மானஸ லிங்கம் என்ற நெம்புகோலும் கிடைத்திருக்கிறது. அவர் இந்த உலகத்தையே நகர்த்தி சரியான விதத்தில் நிறுத்தப் போகிறார். சரித்திரத்தில் நிரந்தரமான இடத்தைப் பிடித்து விடப் போகிறார்....

முதல் முதலில் விசேஷ மானஸ லிங்கம் பற்றி பாபுஜியிடமும், மற்ற அறுவரிடமும் அவர் சொன்ன போது அவர்கள் அதை இந்தியாவில் சொல்லப்படும் எத்தனையோ கற்பனைக் கதைகளில் ஒன்று என்று தான் அதை நினைத்தார்கள். இந்திய சித்தர்கள் விஞ்ஞானத்திற்கு யூகிக்கவும் முடியாத எத்தனையோ சித்திகளை விளையாட்டாகச் செய்து விடக் கூடியவர்கள் என்பதை விளக்கினார். சிறு வயதில் இருந்து அவர் அறிந்திருந்த ஒருசில சித்தர்களின் அபூர்வ சக்திகள் பற்றியும் சொன்னார். கேட்ட பின் அவர்கள் பிரமித்தார்கள். அப்படிப்பட்ட பல நூறு சித்தர்கள் தங்கள் சக்திகளை ஆவாகனம் செய்து உருவாக்கிய அந்த விசேஷ மானஸ லிங்கத்தின் சக்திகளின் அளவு, ஒரு மனிதன் காண முடிந்த கற்பனையின் அளவு தான் என்று அவர் சொன்னார்.

சித்தர்களின் சக்தியையாவது அவர்களில் சிலரால் ஒத்துக் கொள்ள முடிந்தது. ஆனால் சித்தர்கள் உருவாக்கிய விசேஷ மானஸ லிங்கத்தின் சக்தியை அவர்களால் நிஜம் என நம்ப முடியவில்லை. பின் தான் அவர்களிடம் சில ஆராய்ச்சிகள் மூலம் அதை

*நிரூபிப்பதாக அவர் சொன்னார். பின் அன்று அவர்களிடம் உணர்ச்சி பூர்வமாக குருஜி சொன்னார்.*

*“நண்பர்களே நீங்க அட்லாண்டிஸ் என்ற தீவைப் பத்தி கேள்விப்பட்டிருக்கீங்களா? அது 11000 வருஷங்களுக்கு முன்னாடியே சிறப்பாய் இருந்ததாய் ப்ளேடோங்கிற கிரேக்க ஞானி சொல்லி இருக்கார். உலகத்துல மத்த பகுதிகள்ல மனிதர்கள் காட்டு மிராண்டிகளாய் வாழ்ந்துட்டு இருந்த காலத்துல அந்தத் தீவில் வாழ்ந்த மனிதர்கள் மட்டும் அந்த காலத்துலயே அறிவாளிகளாவும், நாகரிகத்துல சிறந்தவங்களாவும் இருந்ததா சொல்லிக்கிறாங்க. அந்தத் தீவு பிற்காலத்துல கடல்ல மூழ்கி அழிஞ்சுடுச்சுன்னு சொல்றாங்க. அய்ன் ரேண்ட் எழுதின “அட்லாஸ் ஷ்ரக்டு”ல கூட அந்த அட்லாண்டிஸ் தீவு ஞாபகார்த்தமா எல்லா அறிவாளிகளும் சேர்ந்து அட்லாண்டிஸ் என்கிற இடத்தை உருவாக்கி அங்கே வாழற மாதிரி கற்பனையில் எழுந்தியிருந்ததை நீங்க படிச்சிருக்கலாம். அந்தக் கற்பனையை நிஜமாக்கணும்னு நான் ஆசைப்படறேன்....”*

*”அந்தக் காலத்து ஞானிகள் இந்த காலத்தை அழிவையோ, பெரிய மாற்றத்தையோ உலகம் காணப்போகிற காலமாய் குறிச்சுட்டுப் போயிருக்காங்க. எச்சரிக்கையாய் இருக்கிறதா நினைச்சு விசேஷ மானஸ லிங்கம்கிற ஒரு மஹா சக்தியை ரகசியமாய் மறைச்சு வச்சுட்டு இருக்கிற முட்டாள்தனத்தை அந்த சிவலிங்கத்தை வச்சுகிட்டு இருக்கிறவங்க செய்றாங்க. நிறைய செய்ய வேண்டிய காலத்துல அதை முடக்கி வச்சுகிட்டு இருக்கறது என்ன புத்திசாலித்தனம்னு எனக்குத் தெரியலை. உலகம் அழிவை நோக்கிப் போய்கிட்டு இருக்கிற இந்தக் காலத்துல கூட விசேஷ மானஸ லிங்கத்தை உபயோகப்படுத்தலைன்னா அது முட்டாள்தனம்னு நான் நினைக்கிறேன். அதுக்காகத் தான் அதை முதல்ல என் வசமாக்கிக்கப் போறேன். இந்த உலகத்தை வழிநடத்தப் போறேன்...”*

“உலகத்துல எப்பவுமே முட்டாள்கள் தான் அதிகம்.. ஆட்டு மந்தைக் கூட்டம்... அவங்களை வழி நடத்த எப்பவுமே புத்திசாலிகள் தேவை... ஒருசில பேர் புத்திசாலித்தனத்துல தான் எல்லா நல்லதும் உலகத்துல இது வரைக்கும் நடந்திருக்கு. சிந்திக்கத் தெரிஞ்ச அறிவாளிகள் இல்லைன்னா எந்த முன்னேற்றமும் இங்கே இல்லை. நீங்க எல்லாம் அறிவாளிங்க. உங்க நாடுகள்ல நல்ல செல்வாக்கோடவும் இருக்கீங்க. சக்தி வாய்ந்தவங்களா இருக்கீங்க. அதனால என்னோட முயற்சில உங்களையும் பங்கெடுக்க கூப்பிடறேன்....”

அன்று குருஜி தொடர்ந்து நிறைய நேரம் பேசினார். விசேஷ மானஸ லிங்கத்தின் உதவியோடு உலக அளவில் எதிர்பார்க்கும் மாற்றங்களைச் செய்ய அவருக்குத் துணையாக இருக்க உலக நாடுகளில் பிரதிநிதிகள் தேவை என்று கருதினார். ஆரம்பமாய் ஆறு நாடுகளின் பிரதிநிதிகளாய் அவர்களை அவர் நினைத்தார். முதலிலேயே சக்தி வாய்ந்தவர்களாக இருக்கும் இவர்கள், விசேஷ மானஸ லிங்கத்தின் உதவியும் கிடைத்து விட்டால் பல அற்புதங்களை நிகழ்த்தலாம், வரலாற்றில் இடம் பெறலாம் என்பதை சக்தி வாய்ந்த வார்த்தைகளில் சொன்னார். அவர்களை விதியின் பிரதிநிதிகளாய் மாறத் தயாராக இருக்கச் சொன்னார். அவர் பேசும் போது அங்கிருந்த பாபுஜி தானும் அதில் பங்கு பெற ஆசைப்பட்டு தன்னை இணைத்துக் கொண்டார். ஆழ்மன ஆராய்ச்சிகளுக்கு ஆகும் செலவை, தான் ஏற்றுக் கொள்வதாகச் சொன்னார்.

அவர்கள் அறுவரும் மந்திரத்தால் கட்டுப்பட்டவர்கள் போல குருஜி சொன்னதைக் கேட்டார்கள். கேட்க நன்றாக இருந்தாலும் அது எந்த அளவு சாத்தியமாகும் என்பது அவர்களுக்கு கேள்விக்குறியாகவே இருந்தது என்பது அவர்கள் முகபாவத்தில்

இருந்தே தெரிந்தது. அதில் அவர் தவறு காணவில்லை. அவர் அளவுக்கு அவர்களுக்கு பிரபஞ்ச ரகசியங்களில் ஞானம் இல்லை. அவருடைய அனுபவங்களும் அவர்களுக்கு இல்லை. ஒரு நாள் அவர்களுக்குப் புரியும் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது.

அந்த நாள் தற்போது நெருங்கி விட்டதாக குருஜி நினைத்தார். அவர் கணக்கு சரியே என்று விசேஷ மானஸ லிங்கம் இப்போது நிரூபித்து விட்டது. நான் வந்து விட்டேன். என்னை வைத்து நீ என்ன செய்கிறாயோ செய்து கொள் என்று அது அனுமதியும் கொடுத்து விட்டது என்று அவருக்குத் தோன்றியது. இந்த நல்ல சந்தர்ப்பம் வர அவரும் சில தவறுகள் செய்ய வேண்டி வந்தது. ஆனால் அவருக்கு வேறு வழியை விசேஷ மானஸ லிங்கத்தின் பாதுகாவலர்கள் விட்டு வைக்கவில்லை. உலகத்தின் ஒட்டு மொத்த நன்மைக்காக ஒருசிலருக்குத் தீமைகள் செய்ய வேண்டி தான் வருகிறது, என்ன செய்வது?.....

சிறிது நேரத்தில் குருஜியின் அறைக்கு ஜான்சன், பாபுஜி, தென்னரசு, மகேஷ் நால்வரும் வந்தார்கள். குருஜியும், ஜான்சனும் அடுத்த ஆராய்ச்சிக்கு எதைத் தேர்ந்தெடுக்கலாம் என்று விவாதிக்க ஆரம்பித்தார்கள். பாபுஜி, தென்னரசு, மகேஷ் மூவரும் பரபரப்புடன் அதைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். நடந்து முடிந்த ரோஜா மணம் ஆராய்ச்சிக்குப் பின் ஒரு பெரிய எதிர்பார்ப்பு அவர்களிடமும் ஏற்பட்டிருந்தது.

ஜான்சன் நடந்ததற்கு அடுத்த மேல் நிலையில் உள்ள சின்ன ஆராய்ச்சி செய்யலாம் என்று அபிப்பிராயப்பட்டார். ஆனால் குருஜியோ இந்த தடவை பெரியதாகச் செய்து எல்லாரையும் அசத்த வேண்டும் என்று ஆசைப்பட்டார். பல்லாயிரம் கோடி ரூபாய் அக்கவுண்டில் இருக்கையில் கஞ்சத்தனமாய் சில ஆயிரம் ரூபாய்க்கு

செக் எழுதி அதைச் செலவழிப்பதில் திருப்தி இல்லை என்று சொன்னார். அவர் அளவுக்கு நம்பிக்கை ஜான்சனுக்கு இருக்கவில்லை. கடைசியில் ஜான்சன் குருஜி வழிக்கே வந்தார். முயன்று பார்ப்பதில் தவறில்லை. ”சரி குருஜி நீங்கள் சொல்ற மாதிரியே கொஞ்சம் பெரிய ஆராய்ச்சியே செய்யலாம். என்ன செய்யலாம்னு நீங்களே சொல்லுங்கள்”

“என்ன செய்கிறோமோ அது உலக அளவுல எல்லோருக்கும் தெரிகிற சம்பவமாய் இருக்கணும்...” என்று சொல்லி விட்டு குருஜி யோசித்தார், அவர் பார்வை பக்கத்தில் இருந்த தினசரிப் பத்திரிக்கையின் தலைப்புச் செய்தியில் தங்கியது.

சோமாலியக் கடற்கொள்ளையர்கள் கேட்ட பணயத் தொகையைத் தந்து தங்கள் கப்பலையும், அதிலிருந்த 64 இந்தியர்களையும் மீட்க இந்தியா ஒப்புக் கொண்டது என்று நம்பத் தகுந்த வட்டாரங்கள் மூலம் தெரிவதாகவும், அந்தப் பணயத் தொகை எவ்வளவு என்று தெரிவிக்க அதிகாரிகள் மறுத்து விட்டதாகவும் எழுதி இருந்தார்கள். ஒரு வாரத்திற்கு முன்பு தான் செங்கடல் அருகே சோமாலியக் கடற்கொள்ளையர்களால் இந்தியக் கப்பல் கைப்பற்றப்பட்டிருந்தது.

சில ஆண்டுகளுக்கு முன் உலகநாடுகள் பலவும் சேர்ந்து அந்தப் பகுதியில் ஒரு கூட்டு கடல் ரோந்துப்படையை உருவாக்கி இருந்ததன் காரணமாக, சோமாலியக் கடற்கொள்ளையர்கள் இரண்டு ஆண்டுகளாக பெரிய அளவில் இயங்காமல் மறைவாக இருந்தார்கள். அதனால் கூட்டு கடல் ரோந்துப்படையில் இருந்த ஆட்கள் கணிசமாகக் குறைக்கப்பட்டிருந்தனர். அதைப் பயன்படுத்திக் கொண்டு அந்தக் கடற்கொள்ளையர்கள் துணிகரமாக இப்போது செயல்பட்டிருக்கிறார்கள். அமெரிக்கா,

இங்கிலாந்து, ரஷியா, சீனா உட்பட பல நாடுகள் அதற்குக் கண்டனம் தெரிவித்திருந்தன.....

குருஜி புன்னகையுடன் கேட்டார். “அந்தக் கடற்கொள்ளையர்களைத் தண்டிக்க நாம் முயற்சி எடுக்கலாமா?”

அவர்கள் புரியாமல் குருஜியைக் குழப்பத்துடன் பார்த்தார்கள். குருஜி சொன்னார். “நம் விசேஷ மானஸ லிங்கத்தின் சக்தி செங்கடல் வரை போய் சோமாலியக் கடற்கொள்ளையர்களைத் தண்டிக்கிறதா என்று ஆராய்ந்து பார்க்கலாமா?”

ஜான்சனுக்கும் மற்றவர்களுக்கும் விசேஷ மானஸ லிங்கத்திடம் இருந்து அநியாயத்திற்கு அதிகமாய் குருஜி எதிர்பார்ப்பதாகத் தோன்றியது.

# அத்தியாயம் - 79

அன்று நள்ளிரவு வரை ஈஸ்வரும் விஷாலியும் மொட்டை மாடியில் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குப் பேசிக் கொள்ள நிறைய இருந்தது. ஒருவரைப் பற்றி ஒருவர் தெரிந்து கொள்ள நிறைய இருந்தது. காதலிக்க ஆரம்பித்திருக்கிறோம் என்பதை எப்போது உணர்ந்து கொண்டோம் என்பதில் இருந்து ஊடலின் போது எப்படி எல்லாம் வேதனைப்பட்டோம் என்பது வரை ஒருவருக்கொருவர் ஒளிவு மறைவில்லாமல் பகிர்ந்து கொண்டார்கள். ஆனால் அப்போதும் கூட மகேஷ் சொல்லித் தான் ஈஸ்வரைத் தவறாக நினைத்தேன் என்பதை விஷாலி தெரிவிக்கவில்லை. நினைவு தெரிந்த நாளில் இருந்து அவளுக்கு நல்ல நண்பனாக இருந்தவனைக் காதலனிடம் கூடக் காட்டிக்

*கொடுக்க அவள் மனம் ஒப்பவில்லை. இன்னமும் மகேஷ் மீது அவளுக்கு அளவு கடந்த கோபம் இருக்கத் தான் செய்தது. ஆனாலும் அது தனியாக அவனைத் திட்டித் தீர்க்க வேண்டிய விஷயமாகத் தான் விஷாலி வைத்திருந்தாள்...*

*ஈஸ்வரும் விசேஷ மானஸ லிங்கம் பற்றிய நடப்பு விவரங்களை மட்டும் அவளிடம் தெரிவிக்கவில்லை. சொல்ல ஆரம்பித்தால் அதுவே நிறைய நேரத்தை எடுத்துக் கொள்ளும், மற்ற எதைப் பற்றியும் சொல்லவோ கேட்கவோ நேரம் இருக்காது என்று அவன் நினைத்தான். அவனுக்கு அவள் தங்களுக்குள் விரிசல் ஏற்படக் காரணமான மகேஷை காட்டிக் கொடுக்காதது பற்றிச் சின்ன மனத்தாங்கல் இருந்தது. ஆனால் அவள் தன் பிள்ளைப் பிராய நினைவுகளை அவனுடன் பகிர்ந்து கொண்ட போது மகேஷ் எப்படி எல்லாம் அவளுக்கு எத்தனையோ விட்டுக் கொடுத்திருக்கிறான் என்பதையும் சேர்த்து தெரிவித்தாள். ஈஸ்வருக்கு மகேஷை அவள் காட்டிக் கொடுக்காததன் காரணம் புரிந்தது.*

*மற்றபடி நிறைய பேசினார்கள். பேசி முடியாது என்று தோன்றிய போது பேச்சை நிறுத்தி கை கோர்த்துக் கொண்டு ஆகாயத்தின் நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டே அந்த மௌனத்தையும், வீசிக் கொண்டிருந்த சில்லென்ற காற்றையும் ரசித்தார்கள். அவர்களுடைய மனங்கள் நிறைந்திருந்த போதும் லேசாக இருப்பதாக உணர்ந்தார்கள்....*

*உறங்கக் கிளம்பிய போது அவள் கேட்டாள். ”நாளைக்குப் போனால் எப்ப வருவீங்க?”*

*“தெரியலை விஷாலி. ஆனா இது எனக்கு ஒரு முக்கியமான ஆராய்ச்சி. அதனால முடிக்காமல் வர மாட்டேன்... அந்த ஆராய்ச்சி பத்தி வந்ததுக்கப்புறம் உனக்கு விவரிச்சு சொல்றேன்...”*

*மறு நாள் அதிகாலையில் அவன் கிளம்பிய போது அவனுக்குள் திடீரென்று ஒரு இனம் புரியாத பயம் ஏற்பட்டது. ஒரு பெரிய ஆபத்து அவனுக்காகக் காத்திருப்பது போலத் தோன்றியது. இது நாள் வரை அப்படி அவன் எப்போதும் உணர்ந்ததில்லை. இது வெறும் ஆராய்ச்சியாக மட்டும் இருக்கப் போவதில்லை என்று அவன் உள்ளுணர்வு எச்சரித்தது.*

*சிறிது யோசித்து விட்டு ஆனந்தவல்லி அறைக்குப் போனான். ஆனந்தவல்லி கேட்டாள். “என்னடா?”*

*“பரண்ல தாத்தாவோட பழைய டிரங்குப் பெட்டில அந்த சிவலிங்கத்தோட ஃபோட்டோவை அன்னைக்குப் பார்த்தேன். அதை எடுத்துட்டுப் போறேன்”*

*“என்ன வேணுமோ எடுத்துக்கோ”*

*அவன் போய் சிவலிங்கத்தின் புகைப்படத்தை எடுத்துக் கொண்டு வந்தான். இந்தக் குடும்பத்துக்கே மூத்தவளை, பசுபதியைப் பெற்றவளை வணங்கி ஆசி வாங்கி விட்டுப் போக அவனுக்குத் தோன்றியது. ஆனந்தவல்லியின் காலைத் தொட்டுக் கும்பிட்டான்.*

*“என்னடா, நேத்து கழுத்தை நெறிச்சே. இன்னைக்குக் காலைப் பிடிக்கறே?” என்று வாய் சொன்ன போதும் அவள் மனம் கொள்ளுப் பேரனுக்குப் பூரணமாக ஆசிர்வதித்தது.*

*****************

*ஜான்சன் ஹரிராம், கியோமி, அலெக்ஸி மூவருக்கும் அன்றைய ஆராய்ச்சிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் விஷயத்தை விளக்கிக் கொண்டிருந்தார். அதே நேரத்தில் குருஜியும் கணபதியிடம் அதையே விளக்கிக் கொண்டிருந்தார். கணபதியை இந்த ஆராய்ச்சியில் சேர்த்துக் கொள்வது இரண்டு விதங்களில் நல்லது என்று குருஜி நினைத்தார். முதலாவதாக இந்த அளவு பெரிய ஆராய்ச்சியில் அவனும் பங்கு கொள்வது ஆராய்ச்சியின் வெற்றிக்குக் கண்டிப்பாக உதவியாக இருக்கும். இரண்டாவதாக கணபதி வேறு ஏதாவது விதங்களில் இடைஞ்சல் செய்யாமல் இருப்பான்.*

*சோமாலியக் கடற்கொள்ளைக்காரர்களை அழிப்பது தான் இந்த ஆராய்ச்சி என்று கேள்விப்பட்டவுடன் கணபதிக்கு வருத்தமாக இருந்தது. ”ஏன் குருஜி அவங்களைக் கூப்பிட்டுப் புத்திமதி சொன்னா திருந்த மாட்டாங்களா?”*

*குருஜி அவனையே பார்த்தார். பின் சொன்னார். “புத்திமதி சொல்லியே மனுஷங்களை திருத்திட முடியும்னா இந்த உலகம் இப்படி இருக்கவே இருக்காதேப்பா”. பின் அந்த கடற்கொள்ளையர்களை விட்டு வைத்தால் அவர்கள் இது போல பல கப்பல்களைக் கடத்துவார்கள், பலர் உயிரைப் பறிப்பார்கள் என்றெல்லாம் சொல்லிப் புரிய வைத்தார். குருஜி சொன்னால் சரியாகத் தான் இருக்கும் என்று கணபதி நினைத்தான். ’புராணங்களிலேயே அரக்கர்களை அப்படித் தான் பகவான் அழிச்சார்னு படிச்சிருக்கோமே’*

ஆராய்ச்சி நுணுக்கங்களை அவனுக்குச் சொல்லித் தர முடியாது என்று நினைத்த குருஜி அவனிடம் அந்தக் கெட்டவர்கள் அழிய வேண்டும் என்று நினைத்து அவர்கள் அழிவதை நேரில் பார்ப்பது போலக் கற்பனை மட்டும் செய்யச் சொன்னார். கணபதி தலையசைத்தான்.

ஜான்சன் அந்த மூவரிடம் சொல்லிக் கொண்டிருந்தார். ”... நீங்கள் விளைவுகளை மட்டும் நினையுங்கள். அந்த விளைவுகள் எந்த முறையில் நடக்க வேண்டும் என்றெல்லாம் நினைக்க வேண்டாம். என்ன ஆக வேண்டும் என்று மட்டும் நீங்கள் சொன்னால் போதும், விசேஷ மானஸ லிங்கம் எப்படி என்பதை அதுவாகவே தீர்மானித்து செயல்படுத்தி விடும்...”

ஜான்சன் கண்டிப்பாக வெற்றி அடையக்கூடிய ஆராய்ச்சி என்பது போல தன்னம்பிக்கையை வெளிப்படுத்திப் பேசினாரே ஒழிய அவருக்கு உள்ளே இன்னும் சந்தேகம் இருந்தது. சோமாலியக் கடற்கொள்ளையர்கள் பெரும்பாலும் செங்கடல் (Red Sea) ஏடன் வளைகுடா (Gulf of Aden) பகுதிகளில் தான் இருப்பார்கள் என்று சொல்லி அந்தப் பகுதிகளின் வரைபடத்தையும் கணபதிக்கும், அந்த மூவருக்கும் காட்டினார். அந்தக் கடற்கொள்ளையர்கள் சிலரின் புகைப்படங்களையும் காட்டினார். பிறகு அந்தக் கடற்கொள்ளையர்களின் புகைப்படங்களும், செங்கடல்-ஏடன் வளைகுடா பகுதி வரைபடமும் எல்லோரும் பார்க்க வசதியாக இருந்த சுவரில் பெரிய சைஸில் ஒட்டவைக்கப்பட்டன.

அவர்கள் ஆராய்ச்சி ஆரம்பமானது.... குருஜி உட்பட நான்கு பேரும் முதல் நாள் போலவே அமர கணபதி சிவலிங்கம் அருகே உட்கார்ந்து கொண்டான். அவனுக்கு அந்த மெஷின்களை

அவர்களைப் போல மாட்டிக் கொள்ளப் பிடிக்கவில்லை. குருஜி அவனை வற்புறுத்தவில்லை. நான் சொன்னது போல நீ நினைத்தால் போதும் என்று சொல்லி விட்டார்.

**************

ஈஸ்வர் தோட்ட வீட்டுக்குச் சென்ற போது அவனுக்காக பார்த்தசாரதி தோட்டத்தில் காத்துக் கொண்டிருந்தார். அவருக்கு ஈஸ்வர் என்ன செய்வான் என்பதை அறிய ஆவலாக இருந்தது. அந்த குறி சொல்லும் கிழவி வீட்டில் இருந்து வரும் போது அவன் சித்தர்களைப் பற்றியும், அமானுஷ்யமான விஷயங்களைப் பற்றியும் மேலும் அதிகமாக அறிவியல் ரீதியாக அவரிடம் பேசினான். தன் ஆராய்ச்சிகளைப் பற்றி விளக்கமாகச் சொன்னான். அவருக்குக் கேட்கவே பிரமிப்பாக இருந்தது.

பார்த்தசாரதிக்கு அவனிடமிருந்த நேர்மையும், எதையும் அதிகப்படுத்தியோ, குறைத்தோ சொல்லாமல், இருப்பதை இருப்பது போலச் சொல்ல முடிந்த தன்மையும் மிகவும் பிடித்திருந்தது. மற்றவர்களை வைத்து ஆராய்ச்சிகளை நடத்துபவனாக மட்டுமே தான் இருந்திருப்பதாகவும், பங்கெடுத்துக் கொண்டவனாக எப்போதும் இருந்ததில்லை என்றும் வெளிப்படையாகச் சொல்லவும், தன் முயற்சிகள் எந்த அளவு வெற்றி பெறும் என்று தெரியவில்லை என்று சொல்லவும் அவனுக்குத் தயக்கம் இருக்கவில்லை....

இன்று அவன் வந்த போது அவனிடம் ஒரு தெளிவும், அமைதியும் கூடுதலாக இருப்பதாக அவருக்குத் தோன்றியது. விஷாலியிடம் இருந்த பிணக்கு தீர்ந்ததே அவனுக்குப் பெரிய ஆசுவாசத்தை ஏற்படுத்தி இருந்ததால் அவருக்குத் தோன்றியபடியே தான் அவன் இருந்தான். ஏதோ ஆபத்து காத்திருக்கிறது என்று

உள்ளுணர்வு எச்சரித்ததைக் கூட அங்கு போய் சேர்வதற்கு முன் அவன் அலட்சியப்படுத்தி இருந்தான்.

அந்த அதிகாலை நேரத்தில் அவனுக்கு முன் வந்து அவர் காத்திருந்தது நெகிழ்வாக இருந்தது. “குட் மார்னிங் சார். வந்து நேரமாச்சா?”

”இல்லை. அஞ்சு நிமிஷம் தான் ஆச்சு” என்றார் பார்த்தசாரதி.

”சார், நீங்க நாள் முழுசும் என்னோடேயே இருக்கணும்னு இல்லை. போரடிச்சா தாராளமா போய்க்கலாம். ஆனா இடையில எப்பவாவது வந்து பார்த்துட்டு போங்க. போதும்...” ஈஸ்வர் சொல்ல பார்த்தசாரதி சரியென்றார்.

தோட்டத்தில் இருந்து வீட்டுக்குள் நுழையும் முன் வாசலைத் தொட்டுக் கும்பிட்டு விட்டு ஈஸ்வர் உள்ளே நுழைந்தான். அந்தக் கணத்தில் இருந்தே ஒரு புதிய ஈஸ்வரை பார்த்தசாரதி பார்க்க ஆரம்பித்தார். அமெரிக்காவில் பிறந்து வளர்ந்த ஒரு உலகப் புகழ் பெற்ற மனவியல் ஆராய்ச்சியாளனாக அவன் தெரியவில்லை. மிகுந்த பயபக்தியுடன் ஒரு புனிதமான இடத்தில் இறைவனை வரவேற்கத் தயாராக இருக்கும் பக்தன் போல இயங்கினான்.

முதல் வேலையாகக் குளித்து விட்டு வந்து சிவலிங்கம் இருந்த பூஜை அறையையும், அதற்கு வெளியே இருந்த ஹாலையும் தானே தரையைப் பெருக்கி சுத்தம் செய்தான். பூஜை அறையில் ஒரு நோட்டுப் புத்தகத்தையும் பேனாவையும் வைத்தான். மீண்டும் கைகால் கழுவிக் கொண்டு வந்து பயபக்தியுடன் விசேஷ மானஸ

*லிங்கத்தின் புகைப்படத்தை எடுத்து பூஜை அறையில் வைத்தான். சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி மானசீகமாகச் சொன்னான்.*

*"கடவுளே, எல்லாத்தையும் உதறித்தள்ளிட்டு நீயே கதின்னு இந்த இடத்துக்கு வந்து சாகற வரைக்கும் உன்னைப் பிரியாமல் இருந்த என் பெரிய தாத்தாவின் பக்திக்கோ, கடவுளை சிநேகிதன் மாதிரி நேசிக்க முடிஞ்ச கணபதியோட பக்திக்கோ நான் ஒரு நிமிஷ நேரத்துக்குக் கூட இணையாக முடியாதுன்னு எனக்குத் தெரியும். ஆனாலும் உன் நாடகத்துல எனக்கும் ஒரு பார்ட் இருக்குங்கறதால நான் அதைச் செய்ய வந்திருக்கேன்... என் குறைகளைப் பொறுத்துக்கோ. நான் என்ன செய்யணும்னு வழி காமி... ப்ளீஸ்."*

*மானசீகமாக பசுபதியையும், அக்னிநேத்ர சித்தரையும் வணங்கி விட்டு கண்களை மூடி ஈஸ்வர் அமர்ந்தான். மூச்சில் கவனம் வைக்க ஆரம்பித்தான். மூச்சு சீரானது. மூச்சு நீளமானது. மூச்சு ஆழமானது. மூச்சிலேயே ஐக்கியமானான். மெல்ல மூச்சில் இருந்து கவனத்தை எடுத்து விசேஷ மானஸ லிங்கத்தின் புகைப்படத்திற்குக் கொண்டு வந்தான். இடைப்பட்ட அரைக் கண நேரத்தில் மனக் கண்ணில் விஷாலி தெரிந்தாள். பின்னணியில் பாட்டும் ஒலித்தது.*

*உன் காதலில் கரைகின்றவன்*

*உன் பார்வையில் உறைகின்றவன்*

*உன் பாதையில் நிழலாகவே வருகின்றவன்*

*ஈஸ்வர் புன்னகையுடன் மானசீகமாகச் சொன்னான். "கடவுளே எனக்கு மிகவும் பிடித்த, நான் காதலிக்கிற உன் படைப்பைக் காட்டி இருக்கிறாய். சந்தோஷம். இனி உன்னைப் பார்க்க விரும்புகிறேன். நீ எங்கிருக்கிறாய்?"*

எதிர்பார்க்காத நேரத்தில் எல்லாம் வந்து அவனைத் திகைக்க வைத்த விசேஷ மானஸ லிங்கம் அவன் அழைக்கின்ற நேரத்தில் வர மறுத்தது. மாறாக அவன் மனதில் யாராரோ வந்து நின்றார்கள். குருஜியில் இருந்து, அவனிடம் ஐம்பது டாலர் கடன் வாங்கிய விர்ஜினியா பல்கலைக்கழக நூலக உதவியாளன் வரை அனாவசியமாக நினைவுக்கு வந்தார்கள். செய்ய வேண்டிய எத்தனையோ காரியங்கள் நினைவுக்கு வந்தன. விஷாலிக்கு விசா எப்போது கிடைக்கும் என்பதில் இருந்து, திருமணத்தைப் பற்றி தென்னரசுவிடம் எப்படிப் பேச வேண்டும் என்பது வரை இந்தக் கணமே தீர்மானிக்க வேண்டிய விஷயங்கள் போல முரண்டு பிடித்து மனதில் வந்து நின்றன.

மனதின் இயல்பை மற்றெவரைக் காட்டிலும் நன்றாக அறிந்திருந்த ஈஸ்வர் சலிக்காமல் அமைதியாக மனதைத் திரும்பத் திரும்ப விசேஷ மானஸ லிங்கத்திற்குக் கொண்டு வந்தான். மனதைப் பகைத்துக் கொண்டு எந்தக் காரியத்தையும் ஒருவன் சாதித்து விட முடியாது. அதே நேரத்தில் அது சொன்னதை எல்லாம் கேட்டு நடக்க வேண்டும் என்கிற அவசியமும் இல்லை. இப்போதைக்கு எது முக்கியம் என்று தீர்மானிப்பது மனிதனின் அறிவு தான் என்பதில் அவன் உறுதியாக இருந்தான்.

சிறிது சிறிதாக மனமே சலித்துப் போனது. எண்ணங்களின் ஓட்டம் குறைய ஆரம்பித்து பின் மனம் விசேஷ மானஸ லிங்கத்தின் படத்தில் லயிக்க ஆரம்பித்தது. சில நிமிடங்கள் கழித்து படம் திடீர் என்று அவன் பார்வையில் இருந்து மறைந்து வெற்றிடம் தான் தெரிந்தது. ஈஸ்வர் திகைத்தாலும் அது மனதின் லயிப்பைக் கலைக்காமல் பார்த்துக் கொண்டான். அதே இடத்தில் கவனத்தைக் குவித்து வைத்திருந்தான். மெல்ல ஓம் என்ற ஓங்கார நாதம் கேட்க ஆரம்பித்தது. அது மிக மென்மையாகவும், மிகத் தெளிவாகவும்

அவன் காதில் விழுந்தது. அவன் உதடுகளும் ஓங்காரத்தை அதே தாள லயத்தோடு உச்சரிக்க ஆரம்பித்தன. அவன் அந்த ஓங்கார த்வனியில் தன்னையே மறந்தான். மனதைக் குவிக்கும் முயற்சியும் கூட நின்று போனது. பேரமைதி அவனுள் குடி கொண்டது...

பார்த்தசாரதி அவன் திடீரென்று ஓம் மந்திரத்தைச் சொல்ல ஆரம்பித்ததையும் முகத்தில் தெரிந்த பேரமைதியையும் ஒருவித சிலிர்ப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார். அவன் இந்த உலகத்திலேயே இல்லை என்று அவருக்குத் தோன்றியது. ஏதோ ஒரு அழகிய உலகத்தில் தன்னை மறந்து சஞ்சரித்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது.

ஈஸ்வர் உணர்ந்த பேரமைதியின் முடிவில் விசேஷ மானஸ லிங்கம் அவனுக்குக் காட்சி அளிக்க ஆரம்பித்தது. புகைப்படமாக அல்ல நிஜமாகவே அவன் நேரில் பார்ப்பது போல் இருந்தது. வெண்பட்டுத் துணியை நடுவில் செருகிக் கொண்டு தனி தேஜசுடன் சிவலிங்கம் காட்சி அளிக்க அவனுக்கு மயிர்க் கூச்செறிந்தது. அவனை அறியாமல் அவன் கண்களில் இருந்து நீர் வழிய ஆரம்பித்தது. வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத ஒரு ஆனந்தத்தை அவன் உணர்ந்தான்.

இதற்கு முன்னும் பல முறை அவன் மனக்கண்ணில் அந்த சிவலிங்கம் தோன்றி இருக்கிறது என்றாலும் கூட அந்த நேரங்களில் பக்தியோ, ஆனந்தமோ அவனுக்கு வந்ததில்லை. திகைப்பும் அதிர்ச்சியும் மட்டுமே அவன் அனுபவித்திருக்கிறான். இன்று அவன் அதை மானசீகமாகத் தேடி இருக்கிறான். இன்று அவன் பக்தியுடன் வணங்கிக் காத்திருந்திருக்கிறான். மனமெல்லாம் சிவனாக வேறெந்த எண்ணமும் இல்லாமல் இருந்திருக்கிறான். அதனால் தான் இந்த மெய் சிலிர்க்கும் அனுபவமோ?

மெய் மறந்து காணக் கண்ணிரண்டும் போதாது போல அவனுக்குத் தோன்றியது. அந்தக் கணத்தில் அந்த சிவலிங்கத்துடன் சேர்ந்து கணபதி தெரிந்தான். அப்போது தான் ஈஸ்வர் கண்டது எப்போதும் போல் தெரிந்த விசேஷ மானஸ லிங்கத்தின் மானசீக தரிசனம் அல்ல, கண்டது விசேஷ மானஸ லிங்கம் இருக்கும் இடத்தில், இருந்த விதத்தில் தான் என்பதை ஈஸ்வர் உணர்ந்தான். ஓம் மந்திர ஒலியும் அங்கிருந்து தான் கேட்கிறது. கணபதி சம்மணமிட்டு சிவலிங்கத்தைப் பார்த்தபடி அமர்ந்திருந்தான்.

அவன் பரபரப்புடன் பார்க்கப் பார்க்க அவன் பார்வையில் இருந்து அந்தக் காட்சி மறைந்து போனது. மறுபடி சிவலிங்கத்தின் புகைப்படம் எதிரே தெரிய ஆரம்பித்தது. ஈஸ்வருக்கு ஏமாற்றமாக இருந்தது என்றாலும் சில நொடிகளில் அந்த ஏமாற்றத்திலிருந்து மீண்டு மறுபடி அந்தப் புகைப்படத்தில் மனதைக் குவித்தான். பழைய பரவச உணர்வு விலகி விட்டிருந்தாலும் அமைதியை சீக்கிரமே அவன் மனம் உணர ஆரம்பித்தது. சில நிமிடங்கள் சென்ற பின் ஒரு ஓலைச்சுவடி சிவலிங்கப் புகைப்படத்தின் முன்னால் தெரிய ஆரம்பித்தது.

சம்பந்தமில்லாமல் திடீரென்று காண ஆரம்பித்திருக்கும் அந்த ஓலைச்சுவடியில் ஈஸ்வர் கவனத்தைக் குவித்தான். ஒன்றும் புரியவில்லை. அமெரிக்காவில் பிறந்து வளர்ந்த அவன் தந்தையின் உதவியால் தமிழை நன்றாகவே கற்றிருந்தாலும் கூட அச்சு எழுத்தைப் படிக்க முடிவது போல அவனால் ஓலைச்சுவடி எழுத்துக்களைப் படிக்க முடியவில்லை. ஏதோ ஒரு செய்தி அந்த ஓலைச்சுவடி மூலம் சொல்லப்படுகிறது... என்ன அது? முயற்சி செய்தும் முடியாத போது மெல்ல மனதிற்குள் சொன்னான். “நீ எதையோ சொல்ல விரும்புகிறாய் என்று தெரிகிறது விசேஷ மானஸ லிங்கமே. ஆனால் எனக்கு எதுவும் புரிய மாட்டேன்கிறது”

அவன் சொல்லி முடித்தது தான் தாமதம். ஓலைச்சுவடி மறைந்து போய் அதற்குப் பதிலாக ஒரு வெள்ளைக் காகிதத்தில் அச்சு எழுத்துக்கள் தோன்ற ஆரம்பித்தன. வெள்ளைக் காகிதம் முழுவதும் அச்சு எழுத்துக்கள் இருந்தாலும் இரண்டே இரண்டு வரிகள் தவிர மற்றதெல்லாம் மங்கித் தெரிந்தன. அவன் பிரமித்துப் போனான். என்ன ஒரு ஆச்சரியம்!. தெளிவாகத் தெரிந்த அந்த அச்சு எழுத்துக்களைப் படித்தான். ஏதோ செய்யுள் போலத் தெரிந்தது. காலத்தை வீணாக்காமல் அதே நேரத்தில் அந்த லயிப்பு நிலையைக் கலைக்கும் பரபரப்பு மனநிலைக்குச் சென்று விடாமல் வேகமாக அருகில் இருந்த நோட்டுப்புத்தகத்தில் அந்த அச்சு எழுத்துக்களைப் பார்த்து எழுத ஆரம்பித்தான்.

தூய உளமறிவு கூடித் துஞ்சாமல் நாடினால் சேர்ந்திடும்
மெய்ஞானம் மூன்றும் காக்க மிஞ்சிடும் பூவுலகம் அன்றேல்
நஞ்சாகும் சிவஞானம்

அதே நேரத்தில் குருஜி விசேஷ மானஸ லிங்கத்தின் அலைகளோடு லயிக்க ஆரம்பித்திருந்தார். விசேஷ மானஸ லிங்கத்தைப் பற்றி எழுதப்பட்டிருந்த ஓலைச்சுவடிகளை ஆராய்ந்து தமிழாராய்ச்சி நிபுணர் அவரிடம் எழுதித் தந்ததை ஈஸ்வர் படித்துக் கொண்டு இருப்பது போன்ற பிரமை அவருக்கு ஏற்பட்டது. குருஜி திடுக்கிட்டார்.

# அத்தியாயம் - 80

குருஜிக்கு அதற்கு மேல் தியான நிலையில் இருப்பது சாத்தியமாகவில்லை. விசேஷ மானஸ லிங்கத்தின் அலைகளோடு லயித்துக் கொண்டிருந்த நேரத்தில் தோன்றும் காட்சி வெறும்

பிரமையாக இருக்க வாய்ப்பில்லை என்று அவர் உள்ளுணர்வு எச்சரித்தது. அவர் எழுந்து விட்டார்.

அவர் எழுந்தது தென்னரசுவையும், ஜான்சனையும், பாபுஜியையும் ஆச்சரியப்படுத்தியது. அந்த ஆராய்ச்சிகளை நேர் ஒளிபரப்பில் பார்த்துக் கொண்டிருந்த அறுவரையும் கூட ஆச்சரியப்படுத்தியது. ஜான்சன் பதற்றத்துடன் என்ன என்று கேட்க நெருங்கிய போது சைகையால் ஒன்றுமில்லை என்று தெரிவித்த குருஜி சிறிது நேரத்தில் வந்து விடுவதாக சைகை மூலமாகத் தெரிவித்து விட்டு தனதறைக்கு விரைந்தார்.

இயற்கை உபாதை போல் இருக்கிறது என்று நினைத்தவர்களாய் எல்லோரும் நிம்மதி அடைந்தார்கள்.

**************

ஈஸ்வர் எழுதி முடித்தவுடன் வெள்ளைக் காகிதத்தில் தெரிந்த அச்சு எழுத்துக்கள் அவன் பார்வையில் இருந்து மறைந்து போய் விட்டன. எழுதி முடித்து விட்டான் என்று அறிந்ததும் அருகில் இருந்து ஒரு ஆள் அதைத் திருப்பி எடுத்துக் கொண்டு விட்டதைப் போல இருந்தது. ஓலை எழுத்துக்கள் புரியாத போது அச்சு எழுத்துக்கள் தெரிந்ததும், எழுதி முடித்தபின் மறைந்ததும் ஈஸ்வரைப் புல்லரிக்க வைத்தன. செய்யுள் வரிகளைப் போல் தெரிந்த அந்த வரிகளின் அர்த்தம் அவனுக்குச் சரியாக விளங்கவில்லை. அது விளங்காமல் தியான நிலையைத் தொடர அவனால் முடியவில்லை. மனம் முரண்டு பிடித்தது.

ஈஸ்வர் விசேஷ மானஸ லிங்கத்தை வணங்கி விட்டு எழுந்து வந்தான். அந்த செய்யுள் வரிகளில் புரியாத வார்த்தைகளை

அடிக்கோடிட்டு பார்த்தசாரதியிடம் அந்த நோட்டுப் புத்தகத்தை நீட்டினான். ”இந்த வார்த்தைகளுக்கு என்ன அர்த்தம்?”

பார்த்தசாரதி அதைப் படித்தார்.

தூய உளமறிவு கூடித் துஞ்சாமல் நாடினால் சேர்ந்திடும் மெய்ஞானம்
மூன்றும் காக்க மிஞ்சிடும் பூவுலகம் அன்றேல் நஞ்சாகும்
சிவஞானம்

அதற்குக் கீழே அந்த வார்த்தைகளின் அர்த்தங்களை எழுதினார்.

தூய=தூய்மையான;

உளமறிவு=உள்ளம்+அறிவு;

துஞ்சாமல்=தூங்காமல்;

அன்றேல்=இல்லாவிட்டால்;

நஞ்சாகும்=விஷமாகும்.

அந்தக் கோடிட்ட சொற்களுக்குப் பதிலாக அந்த அர்த்தங்களை வைத்துப் படித்த போது ஈஸ்வர் முகத்தில் சிந்தனை ரேகைகள் படர்ந்தன. அக்னிநேத்ர சித்தர் தெரிவித்த அதே செய்தி தான்... அதே எச்சரிக்கை தான்....

**************

குருஜி தனதறைக்குப் போய் பீரோவைத் திறந்து ரகசியமாய் ஒளித்து வைத்திருந்த அந்த ஓலைச்சுவடிகளையும், தமிழாராய்ச்சி நிபுணர் எழுதித் தந்திருந்த விளக்கத் தாள்களையும் பிரித்துப்

பார்த்தார். எல்லாமே இருந்தன. எதுவும் விடுபட்டது போலத் தெரியவில்லை. மறுபடி அவற்றை அப்படியே வைத்து விட்டு பீரோவைப் பூட்டியவர் வேகமாக தியான மண்டபத்திற்குத் திரும்பினார். தென்னரசுவை வெளியே சைகையால் வரவழைத்துக் கேட்டார்.

“அந்த தமிழாராய்ச்சிக்காரரர் ஓலைச்சுவடிக்கு விளக்கம் எழுதித்தந்த பேப்பர்களை ஜெராக்ஸ் எடுத்து வச்சு வேற யாருக்காவது கொடுத்திருக்க வாய்ப்பிருக்கா?”

தென்னரசு ஆணித்தரமாய் சொன்னார். “இல்லை குருஜி. ஏன் சொல்றேன்னா, அந்த ஆள் ரொம்பவே பயந்து போயிருந்தார். மூணு தடவை ட்யூப் லைட் ஃப்யூஸ் ஆயிடுச்சு, யாரோ கதவைத் தட்டற மாதிரி சத்தம் அடிக்கடி கேட்குதுங்கறதால அந்த ஆள் அந்த ஓலைச்சுவடிகளைப் பேய் பிசாசு சமாச்சாரம் மாதிரி நினைச்சுட்டு அது கைய விட்டு போனா போதும்னு நினைச்ச மாதிரி தான் இருந்தது. அதனால் அதை ஜெராக்ஸ் எடுத்து வச்சிருக்கவோ, பிறகு யாருக்காவது தந்திருக்கவோ வாய்ப்பே இல்லை... ஏன் கேட்கறீங்க குருஜி”

”ஒரு சந்தேகம் வந்துச்சு அதனால தான் கேட்டேன்” என்ற குருஜி மேற்கொண்டு ஒன்றும் சொல்லாமல் மறுபடி சென்று விசேஷ மானஸ லிங்கத்தைப் பார்த்தபடி அமர்ந்தார். அமர்ந்தவர் தியானத்தின் மூலமாக ஆல்ஃபா சிபிஎஸ் அலைகள் 12லிருந்து 11, 10, 9, 8 அலைகளில் வேகமாக பயணித்துக் கொண்டு இருந்தார். விரைவில் தீட்டா அலைகள் சிபிஎஸ் 7ல் நுழைந்த போது, அவருக்கு மறுபடி அந்த அலைகளில் சிவலிங்க சக்தியுடன் லயிக்க முடிந்த போது, ஈஸ்வர் சம்பந்தப்பட்ட ஏதாவது காட்சி தெரிகிறதா என்று பார்த்தார். எதுவும் தெரியவில்லை. மனம் அமைதியடைந்தவராய்

*மனக்கண்ணில் சோமாலியக் கடற்கொள்ளைக்காரர்களின் அழிவைக் கொண்டு வந்து நிறுத்த ஆரம்பித்தார். அந்த நேரத்தில் மற்ற மூவரும் அந்த நிலைக்கு வந்திருந்தனர். கணபதியோ சிவன் ருத்ர தாண்டவம் ஆடி அந்த சோமாலியக் கொள்ளைக்காரர்களை அழிப்பது போல் மனதில் நினைத்துக் கொண்டிருந்தான். 'பாவப்பட்ட பல பேருக்கு தொந்தரவு கொடுத்துகிட்டா இருக்கீங்க. எங்க சிவன் யார் தெரியுமில்ல?'*

**************

*ஈஸ்வர் அந்தச் செய்யுள் வரிகளையும், சிவலிங்கத்தோடு சேர்ந்து பாதாளத்தில் வீழ்ந்து கொண்டிருப்பதாய் முன்பு கண்ட காட்சியையும், அக்னி நேத்திர சித்தர் சொன்னதையும் நினைத்துப் பார்த்தான். வாய்ச்சொல்லாகவும், எழுத்தாகவும், காட்சியாகவும் கூட நேரவிருக்கும் ஆபத்து நிலை அவனுக்குத் தெரிவிக்கப்பட்டு விட்டது. அவன் இனி அதிகம் தாமதிக்க முடியாது.....*

*பார்த்தசாரதிக்கு அவன் எப்படி அந்த செய்யுள் வரிகளை எழுதினான் என்பதை அறிய ஆவலாக இருந்தாலும் அவன் அதிகமாய் பேசுகிற மனநிலையில் இல்லை என்பதை ஊகிக்க முடிந்ததால் அமைதியாக இருந்தார். முனுசாமி கொண்டு வந்த டிபனை இருவரும் அமைதியாகவே சாப்பிட்டார்கள்.*

*சாப்பிட்டு முடித்தவுடன் ஈஸ்வர் திரும்பவும் கைகால் அலம்பிக் கொண்டு பூஜையறைக்குள் நுழைந்து வணங்கி விட்டு அமர்ந்தான். மறுபடி அவன் மனம் பலவிதமான எண்ணங்களில் பயணித்து சலித்து முக்கால் மணி நேரக் கடைசியில் விசேஷ மானஸ லிங்கத்தின் புகைப்படத்தில் ஐக்கியமாகியது. ஓங்கார ஒலி பின்னொலிக்க விசேஷ மானஸ லிங்கம் மறுபடி பிரத்தியட்சமாகத் தெரிந்தது. மெய்சிலிர்த்தது. இன்னும் எத்தனை முறை பார்த்தாலும் கூட இதே சிலிர்ப்பு இருக்கும் என்று தோன்றியது.*

அதன் கூடவே கணபதியும் தெரிந்தான். அதன் அருகே அமர்ந்திருந்த அவன் ஏதோ சினிமா பார்ப்பது போல் பாவனை தெரிந்தது. கற்பனையில் சிவனிடமும் பேசுகிறானோ? இந்த முறை காட்சி கணபதியையும் தாண்டி நீண்டது. குருஜி தியான நிலையில் பத்மாசனத்தில் அமர்ந்திருந்தார். அவர் முகத்திலும் ஏதோ காட்சி காண்பது போல் ஒரு பாவனை தெரிந்தது. கண்பதியையாவது அப்படிப் பார்க்க முடிந்ததில் ஈஸ்வருக்கு ஆச்சரியம் இல்லை. அவன் சுபாவமே அப்படித்தான். ஆனால் குருஜி?

ஈஸ்வர் அந்தக் காட்சியில் கவனத்தைக் குவித்தான். மேலும் என்ன எல்லாம் தெரிகிறது என்று பார்த்தான். சற்று தூரத்தில் மேலும் மூவர் தியான நிலையில் அமர்ந்திருந்தது போல் தெரிந்தது. ஆனால் அவர்கள் முகம் தெளிவாகத் தெரியவில்லை.

தன் கவனத்தைக் குருஜியிடம் கொண்டு வந்தான். என்ன பார்க்கிறார் என்று நினைக்க நினைக்க ஒரு பெரிய திரையில் ஒரு வரைபடம் தெரிந்தது. உலக வரைபடத்தில் ஏதோ ஒரு குறிப்பிட்ட பகுதி போல் தெரிந்தது. கண்களைக் கூராக்கி தெரிந்த பெயர்களைப் பார்த்தான். செங்கடல், ஏடன் வளைகுடா , இந்தியப்பெருங்கடல், சோமாலியா, எதியோப்பியா, யேமன் என்ற பெயர்கள் எல்லாம் தெரிய இது காட்சிப்பிழையாக இருக்க வேண்டும் என்று ஈஸ்வர் நினைத்தான். அதை உறுதிப்படுத்துவது போல ஆயுதம் தாங்கிய சில ஆப்பிரிக்கர்களும் தெரிந்தார்கள். ஒரு பெரிய படகில் இருந்த அவர்கள் கடற்கொள்ளையர்கள் போலத் தெரிந்தார்கள். ஈஸ்வர் மறுபடி விசேஷ மானஸ லிங்கத்தின் மீது தன் கவனத்தைக் கொண்டு வந்தான். ஓரிரு நிமிடங்களில் விசேஷ மானஸ லிங்கம் மறைந்து போய் அந்த வரைபடமும், கடற்கொள்ளையர்களுமே தெரிந்தார்கள்.

ஈஸ்வருக்குக் குழப்பமாக இருந்தது. கவனத்தை கணபதி மீது கொண்டு வந்தான். கணபதி மறைந்து சிவனின் ருத்ர தாண்டவம் தெரிய ஆரம்பித்தது. சிவனின் கை, கால் அசைவில் எல்லாம் அந்தக் கடற்கொள்ளையர்களின் தலைகள் உருள ஆரம்பித்தன. சிவன் அவர்களைப் பந்தாடுவது போலத் தெரிந்தது. தனக்குத் தான் பைத்தியம் பிடித்து விட்டதோ என்று ஈஸ்வர் சந்தேகப்பட்ட போது எல்லாம் மறைந்து சிலர் டெலிவிஷனில் சுவாரசியமாகப் பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. ஈஸ்வர் குழப்பத்தின் உச்சத்திற்கே போனான். அந்த டெலிவிஷனைக் கூர்ந்து கவனித்தான். பிபிசி நியூஸ் சேனல் நிகழ்ச்சி அது.

அந்த நேரத்தில் குருஜி கண்களைத் திறந்தார். அவர் நேராகப் பார்த்தது ஈஸ்வரை. ஈஸ்வரும் அவரை நேராகப் பார்த்தான். விசேஷ மானச லிங்கத்தின் உபயத்தால் இடையே இருந்த பல மைல்கள் தூரம் இல்லாதது போலவே தோன்றியது. இருவர் கண்களும் சந்தித்துக் கொண்டதை இருவருமே விரும்பவில்லை. அந்த விருப்பக் குறைவாலேயே இருவரும் மளமளவென்று பீட்டா அலைகளுக்கு இறங்க காட்சிகள் தானாக மறைந்தன.

ஈஸ்வர் விசேஷ மானஸ லிங்கத்தின் புகைப்படத்தை வணங்கி விட்டு பூஜையறையை விட்டு வெளியே வந்தவன் பரபரப்புடன் தன் லாப்டாப்பை எடுத்து இணையத்தில் பிபிசி நியூஸ் சேனலைப் பார்க்க ஆரம்பித்தான். பார்த்தசாரதியும் அவன் பரபரப்பைப் பார்த்து அவனுடன் வந்து சேர்ந்து கொண்டார். அதே நேரத்தில் தியானமண்டபத்திலும் அலெக்ஸி, கியோமி, ஹரிராம் மூவரும் விசேஷ மானஸ லிங்கம் மூலம் ஐக்கியமாகி ஞான திருஷ்டியிலும், மற்றவர்கள் டிவி நிகழ்ச்சியிலுமாக அனைவரும் அதே நிகழ்ச்சியை பரபரப்போடு பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

செங்கடல் பகுதியில் *Sand storm* என்று சொல்லப்படும் மணல்/தூசு சூறாவளியை பிபிசி நியூஸ் சேனல் தொலைவில் இருந்து நேரடி ஒளிபரப்பு செய்து கொண்டிருந்தது. இயற்கையின் சீற்றம் வார்த்தைகளுக்கு அடங்காதது. பேய்க்காற்றில் மணல், தூசியோடு சேர்ந்து கடலும் ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தது. செய்தியாளர் அந்த சுழல் ஆர்ப்பரிப்பின் நடுவே ஒரு படகும் சிக்கிக் கொண்டிருப்பது போலத் தோன்றுகிறது என்று சொல்லிக் கொண்டிருந்தார். சற்று நேரத்திற்கு முன் ஒரு வினாடி நேரம் ஒரு பெரிய படகு மிக உயரத்திற்கு வீசப்பட்டு கீழிறங்கியதைப் பார்த்ததாக பார்வையாளர்கள் சிலர் சொன்னதை இடை இடையே ஒளிபரப்பிக் கொண்டிருந்தார்கள். செங்கடலில் இது போன்ற மணல்/தூசு சூறாவளி புதிதல்ல என்று வானியல் நிபுணர்கள் கருத்து தெரிவித்ததும் ஒளிபரப்பாகியது. ஆனால் எந்த வருடத்திலும் இந்த மாத காலத்தில் இப்படி ஒரு சூறாவளி அந்தப் பகுதியில் ஏற்பட்டதில்லை என்றும் ஒரு வானியல் நிபுணர் வியப்பு தெரிவித்தார்.

ஒரு கட்டத்தில் கடலின் சுழியில் தோன்றிய ஒரு கண் போன்ற தோற்றத்தை தியான மண்டபத்தில் இருந்த அனைவருமே பார்த்தார்கள். அலெக்ஸியின் இதயத்துடிப்பு ஒரு கணம் நின்று போனது. இரண்டாவது முறையாக அல்லவா அவர் அந்தக் கண்ணைப் பார்க்கிறார். சிவனின் மூன்றாவது கண்ணோ அது? மற்றவர்களும் வாய் விட்டுச் சொல்லா விட்டாலும் அந்த எண்ணம் அவர்களுக்குத் தோன்றாமல் இல்லை.

மூன்று மணி நேரம் நீடித்த அந்த சூறாவளி அடங்கிய பின்னர் அருகே இருந்த ஆப்பிரிக்க நாடுகளின் சீரமைப்புப் பணிகள் ஆரம்பமாயின. ஒரு உடைந்த படகின் பாகங்களோடு சில சடலங்களும் வேறு வேறு இடங்களில் கரை சேர்ந்திருந்தன. அந்த

சடலங்கள் கொடூரமான சோமாலியக் கடற்கொள்ளைக்காரர்களுடையது என்று அடையாளம் கண்டுபிடிக்கப்பட்ட போது ஒரு செய்தியாளர் சொன்னார். “சட்டத்தின் பிடியில் இருந்து தப்பி வந்த இந்தக் கொள்ளையர்களால் இறைவனின் பிடியில் இருந்து தப்ப முடியவில்லை போலும்”

அந்தப் பிணங்களைக் காட்டிய போது தியான மண்டபத்தில் பலத்த கைத்தட்டல் கேட்டது. அவர்கள் ஆராய்ச்சியின் மகத்தான வெற்றி என்று அவர்கள் மனம் மகிழ்ந்தார்கள். குருஜி தன்னை பிரம்மாவாக உணர்ந்தார். ஜான்சன், பாபுஜி, தென்னரசு, மகேஷ் நால்வர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இருக்கவில்லை. நேரடி ஒளிபரப்பைப் பார்த்துக் கொண்டிருந்த ஆறு வெளிநாட்டவர்களும் கைதட்டி தங்கள் வாழ்த்துக்களைத் தெரிவித்தனர். அந்த இடமே விழாக்கோலம் பூண்டிருந்தது.

கணபதி கண்களில் மட்டும் கண்ணீரைக் கண்ட குருஜி கேட்டார். “என்ன கணபதி அழறே?”

கணபதி உடைந்த குரலில் சொன்னான். “அந்த ஆள்களுக்கும் அம்மா எல்லாம் இருப்பாங்க இல்லையா? அவங்களுக்கு எவ்வளவு கஷ்டமாய் இருக்கும்னு நினைக்கறப்ப அழுகையா வருது குருஜி...”

**************

ஈஸ்வருக்கு அங்கு நடந்தது என்னவென்று புரிய அதிக நேரம் ஆகவில்லை. செங்கடல் பகுதியின் வரைபடம், சோமாலியக் கடற்கொள்ளையர்களின் புகைப்படம், சிவனின் ருத்ரதாண்டவம் தோன்றல் எல்லாம் தெரிந்து முடிந்த போது நிஜமாகவே செங்கடலில் அந்த சோமாலியக் கடற்கொள்ளையர்கள் மணல்

*சூறாவளியில் சிக்கி இறந்து போனது அவனுக்குத் திகைப்பாக இருந்தது. விசேஷ மானஸ லிங்கத்தின் சக்தி எந்த அளவு செல்ல முடியும் என்பதை அறிய ஒரு சோதனை நடத்தி இருக்கிறார்கள். அதில் வெற்றியும் பெற்று இருக்கிறார்கள். விசேஷ மானஸ லிங்கத்தை வைத்து எதையும் சாதிக்க முடியும் என்று அறிந்த இவர்கள் இனி என்ன தான் செய்ய மாட்டார்கள்?*

*தான் கண்டதையும், தன் கவலையையும் அவன் பார்த்தசாரதியிடம் சொன்ன போது அவருக்கு நம்பக் கஷ்டமாக இருந்தது. ஆனால் பிபிசியில் அந்த நிகழ்ச்சியின் ஒளிபரப்பைப் பார்த்த பின் அவரால் எப்படி நம்பாமல் இருக்க முடியும்? எதிரிகள் கையில் அணுகுண்டே இருக்கிறது, சூழ்நிலையும் அவர்களுக்கே சாதகமாக இருக்கிறது.....*

*பார்த்தசாரதி கவலையுடன் சொன்னார். "ஈஸ்வர் நீங்கள் ஏதாவது செய்தாகணும்!"*

**************

*தியான மண்டபத்தில் வெற்றிக் களிப்பில் அனைவரும் இருந்த போது குருஜி மட்டும் ஆழ்ந்த யோசனையுடன் உட்கார்ந்து கொண்டிருந்ததைப் பார்த்து நெருங்கிய ஜான்சன் கேட்டார். "என்ன குருஜி"*

*"இங்கே நாம என்ன ஆராய்ச்சி செய்துகிட்டிருக்கோம்கிறதை ஈஸ்வர் அங்கே இருந்தே பார்த்துகிட்டு இருக்கான்" என்று குருஜி சொன்னார்.*

ஜான்சன் திகைப்புடன் கேட்டான். “எப்படி? அவன் என்னை மாதிரி ஆராய்ச்சிகள் நடத்தறவனே ஒழிய அந்த சக்தி படைச்சவன் அல்லவே ”

“விசேஷ மானஸ லிங்கத்தின் உபயம்...”

“விசேஷ மானஸ லிங்கம் தான் இங்கே இருக்கே?”

”அந்த சித்தர் அவனை சந்திச்சிருப்பார்னு நினைக்கிறேன். அவன் அந்த மூணு பேரில் ஒருத்தன்.... அதனால அது எங்கே இருந்தாலும் மனசு வச்சா அதுகூட ட்யூன் ஆகிறது கஷ்டமில்லைன்னு நினைக்கிறேன். அறுபது வருஷங்களுக்கு மேல் இந்த விசேஷ மானஸ லிங்கம் இருந்த இடத்தில் இதோட அலைகளும் நிறைந்திருக்கும்கிறதால அங்கே இருந்து முயற்சித்தால் சீக்கிரமே ட்யூன் ஆக முடியும்....”

ஜான்சன் திடுக்கிட்டார். குருஜி சொன்னார். ”இன்னேரம் அவனுக்கு நாம் என்ன செய்யப் போறோம்கிறது புரிஞ்சிருக்கும். அவனைத் தடுத்து நிறுத்தலைன்னா நம்ம அடுத்த முயற்சி அவ்வளவு சுலபமாய் இருக்க ஈஸ்வர் விடுவான்னு தோணலை ஜான்சன்”

# அத்தியாயம் - 81

ஜான்சனுக்கு ஈஸ்வர் இந்த அளவு முன்னேறி இருப்பதை நம்பக் கஷ்டமாக இருந்தது. எல்லாவற்றிற்கும் ஒரு பதிலை வைத்திருந்த குருஜியின் அறிவுக்கு இது எட்டிய விஷயமாக இருந்தாலும் ஓரிரு நாட்களில் ஈஸ்வர் அவர்களை வேவு பார்க்கும் அளவுக்கு அசுர வேகத்தில் நெருங்கியிருப்பது அவருக்கு

*அதிர்ச்சியை ஏற்படுத்தி இருந்தது. இதில் அக்னி நேத்ர சித்தர் வேறு அவனை சந்தித்திருக்கக் கூடும் என்று குருஜி நினைக்கிறார்....!*

*ஜான்சன் மனத்தாங்கலுடன் சொன்னார். "உங்க நண்பர் உதயன் சுவாமி அக்னிநேத்ர சித்தர் இந்த இடத்தில் நடக்கும் ஆராய்ச்சிகளைக் கெடுக்க முடியாதபடி மந்திரக்காப்பு செய்தது மாதிரி ஈஸ்வரும் எதுவும் செய்ய முடியாதபடி செய்திருக்க நீங்கள் சொல்லி இருக்கலாம்...."*

*குருஜி சிறிது நேரம் ஒன்றும் சொல்லாமல் யோசித்தார். ஈஸ்வரை அவர் குறைத்து எடை போட்டு விட்டாரோ?*

*ஜான்சன் பயத்தோடு கேட்டார். "அவன் இன்னேரம் இந்த இடம் எங்கே இருக்கிறது என்பதைக் கண்டு பிடித்திருப்பானா குருஜி"*

*"அதை அவன் கண்டு பிடிப்பது கஷ்டம் தான்... அந்த சித்தர் அவனுக்கும் கணபதிக்கும் சரியான ஒரு முகூர்த்த நேரத்தில், எனர்ஜி லெவல்னு நீங்கள் சொல்வீங்களே அதில், ஒரு நுட்பமான இணைப்பை ஏற்படுத்திட்டார். அதனால சரியா முயற்சி செய்தால் கணபதியும், விசேஷ மானஸ லிங்கமும் இருக்கிற இடத்தை அவனால் பார்க்க முடியுமே ஒழிய அந்த இடம் எங்கே இருக்குன்னு கண்டுபிடிக்கற அளவுக்கு உதயனோட மந்திரக் காப்பு அனுமதிச்சுடாதுன்னு நினைக்கிறேன்"*

*'அவன் பார்ப்பதோடு நிறுத்திக் கொள்ளும் நபர் அல்லவே' என்று நினைத்த ஜான்சன் கணபதி குருஜியை நோக்கி வருவதைப் பார்த்து அங்கிருந்து நகர்ந்தார்.*

*கணபதியைப் பார்த்து குருஜி புன்னகையுடன் கேட்டார், "என்ன கணபதி, சிவலிங்கத்துகிட்ட அடுத்தது உனக்காக ஏதாவது கேட்கலாமா?"*

*உலகில் தன்னைக் காட்டிலும் எத்தனையோ பேர் பெரும் கஷ்டத்தில் இருக்கும் போது தனக்காக மட்டும் வேண்டிக் கொள்வது நியாயமல்ல என்று கணபதி நினைத்தான். கேட்காமலேயே இறைவன் இப்போது அவனுக்கு நன்றாகவே படியளந்து வருகிறார்.... "வேண்டாம் குருஜி..."*

*"அப்படின்னா அடுத்தது என்ன கேட்கலாம் சொல்லு" குருஜி விளையாட்டாய் கேட்டார்.*

*"எல்லாரும் நல்லா சந்தோஷமாயிருக்கணும்னு கேட்டா என்ன குருஜி?" கேட்டு விட்டு கணபதி குருஜியை குழந்தைத்தனமாய் பார்த்தான். தனித்தனியாய் ஒவ்வொருவரும் கேட்பதை விட இப்படி எல்லாரும் சந்தோஷமாய் இருக்க வேண்டும் என்று கேட்பது நல்லது என்று அவனுக்குத் தோன்றியது.*

*குருஜி மெல்லச் சொன்னார். "அந்த அளவு சக்தி இந்த சிவலிங்கத்துக்கே இருக்கிறது சந்தேகம் தான் கணபதி"*

*கணபதி போன பிறகும் அவன் வார்த்தைகளும், மனதார அவன் சொன்ன விதமும் அவர் மனதில் நிறைய நேரம் நின்றது. பின் ஒரு பெருமூச்சு விட்டவராக பாபுஜியை அழைத்து குருஜி சொன்னார். "பாபுஜி. இந்த விசேஷ மானஸ லிங்கத்தோட சக்தி பத்தி இனி ஆராய்ச்சி செய்ய எதுவுமில்லை. ஈஸ்வர் குறுக்கில் வராமல்*

இருந்தால் நம்ம கற்பனையோட எல்லை தான் நம்ம சாதனையோட எல்லையாய் இருக்கும்...”

“ஈஸ்வர் குறுக்கே வராமல் இருக்க என்ன செய்யறது குருஜி?”

“எல்லாத்துக்குமே ஒரு வழி இருக்கு. நான் யோசிச்சு சொல்றேன்... நீ அதைப்பத்தி கவலைப்படாதே.. நம்ம லட்சியத்தை அடைய நாம் முதல்ல என்ன செய்யலாம்னு நீங்க எல்லாரும் சேர்ந்து யோசிக்க ஆரம்பியுங்க. நானும் சிலதெல்லாம் யோசிச்சு வச்சிருக்கேன். பிறகு சேர்ந்து பேசி முடிவு செய்யலாம். இதை முதல்லயே செய்திருக்கலாம். ஆனால் அப்ப விசேஷ மானஸ லிங்கத்தை நான் நம்பின அளவு நீங்க யாரும் நம்பினதா தெரியலை. அதனால் தான் உங்களுக்கெல்லாம் அந்த நம்பிக்கை வந்த பிறகு பேசலாம்னு விட்டுட்டேன்.....”.

பாபுஜி போன பிறகு குருஜி ஈஸ்வரை எப்படித் தடுத்து நிறுத்துவது என்று யோசிக்க ஆரம்பித்தார்.

**************

ஈஸ்வர் இனி என்ன செய்யப் போகிறான் என்பதை அறிய பார்த்தசாரதி ஆவலாய் இருந்தார். சீக்கிரமாக அவன் எதாவது செய்தால் தேவலை என்று அவருக்குத் தோன்றியது. ஆனால் ஈஸ்வரோ அவசரப்பட்டு எதையும் செய்து சிக்கலில் மாட்டிக் கொள்ள விரும்பவில்லை.

விசேஷ மானஸ லிங்கத்தின் அருளாளோ, அக்னிநேத்ர சித்தர் மற்றும் பசுபதி ஆகியோரின் ஆசியாலோ இன்றைய தினத்தில் அவன் சாதித்தது அவன் எதிர்பார்த்திராத அளவு பெரிய வெற்றி தான். ஒரு இடத்தில் நடப்பதை ஓரளவாவது நேரில் பார்ப்பது போல்

*பார்க்க முடிந்தது சாதாரண விஷயம் அல்ல. ஆழ்மனசக்திகளில் ஒன்றான Remote Viewing என்ற தொலைதூரத்தில் நடப்பதைக் காண முடிந்த சக்தி அவனுக்கு இன்று அருளப்பட்டிருக்கிறது. ஆனால் அந்த வெற்றியில் பெருமிதம் அடையும் நிலையில் அவன் இல்லை. காரணம் அவன் ஒருவனிடம் அந்த சக்தி உள்ளது என்றால் எதிரணியில் உள்ளவர்களில் எத்தனை பேரிடம் அந்த சக்தி உள்ளது என்று அவனுக்குத் தெரியவில்லை. அவனுக்குக் குருஜியைப் பார்க்க முடிந்தது போல குருஜிக்கும் அவனைப் பார்க்க முடிந்திருக்கிறது. அவருக்கு சற்று தொலைவில் வேறு மூன்று பேர் தியான நிலையில் அமர்ந்து கொண்டு இருந்தார்களே அவர்களுக்கும் அந்த சக்தி இருக்கலாம் என்று அவன் உள்மனம் சொன்னது. அது உண்மையானால் இங்கு இவன் ஒருவன் என்றால் அங்கு அவர்கள் நான்கு பேர் இருக்கிறார்கள். அது போதாதென்று அங்கு விசேஷ மானஸ லிங்கம் இருக்கிறது, ஜான்சன் இருக்கிறார், இன்னும் யாரெல்லாம் இருக்கிறார்களோ? இப்படி எண்ண ஓட்டம் போன போது அவன் சொல்லிக் கொண்டான். 'ஆனால் அவர்களிடம் சத்தியம் இல்லை.... நியாயம் இல்லை. அதுவே ஒரு பெரிய பலவீனம் அல்லவா? என் பக்கம் அது இருப்பது மிகப்பெரிய பலம் அல்லவா?'*

*மேலும் யோசித்த போது அவனை அந்த சித்தரின் வார்த்தைகளும் ஆசுவாசப்படுத்தின. "எனக்குத் தெரிஞ்சு சுமக்க முடியாத பாரத்தை இறைவன் தர்றதில்லை".*

*சித்தர் சொன்னது போல் தைரியமும் தன்னம்பிக்கையும் இல்லாத நல்லவனாக இருக்க அவன் விரும்பவில்லை. முயலாமலேயே தோல்வியை ஒப்புக் கொள்ளும் முட்டாளாக இருக்கவும் அவன் விரும்பவில்லை. ஏதாவது செய்தே ஆக வேண்டும் என்று உறுதியாக நினைத்தான். மனதில் உறுதி வந்தவுடனேயே கூடவே யானை பலம் அவனுக்கு வந்து சேர்ந்தது போல இருந்தது.*

எதைச் செய்வதாக இருந்தாலும் கணபதியைத் தன் பக்கம் இழுத்துக் கொள்வது தான் அதற்கான முதல் படி என்று ஈஸ்வர் கணக்கிட்டான். முன்பு போலவே மறுபடி முயற்சிக்கலாம் என்றால் அது கண்டிப்பாக குருஜிக்குத் தெரியாமல் நடக்க வாய்ப்பே இல்லை. மனிதர் கண்கொத்திப் பாம்பாக அங்கே காவல் காத்துக் கொண்டு இருக்கலாம்.

“துஞ்சாமல்” என்ற வார்த்தைக்கு தூங்காமல் என்று பார்த்தசாரதி அர்த்தம் எழுதினாலும் அதற்கு சோர்வில்லாமல், கால தாமதம் செய்யாமல் என்று அர்த்தம் என பார்த்தசாரதி சொன்னது சரியாக இருக்க வேண்டும் என்றே பட்டாலும் இன்றைய சூழ்நிலைக்கு ‘தூங்காமல்’ என்ற அர்த்தமே பொருந்தும் என்பது போலத் தோன்றியது. இரவு நேரத்தில் குருஜி தூங்கிய பிறகு ஏதாவது முயற்சி செய்யலாம். அப்படிச் செய்தால் அவர் அவன் செய்கைகளை அறிய வாய்ப்பில்லை.... முடிவெடுத்து விட்டு அவன் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

அவன் நிமிர்ந்து உட்கார்ந்த விதத்தையும், அவன் முகத்தில் தெரிந்த உறுதியையும் பார்த்த பார்த்தசாரதிக்கு அவன் ஏதாவது செய்வான் என்ற நம்பிக்கை பிறந்தது.

அவன் தன் எண்ண ஓட்டத்தை அவரிடம் வெளிப்படையாகச் சொன்னான். அதிகாலை இங்கு வந்த அவரை இரவாவது வீட்டுக்கு அனுப்புவது தான் முறை என்று தோன்றியதால் ஈஸ்வர் அவரை வீட்டுக்குப் போய் மறு நாள் காலை வரச்சொன்னான். முனுசாமியும் மதியமே போய் விட்டிருந்ததால் அவனைத் தனியாக விட்டுப் போக அவருக்குத் தயக்கமாய் இருந்தது. அவன் பூஜை அறையில் அமர்ந்து கொண்டு இருக்கையில் அவருக்கு வேலை எதுவும் இல்லை

என்பதால் அவர் இரவில் தங்கியும் எந்தப் பயனும் இல்லை என்று சொல்லி ஈஸ்வர் வற்புறுத்தி அனுப்பி வைத்தான். ஆனாலும் இரவு ஒன்பது மணி வரை இருந்து அவனிடம் பேசிக் கொண்டிருந்து விட்டுத் தான் பார்த்தசாரதி போனார்.

**************

தமிழகத்தில் உட்கார்ந்து கொண்டு செங்கடலில் சோமாலியக் கடற்கொள்ளையர்களை அழிக்க முடிந்த சக்தி தங்கள் வசம் இருக்கிறது என்ற எண்ணமே தென்னரசுக்கு பெருமகிழ்ச்சியைத் தந்து கொண்டிருந்தது. அந்த சந்தோஷமான நேரத்தில் மகளிடம் பேச வேண்டும் போல இருந்தது. மகளுக்குப் போன் செய்து பேசினார்.

விஷாலியின் குரலில் எல்லை இல்லாத சந்தோஷம் தெரிந்தது. மெல்ல ஈஸ்வரும், தானும் காதலிப்பதாக அவரிடம் சொன்னாள். ஈஸ்வர் அமெரிக்காவுக்குத் திரும்பிப் போவதற்கு முன்பே கல்யாணத்தை முடித்து விட வேண்டும் என்று பரமேஸ்வரன் முடிவு செய்திருப்பதாயும், அவர் தென்னரசுவிடம் போனில் பேச இரண்டு நாளாக முறை முயற்சி செய்து கொண்டிருப்பதாகவும் சொன்னாள். கனகதுர்கா வந்திருப்பதாகவும் சொன்னாள்.

விஷாலி தடை இல்லாமல் பேசும் பெண் அல்ல. மிகுந்த சந்தோஷம் மட்டுமே அவளை அப்படிப் பேச வைப்பதுண்டு. இன்று அவள் குரலில் கொப்பளித்த சந்தோஷமும், எல்லாவற்றையும் அப்பாவிடம் சொல்லி விடத் துடித்த துடிப்பும் தென்னரசுவை நிலை குலைய வைத்தது. கொந்தளித்த உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு கேட்டார். “ஈஸ்வர் எங்கேம்மா”

“அவர் அந்த தோட்ட வீட்டுக்குப் போயிருக்கார்ப்பா. ஏதோ ஆராய்ச்சி செய்யணுமாம். முடிச்சுட்டு தான் வருவேன்னு சொல்லிட்டு போயிருக்கார்.”

தென்னரசு பேச்சிழந்து போனார். தந்தையின் மனநிலையைப் புரிந்து கொள்ளும் மனநிலையில் விஷாலி இருக்கவில்லை. ஆனந்தவல்லி தன் நகைகளை எல்லாம் எடுத்துக் கொண்டு வந்து ‘உனக்கு எதெல்லாம் பிடிச்சுதோ அதெல்லாம் எடுத்துக்கோம்மா’ என்று சொன்னதையும், கனகதுர்கா மிக நல்ல மாதிரி என்பதையும் சொன்னாள். “எனக்கு அவங்க கிட்ட பேசறப்ப அம்மா கிட்ட பேசற மாதிரி இருக்குப்பா....”

விஷாலி பேசிக் கொண்டே போனாள். மகள் இது நாள் வரை அவ்வளவு சந்தோஷமாக எப்போதுமே இருந்ததில்லை என்று தென்னரசுக்குத் தோன்றியது. கடைசியில் விஷாலி கேட்டாள். “ஈஸ்வரோட தாத்தா கிட்ட பேசறீங்களாப்பா?”

“சிக்னல் அபப்ப்ப கிடைக்கறதில்லைம்மா. நான் அப்பறமா பேசறேன்ம்மா”

மகளிடம் பேசி முடித்த பிறகு தென்னரசு நிறைய நேரம் அப்படியே உட்கார்ந்திருந்தார். விதி அவர் வாழ்க்கையில் ஒரு குரூர விளையாட்டு விளையாடி இருப்பதாக அவருக்குத் தோன்றியது. இப்படி ஒரு வாழ்க்கை மகளுக்கு அமையும் என்பது முதலிலேயே தெரிந்திருந்தால் தடம் மாறி வந்திருக்க வேண்டிய அவசியமே இல்லையே...

மகேஷ் வந்தான். “என்ன யோசிச்சுகிட்டிருக்கீங்க அங்கிள்”

*“இனி அடுத்ததா என்ன செய்யப் போறோம்னு யோசிக்கிறேன் மகேஷ்”*

*“அதைப்பத்தி தான் ஜான்சனும், பாபுஜியும் அந்த வெளிநாட்டுக்காரங்க கிட்ட வீடியோ கான்ஃப்ரன்ஸிங்ல பேசிகிட்டிருக்காங்க. எகிப்து அரசியலைப் பத்தி பேச ஆரம்பிச்சாங்க. போரடிச்சுது. வந்துட்டேன்.”*

*தென்னரசுக்கு அவனைப் பார்க்கப் பாவமாக இருந்தது. இந்த விசேஷ மானஸ லிங்கம் விவகாரத்தில் அவனுக்கு இயல்பாய் பெரிய ஆர்வம் எப்போதுமே இருந்ததில்லை. அவருக்காகத் தான் அவன் எல்லாமே செய்திருக்கிறான். தனிப்பட்ட அவருக்காகக் கூட இல்லை. அவர் விஷாலியின் அப்பா என்பதற்காக. அவனிடம் ’உலகப் பணக்காரர்களில் ஒருவனாகக் கூட நீ ஆகலாம், உன் தாத்தாவைப் போல இருக்கும் சக்தி வாய்ந்த பல பேரை உன் அப்பாயின்மெண்டிற்காக நீ காக்க வைக்கலாம், நீ ஆசைப்படுவதை எல்லாம் நடத்திக் காட்டலாம்…’ என்றெல்லாம் அவர் எத்தனையோ ஆசை காட்டி அவனைத் தன்னுடன் வைத்திருந்தாலும் எல்லாவற்றிற்கும் மேலாக அவனை அவர் சொன்னபடி எல்லாம் ஆடவைத்தது அவனுக்கு விஷாலியின் மீதிருந்த காதல் தான். அவர் அவளை அவனுக்கே திருமணம் செய்து தருவார் என்ற எதிர்பார்ப்பில் தான்….*

*இப்போது வீட்டில் நடந்திருக்கும் நிகழ்வுகள் அவனுக்கு இன்னும் தெரியவில்லை. தெரிந்தால் அவன் அதை எப்படி எடுத்துக் கொள்வான்? தென்னரசுக்கு யோசிக்கவே கஷ்டமாக இருந்தது. அவர் ஏதோ யோசனையில் இருக்கிறார், பேசும் மனநிலையில் இல்லை என்பதைத் தெரிந்து கொண்ட மகேஷ் உறங்கப் போனான்.*

தென்னரசு அவர்கள் என்ன முடிவெடுக்கிறார்கள் என்று அறிந்து கொள்ள பாபுஜியின் அறைக்குப் போனார்.

அவர் நுழைந்த போது மகேஷ் சொன்னது போல வீடியோ கான்ஃபிரன்ஸிங்கில் எகிப்து அரசியல் பற்றி தான் பேசிக் கொண்டிருந்தார்கள். சோமாலியக் கொள்ளைக்காரர்கள் விஷயத்தில் நினைத்ததை சாதிக்க முடிந்த சிவலிங்கத்தின் சக்தி இயற்கை சக்திகளோடு நின்று விடுமா இல்லை அரசியல் வரைக்கும் வருமா என்ற கேள்வி அவர்களிடம் எழுந்திருந்தது. அந்தக் கேள்விக்குப் பதிலைத் தெரிந்து கொள்ள தற்போது நடக்க இருக்கும் எகிப்திய தேர்தலை உபயோகப்படுத்திக் கொள்ள அவர்கள் நினைத்தார்கள்.

பிப்ரவரி 2011ல் எகிப்திய ஜனாதிபதி ஹோஸ்னி முபாரக் பதவியில் இருந்து இறங்கிய பிறகு அந்த நாட்டில் அரசியல் நிலவரம் ஸ்திரமாக இருக்கவில்லை. பின் நடந்த தேர்தலில் முகமது மோர்சி என்பவர் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட போதும் அவருக்கும் ராணுவத்தின் எதிர்ப்பு இருந்து வந்தது. 2013 ஜூனில் அவருக்கு எதிராக பெரிதாக கலவரம் ஒன்று வெடிக்க ராணுவம் அதைப் பயன்படுத்திக் கொண்டு அவரைப் பதவியில் இருந்து இறக்கியது. விரைவிலேயே தேர்தல் ஒன்றை நடத்துவோம் என்று உறுதிமொழி அளித்திருந்த ராணுவம் தங்களுக்குச் சாதகமான ஒரு நபரை தேர்தல் களத்தில் நிற்க வைக்கலாமா என்று யோசித்துக் கொண்டிருந்தது. அந்த நபர் இந்த அறுவரில் ஒருவரான எகிப்தியரின் நெருங்கிய நண்பர். மக்களிடம் அந்த நபருக்கு செல்வாக்கை அதிகப்படுத்த விசேஷ மானஸ லிங்கத்தால் முடியுமா என்பது பற்றித் தான் பேசிக் கொண்டிருந்தார்கள்.

பாபுஜி ஜான்சனிடம் கேட்டார். “நீங்க என்னை நினைக்கிறீங்க. அரசியல் மாற்றத்தையும் அந்த சிவலிங்கத்தால் ஏற்படுத்த முடியுமா?”. இந்த ஆராய்ச்சிகள் ஆரம்பித்த்தில் இருந்து இருவரும் நெருக்கமாகி விட்டிருந்தார்கள். ஜான்சனிடம் முகம் காண்பிக்கவே தயங்கிய அறுவரும் கூட இந்த ஆராய்ச்சிகளின் ஆரம்பத்தில் இருந்தே அந்தத் தயக்கத்தை விட்டொழித்திருந்தார்கள். அந்த அளவு ஜான்சன் மீது அவர்களுக்கும் நம்பிக்கை உருவாகி இருந்தது.

ஜான்சன் சொன்னார். “கண்டிப்பாய் முடியும்னு தான் நினைக்கிறேன்”

“அப்படின்னா முயற்சி செய்து பார்க்கலாம்” பாபுஜி சொன்னார்.

ஜான்சன் சொல்லலாமா வேண்டாமா என்று தயங்கி விட்டுச் சொன்னார். “ஆனால் முதல்ல ஈஸ்வரைக் கட்டுப்படுத்தி வைக்கணும். என்ன தான் குருஜி சொன்னாலும் அவர் அவனை கட்டுப்படுத்த முடியும்னு தோணலை”

உடனடியாக இஸ்ரேல்காரரர் சொன்னார். “பிரச்சினைக்குரிய ஆள்களைக் கட்டுப்படுத்தப் பார்க்கிறதை விட ஒரேயடியாய் அப்புறப்படுத்தறதே நல்லது.”

பாபுஜிக்கும் அது சரியென்று பட்டது. எவனால் ஆபத்து என்று புரிந்து விட்டதோ அவனை உயிரோடு விட்டு வைப்பதே ஆபத்தை தக்க வைத்துக் கொள்வது போலத் தான். உடனே பாபுஜி ஈஸ்வரை உடனடியாகக் கொன்று விடும்படி செல்போனில் ஒருவரிடம் கட்டளை பிறப்பித்தார்.

***தென்னரசு இதை எதிர்பார்த்திருக்கவில்லை. சில மணி நேரங்கள் முன்பு வரை அவன் விதி அவ்வளவு தான் என்று நினைத்து இரக்கப்பட்டு விட்டிருப்பார். இப்போதோ அவர் இதயத்தை இமயம் அழுத்தியது. அவன் விதியோடு அவர் மகள் விதியும் அல்லவா இணைந்திருக்கிறது. சற்று முன் மகளின் பேச்சில் இருந்த அளவுகடந்த ஆனந்தம் நினைவுக்கு வர அவருக்குத் தன் உயிரே போவது போல இருந்தது. நெஞ்சைப் பிடித்துக் கொண்டார்.***

***ஜான்சன் தென்னரசைக் கேட்டார். "என்ன ஆச்சு தென்னரசு"***

***"வாயுத் தொந்தரவு தான். வேறொன்னுமில்லை". தென்னரசு சமாளித்தார். "ஒரு மாத்திரை சாப்பிட்டால் சரியாயிடும்" என்றவர் கஷ்டப்பட்டு முறுவலித்து விட்டுத் தன் அறைக்குப் போனார்.***

***போனவர் அதிகம் யோசிக்கவில்லை. உடனடியாக அவர் பார்த்தசாரதிக்குப் போன் செய்தார். பார்த்தசாரதியின் 'ஹலோ' கேட்டவுடன் அவசரமாக சொன்னார். "ஈஸ்வரைக் கொலை செய்யப் போறாங்க. அவனைக் காப்பாத்துங்க. ப்ளீஸ்"***

***அதற்கு மேல் பேசாமல் இணைப்பைத் துண்டித்து விட்டு அவர் திரும்பிய போது பாபுஜி வாசலில் நின்று அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்.***

# ***அத்தியாயம் - 82***

***உறக்கம் தழுவ ஆரம்பித்த வேளையில் தான் பார்த்தசாரதியின் செல்போன் இசைத்தது. பேசியவர் தன்னை யாரென்று கூட அறிமுகப்படுத்தாமல் சொன்ன செய்தி அவரை அதிரச் செய்தது.***

“ஈஸ்வரைக் கொலை செய்யப் போறாங்க. அவனைக் காப்பாத்துங்க. ப்ளீஸ்”

குரல் தென்னரசு குரல் போலத் தெரிந்தது பிரமையா, உண்மையா என்று அவருக்குத் தெரியவில்லை. பார்த்தசாரதி மின்னல் வேகத்தில் இயங்கினார். உடனடியாகச் சிலருக்குப் போன் செய்து பேசிய அவர் தானும் வேகமாகத் தோட்ட வீட்டுக்குக் கிளம்பினார்.

**************

பாபுஜி சொன்னதை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்து விட்டு குருஜி ஒன்றும் சொல்லாமல் கண்களை மூடிக் கொண்டார். பாபுஜி சொன்னார். “எனக்குப் புரியுது குருஜி. அந்த ஆளை நீங்கள் மட்டுமல்ல எல்லாருமே நம்பினோம். திடீர்னு இப்படி பல்டி அடிப்பான்னு யாருமே எதிர்பார்க்கலை......”

சிறிது நேரம் மௌனம் சாதித்த குருஜி பின் வரண்ட குரலில் கேட்டார். “தென்னரசு பார்த்தசாரதியிடம் பேசினது இது தான் முதல் தடவையா? இல்லை, இதற்கு முன்னாடியும் செல்போன்ல பேசி இருக்கானா?”

”இது தான் முதல் தடவை மாதிரி தெரியுது குருஜி”

குருஜி கண்களைத் திறந்தார். அவர் அதிர்ச்சியில் இருந்து இன்னமும் மீளவில்லை என்பது பாபுஜிக்குப் புரிந்தது. மெல்ல ஒரு புகைப்படத்தையும் ஒரு காகிதத்தையும் அவர் குருஜியிடம் நீட்டினார். ”எகிப்தின் மிலிட்டரி இந்த ஆளைத் தேர்தலில் நிறுத்தலாமான்னு நினைக்குது. இந்த ஆள் நம் ஆளுக்கும் நெருங்கிய நண்பராம். விசேஷ மானஸ லிங்கத்தோட சக்தி காத்து,

புயல், வெள்ளம்னு இயற்கை சக்திகளை மட்டும் தான் கட்டுப்படுத்துமா இல்லை மக்களோட மனசையும் கட்டுப்படுத்துமான்னு இன்னும் அவங்களுக்கு சந்தேகம் இருக்கு. சொல்லப்போனா எனக்குக் கூட அந்த சந்தேகம் இருக்கு. அதைத் தெரிஞ்சுக்க நமக்கு இது நல்ல சந்தர்ப்பம் இல்லையா?”

அந்தப் புகைப்படத்தையும், குறிப்புகள் எழுதிய தாளையும் குருஜி வாங்கிக் கொண்டார். ஆனால் அவர் மனம் மட்டும் இன்னும் தென்னரசு சமாச்சாரத்திலேயே இருந்தது. “மகேஷுக்கு...?”

“மகேஷ் தூங்கப் போயிட்டான். நாங்களா எதுவும் சொல்லப் போகலை”

“சொல்ல வேண்டாம்...”

**************

ஈஸ்வர் இரவு பதினோரு மணி வரை சின்னத் தூக்கம் போட்டு விட்டு பின்பு தான் குளித்து விட்டுப் பூஜை அறைக்குப் போனான். விசேஷ மானஸ லிங்கத்தின் புகைப்படத்தை வணங்கி விட்டு மூச்சில் ஆரம்பித்து அந்தப் புகைப்படத்தில் கவனத்தைக் குவிக்க ஆரம்பித்த போது தான் தன் அருகில் யாரோ வந்து நிற்பதை உணர்ந்தான். கூடவே திருநீறின் மணம் அந்த பூஜை அறையை நிறைத்தது. கண்களைத் திறந்து அவன் பார்த்தால் பசுபதி தான் நின்றிருந்தார். பெரிய தாத்தா இது வரை அவனுக்குத் தரிசனம் தந்தது இல்லை.... அவரை அவன் திகைப்புடனும் பிரமிப்புடனும் பார்த்தான். அவர் கருணை நிறைந்த விழிகளால் அவரைப் பார்த்தார்.

மெய்சிலிர்த்தவனாய் அவன் அவரைக் குனிந்து வணங்கினான். ஒரு துப்பாக்கிக் குண்டு அவன் தலை இருந்த இடத்தைத் தாண்டிச் சென்று சுவரில் பதிந்தது. அதிர்ச்சியுடன் நிமிர்ந்த ஈஸ்வருக்கு ஒரு கணம் ஒன்றும் புரியவில்லை. அப்போது தான் வீட்டு வாசலில் முகமூடி அணிந்திருந்த ஒருவன் துப்பாக்கியை நீட்டிக் கொண்டு நிற்பதை அவன் கவனித்தான். அருகே இருந்த பசுபதியைக் காணவில்லை.

அந்த முகமூடிக்காரனும் அவன் குனிவான் என்று எதிர்பார்த்திருக்கவில்லை. மறுபடி சுட அவன் யத்தனித்த போது ஈஸ்வர் சிவனை மனதில் தியானித்து விட்டு அந்த அறையில் இருந்த தேவாரப் புத்தகத்தை அவன் மீது விட்டெறிந்தான். தேவாரப்புத்தகம் அந்த முகமூடி மனிதன் கையிலிருந்த துப்பாக்கியைத் தட்டிக் கொண்டு போய் விழுந்தது. அவன் மின்னலாய்ப் பாய்ந்து அந்தத் துப்பாக்கியை எடுத்த போது விசில் சத்தம் கேட்டது. அவனுடன் வந்த சகா வெளியில் இருந்து சிக்னல் தருகிறான். 'யாரோ வருகிறார்கள்'. திரும்பிப் பார்த்தான். ஈஸ்வர் காணவில்லை. ஒரு கணம் யோசித்தவன் பின் தலை தெறிக்க வெளியே ஓடினான். ஒரு போலீஸ்காரர் உள்ளே வந்து கொண்டிருந்தார். அவர் அவனைப் பிடிக்க யத்தனிப்பதற்குள் அவன் அவரைத் தாண்டி ஓடினான். அவனைப் பின் தொடர்வதா, இல்லை ஈஸ்வரைப் போய் பார்ப்பதா என்று குழம்பிய போலீஸ்காரர் ஈஸ்வருக்கு ஆபத்து உள்ளதா என்று பார்ப்பதே முக்கியம் என்று நினைத்தவராக வீட்டுக்குள் ஓடி வந்து பூஜையறையை எட்டிப் பார்த்த போது சுவரோடு ஒட்டி ஈஸ்வர் நின்றிருந்தான்.

அடுத்த கால் மணி நேரத்தில் வேறு இரண்டு போலீஸ்காரர்களும் பார்த்தசாரதியும் வந்து சேர்ந்தார்கள்.

**************

ஈஸ்வரைக் கொல்ல முடியவில்லை என்ற செய்தி பாபுஜியை எரிச்சலூட்டியது. இத்தனைக்கும் அவர் அனுப்பிய ஆள் குறி தவறாமல் சுடுவதில் பேர் போனவன். “என்ன ஆச்சு?”

“அவன் திடீர்னு குனிஞ்சு தரையக் கும்பிட்டான் சார். அப்ப மிஸ் ஆயிடுச்சு...” என்று ஆரம்பித்து அந்த ஆள் நடந்ததை எல்லாம் சொன்னான்.

பாபுஜி குருஜியிடம் வந்து ஈஸ்வர் உயிர் தப்பியதைச் சொன்னான். “... அவன் திடீர்னு தரையைத் தொட்டுக் கும்பிட்டானாம். ஏன்னு தெரியலை”

வேதபாடசாலையின் மண்ணை ஈஸ்வர் கும்பிட்டது நினைவுக்கு வர குருஜி சொன்னார். “அவனுக்கு அடிக்கடி தரையைத் தொட்டுக் கும்பிடற பழக்கம் உண்டு”

பாபுஜி குழப்பத்துடனும், கோபத்துடனும் கேட்டார். “அவன் என்ன லூஸா குருஜி?”

**************

பார்த்தசாரதிக்கு ஈஸ்வர் நலமாய் இருப்பதைப் பார்த்த பிறகு தான் நிம்மதி ஏற்பட்டது. ஈஸ்வர் சொன்னதை எல்லாம் கேட்ட போது பசுபதி தன்னைக் காப்பாற்றிக் கொள்ளா விட்டாலும் கூடத் தன் குடும்பத்தாரைக் காப்பாற்றுவதில் இறந்த பின்னும் அக்கறை கொண்டவராகவே இருக்கிறார் என்று தோன்றியது. ஈஸ்வர் அந்த தேவாரப் புத்தகத்தை எறியாமல் இருந்திருந்தாலும்

காப்பாற்றப்பட்டிருப்பானா என்று கேட்டுக் கொண்டார். விடை தெரியவில்லை.

ஈஸ்வர் மற்ற போலீஸ்காரர்களும், பார்த்தசாரதியும் அந்த நேரத்தில் அங்கு வந்து சேர்ந்தது எப்படி என்று கேட்டான். யாரோ ஒரு மர்மநபர் போன் செய்தார் என்று மட்டும் பார்த்தசாரதி தெரிவித்தார். கேட்ட குரல் தென்னரசுவின் குரல் போல் இருந்தது என்று அவனிடம் அவர் சொல்லவில்லை. தென்னரசு பற்றிய சந்தேகத்தை அவர் அவனிடம் சொல்லி இருக்காதது போலவே, குழம்ப வைத்த இந்தப் போன் கால் விஷயத்தையும் அவர் சொல்லவில்லை. தென்னரசு ஒரு புதிராகவே அவருக்கு இருந்தார்....

பரமேஸ்வரனின் பேரனுக்குப் பாதுகாப்பு அளிக்க மேலிடத்தில் சொல்வதில் அவருக்குப் பிரச்சினை இருக்கவில்லை. ஒரு முறை கொலை முயற்சி நடந்திருக்கிறது என்று தெரிந்தவுடன் எத்தனை ஆட்கள் ஈஸ்வரின் பாதுகாப்புக்குத் தேவை என்று கேட்டு அனுமதி அளித்து விட்டார்கள். பார்த்தசாரதியும் ஈஸ்வர் அங்கிருக்கும் வரை தானும் அங்கிருப்பது என்ற முடிவுக்கு வந்தார்.

ஈஸ்வர் இயல்பு நிலைக்குத் திரும்பியதும் முதல் வேலையாக கணபதியைத் தொடர்பு கொள்ள நினைத்தான். கொலை முயற்சி, பசுபதி தரிசனம் போன்ற எத்தனையோ விஷயங்களைப் பற்றி யோசிக்க மனம் முனைந்தாலும் அவன் அந்த விபரீத ஆராய்ச்சிகள் தொடர்ந்து விசேஷ மானஸ லிங்கம் தவறானவர்கள் வசம் போய் விடக் கூடாது என்பதற்கே முன்னுரிமை தந்தான். காலம் அவன் வசம் இல்லை.... அவன் நிதானித்தால் அவர்கள் முந்தி விடுவார்கள். பின் அவர்களை நிறுத்துவது கஷ்டம் என்பதை அவன் உணர்ந்திருந்தான்.

*அதை பார்த்தசாரதியிடம் தெரிவித்து விட்டு பூஜையறைக்குப் போனவனுக்கு விசேஷ மானஸ லிங்கத்தின் அலைகளுடன் லயிக்க முன்பை விட அதிக நேரம் தேவைப்பட்டது. அது சாத்தியமான போது விசேஷ மானஸ லிங்கத்தின் தரிசனம் கிடைத்தது. ஓங்கார நாதம் கேட்டுக் கொண்டிருக்க விசேஷ மானஸ லிங்கம் தனியாக விளக்கொளியில் ஜொலித்துக் கொண்டிருந்தது. மனிதர்கள் யாரும் அருகில் தெரியவில்லை. ஈஸ்வர் மானசீகமாக கணபதியைத் தேடினான். மனக்கண்ணில் கணபதியைப் பார்த்து தன் கவனத்தைக் குவித்தான். சிறிது நேரத்தில் ஒரு அறையில் உறங்கிக் கொண்டிருந்த கணபதி அவன் மனக்கண்ணில் தெரிந்தான். ஈஸ்வர் அவனை அழைத்தான். ”கணபதி, கணபதி”*

*கணபதியை எழுப்புவது சுலபமாக இருக்கவில்லை. ஈஸ்வர் பல முறை முயற்சி செய்ய வேண்டி வந்தது. கணபதிக்கு கனவில் ஈஸ்வர் தெரிந்தான். ஈஸ்வரைக் கனவில் பார்த்த சந்தோஷம் கணபதி முகத்தில் தெரிந்தது. ‘அண்ணன்’ என்று மனதில் சொல்லிக் கொண்டு கணபதி புரண்டு படுத்தான்.*

*“கணபதி... கணபதி... எழுந்திரு கணபதி.. உன் கிட்ட பேசணும்”*

*இயல்பாகவே தூக்கம் அதிகமாக இருந்த கணபதி ’என்ன இந்த அண்ணன் என்னைத் தூங்கவே விட மாட்டேன்கிறார்’ என்று சொல்லிக் கொண்டே மீண்டும் உறங்கப் பார்த்தான். ஆனால் ஈஸ்வர் கூப்பிட்டுக் கொண்டே இருப்பது போல் தோன்றவே கஷ்டப்பட்டு படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான். “என்ன இன்னைக்கு அண்ணன் கனவாவே வருது....”*

*எழுந்து உட்கார்ந்த கணபதியிடம் என்ன சொல்வது, எப்படி சொல்வது என்பது ஈஸ்வருக்குத் தெளிவில்லாமல் இருந்தது. நேரில்*

சொல்வதே கஷ்டம் தான். அப்படி இருக்கையில் இப்படி டெலிபதியாக அனுப்பும் செய்திகள் அவனுக்கு எந்த அளவு புரியும் என்பதும் தெரியவில்லை. இந்த லட்சணத்தில் இவனோடு சேர்ந்து ஞானம் படைத்தவனைத் தேடுவது என்பது இமாலய சாதனையாகவே இருக்கும் போலத் தெரிந்தது.

ஈஸ்வர் சொன்னான். "கணபதி நீ தப்பான இடத்தில் இருக்கே. நீ நினைக்கிற மாதிரி அந்த குருஜி நல்லவர் இல்லை.... அந்த சிவலிங்கத்தை அவர்கள் கண்டிப்பாகத் தப்பான வழியில் தான் பயன்படுத்தப் போகிறாங்க"

கணபதிக்கு ஆச்சரியமாய் இருந்தது. "என்ன இது கண்ணு முழிச்சா கனவு போயிடும்பாங்க. எனக்கு இன்னும் கனவு அப்படியே இருக்கு. அண்ணன் வேற ஏதோ சொல்றாரு"

செய்தி அவனைப் போய் சேரவில்லை என்பது புரியவே ஈஸ்வர் சொன்னதில் சில வார்த்தைகளை மட்டும் அழுத்தமாய் சொன்னான். தப்பான இடம்... தப்பான இடம்.... குருஜி... குருஜி... நல்லவரில்லை..... தப்பு நடக்குது.... தப்பு நடக்குது..."

கணபதிக்குத் தப்பு என்கிற சொல் மட்டும் தெளிவாக மனதில் பதிந்தது. அவனுக்குத் தெரிந்து அவன் சமீபத்தில் செய்த தப்பு சிவன் முன்னாலேயே உட்கார்ந்து கொண்டு சீடை சாப்பிட்டது தான். "ஆமா நான் சீடை சாப்பிட்டது தப்பு தான்.. அதை இவர் வேற சொல்லணுமா?... இது அண்ணனுக்கு எப்படித் தெரிஞ்சுது.... சிவன் வேலையா இது? ஏன் சிவனே, நான் தான் மன்னிப்பு கேட்டுட்டேனே, பின்ன ஏன் ஊர் பூரா அதைச் சொல்லி இருக்கே?"

*ஈஸ்வருக்கு அவன் ஏதோ சாப்பிடுவது பற்றி சொல்கிற மாதிரி இருந்தது. திடீர் என்று விசேஷ மானஸ லிங்கம் கணபதி அருகே தெரிந்தது. கணபதி அந்த சிவலிங்கத்தை நினைத்திருக்கிறான் போல இருக்கிறது! அவன் சொல்லி முடித்த வார்த்தைகளில் மறுபடி கவனம் வைப்பது சுலபமாக இருந்தது. கவனத்தைக் கூராக்கிய போது கணபதி சொன்னதைத் திரும்பக் கேட்க முடிந்தது. ஈஸ்வருக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை.*

*ஈஸ்வர் கணபதி அருகே தெரிந்த விசேஷ மானஸ லிங்கத்தை மானசீகமாக வணங்கினான். "கடவுளே, இப்படி ஒரு வெகுளியைப் படைச்சுட்டு அவனை இப்போது அவர்கள் பக்கம் நிறுத்தி இருக்கிறியே. இது நியாயமா? இவனுக்கு நான் என்ன சொல்லி எப்படி புரிய வைப்பேன்?"*

*கணபதிக்கு ஈஸ்வர் விசேஷ மானஸ லிங்கத்தை வணங்குவது தெரிந்தது. சந்தோஷமாய் சொன்னான். "அண்ணா. இது தான் நான் சொன்ன சிவன்... இவருக்கு ரொம்பவே சக்தி இருக்கு. என்ன நினைச்சாலும் செய்து கொடுப்பார்.... ரொம்பவே நல்லவரு"*

*ஈஸ்வர் பாதி சிரிப்புடனும் பாதி மனத்தாங்கலுடன் பரமனிடம் கேட்டான். "இவன் கிட்ட நல்லவருன்னு சர்டிபிகேட் வாங்கிற அளவு நீ நிஜமாகவே நல்லவன் தானா. அப்படியானால் அவனை ஏன் மோசமான ஆட்கள் பயன்படுத்த நீ அனுமதிக்கிறாய்?"*

*விசேஷ மானஸ லிங்கம் மௌனம் சாதித்தது. பக்தர்களின் தர்மசங்கடமான கேள்விகளுக்கு இறைவன் பதில் அளிப்பதில்லை போலும்! ஈஸ்வர் மறுபடியும் கணபதிக்குப் புரிய வைக்க முயற்சித்தான். "கணபதி குருஜி கெட்டவர். நம்பாதே.*

*சிவலிங்கத்தை வச்சு தப்பு பண்ணப் போறாங்க." என்று திரும்பத் திரும்ப அழுத்திச் சொன்னான்.*

*கணபதிக்கு அவன் சொல்வது புரிகிற மாதிரி இருந்தது. ஆனால் அதன் கூடவே 'என்ன அண்ணன் குருஜியைப் போய் கெட்டவர்ன்னு சொல்றார்?' என்று மனம் பதறியது. "அண்ணா உங்களுக்குக் குருஜியைத் தெரியாது. அதனால தான் அப்படிச் சொல்றீங்க. அவர் ரொம்ப நல்லவரு" என்றான்.*

*ஈஸ்வர் விசேஷ மானஸ லிங்கத்திடம் சொன்னான். "இவன் உன்னையும் நல்லவர்னு சொல்றான். குருஜியையும் நல்லவர்னு சொல்றான். இவன் அகராதியில கெட்டவங்கன்னு யாராவது இருக்காங்களா?"*

*கணபதிக்கு ஈஸ்வர் சிவலிங்கத்தைப் பார்த்து ஏதோ கேட்பது போலத் தெரிந்தது. 'ஓ குருஜி நல்லவரான்னு அண்ணன் சிவன் கிட்ட கேட்கறார் போலத் தெரியுது. சிவனே... நீயே அண்ணன் கிட்ட சொல்லு. குருஜி நல்லவர்ன்னு... அண்ணன் அமெரிக்காவுலயே இருந்தவருங்கறதால அண்ணனுக்கு குருஜி பத்தி தெரியாதுல்ல...."*

*ஈஸ்வர் பேச்சும் செயலும் இழந்து போய் கணபதியைப் பார்த்தான். இவன் மனதில் இந்த அளவு உயர்ந்த இடம் பிடித்துள்ள குருஜியை அவன் எப்படி இறக்குவான்?*

*ஈஸ்வர் ஒன்றுமே சொல்லாமல் தன்னையே பார்ப்பது கணபதிக்கு மனதில் பெரும் சங்கடத்தை ஏற்படுத்தியது. 'அண்ணனும் நல்லவர் தான். அவர் ஏன் குருஜியை தப்பாய் சொல்றார்"*

அவனையும் கூட கணபதி நல்லவர் என்று சொன்னதற்கு விசேஷ மானஸ லிங்கம் சிரிப்பது போல் ஈஸ்வருக்கு பிரமை ஏற்பட்டது. ஈஸ்வர் குருஜியைப் பற்றி இனி இவனிடம் எதுவும் சொல்லிப் பயனில்லை என்பதைப் புரிந்து கொண்டான். அடுத்ததாகச் சொன்னான். "கணபதி அங்கே தப்பு நடக்குது... தப்பு நடக்குது"

ஈஸ்வர் சீடை விவகாரம் இல்லாத தப்பு ஒன்றைச் சொல்கிறான் என்று கணபதிக்குப் புரிந்தது. 'அநியாயமாய் சிவன் சீடை சமாச்சாரத்தை அண்ணனிடம் சொல்லிட்டார்னு நினைச்சுட்டமே. என்னை மன்னிச்சுடு சிவனே. எனக்கு அறிவு அவ்வளவு தான்.... கனவுல வந்து அண்ணன் நிஜமாவே பேசற மாதிரி இருக்கே. என்ன இது? அண்ணன் எதைத் தப்புன்னு சொல்றார்?". கணபதி எழுந்து விட்டான்.

ஈஸ்வர் திகைத்தான். 'இவன் எங்கே கிளம்பிட்டான்?"

கணபதி அறையை விட்டு வெளியே வந்தான். ஹரிராம் அறைக் கதவு திறந்திருந்தது. எட்டிப் பார்த்தான். ஹரிராம் பகவத் கீதை படித்துக் கொண்டிருந்தார். "நீங்க இன்னும். தூங்கலையா. எனக்கு ஒரு உபகாரம் செய்யறீங்களா? என் கனவுல எங்க அண்ணன் வந்து 'தப்பு நடக்குது' 'தப்பு நடக்குது'ன்னு சொல்ற மாதிரி இருக்கு. இது தூக்கத்துல வர்ற கனவு இல்லை. முழிச்சுகிட்டே இருக்கறப்ப வர்ற கனவு. என்ன செய்யலாம். நீங்களே சொல்லுங்களேன்"

ஹரிராமிற்கு கணபதி சொன்னது புரிய சிறிது நேரம் ஆனது. பகவத் கீதையை மூடி வைத்து விட்டு அவனைப் பார்த்துப் புன்னகை செய்தார். இவனுக்கு "முழிச்சுகிட்டே இருக்கறப்ப வர்ற கனவு"

*என்ன என்று பார்த்தார். அவன் மூலமாக அவருக்கு ஈஸ்வர் தெரிந்தான்.*

*ஈஸ்வருக்கு அதிர்ச்சியாக இருந்தது. கடைசியில் குருஜியின் கூட்டத்து ஆள் ஒருவரிடம் போய் இதைச் சொல்கிறானே இவன்?*

*ஹரிராம் கேட்டார். "இது தான் உங்கண்ணனா?"*

*கணபதிக்கு ஆச்சரியமாய் இருந்தது. "ஓ... கனவுல வர்ற ஆளைக் கூட உங்களால பார்க்க முடியுமா? ஆமா அது தான் எங்கண்ணன். அண்ணன்னா சொந்த அண்ணன் இல்லை. அப்படி இருந்திருந்தா அவர் அழகுல பாதியாவது எனக்கு வந்திருக்காதா? அவர் எனக்கு அண்ணன் மாதிரி... இப்ப சிவலிங்கத்துக்கு ஒரு பட்டு வேஷ்டி கட்டியிருக்கேனே, அது அவர் வாங்கித் தந்தது தான்....."*

*கணபதி நிறுத்தாமல் அன்று நடந்ததை எல்லாம் சொன்னான். ஹரிராமிற்கு அவன் சொல்லித் தான் தெரிய வேண்டும் என்றில்லை, அவனைப் பார்க்கையிலேயே அவன் வாழ்க்கையில் இருந்து எந்த விஷயத்தையும் அவரால் தெரிந்து கொள்ள முடியும் என்றாலும் கூட அவன் சொன்னதை சுவாரசியத்துடன் கேட்டார்.*

*"...இன்னொரு வேஷ்டி என் பிள்ளையாருக்கு வாங்கித் தந்திருக்கார். அதையும் உங்களுக்குக் காட்டவா?..." கேட்டு விட்டு பதிலுக்குக் கூடக் காத்திருக்காமல் கணபதி உற்சாகமாகத் தனதறைக்கு ஓடினான்.*

*ஈஸ்வருக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. கணபதி அந்தப் பட்டுத் துணியுடன் வந்து ஆவலுடன் ஹரிராமைக் கேட்டான். "நல்லா இருக்கில்ல?"*

*ஹரிராம் தலையசைத்தார். "இன்னும் இதை என் பிள்ளையார் பார்க்கல." என்று அவன் சொல்ல ஹரிராம் புன்னகைத்தார். அவர் இது வரை இப்படி ஒரு அன்பான நல்ல மனதைப் பார்க்கவில்லை. சொல்லப் போனால் உள்ளொன்று வைத்து புறமொன்று பேசத் தெரியாத ஒரு நல்ல உள்ளத்தை முதல் முறையாகத் தன் வாழ்க்கையில் அவர் பார்க்கிறார்.*

*அவனிடம் கேட்டார். "சரி உங்க அண்ணன் தப்பு நடக்குதுன்னு எதைச் சொல்றார்?"*

*"அது தான் புரியலை" என்று சொன்ன கணபதி விரித்த பட்டு வேஷ்டியைக் கவனமாக மடிக்க ஆரம்பித்தான். ஹரிராம் பார்வை அவனை ஊடுருவி ஈஸ்வரைப் பார்த்தது. ஈஸ்வருக்கு அவரை நம்பலாமா கூடாதா என்று தெரியவில்லை. ஆனால் இப்போதைக்கு அவரை விட்டால் அவனுக்கு வேறு வழியில்லை. அவர் கணபதியைப் பார்த்த பார்வையில் இருந்த கனிவு அவரை நம்பச் சொன்னது.*

*"தயவு செய்து அவனுக்குப் புரிய வையுங்கள்..." என்று ஆரம்பித்த ஈஸ்வர் கணபதிக்குத் தெரிவிக்க நினைத்த விஷயத்தைச் சொன்னான். ஈஸ்வர் மன அலைகளில் அனுப்பியதை ஹரிராம் அப்படியே அவனுக்கு பேச்சு வடிவில் தெரிவித்தார்.*

*கணபதி தலையைப் பலமாக ஆட்டிச் சொன்னான். "அண்ணன் தப்பா புரிஞ்சுகிட்டிருக்கார். குருஜி தப்பு செய்ய மாட்டார்..... அவரை எனக்கு எத்தனையோ வருஷமாத் தெரியும்.... இந்த ஆராய்ச்சி தப்பானதுன்னா அவர் அதுக்கு அனுமதிக்கவே மாட்டார்"*

*ஈஸ்வருக்கு இனி எப்படிச் சொல்வது என்று தெரியவில்லை. பரிதாபமாக அவனைப் பார்க்க கணபதிக்கு அதைப் பார்க்கவும் கஷ்டமாய் இருந்தது. இருதலைக்கொள்ளி எறும்பாய் தவித்த கணபதி ஒரு முடிவுக்கு வந்தான். "குருஜியை நேராவே கேட்டுடறேன்."*

*அவன் உறுதியாகத் தீர்மானித்து விட்டு குருஜியின் அறையை நோக்கி நடந்தான். 'வேண்டாம்.. வேண்டாம்' என்று ஈஸ்வர் பதற்றத்துடன் அனுப்பிய செய்தியை கணபதி பொருட்படுத்தவில்லை.*

# ***<u>அத்தியாயம் - 83</u>***

*ஈஸ்வர் ஹரிராமிடம் அவசரமாகச் சொன்னான். "சார். அவனை தயவு செய்து நிறுத்துங்கள்"*

*ஹரிராமிற்கு என்ன நடக்கின்றது என்று முழுமையாக விளங்கவில்லை. அவரிடம் இருக்கும் அபூர்வ சக்திக்குக் கூட ஒரு கணத்தில் எல்லாவற்றையும் புரியை வைக்க முடியவில்லை. அதனால் அவர் எதிலும் அனாவசியமாகத் தலையிட விரும்பவில்லை.*

*கணபதி அந்த இடத்தில் இருந்து போய் விட்டிருந்தபடியால் ஹரிராம் அவன் தொடர்பில் இருந்து அறுபட்டார். ஈஸ்வர் விசேஷ*

மானஸ லிங்கத்தில் மறுபடி கவனத்தைக் குவித்து அலைகளில் ஒன்றி ஹரிராமை மனதில் உறுதியாக நிறுத்தினான். ஹரிராம் மறுபடி தொடர்பில் வந்தார்.

ஈஸ்வர் அவரிடம் மன்றாடிச் சொன்னான். "தயவு செய்து அவனைப் பிடித்து நிறுத்துங்கள். அவனுக்கு அங்கே ஆபத்து இருக்கு"

ஹரிராம் அசையவில்லை. ஈஸ்வருக்கு அந்த அசைவற்ற தன்மை கோபத்தை ஏற்படுத்த ஆரம்பிப்பது போல் இருந்தது. கோபம் அவனிடம் இப்போது இருக்கும் லயிப்பு சக்தியை அழித்து விடும் என்று அறிவு எச்சரிக்க அந்த எண்ணத்தின் போக்கை ஈஸ்வர் அப்படியே நிறுத்தினான். ஆனாலும் கூட அவனால் கேட்காமல் இருக்க முடியவில்லை. "நீங்கள் உங்கள் வாழ்க்கையில் இது வரைக்கும் ஒருத்தரையாவது நேசிச்சிருக்கீங்களா?"

ஈஸ்வர் மறுபடியும் தன் முழு சக்தியையும் திரட்டி கணபதியைத் தொடர்ந்து எச்சரிக்க ஆரம்பித்தான். ஆனால் ஆண்டாண்டு காலமாய் கணபதி குருஜி மேல் சேர்த்து வைத்திருந்த நம்பிக்கையை அவன் எச்சரிக்கை தகர்க்கவில்லை.

கணபதி வேகமாக குருஜியின் அறைக்குள் நுழைந்தான். கையாலாகாத பரபரப்புடன் ஈஸ்வரும், ஈஸ்வர் கேட்ட கேள்வி லேசாக உறுத்த ஆரம்பிக்க, என்ன தான் நடக்கிறது என்பதை அறியும் ஆவலில் ஹரிராமும் குருஜி அறையில் நடப்பதைப் பார்க்க ஆரம்பித்தார்கள்.....

"என்ன கணபதி?" குருஜி ஆச்சரியத்துடன் கேட்டார்.

குருஜியைப் பற்றி ஈஸ்வர் தவறாகச் சொன்னதைத் தன் வாயால் திரும்பச் சொல்வது கூட அவனுக்கு அநீதியாய் பட்டது. அதனால் குருஜி கெட்டவர் என்று ஈஸ்வர் சொன்னதை மட்டும் அவரிடம் சொல்வதைத் தவிர்த்து விட்டு மடை திறந்த வெள்ளம் போல் கணபதி நடந்ததை எல்லாம் அவரிடம் கொட்டித் தீர்த்தான். குருஜியின் முகத்தில் ஈயாடவில்லை.

கணபதி அழாத குறையாகச் சொன்னான். "குருஜி.... நான் மந்த புத்திக்காரன். சிக்கலான எதுவும் என் தலையில் ஏறாது. பெரிய பெரிய விஷயங்கள் எனக்குப் புரியாது. உங்களோட பிரசங்கத்தை எனக்கு நினைவு தெரிஞ்ச நாள்ல இருந்து நான் கேட்டு வளர்ந்திருக்கேன். உங்கள் வார்த்தைகள் எல்லாம் எனக்கு புரிஞ்சுதுன்னு சொல்ல மாட்டேன்.... ஆனா அது சத்தியம்னு மட்டும் எனக்குப் புரியும்.... சிலதெல்லாம் கேட்கறப்ப அழுகை வரும்... மனசு நிறைஞ்சு போகும்.... ஆனா அது கூட புரிஞ்சு தான்னு சொல்ல மாட்டேன்.... சில சமயம் ஏதோ பெரிய விஷயம், அற்புதமான விஷயம்ங்கிற அளவு தான் எனக்குத் தெரியும்.... அதுலயே மனசு நிக்கும்... கேட்டுகிட்டே இருக்கலாம்னு தோணும்... நான் உங்களை மனசுல பெரிய உயரத்துல வச்சிருக்கேன் குருஜி. நீங்க எனக்கு எத்தனையோ நல்லது செஞ்சிருக்கீங்க. இந்த முட்டாளையும் சரிசமமா, அன்பா நடத்தி இருக்கீங்க. இந்த சக்தி நிறைஞ்ச சிவலிங்கத்துக்கு பூஜை செய்யற பாக்கியத்தையும் தந்திருக்கீங்க."

"ஈஸ்வர் அண்ணனை நான் ஒரே தடவை தான் பார்த்திருக்கேன்.... அவரும் நல்லவரு... பெரிய படிப்பெல்லாம் படிச்சவரு... பார்த்த அரை மணி நேரத்துல எனக்கு அண்ணனாயிட்டாரு.... அன்பா எனக்கும், என் பிள்ளையாருக்கும் பட்டு வேஷ்டி எல்லாம் வாங்கித் தந்திருக்காரு... இப்ப தூங்கிட்டு இருந்தவனை எழுப்பி அவர் இப்படி எல்லாம் சொல்ற மாதிரி

தெரியறது கனவா, இல்லை எனக்குப் பிடிச்ச பைத்தியமான்னு கூட எனக்குப் புரிய மாட்டேங்குது. நான் என்ன செய்யணும், எது சரி, எது தப்புன்னு நீங்க தான் எனக்குச் சொல்லணும். நீங்க என்ன செய்யச் சொல்றீங்களோ அதை நான் செய்யறேன்....”

சொல்லி முடிக்கையில் கணபதி கண்களில் நீர் வழிந்து கொண்டிருந்தது. சொல்லி விட்டு அவன் அவரைப் பார்த்துக் கைகூப்பி நின்றான். குருஜி சிலை போல அமர்ந்திருந்தார். அவன் பேசும் போதே அவரைப் பற்றி அவனிடம் ஈஸ்வர் மோசமான அபிப்பிராயத்தைச் சொல்லி இருக்கிறான், அதை கணபதி அவரிடம் சொல்லாமல் மறைக்கிறான் என்று தெரிந்தது. அதைச் சொல்ல முடியாமல் கணபதி முழுங்கி விட்டு மீதியை மட்டும் சொன்னது அவரது ஆத்மாவையே அசைத்தது.

கணபதி வருவதற்கு இரண்டு மணி நேரத்திற்கு முன்பே அவர் மன அமைதி பறிபோயிருந்தது. பாபுஜி எகிப்திய தேர்தலுக்கு நிற்கப் போகிற ஆளை ஆதரிக்க வேண்டும் என்று சொல்லி தந்து விட்டுப் போன தகவல்களை வைத்து இணையத்தில் அந்த ஆளைப் பற்றி ஆராய ஆரம்பித்த போது பறி போன அமைதி அது. அந்த ஆள் வெடிமருந்து, ராணுவத் தளவாடங்கள் ஆகியவற்றைத் தயாரித்து ரகசியமாக விற்பனை செய்யும் ஆள் என்று பரவலாகச் சொல்லப்படுவதாகத் தெரிந்தது. பெயருக்கு வேறு ஏதோ தொழிற்சாலை நடத்திக் கொண்டிருக்கிறான் என்று தெரிந்தது.

புதியதொரு உலகம் படைக்கக் கிளம்பி இருந்தவருக்கு இந்தச் செய்தி அதிர்ச்சி அளித்தது. பாபுஜியை வரவழைத்தார். பாபுஜி சொன்ன ஆளைப் பற்றித் தெரிந்து கொண்ட எதையும் தெரிவிக்காமல் சாதாரணமாகப் பேசுவது போல் பேசினார். “பாபுஜி, நாம் நீ சொன்ன விஷயத்தை நாளைக்கு பார்த்துக் கொள்வோம்.

பிரச்சினை இல்லை.... அடுத்ததாய் என்ன எல்லாம் செய்யலாம் என்று எல்லாரும் சேர்ந்து யோசித்து வைத்திருக்கிறீர்களா?"

பாபுஜி சொன்னார். "முதல்ல நாம எல்லாருமே நம் அதிகாரத்தையும், பலத்தையும் அதிகப்படுத்திக்கணும்னு முடிவு செய்திருக்கோம் குருஜி. நாம சக்தியுள்ளவங்களா ஆனா தானே உலகத்துக்கு நல்லதைச் செய்ய முடியும்?"

குருஜி தலையாட்டினார். இயல்பான குரலில் தொடர்ந்து பல கேள்விகள் கேட்டுப் பதில்களைத் தெரிந்து கொண்டார். எந்த மாதிரி எல்லாம் சக்திகளை அதிகப்படுத்திக் கொள்வது, தங்கள் நிலைகளைப் பலப்படுத்திக் கொள்வது என்பதில் எல்லாம் அவர்களுக்குத் தெளிவான திட்டங்கள் இருந்தன. அதைப் பற்றி எல்லாம் கலந்து பேசி இருந்தார்கள். ஆனால் புதியதொரு லட்சிய உலகம் படைக்க என்னவெல்லாம் திட்டங்கள் தீட்ட வேண்டும் என்று அவர்கள் இன்னும் யோசிக்க ஆரம்பிக்கவே இல்லை. சொல்லப் போனால் அப்படி ஒரு எண்ணம் இருப்பதற்கான அறிகுறியே தெரியவில்லை. அவரிடம் நீங்கள் என்னவெல்லாம் செய்யலாம் என்று சொல்கிறீர்கள் என்று கேட்கும் ஆர்வம் கூட அவர்களிடம் இருக்கவில்லை....

கிளம்பும் முன் பாபுஜி ஆவலுடன் கேட்டார். "குருஜி நாளைய ஆராய்ச்சிக்கு ஈஸ்வர் ஏதாவது இடைஞ்சல் செய்ய முடியுமா?"

"அவன் என்ன செய்யறான்னு முதல்ல பார்க்கலாம் பாபுஜி." என்று சொல்லி அவரை அனுப்பி வைத்து விட்ட குருஜி பின் உறங்கவில்லை. உறக்கம் வரவில்லை....

ஈஸ்வர் என்ன செய்கிறான் என்பதைத் தெரிவிக்க வந்தது போல் தான் கணபதி பாபுஜி போய் சிறிது நேரத்தில் வந்தான்...பேசினான்... அவனையே பார்த்துக் கொண்டு சிலை போல அமர்ந்திருந்த குருஜிக்கு மனதின் உள்ளே எரிமலைகளே வெடித்துக் கொண்டிருந்தன. கணபதி இங்கிருப்பதால் ஈஸ்வர் பார்வையும் இங்கேயே இருக்கும் என்பது அவருக்குத் தெரிந்தே இருந்தது. ஒரு பக்கம் அவர் ஈகோ தலை தூக்கியது. ஈஸ்வர் முன்னால் தோற்று விடக் கூடாது என்று தோன்றியது. ஆனால் கணபதியின் கள்ளங்கபடமில்லாத முகத்தைப் பார்க்கையில் அவருடைய இளமைக்காலம் நினைவுக்கு வந்தது.

தீராத ஞான வேட்கையுடன் வாழ்க்கையை ஆரம்பித்தவர் அவர். எத்தனை குருக்கள்... எத்தனை ஆசிரமங்கள்... எத்தனை தவங்கள்... எத்தனை தேடல்கள்.. ஒவ்வொரு தேடலிலும் நிறைய கற்று கொண்டவர் அவர்... எத்தனையோ குருக்களை மிஞ்சி இருக்கிறார்.... அக்னி நேத்ர சித்தரிடம் 'உங்கள் நிழலில் கூடப் பாடம் கிடைக்கும் என்று வந்த'தாகச் சொன்னவர்.... கணபதி அளவுக்கு இல்லா விட்டாலும் மனதில் நன்மைகளையே நினைத்து உயர ஆரம்பித்தவர்.... இன்று...?

அவர் நினைவை விட்டகலாத, அக்னி நேத்ர சித்தரின் வார்த்தைகள், இப்போதும் அவர் காதுகளில் எதிரொலிக்கின்றன. "சிகரத்தைத் தொடும் திறமை உள்ளவன் சராசரியாக இருந்து சாவது தான் உலகத்திலேயே அவன் செய்யக்கூடிய மிகப் பெரிய குற்றம்."

சிகரத்தைத் தொடும் திறமை இருந்த அவர் இன்று சராசரியாகக் கூட இல்லை, தரை மட்டத்திற்கு வந்தாயிற்று. இத்தனை நல்லவனை, இத்தனை நம்புபவனை, ஒரு குழந்தையை ஏமாற்றி இனி அதல பாதாளத்திற்கும் போக வேண்டுமா?

அவர் இடையில் மறந்திருந்த, அக்னிநேத்ர சித்தரின் கடைசி வார்த்தைகள், செவிப்பறையில் அறைந்தன. ”கடைசியாக உனக்கு ஒன்று சொல்கிறேன். ஒரு மனிதனை நிர்ணையிப்பது அவனுக்கு என்ன தெரியும் என்பதல்ல, அவன் என்னவாக இருக்கிறான் என்பதே அவனை நிர்ணயிக்கிறது. அதை என்றும் மறந்து விடாதே....”

மனதை மாற்றிக் கொள்ளும் முன்பு சொல்லி விட வேண்டும் என்ற உறுதியுடன் குருஜி கணபதியிடம் சொன்னார். “ஈஸ்வர் என்ன சொல்றானோ அப்படியே செய் கணபதி”

கணபதிக்கு மட்டுமல்ல ஈஸ்வருக்கும் கேட்டதை நம்ப முடியவில்லை. குருஜி கோபத்தில் தான் சொல்கிறார் என்று கணபதிக்குத் தோன்றியது. அவன் வருத்தத்துடன் ஏதோ சொல்ல வாயைத் திறந்தான். ஆனால் குருஜி அவனைப் பேச விடவில்லை. இது வரை தன் வாழ்க்கையில் சொல்லாத வார்த்தைகளை, ஒத்துக் கொள்ளவே வேதனையாக இருந்த வார்த்தைகளை, கஷ்டப்பட்டு அவர் சொன்னார். “கணபதி நாம ஒரு ஊருக்குப் போய்கிட்டு இருக்கோம்னு வச்சுக்கோ. ரொம்ப தூரம் போயிட்டோம். போனதுக்கப்பறம் தான் வந்த பாதை வேறு ஊருக்குப் போகிற பாதைன்னு தெரியுது. என்ன செய்வோம். திரும்பி வந்து சரியான பாதையில போக ஆரம்பிப்போம். இல்லையா? இவ்வளவு தூரம் வந்துட்டமே அந்த வேற ஊருக்கே போயிடலாம்னு நினைப்போமா? இவ்வளவு தூரம் தவறுதலா வந்துட்டமேன்னு வருத்தமாய் இருந்தாலும் போக நினைச்ச ஊர் முக்கியமானதா இருக்கறப்ப உடனே திரும்பத் தானே செய்வோம். அந்த மாதிரி தான் இதுவும். நான் ஒன்னு நினைச்சு இந்த ஆராய்ச்சியை ஆரம்பிச்சேன். இப்ப நான் நினைச்சதுக்கு எதிர்மாறா இந்த ஆராய்ச்சி போகிற மாதிரி எனக்கும் தோணுது. ஆராய்ச்சில இது வரைக்கும் தப்பு நடக்கலை.

ஆனா இனிமே தப்பா தான் நடக்கும் போலத் தெரியுது. அதனால இங்கத்து ஆள்கள் உன் கிட்ட என்ன சொன்னாலும் தலையாட்டு. ஆனால் அவங்க சொல்ற மாதிரி செய்யாதே. ஈஸ்வர் சொல்ற மாதிரியே செய். ஆனால் இதைப் பத்தி இங்கே வேற யார் கிட்டயும் வாயைத் திறக்காதே.”

கணபதி திகைப்புடன் அவரைப் பார்த்தான். அவர் புன்னகைக்க முயன்றார். உள்ளே நடந்து கொண்டிருந்த பிரளயத்தில் அவருக்கு அது சாத்தியப்படவில்லை. கணபதிக்கு தெளிவு பிறந்தது. ”நீங்க சொல்ற மாதிரியே செய்யறேன் குருஜி” என்று சொல்லியவன் சாஷ்டாங்கமாய் விழுந்து அவரை நமஸ்கரித்தான்.

ஈஸ்வர் பிரமித்தான். பரமேஸ்வரன் போலவே குருஜியைப் போன்ற ஒரு மனிதருக்கும் தன் தவறை ஒத்துக் கொள்ள முடிவது எவ்வளவு கஷ்டமான விஷயம் என்பதை மனித மனத்தை ஆழமாய் ஆராய முடிந்த அவனுக்கு உணர முடிந்தது. அவர் நினைத்திருந்தால் கணபதியை எதை வேண்டுமானாலும் நம்ப வைத்திருக்கலாம்... ஆனாலும் மனம் மாறி தவறை ஒத்துக் கொண்டு கணபதி களங்கமடையாமல் அவர் பார்த்துக் கொண்டாரே என்று நினைக்கையில் அவன் மனம் பெரும் நிம்மதி அடைந்தது.

கணபதி திரும்ப வந்தவுடன் ஹரிராமிடம் சொன்னான். “அண்ணன் கிட்ட சொல்லுங்க. அவர் சொன்னதுல ஒன்னு சரி. ஒன்னு தப்பு. ஆராய்ச்சில தப்பு ஆக வாய்ப்பு இருக்குன்னு குருஜியே ஒத்துகிட்டாரு. அதனால அண்ணன் என்ன சொல்றாரோ அப்படியே கேட்டு நடந்துக்கோன்னு அவரே சொல்லிட்டாரு. ஆனா குருஜி கெட்டவருன்னு அண்ணன் சொன்னது தப்பு. அவருக்கு குருஜி பத்தி சரியா தெரியலை. அதான் அப்படி சொல்லி இருக்கார்.... ஆனா அண்ணன் அப்படி சொன்னதை நான் குருஜி கிட்ட சொல்லலை.

*அதனால கவலைப்பட வேண்டாம்னு அண்ணன் கிட்ட சொல்லுங்க”*

**************

*கணபதி போன பிறகு குருஜி அவன் நின்ற இடத்தைத் தொட்டு வணங்கினார். சறுக்கிக் கொண்டிருந்த அவரைத் தடுத்து நிறுத்தியவன் அவன். அக்னி நேத்ர சித்தரின் ஒரு காலத்திய சீடர் மிகவும் கீழிறங்கி விட்ட போதும் பூரணமாய் அழிந்து விடாதபடி உண்மையை உணர்த்தியவன் அவன். அவருடைய மனசாட்சியைத் தட்டி எழுப்பியவன் அவன்.*

*குருஜியின் மனம் கடந்த கால வாழ்க்கையின் பரிசீலனையில் இறங்கி இருந்ததால் உள்ளே இன்னும் ரணகளமாகவே இருந்தது. நீண்ட சிந்தனைக்குப் பின் அந்த நள்ளிரவு நேரத்தில் தளர்ச்சியுடன் தியான மண்டபத்திற்குச் சென்றார். தியான மண்டபத்தில் ஓங்காரம் அமைதியாக ஒலித்துக் கொண்டிருந்தது. விசேஷ மானஸ லிங்கம் தனிமையில் அந்த ஓங்காரத்தில் திளைத்துக் கொண்டிருந்தது. விசேஷ மானஸ லிங்கத்தை வணங்கி விட்டு வழக்கமான இடத்தில் குருஜி அமர்ந்து அதனுடன் மானசீகமாகப் பேச ஆரம்பித்தார்.*

*“உன்னை வசப்படுத்த வந்து நான் என்னையே இழந்து நிற்கிறேன் விசேஷ மானஸ லிங்கமே! உன்னைப் புரிந்து கொண்டதாய் கர்வம் கொண்டவன் என்னையே புரிந்து கொண்டிருக்கவில்லை என்பதை இப்போது தான் உணர்கிறேன். என்னை மன்னித்து விடு மானஸ லிங்கமே”*

*”உன் கழுத்தில் நிற்கிற ஆலகால விஷத்தை விடக் கொடிய விஷம் இருக்கிறது உனக்குத் தெரியுமா? அது தான் ‘நான்’ என்கிற கர்வம். இது எந்த ஞானத்தையும் விஷமாக்கும். எந்த அறிவையும்*

அனர்த்தமாக்கும். எங்கே எல்லாம் தங்கி இருக்கிறதோ அங்கே எல்லாம் நாசத்தைச் செய்யாமல் அது விடாது மானஸலிங்கமே. அந்தக் கர்வத்தில் தான் நானும் நாசமாய் போனேன். இந்த 'நான்' எந்த நல்லதையும் நல்ல விதத்தில் செய்ய விடாது. செய்கின்ற நல்ல காரியத்தை விட அதிக முக்கியத்துவத்தை, தான் எடுத்துக் கொள்ளும். அப்படி நான் என்ற கர்வம் முந்தி, செய்கின்ற காரியம் பிந்தினால் அதில் முழு நன்மை எப்படி இருக்க முடியும்? நான் புதிய உலகம் படைப்பேன், நான் புதியதோர் விதி செய்வேன் என்றெல்லாம் ஆரம்பித்த போது ஒவ்வொன்றிலும் நான் என்ற விஷத்தை முன்னிறுத்தி இருந்ததை உணர மறந்து விட்டேனே மானஸ லிங்கமே."

"தன்னை சரிசெய்து கொள்ளாமல் உலகத்தை சரி செய்யக் கிளம்புவது வேடிக்கையான விஷயமே அல்லவா மானஸ லிங்கமே. ஒவ்வொரு தீவிரவாதியும் அப்படிக் கிளம்பினவன் தானே. மதம், மொழி, நாடு என்று எதை எதையோ காப்பாற்றிக் காட்டுவதாக நினைத்து தன்னுடைய ஆத்மாவைப் பலி கொடுத்தவன் தானே. வேதங்கள் படித்த நான், எல்லா மதங்களின் புனித நூல்களையும் கரைத்துக் குடித்த நான், உன்னை வணங்கிப் பாதுகாத்த அக்னி நேத்ர சித்தரிடம் சிறிது காலம் சீடனாக இருந்த பாக்கியம் படைத்த நான் என் ஆத்ம ஞானத்தைப் பறி கொடுத்ததும் அப்படியே அல்லவா?"

"நான் எப்போது தடம் மாற ஆரம்பித்தேன் என்று எனக்கே விளங்கவில்லை. விளங்கிக் கொள்ள என் கர்வம் விடவில்லை. சின்னச் சின்ன விலகல்கள் என்னை இந்த நிலைக்கு கொண்டு வந்து சேர்த்திருக்கின்றன மானஸ லிங்கமே. எல்லாம் என் கட்டுப்பாட்டில் இருக்கின்றதாய் ஒரு மாயத் தோற்றத்தில் என்னை நம்ப வைத்து உள்ளேயே என்னை செல்லரிக்க வைத்திருக்கின்றன. ஒரு கிரகத்துக்கு விண்கலம் அனுப்பும் போது அது ஒரே ஒரு டிகிரி விலகிப் பயணம் செய்தாலும் அது அடுத்த கிரகத்துக்குப் போய்

சேர்ந்து விடலாம் என்று சொல்கிறார்கள். நான் அப்படியல்லவா போய்ச் சேர்ந்திருக்கிறேன். பசுபதியைக் கொல்ல நான் சம்மதித்த போது ஆரம்பித்த விலகல் என்னை என்னவெல்லாம் செய்ய வைத்து விட்டது பார்த்தாயா? இப்போது தான் யோசித்துப் பார்க்கிறேன், ஆத்ம ஞானம் உபதேசிப்பவனுக்கு குண்டர்கள் துணை எதற்கு? அவனுடைய ஆத்ம பலமே அவனுக்குப் போதாதா? அது போதாதவன், அந்த நம்பிக்கை உறுதியாயில்லாதவன், ஆத்மஞானம் உபதேசிப்பது கேலிக்கூத்தே அல்லவா?...”

“வெளியே யாரிடமும் சொல்ல முடியாததை எல்லாம் உன்னிடம் புலம்பி விட்டேன் மானஸ லிங்கமே! என்னை மன்னித்து விடு. நீ கருணை உள்ளவன். அதனாலேயே கணபதியை என்னிடம் அனுப்பி இந்தக் கடைசி நிமிஷத்திலாவது என்னைக் கண் திறக்க வைத்தாய்? இனி இந்த வாயால் யாருக்கும் உபதேசிக்க மாட்டேன். அடைந்த நல்லதை எல்லாம் இழந்து விட்டேன். ஆரம்பித்த இடத்திலேயே நிற்கிறேன். இந்த ஜென்மத்தில்.... இந்த ஜென்மத்தில் கடைத்தேறுவது முடியாது என்று எனக்குப் புரிகிறது. அடுத்த ஜென்மத்திலாவது என்னைக் கடைத்தேற்றுவாயா மானஸலிங்கமே?”

விசேஷ மானஸ லிங்கம் மௌனம் சாதித்தது. விளையாட்டாய் ஒளிரும் காரியத்தைக் கூட அது செய்யவில்லை.

ஏதாவது ஒரு பதில் கிடைக்குமா என்று குருஜி பொறுத்திருந்து பார்த்தார். ஒரு பதிலும் கிடைக்காமல் போகவே கனத்த மனத்துடன் அதை மீண்டும் நமஸ்கரித்து விட்டு தளர்ச்சியுடன் அங்கிருந்து சென்றார்.

# அத்தியாயம் - 84

ஹரிராமிற்கு ஈஸ்வரின் கேள்வி மனதைத் திரும்பத் திரும்ப தாக்கிக் கொண்டிருந்தது. “நீங்கள் உங்கள் வாழ்க்கையில் இது வரைக்கும் ஒருத்தரையாவது நேசிச்சிருக்கீங்களா?”

அவர் உயிருக்குயிராக நேசித்த காதல் மனைவி ஒரு குறைப்பிரசவத்தில் குழந்தையுடன் இறந்த பிறகு அவர் யாரையும் நேசித்ததில்லை. அவர் நேசம் என்றால் வலி என்று அர்த்தப்படுத்திக் கொண்டு விட்டார். பார்த்த இடங்களில் எல்லாம் அது சரி என்பதற்கான காரணங்களும் அவருக்குக் கிடைத்தன. கற்ற தியானமும், பெற்ற அபூர்வ சக்திகளும் கூட அவர் மனக்காயத்தை ஆற்றியதில்லை. அபூர்வ சக்திகள் வேறு, மன நிம்மதி என்பது வேறு. அந்த அபூர்வ சக்திகள் பக்குவத்தை வரவழைத்ததில்லை. உள்ளே இருந்த ஒரு வெறுமையை நிறைத்ததில்லை. தற்கொலை முயற்சியிலிருந்து அவரைக் காப்பாற்றி அவருக்குக் குருவாக இருந்த சாதுவிடம் பல காலம் கழித்து அவர் ஒரு முறை கேட்டிருக்கிறார். ”என்னை ஏன் காப்பாற்றினீர்கள்? என்னை சாக விட்டிருக்கலாமே?”

“வந்த வேலை முடியாமல் யாரும் சாக முடியாது?”

“நான் வந்த வேலை என்ன?”

அந்த சாது சின்ன முறுவலுடன் பதில் சொன்னார். “அதை வரண்ட மனதில் நீ தெரிந்து கொள்ள முடியாது. மனதில் ஈரம் வேணும். நேசம் வேணும். உன் மனைவி, குழந்தைன்னு நெருக்கமான மனுஷங்க மேல மட்டும் வர்ற நேசம் அல்ல... எல்லார்

மேலயும் வர்ற ஆத்மார்த்தமான நேசத்தை சொல்றேன். அந்த நேசம்னா என்னன்னு ஒரு நாள் புரியறப்ப உன் வேலை என்னன்னு தெரியும். உன் வாழ்க்கையோட அர்த்தமும் உனக்குப் புரியும்.”

ஆண்டுகள் பல போய், வயது கூடிக் கொண்டே வந்த போதும் ஹரிராமிற்கு கடவுள் உட்பட யாரிடமும் அந்த நேசம் ஏற்பட்டதில்லை. கணபதி தான் அந்த நேசத்தை அடையாளம் காட்டினான். அவருடைய குரு சொன்ன ஈரத்தை அடையாளம் காட்டினான். அவனை அவருக்கு மிகவும் பிடித்து விட்டிருந்தது. ஆனால் அவர் அவனையும் நேசிக்க ஆரம்பித்து விடுவோமோ என்று பயந்தார். அந்தப் பயத்தை ஈஸ்வர் அடையாளம் கண்டு கொண்டு தான் கேட்கிறானா இல்லை கல்நெஞ்சக்காரன் என்று முடிவு செய்து விட்டே கேட்கிறானா?

ஈஸ்வரிடம் கருத்துப் பரிமாற்றத்திலேயே அவர் கேட்டார். “கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி என்கிட்ட நீங்கள் உங்கள் வாழ்க்கையில் இது வரைக்கும் ஒருத்தரையாவது நேசிச்சிருக்கீங்களான்னு கேட்டீங்களே ஏன்?”

ஈஸ்வருக்கு குருஜியின் அதிசய மனமாற்றம் பெருத்த மனநிம்மதியை ஏற்படுத்தி இருந்தது. கணபதியைத் தவிர வேறு யாராலும் குருஜியை மாற்றி இருக்க முடியாது என்று ஈஸ்வர் நம்பினான். கணபதியின் கள்ளங்கபடமில்லாத தன்மையும், அவனது அசைக்க முடியாத நம்பிக்கையுமே குருஜியின் அதிரடி மாற்றத்திற்குக் காரணம் என்பதில் அவனுக்குச் சந்தேகமே இல்லை. கொலை கூடச் செய்யத் துணிந்த ஒரு மனிதருக்கு, ஒரு நல்லவனின் நம்பிக்கையைக் கொல்ல மனம் வராமல் போனது மானுடத்தின் வெற்றியே என்று அவன் நினைத்தான்.

ஹரிராமின் கேள்வி மனத்திரையில் வந்து விழ அவன் பதிலளித்தான். “கடவுள் புண்ணியத்துல குருஜி மனம் மாறினதால கணபதி தப்பிச்சான். இல்லாட்டி அவன் நிலைமை என்ன ஆயிருக்கும்னு யோசிச்சீங்களா? பச்சைக் குழந்தை மாதிரி அவன். அவனைத் தடுத்து நிறுத்தி காப்பாத்தணும்னு தோணலையே உங்களுக்கு”

”யாரையும் யாரும் காப்பாத்தணும்னு இல்லை. அந்த வேலையைக் கடவுள் பார்த்துக்குவார். அதுவும் விசேஷ மானஸ லிங்கத்தைத் தொட்டு சுமந்துட்டு வர முடிஞ்சவன் அவன்....”

”கடவுள் கிட்ட நல்லவங்களுக்கு எப்பவுமே பாதுகாப்பு உண்டு. ஆனா மனுஷ ரூபத்துல சில மிருகங்கள் உண்டு. அதுக கிட்ட இருந்து நம்மளை மாதிரி ஆளுங்க தான் நல்லவங்களை காப்பாத்தணும். கடவுள் அவங்களை நமக்கு அறிமுகப்படுத்தறதே அதுக்காகத் தான்”

ஹரிராம் மௌனமாக இருந்தார். அவர் தன் மனைவி, குழந்தை மரணத்திற்குப் பின் யார் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ள விரும்பியதில்லை. தன் வாழ்க்கையே பாரமாக இருக்கையில் வேறு மனிதர்களின் பாரங்களை சுமக்க முடியுமா என்ன? அவனுடைய குருவான சாது அதைத் தான் ஒரு குறையாக நினைத்தாரோ? ”மனதில் ஈரம் வேணும். நேசம் வேணும்....” ”எல்லார் மேலயும் வர்ற ஆத்மார்த்தமான நேசம்” உனக்கு வரும் போது வாழ்க்கையின் அர்த்தம் புரியும் என்று சொன்னாரே, அதையே தான் இவனும் சொல்கிறானோ?..

இவன் சொல்வது போல் குருஜி மனம் மாறாமல் கணபதிக்கு மூளைச்சலவை செய்திருந்தால் என்ன ஆகி இருந்திருக்கும். குருஜி

மனதில் ஓடிய எண்ணங்களைப் பார்த்த போது தான் அவருக்கு என்ன வேண்டுமானாலும் நடந்திருக்கலாம் என்று புரிந்தது. தீமையை எல்லாம் நன்மை என்று தன் வாக்கு சாமர்த்தியத்தால் குருஜியால் கணபதியை நம்ப வைத்திருக்க முடியும். அவனை அவர்கள் பின் எப்படியும் பயன்படுத்தி இருக்க முடிந்திருக்கும். ஒரு அழகான, புனிதமான கற்புள்ள பெண்ணை வேசியாக்குவது போல் அது.... நினைக்கவே மனம் பதறியது...

கணபதி "எங்க சிவன் எப்படிங்க? பரவாயில்லையா?" என்று கேட்டது நினைவுக்கு வந்தது. சோமாலியக் கொள்ளைக்காரர்களுக்கு 'அம்மா எல்லாம் இருப்பாங்க இல்லையா? அவங்களுக்கு எவ்வளவு கஷ்டமாய் இருக்கும்னு நினைக்கறப்ப அழுகையா வருது' என்று சொன்னதும், "எல்லாரும் நல்லா சந்தோஷமாயிருக்கணும்னு கேட்டா என்ன குருஜி?" என்று கேட்டதோடு மனதில் ' தனித்தனியாய் ஒவ்வொருவரும் கேட்பதை விட இப்படி எல்லாரும் சந்தோஷமாய் இருக்க வேண்டும் என்று கேட்பது நல்லது' என்று நினைத்ததும் நினைவுக்கு வந்தது.

அதோடு சற்று முன் குருஜியிடம் அவன் அழுது சொன்ன வார்த்தைகளும், குருஜி அதற்குக் கட்டுப்பட்ட விதமும், அவன் அங்கிருந்து கிளம்பிய பின் அவன் நின்ற இடத்தை குருஜி தொட்டு வணங்கியதும் ஹரிராமின் 'வறண்ட" இதயத்தைப் பெரிதும் ஈரப்படுத்தின.....

"நான் சொன்னதை அண்ணன் கிட்ட சொல்லிட்டீங்களா?" என்று கணபதி அவரிடம் கேட்டு அவர் நினைவலைகளைத் தடுத்தான். ஹரிராம் ஈஸ்வரைப் பார்க்க, கணபதி குருஜி கெட்டவருன்னு அண்ணன் சொன்னது தப்பு என்று சற்று ஆவேசமாகவே சொன்னதை ஆமாம் என்று ஈஸ்வர் முழு மனதுடன்

ஒத்துக் கொண்டான். ”மன்னிச்சுக்கோ கணபதி. எனக்கு அவரை சரியா தெரியலை”

“அது பரவாயில்லை அண்ணா. தெரிஞ்சு யாராவது மத்தவங்களைத் தப்பா நினைப்பாங்களா” என்று கணபதி பெருந்தன்மையுடன் சொல்ல புன்னகைத்த ஈஸ்வர் இனி என்ன செய்வது என்று யோசித்தான்.

குருஜியின் குறுக்கீடு இனி இருக்காது என்பது உறுதியாகி விட்டது. ஆனால் மற்றவர்கள் சும்மா இருக்க மாட்டார்கள் என்பது குருஜி பேச்சில் இருந்து புரிந்தது. இனி நடக்க இருக்கும் ஆராய்ச்சி வில்லங்கமான ஆராய்ச்சியாக இருக்க வாய்ப்பு இருக்கிறது. அதனால் தான் குருஜியே அவர்கள் சொல்கிறபடி கேட்காதே என்று கணபதியிடம் கூறி இருக்கிறார். அவர்களைத் தடுத்து நிறுத்த என்ன செய்ய வேண்டும் என்று ஈஸ்வர் யோசித்தான். அது போன்ற கவலை எதுவுமில்லாமல் கணபதி அந்தப் பட்டு வேஷ்டி பிள்ளையாருக்கு எப்படி இருக்கும் என்று கற்பனை செய்து மகிழ்ந்து கொண்டிருந்தான். ஈஸ்வருக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை.

விசேஷ மானஸ லிங்கத்தை மனதில் நினைத்துக் கொண்டு சொன்னான். “இவன் கவனத்தை என் பக்கம் திருப்புவதே அடிக்கடி கஷ்டமாய் இருக்கிறது. இந்த லட்சணத்தில் இவனுடன் சேர்ந்து இன்னொருவனை வேறு தேடச் சொல்கிறார் சித்தர். வேடிக்கையாயில்லை?”

விசேஷ மானஸ லிங்கம் திடீர் என்று ஒளிர்ந்து மறைந்து ஹரிராம் மட்டுமே ஒரு கணம் தெரிந்தார். அந்த மூன்றாவது ஆள் இவர் தானோ? எதிலும் ஒட்டாமல் சிந்தனை வசப்பட்டு நிற்கும்

*இந்த மனிதர் கணபதியைத் தடுத்து நிறுத்தச் சொன்ன போது கூட அசையாதவர் ஆயிற்றே! இந்த மனிதர் யார் என்று கூடத் தெரியவில்லையே! கணபதியிடம் கேட்க நினைத்தான்.*

*கணபதியை மூன்று முறை அழைத்த பிறகு தான் அவன் கவனம் 'கனவில் வந்திருக்கும் ஈஸ்வர் அண்ணா' மீது திரும்பியது. "யார் அவர்?"*

*"ஓ...இவரைக் கேட்குறீங்களா? இவர் தான் சிவனை ஆராய்ச்சி செய்ய வந்திருக்கிறவங்கள்ல ஒருத்தர். பேரு... பேரு..." அவனுக்கு அவர் பெயர் நினைவில் வரவில்லை. "உங்க பேர் என்னங்க?" என்று கேட்டு விட்டு ஈஸ்வருக்குத் தெரிவித்தான். "ஹரிராம்."*

*எதிரணியில் ஆராய்ச்சிக்கென்று அழைத்து வரப்பட்டவர் என்று அறிந்ததும் ஈஸ்வருக்கு சந்தேகம் தலை தூக்கியது. அவரையே கூர்ந்து பார்த்தான். அவரை எடை போடுவது சுலபமாக இல்லை. ஆனால் எதிரணியில் இருந்த போதும் அவர் எதிரியாக இருக்க சாத்தியமில்லை என்றும் தோன்றியது. ஓலைச்சுவடி வார்த்தைகள் படி தூங்காமல் தேடும் போது அல்லவா அவர் கிடைத்திருக்கிறார்.*

*கணபதி மனத்திரையில் அந்தப் பட்டு வேஷ்டியை தன் பிள்ளையாருக்கு சார்த்தி மறுபடி அழகு பார்க்க ஆரம்பித்திருந்தான். கணபதியையே பார்த்துக் கொண்டிருந்த ஹரிராம் அதை ரசிப்பது போல் தெரிந்தது. நேசமே இல்லாதவர் என்று குற்றம் சாட்டியது தவறோ என்று தோன்ற ஈஸ்வர் அவரிடம் மன்னிப்பு கேட்டான்.*

அவன் எண்ணை அலைகள் வந்து சேர்ந்தவுடன் ஹரிராம் தன் பார்வையை கணபதியிடம் இருந்து ஈஸ்வரிடம் திருப்பினார். ”நீங்கள் கேட்டதுல தப்பே இல்லை. நான் பதில் சொல்லாதது தான் தப்பு... ஒரு காலத்துல ஒரு பொண்ணை உயிருக்குயிராய் நேசிச்சிருக்கேன்....” ஹரிராமிற்குத் தன்னைப் பற்றி சொல்லத் தோன்றியது. சொன்னார்.

ஈஸ்வருக்கு அவரைப் புரிந்து கொள்ள முடிந்தது. அவர் மீது நம்பிக்கை பிறந்தது. அந்த மூன்றாவது ஆளாக இவர் இல்லா விட்டாலும் கூட எதிரியல்ல என்று நம்பத் தோன்றியது. விசேஷ மானச லிங்கத்தை மானசீகமாக நினைத்து வணங்கி விட்டு ஈஸ்வர் அவரிடம் எல்லாவற்றையும் சொன்னான்.

இதற்குள் கணபதி அங்கேயே சுவரில் சாய்ந்து உட்கார்ந்து உறங்க ஆரம்பித்திருந்தான்.

ஹரிராமிற்குத் தன்னை அந்த மூன்றாவது மனிதனாக நினைக்க முடியவில்லை. ஆனால் அவருக்கு அவருடைய குரு சொன்ன அந்த வேளை வந்திருக்கிறது என்பது மட்டும் புரிந்தது.

ஈஸ்வர் இனி அந்த ஆராய்ச்சிகள் வெற்றிகரமாகத் தொடரக் கூடாது. விசேஷ மானஸ லிங்கத்தை அவர்கள் தவறாகப் பயன்படுத்திக் கொள்ள அனுமதிக்கக் கூடாது, அதற்கு உதவ வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அது மனித சமுதாயத்திற்கே அவர் செய்ய முடிந்த பெரிய உதவியாக இருக்கும் என்று சொன்னான்.

ஹரிராம் யோசித்தார். இந்த ஒரு வேலைக்காகத் தான் அவர் இது வரை உயிர் வாழ வேண்டி வந்ததோ? நேசத்தை அவருக்கு கணபதி புரிய வைத்தான். அர்த்தம் இல்லாத வாழ்க்கைக்கு ஒரு அர்த்தத்தை ஈஸ்வர் சொல்லித் தருகிறானோ?... ஹரிராம் சொன்னார். “நான் என்ன செய்யணும்னு சொல்லுங்க”

”ரொம்ப நன்றி. இனி அவர்கள் விசேஷ மானஸ லிங்க சக்திகளுடன் லயிக்கக் கூடாது. அவர்கள் செய்யச் சொல்கிற ஆராய்ச்சியில் இருந்துகிட்டே அவர்களுக்கு எதிராக அதை நீங்கள் செய்யலாம். விசேஷ மானஸ லிங்கத்திற்கும் அவர்களுக்கும் நடுவே ஒரு தடுப்பு சக்தியை உருவாக்கலாம். அது உங்களுக்கு கஷ்டமில்லை. உங்கள் சப்ஜெக்ட் தான் அது”

ஹரிராம் தலையசைத்தார்.

ஈஸ்வர் “கணபதி” என்றழைத்து கவனத்தை அவன் பக்கம் திருப்பிய போது தான் அவன் உறங்குவதைக் கவனித்தான். சிரித்துக் கொண்டே எழுப்பினான். “கணபதி... கணபதி...”

“ஐயோ இந்த அண்ணன் என்னை ஏன் தூங்கவே விட மாட்டேன்கிறார்...” என்று சிறிது சலித்துக் கொண்டே கணபதி விழித்தான்.

சோமாலிய கடல் கொள்ளைக்காரர்கள் ஆராய்ச்சியில் மற்ற மூன்று பேரை விட ஜோராக சிவனின் ருத்ர தாண்டவத்தைக் கற்பனை செய்த கணபதியின் கற்பனைக்குத் தகுந்த மாதிரி அவர்கள் படகும் அவர்களும் சூறாவளியில் சிக்கி ஆடி படாதபாடு பட்டதை

நினைத்துப் பார்த்த ஈஸ்வர் அடுத்த நாள் ஆராய்ச்சியில் என்ன செய்ய வேண்டும் என்று கணபதிக்குச் சொல்லித் தந்தான்.

**************

மறுநாள் ஆராய்ச்சிக்கு எகிப்தின் தேர்தலில் ஜனாதிபதியாக நிறுத்தப்பட உத்தேசித்த நபரின் புகைப்படம் வழங்கப்பட்டது. அந்த நபரின் செல்வாக்கை அதிகரிக்கச் சொன்னார்கள். இன்னும் மூன்று நாள்களில் நடக்க இருக்கும் கருத்துக் கணிப்பில் அது உறுதிப்படுத்தப்பட வேண்டும் என்று சொன்னார்கள். கணபதியை அவர்கள் ஒரு பொருட்டாக நினைக்கவில்லை. மற்ற மூவரைத் தான் அவர்கள் அதிகம் நம்பினார்கள். ஆனால் தியான மண்டபத்திற்கு குருஜி வரவில்லை.

ஜான்சன் பாபுஜியைக் கேட்டார். "என்னாச்சு?"

பாபுஜி குருஜியின் அறைக்கு விரைந்தார். குருஜி ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். "குருஜி நேரமாயிடுச்சு. கவனிக்கலையா?"

குருஜி பழைய குருஜியாகத் தெரியவில்லை. ஒரே நாளில் பல வயது கூடினது போலத் தெரிந்தார். "என்ன ஆச்சு குருஜி"

குருஜி களைப்புடன் சொன்னார். "என்னவோ மாதிரி இருக்கு. இன்னைக்கு தியானம் எனக்கு கைகூடும்னு தோணலை. அதனால் தான் வரலை. நீங்க அதை ஆரம்பிச்சுக்கோங்க. மத்தவங்க எல்லாம் இருக்காங்க தானே"

தலையசைத்த பாபுஜிக்கு ஏமாற்றமாக இருந்தது. "ரெஸ்ட் எடுத்துக்கோங்க. குருஜி" என்று சொல்லி விட்டு தியான

மண்டபத்திற்கு வந்து ஜான்சனிடம் விஷயத்தைச் சொன்னார். ஜான்சனுக்கும் ஏமாற்றமாகத் தான் இருந்தது. ஆனால் ஆரம்பத்தில் வெறும் மூன்று பேரை வைத்துத் தானே ஆராய்ச்சியை நடத்துவதாக இருந்தது, பின்பு தானே குருஜியும் அதில் சேர்ந்தார் என்ற நினைவு வர, அது பெரிய விஷயமில்லை என்று சமாதானப்படுத்திக் கொண்டார்.

ஆராய்ச்சி ஆரம்பமானது. முந்தைய நாளைப் போலவே அவரவர் இடத்தில் அமர்ந்து கொண்டு ஆரம்பித்தார்கள். ஈஸ்வர் அதே நேரத்தில் தோட்ட வீட்டு பூஜை அறையில் அமர்ந்து கொண்டு ஆரம்பித்தான். சிவனுக்கும், கியோமி அலெக்ஸுக்கும் நடுவே ஒரு தடை எழுப்ப வேண்டும் அதனால் நடுவே ஒரு நந்தி இருப்பதாகவும் அவர்களுக்கு அது சிவனை மறைப்பதாகவும் எண்ணிக் கொள்ள ஈஸ்வர் கணபதியிடம் சொல்லி இருந்தான். கணபதிக்கு அதில் சிறிதும் சிரமம் இருக்கவில்லை. நந்தனாருக்கு நந்தி சிவனை மறைத்து நின்ற கதையை அவன் படித்திருக்கிறான். அந்த நந்தி பிரம்மாண்டமாக அலெக்ஸி, கியோமி முன்னால் வளர்ந்து கொண்டே போவது போல தத்ரூபமாக நினைக்க ஆரம்பித்தான்.

ஹரிராம் ஆல்ஃபா தீட்டா அலைகளுக்கு வந்து முன்பே கற்றிருந்த மந்திரக் காப்புத் தடுப்புச் சுவரை எழுப்ப ஆரம்பித்தார். இந்த சக்திகளில் மற்ற இருவரை விட நன்றாகவே முன்னேறி இருந்த காரணத்தால் அவர்கள் இருவரும் அறிந்து விடாதபடி அதை ரகசியமாய் அவரால் செய்ய முடிந்தது. ஈஸ்வர் அங்கிருந்தபடியே ஒரு பெரிய திரையை விசேஷ மானஸ லிங்கத்திற்கு முன்பு உருவகப்படுத்திக் கொண்டிருந்தான்.

அலெக்ஸியும் கியோமியும் ஆல்ஃபா அலைகளுக்குப் போன போது விசேஷ மானஸ லிங்கத்தின் அலைகள் அகப்படவில்லை.

அவர்கள் அலைகள் பாதியிலேயே ஏதோ ஒன்றில் இடித்துக் கொண்டு நிற்பது போல அவர்கள் உணர்ந்தார்கள். அவர்கள் எத்தனை தான் முயன்றாலும் அதைத் தாண்டிச் செல்ல முடியவில்லை.

ஏமாற்றத்துடன் அவர்கள் தியானத்தில் இருந்து மீண்டு வந்து ஜான்சனிடம் சொன்னார்கள். அவர்கள் சொல்லும் போது ஹரிராமும் சேர்ந்து கொண்டு அதையே சொன்னார். ஜான்சன் EEG மெஷின்கள் பதித்து இருந்த அலைகளை மகேஷிடம் மறுபடியும் சரி பார்த்து சொல்லச் சொன்னார். மகேஷ் பார்த்துச் சொன்னான். அலெக்ஸியும், கியோமியும் ஆல்ஃபா அலைகள் எட்டு சிபிஎஸிலும், ஹரிராம் தீட்டா ஆறு சிபிஎஸிலும் இருந்திருப்பது தெரிந்தது. ஜான்சன் குழப்பத்துடன் கணபதியைப் பார்த்தார். ஹரிராமிற்கு திக்கென்றது. ஒரு வேளை ஜான்சன் கூப்பிட்டுக் கேட்டால் சாமர்த்தியமாய் இவனுக்குப் பொய் சொல்ல வராதே!

கணபதி தான் எழுப்பி இருந்த நந்தியிடம் பேசிக் கொண்டிருந்தான். "நீ நந்தனாருக்கு சிவனை மறைச்சது சரியா?" என்று கேட்டுக் கொண்டிருந்தான். இந்த முட்டாள் ஆராய்ச்சியில் பிரச்சினை வந்திருப்பது கூடத் தெரியாமல் ஏதோ கற்பனையில் மிதந்து கொண்டிருக்கிறான் என்று மனதினுள் சலித்துக் கொண்ட ஜான்சன் கணபதியை எதுவும் கேட்கவில்லை.

அவர் மூன்று பேரையும் கேட்டார். "தடுப்பது என்ன என்று உங்களுக்குத் தோன்றுகிறது?"

கியோமி சொன்னாள். "ஏதோ சுவர் தடுக்கிற மாதிரி இருக்கு"

அலெக்ஸி சொன்னார். "ஏதோ மாடோ எருமையோ மறைக்கிற மாதிரி இருக்கு"

ஹரிராம் சொன்னார். "யாரோ ஆள் இடையில் நிற்கிற மாதிரி தெரிகிறது"

ஜான்சன் மூவரும் மூன்று விதமாகச் சொல்கிறார்களே என்று குழம்பினார். தடைகளைச் சொல்லும் போது மனிதர்கள் ஆழ்மனதில் தங்கள் பழைய அனுபவங்களில் உள்ள தடைகளுடன் சம்பந்தப்படுத்திக் கூட உணர்வதுண்டு. அதனால் இப்படி இருக்கலாம். இவர்கள் மூவரில் ஆழமான அலைகளில் இருப்பது ஹரிராம் தான். அவர் சொல்வது சரியாக இருக்கலாம். தடுப்பது ஆள் என்பது தான் சரியாக இருக்கும். அது ஈஸ்வர் தான்.....

"எதற்கும் நீங்கள் ஒரு மணி நேரம் ஓய்வு எடுத்து விட்டு மறுபடி ஆரம்பியுங்கள்" என்று சொல்லி மூவரையும் அனுப்பினார். பாபுஜி கேட்டார். "என்ன ஆகியிருக்கும்". ஜான்சன் சொன்னார். "ஈஸ்வர்"

பாபுஜிக்கு ஆத்திரமாய் வந்தது. அங்கு நடப்பதை எல்லாம் நேரடி ஒளிபரப்பில் பார்த்துக் கொண்டிருந்த அறுவரில் நால்வர் சைகைகளில் பாபுஜியிடம் என்ன பிரச்சினை என்று கேட்டார்கள். வந்து சொல்கிறேன் என்று பதிலுக்கு சைகை காட்டி விட்டு பாபுஜி ஜான்சனையும் அழைத்துக் கொண்டு குருஜியின் அறைக்கு விரைந்தார். இப்போதும் குருஜி எதையோ எழுதிக் கொண்டிருந்தார். அவர்களைப் பார்த்ததும் கேட்டார். "என்ன ஆச்சு?"

சொன்னார்கள். குருஜி முகத்தில் திகைப்பைக் காட்டினார். களைப்புடன் கண்களை மூடிக் கொண்டு ‘எதற்கும் இன்னொரு தடவை முயற்சி செய்து பாருங்கள்” என்றார்.

வெளியே வந்த பாபுஜி ஜான்சனைக் கேட்டார். “என்ன ஆச்சு இவருக்கு?”

“உடம்புக்கு முடியலை போல இருக்கு” ஜான்சன் சொன்னார்.

பாபுஜி தனதறைக்குப் போய் அறுவருடனும் வீடியோ கான்ஃப்ரன்ஸிங்கில் பேசினார். நடந்ததை எல்லாம் சொன்னார். அவர்கள் ஆறு பேருக்கும் அது பெரிய ஏமாற்றமாக இருந்தது. ஆரம்பத்தில் குருஜி விசேஷ மானஸ லிங்கத்தைப் பற்றிப் பேசிய போது அவர்களுக்கு சுவாரசியமான அவநம்பிக்கை மட்டும் தான் இருந்தது. ஆனால் சோமாலியக் கடற்கொள்ளையரின் மரணம் அதில் அசைக்க முடியாத நம்பிக்கையை ஏற்படுத்தி விட்டிருந்தது. இதை வைத்துக் கொண்டு உலகையே நம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து விடலாமே என்று தோன்ற ஆரம்பித்து இருந்தது. ஒரே நாளில் உறங்காமல் கனவுகளை வளர்த்துக் கொண்ட அவர்கள் தாங்கள் எப்படி எல்லாம் ஆக வேண்டும், என்ன எல்லாம் செய்ய வேண்டும் என்று பெரிய பட்டியல்களையே வைத்திருந்தார்கள். பாபுஜியோ அவர்களைப் போல் இருமடங்கு நீண்ட பட்டியலை உருவாக்கி வைத்திருந்தார். இந்த நிலையில் இப்படி ஒரு தடங்கல் வந்தது அவர்கள் ஏழு பேரையும் பைத்தியம் பிடிக்கச் செய்து விடும் போல இருந்தது.

இஸ்ரேல்காரரர் கேட்டார். “குருஜி ஏன் இப்படி செய்யறார். அவர் அப்படி என்ன தான் எழுதுகிட்டிருக்கார்?”

*பாபுஜி சொன்னார். ‘ஏதோ உயில் மாதிரி தெரியுது”*

*“உயிலா? அப்படின்னா அவருக்கு நிஜமாகவே உடம்புக்கு முடியலைன்னு நினைக்கிறேன். இனி அவர் நம் ஆராய்ச்சிக்கு பயன்படுவார்னு தோணலை” அமெரிக்கர் சொன்னார்.*

*“ஈஸ்வர் தான் பிரச்சினைன்னா அவனை தீர்த்துக் கட்டிடலாமே” எகிப்தியர் சொன்னார்.*

*“அந்தத் தோட்ட வீட்டுக்கு வெளியே ஒரு போலீஸ் படையே இருக்கு. அவனை நாம் இப்போதைக்கு ஒன்னும் செய்ய முடியாது” பாபுஜி சொன்னார்.*

*“எதற்கும் இன்னொரு தடவை ஆராய்ச்சியைத் தொடர்ந்து பாருங்கள். பிறகு முடிவு செய்யலாம்” ஜப்பானியர் சொன்னார்.*

*ஒரு மணி நேரத்தில் மறுபடி ஆராய்ச்சி தொடர்ந்தது. அதே விளைவு தான்.*

*ஏழு பேருடைய ரத்த அழுத்தமும் அதிகரித்துக் கொண்டிருந்தது. தென்னாப்பிரிக்கர் தனக்குத் தெரிந்த ஒரு மந்திரவாதியைச சந்தித்து ஆலோசனை கேட்டு விட்டு மறுபடி பாபுஜியைத் தொடர்பு கொண்டார்.*

*"...அவர் சொல்றார். அந்த சிவலிங்கம் பக்கத்துல உட்கார்ந்திருக்கிற பையனைக் கொன்றால் அந்த எதிர்ப்பு சக்தியை அழிச்சுட முடியுமாம்"*

# ***அத்தியாயம் - 85***

*கணபதியைக் கொன்று விட்டால் எதிர்ப்பு சக்தியை அழித்து விடலாம் என்று கேள்விப்பட்டவுடன் மறுபடி வீடியோ கான்ஃப்ரன்சிங்கில் ஆலோசனை செய்தார்கள். அவர்கள் கேட்டுக் கொண்டபடி பாபுஜி ஜான்சனை அழைத்துப் பேசினார்.*

*"ஏன் ஜான்சன் அந்தப் பையன் கணபதி விசேஷ மானஸ லிங்கத்துக்கு அவசியம் தானா?"*

*ஜான்சன் சொன்னார். "தெரியலை. தென்னரசும், குருஜியும் தான் அந்த சிவலிங்கத்திற்கு நித்ய பூஜை தடைபட்டு விடக் கூடாதுன்னு சொல்லிகிட்டு இருந்தாங்க. அப்படி பூஜை அவசியம்னா கணபதியை விட்டால் நமக்கு வேற வழி கிடையாது"*

*"அந்த விசேஷ மானஸ லிங்கத்துக்கு பூஜை செய்யாட்டி என்ன ஆகும்?" ஜெர்மானியப் பெண்மணி கேட்டாள்.*

*"தெரியலை. குருஜியைத் தான் கேட்கணும்" ஜான்சன் சொன்னார்.*

*உடனடியாக குருஜியிடம் ஜான்சனும், பாபுஜியும் போனார்கள். கணபதியைக் கொன்றால் என்ன என்கிற ரீதியில் பாபுஜி கேட்டதும் குருஜிக்கு வந்த கோபத்திற்கு அளவில்லை. ஆனால் கண்ணைக் கூட*

இமைக்காமல், பாதிப்பையே காட்டாமல் குருஜி பாபுஜியைப் பார்த்தார். இவனிடம் நல்லது கெட்டது பேசிப் புண்ணியம் இல்லை. வியாபாரியிடம் லாப நஷ்டக் கணக்கு தான் பேச வேண்டும். ”விசேஷ மானஸ லிங்கம் சக்தி வாய்ந்ததாய் இருக்கணும்னா அதுக்கு தொடர்ந்து நித்ய பூஜை நடந்து தானாகணும். இவனுக்கு முன்னாடி ரெண்டு நாள் அதுக்குப் பூஜை செய்தவன் பயந்து ஓடினதுக்கப்புறம் இவனைக் கூட்டிகிட்டு வர ஒரு நாளுக்கு மேல ஆச்சு. அந்த நாள்ல வேதபாடசாலையில் சித்தரே ரகசியமாய் வந்து பூஜை செய்துட்டுப் போயிருக்கார். அப்படின்னா நித்ய பூஜை எவ்வளவு முக்கியம்னு உங்களுக்கு புரிஞ்சிருக்கணும். அவனைக் கொன்னுட்டா அந்த சிவலிங்கத்தோட மதிப்பு வெறும் ரெண்டாயிரம் ரூபாய் ஆயிடும். உனக்கு கேட்டதெல்லாம் கொடுக்கிற கல்பவிருக்ஷம் வேணுமா இல்லை ரெண்டாயிரம் ரூபாய் அவசரமாய் தேவைப்படுதா?”

பாபுஜிக்கு அந்த நாளில் அந்த சிவலிங்கத்தின் மீது திபெத் பகுதியில் பூக்கும் காட்டுப் பூக்கள் இருந்ததாய் கேள்விப்பட்டதும் ஞாபகம் வந்தது. மன உளைச்சலுடன் பாபுஜி அழாத குறையாகக் கேட்டார். ”அப்படின்னா என்ன தான் செய்யறது குருஜி”

“எல்லாருமா சேர்ந்து வேறெதாவது வழியை யோசிங்க பாபுஜி. எனக்கு உடம்பு சரியாயிருந்தா நானே ஏதாவது வழி கண்டுபிடிச்சுச் சொல்லி இருப்பேன்...” என்று சொல்லி குருஜி கண்களை மூடிக் கொள்ள வேறு வழியில்லாமல் இருவரும் வெளியே வந்தார்கள்.

ஜான்சனையும் கூட்டிக் கொண்டு தனதறைக்குப் போன பாபுஜி மறுபடியும் அந்த அறுவருடனும் ஆலோசனை நடத்தினார். ஆறு பேரும் பரபரப்புடனும், டென்ஷனுடனும் பைத்தியம் பிடித்தது போல இருப்பதாக ஜான்சனுக்குத் தோன்றியது. அவருக்கு அதைத்

தப்பு சொல்லத் தோன்றவில்லை. இப்படியொரு மகாசக்தி நிரூபணமாகி அவர்கள் வசம் இருக்கையில் அதை உபயோகிக்க வழியில்லாமல் போனால் பின் எப்படித் தான் இருக்கும்? அவருக்கே இப்போது பணம் நிறைய வேண்டி இருக்கிறது. விவாகரத்து செய்த மனைவிக்குத் தரவேண்டிய பணம் அற்ப சொற்பம் அல்ல. இந்த ஆராய்ச்சிகள் வெற்றி பெற்று விட்டால் அவரும் பின் எப்போதும் பணத்திற்குக் கவலைப்பட வேண்டியதில்லை... விசேஷ மானஸ லிங்கம் தயவு செய்யுமா?

**************

குருஜி அவன் அறைக்குள் வந்த போது கணபதிக்கு பரபரப்பு தாங்கவில்லை. “கூப்பிட்டிருந்தால் நானே வந்திருப்பேனே குருஜி” என்று ஆதங்கப்பட்டுக் கொண்டே வரவேற்றான்.

குருஜி அவனைக் கனிவுடன் பார்த்துச் சொன்னார். “நான் கிளம்பறேன் கணபதி உன் கிட்ட சொல்லிட்டு போகலாம்னு வந்தேன்”

அவருக்கு வேறுபல வேலைகள் இருப்பதால் அதையெல்லாம் கவனிக்கப் போகிறார் என்று நினைத்த கணபதி தலையாட்டினான். குருஜி அவனிடம் ஒரு உறையை நீட்டினார். “இது உனக்கு நான் தர வேண்டிய பணம். இன்னும் ரெண்டு அல்லது மூணு நாளைக்கு மேல் நீ இங்கே இருக்க வேண்டி வராதுன்னு நினைக்கிறேன். அதனால அது வரைக்கும் கணக்கு போட்டு தந்திருக்கேன்”

அந்தப் பணத்தை வாங்க அவனுக்கு கூச்சமாய் இருந்தது. பணத்திற்காகத் தானே எனக்கு பூஜை செய்தாய் என்று சிவன் கேட்பது போல இருந்தது. ஆனால் அம்மாவிடம் அவன் நல்ல தொகை கிடைக்கும் என்று சொல்லி விட்டுத் தான் கிளம்பி

*வந்திருக்கிறான். சுப்புணிக்கும் அவன் பிள்ளையாருக்குப் பூஜை செய்ததுக்குப் பணம் தர வேண்டும். என்ன தான் செய்வது என்ற தர்மசங்கடம் அவன் முகத்தில் தெரிந்தது.*

*குருஜிக்கு அவன் தர்மசங்கடம் புரிந்தது. புன்னகையோடு சொன்னார். "நான் கிளம்பறேன்னு நினைச்சவுடனே என் கனவுல உன்னோட சிவன் "கணபதி கணக்கை செட்டில் பண்ணாம போயிடாதே"ன்னு உத்தரவு போட்டுட்டார். அதனால தான் உடனே கொண்டு வந்துட்டேன்..."*

*கணபதிக்கு கண்கள் நிறைந்தன. 'இந்த சிவனுக்குத் தான் எத்தனை பாசம் என் மேல. என் நிலைமையைப் புரிஞ்சு வச்சுட்டு குருஜி கிட்ட இப்படி சொல்லி இருக்காரே". சிவனே சொன்ன பிறகு பணம் வாங்க அவனுக்குத் தயக்கம் இருக்கவில்லை. சந்தோஷமாக வாங்கிக் கொண்டான்.*

*அவனையே பார்த்துக் கொண்டிருக்கையில் குருஜி மனம் லேசாகியது. கிளம்பினார். கணபதி அவர் காலில் விழுந்து நமஸ்கரித்தான். குருஜிக்கு கால்களும் மனதும் கூசின. 'உன்னை ஆசிர்வதிக்கிற அளவுக்கு எனக்கு வயசு ஒன்னைத் தவிர வேற எந்த தகுதியும் இல்லையே கணபதி!' என்று மனதில் அழுதார்.*

*வாசல் வரை போனவர் திரும்பி அவனைப் பார்த்துக் கேட்டார். "எனக்கு ஒரு உபகாரம் செய்வியா கணபதி?"*

*"என்ன இப்படிக் கேட்கறீங்க குருஜி. உத்தரவு போடுங்க. நான் செய்யறேன்"*

*“நீ உன் சிவனையும் பிள்ளையாரையும் கும்பிடறப்ப எனக்காகவும் வேண்டிப்பியா?” சொல்லும் போதே அவர் குரல் உடைந்தது.*

*அவர் தமாஷ் செய்கிறாரோ என்ற சந்தேகம் கணபதிக்கு வந்தது. ஆனால் அவர் உணமையாகவே கேட்கிறார் என்பது புரிந்த போது அவன் நெகிழ்ந்து போனான். ’என்னையும் ஒரு பொருட்டாய் மதித்து இப்படிக் கேட்கிறாரே இத்தனை பெரிய மனிதர்’ என்று நினைத்தவனாய் கைகூப்பியபடி சொன்னான். “கண்டிப்பா வேண்டிக்கறேன் குருஜி”.*

*கடைசியாக ஒரு முறை கண்கள் நிறைய அவனைப் பார்த்து விட்டு குருஜி அங்கிருந்து கிளம்பினார்.*

**************

*பாபுஜி மறுபடியும் மற்றவர்களைக் கலந்தாலோசித்தார். எகிப்தியர் திட்டவட்டமாகச் சொன்னார். “பாபுஜி. நீங்கள் இனி எதற்கும் குருஜியை நம்பிப் பயனில்லை.... நமக்கு உதவ வேறு யாரையாவது கண்டுபிடிப்பது நல்லது”*

*தென்னாப்பிரிக்கர் சொன்னார். “யாரோ தடுப்பு மந்திரமோ, சூனியமோ செய்திருக்கிறார்கள். அதை உடைக்க ஒரு திறமையான ஆளைப் பிடிப்பது நல்லது பாபுஜி. எங்கள் நாட்டில் இருந்து கூட என்னால் ஆளை அனுப்ப முடியும். ஆனால் உடனடியாக அனுப்புவதில் விசா, போலீஸ் கண்காணிப்பு என்று நிறைய சிக்கல் இருக்கிறது. உங்கள் நாட்டிலேயே ஒரு ஆளைப் பிடித்து உடனடியாக அந்த தடுப்பு சக்தியை உடைக்கப் பாருங்கள்... உதயன் சுவாமியை வரவழைக்க முடியுமா என்று இன்னொரு தடவை குருஜியிடம் கேட்டுப் பாருங்களேன்.”*

”இதற்கு முன்னால் அதைக் கேட்டதற்கு என்னை ஏதோ அபசாரம் செய்தது மாதிரி குருஜி பார்த்தார். பணத்தினால் வாங்க முடியாத விஷயங்கள் உலகத்துல இருக்குன்னு கடுமையாய் சொன்னார். அதனால இன்னொரு தடவை கேட்கறதில் அர்த்தமே இல்லை”

“அப்படியானால் வேறு யாராவது ஆளைச் சீக்கிரமாய் பார்த்துச் செய்ய வேண்டியதை உடனடியாகச் செய்யுங்கள்” என்றார் எகிப்தியர்.

பரபரப்புடன் யோசித்து விட்டு பாபுஜி உடனடியாகத் தன் நெருங்கிய நண்பர்களுக்குப் போன் செய்தார். விசேஷ மானஸ லிங்கத்தைப் பற்றிச் சொல்லாமல் மந்திரம் சூனியம் ஆகியவற்றை உடைக்க முடிந்த நம்பகமான ஆள்கள் இருக்கிறார்களா என்று விசாரித்தார். இரண்டு நண்பர்கள் கேரளாவில் இருக்கும் நம்பீசன் என்ற ஒரு மந்திரவாதியைச் சொன்னார்கள். செய்யும் வேலைக்கு அவர் வாங்கும் கூலி அதிகம் என்றாலும் அவர் சக்தி வாய்ந்தவர், ரகசியம் காக்கும் நம்பிக்கையான மனிதர், அவரை சில வேலைகளுக்குப் பயன்படுத்தி இருக்கிறோம், அவர் சக்தியை நேரடியாக உணர்ந்திருக்கிறோம் என்று சொன்னார்கள். அதற்கு மேல் யோசிக்காமல் உடனடியாக பாபுஜி அந்த மந்திரவாதியைத் தொடர்பு கொண்டார். ”என்ன பணம் வேண்டுமானாலும் தருகிறேன். உடனே விமானத்தில் கிளம்பி வாருங்கள்”. ஒப்புக் கொண்டு நாளை அதிகாலை வந்து சேர்வதாக அந்த மந்திரவாதி உறுதியளித்தார்.

பாபுஜி தயக்கத்துடன் தான் நாளை காலை ஒரு மந்திரவாதி வரப் போவதாக குருஜியிடம் தெரிவித்தார். தன்னைக் கேட்காமல்

அந்த ஏற்பாட்டைச் செய்ததற்காக அவர் கோபிப்பாரோ என்று நினைத்தார். ஆனால் குருஜி “நல்லது” என்று சொன்னார். எப்போதோ மனதளவில் விலகி விட்ட பிறகு யார் வந்தால் எனக்கென்ன என்ற எண்ணம் தான் குருஜியிடம் மேலோங்கி இருந்தது.

குருஜியும் பாபுஜியிடம் இன்னொரு தகவலைத் தெரிவித்தார். “எனக்கு உடம்பு எதனாலேயோ சுகமில்லை. குணமாகிற மாதிரியும் தெரியலை. அதனால நான் இப்பவே கிளம்பிப் போயிடலாம்னு நினைக்கிறேன் பாபுஜி”

உபகாரமில்லாத ஆள் இருந்தென்ன போயென்ன என்ற எண்ணத்தில் இருந்த பாபுஜி முகத்தில் மட்டும் கவலையையும், அக்கறையையும் காட்டி கடைசியில் சம்மதித்தார். ”..... என்னால ஏதாவது ஆக வேண்டி இருந்தால் சொல்லுங்கள் குருஜி”

குருஜி தலையசைத்தார். குருஜி கிளம்பிப் போகிறார் என்பதை பாபுஜி மூலம் அறிந்து ஜான்சனும், மகேஷும் உடனடியாக வந்தார்கள். இருவர் முகத்திலும் அதிர்ச்சி தெரிந்தது. எல்லாவற்றையும் ஆரம்பித்து வைத்தவரே இப்படி பாதியில் விலகிப் போகிறாரே என்று ஜான்சன் உண்மையிலேயே வருத்தப்பட்டார். குருஜி இருக்கும் போது அவருக்கு தைரியமாய் இருந்தது. அவர் விஞ்ஞானமும், குருஜியின் அனுபவ ஞானமும் நல்ல கூட்டு சக்தியாக இருந்தது. குருஜி அளவுக்கு வரப் போகிற மந்திரவாதிக்கு இந்த விஷயத்தில் ஆழமான ஞானம் இருக்க வாய்ப்பில்லை என்று அவர் நிச்சயமாக நம்பினார். “ஆராய்ச்சியில் பங்கெடுக்கா விட்டாலும் பரவாயில்லை குருஜி ஆலோசனை தரவாவது நீங்கள் இருந்தால் நல்லாயிருக்கும்” என்று சொல்லிப் பார்த்தார். உடல்நலத்தைக் காரணம் காட்டி குருஜி மறுத்து விட்டார்.

*மகேஷிற்கும் குருஜி போவது வருத்தமாய் இருந்தது. முதலில் தென்னரசு... இப்போது குருஜி... குருஜி சொல்லிக் கொண்டாவது போகிறார். தென்னரசு அதைக் கூடச் செய்யவில்லை. திடீர் என்று மாயமானவர் பின் அவனைத் தொடர்பு கொள்ளவே இல்லை. அவர் செல் போனிற்கு போன் செய்த போதெல்லாம் "ஸ்விட்ச்டு ஆஃப்" என்ற தகவலே வந்து கொண்டிருந்தது. குருஜியிடம் மகேஷ் கேட்டான். "தென்னரசு அங்கிள் உங்க கிட்டயாவது போறதுக்கு முன்னாடி சொல்லிட்டு போனாரா குருஜி?"*

*"இல்லை..." குருஜிக்கு தென்னரசு நினைவும் மனதை அழுத்தியது. எல்லாம் ஏதோ ஒரு உத்தேசத்தில் ஆரம்பித்து எப்படி எல்லாமோ முடிந்து விட்டதே!*

*மகேஷிற்கு சந்தேகம் வலுத்தது. அவனிடம் சொல்லா விட்டாலும் கூட தென்னரசு குருஜியிடம் சொல்லாமல் போகிறவர் அல்ல.....*

*குருஜி கிளம்பி விட்டார். அவரை வழியனுப்ப பாபுஜி, ஜான்சன், மகேஷ் மூவருமே வந்தார்கள். குருஜி யாரிடமும் எதுவும் பேசவில்லை. தியான மண்டபத்தைத் தாண்டித் தான் கார் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த இடத்திற்குப் போக வேண்டி இருந்தது. அவருக்கு கடைசியாக ஒரு முறை விசேஷ மானஸ லிங்கத்தைப் பார்க்கத் தோன்றியது. வாசலில் இருந்தே எட்டிப் பார்த்தார். விசேஷ மானஸ லிங்கம் ஒருவித வித்தியாச ஜொலிப்பில் இருப்பது போல் அவருக்குத் தோன்றியது. ஹரிராம் அவரது வழக்கமான இடத்தில் தியானத்தில் அமர்ந்திருந்தார். அவரிடமும் அந்த ஜொலிப்பு பிரதிபலிப்பது போலத் தோன்றவே குருஜிக்கு உள்ளே ஒரு பொறி தட்டியது. ஹரிராம் தான் அந்த மூன்றாவது ஆள்...!*

பாபுஜி ஜான்சனைக் கேட்டார். “இவர் மட்டும் ஏன் இன்னும் தனியா உட்கார்ந்து தியானம் செய்யறார்”

ஜான்சன் சொன்னார். ”தினமும் மணிக்கணக்கில் தியானம் செய்கிறவர் அவர். இந்த ஆராய்ச்சியில் சிவலிங்க சக்தியில லயிக்க முடியாட்டியும் தன்னோட வழக்கமான தனிப்பட்ட தியானத்தையாவது செய்யலாம்னு உட்கார்ந்த இடத்திலேயே அதைச் செய்ய ஆரம்பிச்சிருப்பார்....”

‘இந்த மாதிரி ஆளெல்லாம் நம் பக்கம் இருந்து கூட எல்லாம் இப்படி திடீர் என்று தடைப்பட்டு நிற்கிறதே’ என்று பாபுஜி ஆதங்கப்பட்டார்.

இப்படி அவர்களால் பேசப்பட்டும் எண்ணப்பட்டும் இருந்த ஹரிராம் *EEG* மெஷினை மட்டும் போட்டுக் கொண்டிருந்தால் அவர் ஐந்து சிபிஎஸ் தீட்டா அலைகளில் மிக ஆழ்ந்த தியானத்தில் இருப்பதைக் காட்டி அவர்கள் கவனத்தை மேலும் கவர்ந்திருக்கும்.

இது வரை அவர் விசேஷ மானஸ லிங்கத்தின் முன் அமர்ந்து செய்த தியானங்களில் மிகவும் கவனமாக ஒரு எல்லைக்குள் இருந்திருந்தார். விசேஷ மானஸ லிங்கம் இழுப்பது போல் தோன்ற ஆரம்பித்த முதல் கணத்திலேயே பின்வாங்கி வந்திருந்தார். அன்று காலை ஆராய்ச்சியின் போது மந்திரக் காப்புச் சுவரை விசேஷ மானஸ லிங்கத்தின் முன்பு எழுப்பும் போது கூட, முன்பு கற்றிருந்த வித்தை தான் வேலை செய்ததே ஒழிய விசேஷ மானஸ லிங்கத்தின் அலைகளோடு அவருக்கு முழுமையாக ஐக்கியமாக முயல முடியவில்லை.

ஆராய்ச்சிகள் தடைப்பட்டு மற்றவர்கள் எல்லோரும் போன பிறகு அவருக்கு தியானத்தில் அமரத் தோன்றியது. யார் தொந்திரவும் இல்லாமல் அமர்ந்த அவர் எந்தவிதக் கட்டுப்பாட்டையும் வைத்துக் கொள்ளாமல் தியானத்தை ஆரம்பித்து பின் விசேஷ மானஸ லிங்கத்தில் கவனத்தைக் குவித்து அதன் அலைகளுடன் ஐக்கியமாக ஆரம்பித்தார். வழக்கம் போலவே பிரம்மாண்ட உணர்வுகளுடன் கூடிய மிக அழகான அனுபவம்... விசேஷ மானஸ லிங்கம் ஜெகஜோதியாய் மின்ன ஆரம்பித்தது.... பின் விஸ்வரூபம் எடுக்க ஆரம்பித்தது..... தீஜ்வாலையாய், அக்னிமலையாய் கண்ணுக்கும் கருத்துக்கும் அடங்காத விஸ்வரூபம் அது.. அதற்கடுத்ததாய் அது தன்னிடம் அவரை இழுப்பது போலத் தோன்றியது. முன்பு போல அதற்குச் சிக்காமல் மீண்டு வரும் முயற்சி எதிலும் அவர் ஈடுபடவில்லை. அந்த விசேஷ மானஸ லிங்கம் அவரை ஆட்கொள்ள விட்டார்.

ஒரு கணம் ஒரு பெருஞ்சுழியில் அவர் சிக்கிக் கொண்டது போல இருந்தது. மறு கணம் அவர் தலைக்குள் அக்னிப்பந்து ஒன்று புகுந்து கொண்டது போல் இருந்தது. எதுவும் அவர் கட்டுப்பாட்டில் இல்லை. அவர் எதையும் கட்டுப்படுத்தவும் விரும்பவில்லை. அந்த மகாசக்தியின் பிரவாகத்தில் பல நிலைகளுக்கு அடித்துச் செல்லப்படும் சிறு துரும்பாக அவர் உணர்ந்தார். என்னென்னவோ ஆகியது... வார்த்தைகளுக்கு சிக்காத எத்தனையோ நிலைகள்.... எத்தனையோ பயணம்... ‘ஹரிராம்’ என்ற அடையாளத்துடன் கூடிய நான் ஒரு கட்டத்தில் மறைந்தே போனது. சர்வமும் அமைதியாகியது. ஒரு மகத்தான மௌனம் மட்டுமே நிலவியது.....

எத்தனை காலம் அந்த மோன நிலையில் இருந்தார் என்று அவருக்கே தெரியவில்லை. சிறிது சிறிதாக அவர் நினைவு திரும்பிய

போது அவர் புடம் போட்ட தங்கம் போல ஒளிர்ந்து கொண்டிருந்தார்.

இத்தனை கால அவர் வாழ்க்கையில் எத்தனையோ கோடிட்ட இடங்கள் இருந்தன. அர்த்தம் புரியாத, அர்த்தப்படுத்திக் கொள்ள முடியாத இடங்கள் இருந்தன. இப்போதோ அவர் வாழ்க்கையின் அத்தனை கோடிட்ட இடங்களும் அர்த்தத்தோடு நிரம்பி இருந்தன. மிகப் பெரிய புரிதல் நிகழ்ந்திருந்தது. யாருமே கற்றுத் தர முடியாத, கடைசியில் மட்டுமே அந்தராத்மாவில் உணரக் கூடிய ஞானம் கிடைத்திருந்தது. அது கேள்விகள் இல்லாத, பதில்கள் தேவைப்படாத ஒரு பரிபூரணமான நிலை. ஜன்ம ஜன்மாந்திரங்களாய் தேடியும், காத்தும் இருந்த உன்னதமான நிலை....!

**************

குருஜியும் போன பிறகு மகேஷிற்கு அங்கிருக்கவே மனமில்லை. தனிமைப்படுத்தவன் போல அவன் உணர்ந்தான். போரடித்தது. அப்பாவிற்குப் போன் செய்தான். "அங்கே எல்லாம் எப்படிப்பா இருக்கு?"

விஸ்வநாதன் சொன்ன தகவல்கள் இடியாய் அவன் தலையில் விழுந்தது. விஷாலி இப்போது அவன் வீட்டில் இருக்கிறாள். ஈஸ்வரும் அவளும் சீக்கிரமே திருமணம் செய்து கொள்ளப் போகிறார்கள். ஈஸ்வரின் அம்மா அமெரிக்காவில் இருந்து வந்து விட்டாயிற்று....

மகேஷ் உள்ளே அணு அணுவாய் நொறுங்க ஆரம்பித்தான். இனி வாழ்வதில் அர்த்தமில்லை என்று தோன்றியது.

# அத்தியாயம் - 86

நம்பீசன் சொன்னபடி காலை ஆறு மணிக்கே வந்து விட்டார். அவருடன் அவர் உதவியாளர்கள் இரண்டு பேரும் வந்திருந்தனர். அரைகுறையாய் நரைத்த குடுமி, தாடி, பருமனான சிவந்த தேகம், நெற்றியில் பெரிய குங்குமப் பொட்டு எல்லாமாகச் சேர்ந்து நம்பீசனைப் பார்க்கும் போதே பாபுஜிக்கு அவரிடம் ஒரு தேஜஸ் இருப்பது போல் தோன்றியது. வந்தவர் வெளி கேட்டிலேயே சிறிது நேரம் கண்களை மூடிக் கொண்டு நின்றார். பின் கேட்டார். “இங்கே ஒரு மந்திரக் கவசம் போட்டு இருக்கீங்களே. யார் போட்டது?”

பாபுஜிக்கு ஆச்சரியமாக இருந்தது. உதயன் சுவாமி பற்றியெல்லாம் இவருக்குச் சொல்ல வேண்டுமா என்று அவர் யோசித்தார். நம்பீசன் சொன்னார். “எனக்கு ஒளிவு மறைவில்லாமல் நீங்கள் எல்லாத்தையும் சொல்றதா இருந்தால் நான் உள்ளே வர்றேன். இல்லாட்டி இப்படியே போயிடறேன். ஏன்னா இங்கே ரெண்டு விதமான பெரிய சக்திகள் ஒன்னுக்கொன்னு போட்டியா போராடிகிட்டு இருக்கற மாதிரி இருக்கு. அரைகுறையாய் தெரிஞ்சுகிட்டு இங்கே அந்த ரெண்டு சக்திகளுக்கு மத்தியில நான் சிக்கிக்க விரும்பலை....”

பாபுஜி ஜான்சனைப் பார்த்தார். ஜான்சன் ஒருவர் தான் இப்போது அவருடன் இருக்கிறார். குருஜி போன சில மணி நேரங்களில் மகேஷும் போய் விட்டான். தூங்காமல் நிறைய நேரம் விழித்திருக்கிறானே என்று பாபுஜி அவன் அறையை எட்டிப் பார்த்த போது அவன் கையில் தூக்க மாத்திரை டப்பாவை வைத்துக் கொண்டு யோசனையில் ஆழ்ந்திருந்தான். அவன் இங்கேயே தற்கொலை செய்து கொண்டு விடுவானோ என்ற பயம் பாபுஜிக்கு வந்து விட்டது. அதனால் சிறிது நேரம் கழித்து அவன் போவதாகச்

சொன்ன போது அவர் உடனே அனுப்பி வைத்தார். அவன் பின்னாலேயே இரு துப்பறியும் ஆசாமிகளை அனுப்பி வைத்து எங்கே போகிறான், என்ன செய்கிறான் என்பதைக் கண்காணிக்க மட்டும் ஏற்பாடு செய்தார். மகேஷ் ஏதோ ஒரு ஓட்டலில் அறை எடுத்துத் தங்கியதாக தகவல் வந்தது. அங்கே போய் தற்கொலை செய்து கொள்ளப் போகிறான் என்று புரிந்த போது பாபுஜிக்கு நிம்மதியாக இருந்தது. 'விட்டது சனியன்'

அதனால் நம்பீசன் சொன்ன போது, கூட இருந்த ஒரே ஆளிடம் அவருக்கு ஆலோசனை கேட்கத் தோன்றியது. ஜான்சன், சொல்லி விடுவது தான் நல்லது என்பது போல தலையசைத்தார்.

பாபுஜி சுருக்கமாகச் சொன்னார். நம்பீசன் நீண்ட யோசனைக்குப் பின்பு தான் உள்ளே வந்தார். பாபுஜி தியான மண்டபத்திற்கு அவரை அழைத்துச் சென்றார். நம்பீசன் தியான மண்டபத்திற்கு உள்ளே நுழைய மறுத்தார். வெளியே இருந்தே விசேஷ மானஸ லிங்கத்தைப் பார்த்தார். பின் வெளியே அந்த 23 ஏக்கர் நிலப்பரப்பில் மௌனமாக நடக்க ஆரம்பித்தார். அவரை அவர் உதவியாளர்கள் பின் தொடர்ந்தனர். பாபுஜியும், ஜான்சனும் கூடப் பின் தொடர்ந்தார்கள். அங்கங்கே நிற்பது, யோசிப்பது, பின் நடப்பதுமாக இருந்த நம்பீசன் சில இடங்களில் சில குறியீடுகள் இடும்படி தன் உதவியாளர்களிடம் சொன்னார். அவர்கள் அந்த இடங்களில் அந்தக் குறிகளை வரைந்தார்கள். கடைசியில் அந்த இடங்களில் ஒரு இடத்தைத் தேர்ந்தெடுத்த அவர் அங்கு நின்று கொண்டு சொன்னார். "இந்த இடத்துல ஒரு அஷ்டமங்கல ப்ரஸ்னம் வச்சுப் பார்த்தால் தான் இருக்கிற நிலைமை என்ன, என்ன செய்யலாம்னு தெரியும். அதுக்கு ஒரு நாள் வேண்டி வரும்"

பாபுஜிக்கு இருந்த அவசரத்தில் அதெல்லாம் அனாவசியம் என்று தோன்றியது. உடனடியாக செயல்பட வேண்டிய நேரத்தில் நிலைமை என்ன, என்ன செய்யலாம் என்று கண்டுபிடிக்கவே தாமதமாவது அவருக்கு சகிக்க முடியாததாக இருந்தது. அந்த அறுவரும் கூட இதை ஒத்துக் கொள்ள மாட்டார்கள். அதனால் தயக்கத்துடன் சொன்னார். “நமக்கு அவ்வளவு நேரம் இல்லை. உடனடியாய் ஏதாவது செய்தாகணும்”

நம்பீசன் சொன்னார். “அவசரமாய் சாக எனக்கு ஆசை இல்லை. நீங்க வேற ஆளைப் பார்த்துக்கலாம்”. சொன்ன நம்பீசன் ‘கிளம்பலாம்’ என்பது போல தன் உதவியாளர்களுக்கு சமிக்ஞை செய்ய பாபுஜி பதறிப் போனார். “என்ன சுவாமி. இப்படி நீங்க சொன்னா எப்படி?”

”இங்கே வந்தப்பறம் தான் சிக்கல் அதிகமாய் இருக்குன்னு புரிஞ்சுது. இது சாதாரணமாய் சூனியம் வச்சதை எடுக்கற காரியமோ, மந்திரத்தை முறியடிக்கிற காரியமோ அல்ல. மகாசக்திகளோட ஆட்டம் இது. கவனமா ஆடலைன்னா நம்மளை அழிச்சுடும். பிணமானதுக்கப்பறம் பணத்தோட உபயோகம் என்ன சொல்லுங்க?”

பாபுஜிக்கு கிலி கிளம்பியது. ”கொஞ்சம் பொறுங்க” என்று சொன்னவர் தனதறைக்குப் போய் அறுவருடன் பேசினார். அந்த அறுவரும் அதற்கு முன்பே நம்பீசன் பற்றிய எல்லா விவரங்களும் சேகரித்திருந்தார்கள். ஆள் விஷயம் தெரிந்தவர் என்று தான் எல்லா தகவல்களும் சொல்லின. அவர்களில் மூவர் ஒத்துக் கொள்ளச் சொன்னார்கள். மூவர் இரண்டு மடங்கோ, மூன்று மடங்கோ பணம் தந்து உடனடியாக ஏதாவது செய்ய முடியுமா என்று முயற்சிக்கச் சொன்னார்கள். குழம்பிய பாபுஜி கடைசியில் தன் தந்தைக்குப்

போன் செய்தார். அவருடைய தந்தை குருஜி அங்கிருந்து போய் விட்டார் என்பதைத் தெரிந்து கொண்ட பிறகே நடக்கின்ற ஆராய்ச்சிகளில் அதிருப்தி கொள்ள ஆரம்பித்திருந்தார். இவர்கள் ஆழம் தெரியாமல் காலை விடுகிறார்களோ என்ற பயம் அவரை ஆக்கிரமித்திருந்தது.

அதனால் பாபுஜி போன் செய்த போது அவர் உடனே சொன்னார். “நம்பீசன் சொல்ற மாதிரி நிலவரம் என்ன, என்ன செய்யலாம்னு தெரிஞ்சுக்கோ பாபுஜி. அவசரப்படாதீங்க. ஒரு நாள்ல ஒன்னும் குடி முழுகிடாது.”

பாபுஜி நம்பீசனிடம் போய் சம்மதம் தெரிவித்தார். நம்பீசன் அஷ்டமங்கல ப்ரஸ்னம் பார்க்க முகூர்த்தம் கணிக்க ஆரம்பித்தார்....

**************

மகேஷ் தூக்க மாத்திரைகளை விழுங்கிக் கொண்டே தந்தைக்குப் போன் செய்தான். “அப்பா... சாரிப்பா... அம்மாவுக்காவது ஈஸ்வர் இருக்கான். உங்களுக்குத் தான் என்னை விட்டால் யாரும் இல்லை...”

விஸ்வநாதன் திடுக்கிட்டார். “என்னடா சொல்றே?”

”எனக்கு வாழப் பிடிக்கலப்பா. இனி நான் வாழ்றதுல அர்த்தமில்ல... நான் சாகறதுக்கு முன்னாடி மன்னிப்பு கேட்டேன்னு விஷாலி கிட்ட சொல்லிடுங்க அப்பா....”

விஸ்வநாதன் பதறினார். “மகேஷ் என்னடா சொல்றே? முட்டாள்தனமாய் எதுவும் செஞ்சுக்காதேடா...”

”இனிமே நான் வாழ்றது தான் முட்டாள்தனம்ப்பா. சாகறதில்லப்பா. நான் இப்போ ஓட்டல் சிட்டி பாரடைஸ்ல ரூம் நம்பர் 305ல இருக்கேன்ப்பா.. என் பிணத்தை கலெக்ட்... செய்துக்கோங்கப்பா..... ” அவன் குரல் குழற ஆரம்பித்தது. விஸ்வநாதன் இடிந்து போனார்.

குருஜி காரை ஆள்நடமாட்டமில்லாத இடத்தில் நிறுத்தச் சொல்லி இறங்கினார். டிரைவரிடம் இரண்டு உறைகளைக் கொடுத்து தன் உதவியாளனிடம் தரச் சொன்னார். ஒன்றில் அவரது டிரஸ்டுகள் இனி யார் பொறுப்பில் எப்படி நடத்தப்பட வேண்டும் என்பதை மிகவும் தெளிவாகவும், விரிவாகவும் எழுதி இருந்தார். இன்னொன்று அவரது உயில். அவரது தனிப்பட்ட சொத்துக்களை கணபதியின் பெயரில் அவர் எழுதி இருந்த உயில். கார் டிரைவரைப் போகச் சொன்னார்.

கார் டிரைவருக்குத் தயக்கமாக இருந்தது. ஆனால் குருஜியை மறுத்துப் பேசி அறியாத அவர் மறுவார்த்தை பேசாமல் காரை ஓட்டிக் கொண்டு போனார். கார் பார்வையில் இருந்து மறையும் வரை நின்று பார்த்துக் கொண்டிருந்த குருஜி இருட்டில் எதிர்திசையில் நடக்க ஆரம்பித்தார். அவர் அணிந்து கொண்டிருந்த உடையையும், சட்டைப்பையில் இருந்த நூறு ரூபாயையும் தவிர அவருக்கு என்று அவர் எதையும் வைத்துக் கொண்டிருக்கவில்லை.

நீண்ட தூரம் நடந்து சென்ற பிறகு ஒரு சலூன் கடையைப் பார்த்தார். அந்தக் கடைக்காரன் கதவைச் சாத்திக் கொண்டிருந்தான். அவனிடம் போய் கெஞ்சிக் கேட்டு கதவை மீண்டும் திறக்க வைத்து மொட்டை அடித்துக் கொண்டார். தன்னிடம் இருந்த கடைசி பணமான நூறு ரூபாயை அவனிடம் தந்து விட்டு வெளியே வந்த

குருஜியை இப்போது யாருமே அடையாளம் கண்டு விட முடியாது. இனி யாரும் பழைய குருஜியைப் பார்க்கவும் முடியாது.

மறுபடி நடக்க ஆரம்பித்தவர் களைத்துப் போகும் வரை நடந்தார். நள்ளிரவில் தனியாக நடந்து போய்க் கொண்டிருந்த அவரைப் பார்த்து நாய்கள் குரைத்தன. அவர் லட்சியம் செய்யவில்லை. மனம் மட்டும் நடந்தவைகளையே அசை போட்டுக் கொண்டிருந்தது. குருஜி என்ற சகாப்தம் முடிந்து விட்டாலும் ஞான தாகத்தோடு பாரதத்தின் மூலை முடுக்கெல்லாம் தேடி அலைந்த ராமகிருஷ்ணன் என்ற தனிமனிதனின் கதை முடியவில்லை. சுயபச்சாதாபத்தோடு தன் வாழ்க்கையின் பல மைல்கல்களை எண்ணிப் பார்த்த போது கடைசியில் அவருக்கு வாய்விட்டு அழத் தோன்றியது.

ஆளே இல்லாத ஒரு பஸ் ஸ்டாப்பில் இருந்த சிமெண்ட் பெஞ்சில் அமர்ந்து அழ ஆரம்பித்தார். “என்னைக் கடவுள் கைவிட்டது கூட எனக்கு தப்பாய் தெரியலை. ஏன்னா நான் நிறைய தப்புகள் செய்திருக்கேன். ஆனால் குருவே நீங்கள் என்னைக் கை விட்டது எனக்கு அதிகமாய் வலிக்கிறது. என்ன இருந்தாலும் உங்களிடம் சில காலமாவது சீடனாய் நான் இருந்தவன் அல்லவா? என்னைத் திட்டி புத்தி சொல்லக் கூடிய அதிகாரம் இருப்பவர் தானே நீங்கள். ஒரே ஒரு தடவையாவது அதை நீங்கள் செய்திருக்கலாமே! நான் முன்பே திருந்த ஒரு வாய்ப்பை எனக்குத் தந்திருக்கலாமே. எனக்கிருந்த தலைக்கனத்துக்கு நான் அப்ப திருந்தியிருக்க வாய்ப்பில்லை தான். ஆனால் நீங்கள் முயற்சி செய்து பார்த்திருக்கலாமே... கணபதியால் முடிந்தது உங்களால் முடிந்திருக்காதா? எத்தனையோ குருக்கள் எனக்கு இருந்திருந்தாலும் மத்தவங்களை எல்லாம் நான் மிஞ்சி விட்டிருந்தேன். அதனால் அவர்கள் எனக்கு பின்னால் தேவைப்படலை. நான் மிஞ்சாத ஒரே குரு நீங்கள் தான். எனக்கு

*இப்பவும் தேவைப்படறவரும் நீங்கள் தான்.... நான் எல்லாமே வேண்டாம்னு உதறிட்டு வந்துட்டேன். உலகத்தால தர முடிஞ்சது எனக்கு எதுவுமே வேண்டாம். நான் ஒருகாலத்துல தீவிரமாய் தேடின ஆத்மஞானத்துக்காக தான் மறுபடி ஏங்கறேன். எல்லாம் தெரிஞ்ச எனக்கு இன்னும் எதோ பிடிபடாததால அல்லவா கர்வமே உள்ளே நுழைஞ்சது. என்னை திசை திருப்பிச்சு. இனிமேலாவது நீங்கள் ஒரு வழி காட்டக் கூடாதா?"*

*அந்த நள்ளிரவில் தனிமையில் அழுது கொண்டிருந்த முதியவரைப் பார்த்துக் கொண்டிருந்த நாய்கள் அனுதாபத்தோடு குரைப்பதை நிறுத்தின. அதிகாலை சூரிய கிரணங்கள் எழும் வரை அதே சிந்தனைகளோடும், துக்கத்தோடும் அப்படியே குருஜி அமர்ந்திருந்தார். திடீரென்று ஒரு கை அவர் தோளைத் தொட்ட போது மின்சாரம் தாக்கியது போல் இருக்க அதிர்ச்சியுடன் நிமிர்ந்து பார்த்தார். அவருடைய குரு அக்னிநேத்ர சித்தர் நின்றிருந்தார். அவர் கை நீட்ட அந்தக் கையை நன்றியுடனும், பிரமிப்புடனும் குருஜி பிடித்துக் கொண்டு எழுந்தார். பெரும் துக்கத்தோடு குருஜியிடம் இருந்து வார்த்தைகள் வெளி வந்தன. "ஏன் குருவே இவ்வளவு தாமதம்?"*

*"நீ இது வரைக்கும் என்னை இப்படி வற்புறுத்திக் கூப்பிட்டதே இல்லையே ராமகிருஷ்ணா. அது மட்டுமில்லாம தப்பான வழியிலே போய் யாரும் சரியானதை சாதிச்சுட முடியாதுன்னு நீ உணரணும்னு தான் நான் காத்துகிட்டிருந்தேன். வா. போகலாம்..." கனிவான குரலில் சித்தர் சொன்னார்.*

*குருஜி அக்னி நேத்ர சித்தரின் கைகளைப் பிடித்து பேரழுகையோடு கண்களில் ஒற்றிக் கொண்டார். அவரை அழைத்துக் கொண்டு சித்தர் நடக்க ஆரம்பித்தார். ஆனந்தக்*

*கண்ணீருடன் குருவுடன் குருஜி நடக்க அவர்கள் முன் அமைதியானதொரு பாதை நீண்டிருந்தது!....*

****************

*உலகில் எந்த ஒரு தகப்பனுக்கும் இப்படி ஒரு நிலை வந்துவிடக் கூடாது என்று விஸ்வநாதன் எண்ணினார். சிட்டி பாரடைஸ் ஓட்டலில் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்த மகனை தூரத்தில் உள்ள ஆஸ்பத்திரியில் அவர் சேர்த்தாகி விட்டது. அங்கு அவரையோ மகேஷையோ யாருக்கும் அடையாளம் தெரியாது. எதையும் 24 மணி நேரம் கழித்துத் தான் சொல்ல முடியும் என்று டாக்டர் தெரிவித்த போது அவர் உடைந்து போன விதத்தைப் பார்த்த டாக்டர் வீட்டில் வேறு யாரும் இல்லையா என்று இரக்கத்தோடு கேட்டார்.*

*விஸ்வநாதன் மனைவியிடம் கூடத் தகவலைத் தெரிவிக்கவில்லை. சொன்னால் அவளால் கண்டிப்பாகத் தாங்க முடியாது. பரமேஸ்வரனிடமும் சொல்ல முடியாது. பின் வேறு யார் இருக்கிறார்கள்? மனம் ஏனோ ஈஸ்வரை நினைத்தது. அவன் பரமேஸ்வரனுக்கு மாரடைப்பு வந்த போது அதை சமாளித்த விதம் அவருக்கும் இப்போது நினைவிற்கு வந்தது. அவன் இப்போது கூட இருந்தால் பெரிய ஆசுவாசமாக இருக்கும் என்று தோன்றியது. அவன் ஏதோ ஆராய்ச்சியில் இருக்கிறான். அவனுக்கு அவரிடமோ, மகேஷிடமோ சிறிதும் அன்பிருக்க வாய்ப்பில்லை. அதை அவர்கள் சம்பாதித்தும் வைத்திருக்கவில்லை.... ஆனாலும் அவன் நல்லவன்... சங்கரின் மகன்.... பரமேஸ்வரனை மன்னித்தவன்... கருணை காட்டலாம்...*

*விஸ்வநாதன் தயக்கத்துடன் அவனுக்குப் போன் செய்தார். அவர் அழைத்த போது அவன் நல்ல உறக்கத்தில் இருந்தான். எதிரிகள் புதிதாக யாரையோ வரவழைக்கிறார்கள், அவர் மறு நாள்*

அதிகாலை வருவார் என்று தகவல் கிடைத்த பிறகு அவனுக்கு அப்போது தான் இளைப்பாற நேரம் கிடைத்திருந்தது. ஏதாவது ஆபத்து என்றால், தான் தெரிவிப்பதாக ஹரிராம் உறுதி அளித்திருந்தார். அவருக்கு இயல்பாகவே அப்படி தொடர்பு கொள்ளும் சக்தி இருந்ததால் கண்காணிக்கும் வேலையை விட்டு விட்டு ஒரு மணி நேரத்திற்கு முன்பு தான் அவன் உறங்க ஆரம்பித்திருந்தான். அவனை விஸ்வநாதனின் போன் எழுப்பியது. குரலடைக்க அழுகையோடு விஸ்வநாதன் சொன்ன தகவல் ஈஸ்வரை அதிர வைத்தது. உடனே மீனாட்சியும், பரமேஸ்வரனும் அவன் நினைவுக்கு வந்தார்கள். எப்படி தாங்குவார்கள்? "நீங்க அத்தை கிட்டயும், தாத்தா கிட்டயும் சொல்லலையே?"

"இல்லை ஈஸ்வர்."

"நல்லதாச்சு. எந்தக் காரணம் வச்சும் சொல்லிடாதீங்க. எந்த ஆஸ்பத்திரி?" அவர் சொன்னார். அவன் கிளம்பி விட்டான். இப்போதைக்கு தியான மண்டபத்தில் அசம்பாவிதம் எதுவும் நடந்து விட சாத்தியமில்லை. ஏதாவது தேவை இருந்தால் ஹரிராம் கூப்பிடுவார்.

பார்த்தசாரதி அவனைத் தனியாக அனுப்ப பயந்தார். அவனைக் கொல்ல வந்த ஆட்கள் இனியும் முயற்சி செய்யலாம். வெளியே பொது இடத்தில் அவனைப் பாதுகாப்பது கஷ்டம்... ஆனால் ஈஸ்வர் போகாமல் இருக்க சம்மதிக்கவில்லை. வேறு வழியில்லாமல் தானும் கூட கிளம்பினார். சற்று இடைவெளி விட்டு தங்களைப் பின் தொடர இரண்டு திறமையான போலீஸ்காரர்களிடம் சொன்னார்....

அடுத்த முக்கால் மணி நேரத்தில் ஈஸ்வர் அந்த ஆஸ்பத்திரியில் இருந்தான். உடனடியாக அவன் வருவான் என்று எதிர்பார்த்திராத

*விஸ்வநாதன் அவனைப் பார்த்ததும் அழுது விட்டார். ”அழாதீங்க மாமா... விபரீதமா எதுவும் நடந்துடாது”*

*விஸ்வநாதனின் செல்போன் இசைத்தது. விஸ்வநாதன் அழுகையுடன் சொன்னார். “உன் அத்தை தான் கூப்பிடறா... இது ஏழாவது தடவை.... ராத்திரி நேரத்தில் நான் ஒன்னும் சொல்லாம கிளம்பிட்டதால கவலைப்படறா போல இருக்கு. ஆனா நான் அவ கிட்ட என்னன்னு சொல்வேன்... அதான் நான் எடுக்கலை....”*

*“பேசாமல் இருந்தா தான் அவங்களுக்கு டென்ஷனாகும் மாமா...” என்ற ஈஸ்வர் அவருடைய செல்போனை எடுத்து தானே பேசினான். “அத்தை நான் ஈஸ்வர் பேசறேன்... மாமா என் கூட தான் இருக்கார்... என் ஆராய்ச்சிக்கு மாமா உதவி கொஞ்சம் தேவைப்பட்டுது.. அதனால தான் மாமாவைக் கூப்பிட்டுகிட்டேன்.... ஆராய்ச்சிக்கு தொந்திரவாகும்னு ஸ்விட்ச் ஆஃப் செய்து வச்சிருந்ததால கேட்கல. சாரி அத்தை...”*

*மீனாட்சி நிம்மதியடைந்தாள். “உன் கூட தான் இருக்காரா? அப்ப பரவாயில்லை.... ராத்திரி நேரத்துல அவர் என் கிட்ட ஒன்னுமே சொல்லாமல் அவசரமா போனாரா... அதான் நான் ரொம்பவே பயந்து போயிட்டேன்...”*

*மீனாட்சியை சமாளித்த விதமும், பின் டாக்டரிடம் போய் பேசிய விதமும், பேசி வந்த பிறகு மறுபடியும் தைரியம் சொன்ன விதமும் ஒரு மகனுடைய செய்கைகளாக இருந்தன. அவருக்கு ஒரு மூத்த மகன் இருந்திருந்தால் இப்படி செய்திருக்கலாம்... யாரை அவரும் அவர் மகனும் ஆழமாக வெறுத்தார்களோ அவன் இத்தனையும் அவர்களுக்காக செய்கிறான். அவன் அவர்களைப் புரிந்து கொள்ளாத முட்டாள் அல்ல... ஆனாலும் அவன் அதைப்*

*பெரிதுபடுத்தவில்லை போல் இருந்தது. அவன் முகத்தில் பெரும் களைப்பு தெரிந்தது. சரியாக உறங்காத களைப்பு அது... ஆனால் ஒரு சலிப்பு கூட அந்த முகத்தில் தெரியவில்லை... "சங்கர் எப்படி ஒரு மகன் உனக்கு கிடைச்சிருக்கான்.... நீ எவ்வளவு புண்ணியம் செய்தவன்...."*

*அந்த நேரத்தில் தென்னரசுவின் பிணம் ரயில்வே டிராக் அருகில் சிதறிக் கிடப்பதாக பார்த்தசாரதிக்குத் தகவல் வந்தது.*

*அஷ்ட மங்கல ப்ரஸ்னம் நடந்து கொண்டிருந்த போது பொறுமை இல்லாமல் பாபுஜியும், சுவாரசியத்தோடு ஜான்சனும் அதைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு சின்னச் சின்ன சகுனத்தையும் கூட நம்பீசன் கணக்கில் எடுத்துக் கொண்டார். மரத்தில் இருந்து உதிரும் இலை, பறவையின் சத்தம், சுற்றி உள்ளவர்களின் வித்தியாசமான அசைவுகள் என எல்லாமே அவருக்கு ஏதோ தகவல்களைத் தந்து கொண்டிருந்தது போலத் தெரிந்தது.*

*கடைசியில் நம்பீசன் சொன்னார். "நீங்கள் நினைக்கிற மாதிரி உங்களுக்கு ஒரு எதிரி வெளியே மட்டும் இல்லை. உள்ளேயும் இரண்டு எதிரிகள் இருக்கிறார்கள்....."*

*பாபுஜியும் ஜான்சனும் அதிர்ந்தார்கள்.*

# அத்தியாயம் - 87

*பாபுஜி அதிர்ச்சியோடு கேட்டார். "என்ன சொல்றீங்க?"*

“ஆமா. நீங்க சொன்ன வெளியே இருக்கிற எதிரியும், நான் சொன்ன உள்ளே இருக்கிற எதிரிகளும் மனதளவில் சேர்ந்தாச்சு. அதனால் தான் அந்த சிவலிங்க சக்தியை உங்களால நேத்து நெருங்க முடியலை...”

பிரளயமே வந்து தன்னை பாதாளத்தில் இழுத்து அழுத்துவது போல் பாபுஜி உணர்ந்தார். பலவீனமான குரலில் பரிதாபமாக அவர் கேட்டார். “இனி ஏதாவது செய்ய முடியுமா?”

நம்பீசன் உடனடியாக எதையும் சொல்லவில்லை. சில கணக்குகளை மனதில் போட்டு கடைசியில் சொன்னார். “முடியும். ஆனா சுலபமல்ல. செலவு அதிகம் ஆகும். இன்னைக்கு கார்த்திகை தீபம்... பௌர்ணமி... பௌர்ணமி இன்னைக்கு ராத்திரி 11.42 வரை இருக்கு. அதுக்குள்ளே அதைச் செய்து முடிக்கணும்.. அதுக்குள்ளே ஏதாவது செய்யலைன்னா பிறகு எப்பவுமே இந்த சிவலிங்கம் உங்களுக்குச் சிக்காது.”

“எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை. என்ன செய்யணும், எப்படி செய்யணும்னு மட்டும் சொல்லுங்க சுவாமி” பாபுஜி சொன்னார்.

“நாங்க இங்கேயே சில விசேஷ ஹோமங்கள் செய்ய ஆரம்பிக்கிறோம். நான் சொன்னதுக்கப்புறம் நீங்க எப்பவும் மாதிரி உங்கள் வழக்கமான ஆராய்ச்சியை இன்னைக்கும் ஆரம்பியுங்க. நான் அந்த ரெண்டு பேர் யாருன்னு இங்கே இருந்தே கண்டுபிடிக்கிறேன். அப்புறம் என்ன செய்யணும்னு தீர்மானிப்போம்”

பாபுஜி பரபரப்புடன் சம்மதித்தார். குருஜி போய் விட்டாலும் தெளிவாகத் தீர்மானித்து செய்ய வேண்டியதைச் சொல்லக்கூடிய மனிதர் கிடைத்திருப்பது அவர்களது பாக்கியமே!

**************

விஷாலியை சமாதானப்படுத்துவது ஈஸ்வருக்கு சுலபமாக இருக்கவில்லை. கடைசியாக அவருடன் பேசியதை ஈஸ்வரிடம் சொல்லி அழுதாள். “அது தான் அவர் கிட்ட நான் கடைசியாய் பேசறதுன்னு எனக்குத் தெரியாமல் போயிடுச்சே ஈஸ்வர்....”. அதைக் கேட்டுக் கொண்டிருந்த பார்த்தசாரதிக்கு தென்னரசு ஏன் ஈஸ்வருக்கு ஆபத்து என்பதை எச்சரித்தார் என்பது புரிந்தது.

தந்தையின் மறைவின் துக்கத்தை ஈஸ்வர் அறிவான். அதுவும் மிக நேசித்த தந்தையாக இருந்தால் அந்த துக்கம் எல்லை இல்லாதது. அகால மரணம் என்றால் பின் சொல்லவே வேண்டாம். அவள் அவன் தோளில் சாய்ந்து குமுறி அழ, அவளை அணைத்துக் கொண்டு மௌனமாக இருந்தான். அவள் துக்கத்தைப் பார்க்க அவனுக்கும் தாளவில்லை. அவன் கண்களும் கசிந்தன. எல்லா பக்கங்களில் இருந்தும் இப்படி பிரச்சினைகள் வருகிறதே என்று வேதனைப்பட்டான்.

மகேஷின் தற்கொலை முயற்சி பற்றி அவன் விஷாலிக்குத் தெரிவிக்க விரும்பவில்லை. ஆனால் அங்கே அவன் என்ன ஆனானோ என்ற கவலையும் அடிக்கடி வந்து கொண்டிருந்தது. விஸ்வநாதனுக்குப் போன் செய்து அவன் எப்படி இருக்கிறான் என்று மட்டும் மெல்ல விசாரித்தான். விஸ்வநாதன் மகேஷின் உயிருக்கு ஆபத்தில்லை என்று டாக்டர் நம்பிக்கை தெரிவித்ததாய் சொன்னார்.

*தென்னரசு ஓடும் ரயிலில் இருந்து எந்தக் காரணத்திற்காகவோ இறங்க முயற்சி செய்திருக்க வேண்டும் என்று விசாரணை போலீசார் சந்தேகப்பட்டனர். ஆனால் இது கொலை தான் என்பதையும், அதன் காரணத்தையும் ஊகிக்க முடிந்திருந்த பார்த்தசாரதி அதை அவர்களிடம் தெரிவிக்கப் போகவில்லை. விஷாலி மற்றவர்களைப் போலவே இதை ஒரு விபத்தாகவே இப்போதைக்கு நினைக்கட்டும் என்று தோன்றியது….*

*****************

*மரணத்தில் இருந்து தப்பித்த மகேஷைப் பார்க்க விஸ்வநாதனுக்கு அனுமதி கொடுத்தார்கள். கண்கள் கலங்க அவர் மகனைப் பார்க்க உள்ளே போனார். மகேஷ் மிகவும் பலவீனமாக இருந்தான். அவனும் கண்கள் கலங்கினான் என்றாலும் வருத்தத்துடன் கேட்டான். “ஏம்ப்பா என்னைக் காப்பாத்தினீங்க?”*

*இருக்கும் ஒரே மகன் அப்படிக் கேட்டது அந்தத் தந்தையின் இதயத்தில் அமிலத்தை ஊற்றியது. ஆனாலும் பொறுத்துக் கொண்டார். ஐசியூவிற்கு வெளியே அவருடன் உட்கார்ந்திருந்த போது ஈஸ்வர் மகேஷிற்கு கவுன்சலிங் தேவைப்படும் என்று சொல்லி இருந்தான். அவன் மனநிலையும், நடவடிக்கைகளும் விரக்தியானதாகவே இருக்கும், நாம் தான் அதை மாற்ற வேண்டும் என்று சொல்லி இருந்தான். டாக்டரே உயிருக்கு உத்திரவாதம் கொடுத்திருக்காத போது கூட அவன் அவ்வளவு நம்பிக்கையோடு பேசியது விஸ்வநாதனுக்கு ஆச்சரியத்தைத் தந்தது. அவன் சொன்னான். “அத்தையோட நல்ல மனசுக்கு மகேஷுக்கு ஒன்னும் ஆகாது மாமா, கவலைப்படாதீங்க”*

*மகேஷின் உயிருக்கு ஆபத்தில்லை என்று டாக்டர் தெரிவித்தவுடன் ஈஸ்வரின் அந்த வார்த்தைகள் தான் அவனுக்கு நினைவுக்கு வந்தன. உண்மை தான். மீனாட்சியின் தர்மம் தான்*

*அவர்கள் மகனைக் காப்பாற்றி இருக்கிறது. நல்லதைத் தவிர வேறு எதையும் அறியாதவள் அவள்....*

*விரக்தியுடன் அப்படிக் கேட்ட மகனிடம் அப்படி எல்லாம் பேசக்கூடாது என்று குரலடைக்கச் சொன்னார் விஸ்வநாதன்.*

*"தாத்தாவுக்கும் அம்மாவுக்கும் தெரியுமா?" என்று மகேஷ் கேட்டான்.*

*"சொல்லலை. ஈஸ்வரும் சொல்ல வேண்டாம்னு சொல்லிட்டான்"*

*ஈஸ்வர் பெயரைக் கேட்டவுடன் மகேஷ் திகைப்போடு அவரைப்பார்க்க அவருக்கு நடந்ததை எல்லாம் சொல்ல வேண்டியதாயிற்று. மகேஷிற்கு தந்தை மேல் கோபம் தான் வந்தது. "அவனைக் கூப்பிடறதுக்குப் பதிலா நீங்கள் என்னைக் கொன்னே இருக்கலாம்ப்பா"*

*"அப்படி எல்லாம் சொல்லாதேடா. நல்ல பிள்ளைடா அவன்... அவன் கூட இருக்கிறப்ப எனக்கே அவன் ஒரு மூத்த பிள்ளை மாதிரி தோணிச்சுடா"*

*அவன் வாழ்க்கையில் அவனுக்கு யாரெல்லாம் நெருக்கமாக இருந்தார்களோ அவர்களை எல்லாம் ஈஸ்வர் தன் பக்கம் இழுத்திருக்கிறான். அம்மா, விஷாலி, தாத்தா, கடைசியில் இவருமா! என்ன மாதிரி மனிதர்களை அவன் வசியப்படுத்தி விடுகிறான்....*

ஐசியூவினுள்ளே ஈஸ்வர் நுழைந்தான். போஸ்ட் மார்ட்டம் பார்த்தசாரதி தயவில் வேகமாக முடிந்த பிறகு தென்னரசுவின் அந்திமக் கிரியைகளை விரைவாக முடித்து விட்டு விஷாலியை வீட்டில் மீனாட்சி, கனகதுர்கா பொறுப்பில் விட்டு விட்டு, தோட்ட வீட்டுக்கு மீண்டும் போவதற்கு முன் மகேஷை ஒரு முறை பார்த்து விட்டுப் போக வந்திருந்தான். மிகவும் களைத்துப் போயிருந்த போதும் மீண்டும் வந்த அவனை விஸ்வநாதன் நன்றியுடன் பார்த்தார். ஆனால் அவனைப் பார்த்தவுடன் மகேஷ் முகத்தைத் திருப்பிக் கொண்டான். விஸ்வநாதனுக்கே மகன் நடந்து கொள்வது மகா அநியாயம் என்று பட்டது.

மகேஷ் ஈஸ்வர் முகத்தைப் பார்க்காமலேயே சொன்னான். “உன் நடிப்புக்கு மத்தவர்கள் எல்லாம் ஏமாந்துடலாம். நான் ஏமாற மாட்டேன். உனக்கு என் மேல் கோபம் இருக்கு. அதை வெளியே காட்டாமல் நடிக்கிறேன்னும் எனக்குத் தெரியும். இப்ப எதுக்கு வந்தே? எல்லாத்துலயும் நீ என்னை ஜெயிச்சுட்டேன்னு காண்பிக்க தானே? ஒத்துக்கறேன்... நீ என்னை ஜெயிச்சிட்டே. என்னை நீ இனியாவது நிம்மதியா சாக விடுவியா?”

ஈஸ்வருக்கு ஆத்திரம் வந்தது. ”முட்டாளே. எனக்கு உன் மேல கோபம் தான். என் அத்தையை வாழ்நாள் பூரா அழ வைக்க உனக்கு அவங்க என்னடா கெடுதல் செஞ்சாங்க. உன்னைப் பெத்தது தவிர அவங்க ஒரு தப்பும் செய்யலையேடா?”

கோபத்தைத் தவிர எந்த உணர்ச்சியை ஈஸ்வர் காட்டி இருந்தாலும் மகேஷ் அதை நடிப்பு என்று எண்ணி இருப்பான்.... சுவரைப் பார்த்துக் கொண்டே அவன் சொன்னான். “எங்கம்மாவுக்கு தான் நீ இருக்கியே. பின் ஏன் அவங்க வாழ்நாள் பூரா அழப்போறாங்க”

*சில மனிதர்களின் முட்டாள்தனத்திற்கு எல்லையே இல்லை என்று ஈஸ்வர் நினைத்தான். இவனிடம் கனிவாகவோ, நல்ல விதமாகவோ பேசினால் அதை ஒரு நடிப்பாகத் தான் நினைப்பான் என்பதால் கோபத்தை மறைக்காமலேயே ஈஸ்வர் சாடினான். "உனக்கு கடவுள் அறிவே தரலையா மகேஷ். என்ன தான் நான் இருந்தாலும் அத்தைக்கு நான் நீயாயிட முடியுமாடா. நான் விருந்தாளிடா. ஒரு மாசம் மட்டுமே இருக்கப் போகிற விருந்தாளி. அவங்க உயிருக்குயிரா நேசிச்ச அண்ணனோட மகன். இத்தனை வருஷமா பார்க்காதவன். அதனால தான் என்னை அதிகம் கவனிக்கிறாங்க. உபசரிக்கிறாங்க. அதனாலேயே உன்னை விட என் மேல அதிகம் பாசம் வச்சிருக்காங்கன்னு ஆயிடுமாடா...."*

*மகேஷ் மௌனம் சாதித்தான். ஈஸ்வர் தொடர்ந்தான். "சாகணும்னு முடிவு செஞ்சப்ப ஒரு நிமிஷம் உன் அப்பா, அம்மாவையோ, தாத்தாவையோ, விஷாலியையோ ஏண்டா உன்னால நினைச்சுப் பார்க்க முடியலை. இவங்க எல்லாம் தாங்குவாங்களாடா?"*

*விஷாலியின் பெயரை ஈஸ்வர் சொன்னவுடன் மகேஷ் அவன் பக்கம் திரும்பினான். தவறி வந்து விட்ட பெயரோ? இவர்களுக்கு இடையே ஊடல் தீர்ந்திருக்க வேண்டும் என்றால் அவன் சொன்னதெல்லாம் பொய் என்று கண்டிப்பாக அவளுக்குத் தெரிந்திருக்க வேண்டும். அதனால் தான் அவன் மீது அவள் கோபமாக இருக்கிறாள். அப்படி இருக்கையில் அவன் மரணத்தை விஷாலி தாங்க மாட்டாள் என்று ஈஸ்வரே தன் வாயால் எப்படி சொல்கிறான்?*

“விஷாலிக்கு என் மேல் கோபம். சில நாளாய் என் கிட்ட அவள் பேசறது கூட கிடையாது..” என்று மகேஷ் ஆதங்கத்துடன் சொன்னான்.

“கோபம் இல்லாத நட்பு எங்கேடா மகேஷ் இருக்கு. ஆனா அவ உன்னைப் பத்தி என் கிட்ட தப்பா ஒரு வார்த்தை கூட சொன்னது கிடையாது. நல்லது மட்டுமே சொல்லி இருக்கா. சின்ன வயசுல இருந்து எப்பவுமே எதையுமே விட்டுக் கொடுத்த நல்ல நணபன்னு சொல்லி இருக்கா?”

இத்தனை பொய் சொல்லி அவன் அவளை ஏமாற்றிய போதும் அவள் அவன் மீது கோபப்பட்டிருக்கிறாளே ஒழிய காதலனிடம் காட்டிக் கொடுக்கவில்லை என்று நினைக்கையில் அவன் கண்கள் குளமாயின. ஈஸ்வரின் சட்டையைப் பிடித்து இழுத்து மகேஷ் கேட்டான். “விஷாலி என்னை வெறுக்கலையே ஈஸ்வர்”

முதல் தடவையாக மகேஷிடம் ஒரு ஆத்மார்த்தமான உணர்வை ஈஸ்வர் அவனிடம் பார்க்கிறான். விஷாலி இவனுடன் வைத்திருந்த உயர்வான நட்புக்குக் காரணமில்லாமல் இல்லை என்று அந்தக் கணத்தில் ஈஸ்வருக்குப் புரிந்தது. அவன் அமைதியாகச் சொன்னான். “கண்டிப்பா இல்லை மகேஷ்”

”நீ?”

“எனக்கும் உன் மேல் வெறுப்பில்லை...”

“நீ பொய் சொல்றே” மகேஷால் நம்ப முடியவில்லை.

ஈஸ்வர் அவன் கண்களைப் பார்த்து சொன்னான். “நான் ரொம்பவும் நேசிக்கிற அத்தையோட மகன் நீ. நான் காதலிச்ச, கல்யாணம் செய்துக்கப் போற பொண்ணோட நண்பன் நீ. உன்னை எப்படி என்னால வெறுக்க முடியும் மகேஷ்? கோபம் இருக்கு. ஆனா வெறுப்பில்லைடா”

அணை உடைந்து வெளிப்படும் வெள்ளமாய் மகேஷின் துக்கம் வெளிப்பட்டது. என்ன மனிதனிவன் என்று பிரமிப்பு தோன்றியது. இவனை எல்லாரும் நேசிப்பதில் ஆச்சரியமே இல்லை என்று தோன்றியது. ஈஸ்வரை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அழ ஆரம்பித்தான். நிறைய அழுதான்.

மகேஷை ஐசியூவில் இருந்து அறைக்கு மாற்றப் போவதாக நர்ஸ் ஒருத்தி வந்து சொன்னதும் விஸ்வநாதனும், ஈஸ்வரும் வெளியே வந்தார்கள். வெளியே வரும் போது விஸ்வநாதன் தன் மகனுக்கு இணையாக ஈஸ்வரை நேசிக்க ஆரம்பித்திருந்தார்.

அவரிடம் ஈஸ்வர் சொன்னான். “முதல்ல அவன் மேல் எல்லாரும் நிஜமாவே பிரியமாய் இருக்காங்கன்னு அவன் நம்பணும் மாமா. அந்த நம்பிக்கை வந்தா தற்கொலை எண்ணம் இனி அவன் மனசுல வராது. நல்ல விதமாய் மாற ஆரம்பிப்பான்... இவனை பார்க்க வீட்டுல இருந்து எல்லாரும் வந்தா அவனுக்கு நம்பிக்கை வரும்னு நினைக்கிறேன்”

விஸ்வநாதன் பயந்தார். ஆனால் மகேஷ் தற்கொலை செய்து கொள்ள முயன்று ஆஸ்பத்திரியில் இருக்கிறான் என்று யாரிடமும் சொல்லப் போவதில்லை என்று உறுதியளித்த ஈஸ்வர் வீட்டுக்குப் போன் செய்து மகேஷ் ஏதோ சாப்பிட்டது ‘ஃபுட் பாய்சன்’ ஆகி

அவனை ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டியதாயிற்று, இப்போது நலமாக இருக்கிறான் என்று தெரிவித்தான். கேட்டு பதறியடித்துக் கொண்டு மீனாட்சியும், கவலையுடன் பரமேஸ்வரனும், கனகதுர்காவும் கிளம்பினார்கள். மகேஷ் மீது என்றுமே நல்ல அபிப்பிராயம் இல்லாமல் இருந்த ஆனந்தவல்லிக்கு மகேஷை சென்று பார்க்கும் உத்தேசம் இருக்கவில்லை. ஈஸ்வர் அவளிடம் போன் செய்து தனக்காக வரச் சொன்னான். ஆனந்தவல்லி வேண்டா வெறுப்பாக ஈஸ்வருக்காக கிளம்பினாள். தந்தையின் மரண துக்கத்தில் இருந்த விஷாலிக்கு மகேஷ் சாதாரணமாக உடல்நலமில்லாமல் இருக்கிறான் என்ற நினைப்பும், ஏற்கெனவே அவன் மீது கோபமும் இருந்ததால் அவளும் மகேஷைப் பார்க்கக் கிளம்பவில்லை. அவளிடம் தயக்கத்துடன் ஈஸ்வர் மகேஷின் தற்கொலை முயற்சியை ரகசியமாகச் சொல்ல வேண்டியதாயிற்று. அதன் பிறகு அவளுக்கு மனம் கேட்கவில்லை. அவளும் மற்றவர்களுடன் கிளம்பினாள்.

**************

நம்பீசன் ஹோமம் வளர்த்துக் கொண்டிருந்தார். அவர் எல்லாவற்றையும் வேகமாகச் செய்தால் தேவலை என்று பாபுஜிக்குத் தோன்றியது. அறுவரும் அடிக்கடி என்ன நிலவரம் என்று கேட்டு தொல்லை அதிகமாகச் செய்ததால் அவர்கள் பார்க்கும்படி தியான மண்டபத்தில் காமிராக்கள் வைத்தது போலவே ஹோமம் நடக்கும் இடத்திலும் காமிராக்கள் வைத்து அவர்கள் அங்கிருந்தே பார்க்க பாபுஜி ஏற்பாடு செய்து விட்டார். அதன் பிறகு “சீக்கிரம் செய்யச் சொல்” என்று அவர்கள் பாபுஜிக்கு சைகை காட்ட ஆரம்பித்தார்கள். இவர்களுக்கு சீக்கிரமே பைத்தியம் பிடித்து விடுமோ என்ற சந்தேகம் ஜான்சனுக்கு வந்தது. அதற்கான எல்லா அறிகுறிகளும் பாபுஜியையும் சேர்த்து அவர்கள் ஏழு பேரிடமும் தோன்ற ஆரம்பித்திருந்ததை மனவியல் அறிஞரான அவர் கவனித்தார். நினைத்ததைக் கொடுக்கும் விசேஷ மானஸ

லிங்கத்தை வைத்து கனவுகளை எல்லாம் நனவாக்க அவர்கள் துடித்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் அது புரியாமல் அக்கம் பக்கம் பார்க்காமல், வேறெதிலுமே கவனத்தைச் சிதறடிக்காமல், நம்பீசன் தன் காரியமே கண்ணாய் இருந்தார். பின் பாபுஜியை அழைத்து ஆராய்ச்சிகளை இனி ஆரம்பிக்கச் சொன்னார்.

**************

மகேஷ் விஸ்வநாதனைக் கேட்டான். "தென்னரசு அங்கிள் உங்களுக்கு போன் செய்து பேசினாரா அப்பா?"

விஸ்வநாதன் மகனிடம் வருத்தத்துடன் சொன்னார். "தென்னரசு அங்கிள் ஒரு விபத்துல இறந்துட்டாருப்பா......"

அதிர்ச்சியுடன் மகேஷ் கேட்டான். "என்ன விபத்து?' அவன் குரல் நடுங்கியது. ஈஸ்வர் சொன்னான். மகேஷ் சிறிது நேரம் பேயறைந்தது போல இருந்தான். அவனையும் அறியாமல் அவன் உதடுகள் முணுமுணுத்தன. "அது விபத்தல்ல... கொலை...அவங்களுக்கு அவர் மேல ஏதோ சந்தேகம் வந்திருக்கணும். அதான் கொன்னுட்டாங்க"

திடுக்கிட்ட விஸ்வநாதனும், ஈஸ்வரும் ஒருசேரக் கேட்டார்கள். "என்ன, கொலையா?"

அவர்கள் வற்புறுத்திக் கேட்ட போது மகேஷிற்கு மனதின் சுமைகளைச் சொல்லி இறக்கி வைக்கத் தோன்றியது. காலம் முழுவதும் மனதில் இந்த ரகசிய சுமையை சுமந்து கொண்டிருப்பதை

விட வெளியே சொல்லி தண்டனையை ஏற்றுக் கொண்டாலும் தேவலை என்று தோன்றியது. அவன் எல்லாவற்றையும் ஆரம்பத்தில் இருந்து சொல்ல ஆரம்பித்தான்...

**************

ஆராய்ச்சிக்கு வர ஜான்சன் அழைத்ததும் கிளம்பிய ஹரிராமிற்கு ஏதோ ஒரு ஆபத்து வரப் போவதாக உள்ளுணர்வு எச்சரித்தது. முந்தைய நாளின் அழகான தியான அனுபவத்திற்குப் பின் அவர் பெரும்பாலும் தியானத்திலேயே மூழ்கி இருந்தார். வேறெதுவும் அவருக்குப் பிடிக்கவில்லை. அவரிடம் பேசலாம் என்று இரண்டு முறை வந்து அவர் தியானத்தில் மூழ்கி இருப்பதைப் பார்த்து விட்டு கணபதி போனது கூட அவருக்குத் தெரிந்திருக்கவில்லை. அதனால் அங்கே அஷ்டமங்கலப் ப்ரஷ்னம் வைத்ததும், அதன் பின் சில விசேஷ ஹோமங்கள் நடந்ததும் கூட அவருக்குத் தெரிந்திருக்கவில்லை.

உள்ளுணர்வின் எச்சரிக்கைக்குப் பிறகு தான் தன் அபூர்வ சக்தியால் நடந்தது என்ன என்று பார்த்தார். ஆபத்து என்ன என்று புரிந்தது. ஆனால் அதில் இருந்து தற்காத்துக் கொள்ள செய்ய வேண்டியதைச் செய்யக்கூட அவரிடம் இப்போது நேரமிருக்கவில்லை. குறைந்த பட்சம் ஈஸ்வரையாவது எச்சரிக்கலாம் என்று மானசீகமாக அவனுக்குச் செய்தி அனுப்பினார். ஆனால் மகேஷ் சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டு ஈஸ்வர் நிலை குலைந்து போயிருந்ததால் அவர் செய்தி அவனை எட்டவில்லை. இரண்டு மூன்று முறை முயற்சித்த ஹரிராம் அவனைத் தொடர்பு கொள்ள முடியாமல் போகவே வேறு வழி இல்லாமல் கிளம்பினார். அவருக்கு நிராயுதபாணியாக யுத்தத்திற்குப் போவது போல இருந்தது.

*எந்தப் பிரச்சினையையும் அறியாத கணபதி அவர் பின்னால் ஓடி வந்தான். "நான் ரெண்டு தடவை உங்க கிட்ட பேசலாம்னு வந்தேன். நீங்க நல்லா தியானத்துல மூழ்கி இருந்தீங்க. எனக்கென்னவோ தியானமே வர மாட்டேங்குது. தியானம்னு உட்கார்ந்தாலே தூக்கம் தான் வருது... அது எதனால?"*

# ***அத்தியாயம் - 88***

*மகேஷ் சொல்லி முடித்த போது ஈஸ்வர் தலையில் கையை வைத்துக் கொண்டு அமர்ந்திருந்தான். அவனைச் சுற்றி பிரளயமே நடப்பது போலிருந்தது. நடந்ததை அவனால் ஜீரணிக்கவே முடியவில்லை. பெரிய தாத்தாவின் கொலைக்குத் துணை போக இவனால் எப்படி முடிந்தது என்று மனம் கதறியது... இது தெரிந்தால் பரமேஸ்வரன் எப்படித் துடித்துப் போவார்? அவரால் இவனை மன்னிக்க முடியுமா? இவனைப் பற்றி எதுவுமே தெரியாத மீனாட்சி எப்படி உடைந்து போவாள்? அவளால் தாங்க முடியுமா? எல்லாவற்றிற்கும் மேலாக ஆனந்தவல்லி....? அவளது மகனைக் கொன்றவர்களை போலீஸ் இன்னும் பிடிக்கவில்லை என்று அடிக்கடி கோபப்படும் அவளுக்கு அவர்களில் ஒருவன் அவள் வீட்டிலேயே இருக்கின்றான் என்று தெரிந்தால் என்ன ஆகும்...?*

*தென்னரசுவும் இதில் இருந்திருக்கிறார் என்பதுவும் அவனுக்குப் பெரிய அதிர்ச்சியாக இருந்தது. அவர் தூண்டுதலால் தான் மகேஷ் முட்டாள்தனமாக இதில் இறங்கி இருக்கிறான். யாரையும் அதிகம் உண்மையாக நேசித்து இருக்காத மகேஷிற்கு எதுவுமே தப்பாக தோன்றி இருக்கவுமில்லை... விஷாலிக்குக் கூட சந்தேகம் வராதபடி தென்னரசு இருந்திருக்கிறார். அவள் இன்னும் அவள் தந்தையைப் போல் ஒரு நல்ல மனிதர் இருக்க முடியாது என்று ஆழமாக நம்பிக் கொண்டிருக்கிறாள். விசேஷ மானஸ*

*லிங்கம் யாரை எல்லாம் எப்படி எல்லாம் மாற்றி இருக்கின்றது....? விஷாலி உண்மை அறிய நேர்ந்தால் எப்படி உணர்வாள்?*

*அவனை விஷாலியுடன் சேர்த்து வைக்க ஆனந்தவல்லி ஆடிய நாடகம் கொஞ்சமா என்ன? தன் கொள்ளுப்பேரனுடன், அவளுடைய மகனின் கொலைக்குத் துணை போன ஒருவனின் மகளைச் சேர்த்து வைக்கத்தான் இவ்வளவு பாடுபட்டிருக்கிறாள் என்பது அவளுக்குத் தெரிய வந்தால் என்ன ஆகும்...?*

*நினைக்க நினைக்க ஈஸ்வருக்கு இதயமே வெடித்து விடும் போல இருந்தது. விஸ்வநாதனும் மகனை அதிர்ச்சியோடு பார்த்துக் கொண்டிருந்தார். மகன் தவறு செய்யும் போதெல்லாம் கண்டும் காணாதது போல் இருந்து ஊக்குவித்தது எத்தனை பெரிய குற்றத்தில் அவனைக் கொண்டு போய் விட்டிருக்கிறது என்று வேதனைப்பட்டார்.*

*வீட்டார்களின் பேச்சு சத்தம் வெளியே கேட்க அவசரமாக ஈஸ்வர் மகேஷிடம் சொன்னான். "நான் உனக்கு ஃபுட் பாய்சன் ஆயிடுச்சு. அதனால தான் அட்மிட் செய்திருக்கோம்னு சொல்லி இருக்கேன். அதையே நீயும் சொல்லு"*

*மீனாட்சியும் மற்றவர்களும் உள்ளே வந்தார்கள். வாடிய முகத்துடன் மகன் ஆஸ்பத்திரியில் படுத்துக் கிடப்பதைப் பார்த்த மீனாட்சி கண்கலங்கி விட்டாள். "எப்படிடா இருக்கு இப்ப?" என்று கவலையுடன் கேட்டாள்.*

*தாயின் கண்ணீர் மகேஷை என்னவோ செய்தது. "அழாதேம்மா. குணமாயிட்டேன்"*

மகேஷ் ஆனந்தவல்லி அவனைப் பார்க்க வருவாள் என்று சிறிதும் எதிர்பார்த்திருக்கவில்லை. விஷாலியையும் தான். தென்னரசு தகனம் முடிந்த அன்றே அவனைப் பார்க்க வந்திருக்கிறாள். ஆனந்தவல்லி பெயருக்கு அவனிடம் நலம் விசாரித்தாள்.... விஷாலி அவன் அருகில் வந்து நின்று கொண்டாள். பரமேஸ்வரன் பாசத்துடன் அவன் அருகில் அமர்ந்து கொண்டார். கனகதுர்காவை மகேஷிற்கு அறிமுகம் செய்து வைத்தார். கனகதுர்காவும் மகேஷிடம் நலம் விசாரித்தாள். இப்படி எல்லாருமே அவன் மிது அக்கறை காட்டியது மகேஷிற்கு மனம் நெகிழச் செய்தது. ஆனால் பசுபதியின் மரணத்தில் அவன் பங்கு தெரிந்தால் இதில் எத்தனை பேர் அவனை மனிதனாகவாவது நினைப்பார்கள் என்று யோசித்த போது வலித்தது...

ஆனந்தவல்லிக்கு ஈஸ்வர் முகத்தைப் பார்க்க சகிக்கவில்லை. “என்னடா பேயறைஞ்ச மாதிரி இருக்கே. ஆராய்ச்சி, ஆஸ்பத்திரின்னு அலைச்சல் அதிகமா? பேசாமல் போய் கொஞ்ச நேரம் தூங்குடா...”

மகேஷிடம் நலம் விசாரித்துக் கொண்டிருந்த பரமேஸ்வரனுக்கும் ஈஸ்வரைப் பார்த்த போது அப்படியே தோன்றியது. அவன் முக்கியம் என்று சொன்ன அந்த ஆராய்ச்சியைக் கூட விட்டு விட்டு இங்கு வந்து இந்த நேரத்தில் மகேஷுடன் இருப்பது அவருக்குப் பெருமிதமாக இருந்தது. ”அன்பிலும், பொறுப்பிலும் சங்கரின் மகன் தான்....!”

ஈஸ்வருக்கு அங்கே ஆனந்தவல்லி பரமேஸ்வரன் இருவரின் முன்பு அதிகம் நிற்க முடியவில்லை. ஓரிரு நிமிடங்கள் நின்று விட்டு அனைவர் கவனமும் மகேஷிடம் இருக்கையில் வெளியே வந்து

விட்டான். வராந்தாவில் தூரத்தில் பார்த்தசாரதி அமர்ந்து கொண்டிருந்தார். அவர் அருகே வந்து உட்கார்ந்தவனுக்கு வாய் விட்டு அழத் தோன்றியது. அழுதான். அவன் அப்படி உடைந்து போனது பார்த்தசாரதிக்கு ஆச்சரியமாக இருந்தது. மிகவும் உறுதியானவன் அவன் என்பது தான் அவருக்கு அவன் மீதான அபிப்பிராயம்....! எந்த அளவு உறுதியானவர்களும் உடைந்து போகும் படியான சந்தர்ப்பங்களை வாழ்க்கையில் விதி சில சமயம் ஏற்படுத்திக் கொடுத்து விடுகின்றது என்று நினைத்தார்.

ஓரளவு மனதின் பாரத்தை அழுகையால் குறைத்து விட்ட பின் தன்னை உறுதிப்படுத்திக் கொண்டு ஈஸ்வர் நிமிர்ந்து உட்கார்ந்தான். கிடைத்த தகவலை பார்த்தசாரதியிடம் சொல்வதா வேண்டாமா என்ற குழப்பம் வந்தது. சொன்னதை எல்லாம் கேட்டு மகேஷை அவர் கைது செய்து விட்டால் என்ன செய்வது என்ற பயம் வந்தது.

கனகதுர்கா வெளியே வந்து மகனைத் தேடினாள். அதைக் கவனித்த ஈஸ்வர் எழுந்து அவளருகே வந்தான். ”என்னம்மா?”

“திரும்பவும் நீ ஆராய்ச்சி அது இதுன்னு போகாமல் வீட்டுக்கு வந்து விஷாலி கூட இரு. அவளுக்கு ஆறுதலாய் இருக்கும்”

”எனக்கு இப்போதைக்கு வர முடியாதும்மா. நான் செய்தே ஆக வேண்டிய வேலைகள் சில இருக்கு. அதை முடிக்காமல் வர முடியாது...”

“அவள் உன்னைப்பத்தி என்னடா நினைப்பா? இந்த மாதிரி நேரங்கள்ல தாண்டா நீ அவள் பக்கத்துல இருக்கணும்.”

ஈஸ்வர் தற்போதைய நிலைமையை வாய் விட்டுச் சொல்ல முடியாமல் தவித்தான். இன்று முடிந்த வரை சோதிப்பது என்று இறைவன் முடிவு செய்து விட்டானோ? மற்றவர்களும் மகேஷைப் பார்த்து வெளியே வர ஆரம்பித்து விடவே கனகதுர்கா மகனிடம் தர்க்கம் செய்ய நிற்கவில்லை....

ஆனந்தவல்லி பார்த்தசாரதியைப் பார்த்து விட்டாள். முகத்தைச் சுளித்தபடி அவரிடம் சொன்னாள். “ஏம்ப்பா. என் மகனைக் கொன்னவங்களைக் கண்டுபிடிச்சீங்களா இல்லையா? எத்தனை நாளாச்சு? சர்க்கார் உங்களுக்கு தர்ற சம்பளமே தண்டமான்னு எனக்குத் தோணுது”

ஈஸ்வர் பரிதாபமாக பார்த்தசாரதியைப் பார்த்து “எனக்காக மன்னிச்சுடுங்க ப்ளீஸ்” என்று பாவனையில் கெஞ்சினான். பார்த்தசாரதி ஆனந்தவல்லியிடம் “கொலைகாரங்களை நெருங்கிட்டோம்” என்றார்.

“என்ன நெருங்கறீங்களோ” என்று சலித்துக் கொண்டே ஆனந்தவல்லி நகர்ந்தாள்...

அறையிலிருந்து கடைசியாக கிளம்பிய விஷாலியிடம் மகேஷ் சொன்னான். “என்னை மன்னிச்சுடு விஷாலி....”

அவள் அதைப் பற்றிப் பேசாதே என்று சொல்லும் விதமாய் அவன் கையை அழுத்தி விட்டு சோகத்தின் நடுவேயும் பலவந்தமாய் ஒரு புன்முறுவல் செய்து விட்டுப் போனாள். மகேஷின் மனம் என்னவோ செய்தது. விசேஷ மானஸ லிங்கம் நினைத்ததை எல்லாம் தரும் கல்ப வ்ருக்ஷம், அதன் மூலம் என்ன வேண்டுமானாலும்

அடையலாம் என்றெல்லாம் தென்னரசு சொல்லி பின் அவனும் என்னென்னவோ கனவு காண ஆரம்பித்திருந்தாலும், முதலில் அவர் சொன்னதை எல்லாம் அவன் கேட்க ஆரம்பித்தது விஷாலிக்காகத் தானே. அவர் விஷாலியின் தந்தை என்பதற்காகத் தானே? இப்போது அவரும் இறந்து விட்டார். அவளும் அவனுக்கு இல்லாமல் போய் விட்டாள். சட்டம் அவனைத் தண்டிப்பதற்கு முன்னால் விசேஷ மானஸ லிங்கம் அவனைத் தண்டித்து விட்டதாய் நினைத்தான். நல்ல மனமும், பெருந்தன்மையும் காரணமாக ஈஸ்வரும் விஷாலியும் அவனை மன்னித்திருக்கலாம். ஆனால் அவனுடைய விஷாலி காலம் முழுவதும் இன்னொருவனுடையவளாக வாழ்வதை அவன் பார்த்து வாழ்வதே பெரிய தண்டனை தானே?

வெளியே வந்த விஷாலியின் கைகளைப் பிடித்துக் கொண்டு ஈஸ்வர் குற்ற உணர்வோடு சொன்னான். “விஷாலி, இந்த நேரத்துல நான் உன் கூட இருக்கிறது தான் நியாயம். ஆனா முக்கியமான ஒரு வேலை இருக்கு.....”

விஷாலி அவனை மேலே பேச விடவில்லை. மனதார சொன்னாள். “நீங்க மனசளவுல எப்பவுமே என் கூட இருக்கீங்க. அதனால தான் நான் இன்னைக்கு அப்பா சாவைத் தாங்கிகிட்டு இருக்கேன். நீங்க உங்க வேலையைப் பாருங்க ஈஸ்வர்...”

ஈஸ்வர் நெகிழ்ந்து போனான். ’இப்படி ஒருத்தி கிடைக்க நான் தவம் செய்திருக்க வேண்டும்’

**************

தியான மண்டபத்தில் ஆராய்ச்சி ஆரம்பமானது. ஹரிராம் அமர்வதற்கு முன்பு மறுபடியும் ஒரு முறை ஈஸ்வரைத் தொடர்பு

கொள்ளப் பார்த்தார். அது முடியவில்லை. ஈஸ்வர் பெரும் துக்கத்துடன் அழுது கொண்டிருப்பது தெரிந்தது. ஹரிராம் அவனைத் தொடர்பு கொள்வது முக்கியமா, இந்த ஆராய்ச்சி வெற்றி பெறாமல் இருப்பது முக்கியமா என்று யோசித்தார். ஈஸ்வர் இப்போது விசேஷ மானஸ லிங்க அலைகளுடன் லயிக்கும் வாய்ப்பு இல்லை. அவன் வேறெங்கோ இருக்கிறான்... பெரும் துக்கத்தில் வேறு இருக்கிறான். அதனால் இந்த ஆராய்ச்சியைத் தடுக்கும் முயற்சியில் ஈடுபடப் போவது அவரும், கணபதியும் மட்டுமே. அப்படி இருக்கையில் கணபதியை மட்டும் அந்த முயற்சியில் விட்டு விட்டு ஈஸ்வரைத் தொடர்பு கொள்ள முயல்வது புத்திசாலித்தனம் அல்ல என்று தோன்றியது. வரப்போவதாக அவர் உணர்ந்துள்ள அபாயத்தை முறியடிக்க கவசம் ஏற்படுத்திக் கொள்வதற்குக் கூட அவரிடம் நேரம் இல்லை.....

ஆராய்ச்சியின் போது முந்தைய நாளின் முறையையே ஹரிராமும், கணபதியும் கடைபிடித்தார்கள். ஹரிராம் மந்திரத் தடுப்பு சுவர் எழுப்பினார். கணபதியோ நந்தியை வைத்து மறைத்தான். ஆனால் ஆல்ஃபா தீட்டா அலைவரிசையில் இருந்து கொண்டிருக்கும் ஹரிராம் என்ன செய்கிறார் என்பதும், கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் கணபதி என்ன செய்து கொண்டிருக்கிறான் என்பதும் ஹோமத்தீயில் உருவமாகவே நம்பீசனுக்குத் தெரிந்து கொண்டிருப்பதை அவர்கள் அறியவில்லை.

நம்பீசன் ஹோமத்தீயைப் பார்த்துக் கொண்டே பாபுஜியிடம் சொன்னார். “ரெண்டு பேர்ல ஒருத்தன் குடுமி வச்சவன்.... சிவலிங்கத்துக்குப் பக்கத்துல உட்கார்ந்திருக்கான். அவன் கற்பனை நந்தி போல சிவலிங்கத்தை மறைக்குது. இன்னொருத்தன் வயசானவன். தாடி வச்சிருக்கான். கண்ணாடி போட்டிருக்கான்.... அவன் மந்திரத்தால தடுப்பு சுவர் எழுப்பி இருக்கான்....”

பாபுஜி வாயைப் பிளந்தார். 'கணபதியும், ஹரிராமுமா'. நம்பீசன் பார்த்ததைத் தானும் பார்க்க ஆசைப்பட்டு பாபுஜி ஹோமத்தீயைப் பார்த்தார். புகை மண்டலத்தில் கண்களைத் திறக்கவே முடியவில்லை. கஷ்டப்பட்டு கண்களைத் திறந்த போதும் கண்களில் எரிச்சல் வந்ததே தவிர எதுவும் தெரியவில்லை.

ஜான்சன் பிரமித்தார். ஆழ்மனசக்தி அலைகளை அபூர்வசக்திகளால் பார்க்கும் வித்தையை விஞ்ஞான ரீதியாக அவர் அறிந்திருந்தாரே ஒழிய அதை ஒரு விசேஷ ஹோமம் செய்து மந்திரங்களின் சக்தியால் அந்த ஹோமத்தீயில் உருவமாகவே பார்க்கலாம் என்பதை அவர் அறிந்திருக்கவில்லை. இதுவும் ஆராயப்பட வேண்டிய ஒன்று என்று அவர் நினைத்தார்.

பாபுஜி புகையில் இருந்து விலகி நின்று கொண்டு பல்லைக் கடித்துக் கொண்டு சொன்னார். "துரோகிகள்". பின் நம்பீசனைக் கேட்டார். "என்ன செய்யலாம்?"

நம்பீசன் சொன்னார். "அவங்க ரெண்டு பேரையும் செயலிழக்க வச்சுடலாம். கவலைப்படாதீங்க."

பாபுஜி பரபரத்தார். "உடனே செய்யுங்க"

நம்பீசன் ஒரு காகிதத்தை நீட்டினார். "இதுல என் அக்கவுண்ட் டீடெய்ல்ஸ் இருக்கு. இந்த அக்கவுண்டுக்கு உடனடியாய் இருபது லட்சம் அனுப்பிச்சுடுங்க"

பாபுஜி உடனே "சரி" என்றார். ஆனால் நம்பீசன் அவரையே பார்த்துக் கொண்டு எதுவும் செய்யாமல் இருக்கவே பாபுஜி பணம் அனுப்ப போனில் உத்தரவு பிறப்பித்தார். கால் மணி நேரம் கழித்து நம்பீசன் மொபைல் போனில் அவர் கணக்கில் இருபது லட்சம் ரூபாய் வந்து விட்டது என்று தகவல் வந்தது. பின் தான் நம்பீசன் செயல்பட்டார். இந்த ஆள் என்னை விடப் பெரிய வியாபாரியாக இருக்கிறானே என்று பாபுஜி நினைத்துக் கொண்டார்.

நம்பீசனும் அவர் உதவியாளர்களும் சேர்ந்து அந்த ஹோமத் தீயில் கவனத்தைக் குவித்தபடி சில மந்திரங்களை உச்சரிக்க ஆரம்பித்தார்கள். சிறிது நேரத்தில் கணபதி தூங்க ஆழ்ந்து தூங்க ஆரம்பித்தான். ஹரிராம் தான் எழுப்பிய மந்திரக் காப்பு சுவர் கியோமி, அலெக்ஸிக்கும் எதிராக நின்று விசேஷ மானஸ லிங்கத்தை மறைத்ததோடு அல்லாமல் அவருக்கும் மறைத்தது. யாரோ அந்த சுவரை அவர் பக்கமாகவும் நகர்த்தி விட்டு மறைப்பது போல உணர்ந்தார். இப்போது விசேஷ மானஸ லிங்கத்தோடு அவருக்கிருந்த தொடர்பு அறுபட்டது. அவர் அதிர்ச்சியடைந்தார். அவர் அதிர்ச்சியில் இருந்து மீளும் முன் அவரை மீறி ஒரு சக்தி அவரை மெல்ல சூழ ஆரம்பித்தது. அவர் அதை எதிர்க்க முடியாமல், அதை விலக்க முடியாமல் செயலிழந்து போக ஆரம்பித்தார்.

நம்பீசன் பாபுஜியிடம் சொன்னார். "ரெண்டு பேரும் இன்னைக்கு முழுசும் உங்கள் ஆராய்ச்சிக்கு தொந்திரவு செய்ய மாட்டாங்க"

பாபுஜி தியான மண்டபத்திற்குப் போய் பார்த்தார். கணபதி உறங்கிக் கொண்டிருந்தான். ஹரிராம் சிலை போல் அமர்ந்திருந்தார். அவர் EEG மெஷின் சாதாரண விழிப்பு நிலையான பீட்டா அலைகளைக் காட்டியது. பாபுஜிக்கு சந்தோஷம் தாங்கவில்லை.

*இந்த மாதிரி அற்புதத்தை குருஜி கூட நிகழ்த்தியதில்லையே. ஜான்சனுக்கும் நம்பிக்கை வர ஆரம்பித்தது. ஜான்சன் அலெக்ஸியையும், கியோமியையும் அங்கிருந்து எழுந்து எதிர்பக்கம் உட்கார்ந்து மறுபடி ஆரம்பிக்கச் சொன்னார். அவர்கள் அப்படியே செய்தார்கள்.*

*பாபுஜி வந்து நம்பீசனிடம் சொன்னார். ”தேங்க்ஸ். இதே மாதிரி வெளியே இருக்கிற ஈஸ்வரையும் கட்டுப்படுத்திடுங்களேன்.”*

*நம்பீசன் சொன்னார். ”அவன் இப்ப இந்த அலைவரிசையில் இல்லை. ஒரு வேளை இருந்திருந்தால் இப்பவே செய்திருப்பேன். அவன் அலைவரிசைக்கு வெளியே இருக்கிறான். அவனை அதில் வரவழைத்து கட்டுப்படுத்தறது சுலபம் இல்லை...”*

*“என்ன செலவானாலும் பரவாயில்லை. செஞ்சுடுங்களேன்”*

*நம்பீசன் ஒத்துக் கொள்வதற்கு முன் மறுபடி ப்ரஸ்னம் வைத்துப் பார்த்தார். வெளியே இருப்பவன் தற்போது மிகவும் தளர்ந்து இருப்பது தெரிந்தது. அவனைக் கட்டுப்படுத்துவது கஷ்டமில்லை....*

*நம்பீசன் சொன்னார். “சரி இன்னொரு இருபது லட்சத்தை என் அக்கவுண்ட்ல கட்டிடுங்களேன்”*

*பாபுஜி யோசிக்கவில்லை. சரியென்றார்.*

*அக்கவுண்டில் பணம் வந்து சேர்ந்ததை உறுதிப்படுத்திக் கொண்டு நம்பீசன் புதியதொரு ஹோம குண்டலத்தை அமைக்க ஆரம்பித்தார். கணபதியையும், ஹரிராமையும் செயல் இழக்க வைத்ததை நேரடி ஒளிபரப்பில் பார்த்த அறுவருக்கும் உற்சாகம் தாங்கவில்லை.... துள்ளிக் குதித்துக் கொண்டாடினார்கள். அவர்கள் ஒவ்வொருவராக பாபுஜிக்குப் போன் செய்து வாழ்த்துக்கள் தெரிவிக்க ஆரம்பித்தார்கள். அடுத்த நடவடிக்கைகள் பற்றி ஆலோசனைகள் தர ஆரம்பித்து விட்டார்கள். பாபுஜியின் செல் போன் மூன்றாம் முறை ஒலித்த போது நம்பீசன் கோபப்பட்டார். "அதை நம்ம வேலை முடியற வரைக்கும் ஸ்விட்ச் ஆஃப் செய்து வைங்க. இடைஞ்சலா இருக்கு. இதுல கொஞ்சம் கவனம் சிதறினாலும் காரியம் கெட்டுடும்...."*

*பாபுஜி மறு வார்த்தை பேசாமல் செல் போனை ஸ்விட்ச் ஆஃப் செய்தார்.*

**************

*ஈஸ்வர் இனி என்ன செய்வது என்று யோசித்தான். மகேஷ் தெரிவித்த விசேஷ மானஸ லிங்கம் இருக்கும் இடத்திற்கு நேராகப் போவது தான் ஒரே வழி என்று தோன்றியது. ஆனால் தனியாகப் போக முடியாது.... போவது பாதுகாப்பும் அல்ல. பார்த்தசாரதி மற்றும் போலீஸ் துணையோடு போவது தான் புத்திசாலித்தனம். ஆனால் அவரை அழைத்துப் போவது என்றால் அவருக்கு அனைத்தையும் சொல்லித் தானாக வேண்டும்... வேறு வழியில்லை!*

*தயக்கத்துடன் அவன் மகேஷ் சொன்னதை எல்லாம் அவரிடம் சொன்னான். தென்னரசு பற்றி அறிந்திருந்த பார்த்தசாரதி மகேஷைப் பற்றி சந்தேகம் கூடக் கொண்டதில்லை. அவனை சந்தேகிக்க வலுவான காரணம் எதுவும் இருக்கவில்லை. நடந்ததைச் சொல்லும் போதே ஈஸ்வருக்கு கூசியதை அவரால் உணர முடிந்தது.*

அவன் சற்று முன் தாளாமல் அழுததற்கான காரணங்கள் புரிந்தன. ஒரேயடியாக பல பாகங்களில் இருந்தும் பிரச்சினைகள் அவனுக்கு வந்திருக்கின்றன. ஒரு பக்கம் அவன் அத்தை மகனே கொலைகாரக் கூட்டத்தைச் சேர்ந்தவன் என்று தெரிய வந்திருக்கிறது. இன்னொரு பக்கம் அவன் வருங்கால மாமனாரும் அதே கூட்டத்தைச் சேர்ந்தவர் என்று தெரிய வந்திருக்கின்றது. இரண்டையும் அவன் யாரிடமும் சொல்ல முடியாது. முக்கியமாய் வீட்டில் இருக்கும் கிழடுகளிடம் தெரிவிக்கவே முடியாது.

அவன் அமெரிக்காவிலேயே பிறந்து வளர்ந்திருந்தாலும், சில நாட்களாக மட்டுமே இந்தக் குடும்பத்துடன் தொடர்பில் இருக்கிறான் என்றாலும், அவனிடம் இருந்த பாசமும், பொறுப்புணர்வும் அவரை வியக்க வைத்தது.

இந்தக் குடும்பப் பிரச்சினைகள் போதாது என்று அந்த கணபதி என்கிற பையன் மேல் வேறு அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறான். அது போதாது என்று அந்த சித்தர் வேறு உலகத்தின் பொறுப்பே உன்னிடம் தான் என்பது போல சொல்லி மேலும் சுமத்தி விட்டுப் போயிருக்கிறார். ஒரு மனிதன் எத்தனை பொறுப்பைத் தான் சுமக்க முடியும் பாவம்! ஆனால் அவன் கவலையும், வருத்தமும் பட்டானே ஒழிய சுயபச்சாதாபப்பட்டு உடைந்து விடவில்லை என்பது அவன் மேல் இருந்த மதிப்பைக் கூட்டியது.

அவன் மனம் விட்டு எல்லாவற்றையும் சொன்னதால் பார்த்தசாரதியும் மெல்ல தென்னரசு பற்றி தனக்கு முன்பே சந்தேகம் இருந்தது என்றும் அவனைக் கொல்ல முயற்சி நடப்பதைப் போன் செய்து சொன்னவர் அவர் தான் என்றும் தெரிவித்தார். அவன் மருமகனாகப் போகிறான் என்பதைத் தெரிந்த பிறகு அந்தக்

கொலை முயற்சியை அவர் தெரிவித்திருக்க வேண்டும், அதை அவர்கள் கண்டுபிடித்திருக்க வேண்டும், அதனால் கொன்றிருக்க வேண்டும் என்று தோன்றுவதாக கூறினார்.

ஈஸ்வர் இதயத்தில் இன்னொரு சுமை கூடியது. அவனைக் காப்பாற்றப் போய் அவர் இறந்து விட்டாரே! 'விஷாலி உங்கப்பாவுக்கு நானே எமனாயிட்டேன்..." மனம் கதறியது. மனம் அமைதியடைய சிறிது நேரம் எடுத்துக் கொண்டது.

அப்போது தான் ஹரிராம் அனுப்பிய செய்தியை அவனால் உணர முடிந்தது. "ஆபத்து நெருங்கியிருக்கிறது..." அந்தத் தகவலே தாமதமாகத் தான் உணரப்பட்டிருக்கிறது என்றும் அவனுக்குத் தோன்றியது.

திடுக்கிட்ட ஈஸ்வர் மனதை மேலும் அமைதிப்படுத்தி கவனித்தான். ஆனால் ஹரிராமிடம் இருந்து வேறு தகவல் எதுவும் வரவில்லை. நேற்று அவன் தோட்ட வீட்டில் இருந்து அவரைத் தொடர்பு கொள்ள முயன்ற போது அவர் ஆழ்ந்த தியானத்தில் இருந்தார். அது போல் இப்போதும் இருக்கிறாரா என்ன?

அப்படி இருக்காது என்று தோன்றியது. ஆபத்து நெருங்கியிருக்கிறது என்று சொல்லி விட்டு அந்த ஆபத்தைப் பற்றிக் கவலைப்படாமல் யாரும் ஆழ்ந்த தியானத்திற்குப் போக முடியாது.... என்ன ஆபத்தைச் சொன்னார் அவர்? மகேஷ் இன்று காலை அங்கு வரப் போவதாகச் சொன்ன நம்பீசனால் ஏற்பட்டிருக்கும் ஆபத்தாக இருக்குமோ?

அப்படி நினைக்கும் போதே திடீரென்று விசேஷ மானஸ லிங்கத்தைப் பிடித்துக் கொண்டே கணபதியும், ஹரிராமும் ஒரு மலைப் பள்ளத்தாக்கில் குப்புற விழுந்து கொண்டிருப்பது போல் ஒரு காட்சி அவன் மனக்கண்ணில் வந்து மறைந்தது. பின்னணியில் பௌர்ணமி சந்திரன் ஜொலித்துக் கொண்டிருந்தது.

இன்று பௌர்ணமி..... இந்தக் காட்சியையும், ஹரிராம் அனுப்பி இருந்த ஆபத்து செய்தியையும் சேர்த்து யோசித்த போது பகீர் என்றது.

# அத்தியாயம் - 89

அதற்கு மேல் ஈஸ்வர் தாமதிக்கவில்லை. ஹரிராம் தனக்கு அனுப்பியதாய் தோன்றிய ஆபத்து செய்தியையும், தனக்கு இப்போது தெரிந்த காட்சியையும் அவன் பார்த்தசாரதியிடம் தெரிவித்தான். பார்த்தசாரதிக்கு விசேஷ மானஸ லிங்கத்தின் மீதும், அந்த சித்தர் மீதும் கோபம் வந்தது. இப்படி காட்சி காண்பித்து மற்றவர்களைத் திகிலில் ஆழ்த்துவதை விட தாங்களே செய்ய வேண்டியதைச் செய்து விடலாமே....

உடனே பாபுஜியின் இடத்திற்குப் போவது என்ற முடிவெடுத்தவுடன் பார்த்தசாரதி தனக்கு இந்த வழக்கில் உதவும் இரண்டு திறமையான போலீஸ்காரர்களையும் ஆலோசனைக்கு அழைத்தார். நால்வரும் சேர்ந்து ஆலோசித்தார்கள்.

மகேஷ் அந்த இடத்தில் மெயின் கேட்டில் இரண்டு செக்யூரிட்டிகள் தவிர வேறு காவல் இல்லை என்று சொல்லி இருந்தான். காவலுக்கு ஆட்களை அதிகம் கூட்டிக் கொண்டே போனால் இந்த விசேஷ மானஸ லிங்கம் பற்றிய விவரங்கள்

வெளியே கசிந்து விடும் என்று அவர்கள் பயந்ததாக மகேஷ் தெரிவித்திருந்தான். தாங்கள் இருக்கும் இடத்தை போலீஸார் கண்டுபிடிக்க வாய்ப்பே இல்லை என்று அவர்கள் நம்பினார்கள் என்றான். ஆட்களுக்குப் பதிலாக வலிமையான நாய்களைத் தருவிக்கலாம் என்று நாய்ப்பிரியரான பாபுஜி ஆசைப்பட்ட போது குருஜி நாய்கள் குரைப்பது தியானத்தைக் குலைக்கும், ஆராய்ச்சிகளுக்கு இடைஞ்சலாக இருக்கும் என்று தடுத்து விட்டதாகவும் மகேஷ் சொன்னான். அந்த இடத்தில் பாபுஜி, ஜான்சன், அலெக்ஸி, கியோமி, ஹரிராம், கணபதி ஆகியோருடன் வேறு மூன்று வேலையாட்கள் மட்டும் தான் இருக்கிறார்கள், பாபுஜி ஒருவரிடம் தான் துப்பாக்கி உள்ளது, அங்குள்ள காம்பவுண்ட் சுவர் சுமார் எட்டு அடிகள் இருக்கும், பாபுஜி வெளியில் இருந்து தங்களுக்கு வரும் ஆபத்துக்கள் பற்றிய தகவல்கள் சொல்லவும் மற்ற பல வேலைகளுக்கும் தனியார் துப்பறியும் நிபுணர்களைப் பயன்படுத்துகிறார் முதலான தகவல்களை மகேஷ் தெரிவித்திருந்தான்...

ஆலோசித்து கடைசியில் போலீஸ்காரரர்கள் ஆறு பேர் தங்களுடன் வந்தால் போதும் என்று பார்த்தசாரதி முடிவெடுத்தார்.

ஈஸ்வர் கேட்டான். “அங்கே பாபுஜியின் ஆள்கள் தான் குறைவே ஒழிய அவர் சொன்னதைச் செய்ய ப்ரைவேட் டிடெக்டிவ் ஏஜென்ஸி ஆள்கள் நிறைய பேர் இருக்கிறார்கள், அவர் ஒரு போன் செய்தால் போதும் அவர்கள் வந்து விடுவார்கள் என்று மகேஷ் சொன்னானே. நம் ஆட்கள் ஆறு பேர் போதுமா?”

பார்த்தசாரதி சொன்னார். “அந்த ஆள்கள் மறைமுகமா அவருக்கு என்ன உதவி வேணும்னாலும் செய்யலாம். ஆனா போலீஸோட நேரடியா மோத வர மாட்டாங்க. அப்படி செஞ்சா

அவங்க லைசென்ஸ் கேன்சல் ஆயிடும். அதுக்கப்புறம் அவங்க அந்த தொழிலே செய்ய முடியாது. அதனால அவங்கள பத்தி கவலைப்பட வேண்டியதில்லை. நம்ம ரெண்டு பேர் கூட ரெண்டு போலீஸ்காரங்க உள்ளே வரட்டும். மத்த நாலு பேர் வெளியே யாரும் தப்பிச்சுடாமல் பார்த்துகிட்டு காவலுக்கு நிக்கட்டும். நமக்கு ஏதாவது பிரச்சினைன்னா மட்டும் அவங்கள்ல ஒன்னு ரெண்டு பேரை உள்ளே கூப்பிட்டுக்கலாம்....”

அந்த அவசரத்திலும் ஈஸ்வர் கிளம்பும் முன்னால் நம்பீசன் பற்றிய தகவல்கள் ஏதாவது இருக்கிறதா என்று இண்டர்நெட்டில் சிறிது பார்த்துக் கொண்டு போவது நல்லது என்று நினைத்தான். இப்போதைய ஆபத்து நம்பீசனால் வந்திருப்பதாக இருந்தால் அவரைப் பற்றி தெரிந்து கொள்வது அவசியம் என்று அவன் உள்ளுணர்வு அவனை எச்சரித்தது. இணையத்தில் நம்பீசன் பற்றிய தகவல்களைத் தேடினான்.

நவீன காலத்து மந்திரவாதியாக அவர் இணையத்தில் பிரபலமாக இருந்தார். பணத்தில் குறியாக இருப்பவர் என்றாலும் ஏற்றுக் கொண்ட காரியத்தைச் சிறப்பாகச் செய்து கொடுப்பவர் என்ற பெயரையும் அவர் எடுத்திருந்தார். நம்பீசனை சக்தி வாய்ந்த மந்திரவாதி என்று பலரும் சொன்னாலும் சில சில்லறை அபூர்வ சக்திகளை தன் வசப்படுத்திக் கொண்டவர் என்பது மட்டும் ஈஸ்வருக்குத் தெளிவாகத் தெரிந்தது. அவர் எந்த மாதிரி இயங்கக் கூடியவர், அவர் சிறப்பு சக்திகள் என்னென்ன, அவரைப் பற்றி மற்றவர்கள் என்னவெல்லாம் சொல்கிறார்கள் என்பதை எல்லாம் தெரிந்து கொண்டான். அவர் திறமையை நேரில் பார்த்தவர்கள் அவர் என்ன செய்தார் எப்படி செய்தார் என்று வர்ணித்ததை ஈஸ்வர் கவனமாகப் படித்தான். நம்பீசன் பயன்படுத்தும் யுக்திகள் ஈஸ்வருக்குத் தெளிவாகவே புரிந்தன.

*அவன் தன் லாப்டாப்பில் நம்பீசனைப் பற்றி ஆராய்ந்து கொண்டிருக்கையில் பார்த்தசாரதி தன்னுடன் இருந்த போலீஸ்காரர்களில் ஒருவரைத் தனியாக அழைத்துச் சென்று தாங்கள் போன பிறகு மகேஷை ரகசியமாய் கண்காணிக்க ஏற்பாடு செய்யச் சொன்னார்.*

*அவர்கள் ஒரு போலீஸ் ஜீப், இரண்டு கார்களில் சரியாக இரவு 10.13 மணிக்குக் கிளம்பினார்கள். மூன்று போலீஸ்காரர்களுடன் ஒரு கார் முன்பும், மூன்று போலீஸ்காரர்களுடன் போலீஸ் ஜீப் பின்னாலும் வர நடுவில் சென்ற காரில் பார்த்தசாரதியும் ஈஸ்வரும் இருந்தார்கள்.*

*மகேஷ் இருந்த ஆஸ்பத்திரியில் இருந்து கிளம்பிய அவர்கள் தோட்ட வீட்டை நோக்கிச் செல்லாமல் அதற்கு நேரெதிர் திசையில் போக ஆரம்பித்தவுடன் எங்கு செல்கிறார்கள் என்பதை பாபுஜி நியமித்திருந்த துப்பறியும் ஆட்கள் ஊகித்தார்கள். ஒரு மணி நேரத்திற்குள் போலீஸ் அங்கு போய்ச் சேர்ந்து விடலாம் என்பதைத் தெரிவிக்க அவருக்குப் போன் செய்தார்கள். எத்தனை முறை அவர்கள் முயற்சித்தும் "ஸ்விட்ச்டு ஆஃப்" தகவல் தான் வந்து கொண்டிருந்தது.*

*போகும் போது பார்த்தசாரதி தன் சந்தேகத்தை ஈஸ்வரிடம் கேட்டார். "அந்த சிவலிங்கம் சக்தி வாய்ந்ததுன்னு சொல்றீங்க. அப்படி இருக்கறப்ப அது இருக்கிற இடத்துல இந்த நம்பீசன் மாதிரி ஆள்களோட மந்திரவாதம் எல்லாம் எப்படி பலிக்கும்"*

*ஈஸ்வர் சொன்னான். "நேராக மோதாத வரை ஒரு மகாசக்தி அதுக்கு கீழான சக்திகளுக்கு எதிரானதல்ல. பெரும்பாலும் நம்பீசன்*

*தன்னோட மந்திரவாத வேலையை எல்லாம் விசேஷ மானஸ லிங்கம் முன்னாடி உட்கார்ந்து செய்ய மாட்டார். அதுக்கு எதிராகவும் எதுவும் செய்ய மாட்டார்...”*

*இந்த சக்திகள் விஷயத்தில் ஈஸ்வருக்குத் தெளிவான அபிப்பிராயங்கள் இருப்பதாக பார்த்தசாரதிக்குத் தோன்றியது. ஆனால் அவருக்கு அவை நிறையவே குழப்பத்தைத் தந்தன. ”சரி... ஹரிராமும் சக்தி வாய்ந்தவர்னு சொல்றீங்க. அவர் இப்ப அந்த சிவலிங்கத்துக்கு சம்பந்தப்பட்டவர் போலவும் தோணறார். அப்படி இருக்கிறப்ப அவரையும் மீறி எப்படி நம்பீசனால் ஆபத்தை ஏற்படுத்த முடியும்?”*

*ஈஸ்வர் சொன்னான். “ஒரு மனிதனுக்கு எவ்வளவு சக்தி இருந்தாலும் அவன் அதைப் பயன்படுத்தும் தயார்நிலையில் இருந்தால் தான் அது அவனுக்கு உதவும். அவர் அப்படி தயார்நிலையில் இல்லாமல் கொஞ்சம் அசந்திருக்கலாம். அந்த நேரமாய் பார்த்து நம்பீசன் அவர் மேல் எதாவது சக்திப்பிரயோகம் செய்திருக்கலாம். அப்படி சக்திப்பிரயோகம் மட்டுமல்ல, எத்தனையோ பலவீனங்கள் நம்மை ஆக்கிரமிப்பதே கூட நாம அசந்திருக்கும் போது தான்.... ஒரு விதையாய் மனசில் விழுந்து மளமளன்னு மரமாய் வளர்ந்து நம்மைப் பாடாய் படுத்தறதெல்லாம் அப்படித் தான். அதனால தான் நம் முன்னோர்கள் ‘முழுமையான விழிப்புணர்வு’க்கு அதிக முக்கியத்துவம் தந்திருக்காங்க. புத்தமதம், தாவோ மதம் எல்லாத்துக்கும் அது தான் அஸ்திவாரமே!....”*

*பார்த்தசாரதிக்கு ஏதோ புரிகிற மாதிரியும் இருந்தது. புரியாத மாதிரியும் இருந்தது. ”நம்பீசன் சக்திப்பிரயோகம் செய்திருக்கலாம்னு சொல்றீங்களே அதுல இருந்து ஹரிராம் தன்னை விடுவிச்சுக்கவே முடியாதா?”*

*"நம்பீசன் மாதிரி ஆள்களால செய்ய முடிஞ்ச சக்திப் பிரயோகம் குறுகிய காலத்துக்கு தான் சக்தி வாய்ந்ததாய் இருக்கும். சில மணி நேரங்கள்ல இருந்து அதிகபட்சமாய் ஒன்னு ரெண்டு நாள் வரை அந்த சக்தி வேலை செய்யலாம். வேறொரு சக்தி வாய்ந்த ஆளால் அவங்களை விடுவிக்க முடியும். இல்லைன்னா அந்த குறிப்பிட்ட காலம் முடிஞ்சு அது தானாவே அவிழ்ந்துடும். இதுவே உதயன் சுவாமி மாதிரி அதீத சக்தி படைச்ச ஆள்களால ஏவப்படற சக்திப்பிரயோகமாய் இருந்தால் விடுவிச்சிக்கறது சிரமம் தான்.... "*

*உதயன் சுவாமியைப் பற்றி ஈஸ்வர் சொன்னவுடன் பார்த்தசாரதிக்கு அந்த பனிமூட்ட சம்பவம் நினைவுக்கு வந்தது. ரிஷிகேசத்தில் இருந்து கொண்டு தமிழகத்தின் ஒரு மூலையில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் பனிமூட்டத்தை ஏற்படுத்தியது அவர் தான் என்று மகேஷ் சொன்னதாக ஈஸ்வர் அவருக்குத் தெரிவித்திருந்தான். எப்படிப்பட்ட சக்திகளை எல்லாம் நம்மவர்கள் வைத்திருக்கிறார்கள் என்று பிரமிப்பாக இருந்தது. அந்த உதயன் சுவாமி குருஜியின் நண்பராம்.... குருஜி மட்டும் மனம் மாறாமல் இருந்திருந்தால் விசேஷ மானஸ லிங்கம் எதிரிகள் வசமாகி இருக்கும் என்று ஈஸ்வர் சொன்னது நினைவுக்கு வந்தது. அவரை மனம் மாற வைத்தது கணபதியா, மனசாட்சியா, சேர்த்து வைத்திருந்த ஞானமா இல்லை விசேஷ மானஸ லிங்கமே தானா?..... அவர் எங்கே போய் விட்டார்?*

**************

*ஈஸ்வரையும் மந்திரசக்தியால் கட்டிப்போட முயற்சி செய்து கொண்டிருந்த நம்பீசன் அந்த சக்தி போதவில்லை என்பதை உணர்ந்தார். அவர் ஆரம்பத்தில் அவனைப் பார்த்த போது மிகவும் தளர்ச்சியோடு தெரிந்ததால் அதற்கேற்றாற் போல குறைவான சக்தியையே அவர் பிரயோகித்திருந்தார். ஆனால் அந்த சக்தி*

அவனை சேர்வதற்குள் அவன் சுதாரித்து விட்டிருந்தான். இப்போதோ ஹோமகுண்டலத்தில் தெரிந்த அந்த வெளி மனிதனின் உருவம் நெருங்க ஆரம்பித்திருப்பதை உணர்ந்தார். அதை பாபுஜியிடம் சொல்லலாம் என்று திரும்பினால் பாபுஜி காணவில்லை.

பாபுஜியை அந்த அறுவரும் பேசச் சொல்லி நச்சரித்து சைகை காட்டிக் கொண்டிருந்ததால் அவர் நம்பீசனைத் தொந்தரவு செய்ய விரும்பாமல் தனதறைக்குச் சென்று அவர்களிடம் சுருக்கமாகப் பேசிவரச் சென்றிருந்தார். அப்படிப் பேசிய போது தான் எகிப்தியர் ஒரு நல்ல செய்தியைச் சொன்னார். அவர்கள் ஆதரிக்கும் அந்த எகிப்திய அரசியல்வாதிக்கு எதிராக தினம் பேசிக் கொண்டிருந்த வேறொரு செல்வாக்கான அரசியல்வாதி இப்போது ஆதரவாகப் பேச ஆரம்பித்து விட்டாராம். இரண்டே பேர் தான் இப்போது இந்த ஆராய்ச்சியில் இருக்கிறார்கள் என்றாலும் அவர்கள் முயற்சி ஓரளவு பலனளிக்க ஆரம்பித்திருக்கிறது என்பதை அறிந்த போது பாபுஜிக்கு சந்தோஷம் தாங்கவில்லை.

ஜான்சன் தியான மண்டபத்திற்கும், நம்பீசன் ஹோமம் நடத்தும் இடத்திற்குமாக அடிக்கடி சென்று வந்து கொண்டிருந்தார். கியோமி, அலெக்ஸி இருவரும் ஆல்ஃபா எட்டு ஒன்பது சிபிஎஸ்களில் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். ஹரிராம் செயலற்றுப் போயிருந்தாலும், விசேஷ மானஸ லிங்கத்தில் லயிக்க முடியாமல் போயிருந்தாலும் அதிர்ச்சியில் இருந்து மீண்டு ஆல்ஃபா ஒன்பதிற்கு வந்து தனிப்பட்ட தியானத்தில் லயிக்க ஆரம்பித்திருந்தார். அவர் மறுபடி ஆழமாக தீட்டா அலைகளுக்கே போனாலும் இந்த ஆராய்ச்சிக்கு எதிராக செயல்பட முடியாது என்பதில் ஜான்சனுக்கு சந்தேகமே இல்லை.

தூரத்தில் வந்து கொண்டிருந்த ஜான்சனைப் பார்த்தாலும் அவரை அழைத்து ஆங்கிலத்தில் தகவல் தெரிவிக்கும் அளவுக்கு நம்பீசனுக்கு ஆங்கிலம் தெரிந்திருக்கவில்லை. அதனால் அவரிடம் சொல்ல முயற்சிக்காமல் அந்த வெளி மனிதனை செயலற்றுப் போக வைக்க அதிக சக்தியைப் பிரயோகிக்க ஆரம்பித்தார். பாபுஜி வந்தால் தன் மந்திர சக்தியால் அந்த வெளிமனிதனை இங்கேயே வரவழைத்திருப்பதாகச் சொல்லி அதற்கும் ஒரு தொகை வசூலித்து விடலாம் என்ற எண்ணம் வந்த போது அவரை அறியாமல் அவர் ஹோம குண்டத்தைப் பார்த்துப் புன்னகைத்தார்.

**************

திடீர் என்று ஏதோ ஒரு அன்னிய சக்தி தன்னைத் தீண்ட வருவது போல் ஈஸ்வர் உணர்ந்தான். இந்த ஒரு கணம் கண்டிப்பாக வரும் என்று அவன் முன்பே எதிர்பார்த்திருந்தான். அப்படி வந்தால் என்ன செய்ய வேண்டும் என்று ஆழ்மனதில் முன்பே ஒரு ப்ரோகிராமும் *(program)* போட்டிருந்தான். எந்த துஷ்ட சக்தி அவனை நெருங்கினாலும் விசேஷ மானஸ லிங்கத்தின் அருளால் அவனைச் சுற்றி உள்ள ஆரா *(aura)* மண்டல நிலையிலேயே அது தடுக்கப்பட வேண்டும் என்று வேண்டி அப்படி நடக்க சக்தி வாய்ந்த கற்பனைக் காட்சிகளையும் உருவகப்படுத்தி தோட்ட வீட்டின் பூஜை அறையிலேயே பயிற்சி மேற்கொண்டிருந்தான். அந்த ப்ரோகிராம் வேலை செய்தது. அந்த அன்னிய சக்தி அங்கேயே நின்று பலமிழந்து காற்றில் கரைந்தது.

ஈஸ்வர் அருகில் இருந்த பார்த்தசாரதியைக் கூர்ந்து பார்த்தான். அவரிடம் எந்த மாற்றமும் இல்லை. அவருக்கு எதிராக எந்தப் பிரயோகமும் நடக்கவில்லை.... நடந்திருந்தால் அவர் முகத்திலேயே சின்ன வித்தியாசமாவது தெரிய ஆரம்பித்திருக்கும்.

அவரையும் எச்சரித்து வைப்பது நல்லது என்று அவனுக்குத் தோன்றியது. ஒருவேளை அங்கே சென்று விட்ட பிறகு ஏதாவது நெருங்கினாலும் அவர் சுதாரிப்பார்.... இப்படி மகேஷ் மூலம் விஷயம் தெரிந்து அந்த இடத்துக்கு நேரில் போக வேண்டி இருக்கும் என்பது எதிர்பார்த்திராத ஒரு நிகழ்வு ஆனதால் அவருக்குத் தற்காப்பு ஏற்படுத்த எதாவது செய்ய வேண்டி வரும் என்று எதிர்பார்த்திருக்கவில்லை. குறுகிய காலத்தில் எந்த அளவு அவரால் கற்றுத் தேற முடியும் என்பது அவனுக்கு நிச்சயமில்லை....

மெள்ள சொன்னான். "சார், அந்த நம்பீசன் ஏதாவது மந்திரஜாலத்தை நம் கிட்டே கூட காண்பிக்கலாம்...."

"என்ன செய்வான்?"

"திடீர்னு நம்மைக் கட்டிப் போட ஒரு மந்திரப் பிரயோகம் செய்யலாம். இல்லாட்டி ஏதோ ஒரு துஷ்ட சக்தியை ஏவி நம்மள பயமுறுத்தப் பார்க்கலாம்...."

பார்த்தசாரதிக்கு ஆரம்பத்தில் இதில் எல்லாம் நம்பிக்கை இருக்கவில்லை என்றாலும் இந்த வழக்கிற்கு வந்த பின் எதை நம்புவது, எதை நம்பாமல் இருப்பது என்று அவருக்குப் புரியவில்லை. "சரி... அப்படி ஏவி விட்டால் நாம என்ன செய்யணும்?"

"முதல்ல பயப்படாமல் இருக்கணும். எந்த துஷ்ட சக்தியும் நம்மை ஆட்டிப்படைக்க நாம அனுமதிக்கறதே நம்ம பயத்தாலயும் அது மேல வைக்கிற நம்பிக்கையாலயும் தான். நம்ம பயமும், அந்த நம்பிக்கையும் தான் உண்மையில் அதோட சக்தியாய் மாறிடுது. அது

நம்மள ஆட்டி வைக்கிற சக்தியை ஏற்படுத்திக் கொடுத்துடுது... அது மேல இருக்கிற நம்பிக்கையை விட அதிக நம்பிக்கை நம்ம மேலயோ, நாம் நம்பற கடவுள் மேலயோ அதிகமாய் இருக்கணும். அதனால நீங்க சக்தி வாய்ந்ததா நினைக்கிற சாமி உங்களைக் காப்பாற்ற கூடவே இருக்கிறதா நினைச்சு அந்த சாமி பேரை ஜபிக்கலாம்.... ஏதாவது விசித்திரமான, பயங்கரமான உருவமோ, சக்தியோ நம்மை அணுகற மாதிரி இருந்தா அதுக்கு பெரிய முக்கியத்துவம் தந்துடக் கூடாது. குழந்தைகள் பூச்சாண்டி முகமூடி போட்டுகிட்டு நம்மள பயமுறுத்த வர்ற மாதிரி நினைச்சுகிட்டு கண்டுக்காமல் போய்கிட்டே இருக்கணும்...”

பார்த்தசாரதி தலையசைத்தார். சொல்கிற விஷயங்களை இவனுக்கு எளிமையாகச் சொல்லத் தெரிகிறது. நிறைய அறிவாளிகளுக்கு இப்படி எளிமையாகச் சொல்லத் தெரிவதில்லை. புரியாதபடி பெரிய பெரிய வார்த்தைகளைக் கொட்டி தங்கள் அறிவின் ஆழத்தைக் காண்பிக்க முயற்சிப்பார்களே ஒழிய அடுத்தவனுக்குப் புரிய வேண்டும் என்று நினைப்பதில்லை. புரிந்து விட்டால் சொல்பவன் அறிவைப் பார்த்து பிரமிக்க மாட்டார்கள் என்ற எண்ணமும் அதன் பின்னால் இருக்கலாம்....

ஈஸ்வர் சொன்னான். ”இதெல்லாம் உடனடியா நமக்கு இயல்பா வந்துடாது. மனசுல பயிற்சி செய்துக்கறது நல்லது.... எதுக்கும் நம்ம கூட உள்ளே வர்ற உங்க ஆள்கள் கிட்டயும் சொல்லிடுங்க....”

பார்த்தசாரதிக்கு அவன் நல்ல எண்ணத்திலேயே சொல்கிறான் என்பது புரிந்தாலும் தன்னையோ தன் ஆட்களையோ யாரும் எதுவும் பயமுறுத்த முடியும் என்று தோன்றவில்லை. ஆனாலும் அவன் சொல்லச் சொன்னதை அப்படியே தங்களுடன் உள்ளே வரவிருக்கும் தங்கள் ஆட்களிடமும் போனில் சொல்லி விட்டு,

எதற்கும் இருக்கட்டும் என்று தன் இஷ்ட தெய்வமான திருவரங்கத்தானை அவர் சிறிது நேரம் ஜபித்தார். அவனைப் பார்த்த போது அவன் முகத்தில் அமைதியும் அசாத்திய உறுதியும் தெரிந்தது. ஒன்றரை மணி நேரத்திற்கு முன் குமுறிக் குமுறி அழுதவனா இவன்? இப்போது அந்த துக்கங்களின் சாயல் கூட இல்லையே என்று அவர் வியந்தார்.

உண்மையில் ஈஸ்வர் தன் மனதில் இருந்த அத்தனை துக்கங்களையும், அத்தனை கவலைகளையும், சந்திக்க வேண்டி உள்ள மற்ற பிரச்சினைகளையும் அந்தக் கணத்தில் ஒதுக்கி வைத்திருந்தான். அவற்றை எல்லாம் அவன் மறுக்கவில்லை. ஆனால் இந்த அதிமுக்கியமான நேரத்தில் அசை போட வேண்டிய விஷயங்கள் அல்ல அவை. சிதறுகின்ற மனம் பலவீனமான மனம். அது அவனுக்கு எதிரியாக மாறி விடும்... அமைதியாக காரின் ஜன்னல் வழியே அவர்களுடனேயே பயணம் வந்து கொண்டிருந்த அழகான முழுநிலவை ரசித்துப் பார்த்தான். விஷாலி நினைவுக்கு வந்தாள். மற்ற சந்தர்ப்பங்களாக இருந்திருந்தால் அவள் நினைவை அவன் தொடர்ந்திருப்பான். இப்போது அவளையும் ஒதுக்கி விட்டு இன்று ஆக வேண்டிய செயல்களில் கவனம் செலுத்தினான்...

இந்த பௌர்ணமி இரவு மிக முக்கியமாக இருக்கப் போகிறது என்று உள்ளுணர்வு சொல்லியது. அவனுக்குத் தோன்றிய காட்சி அதைத் தான் தெரிவித்திருக்கிறது. முன்பு ஒரு முறை வந்த காட்சியில் கணபதியும், சிவலிங்கமும், விழுவது போலத் தான் தெரிந்தது. இந்த முறை ஹரிராமும் சேர்ந்திருக்கிறார். அவன் சிறிது சோர்ந்தாலும் அவனும் அந்த வீழ்ச்சியில் சேர்ந்து விட வேண்டி இருக்கும். ஏனென்றால் அவன் அந்த விசேஷ மானஸ லிங்கத்துடனும், மற்ற இருவருடனும் சம்பந்தப்பட்டவன்..... இதற்கு முன் தெரிந்த காட்சியில் காலம் காட்டப்படவில்லை. ஆனால் இன்று தெரிந்த காட்சியில் காலம் காட்டப்பட்டுள்ளது. பௌர்ணமி அன்று

*அது நடைபெறப் போகிறது, முந்திக் கொள், ஏதாவது செய், உன் சொந்தக் கவலைகளில் மூழ்கி செயலற்றுப் போய் விடாதே என்று எச்சரிக்கை விடப்பட்டுள்ளது. அவன் சித்தரையும், பசுபதியையும் மனதார வணங்கினான். அந்த விசேஷ மானஸ லிங்கத்தை உருவாக்கி தொழுத அத்தனை முகம் தெரியாத சித்தர்களையும் வணங்கினான். கடைசியில் விசேஷ மானஸ லிங்கத்தை மனதில் நிறுத்தி வணங்க ஆரம்பித்தான்....*

***************

*நம்பீசனின் புதிய ஹோம குண்டத்தில் அக்னி கொழுந்து விட்டு எரிய ஆரம்பித்தது. ஹோமத்தை ஆரம்பிக்கும் போது தளர்ச்சியாக இருந்த அந்த வெளியாள் பிறகு நன்றாகவே சுதாரித்து விட்டான். அவருடைய ஆரம்ப அஸ்திரத்திற்கு அவன் அசையவில்லை. தற்போது அதிக பலமும் பெற்று வருவதாகத் தோன்றியது. அவர் மணியைப் பார்த்தார். மணி 11.00. இன்னும் சரியாக 42 நிமிடங்கள் கழிந்தால் பௌர்ணமியும் கழிந்து விடும். அவன் சக்தியும் வடிந்து விடும். அது வரை தாக்குப் பிடித்தால் போதும். அவர் பின்னால் திரும்பிப் பார்த்த போது பாபுஜி நின்றிருந்தார். அவரிடம் நம்பீசன் தற்போதைய நிலவரத்தைச் சொன்னார்.*

*ஈஸ்வரின் வருகை பற்றித் தெரிந்தவுடன் பாபுஜி அதிர்ச்சியுடன் அவரைப் பார்த்தார். நம்பீசன் நம்பிக்கையோடு சொன்னார். ”இப்பவும் ஒன்னும் கெட்டுப் போடலை. அவனை அழிக்கிற பெரிய அஸ்திரம் என் கிட்ட இருக்கு....”*

*பாபுஜி அலறினார். “ஐயோ அவன் தனி ஆளாய் வர மாட்டான். கூட போலீஸூம் வரும்”*

நம்பீசன் சொன்னார். “போலீஸ் அல்ல ராணுவமே வந்தாலும் அவங்களை அலறி ஓட வைக்கிற அஸ்திரம் என் கிட்ட இருக்கு. அதுக்கு கொஞ்சம் பணம் செலவாகும்....”

“எத்தனை?”

“பத்து லட்சம் குடுங்க போதும்....” என்று சொல்லி அவரையே நம்பீசன் பார்க்க பாபுஜி அழாத குறையாகச் சொன்னார். “அந்தப் பணத்தை இப்பவே அனுப்ப ஏற்பாடு செய்யறேன். பணம் வந்து சேர்ந்த தகவலுக்காக காத்திருக்காமல் உடனடியாய் நடக்க வேண்டியதைப் பாருங்கள். ப்ளீஸ்...”

சொல்லி விட்டு அவர் நம்பீசனுக்குப் பணம் அனுப்ப கட்டளை பிறப்பிக்க நம்பீசன் செல்போனை எடுத்த போது தான் துப்பறியும் ஆட்களின் மிஸ்டு கால்களைப் பார்த்தார். ஈஸ்வர் வருகிறான் என்பதைத் தெரிவிக்கத் தான் போன் செய்திருப்பார்கள். பாபுஜி அவர்களிடம் போனில் பேசினார்.

ஈஸ்வர் பார்த்தசாரதியுடன் ஆறு போலீஸ்காரர்கள் வருகிறார்கள் என்பது தெரிந்தது. ஆனால் ராணுவமே வந்தாலும் கவலை இல்லை என்று சொன்ன நம்பீசனை அவர் மலை போல் நம்பினார். உடனடியாக அவருக்குப் பணம் அனுப்பக் கட்டளை இட்டு விட்டு பாபுஜி பரபரப்புடன் காத்திருந்தார். கூடவே இந்த நம்பீசனையே முழுவதும் நம்பி இருக்காமல் வேறு ’சில கறுப்புப் பூனைகளையும்’ துணைக்கு அழைத்திருக்கலாமோ என்றும் தோன்ற ஆரம்பித்தது. ஆனால் அதற்கு இப்போது நேரமும் இல்லை.... “பாவி மகேஷ்... அவனை உயிரோடு வெளியே விட்டே இருக்கக்கூடாது....”

அதே நேரத்தில் நம்பீசன் சில கோர சக்திகளை உதவிக்கு அழைக்க ஆரம்பித்தார். அந்தத் தீயில் விபரீத உருவங்கள் தெரிய ஆரம்பித்தன.

# அத்தியாயம் - 90

பாபுஜியின் இடத்தை அவர்கள் அடைந்த போது மணி 11.10. பௌர்ணமி திதி 11.42க்கு முடிகிறது என்றும், அதற்குள் அவர்கள் செயல்பட்டாக வேண்டும் என்றும் ஈஸ்வர் அறிந்திருக்கவில்லை. இந்த இரவு முடிவதற்குள் ஏதாவது செய்து முடித்து விட வேண்டும் என்று தான் அவன் நினைத்துக் கொண்டிருந்தான்.

அவனிடம் இந்த கடைசி சில நிமிடங்களில் மேலும் தெரிந்த மாற்றம் பார்த்தசாரதியை வியப்பில் ஆழ்த்தி இருந்தது. அவன் முகத்தில் தெரிந்த பேரமைதி அவருக்கு இப்போதும் புத்தரை நினைவுபடுத்தியது. ஆனால் இன்றைய பேரமைதி முன்பெல்லாம் தெரிந்ததை விட மும்மடங்கு பொலிவுடன் இருந்ததாக அவருக்குப் பட்டது. போதி மரத்தடியில் மகாநிர்வாணம் அடைந்த போது புத்தர் இப்படியே இருந்திருப்பார் என்று ஏனோ அவருக்குத் தோன்றியது. இயல்பாகவே அழகான அவன் இப்போதைய பொலிவில் ஒரு கந்தர்வனைப் போல ஜொலித்தான்.

உண்மையில் அங்கே நெருங்க நெருங்க அவனிடம் ஏற்பட்டிருந்த எண்ண ஓட்டங்கள் தான் அந்த மாற்றத்திற்குக் காரணமாய் இருந்தன. ’அவன் சாதாரணனாகத் தோன்றலாம். ஆனால் அவன் மூலம் ஒன்று செய்யப்பட வேண்டும் என்று பசுபதி, சித்தர் போன்றவர்கள் முடிவு செய்தால் அவன் எப்படி சாதாரணமானவனாக இருக்க முடியும். சுமக்க முடியாத சுமைகள் தரப்படுவதில்லை என்று சித்தர் சொன்னாரே. ஒன்று நடக்க வேண்டும் என்று தெய்வ சித்தம் இருக்குமானால் அதை நடத்தும்

போது அந்தத் தெய்வமும் கூட இருக்கிறது என்றல்லவா பொருள்'. சிந்தனை இந்தப் போக்கில் போன போது அவன் ஒரு பேரமைதியோடு கூடிய அசுரபலத்தை தன்னுள் உணர்ந்தான்.

பார்த்தசாரதி போலீஸ் ஐடி கார்டைக் காட்டியதும் செக்யூரிட்டு ஆட்கள் பாபுஜிக்குப் போனில் தெரிவிக்க முயன்றார்கள். ஆனால் பாபுஜி அவர்களுக்குப் பேசக் கிடைக்கவில்லை. செக்யூரிட்டி ஆட்கள் போன் செய்கிறார்கள் என்றவுடனேயே பாபுஜி விஷயத்தை ஊகித்து நம்பீசனிடம் சொன்னார். "அவங்க வந்துட்டாங்க. என்ன செய்யப் போறீங்க...."

"அவங்களை வரவேற்க இவங்களை தயார் பண்ணிட்டேன்" என்று சொன்ன நம்பீசன் ஹோமகுண்டத்தில் உக்கிரமாய் எரிந்து கொண்டிருந்த தீயைக் காட்டினார். அருகில் வந்து அதில் தோன்றிய உருவங்களைப் பார்த்த நம்பீசனுக்கும், ஜான்சனுக்கும் கிலி ஏற்பட்டது. முழுவதும் ஆட்களும் அல்லாமல், விலங்குகளும் அல்லாமல், பறவைகளும் அல்லாமல், மூன்றின் எலும்புக்கூடுகளும் கலந்த விசித்திர உருவங்கள் விகாரமாய் தோன்றின.

"என்ன இது?" என்று கேட்க பாபுஜி நினைத்தார். ஆனால் நாக்கு மேல் எழும்பவில்லை.... ஜான்சன் உடனடியாக முகத்தைத் திருப்பிக் கொண்டார். மாய மந்திரங்கள் அவருடைய ஆராய்ச்சியில் இருந்திருக்கின்றன என்றாலும் இது போன்ற கோர உருவங்களை அவரும் எதிர்கொண்டதில்லை.

செக்யூரிட்டி ஆட்கள் பாபுஜியிடம் இருந்து தகவல் வராமல் போகவே, போலீஸ்காரர்களைத் தடுக்க வழியில்லாமல் மெயின் கேட்டைத் திறந்தார்கள்.

உள்ளே நுழைவதற்கு முன் ஈஸ்வர் அமைதி மாறாமல் பார்த்தசாரதியிடம் கேட்டான். “சார் நான் சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்கில்லையா?”

பார்த்தசாரதி சொன்னார். ”இருக்கு ஈஸ்வர். நீங்க சிவலிங்கத்தைக் கவனியிங்க. மீதி எல்லாத்தையும் நாங்க பார்த்துக்கறோம்...”

அவர்கள் உள்ளே நுழைந்தார்கள். மனித-மிருக-பறவைகளின் எலும்புக்கூடுகளின் கலவை உருவங்கள் அவர்களை நோக்கிப் பாய்ந்து வந்தன. சில உருவங்கள் ஓடி வந்தன. சில உருவங்கள் பறந்து வந்தன. சில உருவங்கள் நடந்து வந்தன. சில உருவங்கள் தீயைக் கக்கின. சில உருவங்கள் விசித்திர ஓசைகளையும், ஓலங்களையும் எழுப்பின.

பார்த்தசாரதியும் அவருடன் வந்த இரண்டு போலீஸ்காரர்களும் பேய் ஆவி சினிமாக்களில் வரும் சில காட்சிகளுக்குத் தயாராக இருந்தார்களே ஒழிய இப்படி இரத்தம் உறைய வைக்கும் உருவங்களுக்குத் தயாராக இருக்கவில்லை. பார்த்தசாரதிக்கு உடனே திருவரங்கத்தான் நினைவு வரவில்லை. மரணம் தான் நினைவுக்கு வந்தது. உடனே மனைவி மக்கள் நினைவுக்கு வந்தார்கள். அவருடன் வந்த போலீஸ்காரர்கள் தலைதெறிக்க திரும்ப வெளியே ஓடினார்கள். அவர்கள் மிகவும் தைரியசாலிகள் தான். ஆனால் அவர்கள் தைரியம் இந்த சூழ்நிலைக்குப் போதவில்லை.

அந்த நிலையிலும் பார்த்தசாரதிக்கு ஈஸ்வரை விட்டு விட்டு தனியாக ஓட மனம் கேட்கவில்லை. இதயம் இப்படியே துடித்தால் உடைந்தே சிதறி விடும் என்று தோன்ற ஈஸ்வர் என்ன செய்கிறான்

என்று பீதியுடன் பார்த்தார். ஏன் என்றால் கிட்டத்தட்ட எல்லா பேய்களும்(?) அவனையே தான் குறி பார்த்து நெருங்கின. ஆனால் அவன் அந்தக் கோர உருவங்களைக் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை. புத்தனாகவே மாறி அவன் அங்கு ஒரு சிறு பரபரப்பைக் கூடக் காட்டாமல் நடந்தான்.

பறந்து வந்த ஒரு குள்ள மனித எலும்புக்கூடு விசித்திரமாய் நரி போல் ஊளை இட்டுக் கொண்டே அவரை நெருங்கிய போது அதை ஈஸ்வர் சொன்னது போல் குழந்தைகளின் பூச்சாண்டியாக பார்த்தசாரதியால் நினைக்க முடியவில்லை. முகத்தில் மட்டும் முகமூடி போட்டுப் பயம் காட்டும் குழந்தைகள் எங்கே, தத்ரூபமாய் ரத்தத்தைக் குடிப்பது போல் வரும் இந்த அமானுஷ்யப் பேய்கள் எங்கே? அந்த உருவம் அவர் உடம்புக்குள் புகுந்து கொண்டது போல் இருந்தது. அவரை மிக்ஸியில் போட்டு அது அரைப்பது போல் அவர் உணர்ந்தார். தலை மட்டும் அப்படியே இருக்க உடம்பெல்லாம் பம்பரமாகச் சுற்றுவது போல் இருந்தது. என்ன நடக்கிறது என்றே அவருக்குத் தெரியவில்லை.

ஒன்று உள்ளே புகுந்ததற்கே இந்தப்பாடு என்றால் அத்தனையும் அவனுள் புகுந்து கொள்ளப் பார்க்கின்றனவே அவன் நிலைமை என்ன ஆகும் என்று அந்தப் பயங்கர நிலையிலும் அவனைப் பார்த்தார். அவனைப் பல கோர உருவங்கள் சுற்றிக் கொண்டு பயமுறுத்திக் கொண்டிருந்த போதும் அவன் நடையை அவை தடை செய்யவில்லை. அவற்றிற்கு அவனுக்குள்ளே நுழைய முடியவில்லை. அமைதி மாறாமல் ”ஓம்” என்ற ஓங்கார த்வனி கேட்கும் திசை நோக்கி அவன் நடந்து கொண்டிருந்தான். அந்த உருவங்கள் காதைக் கிழிக்கிறது போல் கூச்சல் இட்டுக் கொண்டிருந்தாலும் அவன் கவனம் அவற்றை எல்லாம் ஊடுருவிச் சென்று அந்த ஓமில் லயித்தது.

பார்த்தசாரதிக்கு அவன் ”இதெல்லாம் உடனடியா நமக்கு இயல்பா வந்துடாது. மனசுல பயிற்சி செய்துக்கறது நல்லது….” என்று எச்சரித்தது நினைவுக்கு வந்தது. என்ன தான் பயிற்சி செய்திருந்தாலும் இதைச் சமாளிக்க தன்னால் முடிந்திருக்காது என்று தோன்றியது. அவரால் மட்டுமல்ல சாதாரணமாய் யாராலும் சமாளிக்க முடிந்திருக்காது… அவன் சித்தர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவன், அதனால் அவன் பக்கம் சித்தர்கள் நின்று அவனைக் காக்கிறார்கள் என்று தோன்றியது.

உயிர்ப்பிரியும் நேரத்தில் இறைவனை நினைத்தால் கூட நேராக கைலாயத்திற்கோ, வைகுண்டத்திற்கோ போய் விடலாம் என்று சொல்வதை அவர் கேட்டிருக்கிறார். அப்போதெல்லாம் இதென்ன அபத்தம் என்று தோன்றும். வாழும் காலமெல்லாம் எப்படி எல்லாமோ இருந்து விட்டு கடைசி நேரத்தில் இறைவனை நினைத்தாலும் அப்படி போக முடியும் என்றால் முதலில் இருந்தே நினைக்கும் அவசியமே இல்லையே என்று தோன்றி இருக்கிறது. ஆனால் இப்போது ஒரு குறிப்பிட்ட கணத்தில் இறைவனை நினைக்க முடிவது அவ்வளவு சுலபமல்ல என்பது புரிந்தது. அதற்கு முன்பே பல காலமாக, ஏன் பல ஜென்மங்களாகவே கூட மனதில் பதியப்பட்டு இருந்தால் தான் அது நிகழ முடியும் என்பது புரிந்தது….

நம்பீசன் தன் கண்களை நம்ப முடியாமல் அதிர்ச்சியுடன் ஈஸ்வரைப் பார்த்தார். அவர் இது போன்ற ஒருவனை இதுவரை பார்த்ததில்லை. அனுபவம் மிக்க ராஜ யோகிகளும் சித்தர்களும் மட்டுமே சிக்காத சித்து விளையாட்டு இது. மனதில் சிறிது சலனமோ, பயமோ இருந்தாலும் அவர் அனுப்பிய சக்திகள் அவனுக்குள்ளே புகுந்து நரகம் என்ன என்பதைக் காட்டியிருக்கும். மாறாக அந்த சக்திகள் அவன் நடையின் வேகத்தைக் கூட அதிகப்படுத்தவில்லை. ராணுவ வீரர்கள் அணிவகுப்பின் போது

*தான் அப்படி ஒரு சீரான அவசரமில்லாத நடையை அவர் பார்த்திருக்கிறார்.*

*பாபுஜி அவரைப் பார்த்துப் பைத்தியம் பிடித்தது போல கத்தினார். "யோவ். காசை வாங்கிட்டு என்ன வேடிக்கை பார்க்கிறே. அவனை எதாவது செய்யிய்யா...."*

*நம்பீசன் கடிகாரத்தைப் பார்த்தார். இரவு மணி 11.32. இன்னும் பத்து நிமிடங்கள் தாக்குப் பிடித்தால் போதும்.... "பத்தே பத்து நிமிஷம் ஏதாவது செஞ்சு அவனைத் தடுத்து நிறுத்துங்க. அவன் அந்த சிவலிங்கத்தை நெருங்காம பார்த்துக்குங்க. அவன் நெருங்கிட்டா அந்த சிவலிங்கத்தை நீங்க எப்பவுமே இனி பார்க்க முடியாதுன்னு ப்ரஸ்னம் சொல்லுது... மந்திரத்தால இனி செய்ய முடிஞ்சது எதுவும் இல்லை...."*

*லட்சக்கணக்கில் பணம் வாங்கி விட்டு கடைசியில் அவரிடமே எதாவது செய்யச் சொல்லும் நம்பீசனைப் பார்க்கும் போது பாபுஜிக்கு ரத்தம் கொதித்தது. ஆனால் கோபப்படவும் நேரமில்லை. பத்து நிமிடம் தான் இருக்கின்றது என்ற அந்தத் தகவலையாவது சொல்கிறானே இந்தப் படுபாவி என்று வயிறெரிந்த அவர் துப்பாக்கியை எடுக்க தனதறைக்கு ஓடினார். ஓடும் போது ஜான்சனைப் பார்த்துக் கத்தினார். "ஜான்சன். எதையாவது செஞ்சு அவனை நிறுத்துங்க"*

*ஜான்சன் ஆராய்ச்சியாளரே ஒழிய குண்டரல்ல. அவர் நகரவில்லை. அவர் ஈஸ்வரைப் பார்த்து பிரமித்தபடி நின்றிருந்தார். இவன் மனிதன் தானா? இந்த மாதிரியான ஒரு நிலைமையில் இப்படி ஒரு கட்டுப்பாட்டுடன் அமைதியாக இயங்குவதை ஒரு மனிதனிடம் அவர் முதல் முறையாகப் பார்க்கிறார்....*

ஈஸ்வர் தியான மண்டபத்திற்குள் நுழைந்தான். அவனைப் பின் தொடர்ந்த அந்த கோர உருவங்கள் அதற்கு மேல் முன்னேற முடியவில்லை. அவை பின் வாங்க ஆரம்பித்தன. ஈஸ்வர் விசேஷ மானஸ லிங்கத்தை சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான். விசேஷ மானஸ லிங்கம் அவன் வருகைக்காகக் காத்திருந்து மகிழ்ந்தது போல ஜொலிக்க ஆரம்பித்தது. அந்த ஜொலிப்பில் கூட ஓங்காரத்திற்கேற்ற சக்தியின் நடனம் இருப்பது போல் ஈஸ்வருக்குத் தோன்றியது. அவன் சிலை போல அமர்ந்திருந்த ஹரிராமையும், சிவனுக்குப் பக்கத்திலேயே படுத்துக் கொண்டிருந்த கணபதியையும் பார்த்தான். இரண்டுமே இயல்பாய் இல்லை. இது நம்பீசனின் திருவிளையாடல் தான்.....

உடனடியாக சிவலிங்கத்தில் கவனத்தைக் குவித்து அதன் சக்தியில் லயித்த அவன் ஹரிராமையும் கணபதியையும் அந்த சக்தி அலைகளிற்கு இழுத்தான். நம்பீசனின் மந்திரக்கட்டு அவிழ்ந்து போனது. ஹரிராம் விடுபட்ட அந்தக் கணத்தில் தான் பாபுஜி ஓடி வந்து தியான மண்டப வாசலில் நின்று தன் துப்பாக்கியை ஈஸ்வருக்குக் குறி வைத்தார். ஒரு நிமிடம் தாமதித்தாலும் ஈஸ்வரின் மரணம் நிச்சயம் என்று ஹரிராமிற்குப் புரிந்தது.

அந்த மந்திரக்கட்டு அவரைப் பிணைத்திருந்த காலத்தில் ஆல்ஃபா அலைகளிற்குப் போய் அந்த மந்திரக்கட்டின் தன்மைகளை அவர் ஆராய்ந்து கொண்டு இருந்தார். தன்னிடம் தரப்பட்ட பொம்மையை அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்துப் பார்க்கும் ஒரு குழந்தையைப் போல முழு கவனத்தையும் அதில் செலுத்தி அதன் சூட்சுமங்களை அறிந்து வைத்திருந்தார். அபூர்வ சக்திகளில் தேர்ச்சி பெற்றிருந்த அவருக்கு அதை முழுமையாகப் புரிந்து கொள்வதில் சிரமம் இருக்கவில்லை. அதனால் தன்னிடமிருந்து விலகிய

*மந்திரக்கட்டை பாபுஜி மீது சூட்சுமமான ஒரு மாற்றம் செய்து மின்னல் வேகத்தில் ஹரிராம் ஏவினார்.*

*அடுத்த கணம் துப்பாக்கி நீட்டிய கையோடு பாபுஜி அப்படியே சிலையாக சமைந்தார். துப்பாக்கி விசையை அழுத்தக் கூட முடியவில்லை. இப்போதும் ஈஸ்வர் அவர் குறியிலேயே தான் இருக்கிறான். அவர் கையில் இருக்கும் துப்பாக்கி சக்தி வாய்ந்தது. விசையை அழுத்தினால் போதும் அவன் கதை முடியும். அவர் கதை உயரும். ஆனால் அந்தச் சின்ன சுலபமான செயலைச் செய்யக்கூட அவரால் முடியவில்லை. வாங்கின காசிற்கு அதையாவது நம்பீசன் செய்து தரக் கூடாதா? இதற்கும் ஒரு பத்து லட்சம் சேர்த்துத் தரச் சொன்னாலும் பாபுஜி தரத்தயாராக இருந்தார். ஆனால் நம்பீசன் அதிர்ச்சியுடன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாரே ஒழிய இயங்கும் நிலையில் இல்லை. பாபுஜி "யோவ் ஏதாவது செய்யிய்யா. நான் எவ்வளவு பணம் வேணும்னாலும் தர்றேன்" என்று சொல்ல வாய் திறக்கப் பார்த்தார். வாயைக் கூடத் திறக்க முடியவில்லை.*

*ஈஸ்வர் ஹரிராமிடம் தியான மண்டபத்திற்கு வெளியே இருக்கும் பார்த்தசாரதியையும் நம்பீசனின் ஏவலில் இருந்து விடுவிக்கச் சொன்னான். அவனை விசேஷ மானஸ லிங்கம் தன்னருகே அழைப்பது போல் இருந்தது. அவன் உள்ளே நுழைந்த கணத்தில் கியோமி, அலெக்ஸி இருவரின் தியானம் தடைப்பட்டு அவர்கள் எழுந்து நின்றார்கள். கியோமிக்கு அந்தக்கணத்தில் ஈஸ்வர் ஒரு போதிசத்துவராகவே தெரிந்தான். அவள் அவனை பரவசத்துடன் வணங்கி நின்றாள்.*

*ஹரிராம் வேகமாக வெளியே வந்து நம்பீசன் ஏவி இருந்த அத்தனை உருவங்களையும் திரும்ப அவருக்கே ஏவி விட்டார். அதிர்ச்சியுடன் நின்றிருந்த நம்பீசன் அதற்குத் தயாராக*

இருக்கவில்லை. தயாராக இருந்திருந்தால் விஷயம் தெரிந்த அவருக்கு தன்னைத் தற்காத்துக் கொள்வது சுலபமாக இருந்திருக்கும்... அவரும் அவர் உதவியாளர்களும் தலை தெறிக்க ஓட ஆரம்பித்தார்கள். அந்த உருவங்கள் விசித்திர ஒலிகளுடன் அவர்களைத் துரத்திக் கொண்டு ஓடின.

நம்பீசனும், அவர் உதவியாளர்களும், அவர்களைத் தொடர்ந்து அந்த விசித்திர உருவங்களும் ஓடிய பிறகு சிறிது நேரம் கழித்து தான் போலீசார் உள்ளே நுழைந்தார்கள். அவர்களைக் குறை சொல்ல பார்த்தசாரதிக்குத் தோன்றவில்லை. அவருக்கே உள்ளே புகுந்து ஆட்டிப்படைத்த அந்த உருவம் வெளியேறிய பிறகு தான் ஆசுவாசம் ஏற்பட்டது . உடம்பில் எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டு சேதாரம் எதுவும் இல்லாமல் சரியாக இருக்கவே மேலும் நிம்மதி அடைந்தார். வேகமாக தியான மண்டபத்திற்குள் நுழைந்தவர் ஜொலிக்கும் விசேஷ மானஸ லிங்கத்தைப் பார்த்து கைகூப்பி நின்றார்.

ஜான்சனுக்கு ஏதோ மாயாஜால உலகில் இருப்பது போல் தோன்றியது. ஒரே நேரத்தில் பல ஆராய்ச்சிகளைப் பார்த்துக் கொண்டிருப்பது போல தோன்றியது. அங்கு நடப்பதைப் பார்த்துக் கொண்டிருந்த அறுவரும் அவரை நோக்கி கைகளை ஆட்டினார்கள். நம்பீசன் சொல்லி இருந்த 11.42 கெடுவுக்குள் ஈஸ்வரைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று அவர்கள் துடித்தார்கள். மணி அப்போது 11.40. கடிகாரத்தைக் காட்டி ஈஸ்வரைக் காட்டினார்கள். ஆனால் ஜான்சன் நகரவில்லை. ஒரு மிக இக்கட்டான தருணத்தில் மிகக் கச்சிதமாக இயங்க முடிந்த ஈஸ்வரையே அவர் பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார். இந்தத் தருணத்தில் இப்படி இயங்க அவன் எத்தனை ஜென்மங்களாகத் தன்னைத் தயார் செய்திருக்கிறானோ என்று தோன்றியது.... பேரமைதியுடன் அவன் விசேஷ மானஸ லிங்கத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தான்.

கணபதி உறக்கத்திலிருந்து மீண்டு தன்னையே திட்டிக் கொண்டான். 'என்ன எப்பப் பாரு தூக்கம்? நல்லாவா இருக்கு?' கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்த போது சற்று தள்ளி ஈஸ்வர் வந்து கொண்டிருப்பது தெரிந்தது. "அட நம்ம ஈஸ்வர் அண்ணன்...." பெருமையாய் சிவலிங்கத்திற்கு ஈஸ்வரை அறிமுகம் செய்து வைத்தான். "நீ உடுத்தி இருக்கற பட்டு வேட்டியை வாங்கிக் குடுத்தது இந்த அண்ணன் தான்.... ஆமா நீ என்ன இப்படி ஜொலிக்கிறே? இப்ப நீ ரொம்ப அழகா இருக்கே... என் கண்ணே பட்டுடும் போல இருக்கு..."

அக்னி நேத்ர சித்தர் திடீர் என்று விசேஷ மானஸ லிங்கத்தின் பின்னால் காட்சி அளித்தார். உதயன் சுவாமி ஏற்படுத்தி இருந்த மந்திரத்தடை நம்பீசன் அந்த இடத்தின் உள்ளே வரவழைத்திருந்த துஷ்ட சக்திகளால் அறுபட்டுப் போயிருந்தது. அங்கு நின்ற அவர் ஹரிராமையும் ஈஸ்வருடன் வரும்படி சைகை செய்தார். ஈஸ்வரை நோக்கி ஓட யத்தனித்த கணபதியை அவர் தடுத்து நிறுத்தினார். கணபதிக்கு அவரைப் பார்த்தவுடன் அவர் ஒருமுறை கொண்டு வந்திருந்த அபூர்வ பூக்கள் ஞாபகம் வந்தது. அவர் இப்போதும் கொண்டு வந்திருக்கிறாரா என்று அவர் கையைப் பார்த்தான். பூக்கூடையோ, பூக்களோ இல்லை. கொண்டு வந்திருந்தால் சிவனுக்கு வைத்திருக்கலாம்...

அக்னி நேத்ர சித்தரை அங்கே பார்த்த ஈஸ்வர் கைகளைக் கூப்பி தலை தாழ்த்தி வணங்கினான். ஹரிராமும் வணங்கினார். இதைப் பார்த்து கணபதியும் அப்படியே வணங்கினான். அக்னி நேத்ர சித்தர் மூவரையும் உடனடியாக விசேஷ மானஸ லிங்கத்தைத் தொடச் சொன்னார். மூவரும் தொட்டார்கள். கடிகார முள் 11.41ல் இருந்து விலகி 11.42ல் நின்றது. மூவர் உடலிலும் மின்சாரம் பாய்ந்தது போல இருந்தது. அவர்களின் உடலில் ஒவ்வொரு

அணுவிலும் ஒரு மகாசக்தி ஊடுருவிப் படர்ந்தது. உடல் லேசாகி காற்றில் மிதப்பது போல் அவர்கள் உணர்ந்தார்கள்.

அந்தக் கணத்தில் அந்த இடத்தில் அக்னி நேத்ர சித்தர் மட்டுமல்லாமல் மற்ற பல சித்தர்களும் கூடி இருந்தார்கள். விசேஷ மானஸ லிங்கத்தை உருவாக்கிய கணத்தில் இருந்து இன்று வரை அதைப் பூஜித்து வந்த சித்தர்கள் அவர்கள். உடலோடு இருந்த சித்தர்கள் குறைவு. மற்றவர்கள் சக்தி ஸ்வரூபமாக அங்கு இருந்தார்கள். ஆனால் விசேஷ மானஸ லிங்கத்தைத் தொட்டபடி நின்றிருந்த மூவருக்கும் அவர்களைப் பார்க்க முடிந்தது. எல்லோருக்கும் முன்னால் சக்தி ஸ்வரூபமாக நின்றிருந்த ஒருவர் தலைக்கு மேல் நாகமும் தெரிந்தது. அவர் பதஞ்சலி மகரிஷியோ என்று ஹரிராம் வியந்தார். ஈஸ்வர் அந்த சித்தர்களை வணக்கத்துடன் பார்த்தான். கணபதி அவர்களை வேடிக்கை பார்த்தான்... "என்ன இது இத்தனை பேர் வந்திருக்காங்க!"

ஜொலித்துக் கொண்டிருந்த விசேஷ மானஸ லிங்கம் வளர்ந்து பெரிதாக ஆரம்பித்தது. எல்லோரும் பிரமிப்புடன் அதைப் பார்த்தார்கள். தியான மண்டபத்தின் மேல் சுவர் வரை சென்று முட்டிக் கொண்டு நின்ற விசேஷ மானஸ லிங்கம் அந்தக் கூரையையும் ஊடுருவிக் கொண்டு வளர்ந்ததாகத் தோன்றியது. பார்த்தசாரதியும், அலெக்ஸியும், கியோமியும், ஜான்சனும் வெளியே ஓடிப் போய் பார்த்தார்கள். விசேஷ மானஸ லிங்கத்தின் மேல்பகுதி கூரையைத் தாண்டியும் வளர்ந்து கொண்டிருந்தது. அலெக்ஸிக்கு அவர் பார்த்த பழைய காட்சி நினைவுக்கு வந்தது. அன்று கண்டது கற்பனை அல்ல, நிஜம் தானோ? அப்படியானால் எங்கே சமுத்திரம்?

11.45க்கு வானையே தொட்டு நின்ற விசேஷ மானஸ லிங்கம் 11.46 க்கு நெருப்பு ஜுவாலையாக ஜொலித்து விட்டு மறைந்தே

போனது. விசேஷ மானஸ லிங்கத்தின் அணுக்கள் பிரிந்து காற்றோடு கலந்து மறைந்தது போல் தோன்றியது. அக்னி நேத்ர சித்தரைத் தவிர மற்ற சித்தர்களும் மறைந்து போனார்கள். அவர்கள் உருவாக்கி பூஜித்த விசேஷ மானஸ லிங்கத்தை அவர்களே எடுத்துக் கொண்டு போனது போல இருந்தது. இப்போது ஹரிராம், ஈஸ்வர், கணபதி ஆகியோரின் கைகள் வெட்ட வெளியைத் தொட்டபடி இருந்தன. இப்போதும் அவர்கள் காற்றில் மிதப்பது போல் தான் உணர்ந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் திகைப்போடு அக்னி நேத்ர சித்தரைப் பார்த்தார்கள்.

அக்னி நேத்ர சித்தர் புன்னகையுடன் சொன்னார். "இந்த விசேஷ மானஸ லிங்கத்தை உருவாக்கினதும், ஆயிரம் வருஷங்களுக்கும் மேலாய் சக்திகளை எல்லாம் ஆவாகனம் செய்து பூஜை செய்து புனிதம் குறையாமல் பாதுகாத்தும் வந்தது இந்தக் காலத்திற்காகத் தான். உலகம் எல்லா விதங்களிலும் சீரழிவின் அடிமட்டத்தில் போய் விடும் போது அதை அழிவில் இருந்து காப்பாற்றி மீட்கும் ஆத்மபலத்தை தகுதி வாய்ந்த மனிதர்களுக்குத் தரத்தான். ஆனால் அது உருவாக்கப்பட்ட நோக்கத்தை விட அதோட சக்திகளோட பிரம்மாண்டம் தான் பலரைக் கவர்ந்தது. அது இருக்கும் இடம் தெரிய ஆரம்பித்தவுடன் அதை தங்கள் வசமாக்க எந்தக் கீழ்மட்டத்திற்கும் இறங்க சிலர் தயாராகி விட்டார்கள். இனியும் அது தனி வடிவத்தோடு இருந்தால் அதுவே பேரழிவைக் கொண்டு வந்து விடும். எங்கள் நோக்கத்திற்கு எதிர்மாறான விளைவை நாங்களே பார்க்க வேண்டி வரும். அதனால் விசேஷ மானஸ லிங்கத்தோட உருவத்தை மட்டும் எடுத்துக் கொண்டு அதன் சாரத்தை தகுதி வாய்ந்த ஒவ்வொரு மனிதன் மனதிலும் தங்குகிற மாதிரி விட்டுப் போகிறோம். விசேஷ மானஸ லிங்கம் எங்கேயும் போய் விடவில்லை... உங்கள் மனதிலேயே தான் இருக்கிறது பாருங்கள்"

*ஹரிராமும், கணபதியும், ஈஸ்வரும் அவர் சொன்ன பிறகு தான் தங்கள் மனதிலேயே விசேஷ மானஸ லிங்கம் ஜொலித்துக் கொண்டிருப்பதைக் கவனித்தார்கள். ஹரிராமும், ஈஸ்வரும் பிரமிப்புடன் பார்க்க, கணபதி மட்டும் செல்லமாக மனதில் அதனுடன் பேசினான். "நீ என்னை விட்டுப் போயிடலையா.. என் மனசுக்குள்ளே தான் இருக்கியா, சமத்து.."*

*தியான மண்டப வாசலில் எல்லோருக்கும் பின்னால் இருந்து இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த மொட்டைத் தலை முதிய துறவியும் தன் மனதில் விசேஷ மானஸ லிங்கம் ஜொலித்துக் கொண்டிருந்ததைப் பார்த்தார். எல்லா நேரங்களிலும் விசேஷ மானஸ லிங்கத்தோடு உரையாடும் அவரை வார்த்தைகளுக்கெட்டாத ஆனந்தம் ஆட்கொண்டது. கண்களில் பேரருவியாய் நீர் வழிய அவர் மற்றவர்கள் பார்த்து விசாரிக்கும் முன் அங்கிருந்து வேகமாக நடக்க ஆரம்பித்தார்...*

*அக்னிநேத்ர சித்தர் தொடர்ந்தார். "இனி இந்த விசேஷ மானஸ லிங்கத்தை யாரும் திருட முடியாது. மறக்கலாம். மறுக்கலாம். ஆனால் இழக்க முடியாது இனி இந்த விசேஷ மானஸ லிங்கத்திற்கு வெளியே இருந்து ஆபத்து இல்லை. என்ன ஆபத்தானாலும் அது இனி உங்களுக்கு உள்ளே இருந்து தான் வர முடியும். மனிதன் தனக்கு வெளியே உள்ளதைத் தேடி பாடுபட்டு அடைவதில் காட்டும் வேகம் தனக்கு உள்ளே இருப்பதைக் கண்டுபிடித்து பயன்படுத்துவதில் காட்டுவதில்லை. தன்னிடம் இருக்கிறது என்பதாலேயே ஒன்றின் மதிப்பை குறைத்து மதிப்பிடும் மனிதனுக்கு அதுவே எல்லோரிடமும் இருக்கிறது என்று தெரிந்தாலோ மதிப்பும் போய் அதில் சுவாரசியமும் போய் விடலாம். அந்த அலட்சியம் தான் அவனுக்கு உண்மையான ஆபத்தாக இருக்க முடியும்..."*

அக்னி நேத்ர சித்தர் இவர்கள் மூலமாக மனிதகுலத்திற்கே செய்தி விடுப்பதாக பார்த்தசாரதிக்குத் தோன்றியது. அக்னி நேத்ர சித்தர் அந்த மூவரையும் ஊடுருவிப் பார்த்தபடி அந்த செய்யுள் வரிகளைக் கணீர் குரலில் பாடினார்.

"தூய உளமறிவு கூடித் துஞ்சாமல் நாடினால் சேர்ந்திடும் மெய்ஞானம் மூன்றும் காக்க மிஞ்சிடும் பூவுலகம் அன்றேல் நஞ்சாகும் சிவஞானம்"

மனிதனுக்கு உள்ளேயே இருந்தாலும் இந்த விசேஷ மானஸ லிங்கம் சுலபமாய் அவனுக்கு பயன்படுத்தக் கிடைத்து விடாது. தூய்மையான மனதோடும், அறிவோடும் சேர்ந்து முயற்சி செய்து உண்மையான ஞானம் பெற்ற பிறகு தான் அது அவனுக்குப் பயன்படுத்தக் கிடைக்கும். அது சாதாரண முயற்சிகளிலோ, அரைகுறை ஆர்வத்திலோ கிடைத்து விடாது. கிடைத்து விட்டால் அதற்குப் பின் அது அற்புதங்களை நிகழ்த்தும். மனிதனை சிகரங்களுக்கு உயர்த்தும். அப்போது தான் அவன் தன்னையும், தன்னைச் சேர்ந்தவர்களையும் காப்பாற்றிக் கொள்ள முடியும். மனம் மாசுபட்டால் அறிவும் தீமைக்குத் தான் உதவும். அந்த நேரத்தில் அவன் ஞானமாய் நினைப்பது கூட விஷமாய் அழிவுக்குத் தான் பயன்படும்."

கடைசியாக அக்னி நேத்ர சித்தர் ஒரு எச்சரிக்கை விடுத்தார். "காலம் இனியும் மோசமாகும். மனிதம் இனியும் மங்கிப் போகும். தீமை தான் ஜெயிக்கிற மாதிரி இருக்கும். அதுவே ஆட்சி செய்யும். நன்மை பலவீனமாக நினைக்கப்படும் அதற்கு மதிப்பு மறுக்கப்படும். கேளிக்கைகள் பெருகும். மகிழ்ச்சிகள் குறையும். உண்மையான அன்பு அபூர்வமாகும். வெறுப்போ வளர்ந்து

*கொண்டே போகும். இது இந்த கலிகாலத்தின் லட்சணங்கள். இதை மாற்ற அவதாரங்களை எதிர்பார்க்காதீர்கள். நீங்களே அவதாரமாக மாறுங்கள். அதற்கு உதவ நாங்கள் உருவாக்கிக் கொடுத்து விட்டுப் போகும் இந்த விசேஷ மானஸ லிங்கம் உங்களுக்குள் காத்திருக்கும்...!"*

சொல்லி முடித்த அக்னி நேத்ர சித்தர் மறைந்து போனார். அந்த வார்த்தைகள் தியான மண்டபத்திற்குள் இருந்த ஒவ்வொருவர் மனதிலும் ஆழமாய் பதிந்தன. மொழி புரியாதவர்களுக்குக் கூட அக்னிநேத்ர சித்தர் அர்த்தத்தை மனதில் பதிய வைத்து விட்டுப் போனார். அவர் சொல்லி விட்டுப் போன செய்தியை மற்றவர்களுக்கு வார்த்தையாலும் வாழ்க்கையாலும் தெரிவிக்க வேண்டிய பொறுப்பு தங்களுக்கு இருப்பதாக அனைவருமே உணர்ந்தார்கள். அத்தனை பேரும் உள்முகமாக நமஸ்கரித்தார்கள். தியான மண்டபத்தில் ஒலித்துக் கொண்டிருந்த மெல்லிய ஓங்கார ஒலி அவர்களை ஆசிர்வதித்துக் கொண்டிருந்தது.

**************

கடைசி தகவல்கள்

- அந்தக் கார்த்திகை தீப பௌர்ணமி நாளில் நள்ளிரவு வானில் பெரும் ஜோதியைப் பார்த்ததாகச் சிலரும், எரிநட்சத்திரம் பார்த்ததாகச் சிலரும், அடுத்த கிரகத்திலிருந்து வந்த விண்கலத்தைப் பார்த்ததாகச் சிலரும் சொல்ல மறுநாள் செய்தித்தாள்களில் அந்த செய்திகளே நிறைந்திருந்தன. பார்த்தது என்னவாக இருந்திருக்கும் என்ற விவாதங்கள் பத்திரிக்கைகளிலும், தொலைக்காட்சிகளிலும் ஒரு நாள் முழுவதும் தொடர்ந்தது. பலரும் தங்களுக்குப் பிடித்த முடிவுகளுக்கு வந்து அதுவே சரி என்று வாதித்து மகிழ்ந்தனர்.

- பார்த்தசாரதி எந்த நடவடிக்கையும் எடுக்காமல் அந்த வழக்கை மூடி விட்டார். இந்த வழக்கில் முக்கிய பாத்திரமான விசேஷ மானஸ லிங்கம் மறைந்து போனது உள்பட பல விஷயங்களை அவரால் சட்டத்திற்கு விளக்க முடியாமல் போனது தான் அதற்கு முக்கிய காரணம். ஒரு சாதாரண வக்கீல் உடைத்து விடும்படியான பலவீனமான வழக்கைத் தொடர்ந்து கோர்ட்டில் கோமாளியாக அவர் விரும்பவில்லை.

- குருஜி எங்கே போனார், என்ன ஆனார் என்று யாருக்கும் தெரியவில்லை. அவரது தீவிர பக்தர்கள் அவர் எங்காவது ஜீவசமாதி அடைந்திருப்பார் என்று நம்பினார்கள். அவர் இப்படி திடீர் என்று மறைந்து போனது ஆன்மிக உலகிற்குப் பேரிழப்பு என்று எல்லோரும் நினைத்தார்கள்.

- பார்த்தசாரதி வழக்கு தொடராததால் பசுபதி மரணத்தில் மகேஷ், தென்னரசு இருவரின் பங்கு வெளிவரவில்லை. அதனால் ஈஸ்வரின் குடும்ப நிம்மதி நிலைத்தது. ஆனால் ஆனந்தவல்லி மட்டும் தன் மகனைக் கொன்ற கூட்டத்தைக் கண்டுபிடித்தாகி விட்டதா என்று மறக்காமல் கேட்டுக் கொண்டிருந்தாள். ஈஸ்வருக்கு அவள் அப்படிக் கேட்கும் போதெல்லாம் மனம் வலிக்கும்.

- ஈஸ்வரின் திருமணத்திற்கு வந்த பார்த்தசாரதி அவள் கண்ணில் படாமல் இருக்க மறைந்து ஒதுங்கி இருக்க வேண்டியதாயிற்று. அன்று அதில் அவருக்கு சிரமம் எதுவும் இருக்கவில்லை. ஏனென்றால் அந்தத் திருமணத்தின் போது அவள் ஈஸ்வர் மீது வைத்த கண்களை அதிகம் திருப்பவில்லை. அவள் கணவர்

*நினைவும், அவள் திருமண நாள் நினைவும் வந்து அவள் அந்த நாட்களை மனதில் அசைபோட்டுக் கொண்டிருந்தாள்.*

· *கணபதிக்கு ஊருக்குப் போனவுடன் பிள்ளையாரிடம் சொல்ல நிறைய இருந்தது. சீடை சபலம் உட்பட ஒன்று விடாமல் சொன்னவன் கடைசியில் அக்னி நேத்ர சித்தர் சொன்ன தத்துவங்களை மட்டும் அப்படியே சொல்ல முடியாமல் தவித்து பிறகு சுருக்கமாய் சொன்னான். "அவரு எல்லாரையும் நல்லவங்களா இருங்க, நல்லது செய்யுங்க, சிவன் உங்களுக்கு வழிகாட்டுவார்னு சொன்னாரு... அவர் கிட்ட அந்த அபூர்வமான பூ கிடைச்சா எங்க பிள்ளையாருக்கும் குடுங்கன்னு கேட்க நினைச்சேன். ஆனா கேட்கறதுக்குள்ளே மறைஞ்சுட்டாரு.... எப்பவாவது மறுபடியும் வருவாருன்னு நினைக்கிறேன். வந்தால் அந்தப்பூ வாங்கி உனக்கு மாலை கட்டிப் போடறேன் சரியா?".*

*குருஜி தன் சொத்துக்களை அவன் பெயருக்கு எழுதி வைத்திருக்கிறார் என்று தெரிய வந்த போது கணபதி அழுதான். 'அவருக்குத் தான் என் மேல் எவ்வளவு பாசம்'. அவன் குருஜி திரும்ப வராமல் போகவே அவர் புகைப்படத்தை தன் வீட்டில் மாட்டி தினமும் வணங்கினான்.*

· *ஜான்சனுக்கு பண ரீதியாகப் பலன்கள் நினைத்த அளவு கிடைக்கவில்லை என்றாலும் மன ரீதியாக நிறையவே பாடங்கள் கிடைத்தன. அந்தத் திருப்தியில் அவர் தன் நாடு திரும்பினார். கியோமி ஜென் பௌத்தத்தின் ஆத்மாவையே இந்தியாவில் பார்த்து விட்டதாக குடும்பத்தாரிடமும், நண்பர்களிடமும் சொன்னாள். ரஷ்யாவிற்குத் திரும்பிய போது அலெக்ஸியும் ஆன்மிக மார்க்கத்திற்கு மாறி இருந்தார்.*

- மகேஷிடம் நல்ல மாற்றங்கள் தெரிய ஆரம்பித்தன. ஆரம்பத்தில் திருமணம் செய்து கொள்ள மறுத்த அவன், தாயின் நச்சரிப்பு தாங்காமல் கடைசியில் ஈஸ்வர் விஷாலி இருவரும் தேர்ந்தெடுக்கும் பெண்ணைத் திருமணம் செய்து கொள்கிறேன் என்று சம்மதித்தான். பரமேஸ்வரனுக்குத் தன் பேரன்கள் மிக நெருக்கமாக இருப்பது மகிழ்ச்சியாக இருந்தது.

- ஈஸ்வர் – விஷாலி வாழ்க்கைப் பயணம் இன்பமயமாக இருந்தது. சீக்கிரமாய் குழந்தை பெற்றுத் தரச் சொல்லி ஆனந்தவல்லி செய்து கொண்டிருக்கும் நச்சரிப்பைத் தவிர அவர்களுக்கு ஒரு பிரச்சினையும் இருக்கவில்லை.

- பாபுஜி ஹரிராமின் மந்திரக்கட்டில் இருந்து விடுவிக்கப்பட்டாலும் மன உளைச்சலில் இருந்து விடுவிக்கப்படவில்லை. அவர் மும்பையின் மிகப் பெரிய மனநல மருத்துவரிடம் ரகசியமாய் சிகிச்சை பெற்று வருகிறார். அவரது வெளிநாட்டு நண்பர்களும் கிட்டத்தட்ட பைத்தியம் பிடித்து இப்போது குணமாகி வருகின்றனர்.

- ஹரிராம் காஷ்மீரத்திற்கே திரும்பிப்போனார். ஈஸ்வரும் அவரும் முடிந்த வரை நன்மைகளை உலகத்தில் பரப்புவது என்று முடிவெடுத்திருந்தார்கள். நல்ல விதைகளைத் தூவி வைப்போம். அதில் சிலதாவது விருட்சமாகும். அந்த விருட்சங்கள் நிறைய விதைகளை உருவாக்கும்.... அந்த விதைகள் பல விருட்சங்களை உருவாக்கும்... இப்படித் தான் நன்மைகளை உலகில் பெருக்கியாக வேண்டும் என்று நம்பினார்கள். அதற்கு விசேஷ மானஸ லிங்கம் தங்களுக்கு உதவும் என்று நம்பினார்கள்.

- அதற்கு ஆரம்பமாக “மனிதனுக்குள் மகாசக்திகள்” என்ற நீண்ட உளவியல்-ஆழ்மனசக்தி ஆராய்ச்சிக் கட்டுரையை ஈஸ்வர் வெளியிட்டான். மனிதனின் மனதில் அனைத்தையும் உருவாக்கவும், காக்கவும், அழிக்கவும் முடிந்த மகாசக்திகள் உறைந்திருப்பதாக எழுதிய அவன் அவை எப்படி வேலை செய்கின்றன என்றும் விவரித்திருந்தான். அது மனோதத்துவ அறிஞர்களால் “மனோதத்துவ விஞ்ஞானத்தின் மைல்கல்” என்று சிலாகிக்கப் பட்டது. உளவியல் துறைக்கும் நோபல் பரிசு இருக்குமானால் கண்டிப்பாக அந்த ஆராய்ச்சிக் கட்டுரை ஈஸ்வருக்கு வாங்கித் தந்திருக்கும் என்று அவர்கள் கருதினார்கள். பல தத்துவஞானிகள் அதை உயர்ந்த தத்துவ ஞானத்தின் மனோ தத்துவப் பிரதிபலிப்பு என்றார்கள். உலகெங்கிலும் பெரும் வரவேற்பு பெற்ற அந்த ஆராய்ச்சிக் கட்டுரை சிந்திக்கப்படவும், பேசப்படவும் ஆரம்பித்தது. ஒரு ஞானப் பேரலை ஆரம்பிக்கப்பட்டது....

- பாபுஜியின் தந்தை மகனுக்குப் புத்தி சொல்லி கட்டாயப்படுத்தி அந்த தியான மண்டபத்தில் விசேஷ மானஸ லிங்கம் இருந்த இடத்தில் ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து அதைக் கோயிலாக மாற்றி விட்டார். அங்கு ஒவ்வொரு கார்த்திகை தீப பௌர்ணமி நாளிலும் விசேஷ பூஜைகள் நடத்தவும் ஏற்பாடு செய்தார். ஹரிராம், ஈஸ்வர், கணபதி மூவரும் அந்த ஒரு நாளில் கண்டிப்பாக வந்து பூஜைகளில் பங்கெடுக்க வேண்டும் என்று அவர்களிடம் தனித்தனியாக வேண்டிக் கொண்டார். அவர்களும் சம்மதித்தார்கள். விசேஷ மானஸ லிங்கம் தன் தனியுருவை விட்டு, பல மகாசித்தர்களின் முன்னிலையில், மனிதனின் மனதில் பிரதிஷ்டையான அந்த மகத்தான நாளில் சக்தி வாய்ந்த அலைகள் அங்கு உலவுவதைப் பலர் உணர்ந்தார்கள். அதை உணர முடிந்தவர்களுக்கு தங்கள்

*மனதில் உள்ள விசேஷ மானஸ லிங்கத்தையும் அடையாளம் காண முடிந்தது.*

*அப்படி உணர முடிந்தவர்களுக்கு அதனுடன் சேர்ந்தே அக்னிநேத்ர சித்தர் விடுத்த எச்சரிக்கையையும் நம்பிக்கையையும் கூட உணர முடிந்தது. "காலம் இனியும் மோசமாகும். மனிதம் இனியும் மங்கிப் போகும். தீமை தான் ஜெயிக்கிற மாதிரி இருக்கும். அதுவே ஆட்சி செய்யும். நன்மை பலவீனமாக நினைக்கப்படும் அதற்கு மதிப்பு மறுக்கப்படும். கேளிக்கைகள் பெருகும். மகிழ்ச்சிகள் குறையும். உண்மையான அன்பு அபூர்வமாகும். வெறுப்போ வளர்ந்து கொண்டே போகும். இது இந்த கலிகாலத்தின் லட்சணங்கள். இதை மாற்ற அவதாரங்களை எதிர்பார்க்காதீர்கள். நீங்களே அவதாரமாக மாறுங்கள். அதற்கு உதவ நாங்கள் உருவாக்கிக் கொடுத்து விட்டுப் போகும் இந்த விசேஷ மானஸ லிங்கம் உங்களுக்குள் காத்திருக்கும்…!"*

*பல புதிய பாதைகளும், விழிப்புணர்வுகளும் அங்கு உதயமாக ஆரம்பித்தன…!*

# *முற்றும்*

சித்தர்கள் ரகசியமாய் பூஜித்து,பாதுகாத்து வந்த விசேஷ மானஸ லிங்கத்தை ஓர் கும்பல் கடத்திச் செல்கிறது. ஓலைச்சுவடிகள் முதல் விஞ்ஞானக் கருவிகள் வரை பயன்படுத்தி, அச்சிவலிங்க சக்தியை அடைய முற்படுகிறது.

கடத்தப்பட்ட சிவலிங்கத்தைக் கண்டுபிடித்து மீட்கும் பொறுப்பு ஓர் இளம் ஆழ்மனசக்தி ஆராய்ச்சியாளனுக்கு வந்து சேர்கிறது. அவன் அதற்காக பழைய பகையை மறந்து அச்சிவலிங்கம் சம்பந்தப்பட்ட தன் குடும்ப மூத்தவர்களுடன் இணைய நேர்கிறது.

இதைத் தொடர்ந்து அத்தியாயத்துக்கு அத்தியாயம் பரபரப்பான, திகிலான நிகழ்வுகள். அமானுஷ்யம், ஆழ்மனசக்தி, ஆன்மீகம், தத்துவம், விஞ்ஞான ஆராய்ச்சிகள் இவற்றுடன் கண்கள் அக்னியாய் ஜொலிக்கும் அக்னிநேத்ர சித்தர், பக்தி மட்டுமே தெரிந்த ஒரு வெள்ளந்தி பூசாரி, விஞ்ஞானப் பார்வையிலேயே சிவலிங்கத்தை அணுகும் ஒரு குருஜி போன்ற கதாபாத்திரங்களும் பின்னிப் பிணைகிறார்கள். இத்தனைக்கும் நடுவில் புதிராய் இயங்கும் விசேஷ மானஸ லிங்கம்!
பிடிபடுமா பரமனின் ரகசியம்?...




ஆழ்மனசக்தி, ஆன்மீகம், சுயமுன்னேற்றம், வாழ்வியல், சிறுகதைகள், நாவல்கள் போன்றவை இவரது படைப்புகளில் முக்கியத்துவம் பெற்றவை. இணையதளத்தில் வெளியாகும் இவரது படைப்புகளுக்கு, ஏராளமான ரசிகர்கள் உலகளவில் உள்ளனர்.
இவரது படைப்புகள் இலக்கியச் சிந்தனை உட்பட பல பரிசுகள் பெற்றுள்ளன. இவரது பிரமிடுகள் தேசத்தில் ஞானத் தேடல், ஆழ்மனதின் அற்புத சக்திகள், ஜாதகம் பயன்படுத்துவது எப்படி? வாழ்ந்து படிக்கும் பாடங்கள்! போன்ற நூல்கள் வாசகர்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றவை.

₹ 550/-







www.blackholemedia.in